# கோலவரைத் துயிலரங்கன் சரிதம்

பகுதி - 1

# THE LEGEND OF KŌLAVARAI ARAṄKAṈ

PART - I

*General Editor*
G. JOHN SAMUEL

*Editors*
P. SUBRAMANIAM
K. SATHYA BAMA

*English Rendering*
PREMA NANDAKUMAR




INSTITUTE OF ASIAN STUDIES
Asia Gardens
Chemmancherry, Chennai-600 119
INDIA

கோலவரைத் துயிலரங்கன் சரிதம் - பகுதி - 1

THE LEGEND OF KŌLAVARAI ARANKAN - Part - I

First Edition 2000, pp.671

Publication No. 81



Price Rs. 600/- US $ 45

Published with the financial assistance from the Directorate of the Tamil Developement of the Government of Tamil Nadu for the best translations from Tamil to other language or from other languages to Tamil.

**Copies can be had from**

Publications Division,
Institute of Asian Studies,
Asia Gardens,
Chemmancherry,
Chennai-600 119.
India.

Phone : (Off.) 4961662, 4960831
(Res.) 4960085
Fax : 91-44-4960959
E-mail : ias@xlweb.com
World Wide Web site : http : // xlweb.com/heritage/asian

Composed by
**Institute of Asian Studies, Chennai - 600 119.**

**Pinted by:**
STUDENTS OFFSET SERVICES & ADYAR STUDENT XEROX,
Chennai - 600 017 Phone : 4343862, 582513

# பொருளடக்கம்

# Contents

# Transliteration Table

## VOWELS

| Short | | Long | | Dipthong | |
|---|---|---|---|---|---|
| அ | a | ஆ | ā | ஐ | ai |
| இ | i | ஈ | ī | ஔ | au |
| உ | u | ஊ | ū | | |
| எ | e | ஏ | ē | **Velar Fricative** | |
| ஒ | o | ஓ | ō | ஃ | ḵ |

## CONSONANTS

| Stops | | Nasals | | Semi-Vowel | | Trill | |
|---|---|---|---|---|---|---|---|
| க் | k | ங் | ṅ | ய் | y | ற் | ṟ |
| ச் | c | ஞ் | ñ | வ் | v | | |
| ட் | ṭ | ண் | ṇ | | | | |
| த் | t | ந் | n | | | | |
| ப் | p | ம் | m | | | | |
| | ன் | ṉ | | | | | |

# பதிப்புரை

சுயபுராணம் பாடுவதில் மன்னன்;

கந்த புராண வைராக்கியம் பிடித்தவன்;

அதெல்லாம் புராண காலக் கதை; இன்று எடுபடாது;

பழைய புராணத்தையே பாடு; புதுசா ஒன்றுந் தெரியாது

என்றெல்லாம் புராணத்தைக் குறைத்தும் இழித்தும் பேசுவது இந்தக் கால வழக்காறாகி விட்டது. புராணம் என்றாலே வெறுங்கதை; ஒன்றுக்கும் உதவாத கதை என்ற உள்ளுணர்வு வளர்ந்துவிட்ட காலம் இந்தக்காலம். அறிவியல் எவ்வளவோ வளர்ச்சி பெற்று முன்னேற்றம் பல கண்டுள்ள இந்தக் காலத்தில்,

பழைய ஓலைச் சுவடிகளில் எழுதப்பெற்றுள்ள நூல் என்பதற்காக, மிகப் பழமை வாய்ந்த ஒரு நூல் என்பதற்காக, பழைய உரையுடன் கூடிய ஒருநூல் என்பதற்காக, இரண்டு தொகுதிகளாக வெளியிடும் அளவிற்கான மிகப்பெரியதொரு நூல் என்பதற்காக, ஆசியவியல் நிறுவனமாகிய இந்த நிறுவனத்தில் ஒரு சுவடியும், சென்னை அரசினர் சுவடி நூலகத்தில் ஒரு சுவடியுமாக இரண்டு சுவடிகள் கிடைத்துள்ளன என்பதற்காக, அரசினர் சுவடி நூலகச் சுவடியைக் காட்டிலும் இந்த நிறுவனச் சுவடியில் **192 பாடல்கள்** கூடுதலாகக் கிடைத்துள்ளன என்பதற்காக, அவற்றிலும் பொருள் பொதிந்த பாட வேறுபாடுகள் பல கிடைக்கின்றன என்பதற்காக, அந்தப் பாடவேறுபாடுகளால் பல இடங்களில் தெளிவான பொருள்கள் கிடைத்துள்ளன என்பதற்காக,

ஒரு புராணத்தைப் பதிப்பித்து வெளியிடுவது என்பது தேவையானதுதானா? இந்தப் புராணம் மிகவும் இன்றியமையாததுதானா? இதைப் படித்தாக வேண்டும் என்பது அவசியந்தானா?

**கதையின் பயன்**

ஒரேஒரு ஊரிலே ஒரேஒரு பாட்டி

ஒரேஒரு பாட்டிக்குத்தான் ஒரேஒரு வேலை - அந்த

ஒரேஒரு பாட்டி செய்தாள் வடைசுடும் வேலை

வடையைவிற்று வாழ்ந்துவந்தாள் வருத்த மில்லாமல்

ஒருநாள் ஒரு காக்கை, பாட்டி சுட்டு வைத்திருந்த வடையில ஒன்றைக் கொத்திக் கொண்டு ஓடியது. ஒரு மரத்தின் மீது போய் உட்கார்ந்தது. அங்கு ஒரு நரி வந்தது. காக்கையின் வாயிலிருந்து வடையைப் பார்த்தது; அந்த வடையைப் பெறவேண்டும் என எண்ணியது; ஒரு தந்திரம் செய்தது; காக்கையைப் பாராட்டியது; பாடச்சொல்லியது; காக்கையும் காகா

என்று கத்தியது. வடை கீழே விழுந்தது. நரி வடையைக் கவ்விக்கொண்டு ஓடி விட்டது. இப்படி ஒரு கதை. இதைக் குழந்தைகளுக்குச் சொல்லுவதுண்டு. அதையும் பாட்டுநடையில் சொல்லுவதுண்டு. குழந்தைகள் மீண்டும் மீண்டும் பாடுவார்கள். கதை அவர்கள் உள்ளத்தில் பதியும் என்பது நமது முதல் நோக்கம். நாம் ஒருவரை ஏமாற்றினால், உடனே நாம் ஒருவரிடம் ஏமாறவேண்டிவரும் என்னும் அறவுரையை இக்கதை மூலம் உணர்த்தலாம். அது அவர்கள் உள்ளத்தில் பதியும் என்பது அடுத்த குறிக்கோள். ஒருவரிடமிருந்து திருடிவந்த ஒருபொருள் நமக்குப் பயன்படாமலே அழியும் என்ற உண்மையையும் அறியச் செய்யலாம். இவை கதையால் ஏற்படும் பயன்கள்.

ஆனால் இவற்றையே அறவுரைபோல எடுத்துக் கூறினால் ஆழ்ந்து கேட்கவும் மாட்டார்கள். கூறுவது முழுமையாக அவர்கள் மனத்தில் பதியவும் செய்யாது.

### கதையில் மாற்றம்

வெளியில் வைத்துக்கொண்டு வடையை விற்றது பாட்டி செய்த தவறு. காக்கை தன் பசிகக்குக் கிடைத்ததை எடுக்கத்தான் செய்யும். காக்கை ஏமாற்றவில்லை. பாட்டிதான் ஏமாந்து இருந்துவிட்டாள்.

நரி பாட்டுப்பாடச் சொன்னபோது, காக்கை தன் வாயிலிருந்த வடையை மரத்தின் மீது வைத்துத் தன் கால்விரல்களால் அழுத்திப் பிடித்துக் கொண்டு, காகா என்று கத்தியது. ஏமாற்ற நினைத்த நரிதான் ஏமாந்து திரும்பிப் பார்க்காமல் ஓடியது.

எந்த வேலையைச் செய்தாலும் அதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருக்கவேண்டும். இல்லையென்றால் ஏமாறவேண்டியதுதான். தன்னை ஏமாற்ற நினைப்பவர்களிடத்திலும் சிந்தித்து செயல்படவேண்டும் என்னும் கருத்துகளோடு கதையை மாற்றிக் கூறுவது இந்தக்காலம்

### புரா்ணத்தில் கதை

சிங்கவர்த்தனர் என்பவன் சூரபன்மனின் படைத்தலைவன். அவன் தவம் செய்து வரம்பெற்றவன். அந்த வரத்தின் சக்தியால் இந்திரனை வென்று இந்திரபதவியைப் பெறுகிறான். பதவிக் கருவம் வளருகிறது. தேவர்களை வதைக்கிறான்.

தேவர்கள், நாரதர் போன்ற பற்றற்ற சான்றவர்களின் துணையை நாடுகிறார்கள். அனைவருமாக முருகப்பெருமானை அணுகுகிறார்கள். அசுரர் பலரை வென்றவனல்லவா முருகன்! அவனிடம் முறையிடுகிறார்கள். தேவர்களையும் உடன் சேர்த்துக்கொண்டு உடன் புறப்படுகிறான் முருகன் சிங்கவர்த்தனனுடன் போரிடுகிறான். ஆனால் இறுதியில் தோல்வியையே தழுவுகிறான். அனைவரும் அரங்கனின் துணையை நாடுகிறார்கள்.

## அரங்கனின் முடிவு

அரங்கனோ சிங்கவர்த்தனனை வெல்லுந் தந்திரங்களைச் சிந்திக்கிறான். ஆழ்ந்து சிந்திக்கிறான். ஒருமுடிவெடுக்கிறான். முருகனை மலைவடிவம் எடுக்கச் செய்கிறான். தானே இந்திரன் வடிவில் மலைமீது அமர்கிறான். மலையைப் பறக்கச் செய்கிறான். முருகனும் தேவர்களும் தோற்று ஓடிவிட்டார்கள் என்ற இறுமாப்போடு சிங்கவர்த்தனன் வீற்றிருக்கிறான். அசுரப் படைவீரர்கள் ஆரவாரத்தோடு சிங்கவர்த்தனனைச் சூழ்ந்திருக்கிறார்கள். மலைமீது பறந்து வந்த அரங்கன், அசுரர்கள் சூழ்ந்திருந்த இடத்திற்கு மேலே வரும்போது, மலையின் சிறகுகளை வெட்டி வீழ்த்துகிறான். மலை திடீரென இறங்கி அசுரர்கள் மீது விழுகிறது அனைவரும் அழிந்து போகிறார்கள். சிங்கவர்த்தனன் அழிந்த இடமே சிங்கபுரமாகத் தோன்றியது. அங்கு வந்து இறங்கிய மலையே கோலமலை எனப்பெறுகிறது.

உயர்ந்த ஒரு செயலைச் செய்ய நினைக்கும்போது, திட்டமிடும்போது அச்செயலைச் செய்வதற்குரிய உயர்ந்த, உத்தமமான, சிறந்த வழி யாது? சிந்திக்க வேண்டும் பலமுறை சிந்திக்க வேண்டும். பல வழிகளில் சிந்திக்க வேண்டும். துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கல்லவா? இந்தக் கருத்தை ஏற்காதவர் இருக்க முடியாது.

ஒரு அழிவை மேற்கொள்ளவேண்டிய முடிவாக இருக்கிறதே! அழிவின் பாவம் நம்மைப் பீடிக்காமல் இருக்க வேண்டுமே! அடாத செயல்களில் ஈடுபடுவோரை ஒடுக்கத் திட்டமிடுவது பாவமாகாது. உடற்பலம், படைபலம் போன்றவற்றால் கொடிய செயல்களில் ஈடுபடுவோரை ஒடுக்கி நற்செயலை நிலைநிறுத்த மேற்கொள்ளும் சில அழிவுமுறைகள் பாவம் நிறைந்தவை யாகவுமாட்டா.

## புராண வடிவம்

1. உலகத் தோற்றம், ஊழிக்கால வரலாறு போன்றவற்றை எடுத்தியம்பும் போது, புராணம் ஒரு **அறிவியல் நூலாகிறது**.

2. முனிவர் மரபு, மன்னர் மரபு ஆகியவற்றைப் பட்டியலிட்டுக் காட்டும் போது புராணம் ஒரு **அரசியல் வரலாற்று நூலாகிறது**.

3. உலக உயிர்களின் ஒழுக்க நெறிகளைக் கூறும்போது புராணம் ஒரு **அறநூலாகிறது**. இதே போல புராணமானது **நாட்டுப்புறக்கதைப்பாடல் இலக்கியமாகவும்**, சிறந்த **மானிடவியல் நூலாகவும்** அமைவதை மறுக்க முடியாது.

ஆழ்ந்து அறிய வேண்டுவனவற்றை - உணர வேண்டுவனவற்றை - கடைபிடிக்க வேண்டுவனவற்றை - எளிய எடுத்துக்காட்டுகளோடு, எல்லோருக்கும் விளங்கும் கதைகளின் மூலமாகக் கூறுவதே புராணம் என்பது மறக்க முடியாத, மறுக்க முடியாத உண்மை.

## வெளியீட்டின் உண்மை

தீமை விலக, பகைமை அழிய தருமநூல் கொள்கைகளை மேற்கொள்ளும் உயர்ந்த செயல்களைப் பின்பற்றி வாழ வேண்டிய உண்மைத் தத்துவங்களை, எளியவர் யாவரும் அறிந்து, உணர்ந்து, நடைமுறையில் ஆளச் செய்வதே புராணம். இந்தச் சாரங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு கதையை உருவாக்கி, அவற்றில் இத்தத்துவங்களை எளிய முறையில் புகுத்தி உருவாக்கப் பெற்றதே புராணம்.

இந்த உண்மைகளால்தான் இந்தப் புராணத்தைப் பதிப்பித்து வெளியிட வேண்டுவது அவசியமாயிற்று ஆழ்ந்த தத்துவங்களை எளியோர் யாவரும் எளிய கதைகளின் மூலம் அறிந்து பயன்பெறுவார்களே என்ற ஆர்வம், இப்பணியை மேற்கொள்ளுவது இன்றியமையாத ஒன்று என்றாக்கிவிட்டது. அனைவரையும் படித்துணரச் செய்ய வேண்டும் என்பதும் அவசியமாகி விட்டது

அப்படிப் படிததுணரச் செய்ய வேண்டியதன் அவசியந்தான் என்ன? அரசியல் போராட்டங்களும, பதவிப்போராட்டங்களும் அர்த்தமில்லாமல் தலைதூக்கியாடும் இக்காலததிற்குப் புராணங்காட்டும் கதைச்சான்றுகள் நல்ல சூடாக அமையும். அக்கிரமங்களுக்கும் அட்டூழியங்களுக்கும் துணை செல்வோர் கூட்டம் அசுரக் கூட்டம் போலக் கொடிகட்டிப்பறக்கத் தொடங்கினாலும், சிறிது காலம் வரையே அவை ஊஞ்சலாடும். விரைவில அவை படுகுழியை அடையும் என்னும் உண்மைகளை அறிவு படைத்த, சிந்திக்குந் திறம் வாய்ந்த, நாட்டுநலம் விரும்புகின்ற மக்கட் கூட்டத்திற்குக் காட்டும் இப்புராணச் சான்றுகள் சிந்தனையைத் தூண்டுவனவாக அமையக் கூடும் என்பனவும் இவ்வெளியீட்டின் நோக்கங்களாகும்

1979 அக்டோபர் முதல் 1984 அக்டோபர் முடிய ஐந்தாண்டுகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சுவடிஇயல் பட்டய வகுப்பு' (Post Graduate Diploma Course in Manuscriptology) ஒன்றினைத் தொடங்கி நடத்தும் பொறுப்பில் நான் (பூ.சு.) பணியாற்றி வந்தேன் அரசுப்பணியிலிருந்த என்னை அயற்பணியில் (On Deputation) அனுமதித்து அரசு அனுப்பியிருந்தது அப்பணிக்காலத்தில் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்திலிருந்த 'கோலவரை அரங்கன் சரிதம்' என்னும் சுவடியைப் பதிப்பித்து வெளியிடலாம் என்று எண்ணி, அந்நிறுவன இயக்குநர் அவர்களின் இசைவு பெற்று, திரு வி. ஆர். மாதவன் அவர்களைக் கொண்டு படியெடுக்கச் செய்தேன் பிறகு குறிப்புரை தருதல், விளக்கவுரை எழுதுதல் போன்ற பதிப்புப்பணிகளை முடித்து, நூலை அச்சுக்கு அனுப்பும் அளவில் முழுமையாக்கிக் கொடுத்திருந்தேன். அது அச்சிடப்பெறவுமில்லை. அந்தக் கையெழுத்துப் படி என்ன ஆயிற்று என்பதும் தெரியவில்லை இந்த நிலையில்தான் மீண்டும் இந்த நூலைப் பதிப்பித்து வெளியிடும் பணி. ஆசியவியல் நிறுவனத்தின் மூலம் தொடங்கப்பெற்றது.

## பதிப்புச் சுவடி

**கோலவரைத் துயிலரங்கன் சரிதம்** என்னும் இந்நூல், **ஆசியவியல் நிறுவனம்** என்னும் இந்நிறுவன நூலகத்தில், **சுவடி எண். 1383** இல் பாதுகாக்கப் பெற்றுவரும் சுவடியிலிருந்து எடுத்துப் பதிப்பித்து வெளியிடப் பெறுகிறது. இந்நூலின் பதிப்பாசிரியர்களுள் ஒருவரான டாக்டர் **கா. சத்தியபாமா** அவர்கள் இச்சுவடியை 27.6.1996இல் இந்நூலகத்திற்கு அன்பளிப்பாக அளித்திருக்கிறார்கள். இது 282 ஏடுகளையுடையது.

இந்தச் சுவடி பதிப்பாசிரியர் அவர்களிடம் இருந்தபோதே நாங்கள் இருவரும் 1994 இல் தொடங்கி இதனைப் படியெடுத்து வந்தோம் தொடர்ந்து குறிப்புரை எழுதுதல் முதலான பதிப்புப் பணிகள் முடிக்கப் பெற்றன. இதே நூலுக்கான மற்றொரு சுவடி, அரசினர் சுவடி நூலக எண். ஆர். 87 இல் பாதுகாக்கப்பெற்று வருகிறது. அது சென்னை, மயிலாப்பூர், திரு. அருணாசல ஐயர் அவர்களிடமிருந்து 1911-12 இல் விலைக்கு வாங்கப்பெற்றுள்ளது 397 ஏடுகளையுடைய அச்சுவடியில் 675 பாடல்கள் உள்ளன அச்சுவடி, தாளில் படியெடுக்கப்பெற்று ஆர். எண். 1537 இல் பாதுகாக்கப்பெற்று வருகிறது. இந்தச் சுவடிகளை ஒப்பிட்டுப் பாடவேறுபாடுகள் அனைத்தும் பதிப்புக்குரிய ஏடுகளில் குறிப்பிடப்பெற்றன பதிப்புப்பணிகள் அனைத்தையும் முடித்து 1996 இல் தட்டச்சுப் படிகளும் தயாரிக்கப்பெற்றன. இவை முடிந்த பிறகு டாக்டர் கா. சத்தியபாமா அவர்கள் ஓலைச் சுவடியையும் நிறுவனத்திற்கு அளித்து விட்டார்கள்.

## நிறுவனச் சுவடித்துறை

ஆசிய மொழிகளின் இலக்கண இலக்கியங்கள், ஆசிய மொழி பேசும் மக்களின் பழக்க, வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில்,

1. ஆசிய மொழிகளினிடையே காணப்பெறும் ஒற்றுமைகள்

2. ஆசிய நாடுகளின் பண்பாடுகள, வரலாறுகள் போன்றவற்றை ஆய்வுசெய்து உலகறியச் செய்ய வேண்டும் என்னும் உயரிய குறிக்கோள்களோடு, **1982இல் தொடங்கப்பெற்றது** இந்த ஆசியவியல் நிறுவனம்.

ஆசியப் பண்பாட்டு நெறிகளில் உயர்ந்த இடத்தைப் பெறுவதும், பழம்பெரும் பாரம்பரிய வழியில் நிலைபேறுடையதுமாகிய திராவிடப் பண்பாட்டு நெறிகளை உலகளாவிய நிலையில் நிலைநிறுத்த வேண்டிய கடப்பாட்டினை மேற்கொண்டது இந்நிறுவனம். தமிழ் மொழியை உலகச் செம்மொழிகளின் வரிசையில் நிலை நிறுத்தவேண்டிய கடமையில் தமிழியல் திட்டப் பணிகள் பல தொடங்கப்பெற்றன. இந்தத் திட்டப்பணிகளில் ஈடுபட்டுள்ள நிறுவனத் துறைகளுள் ஒன்று **சுவடிஇயல் துறை.**

அனைத்துலக நிறுவனமான **யுனெஸ்கோ நிறுவன**, வல்லுநர் குழுக் கூட்டம் ஒன்று **போலந்து** நாட்டின் தலைநகரான **வார்சா** என்னுமிடத்தில் 1994இல் நடைபெற்றது. அக்கூட்டத்தில் கலந்துகொண்டு, ஆசியவியல் நிறுவனச் சுவடித்துறையில் செயல்பட்டுவரும் அரிய பணிகளை முறையாக எடுத்துக்காட்டித் தமிழர்களின் கலை, பண்பாட்டுக் கருவூலங்களாகிய ஓலைச் சுவடிகளை, '**உலக நினைவுச் சின்னங்களுள் ஒன்றாக**' யுனெஸ்கோ நிறுவனம் ஏற்றுக்கொள்ளுமாறு செய்தபெருமை நிறுவன இயக்குநர் டாக்டர் ஜி. ஜான்சாமுவேல் அவர்களையே சாரும்.

இதே போல 1996 இல் தாஷ்கண்டில் நடைபெற்ற வல்லுநர் குழுக்கூட்டத்தில் கலந்து கொண்டு பேசியதன் விளைவாக யுனெஸ்கோ நிறுவனம் ஆசியவியல் நிறுவன மருத்துவச் சுவடிகளை, '**உலக அரிய ஆவணங்களுள் ஒன்றாக**' இணைத்து அறிவித்துள்ளது.

## சுவடித்துறைப் பணிகள்

சுவடிகளில் உள்ள செய்திகள் யாவை என்பதைக் குறித்து அறிய இயலாத நிலையில் பல நிறுவனங்களிலும் பிற இடங்களிலும் முடங்கிக் கிடக்கும் தமிழ்ச் சுவடிச் செய்திகளைத் திரட்டி, அவற்றிற்கான **விளக்க அட்டவணை**களைத் தயாரித்து ஆங்கில மொழியில் வெளியிட்டு உலகறியச் செய்வது இச்சுவடித் துறையின் **முதற்பணி**. இப்பணியின் மூலம் இதுவரை ஐந்து தொகுதிகள் (V Vols.) பத்துப் பகுதிகளாக (10 Parts) வெளியிடப்பெற்றுள்ளன.

தமிழர்தம் எண்ணங்களும் கருத்துகளும் அனுபவங்களும் கண்டுபிடிப்புகளுமாகிய பலவகைக் கலை, பண்பாட்டுச் செல்வங்கள் பொதிந்துகிடக்கும் தமிழ் ஓலைச் சுவடிகளில், இதுவரை அச்சாகி வெளிவராதனவற்றைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்து, அச்சிட்டு இன்றைய மககளிடையே வைக்கும் பணியை இரண்டாம் நிலையில் மேற்கொண்டுள்ளது இத்துறை. இப்பணியை மேற்கொள்ளும்போது, பயன்தரத்தக்கக் கோட்பாடுகள் சிலவற்றைக் கடைபிடித்துச் செயலாற்றுவதிலும் உறுதிகொண்டுள்ளது. அதாவது,

தமிழ்ச் சுவடிகளில் பொதிந்து கிடக்கும் தமிழாதம் கலை, பண்பாட்டுச் செல்வங்கள், தமிழ் மக்களுக்கு மட்டுமன்றி, தமிழ்மொழியறியாத, உள்நாட்டினருக்கும், வெளிநாட்டினருக்குஞ் சென்று சேரவேண்டும்; அவர்கள் அனைவருமே அக்கலைகளை ஊன்றியறியவேண்டும்; சீர்தூக்கிப் பார்க்கவேண்டும் என்னும் பெருநோக்கோடு சுவடிப்பதிப்புப் பணி மேற்கொள்ளப்பெறுகிறது. அந்த நோக்கம் முழுமைபெறுவதற்காக, சுவடிப் பதிப்பு வெளியீடுகள் அனைத்தையும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிடுவது என்பதை நிறுவனம் தன் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. இந்தக் குறிக்கோளின் அடிப்படையில் சுவடித்துறையின் மூலம் 1993 வரை **ஆறு** சுவடிப் பதிப்புகளை நிறுவனம் வெளியிட்டிருந்தது. ஆனால் 1994 முதல் 1999 டிசம்பர் முடிய **இருபத்திரண்டு** சுவடிப்பதிப்பு நூல்கள் வெளிவந்துள்ளன. அனைத்தும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளிவந்தவை.

## மொழிபெயர்ப்பு வரலாறு

நிறுவன வெளியீட்டு முறைகளின் அடிப்படையில் 1996இல் முடித்து வைத்திருந்த இந்த நூலுக்கான தட்டச்சுப் படிகளை மொழிபெயர்ப்புக்குக் கொடுக்கவேண்டிய பணியைத் தொடங்கினோம். யட்சகான நாடகங்களையும் பிறநூல்கள் பலவற்றையும் செவ்வனே மொழிபெயர்த்துக் கொடுத்துக் கொண்டிருந்த பேராசிரியர் திரு. ஜி. எஸ். பாலகிருஷ்ணன் அவர்களிடம் 1996 ஆகஸ்டில் தட்டச்சுப் படிகள் முழுமையாக ஒப்படைக்கப்பெற்றன. நூலை முழுமையாகப் படித்துத் தெளிவுபடுத்திக்கொண்ட பிறகே மொழிபெயர்ப்புப் பணியைத் தொடங்கும் செயல்முறைப்படி, பேராசிரியர் அவர்களும் நூலை முழுமையாகப் படித்துவிட்டு, மொழிபெயர்ப்புப்பணியில் ஈடுபட்டார்கள். இடையிடையே நூலில் ஏற்படும் ஐயங்களை நான் நேரில் சென்று விளக்கி வருவதுண்டு. பாடல்களின் கடினநடை, பேராசிரியருக்குப் பெரிதும் சோர்வையளித்துவிட்டது. 1997 பிப்ரவரியில் தட்டச்சுப் படிகளைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

மொழிபெயர்த்துத் தாருங்கள் அல்லது சிறந்த மொழிபெயர்ப்பாளர் ஒருவரிடம் ஆற்றுப்படுத்துங்கள் என்று கூறி 29.5.1997 இல் டாக்டர் ஏ.ஏ. மணவாளன் அவர்களிடம் ஒப்படைத்தோம். நூலை முழுமையாகப் படித்த அவர்கள், இந்த வைணவ நூலை மொழிபெயர்க்கத் தகுதிவாய்ந்தவர் என்று தேர்ந்து டாக்டர் ஆதிகேசவலு அவர்களிடம் ஆற்றுப்படுத்தினார்கள். 22.6.97 இல் ஒரு பகுதியும், 30.7.97 இல் ஒரு பகுதியுமாக நூல் முழுமையும் டாக்டர் ஆதிகேசவலு அவர்களிடம் கொடுக்கப்பெற்றது நூலை முழுமையாகப் படித்துவிட்டு, மொழிபெயர்க்கத் தொடங்கிய அவர்கள், சுமார் நாற்பது பாடல்களை மொழிபெயர்த்தளித்தார்கள். அந்த அளவோடு அவர்களிடமிருந்தும் நூல் திரும்பிவிட்டது. 1997 ம் சென்றுவிட்டது. 98 பிறந்தது. பலரைத் தேடினோம். 30.4.1998 இல் எழுதிய ஒரு கடிதத்திற்கு அரங்கநாயகன் எழுந்தருளி அருள்புரிந்துவரும் திருத்தலமாகிய திருவரங்கத்திலிருந்து (ஸ்ரீரங்கம்) 5.5.98 இலேயே இசைவுக் கடிதம் வந்தது

'கோலவரைத் துயிலரங்கன் சரிதம்' நூலை
ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திட **மகிழ்ச்சியுடன்**
இசைவு தெரிவிக்கிறேன். தமிழ்ப்படியை அனுப்புங்கள்.

அன்புடன்,
பிரேமா நந்தகுமார்'.

என்பதே அக்கடிதம்.

அதே சமயம் இந்த நிறுவனத்திற்காக நாலாயிரத் திவ்வியப் பிரபந்த முதலாயிரத்தின் மொழிபெயர்ப்புப் பணியைமேற்கொண்டிருந்தார்கள். எனவே, அப்பணி முடிந்தவுடன் இதைத் தொடங்குவதாகவும் எழுதியிருந்தார்கள். இருந்தாலும் 30.5.98இல் ஒரு பகுதியும், 27.7.98 இல் ஒரு பகுதியுமாகத் தமிழ்ப் படிகள் முழுமையாக அனுப்பப்பெற்றன. முதலாயிர மொழிபெயர்ப்பினை முடித்து 20.10.98 முதல் இந்நூலின் மொழிபெயர்ப்புப் பணியைத் தொடங்கி, 12 தவணைகளில் தொடர்ந்து அனுப்பி வந்தார்கள். 8.6.99 இல் நூலின் இறுதிப் பகுதியை அனுப்பி முழுமைபெறச் செய்தார்கள். தொடர்ந்து ஆய்வுரை, பதிப்புரை ஆகியவற்றையும் மொழிபெயர்த்து உதவியுள்ளார்கள்.

## சுவடி ஒப்பீட்டில் சில உண்மைகள்

இந்த நிறுவனச் சுவடியைக் காட்டிலும் அரசினர் சுவடி நூலகச் சுவடி காலத்தால் பிற்பட்டது அல்லது பின்னால் எழுதப்பெற்றது என்பது தெளிவாகிறது. இந்த நிறுவனச் சுவடியைக் காட்டிலும் 192 பாடல்கள் குறைவாக எழுதப்பெற்றுள்ளது அரசினர் சுவடி நூலகச் சுவடி என்பது முதற்காரணம். மேலும்,

**கோலவரைத் துயிலரங்கன் சரிதம்** என்பதே நூலின் பெயர். இதுவே இந்நிறுவனச் சுவடியில் காணப்பெறுகிறது இப்பெயர் அரசினர் சுவடி நூலகச் சுவடியில் **கோலாசல ஸ்தலபுராணம்** என்று மாற்றி எழுதப்பெறறுள்ளது தமிழர்தம் பண்பாடுகளை மிக அழகுறக் காட்டும் ஆற்றுப்படலம், நாட்டுபபடலம், நகரபபடலம் என்பன சுவடி நூலகச் சுவடியில் அறவே விலக்கப்பெற்றுள்ளன **தலவிசேடம்** என்னுந் தலைப்பு **வராக க்ஷேத்திர அத்தியாயமாகியிருக்கிறது**. ஆனால் இந்த அத்தியாய முடிவில் தலவிசேடம் முற்றிற்று என்னுந் தொடரே காணப்பெறுகிறது. தலைப்பு மட்டும் படியெடுப்பின்போது மாற்றி எழுதப்பெற்றுள்ளது எனபது தெளிவாகிறது. மூலசசுவடியிலிருந்து இந்தச் சுவடியில் படியெடுத்தவர்கள் வடமொழி கற்றவர்கள் மட்டுமில்லை. தமிழில் குறைபாடுடையவர்கள் ஆதலின் நூலின் தலைப்பு, அதிகாரத் தலைப்பு போன்றவற்றையே வடமொழிச் சார்பில் மாற்றியும், தமிழ்ப் பண்பாடு மிகுந்த பாடற்பகுதிகளை நீக்கியும் படியெடுத்திருக்கிறார்கள்.

அரசினர் சுவடி நூலகசசுவடி 1956இல் வெளியாகியுள்ளது. அதன் முகவுரையில்,

"கோலாசலம் எனவும, சிம்மபுரம் எனவும் சஞ்சீவிபுரம் எனவும் வரும் ஆட்சிகளையும் பிறவற்றையும் நோக்குமிடத்து, ஆசிரியர் கருதும் தலம் இக்காலத்துச் செஞ்சிக்கோட்டை என்று வழங்கும் செஞ்சியோ என்று கருத இடந்தருகிறது". என்று ஐயுற்றுக் கூறியிருக்கிறார் பதிப்பாசிரியர். அந்த மலை, ஊர், கோயில் ஆகியவற்றின் அனைத்துச் செய்திகளும் இந்நூலின் விளக்கமாக இடம்பெறுகின்றன அக்கோயிலின் புகைப்படங்களே நூலின் அட்டையை அலங்கரிக்கின்றன

"போற்றி, வெற்றி, தோற்றம், ஒப்பற்ற, அகற்றி . . . . . போன்ற சொற்கள் பேச்சு நடையில் முறையே போத்தி, வெத்தி, தோத்தம், ஒப்பத்த, அகத்தி . . . . எனவே ஆளப்படுதலைப் பாமரர்களேயன்றிப் பண்டிதர்களும் பேசும் பேச்சில் கேட்கிறோம். புகழ்ச்சியும் மகிழ்ச்சியும் முறையே புகட்சியும் மகிட்சியுமாகக் கேட்கப்படுகின்றன". என்பன பதிப்பாசிரியரின் சில விளக்கப்பகுதிகள். அவர்கள் குறிப்பிட்டுள்ளது போலக் கொச்சைச் சொற்களோ, பேச்சு நடைச் சொற்களோ இந்தப் பதிப்பிற்கான இந்நிறுவனச் சுவடியில் காணப்பெறவில்லை. மேலும், 'தர்மத்தைத் தற்மமாகவும், பிரமாணத்தைப் பிறமாணமாகவும், பிரம்மாவைப் பிறம்மாவாகவும் . . . . . பார்க்கிறோம்' என்கிறார். இவை கொச்சைநடை, பேச்சுநடைகளால் உருவானவையல்ல. பதிப்பாசிரியர் குறிப்பிடுவதுபோல இவை நூலாசிரியர் எழுதியவை என்று சொல்லமுடியாது. படியெடுத்தோரால் ஏற்பட்ட மாற்றங்களேயாகும்.

## பதிப்புமுறைகளுள் சில - இயல்தலைப்பு எண்கள்

நூலுள் இயல் (அத்தியாயம்) தலைப்புகளாக 1 முதல் 45 வரை எண்கள் கொடுக்கப்பெற்றுள்ளன. ஆனால் நூலின் இறுதித் தலைப்பு,

'நாற்பத்தொன்றாவது - வராகநதியின் வரலாறு உரைத்த அத்தியாயம்'என்று காணப்பெறும். அத்தலைப்புக்குமுன் 45. என்று எண் கொடுக்கப்பெற்றிருக்கும். இதேபோல, தொடக்கத்தில் 'முதலாவது வியாசன் உற்பத்தி - நைமிசாரணிய அத்தியாயம்' என்பதற்கு எண் 5. என்று கொடுக்கப்பெற்றிருக்கும். வரிசை எண்கள 1 முதல் 45 வரை பதிப்பாசிரியர்களால் கொடுக்கப்பெற்றவை. முதலாவது, இரண்டாவது என நாற்பத்தொன்றாவது என்பது வரை எழுத்தால் எழுதப்பெற்ற எண்கள் சுவடியில் இடம்பெற்றுள்ளவை.

சுவடியின் தொடக்கத்தில், வாழ்த்து, நூற்பயன், கடவுள் வாழ்த்து, அவையடக்கம், புராண சங்கிரகமணி, தொண்டைநாட்டுவளங் கூறுவாம என்னுந் தலைப்புகளில் 18 பாடல்கள் காணப்பெறுகின்றன. இப்பகுதிக்கு 1 என எண் கொடுத்து வாழத்து முதலியன என்னுந் தலைப்பு கொடுக்கப்பெற்றது. தொடர்ந்து ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம் என அமையும் பகுதிகளுக்கு முறையே 2, 3, 4 என எண்கள் கொடுக்கப்பெற்றன. எனவே, முதலாவது வியாசன் உற்பத்தி என்னும் அத்தியாயம் 5 என்னும் எண்ணைப் பெறுகிறது. நூல் முழுமையும் இவ்வாறே நான்கு எண்கள் வேறுபாட்டில் இயல்கள் அமைந்துள்ளன.

நூல் முழுமையும் பாடலின் உட்பொருளுக்குப் பொருத்தமான பாடல் தலைப்புகள் கொடுக்கப்பெற்றன. பதிப்பாசிரியர்களால் கொடுக்கப்பெற்ற இத்தலைப்புகள் அனைத்தும் அடைப்புக்குறிக்குள் அமைகின்றன. அடைப்புக் குறிக்குள் இல்லாதவை சுவடியில் உள்ள தலைப்புகளாகும்.

## உரைப்பகுதிகள்

பாடலும் பாடலுக்குரிய பொழிப்புரையுமாகவே சுவடியில் எழுதப்பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலின் பொழிப்புரைக்குங் கீழே குறிப்புரைகள் பதிப்பாசிரியர்களால் கொடுக்கப்பெற்றன. பாடலில் உள்ள கடின சொற்களுக்கான குறிப்புரைகளைக் கொடுத்து, **உரை** - என்று தனியே குறிப்பிட்டு உரையில் உள்ள கடின சொற்கள் சிலவற்றிற்கும் விளக்கம் தர வேண்டிய நிலை உருவாகிவிட்டது. ஒவ்வொரு அத்தியாயத்திலும் அமையும் செய்திகளைத் தொகுத்து அந்தந்த அத்தியாயத் தலைப்பின் கீழே சுருக்கமாக உரைநடையில் கொடுக்கப்பெற்றது இவை பதிப்பாசிரியர்களின் தொகுப்புரைகளாகும்.

## நூல் அமைப்பு

இந்நூல் 1296 பக்கங்களையுடையது எனவே இரண்டு பகுதிகளாக (2 parts) அமைக்க வேண்டியதாயிற்று **முதற்பகுதியில்** (I part) பதிப்புரை, ஆய்வுரைகளும், ஒன்று முதல் பத்தொன்பது வரை எண் உள்ள இயல்களுமாக, 671 பக்கங்கள் இடம்பெறுகின்றன. அதாவது, முதல் நான்கு பொது இயல்களும், முதலாவது நைமிசாரணிய அத்தியாயம் என்பது முதல், பதினைந்து விசுவரூபம் உரைத்த அத்தியாயம் என்பது முடிய உள்ள இயல்களும் **முதற்பகுதியாக** அமைகின்றன. பிறவாகிய இருபது முதல் நாற்பத்தைந்து முடிய எண்ணுள்ளனவாகிய, பதினாறாவது சிங்கவர்த்தனன் யுத்த அத்தியாயம் தொடங்கி, நாற்பத்தொன்றாவது வராகநதியின் வரலாறு உரைத்த அத்தியாயம் வரையிலான இயல்கள் **இரண்டாம் பகுதியாக** (II part) அமைகின்றன.

ஆய்வாளர்கள் பயன்படுத்துவதற்குரிய எளிமை கருதி, ஒவ்வொரு பகுதியிலும் இடம்பெறும் பாடல்களுக்கான, பாடல் முதற்குறிப்பும் சொல்லடைவும் அந்தந்தப் பகுதியிலேயே கொடுக்கப்பெற்றுள்ளன. நூலின் இரண்டாம் பகுதியேயாயினும், அதுவும் ஒரு முழுமையான நூல் என்று கருதுமாறு தொடக்க ஏடுகளும் பதிப்புரையும் இடம்பெறுமாறு உருவாக்கப்பெற்றுள்ளது.

## நன்றி

இதுவரை பத்துப் பகுதி (10 Parts) சுவடி விளக்க அட்டவணைகளையும், இருபத்தெட்டுச் சுவடிப் பதிப்பு வெளியீடுகளையும் வெளியிட்டுள்ள இந்தச் சுவடித்துறை, ஏழு சுவடிஇயல், பயிற்சி வகுப்புகளையும், இரண்டு சுவடிக் கருத்தரங்குகளையும் நடத்திச் சுவடிப் பதிப்பாசிரியர் பலரை உருவாக்கியுள்ளது. திட்டமிட்டுச் செயலாற்றி, இந்த உருவாக்கப்பணிகளைத் திறம்படமுடித்து, வெற்றி காண்பதற்கு அடிப்படைக் காரணமாய் அமைவது நிறுவனப் **பணியாளர் குழுக்கூட்டமே** (Staff meeting) யாகும்.

ஒவ்வொரு மாதத்திலும் ஒன்று அல்லது இரண்டுமுறை, பணியாளர் குழுக்கூட்டம் துறைதோறும் நடைபெறுவது இந்நிறுவன நடைமுறைகளில் இன்றியமையாத ஒரு நிகழ்ச்சியாகும். அந்தந்தத் துறை ஆய்வாளர்களும் நிறுவன இயக்குநர் அவர்களும் மட்டுமே ஒரு துறைக்குரிய கூட்டத்தில் இடம்பெறுவர்

இதுவரை நடைபெற்றுள்ள ஆய்வுப்பணிகள், அவற்றிலுள்ள நிறைகுறைகள், மேலும் நடைமுறைப்படுத்தவேண்டிய நெறிமுறைகள் போல்வனவற்றை இயக்குநர் அவர்களோடு கலந்தாலோசித்து முடிவுகள் காணப்பெறுவது முறை. அடுத்து மேற்கொள்ளவேண்டிய துறைக்குழுப் பணிகள், தனித்தனி ஆய்வாளர் பணிகள் போல்வனவற்றைத் தேர்ந்து, அவற்றை மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகள், முடிக்க வேண்டிய காலம் ஆகியவை திட்டமிடப்பெறும். அத்திட்டப்படி அப்பணிகள் நடைபெற்று வருகின்றனவா என்பது ஒவ்வொரு கூட்டத்திலும் சீர்தூக்கிப் பார்த்து, விரைவுபடுத்தும் வழிவகைகளும் எடுத்துக்காட்டப்பெறுவதுண்டு. இயன்றவரை குறிப்பிட்ட காலப் பகுதியில் அவ்வப்பணிகளை முடிப்பது துறையின் கடமையாகக் கொள்ளப்பெற்று வருகிறது.

ஆனால், 1995ஆம் ஆண்டு தொடங்கி இன்றுவரை சுமார் அறுபது குழுக்கூட்டங்களில், தன் புகழ்பாடியே கூட்டம் தொடங்கவேண்டும் என்ற நிலையை உருவாக்கி, நடைமுறைப்படுத்தி வந்திருக்கிறான் **கோலவரைத் துயிலரங்கன்**. ஒவ்வொரு கூட்டத்திலும் கோலவரை அரங்கன் எவ்வாறு இருக்கிறான் என்பது இயக்குநர் அவர்களின் தொடக்கவினாவாக அமையும்.

உருவாகிக்கொண்டிருக்கிறான், உரைகாணுகிறான், தட்டச்சுக்குச் சென்றிருக்கிறான் என்று சில மாதங்கள் விடைகிடைத்து வந்தன மொழி பெயர்ப்புக்கு ஆள் தேடுகிறான். மொழி பெயர்ப்புக்குச் சென்றிருக்கிறான், மீண்டும் மொழிபெயர்ப்புக்காக வேறிடம் சென்றிருக்கிறான் . . . என்னும் விடைகள் பல ஆண்டுகளை விழுங்கின.

'வெளிவருகிறான்' என்று கூறும் நிலையை இன்று தான் எனக்கு உருவாக்கியிருக்கிறான் அரங்கன். பதில் கூறுவதற்கே மிகவும் வருத்தமாக இருந்த **எனக்கு**, கேட்டு அறிவதோடு மட்டும் இவ்வளவு காலமாய்ப் **பொறுமையைக் கடைபிடித்துவரும்** நிறுவன இயக்குநர்,

வணக்கத்திற்குரிய டாக்டர் **ஜி. ஜான்சாமுவேல்** அவர்கள் மீது பொறாமை ஏற்படுவது தவறு என்கிறீர்களா? இல்லை இது உண்மைக்கூற்று. நூல் உருவாவதில் தங்கள் பொறுமையை மிகுதியாகக் காட்டிப் பல்லாற்றானும் ஊக்குவித்துவந்த அவர்களுக்கு எங்கள் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறோம்.

குறிப்புரை, உரைவிளக்கம், ஆய்வுரை போன்ற உருவாக்கப்பணிகளில் உறுதுணையாயிருந்தவர்கள், சுவடித்துறைப் பதிப்பாய்வாளர் வித்துவான் **ஆர். ஜெயலட்சுமி** அவர்கள். அச்சுப்படி திருத்துதல், சொல்லடைவு தயாரித்தல் போன்ற பணிகள் எல்லாவற்றிலும் முழு ஆர்வங்காட்டி ஒத்துழைப்பு அளித்தவர்கள் சுவடித்துறை நண்பர்கள், டாக்டர். **கே. ஜெயக்குமார்**, வித்துவான் **ஆர். ஜெயலட்சுமி**, திரு. **எம். மருதமுத்து**, திருமதி **ஜி. செல்வலட்சுமி**, திரு **ஜி. உத்திராடம்**, திரு. **ஒய். அந்தோணிசாமி**, திரு. **கே. பன்னீர் செல்வம்**, டாக்டர் **பி. நடராசன்** ஆகியோர்.

தொடக்கத்தில் அச்சகத்திற்கு அனுப்பவேண்டிய நிலையில் கையெழுத்துப்படியினைத் தட்டச்சு செய்தளித்தவர்கள் நிறுவனத் தட்டச்சர் திரு **செ. கோலப்பன்** அவர்கள். அச்சகம் என்ற நிலை மாறி, கணிப்பொறியில் பதிவு செய்யும் பணியைத் தொடக்கம் முதலே மேற்கொண்டதோடன்றி, இடையிடையே வேறு பல நூல்களைக் கணிப்பொறிமூலம் உருவாக்கியளித்துக் கொணடே, கோலவரை அரங்கன் சரிதப் பாடல்களுக்கான எழுததுப்பெயர்ப்புப் பணியையும் (Transliteration) நாங்கள எழுதிக்கொடுக்காமலே தாமே மேற்கொண்டு நூலை முழுமையாக்கியளித்தவர் நிறுவனக் கணிப்பொறியாளர் திருமதி. **நே. உமாராணி** அவர்கள். கணிப்பொறிப் பணிகளில் உறுதுணையாயிருந்தவர், நிறுவனக் கணிப்பொறித் துறைத்தலைவர் திரு **கே. செல்லத்துரை** அவர்கள்.

சிங்கபுரம் என்பது செஞ்சிக்கோட்டை என்று வழங்கும் செஞ்சியோ என்று ஐயுறுகிறாாகள் கோலாசல ஸ்தலபுராணப் பதிப்பாசிரியர் அவர்கள். ஆனால் தங்கள் சொந்தச் செலவில் சிங்கபுரத்திற்கு வந்து, இதுதான் கோலவரை, இதுதான் அரங்கனின் திருக்கோயில் என்பனவறறைத் தெளிவுபடுத்தும் புகைப்படங்களை எடுத்து அட்டைப்படத்தை அழகுற உருவாக்கி இலவசமாக அளித்தவர்கள் **பி.எஸ். வீடியோ** உரிமையாளர், திரு **எஸ். இளம்வேள்** அவர்கள். உடன் வந்திருந்து புகைப்படம் எடுப்பதில் துணைபுரிந்தவர் திரு. **எம். பிரசன்னா** அவாகள்.

நூலினை அழகுற அச்சிட்டு அளித்தவர்கள், **மாணவர் மறுதோன்றி அச்சகத்தார்** அவர்கள்

அனைத்து அன்பர்களும், அன்பு உள்ளங்களும் சிறப்புற்று விளங்க அரங்கன் அருள்புரிவானாக வேண்டி, அவன் திருவடிகளை வணங்கி, எங்கள் உளமார்ந்த நன்றியையும் உரித்தாக்கி மகிழ்கிறோம்

**பூ. சு. ; கா. ச.**

# EDITORIAL INTRODUCTION

"A veritable king in singing self- *purāṇam*."

"Totally Purāṇic mad".

"All that is ancient Puranic clap-trap. It is of no use today".

"Go to. Sing the old *Purāṇam* as you seem to know nothing new".

Such has been the attitude of modern times to denigrate the *Purāṇam* literature. The common reader feels that the *Purāṇams* are just stories which are of no use to the community. This is the age of science and technology. Is it worthwhile to print a *Purāṇam* just because:

It is found in ancient palm-leaf manuscripts; it is considered an old work; a work with an ancient commentary; a work large enough to come out in two parts; that a manuscript has been found in this Institute of Asian Studies and another in the Government Manuscript Library; because the manuscript of the Institute contains 192 verses more that what is found in the Library; and that they have several meaningful differences; and because of these differences one has been able to arrive at a closer understanding of the *Purāṇam*?

Is this *Purāṇam* absolutely necessary? Is it important to study this Purāṇam?

**The Tale**

Take this common tale. There was an old grandmother who used to make fried cakes, and made her living by selling them. One day a crow took a cake and flew up a tree. A jackal came there. Seeing the crow with the cake, the jackal wanted to have it. Trying a trick, it praised the crow and made it sing. The crow cawed. The cake fell down and was taken away by the jackal. This tale is usually recounted to children, generally as a song. The children love repeating it and surely imbibe the lesson that if we trick a person we get tricked too. Besides, they will remember for all lifetime that stolen goods will never last long. Such are the uses of telling stories.

But if the lesson is presented as an ethical precept, children will not have the patience to listen to it. Nor will the idea get imbedded in their mind.

## Changes in the Tale

The grandmother's mistake was to keep the cakes in an open space to sell them. The crow's nature is to take what it gets to assuage its hunger. It was not the crow that deceived the old woman. The grandmother was naive enough to be deceived.

When the jackal asked the crow to sing, it first put the cake beneath its feet and pressed it safe. Then it cawed. The jackal that failed ran away.

This is how in modern times changes are made in such tales to get across the message. There is thus the need to be alert with the work on hand.

## The Purāṇic Tale

Ciṅkavarttaṉaṉ was the commander-in-chief of Cūrapatmaṉ. He had performed austerities and gained boons. Due to the power of the boons he defeats Intiraṉ and ascends his throne. Pride overwhelms him. He tortures the celestials.

The celestials seek the help of selfless sages like Nāratar. All of them go to Lord Murukaṉ. They appeal to him for had he not defeated the acurās in ancient times? Murukaṉ journeys forth along with the gods. He battles with Ciṅkavarttaṉaṉ. In the end, he gets defeated. The gods then seek the help of Araṅkaṉ.

## Araṅkaṉ's Plan

Araṅkaṉ cogitates on the ways of defeating Ciṅkavarttaṉaṉ. After deep deliberation, he commands Murukaṉ to manifest as a mountain and himself settles down there as Intiraṉ. The mountain begins to fly. Meanwhile Ciṅkavarttaṉaṉ thinks Murukan has been defeated and is in his court along with his army. Flying thither, Araṅkaṉ cuts down the wings of the mountain as it flies over the army camp. The mountain falls upon the acurās as if from nowhere. All of them are destroyed. The place where Ciṅkavarttaṉaṉ breathed his last becomes Ciṅkapuram. The mountain remains there and comes to be known as Kōla Hill.

When engaged in an important work, one must plan well in advance and decide upon the best possible way. It is silly to dither with contrary plans after deciding upon a course of action.

This decision taken by Araṅkaṉ leads to large-scale destruction. The victor should not be plagued by the effects of such destruction. However, it is no sin to bring under control those who give way to evil ideas. Nor is it a sin to use force to destroy the evil that seeks to use physical strength and army power to desecrate the best in creation.

## The Purāṇic Form

1. As it speaks of creation and the aeons, the *Purāṇam* is a scientific document.

2. By speaking of the dynasties of kings and the lines of sages, the work becomes a document of political history.

3. The Purāṇam becomes an ethical work when it speaks of moral good. In the same way, a *Purāṇam* contains the aspects of folklore and human psychology.

It is a fact that the *Purāṇam* uses a story line to convey knowledge to man, and how he must live a blameless life.

## A Note on the Publication

The *Purāṇam* conveys concepts of living to the common man who must follow the high path of morality. It creates a story to delineate each of its facets and conveys the concepts in an easily assimilable manner.

This is why it became imperative to publish the present *Purāṇam*. The hope that the common reader will benefit by the simple tales that nevertheless carry great thoughts spurred the preparation of the manuscript for publication.

Is the need to read the *Purāṇam* so imperative? Today politics and the corridors of power are swaying the society very badly. The Purāṇic story could be used to understand contemporary situations. Though the asuric crowd that helps evil men perpetrate crimes against humanity appears to succeed at first, this is seen as but a fleeting triumph. Soon the acurās will be destroyed. This

message of hope for suffering humanity embedded in the *Purāṇam* has been an inspirational factor to undertake its publication.

For five years (October 1979 to October 1984) I (P.S.) was in charge of establishing and running a Post Graduate Diploma Course in manuscriptology in the International Institute of Tamil Studies. I was a government servant on deputation. During that period I wished to edit and publish the manuscript of *Kōlavarai Araṅkan Caritam.* I was able to gain the assent of the Director of the Institute and made Mr. V.R. Madhavan copy it. Thereafter I completed the editorial work such as writing notes and explanations and got the manuscript ready for the press. But it was not published. Nor do I know what happened to my manuscript. It was at this stage that the idea of publishing it was mooted in the Institute of Asian Studies.

**The Manuscript**

*Kōlavarait tuyilaraṅkaṉ Caritam* is being published from the Manuscript No. 1383 in the Institute of Asian Studies. One of the editors of this volume, Dr. K. Satyabama had gifted this manuscript to the library of the Institute on 27.6.1996. The manuscript has 282 pages.

Even when the manuscript was with Dr. Satyabama, we had both begun copying it from 1994. Soon work like writing notes was completed. Another manuscript of this work is in the Government Manuscripts Library as R. 87. It had been bought from Aruṇācala Iyer of Mylapore, Madras in 1911-12. The manuscript has 397 leaves. There are a total number of 675 verses. The manuscript has been copied onto paper and is found as R. 1537. The two copies were used for comparative study when editing the present volume. Alternate readings have been noted in the edition. The editorial work was finished by 1995 and the typescript was finalised. After this, Dr. K. Satyabhama gifted the original manuscript also to the library of the Institute.

**Department of Manuscriptology**

The Institute of Asian Studies was inaugurated in 1982 with two important aims:

1. To bring to light the common ground of the languages of Asia.
2. To conduct research into the culture and history of Asian countries.

The Institute is engaged in placing the Dravidian culture in a global setting, as it has a high place in Asian culture and has an ancient history. Approaches were begun towards getting Tamil its rightful place in the family of the classical languages of the world. One of the departments engaged in this task is that of Manuscriptology.

A meeting of UNESCO experts took place in Warsaw in 1994. Dr. John Samuel, Director of the Institute attended the meeting and made them accept the manuscripts of Tamils that are the repositories of Tamil arts and traditions as among world's heritage possessions. In the same way, he spoke at the Tashkent Experts Committee Meeting in 1996 and the UNESCO has accepted the Institute's manuscripts on medicine as part of the rare documents of the world.

## The Work of the Department of Manuscriptology

The prime work of this Department is to gather information about Tamil manuscripts scattered in various places, make descriptive catalogues and publish them in English to bring it to the attention of the world. Five volumes (in ten Parts) have been published sofar.

Secondly, the Department is engaged in choosing, editing and publishing Tamil palm-leaf manuscripts that contain the experiences, discoveries and cultural markings of the Tamil people. Certain guidelines are followed in undertaking this task.

The riches of Tamil arts and culture in these manuscripts should reach Indians and foreigners who do not know Tamil. They should all be able to have an in-depth knowledge of the works and even undertake research about them. Hence all the manuscripts are published with an English translation. Till the end of December 1999, twenty-eight manuscripts have been published accompanied by English translations.

## History of the Translation

After the typed manuscript of the work was ready, we began the task of preparing the translation. In August 1996, the entire manuscript was handed over to Prof. G.S. Balakrishnan who had been translating Yaksha Ganas and other works. After reading the manuscript, the Professor began his work. In between I would meet him and clarify his doubts. But he was somewhat tired

with the complexities of the style in the verses. He returned the manuscript in February, 1997.

On 29th May, 1997, we gave the manuscript to Dr. A.A. Manavalan to either translate the work or direct us to a good translator. He read the complete work and felt that Dr. Adikesavulu was the right person to translate this work on Vaishnavism. The manuscript was sent to him by the middle of 1997. He went through the manuscript and translated about forty verses. But he also returned the manuscript. At last we wrote to Prema Nandakumar on 30th April, 1998. She replied from Srirangam on 5th May: "I would be happy to translate the work, '*Kōlavarait Tuyilaraṅkaṉ Caritam*'. You may send me the Tamil manuscript. With regards, Prema Nandakumar".

She was then engaged in the translation of '*Mutalāyiram*' for the *Nālāyira tivya Prapantam* Project of this Institute. Hence, she wrote that she would take up the new work after she had completed the earlier assignment. Accordingly she began the work in October, 1998, and kept sending the translated passages at regular intervals, completing the work on 8.6.99. She has also translated the critical introduction and editorial introduction.

**Some Facts Regarding Comparison of Manuscripts**

Compared to the manuscript of the Institute, the one in the Government Manuscript Library is later in time. It has 192 verses less as well.

The title of the work as found in the Institute manuscript is *Kōlavarait Tuyilaraṅkaṉ Caritam*. The other manuscript is titled *Kōlācala Stala Purāṇam*. It does not contain the *Āṟṟup paṭalam*, *Nāṭṭup paṭalam* and *Nakarap paṭalam* which actually bring out the richness of Tamil culture. The title *Tala-vicēṭam* has been changed to *Varāka Kṣētra Atyāyam*. But at the end of the chapter it says: "Here ends Tala-vicēṭam". Obviously the title was changed when the copy was being made. It is quite possible that the copyists from the original were knowledgeable in Sanskrit and perhaps deficient in Tamil. Hence the changes in the title and the removal of passages pertaining to Tamil culture.

The Government Manuscripts Library manuscript was published in 1956. The editorial introduction states: "Looking at names like Kōlācalam, Ciṅkapuram and Cañcīvipuram, it is possible that the author means the present day ceñcy Fort". This work deals with information regarding that hill, city and temple. The photographs of the temple are found on the cover.

The editor explains how words like *pōṟṟi, veṟṟi, tōṟṟam, oppaṟṟa* and *akaṟṟi* take the spoken form of *pōtti, vetti, tōttam, oppatta* and *akatti* and how even scholars tend to favour the common usage. *Pukaḷcci* and *Makiḻcci* are hears as *Pukaṭcci* and *Makitcci.* But such common usages are not found in the manuscript of the Institute. The editor states further: We see *tarmam* as *taṟmam, pirāmaṇam* as *piṟāmaṇam* and *Pirmma* as *Piṟamma* . . . " But these are not formed by common usage. We cannot take them as the usages of the author. Obviously the changes were made by the copyists.

**On the Numbers of Chapters**

The chapters of the work are given from 1 to 45. But the last chapter says: "Forty - one: History of the Varāka river". But the number given is 45. "First: Viyāca's Birth - - Chapter on Naimisāraṇya" is given the number 5. The numbers 1-45 are given by the editors. But the numbers in words upto forty-one are found in the manuscript.

At the beginning of the manuscript. 18 verses are found under the following headings : *Vāḻttu, nūṟpayaṉ, kaṭavuḷ vāḻttu, avaiyaṭakkam, purāṇasaṅkirakamaṇi, toṇṭai nāṭṭuvaḷam kūṟuvām.* This portion has been given the number 1 with the title, vāḻttu etc. This is followed by *Āṟṟuppaṭalam, Nāṭṭup Paṭalam* and *Nakarap Paṭalam* with the numbers 2, 3 and 4. Thus the chapter on the incarnation of Viyācar gets the number 5. Thus the entire work has a differential of four numbers.

Appropriate titles have been given throughout the work. These titles given by the editors are given within brackets. The ones that have no brackets are the titles found in the manuscript.

**Commentary**

The manuscript had the verses and the commentary. The editors have added notes beneath the commentary on each verse. Notes have been given to some of the difficult words of the poem and a situation has risen where notes have had to be given for words in the commentary also. These get the subtitle, 'commentary'. A summary in prose of each canto has been given beneath the title. These passages have been contributed by the editors.

## The Work

The work has 1296 pages. Hence the need to publish it as two parts. Part I contains the editorial introduction, a critical introduction and cantos from 1 to 19 making up 671 pages. That is, the first four general titles and from the first canto on Naimisaraṇya to the fifteenth on the cosmic Form. Part II contains cantos numbering 20 to 45 (the sixteenth on the war waged by Ciṅkavartaṉaṉ to the forty - one on the history of the Varāka river).

To help research workers in the field, each canto contains a glossary of first lines. The second Part also has been edited in such a way as to give it the look of an individual volume containing the editorial introduction.

## A Motion of Thanks

The Department of Manuscriptology which has so far published ten volumes of descriptive catalogues and twenty eight manuscripts, has also conducted seven Workshops on Manuscriptology and two seminars on the subject. This has helped in creating a band of workers with editorial enterprise. The main reason for the success of such programmes has been the staff of the Institute.

Each department holds a couple of staff meetings every month. The Director of the Institute and the members of the particular department gather to discuss the progress of research work, the problems faced in the undertakings and the manner in which they can be overcome. Also, decisions are taken regarding the next work on hold and individual research with time-bound programmes. The work completed upto that time would also be taken up for critical appraisal. The Department of Manuscriptology has tried its best to keep to the time schedule in all cases.

But, the Araṅkaṉ of Kōla Hill has seen to it that since 1995, he is in the forefront of almost sixty meetings. Each meeting would begin with the Director's query regarding the progress of Kōlavarai Araṅkaṉ.

For some months it was: He is being formed, the commentary is being written, he has gone for preparing the typescript. Several years were spent with answers like: He is searching for a translator, he has gone for being translated, he has now gone elsewhere for translation.

Only now Araṅkaṉ has made it possible for me to say: He is getting released! Though I felt sad to be giving such answers, would you be surprised if I confess that I became jealous of **Dr. John Samuel** for being so patient? No! This is the truth. We thank him deeply for being so patient with us and encouraging us throughout.

Vidwan **R. Jayalakshmi**, editorial assistant in the Department of Manuscriptology was of invaluable help with notes, explanation of the commentary and the critical introduction. The friends in the Department who gave their full support in correcting the proofs and preparing the glossary of words were Dr. **K. Jayakumar**, Vidwan **R. Jayalakshmi**, Thiru. **M. Maruthamuthu**, Thirumati **G. Selvalakshmi**, Thiru **G. Uthiradam**, Thiru **Y. Anthonisamy**, Thiru **K. Panneer selvam** and Dr. **P. Natarajan.**

The Institute's typist, Thiru. **S. Kolappan** typed the handwritten manuscript at first. Thirumati **N. Umarani**, D.T.P. Operator of the Institute undertook the computer recordation from the very beginning, and even while she was busy with other work, she completed the typing of the Tamil passages as well as their transliteration. Thiru. **K. Chelladurai**, head of the computer section was of immense help in the computer work.

The editor of *Kōlācala Stala Purāṇam* wonders whether Ciṅkapuram is Ceñci also known as *Ceñci* fort. Thiru **S. Ilamvel**, proprietor, **P.S. Video** went to Ciṅkapuram on his own and snapped photographs to show that "this is Kōla Hill" and "this is the temple of Araṅkaṉ". Thiru **M. Prasanna** accompanied him to help in taking the photographs.

The proprietors of *Māṇavar Maṟutōṉṟi Accakam* have printed the work very well.

We invoke the blessings of Araṅkaṉ for the prosperity of all friends and loving hearts, salute His Feet and record our heart-felt gratitude.

**P . S. ; K . S.**

# ஆய்வுரை

## புராண்ம் என்னுஞ் சொல்

தமிழ்மொழியில் தோன்றிய இலக்கியங்களுள் பெரும்பாலானவை அகப்பொருளிலக்கியம், புறப்பொருளிலக்கியம் எனவும், பேரிலக்கியம், சிற்றிலக்கியம் எனவும் பெயர்பெறுகின்றன. ஆனால் இந்திய நாட்டு இலக்கியங்களுள் பெரும் பகுதி புராணங்களாகவே இயற்றப்பெற்றுள்ளன. அவற்றைப் பின்பற்றியே தமிழிலும் பல புராணநூல்கள தோன்றியிருககின்றன அவற்றுள்ளும் சமஸ்கிருதமொழிப் புராணங்களின் மொழிபெயர்ப்பு நூல்களே மிகுதியாகும். சிறப்பாகத் தமிழில் தோன்றிய புராணங்கள் என்றால் தலபுராணங்களே நினைவுக்கு வரக்கூடும்.

**கோலவரைத் துயிலரங்கன் சரிதம்** என்னும் இந்தப் பதிப்புநூல் அரங்கன் சரிதம் என்னும பெயரைப் பெற்றிருந்தபோதிலும் புராண அமைப்பினையுடையதாகும் தலபுராணப் பொருளில் உருவாகியுள்ளது எனவே தொடக்கத்தில் **புராணம்** என்னும் சொல்லைப் பற்றி ஒரு சில செய்திகளை அறிய வேண்டியுளளது

**புராணம்** என்பது **பழைய வரலாற்று நூல்** என்னும பொருளையுடையது. எல்லாச் சமயங்களுமதாம் போற்றும் இறைவனைப் பழமை வாய்நதவன் என்னும் பொருளில் **புராணன்** என்றே குறிப்பிடுகின்றன.

"பொருளன் புனிதன் **புராணன்** புலவன்" (சிலமபு, 10-179)

"புலவன் தீர்த்தன் புணணியன் **புராணன்**" (மணிமே, 5-98)

என்பன இலக்கியத் தொடர்கள் இறைவன் உலகப்பொருளாக விளங்குபவன்; தானே தூயவனாகி, உயிர்களிடையில் தூய்மையை அளிப்பவன்; புதுமைச் சிறப்புடையவனாகியும் காட்சிதருபவன் மெய்யறிவுடைய அவன், எல்லாருடைய அறிவாகவும் விளங்குபவன்; உயர்ந்த அறமே உருவானவன் என்றெல்லாம் போற்றுகின்ற இந்த இலக்கிய அடிகள, முனனைப் பழமபொருட்கும் முன்னைப் பழம் பொருளாகி விளங்குபவனாதலின் அந்த இறைவனைப் **புராணன்** என்றே குறிப்பிடுகின்றன.

சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாஙகியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி ஆகியோர்தம் சமயத்திறன்களை யெல்லாம் கேட்டறிகிறாள் மணிமேகலை. அப்போது,

"காதல் கொண்டு **கடல்வண்ணன் புராணம்**
ஓதினன் நாரணன் காப்பென் றுரைத்தனன்" (மணிமே. 27, 98-99)

வைணவவாதி. கடலின் நிறத்தையுடையவனாகிய விஷ்ணுவின் புராணத்தை அன்போடு ஓதுகிறான் வைணவவாதி. தங்களுக்கு நாராயணனே இறைவன் என்று மணிமேகலையிடம் கூறும் அவன் விஷ்ணுவின் வரலாற்றைப் **புராணம்** என்றே குறிப்பிடுகிறான்.

முன்வினைத் தொல்லைகளெல்லாம் அறவே நீங்கி உயயவேண்டிச் சிவபெருமானது அனாதி முறைமையான பழமையையெல்லாம் உள்ள மகிழ்ச்சியோடு தொகுத்துச் சொல்லத் தொடங்குகிறார் மணிவாசகப் பெருமான்.

"சிந்தை மகிழச் **சிவபுராணந்** தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்" (திருவா. 19-20)

என்று கூறும் அவர், சிவபெருமானின் பழைய வரலாற்றைச் **சிவபுராணம்** என்றே குறிப்பிடுகிறார்.

"நீரின்மா முனிவன் நெடுங்கைகொடு நீர்தனைப்
பூரித்து ஆட்டி அர்ச்சிக்க இருந்த **புராணனே**" (சம்பந். 1569)

என்பது திருஞான சம்பந்தர் கூற்று. நீராட்டி அர்ச்சிக்கப் பெறும் அந்த இறைவனைப் **புராணன்** என்றே விளிக்கிறார் சம்பந்தர்.

**பழமை** என்னும் பொருளைத் தருவனவாகத்,

"தொல்லை, முன், **புராணம்**, முந்தை, தொனமை, தொன்று, ஊழ், பூர்வம், பண்டு, ஒல்லை, புராதனம், கிதம், பழமை" என்னும் பதின்மூன்று சொற்களைக் குறிப்பிடுகிறது நாமதீப நிகண்டு (563). புராணம் என்னும் சொல்லும் அவற்றுள் ஒன்று

**பழைய** வரலாறு என்னும் பொருளைத் தருவனவாக, மூதுரை, **புராணம்**, முதுசொல், கதை என்னும் நான்கு சொற்களைத் தருகிறது அதே நிகண்டு (667). அவற்றுள்ளும் புராணம் என்னும் சொல் இடம் பெறுகிறது.

## புராண இலக்கியம்

இறைவனின் உண்மை, அவனது பராபரத்தன்மை, அவனை வணங்கும் முறைகளாகிய பூசை, நைவேத்தியம், வேள்விமுறைகள், இறைவன்முன் வைக்கும் வேண்டுகோள்கள் (பிரார்த்தனைகள்), தீமைகள் விலகவும் பகைவர்கள் விலகவுமாகிய வழிவகைகள், தருமநூற்கொள்கைகள், மேற்கொள்ளும் உயர்ந்த செயல்களுக்குரிய முடிந்த முடிபுகள்

போன்றவற்றை உணர்த்துவன வேதம், ஆகமம், உபநிடதம், சித்தாந்தம் போல்வன. இவற்றின் உண்மைத் தத்துவங்களை எளியோர் அனைவராலும் உணரமுடியாது. ஆனால் எளியவர் முதல் அனைவரின் நன்னெறி வாழ்க்கைக்கு இன்றியமையாத கருத்துக்கள் அவை.

சிறந்த ஞானிகளும் சான்றோர்களுமாக விளங்கிய நம் முன்னோருள் பலர் அந்த வேதநூல்களின் உட்பொருளை நன்கு உணர்ந்திருந்தார்கள். அவை அனைத்து மக்களின் வாழ்க்கைக்கும் இன்றியமையாதவை என்பதையும் அறிந்திருந்தார்கள். "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் கோட்பாட்டில் ஊறியிருந்த அவர்கள், வேதநூல்களின் சாரங்களை அனைவருக்கும் எடுத்துச்சொல்ல வேண்டுமென்று முனைந்தார்கள் அந்தச் சாரங்களை எளிமைப்படுத்தினார்கள்; கதைகளில் புகுத்தினார்கள்; பலரும் உணருமாறு வெளியிட்டார்கள். அவர்கள் வெளியிட்ட அந்தக் கருத்துக்களின் தொகுப்பே நம்மிடை உலவிவரும் **புராண இலக்கியங்களாகும்**

புராண இலக்கியம் என்பது பழமைவாய்ந்த ஒன்று என்றாலும், இவ்விலக்கியம் படைக்கப்படாத ஒரு மொழி நம் நாடடில் இல்லை புராணக் கதைகளை, காவியங்களைச் சுவைபட ஒருவர் எடுத்துச் சொல்ல, அதைக் கேட்காத மக்களும் இல்லை. தோன்றிய சில நாட்களில் மறையும் நூல்களைப்போல் அமையாதவை புராணங்கள் பலவகை முன்னேற்றங்களைக் கண்டுள்ள அறிவியற் காலமாகிய இக்காலத்திலும் இராமாயண, பாரதங்களை வெறுத்து ஒதுக்குவார் யாருமே இல்லை. இத்தகு நடைமுறைகளைக் காணும்போது பிற எல்லாவகை இலக்கியங்களைக் காட்டிலும் மக்களால் என்றும் போற்றப்படும் இலக்கியம் என்றால் அது புராண இலக்கியத்தையே சாரும்.

**புராண இலக்கணம்**

புராணம என்பது உலகத் தோற்றத்தை எடுத்துக் காட்டுவது; உலக உயிர்களின் ஒழுக்க நெறிகளை உணர்தது௨து. மனுவின் காலததைக் கூறுவது; முனிவர்களின் மரபை நிரல்படுத்திக் காட்டுவது. அரசமரபை அறியச் செய்வது என்னும் ஐந்து வகையான **இலக்கண அமைப்பில்** உருவாக்கப்படுவது என்பதைப் புராண இலக்கியங்களைக் கொண்டு பகுத்தறிய முடிகிறது அது மிகப் பழங்காலந் தொடங்கி இன்றுவரை இந்தியமொழிகள் அனைத்திலும் பரவி விளங்கி வருகின்ற ஒருவகை இலக்கியம் ஆகும். அதுவும், பொருள் தொடர்நிலைச் செய்யுள் என்னும் பெருங்காப்பிய இலக்கியம் ஆகும் எனலாம்.

உலகத் தோற்றத்தையும், ஊழிக்கால வரலாற்றையும் எடுத்தியம்புகிற போது புராண இலக்கியம் ஒரு **அறிவியல் நூலாக** விளங்குகிறது. முனிவர் மரபு, மன்னர் மரபு போன்றவற்றைப் பட்டியலிட்டுக் காட்டும் பண்பால் அது ஒரு **அரசியல் வரலாற்று நூலாகத்** தோற்றமளிக்கிறது உலக உயிர்களின் ஒழுக்கநெறிகளை உணர்த்துந் தன்மையால் அதுவே ஒரு **அறநூலாகி** விடுகிறது. கொள்கைகளும் கருத்துகளும் எவ்வளவு ஆழ்ந்து உணரக்

கூடியனவாக இருப்பினும் அவையனைத்தும் எளிய சான்றுகளோடும், எல்லோருக்கும் விளங்கும் கதைகளின் மூலமும் எடுத்துச் சொல்லப்படும் இலக்கண முறையால், புராண இலக்கியங்கள் உலகத்தில் என்றும் நிலைபேறுடையனவாகி விடுகின்றன.

முச்சங்க வரலாற்றை எடுத்துக்காட்டும் நக்கீரர், "அவர்களால் பாடப்பட்டன கலியும் குருகும் . . . . இத்தொடக்கத்தன வென்ப. அவர்க்குநூல் அகத்தியமும் தொல்காப்பியமும், **மாபுராணமும்** இசைநுணுக்கமும், **பூதபுராணமும்** என இவை"[1] என்று விரிவு கூறுவார். எனவே சங்ககாலப் புலவர்களுக்குத் துணைபுரிந்த நூல்களுள் புராணமும் ஒன்று என்பது தெளிவாகிறது. பிற துணைகள் அனைத்தும் இலக்கண நூல்களாதலின் இடையிடையே கூறப்பட்ட **புராணம்** என்னும் பெயர்களும் இலக்கணநூல்களைச் சுட்டியன என்று கொள்ள இடமளிக்கின்றன. இலக்கியங்களுக்கு இலக்கணம் வகுக்கும் பாட்டியல் நூல்கள்,

"பிள்ளைக் கவிமுதல் **புராணம்** ஈறாகத்
தொண்ணூற் றாறெனும் தொகைய தான"[2]

எனப் புராணத்தையும் இலக்கிய வகைகளுள் ஒன்றாகச் சுட்டுகின்றன. மேலும் புராண இலக்கியத்தை,

"அறமுதல் நான்கினும் ஆக்கப் பெறுவது
காப்பியம்; **புராணமா**ய்க் கருதப் பெறுமே"[3]

எனக் காப்பிய நிலையில் வைத்தே அவை இலக்கணம் வகுக்கின்றன.

**புராண வகை**

உள்ளத்தை மகிழ்விக்கும், மலர்விக்கும் சுவையான வரலாறுகளை உட்கொண்ட கதைகளைத் தன்னகத்து அடக்கி, அவற்றால் அறிவுக்குப் புத்துணர்ச்சியூட்டும் புராணங்கள் பல வகைப்படுகின்றன அவற்றுள் **சிறப்பாகக்** குறிப்பிடத்தக்கனவும், முறையாக வகைப்படுத்தி எடுத்துக்காட்டப்படுவனவும் ஆகிய புராண இலக்கியங்களை 1. மகாபுராணங்கள் 2 உபபுராணங்கள் என்னும் இரண்டு பெரும்பிரிவினுள் அடக்கிக் கூறுவது மரபு. மகாபுராணங்களைப் பதினெண் புராணம் என்றே குறிப்பிடுவர். சைவ புராணங்கள், வைணவ புராணங்கள் என்னும் பெயரில் சமய அடிப்படையில் குறிப்பிடுவதும் உண்டு. இவற்றைத் தவிர, தலபுராணங்கள் என்பன ஒரு வகை. மிகுதியான புராண நூல்கள் தல புராண வகையில் அடங்குவனவாகும். பிற புராண நூல்களைப் போலவே இறைவனது சிறப்புகளை எடுத்துக்காட்டுவனவாய் இருப்பினும் குறிப்பிட்ட ஒரு தலத்தில் எழுந்தருளி

---

1. இறையனார் அகப்பொருள் - நக்கீரர் உரை - நூற்பா 1.
2. பிரபந்த மரபியல - நூற்பா 1; 3. ஷ நூறபா. 21

யுள்ள இறைவனது சிறப்புகளை உணர்த்துவனவே தலபுராணங்கள் என்னும் வகையில் கூறப்படுகின்றன.

தொடர்ந்து பின்னால் எடுத்துக்காட்டப்பெறும் பதினெண் புராணங்களைத்தவிர, சனற்குமார புராணம், சிவதரும புராணம், துருவாச புராணம், நாரத புராணம், கபில புராணம், அவுசன புராணம், சௌமிய புராணம், வருண புராணம், காளி புராணம், வாசிட்டமிலிங்க புராணம், மானவ புராணம், சௌர புராணம், சாம்பேச புராணம, பார்க்கவ புராணம் என்னும் பதினெண்புராணங்களும் உபபுராணங்கள் என வழங்கப்பெறுகின்றன. இவை வெவ்வேறு பரம்பரை வழியாக உபதேசம் பெற்ற மாமுனிவர்கள் சிலரால் உருவாக்கப்பெற்றவை; மகாபுராணங்களைப் பின்பற்றியே உருவானவை. இப்புராணங்கள் அனைத்துமே நூலாசிரியர்களால் பிற சான்றோருககு உபதேசிக்கப்பெற்றுப் போற்றப்பெற்றவையாகவே கருதப்பெறுவது குறிப்பிடத்தக்கது.

### பதினெண் புராணம்

"பிரமநற் பதுமம் வைணவஞ் சைவம்
பேருல சேத்துபா கவதம்
அருடரு நார தீயமார்க் கண்டம்
ஆக்கினே யம்பவி டியமே
கருதரும் பொருள்சேர் பிரமகை வர்த்தம்
இலிங்கமவ ராகமெய்க் காந்தம்
மருவுவா மனஞ்சொற் கூர்மநீண் மற்சம்
காருடஞ் சிறந்தவா யவியம்"

என்பது பதினெண் புராணங்களைச் சுட்டும் பாடல் புராணநூல் பதிப்புகள் பலவற்றிலும் இப்பாடலே இடம்பெறுகிறது புராணச்சுருக்கம் வைப்பு முறையையும் சுட்டிக் காட்டுகிறது. ஆனால், திவாகரம் என்னும் நிகண்டுநூல்,

"மச்சம கூர்மம் வராகம் வைணவம்
பத்மம் பிரமம் பாகவதம் சைவம்
மார்க்கண்டேயம் காந்தம் வாமனம் காருடம்
பிரமாண்டம் லிங்கம் பிரமகை வர்த்தம்
பவுடிகம் நாரதம ஆக்கி னேயம்
பாறபரு பதினெண் புராணம என்ப" (2453)

என்னும் வரிசையில் குறிபபிடுகிறது

## 1. பிரம புராணம் (பிராமியம்)

புராணங்கள் பலவும் கூறும் அடிப்படையில் தொடக்கத்தில் உலகத் தோற்றத்தை இப்புராணமும் கூறுகிறது. சூரியகுலம், சந்திரகுலம் என்னும் இருவகைப் பிரிவில் மன்னர் மரபு சிலவற்றை எடுத்துக் காட்டுகிறது. சிவத்தலங்கள், விஷ்ணுத் தலங்கள் ஆகியவற்றின் வரலாற்றையும், அவற்றின் பெருமைகளையும் அறிவிக்கிறது. சகந்நாதத்திருத்தலத்தின் சரித்திரம் இந்நூல் கூறும் செய்திகளுள் சிறப்பு வாயந்த ஒன்றாகும்.

## 2. பதும புராணம் (பாத்மம்)

பிற புராணநூல்களைப்போல இப்பூவுலகின் தோற்றத்தை மட்டும் கூறிவிடாமல் இந்நிலவுலகத்தோடு, மேலுலகு, கீழுலகு (பாதலம்) என்னும் அடிப்படையிலாக உலக அமைப்பு முறைகளையும் அவற்றின் தனித் தனிச் சிறப்புகளையும் எடுத்துக்காட்டுவது பதும புராணம் புண்ணிய தீர்த்தங்கள் பற்றிய தனிப்பகுதியும், நாராயண மந்திரத்தின் பலனும் இடம்பெறுகின்றன. பிரமனின் தோற்றம் பற்றிய செய்தி இந்நூலில் முதலிடம் பெறுகிறது

## 3. வைணவ புராணம் (விஷ்ணு புராணம்)

இந்நூலுள், உலகத் தோற்றமும உலக உயிர்களின் தோற்றமும முதலிடம் பெறுகினறன ஏழு கண்டங்களாகிய பிரிவுமுறை, சுவர்க்கம், நரகம், கிரக மண்டலங்கள் ஆகியவறறின் இலக்கணங்கள் சிறப்புற அமைகின்றன இதில் இடம் பெறும் அரச நீதிமுறைகள் தனிப்பட்ட பெருமைக்குரியன. நீராலும் நெருப்பாலு முண்டாகும உலகப் பிரளயங்களும் உலகமுடிவுகளும் இதனுள் விவரிக்கப்படுகின்றன

## 4. சைவ புராணம் (வாயு புராணம்)

சைவ புராணத்துள் சிவலிங்க வழிபாடும் சிவபூசையும் சிறப்பிடம் பெறுகின்றன புண்ணியகாலம், புண்ணிய திருத்தலம், புண்ணிய தீர்த்தம் ஆகியவை எடுத்துக் காட்டப்பெறுகின்றன திரிபுரதகனம், தக்கயாகம், கணபதி, கந்தர் ஆகியோர் பிறப்பு போன்றவை இடம்பெறுகின்றன. பிரமன், விஷ்ணு ஆகியோர் பிறப்பு முறையும், உலகப் பொருள்களின் உற்பத்தியும் கூறப்பெறுகின்றன

## 5. பாகவத புராணம் (சுகர் பாகவதம்)

பகவானுடைய சரிதம் கூறுதலின் இது பாகவதம் எனப்பெறுகிறது மேலும் அறிவுந் திருவும், வீரமும் புகழும், ஞானமும் பற்றின்மையு மாகிய அறுவகைக் குணங்களையுடைய நாரணனின் சரிதம் கூறுவது. தேவி பாகவதம் என்னும் மற்றொரு புராணநூல் உண்டு. அது தேவியைப் பற்றிய சரிதம் கூறுவது. அதையே மகா புராணம் எனவும், பாகவத புராணம் உபபுராணம் எனவும் கூறும் கருத்து வேறுபாடு உண்டு.

நான்கு வேதங்களையும் பல புராணங்களையும் இயற்றியும் வேதவியாசருக்கு அமைதி பிறக்கவில்லை. கிருஷ்ணாவதார முக்கியத்துவத்தை எடுத்துக்கூறும் இப்புராணத்தை எழுதித் தம்மகன் சுகருக்கு உபதேசித்த பிறகே அமைதி அடைந்தார். சுகருக்கு உபதேசித்தது ஆதலின் பாகவத புராணம் சுகர்பாகவதம் என்றும் பெயர்பெற்றது. இந்நூல், கிருஷ்ண லீலைகளையும் கோபிகைகளின் பக்தியையும் கூறுகிறது; தேவ அபசாரங்களும் அவற்றை ஒழிகரும் உபதேசங்களும் அடங்கியது. வாகனத்திலோ காலில் பாதுகையுடனோ அசுததனாகவோ கோயிலுக்குச் செல்லக்கூடாது என்பன தொடங்கிப் பல அபசாரச் செயல்களைத் தெளிவுபடுத்துகிறது.

### 6. நாரதீய புராணம்

இந்நூல் திருமால் துதி, துதிக்குரிய விரதங்கள், புண்ணிய காலங்கள் ஆகியவற்றைக் கூறுகிறது இதில் துருவன், பிரகலாதன் போன்றோர் வரலாறுகளும் இடம்பெறுகின்றன. உருக்குமாங்கதன் மகளாகிய மோகினியின் வரலாறும், பலவகைத் தரும நெறிகளும் இடம்பெறுகின்றன.

### 7. மார்க்கண்டேய புராணம்

விஷ்ணு மனிதப்பிறவி எடுதததன் காரணம் என்ன? பாண்டவர் ஐவருக்கும் திரௌபதி ஒருத்தி மனைவியானதன் காரணம் யாது? பலராமர் பிரமகத்தியால் வருந்தியது எதனால்? கிருஷ்ணார்ச்சுனரின் அகால மரணத்திற்குக் காரணம் என்ன? இத்தகு பலவினாககளுக்குக் காரண காரியங்களுடன் விடைகூறும் ஒரு புராண இலக்கியமே மார்க்கண்டேய புராணம எனப்படுகிறது.

### 8. ஆக்கினேய புராணம் (அக்கினி புராணம்)

இராமாயணம், மகாபாரதம், பகவத்கீதை, பாகவத புராணம், ஹரிவம்சம் போன்ற நூலகளின் சாரம் அடஙகியது இப் புராணம். மேலும் அக்கினிகாரியம், யாகமுறைகள், திருமால் தீட்சாவிதி, சிவஞான பூசை, பிரபஞ்ச இலக்கணம், அரசர் இறைமுறை ஆகியவற்றையும் உணர்த்துகிறது பொருளாதார மேன்மை, நோய் நீங்க மருந்துமுறை, முடி சூட்டும் விதி, ஆலய நிர்மாணம, விக்கிரக நிர்மாணம், யாத்திரைவிதி, தண்ணீர்ப் பந்தல், சுமைதாங்கி, குளம்வெட்டுதல் போன்ற இம்மைச் சாதனங்கள் பலவற்றின் நற்கரும முறைகளைத் தெளிவுபடுத்தும் இப்புராணத்தைப் பாரதநாட்டு நாகரிகத்தின் சின்னம் எனச் சிறப்பிப்பர்.

### 9. பவிடிய புராணம் (பவிஷ்யோத்தர புராணம்)

பவிஷ்யம் என்னுஞ்சொல் நிகழவிருப்பது என்னும் பொருளை உணர்த்துவது. பிரதமை முதல் முப்பது (வளர்பிறை 15 + தேய்பிறை 15 திதிகள்) திதிகளிலும் கடைபிடிக்க

வேண்டிய விரதமுறைகளைக் கதைகளின் மூலம் உணர்த்துவதனால் இந்நூல் விரத புராணம் எனவும் கூறப்படுகிறது. கலியுக அரச வம்சங்களை முன்கூட்டியே உணர்த்தியுள்ளது கண் இமைக்கும் துல்லியகாலந் தொடங்கி மநுக்கள் காலம்வரை கூறுவது. பூத இலக்கணம், பிறப்பில் வேற்றுமைகள், உலகநீதி, ஆதித்தனின் வரலாறு போன்றவற்றையும் உணர்த்துகிறது

## 10. பிரம வைவர்த்த புராணம்

இந்நூல், பிரமத்தைப் பற்றி விவரிப்பது ஆதலின் பிரம வைவர்த்தம் என்னும் பெயர் பெறுகிறது பிரமகைவர்த்தம் என்றும் வெளியிட்டுள்ளனர் மச்சபுராணத்தின் ஒரு அத்தியாயம் மட்டும் விரிவாகக் கூறப்பெற்றுள்ள ஒருநூல் பல தேவதைகளை வழிபடும் முறைகளை எடுத்துக்காட்டுவது. அவற்றிற்குரிய மந்திரங்கள், கவசங்கள், தோத்திரங்கள் ஆகியவை அடங்கியது. கிருஷ்ணசரிதமும் இராதா திருமணமும் நூலுள் இடம்பெறுகின்றன.

## 11. இலிங்க புராணம்

ஏகாதச ருத்திரர் எனப்பெறும் பதினொரு உருத்திரரும் சிவனை நிகர்த்தவர் எனச் சிறப்பிக்கும் இப்புராணம், பதினெண் புராண வரிசையில் பதினோராம் இடத்தைப் பெறுகிறது. இலிங்க வடிவம், இலிங்கபூசை, அதற்குரிய மந்திரம், திருநீறு, உருத்திராட்சம் ஆகியவற்றின் உண்மைத்தன்மைகள், இந்நூலுள் விளக்கப்பெறுகின்றன மேலும் இது உயிர்களுக்குரிய அறமும் பொருளுங் கூறி, அவற்றால் பெறபபடும் இன்பமும் வீடும் உணர்த்துகிறது. சிவலிங்கத்தைத்தவிர, துருவன், ஆதித்தர் ஆகியோர் பெருமைகளும், அரச பாரம்பரியங்களும் நூலுள் இடம்பெறுகின்றன. நித்திய கருமங்களும், விரத தியானங்களும், தான இலக்கணமும் ஆகிய செயற்பாடுகளையும் நூல் அறிவிக்கிறது.

## 12. வராக புராணம்

இது திருமால் தமது வராக அவதாரத்தின்போது பூமிதேவிக்குக் கூறியதாக அமையும் புராணம். தமது முகமாகச் சிவனது பெருமை கூறப்பெறுகிறது. திதிகளில் மேற்கொள்ளும் விரதங்கள், அவற்றிற்கான காரணங்கள் தெளிவுபடுத்தப்படுகின்றன இரணியன், இரணியாக்கதன் ஆகியோர் வரலாறுகள் அடங்கிய நூல். சிவமகிமையும் விரத பலன்களும் மிகுந்திருத்தலின் இது சைவபுராணங்களுள் ஒன்றாகவே இடம்பெறுகிறது

## 13. கந்த புராணம் (காந்த புராணம்)

கந்தனின் (குமாரக்கடவுள்) தோற்றம் முதலான வரலாறு கூறுதலின் பெற்றபெயர் இது. வீரபாகு போன்றோர் பிறப்பும் இடம்பெறுகிறது. குகன் பிரமனைச் சிறையிடுதல், விடுவித்தல், சிவன் பார்வதிக்குக் குமரன் பெருமை கூறுதல், தேவசேனை, வள்ளித் திருமண நிகழ்வுகள் போன்ற செய்திகள் நூலுள் மிகுதியாக இடம்பெறுகின்றன. மன்மதன்

எரிக்கப்படுதலும் இரதிபுலமபுதலும் ஆகிய செய்திகளும் கூறப்படுகின்றன உத்தரஸ்காந்த புராணம், தட்சிணஸ்காந்த புராணம் என்னும் இருபெரும்பிரிவில், பல்வேறு செய்திகள் வேறுபட்டு அமைகின்றன.

## 14. வாமன புராணம்

திருமால் வாமனனாகப் பிறவி எடுத்து, மனிதனின் வாழிடமாகிய உலகத்தைப் பரந்து விளங்கச் செய்தார்; மனிதன் தங்கி வாழத் தன் திருவடிகளால் அளந்தார் என்னும் சிறப்புகளை விளக்குவதால் வாமன புராணம் எனப் பெயர் பெற்றது ஆயினும் சிவபெருமானே தான வீடு, வாசல் இல்லாத பரதேசி; ஆடையும் அணியும் இல்லாமல் தோலையும் பாமபையும் ஆடை, யணியாக அணிந்தவன் என்றெல்லாம் தன்னைப் பற்றிப் பாாவதி தேவியிடம கூறுவதாக அமைத்து, உலகநிலையாமை போன்றவற்றை உணர்த்துவது புராணச் சிறப்பு தக்கயாகம், மன்மதன் மலரம்பு எய்தல், அடிமுடி காண திருமாலும் பிரமனும முயறசித்தல் போன்ற செய்திகள் பல அமைவதால் சிவபுராண வகையுள் ஒன்றாகவே கூறுவர்

## 15. கூர்ம புராணம் (கௌர்மம்)

பாறகடல கடைந்ததும, திருமால் கூர்ம வடிவத்தில் மலையைத் தாங்கியதும், அமுதமளிததது மாகிய செய்திகளடங்கியதாதலின் கூர்ம புராணம் எனப்பெற்றது அரச பரம்பரை முதல், தீர்த்தமகிமை ஈறான பல கதைகளும் இடம்பெறுகின்றன இமவானுக்குப் பார்வதி காட்சி கொடுத்தது முதல், சிவபெருமானின் பெருமைகள் ஈறாகப் பல செய்திகளும் கூறப்படுவதால இதுவும் சிவபுராணங்களுள் ஒன்றாயிற்று

## 16. மச்ச புராணம் (மத்ஸ்ய புராணம்)

சோமுகன் வேதங்களைக் கவாந்து கடலில் ஒளிக்க, திருமால் மச்சவடிவில் அவற்றை மீட்டது நூலின செய்தியாதலின் இப்பெயர் பெறுகிறது நரசிங்க அவதாரமும் இதில் இணைகிறது முனனோர் வழிபாட்டுமுறை புரூரவ சரிதம, யயாதி சரிதம் ஆகியவற்றுடன் பார்வதி திருமணம், கந்தர் பிறப்பு போன்றவையும் இடம்பெறுகின்றன இதுவும் சிவபுராணஙகளுள் ஒன்று

## 17. கருட புராணம்

திருமால் கருடனுக்கும், கருடன காசியபருக்கும் உபதேசித்த செய்திகளடங்கிய நூலாதலின் இது கருட புராணம் எனபபட்டது இதன் நடுக்காண்டமான தரும காண்டத்தை, இறந்தவர்கள் வீட்டில பத்து நாடகள்வரை படித்துக் கதை சொல்லுவது வழக்கு இராமாயணம், பாரதம், பாகவதம், நீதிசுலோகம் போன்றவற்றின் சாரங்களைக் கொண்டது

மருத்துவம், சோதிடம், இரத்தினத்தேர்வு முறை, புண்ணிய திருத்தலங்கள், அறுபது ஆண்டுகளின் பெயர்கள், கருடசரிதம், சாமுத்திரிகம் (உடல் உறுப்பு இலக்கணம்) போன்றவற்றையும் எடுத்துக்கூறும இந்நூல் வைணவ புராணங்களுள் ஒன்றாக இடம்பெறுகிறது

## 18. பிருமாண்ட புராணம் (வாயவிய புராணம்)

பிரம்மாவின் சக்திகளைக் கூறுவது, மேலும் பிரம்மாவின் ஒரு அண்டமாக அமைய, அது மேலேழுலகமாகவும், கீழேழுலகமாகவும் விரிந்ததே பிருமாண்டம் எனப்பட்டது அநேக பிருமாண்டஙகளின் நாயகனாகிய இறைவனின் திறங்கூறுவதால் இப்பெயர்பெறறது. நான்கு வருணத்தாருக்குரிய தேவதைகளாக முறையே அந்தணருக்குப் பிரம்மா, சத்திரியருக்கு இந்திரன், வைசியருக்கு மருத்துவன், வேளாளருக்குக் கந்தருவர் என வகுத்துரைப்பது. வரவிருக்கும் கற்பநிகழ்ச்சிகளும் கால அளவைகளும் முன்கூட்டியே அறிவிக்கும் நூலாக அமைகிறது.

## புராணப் பகுப்பு முறை

இப்பதினெண் புராணங்களுள் இலிஙகம், காந்தம், கூர்மம், சைவம், பவிடியம், பிருமாண்டம், மச்சம், மார்க்கண்டேயம், வராகம், வாமனம் ஆகிய பத்தும சிவபுராணங்கள் என்பர். காருடம், நாரதீயம், பாகவதம், வைணவம் ஆகிய நான்கும் வைணவ புராணங்களாம். பதுமமும் பிரமமும் பிரமபுராணங்கள் ஆக்கினேயம் என்பது அக்கினிபுராணம். பிரமவைவர்த்தம் சூரியபுராணமாகும் இவை சான்றோர் கூறிய பகுப்புமுறை

இவற்றுள கூர்மபுராணம் என்பது திருமாலின் கூாமாவதாரச் சிறப்பினை எடுத்துக் கூறும் வரலாற்றிலககியம் என்னும் பொருளைத் தருவது எனவே, அது வைணவ புராணமாகாதா? சைவபுராணம் பத்தினுள் இடம்பெறுகிறதே என்னும் வினா எழுகிறது ஆனால், திருமால் தம் கூர்மாவதாரத்தில் சிவபெருமானுடைய இறைப்பண்பை (பரத்துவம்)த் தேவர்ககிறைவனாகிய இந்திரனுக்கும், நாரதருக்கும், இந்திரத்துயமன் என்னும் அரசனுக்கும் எடுத்துக் கூறிய செய்திகளடங்கிய நூலாதலின் இது சைவபுராணத்துள் இடம்பெறறது இதே போலத் திருமாலவதாரங்களின் பெயரால் இயற்றப்பட்ட மச்ச புராணம், மார்க்கண்டேய புராணம், வராக புராணம், வாமன புராணம் ஆகியவற்றையும் அவை கூறும் பொருட்சிறப்பு நோக்கிச் சைவ புராணவகையுள சார்ததி அமைததனர் சான்றோர்.

## சமயம்

உலக அமைப்பு என்பது தனிசசிறப்பு வாய்ந்த ஒன்று. அதாவது உலகப்பொருள்கள் பலவகை. உயிருள்ளவை, உயிரற்றவை; அசையும்பொருள், அசையாப்பொருள்; வளரும் பொருள், வளராப்பொருள இப்படிப் பலவகை. இவை அனைததிலும் ஒரு பொருளை

முழுவதுமாக ஒத்திருக்கின்ற மற்றொரு பொருள் உலகத்தில் இல்லை. இல்லவே இல்லை என்பதே அத்தனிச் சிறப்பு

இதே நிலை மக்கட் படைப்பிலும் நிலைதது விட்டது. இந்த நிலை வடிவத்தால் மட்டும் இலலை வடிவத்தால் எதததனை வகை வேறுபாடுகளோ அத்தனைவகை வேறுபாடுகள உள்ளததாலும் அமைந்துவிடுகின்றன உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடுகள்; மேலோர் கீழோர் என்ற பிரிவினைகள; நல்லோர் தீயோர் என்ற பாகுபாடுகள்; இப்படிப் பலபபல மாறுபடட தனமைகள உலகில் நிலைத்துவிட்டன மேலோர் என்ற ஒரு தன்மை பெற்றாரை நோக்க அவர்களுள்ளும் பலப்பல பாகுபாடுகள், கருத்து வேறுபாடுகள் நிலைபெற்று விட்டன இதேபோலப் பலவகைப் பண்புடையவருள்ளும பல பாகுபாடுகள். இத்தகுபாகுபாடுகள உருவாக்கியவையே சமயங்கள். உடல் கூற்றுக்கு ஏற்ப, ஏன்? நாவின் சுவைக்கு ஏறப உணவுகள மாறிமாறி அமைவது போல, உள்ளத்தின் இயல்புக்கு ஏற்பச் சமயங்களும் பல திறப்படுகின்றன உயிர்களுக்கு அப்பால் உயர்பொருள், பரம்பொருள் ஒனறு இருக்கிறது என்பதை நம்புவனவே அச்சமயங்கள் அப்பரம்பொருளில் தான் வேறுபாடு. உட்பிரிவுகள் பல இருந்தாலும, பரம்பொருள் என்ற ஒன்றை நம்புகின்ற சமயஙகள **வைதிகசமயங்கள்** எனப்படுகின்றன நம்நாட்டு வைதிக சமயங்களை ஆறு பெரும் பிரிவாகக கண்டுளளனர் சைவம், வைணவம், சாக்தம், கணபதியம், கௌமாரம், சௌரம் என்பன அவை

பரம்பொருள் ஒன்றை நம்புகின்ற இச்சமயங்கள், இப்பிரபஞ்சமே மாயை உடையது எனற கோட்பாட்டை உடையன மாயை நிறைநதிருப்பதே இகம; இதற்கு அப்பாற்பட்ட பெருநிலையே பரம என்று நம்புகின்றன ஒருகணத்துக்குமுன் இருந்த ஒன்று இப்போது அதே போல இலலாத நிலையே மாயை எனப்படுகிறது. அது ஓயாது மாறியமையுந் தன்மையுடையது

உலகம் - மாயை இதில் உயிரகள பிறப்பது மாயை; வளர்வது மாயை; வாழ்வது, தேய்வது, மாய்வது . எல்லாமே மாயை உலகப் பநதபாசமும் மகிழ்ச்சியும் மாயை. காலம என்பதும அததன்மையதே ஆக, கால, தேச வர்த்தமானங்கள் எனப்படும் மூவகை விதைதகளாக விளஙகிவருவதே மாயை என்னும கோட்பாடுகளை அழுத்தந் திருத்தமாக நம்புகினறன இநத அறுவகைச சமயங்களாகிய வைதீக சமயங்கள்

ஒரு சமயத்தைத தழுவிவாழ்ந்து உய்வடையத தேவையானது பக்தி என்ற ஒன்றே பக்தி என்பது ஒன்றுதான. உள்ளத்தின் பணபால் அது பல திறத்தில் அமைந்துவிடுகிறது 1 இறைவனின குண மகிமைகளில கொள்ளும் பக்தி 2. அப்பரம்பொருளைக் காணும் அழகு வடிவத்தில் பக்தி 3 அவனுக்குச் செய்யும் வழிபாட்டு முறைகளில் பக்தி 4. அவனை உள்ளத்தில இருதது்வதில் பகதி 5 அவனுக்குச் செய்யும தொண்டில் பக்தி 6 அவனைத் தன் தோழனாக, செல்வனாக, தலைவனாக நேசிப்பதில் பக்தி 7. அவனைப்

பிரிதல் முதலான வருத்தங்குறித்த பக்தி என்பன போன்று அன்பர்களின் உள்ளப் பண்புக்கு ஏற்பப் பக்தி என்பது பலதிறப்பட்டு விடுகிறது

பரம்பொருளை நம்புகின்ற வைதிக சமயங்கள் ஆறினுள ஒன்றே வைணவ சமயம் எனப்படுகிறது. அது பக்திக் கோட்பாடுகள் அனைத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்கிவருகிறது; மக்களிடையே வெகுவாகப் பரவி நிற்கிறது. பரந்துபட்ட இந்த வைணவ சமயக் கொள்கைகளை உள்ளடக்கி உருவாக்கப்பட்டுள்ள நூலே **அரங்கன் சரிதம்** என்னும் இந்தச் சுவடிப் பதிப்புநூல்.

**வைணவ சமயம்**

மறைசார்ந்த சமயங்களாகிய வைதிக சமயஙகள ஆறனுள் ஒன்று வைணவ சமயம். வைணவம் என்பது வைணவக் கடவுளான விஷ்ணு தொடர்புடையது. எனவே இது வைஷ்ணவம் எனப்பட்டது. விஷ்ணு என்னும் சொல் எங்கும் பரந்துள்ள பண்பைச் சுட்டுவது. பரந்து விளங்கும் தன்மை என்பது ஞானத்தாலும் சொரூபத்தாலும் இணைந்து அமைவது. எனவே வைணவ இறைவனான விஷ்ணு எங்கும் பரவியுள்ளவன்: உயிருள்ள பொருள், உயிரில்லாப்பொருள் ஆகிய எல்லாப் பொருளகளிலும் வியாபித்து இருப்பவன்: எல்லாப் பொருள்களுமாய் விளங்குபவன என்னும சிறப்புகளுககுரியவனாகிறான்.

அனைததுப் பொருள்களிலுமிருப்பவன், அனைத்துப் பொருள்களுமாய் இருப்பவன் என்றால், அந்த அனைத்துபபொருள்களும் நிறைந்திருக்கும் அனைத்து உலகமுமே வைணவ சமயத்தைச் சார்ந்தவை ஆகாதா? ஆவதில்லை. ஏன்?

ஒரு பொருளை முழுவதுமாக ஒத்திருக்கின்ற மற்றொரு பொருள் எங்கும் இல்லை என்பதே உலகத்து இயற்கை. இது முன்பே எடுத்துக்காட்டப்பெற்றது அந்த அடிப்படையில் பலவேறு உள்ளத்தைப் பெற்ற மக்கள நிறைந்ததே இந்த நிலவுலகு அத்தகு உள்ளங்களுள் பிறரது துன்பங்கண்டவிடத்து ஐயோ என்று இரங்குகின்ற உள்ளம் எதுவோ அது மட்டுமே வைணவக் கொள்கை நிறைந்த உள்ளமாக ஏற்கப்பெறுகிறது. இதேபோலப் பிறர்தம் ஆக்கத்தைக் கண்டபோது பொறாமை ஏற்படும் உள்ளம் வைணவ உணர்வே இல்லாத உள்ளமாகவும் ஒதுக்கப்பெறுகிறது இவற்றைப் போலவே பிறர் தம்மை மிகவும் கடிந்து பேசுகிற போதும் மகிழ்ச்சியடைகிற உள்ளம்; பிறர்பொருளில் ஆசை கொள்ளாத உள்ளம: பேறு ஒன்றையே நோக்கமாகக் கொண்ட உள்ளம் போன்ற நல்ல உளளஙகளே வைணவக் கோட்பாடு தாங்கிய உள்ளங்களாகப் பாராட்டப்பெறுகின்றன. இத்தகு உள்ளங்களை அனைத்துலக மக்களும் பெறறிருக்கிறார்கள் என்ற நிலை - என்ற உண்மையான நிலை- ஏற்படும்வரை அனைத்து உலகமும் வைணவ சமயத்தைச் சார்ந்தவை என்று கூறும் வாய்ப்பு ஏற்பட இயலாது

## வைணவ சமயக்கொள்கை

வைணவக் கொள்கைகளுள் முதன்மைபெற்றது வழிபாட்டு முறையாகும் அதாவது இறைவனிடம் உண்மையான பக்தி செலுத்தி நம்பிக்கை வைப்பதே அந்த வழிபாட்டின் அடிப்படையாகும பக்தி என்பது மக்களால் மட்டும் கொள்ளக்கூடிய ஒரு பண்பு. அது பகதியால் இறைவனைப் புகழ்ந்து ஏத்துவது மட்டுமன்றி உள்ளன்போடு தொண்டு செய்யும் பண்பையும் குறிக்கும். இறையன்பு என்பது குடும்ப உறவுகளை அடிப்படையாகக் கொண்டு எழுவது எனவேதான் இறைவனைத் தந்தையாக, தாயாக, அண்ணனாக வைத்துப் பாடும் முறை பக்திப் பாடல்களில் இடம்பெறுகின்றன இந்தப் பக்திக் கொள்கைகளின் மாற்றமே சமயக் கொள்கையாக, சமயத்தைப் பின்பற்றிய ஒரு வாழ்க்கை நெறியாக மாறுகிறது. சமுதாயச் சட்டதிட்டங்களை, ஒழுங்குமுறைகளை மீறுகிற துணிவும் உணர்வும், பக்தியுடையார் உள்ளத்தில் தோன்றுவதில்லை மாறாக இறைவனிடம் பணிவுடன் சரணடைந்து, தம் சக்திக்கேற்ப, இலை, பூ, பழம், நீர் போன்றவற்றுள் எதையாவது ஒன்றை - தம்மால் இயன்றதை - இறைவனுககுப படைத்து வழிபடுவதில் ஈடுபடடுவிடுகிறது இதுவே வைணவ சமயச் சமுதாயக் கடமையை நிறைவேற்றிய நிறைவை யளித்துவிடுகிறது

உலகப பற்றிலிருந்து வேறுபட்டு நிற்பது இறைபக்தி உலகப்பற்று என்பது வியாபாரத் தன்மையுடையது, பிரதிபலனை எதிாபார்ப்பது உலகப்பற்றில் போட்டி, பொறாமைகளுக்கு இடம் ஏற்படடு விடுகிறது பிறர் பங்குகொண்டு விடுவார்களோ என்ற ஐய உணர்வு; தன் முயற்சியிலேயே நம்பிக்கையினமை, தோல்வி, நட்டம் போன்ற உள்ளுணர்வுகளுக்கு இடமளிதது விடுகிறது ஆனால் இறைபக்தியோ தன்னிடம் இருப்பதை எல்லாம் கொடுப்பதில் நிறைவு பெறுகிறது பிரதி உபகாரத்தை எதிர்பார்க்காதது; அஞசாமையுடையது; அனைவரையும இணைததுக் கொளவதில் மகிழ்ச்சியடைகிறது.

## வைணவ இறைக்கொள்கை

உண்மை, அறிவு, மகிழ்சசி இவற்றின வடிவமே இறைவன் என்பது வைணவ இறைக்கொள்கை இறைவன் இடத்தாலும் காலத்தாலும் அளவிடப்படாதவன்; எங்கும் நிறைநதிருப்பவன்; ஆக்கலும் காத்தலும் அருளலும அழித்தலுமாகிய அனைத்துத் திறனும் ஒருஙகே பெறறவன என்பன அக்கொள்கையின் அடிப்படை

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீககலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாஙகளே"[1]

[1] கமபராமாயணம, காபபுபபாடல்

என்பது வைணவக் கொள்கையடிப்படையில் பிறந்த காப்புப் பாடல். அந்த இறைவனுடைய திருவுருவம் ஐந்து நிலைகளையுடையது என்பது வைணவக்கொள்கை. அவை:

1 **முதற்பொருள் (பரத்துவநிலை)** - அழியாநிலையுடைய வைகுந்தத்தின் முதற்பொருளாய், அமரர்க்கருள்பவனாய் வீற்றிருக்கும் நிலை.

2. **வடிவ நிலை (வியூகம்)** - இந்நிலவுலகில் படைத்தலுங் காத்தலும், அளித்தலு மழித்தலுமாகிய பண்புகளை மேற்கொண்டு உலக உயிர்களின் வடிவமும், அவ்வடிவங்களுக்கேற்ற பெயருந் தாங்கியருளும் நிலை

3. **வாழ்வுநிலை (விபவநிலை)** - தம்மையடைந்தாரைக் காத்தலும், அவர்தம் பகைவரை அழித்தலும், உலக தருமங்களை நிலைநிறுத்தலுமாகிய பெருவிருப்பங் காரணமாக எடுக்கும் அவதார நிலை.

4. **ஆன்மாவோடு ஒன்றிய நிலை (அந்தரியாமித்துவநிலை)** - உலக உயிர்களோடு இரண்டறக் கலந்து, எல்லாச் செயல்களிலும் அவ்வுயிர்களை ஏவுபவனாகி, பிராட்டியோடு அவ்வுயிர்களின் இதயக்கமலத்துள் எழுந்தருளியிருக்கும் நிலை.

5 **வணக்கத்திற்குரிய வடிவநிலை (அர்ச்சாவதார நிலை)** - அன்பர்கள் விரும்பும் வடிவம் எதுவோ, விரும்பும் இடம் எதுவோ, விரும்புங் காலம் எதுவோ அந்த வடிவமே வடிவமாக, அந்த இடமே இடமாக, அந்தக் காலமே காலமாகக் கொண்டு அருளபுரியும் நிலை.

இந்தத் திருவுருவக்கொள்கை ஐந்தனுள் இரண்டாம் நிலையாகிய வடிவநிலை (வியூகநிலை)யில் பன்னிரண்டு வடிவங்கள் சிறப்பித்துப் பேசப்பெறுகின்றன அநதப் பன்னிரண்டு வடிவங்களும் முறையே கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்னும் பெயர்களைப் பெறுகின்றன இப்பெயர்கள் பன்னிரண்டு மாதங்களுக்குரிய தலைவர்களாகக் கருதப்பெறுகின்றன

"**கேச** வன்தமர் கீழ்மேல் எமர்ஏழ் எழுபிறப்பும்
மாசதிர் இதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா"

என்பது திருவாய்மொழிக்கூற்று (2, 7-1) எம்மைச் சேர்ந்தவா ஏழேழு பிறவியிலும் அந்தக் கேசவனுக்குச் சுற்றத்தாராயினர் எனக் கேசவனின் சிறப்பைக் கூறுகிறது. இதே போல,

"**நார** ணன்முழு ஏழுலகுக்கும் நாதன் வேதமயன்" (ஷ 2 7-2)
"**மாதவன்** என்றதே கொண்டெனை இனியிப் பாற்பட்டது" (ஷ 2 7-3)
"**கோவிந்தன்** குடக்கூத்தன் கோவலன் என்றென் றேகுனித்து" (ஷ 2 7-4)

எனமுறையே, **நாரணன்** ஏழுலகுக்குந் தலைவன்; **மாதவன்** அமரர் தொழ நின்றவன்; **கோவிந்தன்** தீமை அணுகாதபடி காத்தவன்; **விஷ்ணு** ஏழேழ் பிறப்பும் தன்னையடையச் செய்தவன்; **மதுசூதனன்** சங்கு சக்கரங்களைவிட்டு அருள்புரிபவன்; **திரிவிக்கிரமன்** எப்பிறவியிலும் அருள் செய்பவன்; **வாமனன்** தன் பாதங்களையே தொழும் மனத்தைத் தந்தவன்; **சிரீதரன்** என் தீமனங்கெடுத்தவன்; **இருடீகேசன்** என் உள்ளத்திலேயே தங்கியவன்; **பத்மநாபன்** என் உயர்வுக்குக் காரணமானவன்; **தாமோதரன்** எனக்கே தன்னை உரிமையாக்கியவன் என்றெல்லாம் இறைவனின் பன்னிரு திருநாமச் சிறப்புகளை உணர்த்துவார் நம்மாழ்வார்.

இறைவனின் வடிவ நிலைகளுக்குரிய பெயர்களைத் தமக்கே உரிமையாக்கிக் கொண்டு பேசும் நம்மாழ்வாரின் உள்ள வெளியீடுகள் இவை. இவற்றுள,

1. அ. நீண்ட முடியுடைத்தலைவன் என்னும் பொருளில் அமைந்த பெயர் **கேசவன்** என்பது ஆ. நீரில் சயனித்திருப்பவன் என்னும் பொருளால் வந்த பெயர் **நாராயணன்.** இ. யதுகுலததலைவன் என்னும் பொருளில் **மாதவன்** எனப்பட்டான் இம்மூவகை வடிவங்களும் **வாசுதேவன்** என்னும் ஒரு வடிவின் பிரிவுகளாகத் தோற்றுவிக்கப்பெற்றவை.

2. அ. ஆநிரை காப்பவன் என்னும் பொருளையுடையது **கோவிந்தன்** என்னும் பெயர் ஆ. நிர்க்குணவடிவினன் என்ற பொருளில் **விஷ்ணு** என்னும் பெயர் அமைந்தது. இ. மது என்பானை அழித்தவன் ஆதலின் **மதுசூதனன்** எனப்பட்டான். இம்மூவகைக் காரணங்களை உட்கொண்ட மூன்று வடிவங்களும், **சங்கர்ஷணன்** என்னும் பலராம வடிவத்தின் மூன்று பிரிவுகளாக உருவாககப்பெற்றவை.

3. **பிரத்தியும்நன்** என்னும் வடிவம், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன் என்னும் மூன்று வடிவங்களாகக் கொணடாடப்பெறுகிறது மிகுபலங் கொண்ட திருவடிகளால் நடந்தவன் என்பதால் **திரிவிக்கிரமன்** எனவும், குறளுருக் கொண்டவன் என்னுங் காரணத்தால் **வாமனன்** எனவும், இலக்குமியைத் தாங்கியவன் என்னும் பொருளில் **சிரீதரன்** எனவும் காரணப் பெயர்களாக இவை அமைந்தன

4. **அநிருத்தன்** என்னும் நான்காவது வடிவமே இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்னும் மூன்று வடிவங்களாகச் சிறப்பிக்கப்பெறுகிறது இவை முறையே முனிவர் தலைவன், நாபிக்கமலமாகிய கொப்பூழினையுடையவன், தாமே படைத்துக்கொள்ளும் பெருமையுடையவன் என்னும காரணங்களால் பெயரிடப்பெற்ற வடிவங்களாகும்.

வியூகநிலை எனப்படும் வடிவநிலையில் இவ்வுலக உயிர்களுக்கு வேண்டியவற்றை எல்லாந்தந்து அருள்புரிவதற்காக மேற்கொள்ளப்பெற்ற வாசுதேவன், **சங்கர்ஷணன்**, பிரத்தியும்நன், அநிருத்தன் என்னும நான்கு வடிவங்களே வைணவ அன்பர்களின் ஈடுபாட்டு

மிகுதியால் ஒவ்வொரு வடிவமும் மும்மூன்றாக விரிவாக்கப்பட்டுப் பன்னிரண்டு வடிவங்களாக வணங்கப்பெற்று வருகின்றன.

வைணவ சமய இறைவியாக இலக்குமியே ஏற்றுக்கொள்ளப்பெறுகிறாள். செல்வச் செழிப்பிற்கும் வளமைக்குமுரிய தெய்வமாகக் கொண்டாடப்பெறுகிறாள் அதனால் வைணவ சமயத்தவரேயன்றி, பிற எல்லாச் சமய இன மக்களும் இலக்குமி வழிபாட்டைச் சிறப்பாக ஏற்றுக்கொண்டு வழிபட்டு வருகின்றனர்

## வைணவத் தொண்டர்கள்

வைணவ சமயத் தொண்டர்களான சான்றோர்கள் ஆழ்வார்கள், ஆசாரியர்கள் என இருதிறத்தில் போற்றப்பெறுகின்றனர் அவர்களுள் அவதாரத் தலைவர்களாகவும், ஞான பரிபூரணர்களாகவும் இந்நிலவுலகத்திலே பிறவியெடுத்து, வைணவசமய முதல்வர்களாக விளங்கியவர்கள் ஆழ்வார்கள் எனப்பெற்றனர். இறைபபண்பாகிய பகவத்குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுதலும், அவற்றில் முழுமைபெறத்துணிதலும், அவற்றின் வழி ஒழுகுதலுமாகிய பண்புகளை இயல்பாகவே பெற்றவர் ஆதலின் இவர்கள் இப்பெயர் பெறுகின்றனர். அறிவும் ஆற்றலும், திருவும்புகழும், அவாஇன்மையும் ஆளுமையுமாகிய அறுவகைப் பண்புகளே ஆழ்வார்கள் கொண்டுள்ள பகவத்குணங்கள் எனப்பெறும் இறைப்பண்புகளாகும்.

ஆழ்வார்களின் அருளிச்செயலைப் பின்பற்றிப் பகவத்குணங்களில் மூழ்கிய திருமாலடிமைகளிற் சிறந்த இல்லறத்தாரை ஆசாரியர் என்றும அடியார் என்றும் வழங்குவர். திருமால் வழிபாட்டில் மூழ்கிய சான்றோரைப் பாகவதர் எனவும் வழங்குவர்.

பன்னிரு ஆழ்வார்களின் படைப்பாகிய '**நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில்**' ஆழ்வார் என்ற சொல் ஆளப்பெறுவதில்லை. சோழர் சாசனங்கள் பலவற்றில்,

'**ஆழ்வார்** திருவரங்கத் தேவர்க்கு யாண்டு'

'திருவத்தியூ ராழ்வாரைப் பாடியருளிய ஸ்ரீ **பூதத்தாழ்வாரும்**'[1]

என ஆழ்வார் என்னும் சொல் ஆளப்பெறுகிறது.

'**ஆழ்வார்** பராந்தகன் குந்தவைப் பிராட்டியார்' (தெ.இ.கோ.சா. II)

'குலோத்துங்க சோழன் மகளார் அம்மங்கை **யாழ்வார்**' (ஷ. IV)

---

1 தென்னிய கோயிற்சாசனஙகள் -III

என்பனவும் சாசனங்களில் இடம் பெறுபவை இவை தமிழ் மன்னர் பலரும் வைணவசமயப் பற்றுடையவராகி, திருமால் தொண்டில் சிறந்திருந்தனர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

## மக்களிடையே வைணவம்

பழம்பெரும் புராண இலக்கியங்களாகிய இராமாயணமும் மகாபாரதமும் வைணவ புராணங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் இருப்பிடமாக விளங்குவன இவற்றுள்ளும் இராமாயணம் அரசகுமாரர்களின் செயற்பாடுகளை விவரித்துக் கூறும் ஒரு நூலாகவே உருவாக்கப்பட்டது அந்த அரசகுமாரர்களுள் ஒருவனாகிய இராமன் விஷ்ணுவின் அவதாரமாக உருவாக்கப்பெற்ற நிலை பிற்காலப் படைப்புகளில் மட்டுமே இடம்பெற்றுளளது

மற்றொரு நூலாகிய மகாபாரதம் முழுக்க முழுக்க வைணவ வரலாற்றின் முதலிடத்தைப் பெறுகிறது வைணவக் கடவுளர்களான வாசுதேவ-கிருஷ்ணன், நாராயணன், விஷ்ணு ஆகியோரைச் சிறப்புற எடுத்துக்காட்டி அவர்கள்தம் தனித்திறன்களை வைணவ உலகுக்கு உணர்த்தும் நூல்களுள மகாபாரதமே மிகப்பழமையானது என்பர்[1].

24000 செய்யுட்களையுடைய '**ஆதி-பாரதம்**' என்பதே இன்று காணப்பெறும் மகாபாரத நூல்களுக்கு மூலநூல் என்று குறிப்பிடுகிறது ஆஸ்வலாயன கிருஹ்ய சூத்திரம் அந்த ஆதி-பாரதமே, கௌரவா், பாணடவர் எனனும் பாரதப் பழங்குடிப் பிரிவினா்களுக்கிடையே ஏற்பட்ட பெரும் போராட்டத்தைச் சித்திரிக்கும் காவியமாக உருவாக்கப்பெறறது. இந்த மகாபாரதகாவிய உருவாக்கம வைணவ சமயததை, வைணவக் கோட்பாடுகளை இந்தியநாட்டில் நிலைபெறச் செய்துள்ளது.

தொடககை காலத்தில் இருடியர் பலருங கூடி,

"முருகுலா மலரி னானகொன்
முளரியங் கண்ணி னான்கொல்
உருகெழு மழுவ லான்கொல்
உயாநல முடைய ரென்னா .
பிருகுமா முனிவன றன்னைப்
பெட்பொடு வினாதல் செய்தார் "[2]

---

1 வைணவததின் தோறறமும வளாசசியும, பக 14
2 பாகவதம, பா 4232

இவ்வாறு, மலரினான் (பிரமன்), கண்ணினான் (திருமால்), மழுவலான் (சிவன்) ஆகிய மூவரில் உயர்நலமுடையார் யார் என வினவிய முனிவர்களுக்காக உண்மையறியும் பணியை மேற்கொண்டார் **பிருகுமுனிவர்**. பலவகைச் சோதனைகளை மேற்கொண்டார் இறுதியாக முனிவர்களிடம் வந்து,

"ஒண்டிற லாழி யானே உயர்நல முடையர்" [3]

என்று தம் முடிவைக் கூறினார். மேலும்,

**பிருகு சம்ஹிதை** (பிருகத்சம்ஹிதை) எனப்பெறும் **மனுஸ்மிருதி** என்னும் நூல் பிருகுகளின் படைப்பு என்பர் பிருகுகள் வைணவ சமயத்தில் தளரா ஈடுபாடுடையவர்களாக மாறினர்; தங்கள் சமுதாய அமைப்புக்குப் புத்துயி ரூட்டக் கருதினர்; அதற்காகப் பல சீர்த்திருத்தங்களை மேற்கொள்ளும் செயலில் ஈடுபட்டனர்; அன்றைய நிலையில் எளிய மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த ஆதி-பாரதத்தைத் தேர்ந்தெடுத்தனர்; நூறாயிரம் பாடல்களைக் கொண்ட ஒரு பெருங்காவியமாக, மகாபாரதமாக, தர்மசாத்திரமாக, சமயநூலாக மாற்றியமைத்தனர்.

கி.மு. 200 முதல் கி.பி. 200 வரையிலான காலப்பகுதி இந்தியாவில் சமூகக் கிளர்ச்சிகள் பல தோன்றிய பகுதியாகும். அயல் நாட்டினர் பலர் கூட்டங்கூடடமாக வந்து இந்தியாவில் புகுந்தகாலம் அது. நாட்டில் புதிய கலைகள் பல புகுத்தபபட்டன; கைவினைத் தொழில்கள்பல உருவாயின என்றாலும், இந்திய நாட்டு நால் வருணமுறை வலிமை இழக்கத் தொடங்கியது. இந்தக் குறைபாடுகளை நீக்கும் வழிமுறையாகத் தாஙகள் மாற்றியமைத்து உருவாக்கியிருந்த மகாபாரதத்தை மக்களிடையில் பரப்பத் தொடங்கினர் வழிபாட்டு முறைகளை நன்கு பின்பற்றச் செய்வதன் மூலம் தங்கள சமூக விதிமுறைகளைக் கற்பிக்கத் தொடங்கினர் அவர்கள் மக்களிடையே பரப்பிய விதிமுறைகளுள் வாசுதேவ - கிருஷ்ண வழிபாட்டு முறை மிகச சக்திவாய்ந்த ஒன்றாக இடம்பெற்றது. இக்கடவுள் வழிபாட்டைத் தங்கள் இன மயமாக்க, இவர்களின் கடவுட் கொள்கையாகிய நாராயண விஷ்ணுவின் அவதாரமே வாசுதேவ - கிருஷ்ண வடிவம் என்பதை எடுத்துக்காட்டினர். இவற்றிற்கெல்லாம் உறுதுணையாக இருந்தது ஆதி - பாரதத்தின் திருத்த வடிவமாகிய மகாபாரதமாகும். இந்த மகாபாரதமாகிய பெருங்காவியத்தின் தோற்ற வரலாறு வைணவ சமய ஆய்வுக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளது என்பர்.[4]

**வாசுதேவ-கிருஷ்ணனும், நாராயண - விஷ்ணுவும்** ஒருவரே என்ற நிலை மகாபாரதத்தில் உருவாக்கப்பெறுகிறது மகாபாரதம் எழுதப்பெற்றுவந்த காலத்திலேயே

---

3. ஷ பா 4241
4. வைணவத்தின் தோற்றமும வளர்ச்சியும், பக் 16.

வாசுதேவ-கிருஷ்ணர் கடவுளாக ஏற்றுக்கொள்ளப்பெற்றநிலை மக்களிடை வேரூன்றிவிட்டது. இவ்வாறு வைணவக் கடவுட்கொள்கையின் முன்னோடியாக முதன் முதலில் தோன்றியகாலம் கி.மு. 2 ஆம் நூற்றாண்டாகலாம்.[5]

இந்த வைணவக் கடவுட் கொள்கை ஆக்கம் பெற்றதற்கு உயிர் நாடியாக உருவாக்கம் பெற்றது **பகவத்கீதை.** புதியதாக உருவாக்கப்பெற்ற மகாபாரதத்தின் ஒரு சுருக்க அமைப்பே பகவத்கீதை. அதாவது மகாபாரதத்தில் இடம் பெற்ற **உபதேசக்கருத்துகளின்** ஒரு தொகுப்பாக உருவானதே பகவத்கீதை. மிகப்பரந்த காவியமாகிய மகாபாரதம் ஆதிபருவம், சபாபருவம் என்பன தொடங்கி, மகாப்பிரஸ்தானபருவம், சுவர்க்காரோஹண பருவம் என்பனவாகிய இறுதிப் பருவங்கள் முடிய பதினெட்டுப் பருவங்களை உடையதாக உருவாக்கப்பெற்றது. அதன் உபதேசக் கருத்துகளின் சுருங்கிய தொகுப்பாகிய பாகவதமும் அர்ச்சுனன் துயரத்தை முதல் அத்தியாயமாகக் கொண்டு சாங்கிய யோகம், கர்மயோகம், ஞானயோகம் . . . சந்நியாசயோகம் எனப் பதினெட்டு அத்தியாயங்களில் இயற்றப்பெற்றுள்ளது. ஆதி - பாரதத்தை மாற்றி அமைத்தவர்கள் பதினெட்டு என்னும் எண்ணில் தனிப்பெருமை பெற்றிருந்தனர் போலும்!

"பத்தும் எட்டும் நாளையில்
பாரதம் முடித்தவள்"

என்று பாஞ்சாலியைச சிறப்பிக்கும் நாட்டுப்புறப் பாடல்களிலும் இடம்பெறும் அளவில் பதினெட்டு நாட்கள் பாரதப்போர் நிகழ்ந்தது என்பதைப் பதினெட்டாம்போர்ச் சருக்கம் என்னும் ஒரு சருக்கத்தையும் அமைத்துக் காட்டினர் இதேபோலப் **பதினெண் புராணம்** என வரையறை செய்தது, பதினெட்டு உபபுராணங்களைச் சுட்டிக் காட்டியது போல்வனவும் பொருத்திக் காணக் கூடியவையாகின்றன.

நாராயண-விஷ்ணு, வாசுதேவ-கிருஷ்ணன் என்னும் பெயர்களால் முழுமுதற் கடவுளர்களை வழிபடுவது வைணவ சமயம். அது அவ்விறைவர்களின் பல்வேறு அவதாரங்களையும் வழிபடத் தொடங்கியது. இவ்வாறு வழிபட்டோர் **ஏகாநம்சர், சாத்துவதர், பஞ்சராத்திரர், பாகவதர், வைணவர்** என்னும் பெயர்களால் குறிப்பிடப்பட்டனர் இவர்களுள்,

**நந்தகோபர் - யசோதரை** தம்பதியரின் மகள் **ஏகாநம்சா** என்பவள். இவள் விஷ்ணுவின் மாயாசக்தியால் பிறந்தவள். கம்சன் அவளைக் கொல்ல முயன்றபோது தெய்வீக வடிவாய் வானில் எழுந்து, கிருஷ்ணனின் பிறப்பை அறிவித்துச் சென்றவள். கிருஷ்ணனைக் காப்பாற்றியதற்காக அவளை வழிபடத் தொடங்கினர். அந்தப் பகுதியினர் **ஏகாநம்சர்** எனப்பெற்றனர்.

---

5. ஷ நூல், பக 17

யாதவர்களில் ஒரு பிரிவினர் **சாத்துவதர்** எனப்பெற்றனர். இவர்கள் யாதவர்களின் வீரத்தலைவனாக விளங்கிய வாசுதேவ கிருஷ்ணனைத் தெய்வமாக ஏற்று வழிபடத் தொடங்கினர்; மற்றவர்களையும் வழிபடச் செய்தனர்

நாராயணன் செய்ததாகக் கூறப்படுவதும், நாராயணனோடு தொடர்புடையதுமாகிய புருஷமேதயாக வழிபாட்டை மேற்கொண்டவர் **பஞ்சராத்திரர்** (பாஞ்சராத்திரர்) எனப்பெற்றனர். புருஷமேதயாகம் இரவின் முதல் யாமத்தில் தொடங்கப்பெறுவது; ஐந்து நாட்கள் தொடர்ந்து நடத்தப்பெறுவது. ஐந்து இராத்திரி என்னும் உட்பொருளில் **பஞ்சராத்திரா** எனப்பெற்றது.

நாராயணனை வழிபட்டவர்களைப்போல வாசுதேவனை வழிபட்டவர் **பாகவதர்** எனப் பெற்றனர். சமுதாய அடிப்படையில் பஞ்சராத்திரரும் பாகவதரும் என இருபிரிவினராயினர்.

எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர் என்னும் பொருளைக் குறிப்பது '**விஷ்ணு**' என்னுஞ்சொல். எல்லா உயிர்களிலும் எல்லாப் பொருள்களிலும் நீக்கமற உறையும் இறையே **விஷ்ணு** எனப்பெற்றார் அவரை வழிபடுவோர் பரம **வைணவர்** எனப்பெற்றனர்.

இந்த ஐவகைப் பிரிவினர் பற்றிய கருத்துகளுள் பெரும்பாலாருக்கும் ஏற்புடைய கருத்துகள் எடுத்துக்காட்டப்பெற்றன. வெவ்வேறு வகையில் பிரிவுபடுத்தியும். பொருள்கூறியும் விளக்கந்தரும் பேரறிஞர் கருத்துகள் பலப்பல அவ்வப்போது தோன்றி வளரத் தொடங்கின. சமயநூல்கள் பல தோன்றின. பலநூல்கள் திருத்தி விரிவுபடுத்தப்பெற்றன. அவையாவுமே திருமாலை முதற் பரம்பொருளாகக் கொண்டவை; சமய நடைமுறைகளை உணர்த்துபவை; மக்களிடையே வைணவக் கொள்கைகளை வேரூன்றச் செய்பவை யாகின்றன.

## தொல்காப்பியத்தில் திருமால்

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (தொல். அகத். 5)

என்னும் கூற்றின்படி இந்த நிலவுலகம் நான்கு இயற்கைப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. அதற்கு நானிலம் என்று பெயரும் வழங்கப்பட்டது. அந்த வழக்காற்றின் அடிப்படையில் இலக்கணமும் வகுக்கப்பட்டது. இது மிகத்தொன்மை வாய்ந்த வழக்கு. இந்த வழக்காற்றுக்கு முன்பே, அந்த நால்வகை நிலங்களுக்குரிய தெய்வவணக்க முறைகளும் இருந்துள்ளன.

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்" (ஷ. நூற்பா.5)

என்பது அந்த நால்வகை நிலங்களுக்குரிய தெய்வப்பாகுபாட்டு அமைப்பாகும். இவற்றுள் காடு, வரை, புனல், மணல் என்னும் நிலப்பரப்புகள் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் பெயர்களால் சுட்டப்பெற்றன தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்த இந்த வரையறையின்படி முல்லை நிலத்துக்குரியவனாக மாயவனைக் குறிப்பிடுவதோடு மட்டுமன்றி தொல்காப்பியர் மாயவனுக்கு முதலிடம் அளித்திருப்பதும் குறிப்பிடத்தக்க ஒன்று. அதாவது குறிஞ்சியும் முல்லையும், மருதமும், நெய்தலும் என்பதே இயற்கை நில அமைப்பின் வரிசைமுறை. இதை மாற்றி, சொல்லிய முறையாற் சொல்லவும்படும் என வலிந்து அமைத்ததன் வழி, மாயவனுக்கும் முல்லைக்கும் முதலிடம் கொடுத்தார் இயற்கை அமைப்பில் உயர்ந்து நின்று முதலிடம் பெற்றதோடன்றி, அகத்திணை ஒழுக்கம் தொடங்குவதற்கிடமானதுங் குறிஞ்சி நிலமே. அதை முதலிற் கூறாது மாயவனுக்குரிய முல்லையை முதலில் வைத்தது சிறப்புக்குரியது. இந்த அமைப்பால் மாயவனும் இறையவருள் முதலிடம் பெறுகிறான்.

மாயோன் - மா-கருப்பு. மாயோன் - கரியவன் நீலநிறக் கடலும் வானமும், காயாம்பூக்களின் தொகுதியுமாகிய இடங்களிலெல்லாம் பரந்து நிற்பவன். இவற்றில் ஊடுருவி நிற்கும் செம்பொருளின் வண்ணமும் வனப்பும் நோக்கி மாயோன் எனப்பட்டான். மாய்தல் - மறைதல். தத்துவங் கடந்த பொருளாய் அனைத்தினுக்கும் அப்பாறபட்டு (சேய்மைப்பட்டு) மறைந்து நிற்பவனாதலின் மாயோன் ஆயினன் எனவும் அமையும்.

### இலக்கியங்களில் திருமால்

முல்லை நிலத்துக்குரிய தமிழ் மக்கள் ஆயர் எனப்பட்டனர். காடுறை உலகமாகிய அது மாயோன் மேவியது எனப்பட்டது. ஆயர்களின் குல தெய்வமாகத் திருமாலவதார மூர்த்தியாகிய கண்ணபிரான் போற்றப்பெறுகிறான். அந்த மாயவனை ஆயர்கள்,

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்" (சிலம்பு - 11-19)
"பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்" (ஷ - 11-20)
"வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன்! பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினையே!
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய்! மாயமோ மருட்கைத்தே" (ஷ - 17-32)

என்றெல்லாம் புகழ்ந்து பாடி மகிழ்கிறார்கள் மேலும் அவனை,

'களவினால் உறிவெண்ணெ யுண்ட வாயினன்' (ஷ - 17-33)
'இரண்டடியால் மூவுலகு மிருள்தீர நடந்தவன்' (ஷ - 17-34)

என்றெல்லாம் சிறப்பித்தும் பாடுகிறார்கள் இவற்றைப் போன்று திருமால் பற்றிய செய்திகள் பலவற்றைச் சிலப்பதிகாரம் எடுத்துககாட்டுகிறது

"ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற
பாயற பள்ளியில் .
திருவமா மார்பன் கிடந்த வண்ணமும் (சிலமபு 11, 35-40)

"வீங்குநீ ரருவி வேங்கட மென்னுமி
ஓஙகுயர் மலயத துச்சி மீமிசை
செங்கண நெடியோன நின்ற வண்ணமும் (ஷ 11, 41-51)

என்பனவும் திருமாலின திருக்கோலங்களை எடுத்துக்கூறும சிலப்பதிகார அடிகள்.

மலைமிசை நின்றோன
புள்ளணி நீளகொடிப் புணாநிலை தோன்றும" (சிலமபு. 11-136)

என்பது, திருமால் கோயிலில கருடக கொடி காணப்படும என்பதைச சுட்டுகிறது.

சககராயுததததை ஏந்திய திருமால வேதஙகளில் கூறப்படும் முதறகடவுள அவன உலகப்பொருளகளையே தன உறுபபுகளாகக கொண்டவன எனபது பெருந்தேவனாரின் கூற்று

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
என்ப திகிரி யோனே" (நற்றிணை கடவுள்வாழ்த்து)

என்னும் அவர்பாடல் திருமால் எல்லாப் பொருளகளிலும ஊடுருவி இருப்பவன் என்பதற்கு எடுததுக்காட்டாய் அமைகிறது திருமாலைப் பற்றிய அனைத்துச் சிறப்புகளையும தெளிவாக எடுத்துக்காட்டுவன, பரிபாடலில் இடம்பெறும் ஆறுபாடல்கள அவை 438 வரிகளாலானவை பலராமரும் கண்ணனும் ஆகிய இருவர் திருவுருவமும உள்ள திருக்கோயிலாகத் திருமாலிருஞ்சோலையை எடுத்துக்காட்டுவது இப்பரிபாடல் (15) இப்பலராம கிருஷ்ணர்களே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்து வடநாட்டவர் வழங்கிவரும் சங்கர்ஷண வாசுதேவர் ஆவா

திருக்கச்சியில் எழுந்தருளியுளள திருமாலைப் 'பாம்பணைப் பள்ளியில் அமர்ந்தோன்' எனக்குறிப்பிட்டுச 'சிலம்பில் களிறுபடிந்தாங்கு' அமர்ந்தோன் என உவமிக்கிறது பெரும்பாணாற்றுப்படை (371)

"**மாய வண்ணனை** மன்னுறப் பெற்றவன்" (பதிற்று - 7 பதிகம்)

எனச் சேரன் செல்வக்கடுங்கோவாழியாதன் போற்றப்படுகிறான். இவ்வாறு தொல்காப்பியம் தொடங்கி, சங்க இலக்கியம் முதலான பல்வேறு இலக்கியங்களிலும் திருமால் இடம்பெறும் தன்மை, நம் நாட்டு மக்களிடையே மிகப்பழங்காலந்தொட்டே வைணவக் கடவுட் கொள்கை வேரூன்றிய ஒன்று என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

"பூவிற்குத் தாமரையே பொன்னிற்குச் சாம்புநதம்
ஆவிற் கருமுனியா யானைக் கமரரும்பல்
**தேவிற் றிருமால்** எனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவன்வெண் பா" (திருவள்ளுவ மாலை - 36)

என்னும் பெருந்தேவனார் பாடல் இறைவர்களில் திருமாலைச் சிறப்பித்துக் காட்டுகிறது

"சமயக் கணக்கா மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற வள்ளுவன்"

என்று சிறப்பிக்கப்பெறும் வள்ளுவா. **திருமால்** தம் அடியால் அளந்து பெற்ற உலகு என்பதை,

"மடியிலா மன்னவன் எய்தும **அடியளந்தான்**
தாயது எல்லாம ஒருங்கு" (610)

என்னும் குறளில் எடுத்துக்காட்டுகிறார். இதேபோலத் திருமாலைத் '**தாமரைக் கண்ணான்**' என்றும் சுட்டுவார்

"தாம்வீழ்வார் மென்தோள துயிலின் இனிதுகொல்
**தாமரைக் கண்ணான்** உலகு" (1103)

என்பது அக்குறள் சிறறின்டம. பேரினபம் ஆகிய இரண்டுவகைச் செல்வங்களுக்கும் உரிய இறைத்தன்மை யுடையவன் திருமால் என்னும் வைணவ சமயக்கொள்கை இங்கு வள்ளுவராலும் எடுத்துக்காடடப்பெறுசிறது

## புராண இன்பம்

புராணம் என்பது பழைய வரலாற்றுநூல் இறை உண்மையை உணர்த்துவது; வேதம் முதலான தருமநூற் கொள்கைகளை எளிய முறையில் எடுத்துரைப்பது; உலக ஒழுக்க நெறிகளை உணர்த்துவது; எனறும் அழியா நிலைபேறுடையது என்பன சுட்டிக்காட்டப் பெற்றன.

அப்புராணங்களை இயறறியவர் பெறற இன்பம் என்ன? அவற்றைக் கற்றோர். கறபோர் அடைந்த. அடையும் இன்பம் யாது? இத்தகு வினாக்கள் பல எழுவது இயல்பு.

புராணங்களை இயற்றியோரும் கற்போருமாகிய இருதிறத்தாரும் புராணத்தால் ஏற்படும் இன்பத்தை முழுமையாகத் துய்த்திருக்கிறார்கள்; துய்த்தும் வருகிறார்கள் எப்படி?

மனித உடல் என்பது எத்தகையாது? உலகத்தோடு அந்த உடலுக்கு உள்ள உறவு யாது? மனிதன் அடைய வேண்டிய நிலை யாது? வாழ்க்கை என்றால் என்ன? அந்த வாழ்க்கைக்குரிய பண்பாடு எத்தகையது? வாழ்க்கைக் கென்று ஏதேனும் ஒரு கடமை உண்டா? வாழ்க்கை, கடமை, வாழ்க்கை நெறி - இவற்றிடையே உள்ள தொடர்பு என்ன?

கடமை, கடமை - நமது சரியான கடமைதான் எது? அக்கடமையை மேற்கொள்ளுவதில் அனைவருமே வெற்றிபெற்று விட முடியுமா? கடமையைச் செய்வதில் குறை ஏற்பட்டால் வாழ்க்கை எப்படி முடியும்? தவறிவிட்டோம் என்பதை அறிவது எப்படி? தவறு ஏற்படாதவாறு ஒழுகும் வழிதான் எது? வாழ்க்கையில் துன்பமோ இடையூறோ சிக்கலோ ஏற்படாதா? அந்தச் சிக்கல்களிலிருந்து விடுபடமுடியுமா? முடியும் என்றால் அது என்ன வழி? வாழ்க்கையில் இப்படிப் பலநூறு வினாக்கள்

வினாக்கள் எத்தனை எழுந்தாலும் அவற்றிற்கு மனித வாழ்க்கையில் விடைகாண முடியும். விடைகாணத் துணைநிறபது புராணமே என்பது மிகையாகாது அத்தகு புராணத்தைப்படைத்தளித்து மக்களுக்கு வழிகாட்டினோம்என்பதில் ஏற்படும் இன்பத்தைவிடப் புராண நூலாசிரியருக்கு வேறு இன்பம் இருக்கமுடியுமா? தாம் காட்டிய வழியின் அடிப்படையில் மக்கள் கடைபிடித்தொழுகும் நன்னெறிகளைக் காணும் போது பேரின்பமே பெற்றநிலை நூலாசிரியருக்கு ஏற்பட்டு விடுகிறது. புராணத்தைக் கற்போருக்கு . . . .?

உடல் படைத்த உலக உயிர்களில் மனித உடலே உயர்ந்தது; உயர்வடையும் நன்னெறிகளைக் கடைபிடிக்கவல்லது என்பது உலகறிந்த உண்மை. அந்த உடல் தான கடைபிடித்தொழுகும் நன்னெறிகளால் உலக வாழ்க்கையில் இன்பத்தைக் காணுகிறது பிற உயிர்களை இன்பமாக வாழவைக்கிறது. இந்த உண்மைகளை உணர்த்துவது புராணம் உலகில் தன் கடமை என்ன என்பதை உணர்த்துவதில் பெரும்பங்கு வகிப்பது புராணம் முதலில்,

நமது கடமைதான் எனன? எல்லாருக்கும் ஐயமே! முறறுந் துறந்த முனிவர்களுக்கு - துறவறத்தில் முழுமைபெற்ற முனிவர்களுக்கு இந்த ஐயம் ஏற்படுவதில்லை உலக அநீதிகளை அலட்சியமாய் எண்ணி, அவற்றைப் பொருட்படுத்தாது, தங்கள் வாழ்க்கை வழியையே பெரிதாகக் கருதி நடக்கும் சுயநலக்காரர்களும் இந்த ஐயத்திற்கு விதிவிலக்காகி விடுகிறார்கள். எதை நினைத்தாலும் அஞ்சுவது, எதைத் தொட்டாலும் அலறுவது போன்ற

பண்புடைய பயந்தாங்கொள்ளிகளுக்கும் இந்த ஐயம் ஏற்பட வாய்ப்பில்லை. ஆனால் நல்ல சமுதாயததில் வாழ்கிறோம் - நேர்மையும் ஒழுக்கமு முடையவர்களாய் வாழ்கிறோம்-கடமைகளில் முரண்படாது வாழ்கிறோம் என்னும் அளவில் பண்புகளையும் பொறுப்புகளையும் கடைபிடித்து வாழும் அறிஞர் பெருமக்களுக்கே நமது கடமைதான் என்ன என்னும் ஐயம் ஏற்பட்டு விடுகிறது.

வாழ்க்கையின் நெருக்கடியான நிலைகளிலும், மீளமுடியாத சூழ்நிலைகளிலும், தங்கள் கடமைகளைச செய்வதா? செய்யாமல் விட்டுவிடுவதா என்னும் சிக்கல் ஏற்பட்டு விடுகிறது. இதற்குச் சரியான முடிவைத் தருவதே புராணம். அத்தகு நெருக்கடிகளில் சான்றோர்கள் எப்படியெல்லாம் நடந்துகொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெளிவுபடுத்திக் காட்டுவதே புராணம். அதே செயலை மேற்கொள்ளுங்களென்று உணர்த்துவதே புராணந்தரும் அறவுரை; அதுவே புராணந்தரும் இன்பம

வாழ்க்கையில் கயவர்களும் இருக்கிறார்கள் அவர்களால் ஒழுக்கமுடைய சான்றோர்களுக்குப் பல இன்னல்கள் ஏற்பட்டுவிடுகின்றன. அந்த இன்னல்களிலிருந்து விடுபட்டு வாழவதற்கும். தாம் மேற்கொள்ளுங் கருமங்களைத் திறம்படச் செய்வதற்குமான வழிவகைகளுக்குச சான்று காட்டுவதே புராணம். அதாவது.

கருமங்களை மேற்கொள்ளுவதில் கையாளப்படுகின்ற யுக்தி - உபாயம், வழி முறைகளுக்குச் சான்றாகித் துணைபுரியும் கதைகள்; திட்டவட்டமான முடிவை எடுப்பதற்குரிய சான்றாகும் கதைகள் இப்படிப் பலவற்றைப் புலப்படுத்துவதே புராணம்.

வாழ்வியலை முழுமையாக்கிக் காட்டுவதில் நூலாசிரியரும், அவற்றை முழுமையாக உணர்ந்து கடைபிடிப்பதில் கற்போரும் இன்பமடைகிறார்கள் என்பதே புராணந்தரும் இன்பமாகும்.

## நூலாசிரியரின் சமயக்கொள்கை

அரஙகநாதனின வரலாற்றைப் படைத்துக் காட்டும் ஆசிரியர் வைணவச்சமயப் பற்றுடையவர் என்பது பொதுக் கொள்கையாகலாம். நூலின் வாழ்த்துப் பகுதியில் அரஙகநாயகன். அரங்கநாயகி, நம்மாழ்வார், நித்தியசூரியர், யதிராசர், வேதாந்ததேசிகர், கருடாழ்வார் என்னும் வைணவ சமயச் சார்புடைய இறையவர்களையும் இறைத் தொண்டர்களையுமே ஆசிரியர் போற்றி வணங்குகிறார். என்றாலும் உருத்திரமூர்த்தி, சங்கரன், பிரம்ன். வேலன் ஆகிய பிற சமய இறைவர்களின் சிறப்புகளை ஆங்காங்கு எடுத்துக் கூறிச் சிறப்பிக்கத் தயங்கினாரில்லை

கோலவரையின் மேகக் கூட்டங்களானவை.

"கலைமதி நீறணிந்த கடவுளிற் கனம்வான் சென்று
அலைமுகந்து ஏறி'ன என்பார். (19)

அந்த மேகக்கூட்டங்கள் நிறைத்த மழையால் நாட்டில் வெள்ளப்பெருக்கு ஏற்படுகிறது. அந்த நிகழ்சசியை,

"தோலெ லும்பும் பணியுஞ் சுமந்தன
மேலுங் கொன்றையும் மேவுமுன் னாண்மதி
போல ணிந்து புலியொடும் போவதால்
வேலன் தந்தையை ஒத்தது வெள்ளமே" (25)

என்பார் ஆசிரியர்.

அதாவது பலவகை அணிகலன்களையும் வளங்களையும் சுமந்துவரும் வெள்ளமானது சங்கரனே வருவது போன்று காட்சியளித்தது என்பார்.

"வேலும் வள்ளியும் யானையும் மேவிப்பொன்
னாலு நூலொடும் ஆறு முகத்தினிற்
சாலும் பன்னிரு கைகள்பொற் றாமரை
போலும் நீத்தமும் வேலனைப் போன்றதே" (28)

என வேலும் வள்ளியும் தாமரையும் ஆகியவற்றை நிறைத்துவரும் வெள்ளம் வேலவனே வருவது போன்று காட்சியளித்தது என்பார் இவற்றைப்போல பிரமனுக்கும் உவமை கூறிச் சிறப்பிப்பார். (24) அரங்க நாயகரின் திருமேனியைச் சிறப்பிக்கும் ஆசிரியர் தொடர்ந்து அனைத்து இறைவர்களையும் ஒரே நிலையில் வைத்துச் சிறப்பிக்கும் பண்பால், சமயப் பொது நோக்குடையவர் என்னும் கருத்துக்கு உரியவராகிறார்.

## வாழ்த்து

எடுத்துக்கொண்ட செயல் இனிதே நிறைவுறுதல் வேண்டும் என்னும் விருப்பில் இறைவனைத் தொழுது தொடங்குதல் மரபு அத்தகு கடவுள வணககம் என்பது. (வாழ்த்து),

1. ஏற்புடைக் கடவுள் வணக்கம் 2 வழிபடு கடவுள்வணக்கம் என இரு திறப்படும். இறைவனைத் தொழுது வழிபடுங்கால் **பூமாலை** சூட்டி வணங்குதலும், **பாமாலை** சூட்டி வணங்குதலும் எனும் இருமுறைகள் கையாளப்படுகின்றன நூல்களுள் **பாமாலை** சூட்டி வணங்குதலே இயலும். அப்பாமாலை ஏற்புடைக் கடவுள் மீதும் அமையும்; ஆசிரியர் வழிபடுங்கடவுள் மீதும் அமையும். சித்த மருத்துவம் போன்ற சில நூல்களுள் குருவணக்கமும் இடம்பெறும்.

பிற்கால நூல்கள் பலவற்றுள் சைவ, வைணவ இறைவணக்கங்கள் இணைந்து அமைந்துள்ளன. பலதிற மக்கள் முன்னிலையில் நடத்தப்பெறும் நாடகம் போன்றவற்றுள் இருசமய வணக்கங்களும் இடம்பெற்றுள்ளன. இவற்றைத்தவிர, பிற்கால இலக்கியங்களுள் ஏற்புடைக் கடவுள்வணக்கம் இடம்பெறுவதோடு, நூலாசிரியர் வேறு சமயம் சார்ந்தவராயின் அவர் வழிபடுங்கடவுள் வணக்கம் இணைய, இருசமய இறைவணக்கங்களுடன் நூல் உருவாகியுள்ள நிலையும் காணப்படுகிறது.

ஆனால் பக்தி இலக்கியங்கள் உருவான காலத்தில், சமய நூல்களுள் ஏற்புடைக் கடவுள் வணக்கமுறையே மிகுதியாகக் கையாளப்பெற்றுள்ளது. சைவசமய நூலாயின், விநாயகர், முருகன், சிவன், சத்தி, நாமகள், திருநந்தித் தேவர் போன்ற கடவுளர்களும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்ற அடியவர்களும் வாழ்த்துப் பகுதியில் இடம்பெறுகின்றனர். இதேநிலை புராண இலக்கியங்களிலும் ஆளப்பெறுகிறது இந்த முறையை ஒட்டியே இந்த அரங்கன் சரித வாழ்த்துப் பகுதியில் அரங்கநாயகனும் அரங்கநாயகியும் போற்றித் துதிக்கப்படுவதோடு வைணவத்திருத் தொண்டர்களுள் நம்மாழ்வார், பன்னிரு ஆழ்வார்களாகிய நித்திய சூரியர்கள், யதிராசர் எனப்பெறும் இராமாநுசர், வேதாந்த தேசிகர் ஆகியோரும் துதிக்கப்பெறுகின்றனர்.

**நூற்பயன்**

கல்வியுஞ் செல்வமும் வளமையும் சோலவரைத் துயிலரங்கனின் சரிதத்தால் பெறப்படுபவையாகும். அந்தச் செல்வங்களைப்பெற்றுப் பேறு பெறுவோர் நான்கு திறத்தவர் என்று வரையறுக்கிறார் ஆசிரியர்

"வரைதுயில் அரங்கன் பாதஞ்
சொல்பவர் படிப்போர் கேட்போர்
சொறபடி எழுது வோர்க்கே" (2)

என்பது அவ்வரையறை அரஙகன் சரிதத்தைப் படிப்பவர் எல்லாவகைச் செல்வங்களையும் பெறுவர் அதேபோல இந்நூலை எடுத்துச் சொல்லுவோருக்கும், அதை உள்ளன்போடு கேட்போருக்கும் அந்தச் செல்வப்பேறு கிடைக்கும். இவர்களோடு மட்டுமன்றி நான்காவதாகச் சொற்படி எழுதுவோரையுங் குறிப்பிடுவார். ஆசிரியர் சொல்ல அதை ஏட்டில் எழுதிவைப்போர்; எழுதிய நூலை ஒருவர் படிக்க அதை எழுதுவோர் என்னும் இரு திறத்தவருக்கும் இப்பேறு கிடைக்கும் என்பார் ஓலையில் எழுதிவைக்கும் மிகப்பழைய முறையை இங்குச் சுட்டுகிறார் காரணம், ஆசிரியா உருவாக்கிய நூலே முதன்முதலில் ஓலைச்சுவடியில் வரையப்பெற்றது என்னும் வழக்காறேயாகும்.

## புராணச்சுருக்கம்

அரங்கன் சரிதமாகிய இந்நூலின் சுருக்கத்தைப் 'புராண சங்கிரகமணி' என்னுந் தலைப்பில் (சங்கிரகம் - சுருக்கம்) ஐந்து பாடல்களில் தருகிறார் ஆசிரியர் (13-17). ஆதிகாலத்தில்,

முனிவர்கள் பிரமனின் திருவருளால் நைமிசாரணியம் என்னும் வனத்தை அடைகிறார்கள். வேதவியாசர் என்னும் மாமுனிவர் திருஅவதாரம் செய்கிறார். அவர் நான்கு வேதங்களையும் நான்கு முனிவர்களுக்குக் கற்பிக்கிறார். பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய பாத்தும புராணத்தின் உத்தர காண்டத்தில் இடம்பெறும் வராக தலத்தின் - தலச் சிறப்பு, தீர்த்தச் சிறப்பு, மூர்த்திச் சிறப்பு ஆகியவை எடுத்துச சொல்லப்படுகின்றன. காலநேமி என்னும் அசுரன் தவஞ்செய்து வரம்பெற்றவன், இந்திரனை வென்று இந்திரபதவியைப் பெறுகிறான். தேவர்கள் அலைந்து திரிந்து நாரதரைக் காணுகிறார்கள். நாரதர் கோலவரை அரங்கனைக் காணுமாறு அருள்புரிகிறார். அதனபடியே அரங்கநாதரின் திருவடிகளில் சரணடைகிறார்கள்.

திருமால் வராகத் திருஅவதாரம் எடுக்கிறார். தேவகங்கை வராகநதியாகப் பெருக்கெடுக்க அருளுகிறார். மத்தளராசனின் பிரமகத்திப் பாவத்தை நீக்குகிறார். சோமுகன் எலுமிச்சையாகி நிலைபேறு பெறுகிறான். மார்க்கண்டேயருக்குத் தன் விசுவரூபததைக்காட்டி கோலவரையில் திரு அவதாரம் செய்கிறார் முருக பெருமானுக்காகக் கோலவரை வடிவாகிச் சிம்மவர்மனை அழிக்கிறார்.

காலநேமியை அழித்துத் தேவர்களுக்கு வாழ்வளிக்கிறார். கோலவரையில் தவஞ்செய்த இலக்குமியை மணந்து தன் திருமார்பில் தங்கச் செய்கிறார். திருவேங்கடத்து எம்பெருமானாகவும். ஸ்ரீவரதராசராகவும் பார்த்தசாரதியாகவும திருவவதாரஞ்செய்து எழுந்தருளி அருள்புரிந்து வருகிறார் அரங்கநாயகர் என்பன நூல்தரும் செய்திகள்.

## அவையடக்கம்

பழம்பெரும் நூலாசிரியர்கள்,

"தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்
தாந்தம் புகழ்தல் தகுதி யன்றே"

என்னும் மரபைக் கையாண்டு வந்தார்கள் தற்புகழ்ச்சியை நீக்குவதோடல்லாமல், கற்றார்முன் தாம் சிறியரே என்று கூறவும் மறப்பதில்லை அந்தக் கூற்றை அவையடக்கம் எனக் கொண்டனர்.

'கற்களிலிருந்து பிறக்கின்ற மணிகள் தீட்டித் தூய்மை செய்யாவிட்டால் ஒளிமங்கிப் போகும் அதேபோல வெண்ணிலவில் காணும் மறுவினைப்போல் இந்நூலின் சொற்களில் அமையும் வழுக்களைப் புலமைமிக்க சான்றோர் களைந்து தூய்மைசெய்து அழகுறச் செய்து கொள்ளுவார்களாக!

கடல்நீர் உவர்க்கும் என்பதால் அக்கடலில் பிறக்கும் சங்கையும் முத்தையும் பவழத்தையும் யாரேனும் வெறுத்து நீக்குகிறார்களா? அதேபோல என்சொல் குற்றமுடையதே யாயினும், பரம்பொருளாம் அப் பழம்பொருளின் சிறப்பு கூறுவது ஆதலின் இதனை யாரும் வெறுத்து ஒதுக்கமாட்டார்கள்'. (திருத்தக்கதேவர்)

'இந்நூலின் செய்தியெல்லாம் எனக்கு இறைவன் கூறியவை. அவற்றையே சிறப்புடையனவாக ஏற்றுப் புலவர்கள் நிறைந்த அவையிலும் சொல்லத் தொடங்கினேன். என்னுடைய பாடல்கள் குற்றமுடையன என்ற காரணத்திற்காக இறைவன் கூறிய செய்திகளை யாரும் மறுக்கமாட்டார்களல்லவா?' (நீலகேசி)

'இறைவனின் குணங்களை எடுத்துச் சொல்லவேண்டும் என்ற ஆசையால் இந்நூலைச் சொல்லத் தொடங்குகிறேன். இதனுள் சொற்சோர்வு முதலாய குற்றங்கள் தோன்றுமாயின் சான்றோர்கள் பொறுத்துக் கொள்ளுவார்களாக'. (சூளாமணி)

'ஒரு பூனையானது கடல்நீர் முழுவதையுங் குடித்துவிட வேண்டும் என்று நாவால் நக்கிக் குடிககத் தொடங்கியது போன்ற பேராசையால் நான் இராமர் கதையைச் சொல்லத் துணிந்தேன்.

இசைக்கு மயங்குவது அசுணப்பறவை. அதன் காதுகளில் பறையொலி விழுந்தால் அப்பறவை உயிரையே விட்டுவிடும். என்னுடைய கவிகள் சான்றோர் செவிகளுக்கு அந்தப் பறையொலி போன்றனவே.

அழகிய ஆடரங்கின் தரையை அறியாப்பிள்ளைகள் கீறிவிட்டால் கலைஞர்கள் கோபிப்பதில்லை. அதுபோல நூலுணர்ந்த சான்றோர்கள் சிறிதும் ஞானமற்ற என்னுடைய கவியைக் கண்டு வெறுப்படைய மாட்டார்கள'. (கம்பராமாயணம்)

'வேதத்துக்கு ஒப்பாக வியாசமுனிவர் செய்த காப்பியத்தை அடியேனும் சொல்லத் துணிந்தேன் இச்செயல், ஆகாயத்தின் அளவை ஊமையானவன் கேட்டறிய நினைத்தது போலவும், கண்ணில்லாதவன் பார்த்தறிய ஆசைப்பட்டது போலவும் ஆயிற்று.

என் காப்பியமானது சுவையில்லா இழிசொற்களால் செய்யப்பட்டதாக இருந்தாலும், முனிவர் வடமொழியாற் செய்ததை நான் தென்சொல்லாகிய தமிழாற் செய்திருப்பதனால் பொறுத்தருளுங்கள்'. *(வில்லி பாரதம்)*

'நீரையே விலைகொடுத்து வாங்கிக் கொள்ளுவார்கள் அது பாலோடு கலந்து விட்டபோது; பதரையும் வாங்கிக் கொள்வர் அது நெல்லோடு கலந்துவிட்டபோது; நாரையும் பெறுவர் அது பூவோடு சேர்ந்துவிட்டபோது; வேரையும் விலைகொடுத்துப் பெறுவார்கள் அதில் சிறிது மணம் கலந்துவிட்டால்; புன்சொல்லையும் பாராட்டுவார்கள் அது செஞ்சொல்லோடு சேர்ந்து வருமாயின்; ஆனால் முழுக்க முழுக்க புன்சொல்லாலேயே அமைந்ததை யார் பாராட்டுவார்கள் என்பதைச் சிறிதும் சிந்திக்காமலே எழுதத் தொடங்குகிறேன்.

நாயகனுக்கு மனைவி ஞானப்பொருள் உணர்த்துவது போல; திருடன் சான்றோருக்கு அறம் கூறுவது போல; கொசுவானது கருடனுக்குப் பறக்குங் கலையைக் கற்பிப்பது போல; கல்வியும் ஞானமுமாகிய அகக் கண்ணும், பார்வைக்குரிய முகக் கண்ணும் பெற்றவருக்கு விழியில்லாதவன் வழிகாட்டுவது போலச் சான்றோர்முன் இச்சிறியேன் இந்நூலைக் கூறத்தொடங்குகிறேன்'. (அரிச்சந்திரபுராணம்)

'நாயகன் கவிக்கே குற்றம் கூறிய கழகப் புலவர்களுக்கு என் நூலிற் குற்றம் காண்பது என்பது அரிதன்று. ஆயினும் தூய இனிய பாலை மட்டும் பிரித்து உண்ணும் அன்னம்போல இந்த நூலையும் ஏற்பார்களாக!

கடல்நீரையுண்டு அதன் உவர்ப்பை ஒழித்துத்தரும் மேகத்தைப் போல, சான்றோர்கள் என் நூலின் குற்றங்களை நீக்கி ஆலவாயுடைய அண்ணலுக்கு இனிய நூலாகத் தருவார்களாக'. (திருவிளையாடல்)

'அகத்தியன் சொன்ன தமிழ் இலக்கணத்தை நானும் சொல்லுகிறேனே என்று நினைக்கும்போது எனக்கே சிரிப்பாகத்தான் இருக்கிறது. ஆனால் கரிய நிறத்தையுடைய காக்கையும் பனிமலையை அடைந்துவிட்டால் பொன்னிறம் பெற்றுவிடும் என்பார்கள். அதுபோல என்னுடைய எளிய கருத்தும் பெரும்புலவர்களை யடைந்துவிட்டால் மிக உயர்ந்த பொருளாகி விடுமல்லவா?' (யாப்பருங்கலக்காரிகை)

இப்படி அவையடக்கக் கூற்றுகள் பலப்பல. இக்கூற்று அமையாத தமிழ் நூல்கள் இல்லை எனலாம். தொகைநூல்களில் இடம்பெறும் வாய்ப்பு இல்லை. அரங்கன்சரிதம் கூறும் ஆசிரியரும் அவையடக்க விதிக்கு விலக்கானவர் அல்லர்

அரங்க நாயகனின் திருவடித் தாமரைகளில் உற்பத்தியாகி ஓடுகின்ற புண்ணிய நீரைத் தெளித்துக்கொண்டு, உள்ளத்தில் அவனை எப்பொழுதும் நினைத்துத் துதிக்கின்ற பரமசிவனும் பிரமனும் இந்திரனும் முதலாகிய தேவர்களும் முனிவர்களும எடுத்து இயம்புதற்கரிதாகியது அரங்கனது புகழ். அப்புகழை அடியேன் கூறத்தொடங்கியிருப்பது,

. . . அண்டத்தைச் **சுண்டன்** (மூஞ்சூறு) அளப்பதொத் திடுவதாம்' என்பது நூலாசிரியரின் அவையடக்கக் கூற்று.

## கோலவரை

இயற்கையினூடே இறைவனைக் காண்பதே தமிழ் மரபு. அந்த இயற்கைச் சூழலே ஐம்புலன்களை ஈர்க்கும் ஆற்றலுடையவை என்பதை உணர்ந்தவர்கள் மக்கள். எனவே தான் சோலை சூழ்ந்த குன்றுகளிலும், மலைச்சரிவுகளிலும், மலையுச்சிகளிலும் இறைவனுக்குத் திருக்கோயில்களைக் கட்டினார்கள். ஆற்றங்கரைகளையும் கடற்கரைகளையும் ஆறுகடலோடு கலக்குமிடங்களையும் கோயில்களுக்குரிய இடமாகத் தேர்ந்தெடுத்தார்கள். மரங்களின் கீழே இறைவனை எழுந்தருளச் செய்தார்கள். இவற்றின் அடிப்படையிலே தான் ஒவ்வொரு கோயிலுக்கும் உரியதாகத் தலவிருட்சம் என்பது அமைந்தது; தலத்தீர்த்தமும் உருவாக்கப்பட்டது. இதே மரபில் தேர்ந்தெடுக்கப்பட்ட மலையே கோலவரை என்பது.

"சேண்த யங்குபுகழ் **கச்சி மாநகரின்**
தெற்கில் **காவதமோர் ஐந்தினில்**
யாண்டு நின்றதொரு **கோல மால்வரை**" (354)

"அம்மலை காணின் தீவினை மலையும்அழிந்திடும்". அதனை வந்தித்துத் துதிக்கின் பேரின்பத்தினையடைவர்" (440) என்பன அம்மலையின் இருப்பிடமும் சிறப்பும் பற்றியன. அம்மலை பெருஞ்சிறப்புடன் விளங்குவதற்குக் காரணம் அம்மலைவாழ் சான்றோர்களின் பண்புகளேயாகும். அத்தகு சான்றோர் யார்?

"வாலகில் லியர்கள் சித்தர்கள் யோக
வண்மையர் ஞானியர் வனசக்
கோலமா முனிவர் குண்டிகைக் கரத்தர்
மரவுரி திரிதண்டக் கோலர் . . . . .
அம்மலை யுறைவார்" (441)

அத்தகு சான்றோர்தம் பண்புதான் என்ன? ஒன்றா! இரண்டா! இதோ!

சித்தாந்த வேதாந்தங்களை நடுநிலையோடு அறியும் அறிவு படைத்த அச்சான்றோர்கள், நடுநிலை பிறழாத நல்லறிவு வாய்ந்தவர்கள்; கொடுஞ்செயல் எதிலும் ஈடுபடாதவர்கள்; பக்தியில் முழுமையடைந்தவர்கள்: அதனால் என்றும் மாறித்திரியாத உள்ள உறுதிபெற்றவர்கள்; குல ஒழுக்கமும் புத்தி கூர்மையும் தூய எண்ணமும் கருணையுள்ளமும் இயல்பாகவே அமையப் பெற்றவர்கள். விருப்பு, வெறுப்பு என்பது இல்லாத அவர்கள் ஒன்றை விரும்பினால் அது நிறைவேறியே தீரும் அது எல்லோருக்கும் நற்பயனைத் தருவதாகவும் முடியும் இவை அவர்கள்தம் பண்புகளுள் ஒருசில

இத்தகு பண்பு நிறைந்தவர்கள் நிரந்தரமாகக் குடிகொண்டுள்ள கோலவரை பெரும்புகழ் பெற்று விளங்குவதில் வியப்புக்கு இடம் ஏது?

## சிங்கபுரம்

'செஞ்சி அழிந்து சென்னைப்பட்டணம் உண்டாயிற்று' என்பது வழக்கு. சிறந்த மலைக் கோட்டையோடு பல நாடுகளுக்குத் தலைநகராக விளங்கியது **செஞ்சிமாநகர்.**

தெண்ணீர் வயல் - தொண்டை நன்னாடு சான்றோருடைத்து என்னும் சிறப்பினைப் பெற்று, சீர்கொண்ட கச்சிமாநகரைத் (காஞ்சி) தலைநகராகக் கொண்டு விளங்கிய தொண்டைநாட்டின் ஒருபகுதியாக விளங்கியது செஞ்சிமாநகர். இராசராச சோழனின் இளவலான இரண்டாவது ஆதித்திய சோழன் காலத்திய (கி.பி.985-1013) கல்வெட்டு, செஞ்சிமாநகர் உள்ளிட்ட பகுதியைச் **சிங்கபுரநாடு** என்று சுட்டுகிறது.

சிங்கபுரம், மேலச்சேரி ஆகிய ஊர்களடங்கிய பகுதி விஷ்ணு செஞ்சி எனவும், செஞ்சியும் அதன் தென்புற ஊர்களும் அடங்கிய பகுதி சிவ செஞ்சி எனவும் வழங்கப்பட்டு வந்தன. இன்று தென்னாற்காடு மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியாகவும், செஞ்சி வட்டம் (தாலுக்கா) என்னும் வட்டத்தின் தலைநகராகவும் விளங்கி வருகிறது இது, வடக்கே சங்கராபரணியாற்றுக்கும், தெற்கே பொன்னம்பூண்டி, ஒதியத்தூர் போன்ற ஊர்களுக்கும் இடைப்பட்ட ஒரு பட்டினம். 15 கி.மீ. நீளமும் 5 கி.மீ. அகலமுமுடையது; கோட்டையிலிருந்து சுமார் 40 கி.மீ. சுற்றளவிற்கு உயர்ந்த மலைகள் நிறைந்திருப்பது. மலையரண், நீரரண், காட்டரண் ஆகிய மூன்று இயற்கையரண்களும் பொருந்தி, சிறந்த கோட்டை கட்ட ஏதுவாக அமைந்துள்ளது. எனவே, கி.பி.1200 முதல் 1300 வரை செஞ்சியை அரசாண்ட கோன்வமிசத்தினர் கோட்டையை உருவாக்கினர்

கி.பி. 1677 இல் சிவாஜியின் படை செஞ்சியைக் கைப்பற்றியது. தொடர்ந்து 1681 இல் சாம்பாஜியும், 1700இல் சரூப்சிங்கும், 1714 இல் தேசிங்கும் பொறுப்பேற்று செஞ்சியை ஆண்டுவந்தனர். 1761 இல் ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டது. அவர்கள் ஆட்சிகாலத்தில் சென்னைப்பட்டினம் முக்கிய நகரமாக ஆக்கப்பட்டதன் விளைவாகச் செஞ்சியின் சிறப்பு குறையத் தொடங்கியது.

இந்தச் செஞ்சிமா நகரின் வடமேற்கே 3 கி.மீ. தூரத்தில் இருப்பது **சிங்கபுரம்**. இங்கு, திராவிடர்களால் கட்டப்பெற்ற மிகப்பழைய காளிகோயில் ஒன்று உள்ளது.

## அரங்கன் திருக்கோயில்

செஞ்சியில் கோட்டையை உருவாக்கிய **கோன்** வமிசத்தினரையடுத்து 1341 இல் செஞ்சி சோழராட்சிக்கு உட்பட்டது. பிறகு புக்கன், அரிகரன் ஆகியோரால் கைப்பற்றப்பட்டு, அரசப் பிரதிநிதிகள் நியமிக்கப்பெற்று வந்தனர். அவர்களுள் '**கோப்பண்ணஆர்யா**' என்பவர் அரசுப் பொறுப்பி லிருந்தபோது 1371-72 இல் சிங்கபுரத்திலுள்ள சிறு குன்றின்மீது,

தரைமட்டத்திலிருந்து சுமார் 100 அடி உயரத்தில் அரங்கநாயகரின் திருக்கோயில் உருவாக்கப்பெற்றுள்ளது. பாறையைக் குடைந்து உருவாக்கப்பெற்ற இக்கோயிலின் மூலத்தானத்தில் பள்ளிகொண்ட நிலையில் எழுந்தருளியுள்ளார் ஸ்ரீ அரங்கநாயகர். திருவரங்கத்து (ஸ்ரீரங்கம்) எம்பெருமானின் திருவுருவத்தைவிட மிகப்பெரிய வடிவில் அமைந்தது இத்திருவுருவம். புதுக்கோட்டை மாவட்டத்துத் 'திருமயம்' என்னுந் திருத் தலத்திலுள்ள அரங்கனின் உருவத்தை நிகர்த்தது.

அரங்கநாயகர் கருவறையின் தெற்கில் **காளி**யின் பழைய சிலையோடு கூடிய அம்மன் சன்னதி ஒன்று இடம்பெறுகிறது. இச்சன்னதியின் தென்புறச் சுவற்றிலிருந்து கீழே ஒரு சுரங்கப்பாதை செல்லுகிறது. அது செஞ்சி அரண்மனைக்குச் செல்லும் பாதை என்பர். கோயிலின் தென்புறத்தில் தீர்த்தக்குளம் என்பதைக் குறிக்கும் புஷ்கரணி என்னும் பெயராலேயே தீர்த்தக்குளம் ஒன்று உள்ளது. மலைமீதிலிருந்தாலும் இக்குளத்தில் என்றும் நீர் வற்றுவதே இல்லை என்பர்.

அரங்கநாயகரின் கோயிலுக்கு மேற்கே மலை உச்சியில் இலட்சுமி ஆலயமும் இலட்சுமி தீர்த்தம் என்னும் நீர்ச்சுனையும் இடம்பெறுகின்றன. அவற்றினருகில் இராமர்கோயில் எனப்படும் மண்டபமும், இராமர் தீர்த்தம் என்னும் குளமும் உள்ளன. கோயிலின் எதிர்ப்புறம் அமைந்துள்ள பெரிய மேடையில் நந்தியாவட்டச்செடியும் எலுமிச்ச மரமும் காணப்படுகின்றன. மிகப்பழங்கால மரங்களாகிய இவையே அரங்கநாயகர் திருக்கோயிலின் தலவிருட்சங்களாகும்.

சங்கராபரணி ஆற்றங்கரையில் அரங்கநாயகன் எழுந்தருளுவதற்குரிய மண்டபம் ஒன்று இருக்கிறது ஆண்டுதோறும் மாசி மகத்தன்று சிங்கபுரத்திலிருந்து அரங்கநாயகனைக் கொண்டுவந்து அத்திருமண்டபத்துள் எழுந்தருளச் செய்து உற்சவம் நடத்தி வருகின்றனர்.

சிங்கபுரத்திற்கு மேற்கே 1/2 கி.மீ. தூரத்தில் மேலச்சேரி என்னும் கிராமம் உள்ளது அங்கு பழமைமிக்க சிவன்கோயில் ஒன்றும், திரௌபதையம்மன் கோயில் ஒன்றும் உள்ளன. திரௌபதைக்கு எடுக்கப்பட்ட கோயில்களுள இதுவே முதற்கோயில் என்பர் தமிழ்நாட்டிலுள்ள பெரும்பாலான திரௌபதையம்மன் கோயில்களும், செஞ்சி திரௌபதையம்மன் கோயிலிலிருந்து பிடிமண் எடுத்துச் சென்று கட்டப்பெற்றவையாகும். இது குறித்தே, திரௌபதையம்மன் கோயில்களில் அம்மனைச் சிறப்பித்துப் பாடும்போது,

"செஞ்சிப் பதியாளே செயராமன் தங்கயரே
செஞ்சிப் பதியைவிட்டு செயராமன் தன்னுடனே
எங்கள் பதிதனிலே எழுந்தருள வேணுமம்மா"

என்று வேண்டிப்பாடுவது இன்றும் வழக்காற்றிலிருந்து வருகிறது

## சிங்கபுரம் - நூல்செய்தி

ஒரு செயலைத் தொடங்கும்போது, அந்தச்செயலைச் செய்வதற்குரிய உத்தமமான - உயர்ந்த அல்லது சிறந்தவழி என்ன என்பதைச் சிந்திக்க வேண்டும். அந்த உயர்ந்த வழியில் அச்செயலை மேற்கொள்ள வேண்டும். இக்கருத்தை ஏற்காத சான்றோர் இருக்கமாட்டார்கள். ஆனால், ஒரு அழிவைச் செய்யவேண்டியிருக்கிறது அது பாவச்செயல் அல்லவா? அந்தப்பாவம் நம்மைப் பீடிக்காமலிருக்க வேண்டுமே! அந்தச் செயலைத் திறமையோடு செய்கிற கர்மயோகி யாதல் வேண்டும். இதற்குச் சான்றாக எடுத்துக்காட்டப்பெறுவதே சிங்கபுரத்தின் தோற்ற வரலாறு. (379)

சூரபன்மன் என்னும் அசுரனின் படைத்தலைவன் சிங்கவர்த்தனன்: கடுந்தவம் செய்து பல வலிமைகளைப் பெற்றவன் அவன் முடிமன்னர் பலரையும் அடிபணியச் செய்கிறான். தேவர்களையும் அடக்கி ஒடுக்குகிறான். துன்பமடைந்த தேவர்கள் முருகபெருமானிடம் முறையிடுகிறார்கள். முருகன் தேவர் சேனையோடு சேர்ந்து போரிட்டுத் தோல்வியடைகிறான் அரங்க நாயகனின் துணையை நாடுகிறார்கள் அரங்கநாயகன் சிங்கவர்த்தனனை வெல்லுவதற்குரிய தந்திரங்களைச் சிந்தித்து முடிவெடுக்கிறார். முருகனை மலைவடிவ மெடுக்கச் செய்கிறார்; தாமே இந்திர வடிவில் மலைமீது அமர்ந்து செல்லுகிறார். (407-410)

மலை பறந்து செல்லுகிறது. சிங்கவர்த்தனன் தன் படைகளுடன் தங்கியிருக்கிற இடத்தை யடைந்ததும் அரங்கநாயகன் தாம் அமர்ந்து செல்லும் மலையின் ஒரு சிறகை வெட்டி வீழ்த்துகிறார். அம்மலை பூமியில் இறங்க, அதன் கீழ்ச் சிக்கிய சிங்கவர்த்தனன் தன் அசுரக் கூட்டத்துடன் அழிந்துபடுகிறான். அங்கு இறங்கி நிலைத்துவிட்ட அந்த மலையே கோலமலை என வழங்கப்பெறுகிறது. சிங்க வர்த்தனனை அழித்த அந்தப் பகுதியே சிங்கபுரம் எனப்பெறுகிறது. இது நூல்தரும் வரலாறு.

## சிங்கபுர வரலாறு உணர்த்துவது

தங்களைப் பெரிதும் வதைக்கிறான் சிங்கவர்த்தனன் என்று முருகனிடம் முறையிடுகிறார்கள் இந்திரனுள்ளிட்ட தேவர்கள். சிங்கமுகன், சூரபன்மன், தாருகன் போன்ற அசுரர்களை வென்று தங்களைக் காத்தவன் முருகன் என்ற நம்பிக்கை அவர்களுக்கு.

சிங்கவர்த்தனனோ அகோரதவம் மேற்கொண்டவன். அதனால் பிரமனிடம் வரம் பெற்று மிகுந்த பலத்தைப் பெற்றவன். நாட்டு மன்னர்களையெல்லாம் அடக்கித் தேவர்களையும் பயமுறுத்தி வருபவன் என்பது யாவரும் உணர்ந்த செய்தி. அறிந்திருந்தும் படைதொடுக்கிறான் முருகன். ஆனால் துணைவந்த தேவர் படையோ தனக்கே உரிய சூரன்பன்மாவாகிய மயிலோ வேலாயுதமோ உதவாது ஒழிகின்றன. தளர்வடைகிறான் முருகன். தன்பலமும் மாற்றான் பலமும் அறியாது போரில் இறங்கியதன் பலனே தோல்வியைத் தழுவியதாயிற்று.

எல்லாம் வல்லவனே யாயினும் தான் மேற்கொள்ளுவது என்ன செயல்? அதற்கு எதிர்ப்புகள் தோன்றுமா? துணை நிற்பவர் உண்டா? அவ்விருவரின் சக்தி எத்தகையது? இவற்றையெல்லாம் நன்றாகச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டும் என்னும் அனுபவக் கருத்துகளுக்கு எடுத்துக்காட்டாய் நூலுள் இடம்பெற்றதே முருகனின்தோல்வி குறித்த இச்செய்தி.

பிறகு முருகன் அரங்கநாயகனின் துணையை நாடுகிறான். அரங்கநாயகனோ சிங்கவர்த்தனனை வெல்லவல்லதொரு வழியைச் சிந்திக்கிறான். முருகனையே மலைவடிவம் எடுக்கச் செய்து. சிங்கவர்த்தனன் தன் படையோடு தங்கியிருந்த இடத்தில் மலையை இறங்கச்செய்து அசுரரைப் பூண்டோடு அழிக்கிறான். இதுவே கர்மத்தை மேற்கொள்ளும் யுக்தியாகிறது. இந்த அழிவால் பாவம் ஏற்படாதா? வருந்தவேண்டியவர்களை அழிப்பதால் ஏற்படுவது தான் பாவம்! அக்கிரமச் செயல்களிலே ஈடுபட்டிருக்கும் அசுரர் போன்றவர்களை அழிப்பது பாவமாகாது அழிக்கத் தயங்குவதுதான் பாவமாகும். இந்த நெறிமுறைகளை உலகறியச் செய்வனவே சிங்கவர்த்தனன் - முருகன் - அரங்கநாயகன் ஆகியோர் பற்றிய நூறசெய்திகள்.

அடாத செயல்களில் ஈடுபடுவோர்க்கே உடற்பலமும் படைபலமும் பெருகியிருக்கும். அவற்றை அழித்து நாட்டில் நற்செயல்களை நிலைநிறுத்துவதற்கு நேரடி மோதல் பயன்தராது. நறசெயல்களை மேற்கொள்ளப் பெரிய யோகியாதல் வேண்டும். அதாவது கர்மயோகி; கருமங்களைத் திறம்படச் செய்கிற யுக்தி - உபாயம் - மார்க்கம் - வழிவகை எப்படி வேண்டுமானாலுங் கொள்ளலாம். இந்த யுக்தியைச் சிந்திக்காது மோதிய முருகன் தோல்வியைத் தழுவத். தந்திரமாக மலையை வீழ்த்தி யழித்த அரங்க நாயகன் வெற்றியைத் தழுவுகிறான்.

**சிங்கபுரத்து அரங்கநாயகன்**

அங்கண்மா ஞாலம் அளித்தழித் தருளும் அமலன்; கமலனைப் பயந்த செங்கண்மால்; திருவினோடு அந்நகர் சேர்ந்தா னென்றால், அந்தச் சிங்கமாபுரத்துப் பெருமை சொல்லுதற்கரிதாம். (467)

**காட்சி**

கோலமால் வரையின் ஆலயமதனின் கோபுரக் குன்றைக் கண்களித்திடக் கண்டு, சம்பிர விருக்கத்தைச் சார்ந்து, பிராட்டியைத் தொழுது ஏத்தி, அவள் கருணையைப் பெற்று, கருடத்துவசனைப் பணிந்து, பூவுறை பிராட்டி மார்பினில் விளங்க, புடையினிற் கவுத்துவம் துலங்க, அனந்தனார் விமான நாப்பண், காயாம்பூவைப் போன்றும், மரகத மலையைப் போன்றும் வடிவொடு யோக நித்திரை கொள்ளும் புயல்வண்ணா! என்றடி பணிந்து, (471)

பாற்கடல் கடைந்த ஞான்று அசுரரைப் படுத்தி, அமரர்தமக் கமுதீந்தவா! உபேந்திரமாநிநியாகி, அசுரரை வேரறுத்தவா! நாரசிங்கத் திருவுருவாய்ப் பொன்னவன்தனைப் பிளந்து, வராகமாய்ப் பூமி வவ்விய இரணியாக்கதனைக் கடிந்து அவன் உடலைப்பிளந்து, தராதலமதனைக் கோட்டிற்றந்தவா! மடுவிற் பாய்ந்திடு கராவினால் பயந்த கராசலமானது ஆதிமூலமே என நினைந்திட, வடவை யாழியைவிட்டு யிடங்கரைப் பிளந்தவா! மாவலி தன்பால் இரவலர் போலவே சார்ந்து, பதத்தினால் இறுத்த நின்மலனே! என்றெல்லாம் போற்றி வணங்கிய இந்திரனுக்குத் தனது உயர்ந்த உருவத்தைக் (விசுவரூபத்தை) காட்டுகிறான் அரங்கநாயகன். (472-75)

## விசுவரூபம்

சராசர மனைத்தும் (விசுவரூபத்தின்) நிழலாய்த் தோன்ற, அமரர்கள் யாவரும் வலக்கரமாக, அசுரேசர் இடக்கை உருவமாய், தாணுவும் பிரமனும் விலாக்களாக, அண்டகோளகை முடியாக, பாதலம் பாதமதாக, இயக்கர், விஞ்சையர், திக்கினின் மேலோர், கருடகந்திருவர், கின்னரர், கிம்புருடர், நவந்தருசித்தர், சாரணத்தலைவர், பூதர், நூலோர் ஆகியோர் ஞானவிந்திரியம், கரும விந்திரியங்களாய்ப் பொலிய, ஆண்டு, அயநம், இருது, மாமதி; திதி, வார, கரண, யோக, நட்சத்திரங்களாகிய பஞ்சாங்கங்கள் ஆகிய காலத் தத்துவங்கள் ஒரு கரத்தில் பிரகாசிக்க, முனிவர்பேதம் உரத்தினில் திகழ ஞானம் முகத்தினில் விளங்க மாயவனுடைய வடிவமானது தோன்றுகிறது. (477-79)

மறைகள், வேதாந்த வருக்கம், பாஞ்சராத்திரம், வைகாசன விதி, தருமசாஸ்திரம், புராணம், புராணத்தின் முடிவு, மிருதி, சங்கிதை, ஆறங்கம், இசைநூல், தருமநூல் முதலியன அத்திருமேனியில் ஒளிவிட, இருள்வடிவமானது நீங்க, மருள்வடிவம் அகன்று பிரணவ வடிவமாய்க் காட்சியளிக்கிறான் அரங்கநாயகன். (480-81)

## அரங்கநாயகனை எழுந்தருளச் செய்தல்

தங்களை வதைத்துத் துன்புறுத்திவந்த காலநேமியின் வரபலத்தை யொடுக்கி, அவனை அழித்துத் தன்னை மீண்டும் அரசுரிமை பெறச்செய்து வாழ்வளித்த அரங்கநாயகரின் திருவடிகளை வணங்கிய இந்திரன், அரங்கநாயகனை நோக்கி ஐயனே! தங்களுடைய,

"அகன்றபெரும் புகழினையா ரறிவார் இந்த
ஓதவரி தாகியமா தலத்தி னென்றும்
உம்பர்புகழ் விளங்கிடவென் னாளு மெந்தன்
தீதகலப் பொன்னினடி சாற்ற வென்று
தேவாதி தேவனடி பணிந்து நின்றான்" (674)

இந்திரன் வேண்டியவாறே,

"வெற்றிபுகழ் அரனயன்மா தவர்விண் ணோர்கள்
விரும்பிமல ரடிபணிந்து" துதித்து வேண்டி நின்றார்கள். அவர்கள் விருப்பத்தின்படியே அருள்செய்த அரங்க நாயகர்,

"சித்திரைவிண் மீன்மிதுனத் திங்க ளான
சிறந்தசுப தினத்தினெழுந் தருளி.-

முளரிச்செந் திருவினொடு முகூர்த்தங் கொண்டார். (675)

கோலவரையில் இலக்குமியாருடன் கோயில் கொண்டருளிய அரங்கநாயகர், இந்திரதீர்த்தம், அங்கி தீர்த்தம் முதலான தீர்த்தக் கரைகளிலே சிறப்புற அமைக்கப்பட்ட நீராழி மண்டபங்களிலே எழுந்தருளி திருவாராதனம் முதலான வழிபாடுகளை ஏற்றருளினார்.

## இலக்குமி தீர்த்தம்

சிங்கபுரத்தின் புண்ணிய பலன்களுள் ஒன்றாக இடம்பெறுவது கோலவரையின் மீதுள்ள இலக்குமி தீர்த்தமாகும்.

"மன்னவாகள் விரும்பியிடும் தனுர்மா தத்தின்
வளரேகா தேசியினில் வண்மை யான
நன்னயஞ்சேர் இலக்குமியார் தீர்த்த மாடி" (671)

அரங்கநாயகரின் திருவடிகளில் துளபம் முதலான மலர்களால் அருச்சித்துத் திருவடித் தீர்த்ததைக் கொள்ளுபவர்கள் தங்கள் சந்ததிகளோடு எல்லாப் பாவங்களும் நீங்கப்பெற்று இன்புறுவார்கள்.

## அரங்கனின் திருவுருவங்கள்

அரங்கநாயகன் பள்ளிகொண்ட கோலத்தில் எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலை யுடைய பெருமை பெற்றது கோலமலை. அக்கோலமலை என்றும் ஆடவரும் மகளிரும் நிறைந்து காட்சியளிக்கும் சிறப்புடையது. அது அரங்கனின் அருள் வேண்டி, வழிபாடு செய்து இன்பமடையும் திருக்கூட்டத்தின் காட்சியாகும்.

இறையன்பர்களாகிய அவர்கள் அரங்க நாயகனை வரதராசப் பெருமாளாகவும் வெங்கிடாசலபதியாகவும் வைகுந்த நாதனாகவும் பார்த்தசாரதியாகவும் தாங்கள் விரும்பியவாறு போற்றிப் புகழ்ந்து வழிபடுகிறார்கள். அவர்கள்தம் உள்ளத்திற்கேற்பக் காட்சிதர விரும்பிய அரங்கநாயகன், அவர்கள் துதிக்கும் வெவ்வேறு திருநாமங்களைப் பெற்றவனாய்க் கோலவரையில் கோயில் கொண்டு காட்சியளிக்கிறான்.

## தென்பால் வரதராசன்

ஆதிகாலத்தில் **சத்திய விரதம்** என்னும் சிறப்பினைப் பெற்றிருந்தது காஞ்சிமாநகரம். அங்கு, வரதராசப்பெருமாள்மீது என்றும் மாறாத அன்பு பூண்டு ஒழுகிவந்த **சுமதி** என்பவன் வசித்துவந்தான். ஒருநாள் எதிர்பாராத விதமாய் ஒரு பசுவைக் கொன்ற பாவத்திற்கு உள்ளாகி விட்டான் சுமதி. பலவாறு வருந்திய அவன் கோ அத்தி நீங்கவேண்டிக் கோலவரையை யடைந்து. தவம் மேற்கொண்டான். அவன் நீண்டகாலமாய்ப் பக்தியுடன் துதித்துவந்த **வரதராசப்பெருமாள்** அவனுக்குக் காட்சி தருகிறார்; கோ அத்தியை நீக்கியருள்புரிகிறார். அன்று முதல் அரங்க நாயகரின் வலப்பக்கமாகிய தென்திசையில் வரதராசருக்கு ஆலயம் தோற்றுவிக்கப்படுகிறது. அவர் காட்சி தந்தருளிய நாளாகிய தைமாதத்துப் பூசநாளில் ஆண்டுதோறும் அவருக்குத் திருவிழா எடுக்கப்படுகிறது.

## வடபால் வெங்கிடாசலபதி

தொண்டைநாட்டு மனுகுலத்து மன்னர்களுள் ஒருவன் **திருதாயு** என்பவன் அவன் திருவேங்கடத்து எம்பெருமானை என்றும் மறவாத உள்ளமுடையவன்; தனது அரசினைத் தன் மகனிடம் ஒப்படைத்துக் கோலவரையில் தங்கி இறைவனைத் தொழுது வந்தான். திருதாயுவின் நின்மலமான மனத்தை உணர்ந்த திருவேங்கடத் தெமபெருமான் கருடவாகனாரூடராய்க் கோலவரையில் எழுந்தருளினார். திருதாயுவுக்குக் காட்சிகொடுத்து அருள்புரிந்தார் அவருக்கு அரங்கநாயகன் திருக்கோயிலின் வடபுறத்தே ஆலயம் எடுக்கப்பட்டது. வெங்கிடாசலபதி கோலவரையில் எழுந்தருளிய மாசிமாதம், உத்திராட நட்சத்திரத்தில் அவர் திருக்கோயிலில் ஆண்டுதோறும் விழா நடத்தப்பட்டு வருகிறது.

## வைகுந்தநாதன்

கோலவரையின் இலக்குமி தீர்த்தத்துக்கு எதிரில் இருந்து தவஞ்செய்து வந்தான் குபேரன். அவன் உள்ளத்திலிருந்த வருத்தத்தைப் போக்க நினைக்கிறான் வைகுந்தநாதன். கோலவரையில் குபேரன்முன் தோன்றுகிறார். கந்தமாதனத்தில் தங்குமாறு குபேரனுக்கு அருள்புரிகிறார். வைகுந்தநாதன் காட்சிதந்த இடமாகிய இலக்குமி தீர்த்தத்தின் எதிரில் அவனுக்குக் கோயில் எடுக்கப்படுகிறது. அவன் காட்சிதந்த நாளாகிய கார்த்திகை மாதம், மிருகசீரிட நட்சத்திரத்தில் சிறப்பு விழாக்கள் ஆண்டுதோறும் நடைபெற்று வருகிறது.

## கீழ்த்திசையில் பார்த்தசாரதி

யுகங்களிற் சிறந்தது துவாபரயுகம் என்பர். தருமராசன் தோன்றியதும், அவனுக்குக் கண்ணபிரான் துணையாகி அருள்புரிந்ததுமாகிய சிறப்பினைப் பெற்றது அந்த யுகம் இராசசூய யாகம் செய்தற்குரிய பொருளீட்டும் பொருட்டு தருமனின் தம்பியர் நால்வரும் நாற்றிசை நோக்கி அனுப்பப்படுகின்றனர். தென்திசைப் பொறுப்பேற்றுப் புறப்படுகிறான்

சகாதேவன் காஞ்சிமா நகரைக் கடந்து செஞ்சியை அடைகிறான். செஞ்சி மன்னனிடம் திறைபெற்ற சகாதேவன் கோலமலையை அடைந்து அரங்கநாயகனை வணங்குகிறான். கண்ணபிரானை நினைந்து, இலங்கை மாநகர் சென்று திறைபெற அருள்புரியுமாறு வேண்டுகிறான். சகாதேவனின் விருப்பத்தை நிறைவுசெய்ய விரும்பிய கண்ணபிரான் **பார்த்தசாரதியாய்க்** கோலமலையில், மாசிமாத அசுவனி நட்சத்திரத்தில் எழுந்தருளி, கடோத்கசன் மூலமாக இலங்கையில் பொருள் திரட்டிவரும் செயலையும் முடித்து வைக்கிறார்.

பார்த்தசாரதிப் பெருமானுக்குக் கோயிலெடுத்து மாசி, அசுவனியில் விழா நடத்தப்பெற்று வருகிறது.

வைணவ அன்பர்கள் தாங்கள் வழிபட்டுவரும் இறைவனை, அவரவர் வழிபடும் இறைவன் பெயரால் வணங்கி இன்பமடைவதற்குரிய முறையில் அமைக்கப்பட்ட கோலவரைத் திருவரங்கன் திருக்கோயில், அரங்கனின் திருவுருவங்கள் பலவற்றைப் பெற்று மக்களை மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்திவருகிறது

இச்செய்திகளை முறையே 41,42,43,44 எண்ணிட்ட அத்தியாயங்களில் விரிவாகக் காணலாம்.

## பொன்மலையனூர்

"கொண்டல்தவழ் கயிலையில்வாழ் பரமன் முன்னங்

கொடும்பிரம கபாலமதைக் கரத்தி லேந்தி" (105)

பலதிருத்தலங்களுக்கும் சென்றார். எங்கும் அக்கபாலம் கையைவிட்டு விலகிற்றில்லை. இறுதியாக கோலவரைக்கு வந்து, இலக்குமி தீர்த்தத்தில் முழுகியபோது அக் கபாலம் விலகியது உடனே,

"அன்றயனார் கபாலமதங் ககில லோகம்

தீர்ந்திடவு மார்ப்பரித்தங் ககன்ற வாயால்

இன்றுலகை உண்டிடுவோம் என்று சீற" (106)

அரஙகநாயகர் அந்தக் கபாலத்தை ஆதரித்துச் சாந்தப்படுத்தி, எக்காலத்தும் குறைவில்லாது விளங்குகின்ற பொன்மலையனூர் என்னுந் தலத்தில் எழுந்தருளி மக்களெல்லாம் பூசிககத்தக்கச் சிறப்போடு வீற்றிருப்பாயாக என்றருளினார். அதன்படியே, அரங்கநாயகரின் சந்நிதானத்திலே எழுந்தருளியிருக்கின்ற துர்க்கையானவள் தனது பதினாறு கலைகளிலே ஒரு கலையினாலே வடிவெடுத்துப், பிரமகபாலத்தைக் கையிலேந்தியவளாய்ப் பொன்மலையூரில் எழுந்தருளினாள். கயிலாயபதியானவர் தாண்டவேசுவரன் என்னும் பெயரோடு அத்திருத்தலத்திலே எழுந்தருளினார் அத்திருத்தலமே இன்று **மேல்மலையனூர்** என்னும் பெயரால் செஞ்சியையடுத்த பதினைந்து கி.மீ.தூரத்தில் மக்கள் போற்றும்

திருத்தலமாக விளங்கி வருகிறது. அங்கு எழுந்தருளியுள்ள அம்மன் இன்று அங்காளம்மன் என்னும் பெயரால் தரிசிக்கப்பெறுகிறாள்.

## பாவச்செயல்கள்

பெற்று வளர்த்த தாய், துணைநின்று உருவாக்கிய தந்தை, உள்ளத்தைத் தூய்மையாக்கிய குரு, பேறளிக்கும் இறை யாகியவர்களைப் பழித்துப் பேசியவர்கள்; தவத்தினை இகழ்ந்தவர்கள்; அந்தணரையும், பசு, கரு ஆகியவற்றையும் அழித்தவர்கள்; பழிச்சொல்லுக்குரிய பாவச் செயல்களைச் செய்தவர்கள்; காலை, மாலை நேரங்களில் செய்யும் நியம, நிட்டைகளைக் கைவிட்டவர்கள்; உண்மையிலிருந்து மாறுபட்டுப் பொய்ம்மொழியைப் பேசுபவர்கள் ஆகியவர் பாவச் செயல்களைச் செய்த பாவியர்களாவர் (103, 325) இத்தகு பாவியருக்கு இவ்வுலகத்தில் வாழ்க்கை என்பதே சிறக்காது. ஆனால் இத்தகு பாவியர்கள், இந்தக் கோலவரையை யடைந்து, வராகத் திருத்தலம் என்று சிறப்பிக்கப்பெறும் சிங்கபுரத்திலே தங்கி வாழ்ந்து, வராக நதியிலே மூழ்கித் திருவரங்கன் திருவடிகளை முக்காலமும் தொழுது வருவார்களாயின் அவர்களைச் சார்ந்த பாவங்களெல்லாம் நீங்கிப் புனிதமடைவார்கள். இவ்வாறு சிறப்பித்துக்கூறும் ஆசிரியரின் கூற்று, பாவங்களைப் போக்கிக் கொள்ளும் வழி இருக்கிறது என்பதை உணர்த்துவதனால், மேலும் பாவச்செயல்களைச் செய்யத் தூண்டுவதாக அமைந்துவிடாதா என்னும் வினாவை எழுப்பிவிடுகிறது ஆனால் இவ்வுலக வாழ்க்கை சிறக்க இத்தகு பாவச் செயல்களை விட்டுப் பழியும் பாவமும் இல்லாமல் வாழவேண்டும் என்று அறிவுறுத்தும் நோக்கமுடையதே இக்கூற்று.

## தேவேந்திர வாழ்வு

"கின்னரர்கிம் புருடர்விஞ்சை கருடகாந்
தருவர்சித்த குழாங்கள் சூழ . . .
தன்னிகரி லிந்திராணி தரளகுறு
நகைவிழியின் சாயல் காட்ட" (152)

தேவசபையிலே அரசு வீற்றிருப்பவன் இந்திரன். தேவகன்னியரின் இசையும் நடனமும் ஒருபுறம்; தேவர், முனிவர்களின் வாழ்த்தொலி மற்றொருபுறம் ஆடம்பர வாழ்வு. இன்ப வாழ்க்கையில் மிதக்கும் செல்வந்தர்களின் வாழ்க்கையைப்படம் பிடித்துக் காட்டுவது இப்பகுதி.

எல்லாம் நிறைந்த இந்திரனோ இறையன்பு பூண்டவன்; இறைவனைத்தொழுவதில் தவறாத கடமையுணர்வு உடையவன். இறைவனைத் தொழுவதற்குரிய புண்ணிய காலமாகிய மாலைநேரம் (பிரதோஷகாலம்) வந்தது; இந்திராணியுடன் கயிலைமலையை நோக்கிப் புறப்படுகிறான். (154)

இறைவழிபாடு என்பது தவறாது மேற்கொள்ள வேண்டிய கடமைகளுள் ஒன்று. அது அனைவர் வாழ்க்கைக்கும் உரிய ஒன்று; எல்லாம் நிறைந்த இன்பவாழ்வினரும் நன்றி மறவாமையால் மேற்கொள்ள வேண்டிய ஒன்று என்பதை உணர்ந்தவர்கள் புராண நூலாசிரியர்கள் தங்கள் படைப்பில் படைப்பு உறுப்பினர் மேற்கொள்ளுவதாகக் காட்டுமாற்றால் தாங்களே வழிபட்டு மகிழ்கிறார்கள். புராணத்தைக் கற்போரும் அவ்வழிபாட்டில் ஊறித்திளைக்குமாறு புகட்டிவிடுகிறார்கள் இத்தகு நோக்கமுடையதே காலந்தவறாது வழிபாட்டை மேற்கொள்ளும் இந்திரனின் பண்பை இங்குச் சுட்டிய செய்தி.

இந்திரன கயிலை நோக்கி வரும்வழியில் வேடன் ஒருவன் வேடுவர் கூட்டத்தோடு எதிரில் வருகிறான் தன்னைக் கண்டு மரியாதையாக ஒதுங்கிச் செல்லவில்லை என்று சினங்கொண்ட இந்திரன்,

"பாதிமதி கங்கையணி பரமனையாம
பணியவரும் பாதை தன்னில்
ஏதுமிலாக் கிராதகநீ எதிராக
வருவதென்இக் கணத்தி னும்மைக்" (157)

கண்டித்துவிடுவேன்; அதற்குமுன் ஓடிவிடு என்று வெகுண்டு கூற, அதைக் கேட்ட வேடுவன் இந்திரனின் முடியும், தலையும் உடையுமாறு ஓங்கி அடித்துவிடுகிறான் இந்திரன் மூர்ச்சித்து விழுகிறான் அடித்தவன் நானே என்று சிவபெருமான் ஆறுதல் கூறி மூர்ச்சை தெளிவிக்கிறார் இருந்தும் பலர் முன்னிலையில் என்னை அவமானப்படுத்திய உன்னை என் வச்சிராயுதத்தால் தாக்கியே தீருவேன் என்று சீறுகிறான் இந்திரன் மேலும் சாந்தப்படுத்தி அனுப்பி வைக்கிறார் சிவபெருமான.

## காலநேமி

தன்மீது சீறிய இந்திரனின் வார்த்தைகளால் புழுங்கிய சிவபெருமானின் உடலில் பெருகிய வியர்வையானது பூமியில் விழ, அதிலிருந்து கொடூரமான அசுரன் ஒருவன் தோன்றுகிறான. காலநேமி என்று பெயரிடப் பெற்ற அவன் இறைவனின் கட்டளைப்படி, பிரமனை நோக்கிக் கடுந்தவம் செய்து இறவாவரம் பெறுகிறான். இந்திரனை வென்று தேவருலகை ஆட்சி செய்கிறான்.

காலநேமியால் துரத்தப்பட்ட இந்திரன் நாரதரைச் சந்திக்கிறான். செய்தியறிந்து,

"ஆழிகடைந் தமுமெடுத்த அன்றுபிறந்
துனக்குச்செல்வ மளிக்குந் தாயை
ஊழிபல வாயினுந்தான் மறப்பர்களோ
செய்ந்நன்றிக் குதவி யுண்டோ"

என்று கூறுகிறார் நாரதர். அதாவது செல்வச் செருக்கால் அச்செல்வத்தையளித்த தாயையே மறந்தாய்; செய்ந்நன்றி கொன்றதன் பயனை அனுபவிக்கிறாய் என்று கூறி ஆற்றுகிறார். எத்தகு பெருஞ் செல்வமுடையவனாயினும், படைகளும் பரிவாரங்களுஞ் சூழ வாழ்பவனாயினும், தன்னை அந்த நிலைக்கு உயர்த்திப் பெருமைபடுத்தியவர்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல், அவர்களையே எதிர்த்துப் போராடவிரும்புவது, அவர்கள் செய்த நன்றியை மறந்து வாழ்வது ஆகிய தகாத செயல்களால் இந்திரனுக்கு ஏற்பட்டதே இந்த நிலை என்பதை உணரச்செய்கிறார் நாரதர். நாரதரின் இந்தக் கூற்றின் வழி செய்ந்நன்றி கொன்ற மகற்கு என்றுமே உய்வில்லை என்பதை உலகுக்கு உணர்த்துகிறது புராணம்.

## அறிவு

மனிதனின் மன உணர்வுகளே செயலைச் செய்யத் தூண்டுவன. அன்பு உள்ளம் - இரக்க உள்ளம் பிச்சையிடத் தூண்டுகிறது; பலனை எதிர்பார்ப்பதில்லை; அதோடு மறந்துவிடுகிறது. இந்த மனித உணர்வே கர்மயோகத்தின் அடித்தளமாகிறது. இது யாரிடமிருந்தும் பெறப்பட்டதன்று இயற்கையாக அமைந்தது. இந்தச் செயலாற்றல் திறன் எல்லாரிடத்திலும் ஒரேநிலையில் அமைவதில்லை. சாத்விகம், இராஜசம், தாமசம் என்னும் மூன்று தன்மைகளில் அமைகிறது.

ஈடுபடவேண்டிய செயல் எது? கூடாதது எது? செய்யத்தகுதி வாய்ந்தது எது? தகாதது எது? அஞ்சவேண்டுவது எது? வேண்டாதது எது? என்பனவற்றைப் பகுத்தறிவதே **சாத்விக அறிவு** ஆகும். நல்லது கெட்டதை நிர்ணயிக்கும் சக்தி இல்லாதது **இராஜச அறிவு** எனப்படும் செய்யத தகாததை மட்டுமே தகுதிவாய்ந்ததாகத் தேர்ந்தெடுப்பது அதாவது முற்றிலும் விபரீதமாகவே முடிவெடுப்பது **தாமச அறிவு** எனப்படுகிறது. இப்பண்புடையவர்களின் செயல்திறன்களையும் அவற்றின் முடிவுகளையும் எடுத்துககாட்டும் வரலாறுகளைப் படைத்துக் காட்டுவதே புராணச் செய்தி.

காலநேமி வீற்றிருந்த இந்திரசபைக்கு வருகிறார் நாரதர். 'தவமகிமையால் இந்திரபதவியை மட்டுமே பெற்றாய்! அகத்தியர் முதலான முனிவர்கள் சுமந்து வரும **சிவிகைச் செல்வத்**தைப் பெற்றாயில்லை: **இந்திராணி**யை அடைந்து சுகம் பெறவுமில்லை. உன்னுடைய ஆசாரியராகிய **சுக்கிராச்சாரியும்** உனக்கு இதை எடுததுக்கூறவில்லை. இனியேனும் இவற்றைப் பெற முயற்சிசெய்க' என்று தூண்டிவிடுகிறார் நாரதர்

சிவிகைச் செல்வத்தையும் இந்திராணி போகத்தையும் பெறாமலிருப்பது இந்த இந்திர பதவிக்கே இழுக்கு என்ற தகாத செயலையே விரும்புகிறான் காலநேமி உடனே

"கமலமலர்க் கடவு ளீந்த
வினமதனை யான்காணின் வஞ்சனையாம்" (498)

"குருவைநோக் கிடினவரோ அறமிகவுங்
கொடியர் . . . . . " (499)

என்ற முடிவுக்கு வருகிறான். அதாவது பிரமதேவன் எனக்குக் கொடுத்த வரத்தில் என்னை மோசம் செய்துவிட்டார்; ஆசாரியராகிய சுக்கிராச்சாரியரோ என்மீது அன்பில்லாது, அடுத்துப் பகைசெய்கின்ற கொடியவ ராகிவிட்டார் என்று முடிவு செய்கிறான்.

நாரதர் கூறியபடி அச்செல்வங்களைப் பெற்றேயாக வேண்டும் என முடிவெடுத்து விடுகிறான் சிங்கபுரத்தில் ஒளிந்திருக்கும் இந்திரனையும், அவன் மகன் சயந்தனையும், அவர்களுக்குத் துணையாக அருள்புரியும் அரங்கநாதனையும் கொன்று குவித்து அந்த இரு இன்பங்களையும் அடைந்தேயாக வேண்டும் எனப் போர்தொடுக்கிறான். போரில் துணையாக வந்த படைகளைப் பலியாக்கிவிட்டுத் தானும் மடிகிறான்

**தாமச புத்தியைப்** பெற்றவனாகிய காலநேமியின் வரலாற்றையும் அவனது அழிவாகிய முடிவையும் எடுத்துக்காட்டுவதற்காகவே இச்செய்தி புராணத்தில் இடம்பெற்றுள்ளது. கேட்போருங கற்போரும் திருந்தி வாழ வழிவகுத்துக் காட்டுவது இப்பகுதி.

**கயன்**

சிவபெருமானிடம் பெற்ற வரத்தால், கயன் என்பவன் விந்தியமலைபோல வளர்ந்து உயிர்களையெல்லாம் தேவர்வடிவாக்கிப் பொன்னுலகையடையச் செய்துவிடுகிறான். தேவாகள முறையிடச் சிவபெருமான் அவனது தகாத செயலைக்கண்டு அவனைப் பாதாளத்தில் அமுந்துமாறு செய்துவிடுகிறார்.

தனக்கு வருத்தம் நேர்ந்ததை எண்ணிச் சிந்திக்கிறான் கயன். வரம் கொடுத்த சிவபெருமானே வஞ்சித்து விட்டான் எனச்சினந்து நாராயணனைத் துதித்து மீண்டும் வளர்கிறான்.

தன்னைச சிறந்து ஓங்கச் செய்தவர் சிவபெருமான்; அவரே தனக்கு இழிவை உணடாக்கியது எதனால்? அவர் அளித்த வரத்தால் உலகில் சிறந்து வாழாமல் தேவர் முதலானவர்களை அழிக்கத் துணிந்தோம்; நாம் ஈடுபட்ட, தகாத செயலால் நம்மைக்கண்டித்தார்; அவரிடமே மன்னிப்பு கோருவோம் என்று சிந்தித்தானில்லை கயன். மாறாக மற்றொருவரிடம் பணிகிறான் அவர் உதவியை நாடுகிறான். தாம் பெற்ற அறிவு, ஆற்றல்களுக்கு உரியவரைப் பகைக்கும் நன்றி கொன்ற பண்புக்கு கயன் ஒரு எடுத்துக்காட்டாய்ப் புராணத்துள் இடம்பெறுகிறான்.

**சோமுகன் அரசியல்**

பூவுலகில் வாழ்வோர் தேவரையுங் கலங்கச்செய்ய முடியும் என்பதற்குச் சோமுகன் வரலாற்றை எடுத்துக்காட்டுகிறது புராணம். அதே சமயம்,

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே . . . ."

என்ற கருத்துக் கேற்ப, அரசறிய வீற்றிருந்த வாழ்வு மட்டுமன்று; அரச வாழ்வே அழியும் என்பதற்கும் இதே வரலாறு துணைபுரிகிறது.

மகத நாட்டு மன்னன் நீலன் என்பவனின் மகனாய்ப் பிறந்து ஆண்டு வருகிறான் சோமுகன். தவத்தால் சிறந்த வலிமையும் பெறுகிறான். ஐம்பத்தாறு தேசத்து மன்னர்களும் கலங்கி நடுங்குமாறு அவனுடைய ஆட்சி அமைகிறது. மேலும் ஆசைப்படுகிறான். தன் வலிமையால் தேவர்களையும் கலங்கச் செய்ய வேண்டும் என்பதே அவன் ஆசை நேரே தேவர்களோடு மோத முடியாது என்பதுந் தெரியும். அதனால் ஒரு சூழ்ச்சியை மேற்கொள்ளுகிறான்.

அந்தணர், முனிவர் முதலானோர் செய்யும் செப தபங்களை நிறுத்தச் செய்கிறான்; வேள்விகளையும் அழிக்கிறான் அதனால் அவிர்ப்பாகங்களைப் பெற இயலாத தேவர்கள் வலிமை இழக்கிறார்கள். அந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்ட அசுரர்கள் தேவர்களைக் கொடுமைப்படுத்தித் துன்புறுத்துகிறார்கள்.

தேவர்கள் அரங்கனிடம் முறையிடுகிறார்கள். அவர் வராக வடிவில் புறப்படுகிறார். சோமுகனோ தேவியருடன் புனல்விளையாடலும் உண்டாட்டும், தேனுண்டு மயங்கலுமாகிய களியாட்டங்களில் மூழ்கிக் கிடக்கிறான் மகத நாட்டில் தோன்றிய வராகமூர்த்தியானவர் நாட்டின் மதிலையெல்லாம் உதைத்து உடைத்தார்; சோலையிற் புகுந்து மரங்களையெல்லாம் அழித்தார். இதையறிந்த சோமுகன் வராகமூர்த்தியை எதிர்க்கிறான். இறுதியில் போரிட இயலாதவனாய் வீழ்ந்து படுகிறான்.

தன்னால் இயலாத செயல்களைச் சூழ்ச்சியால் முடிக்கத் துணிவது அரசியலுக்கே உரிய செயல்; சூழ்ச்சியும் அதனால் பெறுகின்ற இன்ப வகைகளும் நெடிது நிலைக்காது என்னும் உண்மைகளைப் புகட்டும் நோக்கமுடையது சோமுகனது திறங்கூறும் இப்புராணப்பகுதி.

இத்தகு படலங்கள் பல புராணத்துள் இடம் பெறுகின்றன. இவையனைத்தும் அரசியலை அறிவுறுத்துவன. இப்புராண அமைப்புகளை வெறுத்து ஒதுக்குபவர்கள் '**அரசியலே நாட்டைக்காக்கும் ஒருசக்தி**' என்று தவறாக நினைத்து விடுகிறார்கள். அரசியல் என்பது காலததிற்கேற்ப மாறும்; வளரும்; தளரும்; அழியும்; மீண்டுந் துளிர்க்கும் என்னும் உண்மைகளை உலகுக்கு உணர்த்தவே இப்படலங்கள் புராணத்துள் இடம்பெறுகின்றன.

**சம்பரன்**

கோலவரையில் நீண்டகாலமாகத் தவஞ்செய்து வந்தவன் சம்பராசுரன். தவத்தின் பயனாய் அரங்கநாயகர் அவன்முன் தோன்றினார். அப்போது,

"வந்தபுகழ் சம்பரன் மகிழ்ந்துதிரு மாலடி
வணங்கித்திசை யெட்டும் அடியேன்
இந்தபடி யென்றறிகி லேன்றுமது சிந்தைதனில்
எண்ணிவரம் ஈக வெனவே" (316)

வேண்டுகிறான் 'ஐயனே! தங்கள் திருவருளால் படைத்துள்ள உலகங்களின் எல்லாப் பகுதிகளையும் கண்டு மகிழ அருள்புரியுங்கள்' என்பதே அவன் வேண்டுகோள். அப்படியே அருள்புரிகிறார் அரங்கநாயகர்.

அரங்கனால் அளிக்கப்பெற்ற அழகிய விமானத்தின் மூலம் அனைத்துலகங்களுக்கும் செல்லுகிறான் இந்திரன் முதலான தேவர்கள் மகிழ்ச்சியோடு வரவேற்கிறார்கள்; சிறப்பு செய்து மகிழச் செய்கிறார்கள்.

தென்திசையாகிய தருமராசன் நகரை அடைகிறான் சம்பரன். அக்கினியாறும், ஈயமழையும் உதிரவெள்ளமும் நிறைந்த வழிகள், நாயும் நரியும் உடலங்களைக் கடித்து இழுக்கவுமான பலவகைக் கொடுமைகள் - நரக வேதனைகள் ஆகியவற்றைக் காணுகின்றான். தான் பெற்ற லட்சுமி தீர்த்தத்தின் பலனை அவர்களுக்களித்து அவர்கள் துயரை நீக்கி மகிழ்கிறான் (320-329).

புராணத்தில் காட்டப்பெறும் சம்பராசுரனாகிய இவனும் அசுர குலத்தைச் சார்ந்தவன்தான். சோமுகனின் சகோதரன். ஆனால் சோமுகன், சிங்கவர்த்தனன், கயன், காலநேமி ஆகிய அசுரர்களைப்போல வரங்கேட்டுப் பிறரை அடக்கி ஒடுக்க நினைக்கவில்லை எல்லா உலகததவரும் போற்றி வரவேற்குமாறு வரம்பெற்றுச் சிறப்படைகிறான்

உதவி செய்தவர்களுக்கே கேடுநினைக்கும் இந்த உலக இயல்புக்கு ஏற்பப் பல அசுரர்களின் கதைகள் நூலுள் கூறப்பட்டன. ஆனால் இதே உலகத்தில் உலகியல் வாழ்கையை நடத்திக்கொண்டே தமக்குரிய செயல்களைச் சரியான முறையில் எப்படிச் செய்யவேண்டும் என்ற ஞானத்தை ஈட்டுவதிலும், செயலைச் செய்வதிலும் ஆர்வமுடையவர்கள் இல்லாமலில்லை என்பதை உணர்த்துவதே புராணத்தின் நோக்கம். அசுரர்களினிடையிலும் இத்தகு நல்லவர்கள் இருக்கிறார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாயமைகிறது சம்பரனின் வரலாறு.

### போர்ச்செய்திகள்

மக்கள் ஒழுக்கங்களை நெறிப்படுத்தி நிலைநிறுததுவதற்கு இன்றியமையாத ஒரு கருவியே போர்' எனப்பெறுகிறது. கி.மு.1496 முதல் கி.பி.1861 வரையிலான 3357 ஆண்டுகளுக்குரிய போரியல் வரலாறு ஒன்று கணக்கெடுக்கப்பட்டது. அதில் 3130

ஆண்டுகள் உலகில் எங்கோ ஓரிடத்தில் போர் நடந்துகொண்டேயிருந்தது என்பது வெளியாயிற்று. அதன்படி மனிதன் ஒரு ஆண்டு அமைதியான வாழ்க்கை/நடத்தி மகிழ்ச்சியடைய 14 ஆண்டுகள் போரில் ஈடுபட வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகியிருந்தான் என்பது தெளிவாகிறது[1].

"ஒருவனை ஒருவன் அடுதலுந் தொலைதலும்
புதுவது அன்றுஇவ் வுலகத்து இயற்கை" (புறம்.76)

என்பது, இவ்வுலகத்துள் போர் என்பது புதியதன்று; ஒருவரையொருவர் தாக்குவதும், அதனால் அன்பும் அமைதியும், அரணும் ஆக்கமும், உடமையும் உயிரும் இருதரப்பிலும் ஒருங்கே தொலைதலும் புதியதன்று; இவ்வுலகத்து இயற்கை என்பதைப் புலப்படுத்துவது.

அஃறிணை உயிர்கள் தொடங்கி அனைத்து உயிர்களுக்கும் வாரிவழங்கும் பண்பையுடைய வள்ளல் பெருமக்களும் இப்போர்த்தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். மக்களைக் காத்தலையே கடமையாகக் கொண்டு பொறுப்பேற்ற மாமன்னர்களுள், போரில் ஈடுபடாது நாடாண்டு மக்களை மகிழ்த்தவன் என்று சுட்டிக்காட்டுவதற்குரியதாக ஒரு மன்னவன் பெயரும் இதுவரை கிடைத்ததில்லை. இவ்வளவு ஏன்? இவ்வாறு எடுத்துக்காட்டுவதற்குக் கடவுள் பெயர்களுள்தான் ஒன்று உண்டா?

"அடுபோ ரானா வாத **னோரி**" (புறம். 153-4)

"நற்போர்க் **குமண!**" (புறம். 164-8)

"அடுபோர் **பேக!**" (புறம். 146-2)

"காரி யூர்ந்து பேரமர் கடந்த
மாரி யீகை மறப்போர் **மலையனும்**" (புறம். 158-7-8)

என்பன முறையே ஓரி, குமணன், பேகன், மலையமான் ஆகிய வள்ளல் பெருமக்களைச் சுட்டுவன. குறுநில மன்னர்களாகவும் விளங்கிய இவ்வள்ளல்கள் போரால் சிறப்பு பெற்றுள்ளார்கள்.

"அண்ணல் யானை அடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர் கடந்து வலந்தரீஇ" (பதிற்றுப். 42.8-9)

"காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே!" (புறம். 41.3-5)

---

1. போரியல் அன்றும் இன்றும பக். XIV, எ.கா.

"மறப்போர் பாண்டியர் அறத்திற் காக்கும்
கொற்கையம் பெருந்துறை" (அகம். 27, 8-9).

என்பன சேரரும் சோழரும் பாண்டியரு மாகிய முப்பெருந் தமிழ் வேந்தர்களும் போர்த்தொழிலில் தங்கள் வாழ்க்கையைச் செலவழித்திருக்கிறார்கள் என்பதை உணர்த்துவன.

". . . . திரிபுரந் தீமடுத்து
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய்!" (கலித். 2,4-5)

"செருமிகு திகிரிச் செல்வ வெல்போர்
. . மார்பினோய்"! (பரி. 13, 58-60)

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சினமிகு முருகன் றண்பரங் குன்றம்" (அகம். 59, 10-11)

சிவனுந் திருமாலும் முருகனும் ஆகிய இறைவர்களுள் ஒருவரும் போர்த்தொழிலை மறந்தார்களில்லை என்பதைக் கூறுவன இவ்வடிகள்.

மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை என்பவை மன்னர் முதலான மக்களிடையே போரைத் தோற்றுவித்தன: இன்றும் தோற்றுவிக்கின்றன. இதே ஆசைகளின் காரணமாகத் தேவர்களும் அசுரர்களும் மோதிக்கொள்ளுகிறார்கள். அவர்களுள் நீதியும் நியாயமும், உண்மையும் நேர்மையும் உள்ளவர்களுக்குத் துணையாயிருந்து, தீமையை ஒழித்து நீதியை நிலைநிறுத்திக்காட்டும் நோக்கோடு இறைவர்களும் தலையிடுகிறார்கள்; போர் நிகழ்த்த வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகிறார்கள்; போரை நடத்திக் காட்டுகிறார்கள்; முடிவையும் உணர்த்துகிறார்கள. இவையே புராணங்களில் இடம்பெறும் போர் நிகழ்சசிகளுக்குக் காரணங்களாகின்றன

அக்கிரமமும் அநீதியும் நிறைந்த செயல்களில் ஈடுபடுபவர்கள், இயற்கையாகவே திறமையும் வலிமையும் உடையவர்களாக இருக்கலாம் அவர்கள் தங்களுடன் திரளான துணைவர்களையும் பிற சக்திகளையும் தேடிப்பெற்றவர்களாகவும் இருக்கலாம். ஆனால், அவர்கள் ஈடுபடும் செயல்களால் அழிவும் வருத்தமுமே மிகுதியாகும். அந்த அழிவிலிருந்து உயிர்களைக் காப்பாற்ற முயற்சிகள் பல எடுக்கப்பெறும். அம் முயற்சிகளால் உயிர்கள் பலவும் காக்கப்பெறும் இச்செயல்கள் இறைவர்களால் மேற்கொள்ளப்பெறும். இவையே புராணத்துள் இடம்பெறும் போர் நிகழ்ச்சிகளுக்குரிய காரணங்களாகும்.

தேவர்களைப் பழிதீர்க்க நினைக்கிறான் சோமுகன். அந்தணரும் இருஷிகளும் செய்து வந்த செப, தப, யக்கிய, யாகங்களை அழித்துத் தேவர்களுக்கு அவிர்ப்பாகங்கள் கிடைக்காதபடி செய்கிறான். தேவர்கள் வலியிழக்கிறார்கள். எளிமையாக அவர்களை வென்று இந்திரபதவியைப் பெறுகிறான். (பா.202)

அகத்தியர் முதலாகிய இருடியர் சுமக்கும் சிவிகையில் செல்லும் பேற்றினைப் பெ வேண்டும்; இந்திராணியை மணந்து அவளது சரச சல்லாபங்களைத் துய்க்க வேண்டு என்னும் ஆசை தூண்ட தேவர்களோடு போர்புரிகிறான் காலநேமி. இத்தகு இழிந்த பண்புடையவர்களை அழிக்கப் போர் செய்வது தவறில்லை என்று உணர்த்துவது புராணம்

தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையே நடைபெறும் இப்போர்ச் செயல்களில் நல்லனவிரும்பும் தேவர்களுக்குத் துணையாகக் கடவுளர்களும் போர் தொடுக்கிறார்கள். இப்போர் முறைகளில்,

1. படை திரட்டுதல்
2. வீரர்வகை
3. படை புறப்பாடு
4. போர்க்கருவிகள்
5. கணைகள்
6. அழிவு நிலை

என்பன பலபட உணர்த்தப்பெறுகின்றன.

## படை திரட்டுதல்

போர் தொடங்குவது என்ற முடிவு ஏற்படுகிறது.

"காருலக மேமுதல் கடந்தவுல கத்தரசர்
கண்டமிசை நின்ற வசுரர்
மேருவரை யாமென விளங்கிய ரதங்களொடு
வீரர்முத லோர்கள் வருக" (261)

என ஆணையிடுகிறான் அசுரன். உடனே உலகமெல்லாம் நடுங்கக், கடல்களேழும் அணைபுரண்டு மடை திறந்தாற்போல நான்குவகைப் படைகளும் திரண்டு விடுகின்றன. படைகள் வரும்போது,

"கொடிகள் குடைகள் கவரிகள்செங்
கோலத் தோட்டி முரசமதாம்
இடியார் வாத்திய வகையினங்கள்
ஆல வட்ட மியற்சுருட்டி" (508)

வீரச்சின்னங்கள்; புல்லாங்குழல், நாகசுரம், சங்கம், பம்பை போன்றவற்றைத் தாங்கியவர்களாய், கருவிகளை இசைத்துப்பேரொலி செய்து வந்து கூடுகிறார்கள்.

## படைவீரர்வகை

பலவகைப் போர்க் கருவிகளைத் தாங்கி வந்தவர்களுள்,

"மந்திரி மார்கள் பிரதானிச்
சேனா பதிகள் படைத்தலைவர்

கொந்தார் பட்ட வர்த்தனர்கள்
மகுட வர்த்தக் கொடியோர்கள்" (509)

வெற்றி நிறைந்த மகாரதர், வியன்ரதர், அதிரதர், அர்த்தரதர் போன்ற படைத்தலைவர்களும் போர் வீரருமாக நிறைந்து வருகிறார்கள். மேலும்,

"முகபடாங் கரட மதமிழிந் தொழுகு
கவுட்டுளை முறச்செவி முரணார் . . . (511)

யானைகள் எமனெனக் குரூரமாய் நடந்து வருகின்றன. இவ்வாறே,

"கலியுக முடிவிற் றோன்றிய கற்கி
யிஃதெனச் சாறறிய துரக பந்திகளும்,

"பாணி - யமைந்திடு மந்திரப் படையர் யமனையும் மருட்டும் நீளகுடைக் கரத்தர் ஆகிய காலாள் வெள்ளங்களும் நிறைந்து சூழ்ந்து வருகின்றன. (514, 15)

## படை புறப்பாடு

விண்ணவரும் மண்ணவரும் அஞ்ச, கண்ணிமைக்குமுன் அரண்மனைக் கடையில் மண்ணதிர வந்து நிற்கிறது தேர். அதன்மீது பகலவன் போலவந்து அமர்கிறான் அசுரன்.

"மேருவினைப் பலவரைகள் மொய்த்தவென வந்து
சூரரொடு கோடிதுணை சூழ்ந்துவரப் . . " (269)

புறப்படுகிறான். இதே போல,

" . . . . கமலக் கண்ணன்
திருமருவு மவுலிபட்டங் குண்டலங்கள்
மணிக்கவசந் திகழப் பூட்டி . .
பொருகுதிரு இரதத்தி னேறினான்" (578)
"மந்தார மலர்மாரி வானவர்கள் சிந்தினர்கள்
சிந்தாத வீரசின்ன முழக்கி னார்கள் " (579)
"வேதவே தாந்தததாற் பாடி னார்கள் " (582)

இரதமுறு மணிகளெலாங் கலகலவென் றிரங்கியிட, (583) புறப்படுகிறான்.

## போர்க் கருவிகள்

"வச்சிர முசலந் தோமர மீட்டி
வாருணம் வாயுவின் படையும்
நச்செயிற் றுரகம் காருடம் இடப
நளினத்தோன படைகளும்,

முச்சிகை வடிவேல், அந்தகன்படை, அங்கியின் படை, (524) சக்கிரம், வீரபத்திரக்கணை போன்ற போர்க்கருவிகளுடன் அசுரப்படையானது, ஆயிரங் கோடி யக்குரோணி என்னும் எண்ணிக்கையில் அமரர்தம் பதியில் எழுந்தது. மேலும் அவ் வசுரப்படையில், சூலம், வேல், தண்டம், ஆலமுறும் சக்கரம், கழுமுள்ளாயுதம், கண்டகோடரி, நாந்தகம் போன்ற படைகளைத் தாங்கிய கூட்டங்கள் நிறைந்துவந்தன. (589)

**கணைகள்**

அரங்கநாயகன்,

"கரங்களாற் சார்ங்கவில்லை வளைத்தம்பு
சரக்கூடந் தழையக் கட்டினார்". (592)

மேலும் ஞானாஸ்திரம், தண்டம், கமலாஸ்திரம், அழற்கணை, தாமரைச் சிலீமுகம், மீளாவேல் எனப் பலவகைக் கணைகளை இருதிறத்தினரும் மாறிமாறி வீசிப் போரிடுகிறார்கள்.

## அழிவுநிலை

". . . . . அசுரர் அட்டகா சஞ்செய்து
அருஞ்சிலை யத்திரம் பூட்டிக்
கடைதரு கீர சாகரம் போலக்
கலக்கினர் அமரர்தங் குழுவை" (533)

இதனால் அமரர்படையானது சிங்கம், புலியாகியவற்றால் தாக்கப்பட்ட மான் கூட்டங்களைப் போல பிணக்குன்றமாயிற்று. இது ஒருபுறம் நிகழ,

அரங்கநாயகன் போர்புரியத் தொடங்குகிறான்.

"அரங்கனால் அசுரர்கள்தந் தேரழிந்து
வில்லழிந்தங் கழிவி லாத
துரங்கமாப் பந்திகளுந் தூளதாய்த்
துகள்பட்டுத் தொலைந்த . . . .

இதே போல களிறுகளும் காலாட்படைகளும் காலிழந்து கையிழந்தனவாகிப் பிணக்குன்றுகளாய்க் குவிந்தன. இவை புராணத்துள் இடம்பெறும் போர்ச்செய்திகள். இவையனைத்தும் தகாத உணர்வுகளின் காரணமாகவும், ஆசைகளின் காரணமாகவும் தொடுக்கப்பெற்றவை. நாட்டின் பாதுகாப்பு பற்றியோ, பலதிற உயிர்களின் அழிவு பற்றியோ சிறிதும் சிந்திக்காமல் சுயநலப்போக்கில் தொடங்கப்பெற்றவை. இவ்வாறு வீண் ஆசை காரணமாக எடுக்கப்பெறும் முடிவுகள் என்றும் வெற்றிபெறாது; எத்தகு திறனும் வலிமையும் படைத்தவர்களாயினும் முடிவில் தோல்வியையே தழுவுவர் என்னும் உண்மைகளை உணர்த்துவன இவை. சுயநலப் போக்குகள் நிறைந்த உலகமக்களுக்குப் பாடம்புகட்டி உணர்த்தவேண்டும் என்னும் பெருநோக்குடையவை இப்புராணச் செய்திகள்.

# இலக்கிய இன்பம்

## நாட்டுவளம்

"அலைமுகந் தேறிக் கொண்டல் அம்பொடும் வில்லி னோடும்
உலவிய மின்னி னோடும் ஓங்கிமால் உருவங் கொண்டு
. . . . . . . . . . .. வரையின்மீப் பரந்த வன்றே" (19)

அரங்கநாயகன் எழுந்தருளியுள்ள இடமாதலின் அக்கோலவரையை யடையும் அனைத்து உயிர்களும் அரங்கனின் பக்தியில் ஐக்கியமாகி விடுகின்றன. கோலவரையின் உச்சியையடையும் மேகக கூட்டமும் அதே நிலையையடைந்து விடுகிறது. அதாவது,

கடலின் நீராகிய அம்பை (அம்பு - நீர்) நிறைத்துக்கொண்டு அரங்கனின் கரியநிறத்தைப் பெறுகிறது; தன்னுள்ளே வானவில்லாகிய சாரங்கத்தையும் மின்னலாகிய மகாலக்குமியையும் தாங்கிக் கோலமலை உச்சியை அடைகிறது. அங்கிருந்து கொண்டு,

"ஆழிபோல் மின்னல்மின்னி அவன்சங்கம் போலா லித்துப்
பாழிவில் உதைத்த கோல்போல் படுமழைத் தாரை சிந்தி" (20)[1]

மழை பொழியத் தொடங்குகிறது நிலத்தில் பெருவெள்ளத்தை உண்டாக்கி உலகை மகிழ்விக்கிறது. மழை நிரம்பி நாடு செழிப்பதற்கான காரணம் என்ன? இதுவே புராணம் உணர்த்தும் மற்றொரு இன்பம்.

உயிர்கள் தவறு செய்தால் அரசனுக்கு நடுக்கமாம். ஏன்? அதனால் மழைபொழியாது; நாட்டுவளம் அழியும் என்பர் இதனை,

"மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயிர் எய்தின் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கு நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்" (சிலம்பு - 25, 100-104)

என்பார் இளங்கோவடிகள். கோலமலையானது நிலைபெற்றுள்ள சிங்கபுரத்தைச் சார்ந்த நாட்டுப் பகுதியில்,

"மாத ராடவர் மன்னவ ரந்தணர்
நீதி சேரு நெறிவழு வார்களால்
மாத மூன்று மழையுமுப் போகமுந்
தீதி லாது சொரியுமந் நாட்டிலே" (49)

என்பதே புராணங் கூறுங் காரணம்.

---

1. திருப்பாவை நான்காம் பாடலைத தழுவியது.

## நாட்டு மக்கள் - வேளாளர்

குறிஞ்சியிற் பிறந்தது வெள்ளம். வயல்களில் தவழ்கிறது; ஏரி, குளங்களை நிறைக்கிறது; வனங்களின் வழி ஓடுகிறது; வராக நதியிற் கலக்கிறது; மேலும் பெருகிக் கடலில் புகுகிறது. இந்த வெள்ளமானது இப் பண்பை எப்படிப் பெறுகிறது?

"நன்றது புரிவோர் செய்யும் நடக்கையும் ஒத்த தம்மா" (30)

என்பதே விடை. அதாவது, நாட்டு மக்களாகிய நல்லவர்கள் மேற்கொள்ளும் உயர்ந்த செயல்களையே பின்பற்றி இந்த வெள்ளமானது செய்து வருகிறது. ஆறு குளங்கள் நிரம்பி வழிகின்றன. சிங்கபுரத்து வேளாளர்கள் ஒன்று கூடுகிறார்கள்.

"கரங்கு வித்துக்கோ லாசலக் கண்ணனாம்
பரம்பொ ருட்கொரு பாகமு மீவதாய்" (38)

முதலில் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறார்கள். தொடர்ந்து அந்த,

"தாவி லாக்கள மள்ளர்கள் கழனியிற் சாரத்
தேவர் கோமகன் தனைப்புகழ் தெளிவிசைப் பாட்டால்
பூவ லர்ந்தபொன் னேரினைப் பூட்டியே உழுவார்" (35)

ஆண்டின் முதலுழவைத் தொடங்கும் விழாவே பொன்னேர் பூட்டி உழும் உழவு எனப்பெறுகிறது. இந்திரனைப் பாடித்துதித்து உழவு தொடங்குவது பள்ளர் நன்றியுணர்வைப் புலப்படுத்துவதாக அமைகிறது. தொடர்ந்து,

"பரம்ப டிப்பவர் முன்செலப் பின்செலும்
வரம்பின் நென்முறை வித்துநர் வாழ்த்துவார்" (38)

உழுது பண்படுத்துதல், பரம்படித்துச் சமமாக்குதல் ஆகிய பணிகளையடுத்து, இறைவனை வாழ்த்தியபடியே சிலர் விதையை விதைக்கிறார்கள். விதை முளைத்துவளர,

'நாற்று வாங்கிப் பழனங்கள் நாட்டுவார்'; அவை செழித்துவளர ஆற்றுநீரைக் கால்வாய்களின் வழி பாய்ச்சுவார்கள். பயிர்களினூடே முளைக்கும் களைகளை உழவர் மகளிர் பிடுங்கி எறிவார்கள். இவ்வாறு ஆடவரும் மகளிரும் ஓயாது உழைத்த உழைப்பின் பயனாய்,

"வளர்ந்த செந்நெல் மணிகள் திகழ்ந்துமெய்
தளர்ந்து சாலிக் குலைக்கதிர் சாய்ந்தன" (41)

நெல்மணிகள் பொன்மணிகளைப் போல விளங்குகின்றன. உழவர்கள் நல்ல நாளைத் தேர்ந்தெடுக்கிறார்கள். குழந்தைகளும் மகளிருஞ்சூழ வந்து அறுவடை செய்து மலைபோலக் குவிக்கிறார்கள். தாளை அடித்து, மணிகளைக் குவித்து, பதரைத் தூற்றி, நெல்லைக் குவிக்கிறார்கள்.

**நன்றிக்கடன்**

பரம்பொருளுக்கு ஒருபாகம் ஈவதாய் வேண்டிக்கொண்டார்களல்லவா? உள்ளன்போடு அந்த நேர்த்திக்கடனைச் செலுத்துகிறார்கள். உடனிருந்து உழைத்தவர்களுக்குரிய நெல்லைப் பகிர்ந்தளிக்கிறார்கள். **'ஆறிலொருகடமை'** அரசிறையாக அளிக்கப்பட்ட பிறகே, குடிவாரமாகக் கிடைத்த நெல் இல்லங்களுக்கு வந்து சேருகிறது. குல தெய்வமாகிய கோலவரை அரங்களைப் பூசித்து நைவேத்தியங்களை நிறைவேற்றுகிறார்கள.

பிதுர் தேவதைகளைப் பூசித்து, அதிதிகளுக்கும் அந்தணருக்கும் தருமஞ்செய்து, சுற்றத்தாருடன் உண்டுமகிழ்வர் பண்பும் நன்றியும் ஒருங்கே நிறைந்த வேளாளர்களே நாட்டில் அந்தணர், அரசர், வாணிகராகிய மூவரையுந் தாங்குவோராயினர். மேலும் வேளாளர்கள்,

"தேவனா ரடியார் காணிடின் அரசர்
புத்திரர் தெய்வம்போற் றொழுவார்" (70)

இறையடியாரைக் கண்டால் அரசரையும் இளவரசரையுங் காண்பது போன்று மரியாதை செய்வதும், தங்கள் குல தெய்வத்தைக் காண்பது போலப் பக்தியுடன் தொழுவதுமாகிய பண்பை இயல்பாகவே பெற்றவர்கள். இத்தகு வேளாளர் நிறைந்திருந்த அந்தச் சிங்கபுரத்தில் மகளிரும் ஆடவரும், அந்தணரும் அரசரும் ஆகிய அனைவருமே நீதிநெறி வழுவாது வாழ்ந்தார்களாதலின்,

"மாத மூன்று மழையுமுப் போகமுந்
தீதி லாது சொரியுமந் நாட்டினே" (49)

என்பது ஆசிரியர் கண்டமுடிபு.

**வாணிகர்**

பலவகைத் திரவியக் குவியல்களும் நவமணி மாலைகளும் நிறைந்து விளங்குவது வாணிகர் தெரு. அக்கடைத்தெருவில்,

"நணுகுவோர் விலைகள் கேட்கிலோ இம்மி
வழாமலே விலையினை நாட்டும்" (67)

பண்புடையவர்களாய் வாணிகப் பெருமகள் விளங்கினார்கள். அவர்கள்,

"பிறர்பொரு ளதனைத் தம்பொருள் போலப்
பெரிதெனும் பெற்றிய தாலே" (69)

குறைவிலாச் செல்வமுடையவர்களாய் விளங்கினார்கள். அவர்களின் குழந்தைகளோ,

"மாணிக்க வம்மி வச்சிரக் குழவி
மருவிய வெள்ளியால் உரல்கள்
காணிய தான பவளத்தால் உலக்கை" (68)

எனக்கொண்டு விளையாடுவார்கள். இவை சிங்கபுர வாணிகர் சிறப்புகள்.

**கோலவரைத் துயிலரங்கன் சரிதம்** என்னும் இந்நூல் ஒரு புராண வகையைச் சேர்ந்தது; ஒரு தலபுராணம். இதில் ஆற்றுப் படலமும் நாட்டுப் படலமும் நகரப்படலமும் அமைந்தது எதற்காக? புராண அமைப்பு என்பதால் மட்டுமா? இல்லை. நாடு என்பது எது? எத்தன்மையது? நாட்டு மக்களின் பண்பாடுகள் யாவை? அவற்றால் ஏற்படும் பலாபலன்கள் யாவை? இத்தகு கருத்துகளை எடுத்துக்காட்டும் நோக்கமே முதன்மையானது. இந்த நோக்கத்தில், சிங்கபுரத்து உழவர் பெருமக்களின் ஓயா உழைப்பும் நன்றியுணர்வும், அரசியலில் தங்கள் கடமையும் பண்பாடும், ஆழ்ந்த இறையுணர்வும் தரும சிந்தனையுமாகிய உயர்ந்த பண்பாடுகள் நிறைவாக உணர்த்தப்பெற்றன. இதேபோல வாணிகர் போன்ற பிற தொழிலாளர் பண்புகளும் இப்படலங்களுள் எடுத்துக்காட்டப்பெற்றன. இந்த நூலைக் கற்போரும், சொல்லுவோரும் சொல்லக் கேட்போரும் ஆகிய மக்கள் அனைவருமே இத்தகு பண்பாடுகளைக் கடைபிடிப்பார்களாயின் நாடு செழிக்கும் என்பதை உணர்த்துவதே இப்படலங்களை அமைத்ததன் நோக்கமாகும்.

## வெள்ளக்காட்சி

கோலவரையாகிய குன்றிலிருந்து விழுகிறது அருவித்திரள். அருவித்திரளாகிய குழந்தைச் செல்வத்தை, முல்லைத்திணையாகிய இரண்டாந்தாய் வரவேற்கிறாள் அத்திணையில் மிகுதியாக வாழும் பசுக்களின் பாலை அந்தக்குழந்தைக்கு ஊட்டுகிறாள். வாய்க்கால்களின் வழியே மூன்றாந்தாயிடம் அனுப்பிவைக்கிறாள். மூன்றாந்தாயாகிய மருதத்தாய்,

"பண்ணை யாகிய பலபல தொட்டில்கள் பரப்பிப் பாராட்டி வளர்க்கிறாள்" வளர்ந்த வெள்ளமாகியபெண்,

"குவளைக் கண்ணதாய்த் தாமரை முகமதாய் . . .
தவளச் சங்கமே கண்டமாய்க், . . . . கொடி
யினம் இடையதாய் . . . . இசைந்தவேய்த் தோளாய்
தங்கும் ஓர்பெண்ணை நுரையெனும்
போர்வைகள் தழைக்கக் காட்சியளிக்கிறாள். (452)

மூன்றாம் தாய் இவ்வாறு அலங்கரித்து வளர்த்தபின் நான்காம் தாயாகிய நெய்தல்.

குமுதவாயினைத் திறந்து, வண்டினத்தோசையால் வரவேற்கிறாள்.

"வந்த பெண்ணினை மணத்தினுக் குரியன அணிந்து,
. . . . வருணனை நினைக்க,
புந்தி கொள்பவன் புகுந்தனன் கடிமணம் புரிந்தாள்"

என்பன கோலவரையில் தோன்றும் வெள்ளமாகிய பெண் வளர்ந்த காட்சியைக் கூறுவன.

### மகத நாட்டுச் சோலை (229-236)

இச்சோலை பதினாயிரம் யோசனை பரப்பளவுடையது; மிகப் பரந்த கடல் போன்றது; மேலும்,

"வாசவன் வனத்தினுந்துரு வாசனிட
வண்மைபெறு சோலை யதினும்" (229)

சிறந்து விளங்குவது மகதநாட்டுச்சோலை. அதாவது மிகப்பரந்த கடலைப் போன்ற அச்சோலை வாசவனுடைய வனமாகவும், துருவாசனுடைய சோலையாகவும் சிறப்பிக்கப்பெறும் நயம் பொருளறிந்து இன்பமடையச் செய்வதாகும்.

இந்திரனின் செல்வமாகிய கற்பகதருவும், அரிச்சந்தனம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் ஆகிய மரங்களுமாகிய ஐந்தருக்களை நிகர்த்த சுரபுன்னையும் வன்னியும் முதலான மரங்கள் நிறைந்த வளத்தினையுடையது மகதநாட்டுச் சோலை.

ஆயிரமாண்டு காலம் தவம்செய்து இராமனிடம் உண்டு பசியைப் போக்கிக் கொண்ட துருவாசனின் சோலைபோன்று நெடிதுகாலம் நிலைபெற்றது. மேலும் எல்லோரும் எளிதாகச் சென்று உலவித் துய்க்க இயலாத அருமையால், சினம் மிகுந்த துருவாசனின் சோலையை நிகர்த்தது மகதநாட்டுச் சோலை.

### வசந்த கால மயக்கம்

மகதநாட்டுச் சோலையில் மாரிக்காலம் என்று மயங்கிய மயில்கள் வசந்த காலத்தில் தோகையை விரிதது ஆடத்தொடங்கின. மயக்கத்திற்குக் காரணங்கள் யாவை?

தளிர்களும் இலைகளும் பழுப்புகளும் நிறைந்து பல வண்ணங்களோடு காட்சிதரும் சோலையே இந்திரவில்லாகக் காட்சிதருகிறது வண்டுகள் நிறைந்து இசைபாடிக்களிக்கும் பெருமல்லிகைப் பூக்களே சிதறிய ஆலங்கட்டிகளாக விளங்குகின்றன. நிறைந்து மலர்ந்துள்ள மலர்களிலிருந்து படியும் தேன்தாரைகளே, கருமேகஞ்சொரியும் நீர்த்தாரைகளாகின்றன. இத்தகு வசந்தகாலக் காட்சிகள் மயில்களுக்கு மாரிக்காலமாகி அவற்றை மயங்கச்செய்கின்றன.

### அனிச்சமும் மல்லிகையும்

சோலையில் மலர் முதலியன பறித்து, புனல் விளையாடி முடித்த மக்கள் உண்டாட்டு நிகழ்த்துகிறார்கள். தலைவனும் தலைவியும் தோழியருமாக ஆங்காங்குக் கூடித் தேனுண்டு

களிக்கிறார்கள். தலைவன் ஒருவன் அனிச்சமலரைப் பறிக்கிறான்; தலைவியின் தலையில் சூடி மகிழ்கிறான்; தலைவி கொடுத்த தேனையுண்டு களிக்கிறான்; தலைவனின் செயலைத் தோழியர் கண்ணுறுகிறார்கள்.

"அனிச்சப்பூக் காம்பு கொய்யா
தணிந்தபின் நறவை யுண்ணும்"

தலைவனின் செயலுக்காக அஞ்சுகிறார்கள்;

"தனித்தசே டியர்எம் ஆவி
யாகிய தலைவிக் கொங்கை
இனத்தினால் துவளு கின்ற
இடையிறும் இறுமென் றேங்கி
மனத்துயர் கொண்டோம் என்றார்" (247)

தோழியர் கூற்றாக நூலுள் இடம்பெறும் இக்கருத்து,

"அனிச்சப்பூ கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை" (குறள் 1115)

என்னும் குறட்கருத்தை நினைவூட்டுகிறது. இதேபோல,

"மல்லிகை மாலை வேய்ந்து
மதுநுகர்ந் திருந்த போது" அத்தலைவனைப் பார்த்துப்
". . . . பகருவார் மயிலின் பீலி
எல்லையில் நுட்ப மாகி
இருக்கினும் மிகுக்கு மாகிற்
செல்லுறு பண்டி யச்சு
சிதைதல்போ லிடைதான் சிந்தும்". (248)

என்னும் கூற்றும்,

"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்" (குறள். 475)

என்னும் குறட்பாவினை நினைவூட்டி மகிழ்விப்பதாகிறது.

**அணிநயம்**

அவன் புகழைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே என்பது போன்ற அடியார்தம் கொள்கைகள் பலவற்றை நூல் எடுத்துக்காட்டி அன்பூறச்செய்கிறது.

அரங்கநாயகனுடைய குணானுபவங்களை, அனந்த கலியாணத்திரு அவதா சிறப்புகளை எடுத்துச் சொல்லுவதே **வாக்காகும்**. அவனது திருமொழிகளைக் கூறக் கேட்ப செவியாகும். அந்த இலக்குமி சமேதனின் திருத்தொண்டுகளைச் செய்வதே **கையாகு** அவனது அனந்தசயனத் திருநித்திரைக் காட்சியைக் காண்பதே **கண்ணாகும்**. மனித உறுப்புகள் பெற்றுள்ளதன் பயனை எடுத்துக் காட்டும் இச்செய்திகள் (12) அடியவர்த தொண்டுக்குத் தூண்டுகோல்களாகின்றன.

இருக்கு முதலான வேதப் பொருளாக விளங்குபவன் அரங்கநாயகன். அவனது அனந்த கலியாண குணங்களை அவ்வேதங்களின் மூலம் அறிவது என்பது அனைவராலும் முடியக்கூடிய செயலன்று; மிக அரியசெயல். எனவே அவனது புகழை அறியும் வாய்ப்பு மக்களுக்கு இல்லாமலே போயிற்று. ஆனால்,

"இருக்குமுதல் தருக்கலையி னுரைப்பொருளும்
**கரக்கனிபோல்** இலங்கக் காட்டி. . ." (5)

அவனது புகழை அறியச் செய்த பெருமைக்குரியவர் '**திருக்குருகைபிரான்**' என்பதை நூல் எடுத்துக் காட்டுகிறது நம்மாழ்வார் பாடியருளிய '**திருவாய்மொழி**' அவ்வேதப் பொருளை '**உள்ளங்கை நெல்லிக்கனிபோல**' எளிமையாக எடுத்துரைக்கிறது என ஒரு பழமொழியை உவமையாக்கிக் கூறுவது நூல் செய்தி.

மகுட, குண்டலமும், ஊர்த்துவ புண்டரமும், திருக்கருணை விழியும், ஐம்படைசேர் புயநான்கும், கனக உடைப்பதமும் உடைய அவனது திருவருளைப் பெற்றேன் என்று (3) அரங்கநாயகனின் புகழ்பாடித் துதிக்கும் நூலாசிரியர், அரங்கநாயகியின் புகழைப் பாடும்போது,

"கரும்புயலிற் குழலாளைக் கதிர்மதிபோல் முகத்தாளைக்
கருணை வெள்ளப்
பெருங்கடலின் விழியாளைப் பேரருளால் உலகனைத்தும்
பெற்ற தாயை . . . .
நெடுங்கோலா சலத்தாளை நெஞ்சுள் வைப்பாம்" (4) என்கிறார்.

அன்னையின் குழலும் முகமும், விழியும் கரமும், பதமும் அழகுற உவமிக்கப்படுவது சுவை பயப்பதாகிறது. திருப்பாற் கடலினிடையிலே பரமன் யோகநித்திரை கொள்ளுகிறான்.

"இரு கோம ளக்கொடிகள் சாமள
நீல மால்வரை படர்ந்த தென்ன" - பூத்துப்பிரகாசித்தன (362)

என்பதிலும் பரமனாகிய நீலமலையில் இலக்குமியும் பூமிதேவியுமாகிய குருக்கத்திக் கொடிகள் படர்ந்து ஒளிவீசின என்னும் உருவக, உவமைகள் இன்பமூட்டுவன.

வராகமூர்த்தியை அழிக்கவருகிறார்கள் சோமுகனின் படைவீரர்கள். கோலவரையின் து அம்புமழை பொழிகிறார்கள். அதனால் உலகமே இருளில் மூழ்கிப் போகிறது.

மேகமானது மின்னலையும் இடியையும் உண்டாக்கியது போன்ற நிலை கோலமலை முழுவதும் ஏற்படுகிறது. (256)

முருகபெருமானின் படை சிங்கவர்த்தனனின் படையோடு மோதுகிறது. அப்போர்க்காட்சி,

இமயமலையே மற்றொரு உருவெடுத்து ஒன்றோடொன்று மோதிக்கொள்வது போலக் காணப்பெற்றது. இரண்டு சிங்கங்கள் தங்களுக்குள் எதிர்ப்பது போலவும், இரணியனும் நரசிங்கமும் தாக்கிக் கொள்ளுவது போலவும் காணப்பட்டது. ஒருவர் அக்கினிக் கணைகளைப் பொழிவர். மற்றவர் வருணக்கணைகளைப் பொழிந்து அவற்றை அவிப்பர். இவ்வாறே இருள்கணைகளின் மீது கதிர்க்கணைகளையும், மேகக் கணைகளின் மேல் வளிக்கணைகளையும் மாறிமாறிப் பொழிந்து போர்க்களத்தை அதப்படுத்துகிறார்கள் (387).

நூலுள் அமையும் இத்தகு போர்க்காட்சிகள் பல. அவை அசுரர் கூட்டங்களை அழிக்க எண்ணும் நல்லவர்களின் நிலை இத்தகையது என்பதை உணர்த்துவன.

## நிறைவு

அரக்கரை நிகர்த்த கொடியவர்களும், அக்கொடியவர்களின் அக்கிரமச் செயல்களுக்கு ஆளாகி அல்லலுறும் நன் மக்களும் நிறைந்து விளங்குவதே இந்நிலவுலகம். நன்மக்களின் நிலைமையைக் காணும் சான்றோர் ஒரு சிலர் அக்கொடியவர்களின் தீச்செயல்களை அடக்க முன்வரும்போது பலவகை இன்னல்களும் அழிவுகளும் ஏற்படும் என்பதை அறிவிக்க விரும்பும் முன் எச்சரிக்கையே இப்புராணச் செய்திகள். இறைவனின் அற்புதச் செயல்களை ஆழ்ந்து படித்தறிய விரும்பும் அனைவருக்கும் அறிவிக்கும் கருத்துரைகளாக இவை இடம்பெறுகின்றன.

நூலுள் இடம்பெறும் தேவர் × அசுரர் என்போர் - நிலவுலகில் நல்லோர் × கொடியோர் என்போரைச் சுட்டுவதாகக் கூறப்படுவதே புராண இயல்பு.

தேவர்களுள் வாயு ஆத்திரம் அடைகிறான்; நாகராசனை அழிக்கத் துணிகிறான்; காற்றை மிகுதியாகக் கக்குகிறான்; முடிவு என்ன? நாகராசன் மட்டுமா? நிலவுலகமே அழிவுக்குள்ளாகிறது. கடமையை மறந்த நிலையில் தேவர்களே ஒருவர் மீது ஒருவர் மோதிக்கொள்ளுவதன் விளைவு உலகத்தைப் பாதிக்கிறது. உலகத்தை அவர்கள் அழிக்கவில்லை; மாறாக அழிவுக்கு உள்ளாக்கி விடுகிறார்கள். இதே நிலைமைதான் மக்களிடையே நிகழ்கிறது. கடமையை மறந்த பெருந்தலைவர்களின் போராட்டங்களால், நாட்டை அவர்கள் அழிக்காவிட்டாலும், அழிவுக்கு உள்ளாக்கி விடுகிறார்கள் என்பது மறுக்கமுடியாத உண்மை என்பதைத் தெளிவுபடுத்துவனவே புராணங்களில் இடம்பெறும் தேவர் - தேவர்; தேவர் - அசுரர் நிகழ்ச்சிகள்.

## Expression of Humility to the Audience

I have sought to describe the immense fame
Which is a difficult task even for Civaṉ,
Piramaṉ, Intiraṉ and the rest
Who place on their crown the stream that flows
From the feet of the Lord of Lakṣhmi
And constantly meditate on his name.
Though this is verily like a musk-rat
Seeking to measure the entire universe,
It is my duty to worship the feet
Of Araṅkaṉ in Kōlācalam to overcome my evil past.

10. [1]ஆதி மூலமென் றோதிய வானைமுன்
வேதை தீர விளங்கிய மெய்ப்பொருள்
[2]பாத மன்றிப் பணிந்திடும் பாமரர்க்கு
ஓதி லாருயர் உத்தமன் நற்புகழ்.

எ-து ஆதிகாலத்திலே செந்தாமரை, வெண்டாமரை, செவவல்லி, நீலோற்பலம், செங்கழுநீா முதலாகிய புட்ப சமூகங்களையுடைய தடாகதத்ின்கண் மருவிய முதலையினால் பிடிக்கப்பட் டிரஙகாநின்ற கசேந்திராழ்வானென்கின்ற யானை யானது ஆதிமூலமென்று கூப்பிட அந்த முதலையைத தமது சக்கரத்தினாலே இருபிளவாய்த் தடிந்து அதனைப் பாதுகாத்தருளி அதன் வேதனை எல்லாந் தீர கருடவாகனாரூடராய் விளங்காநின்ற மெய்ப் பொருளினது திவ்விய திருவடிச் சம்மந்தப்படாத பாமரராகிய பேதையர்க்குக் கூறார்கள் பெரியோர்கள் இந்த உத்தமனது திவ்விய குணானுபவங்களை என்றவாறு. (8)

வேதை - துன்பம. கஜேந்திரன் - கஜம + இந்திரன். கஜம் - யானை. பாமரர் - அறிவில்லாதவர். ஓதிலார் - கூறமாட்டாகள

உரை - வாகனாரூடா - வாகனம் + ஆரூடர். ஆரூடர் - அமர்ந்தவர்.

பா வே. - 1 ஆதியில் வியாதன் சொல்ல வருமறை தெரிந்த ஞானச்
சூதரு முரைத்தார் நேமி வனத்துளோர்க் கென்னுஞ் சூழ்ச்சி
ஓதிய விலிங்கி யத்தில் நூற்றொன்றா மத்தி யாயக்
காதைமூ வுலகோ ருய்யத் தமிழினாற் கழற லுற்றேன்

எ-து இந்தக் கோலாசல புராணமான தாதிகாலத்தின் ரிஷிகளுக்கெல்லாஞ் சிரேஷ்டராகிய வியாசரானவர், சமஸ்தமாகிய வேத வேதாங்கங்களும் உணர்ந்த சூத புராணிகருக்கு உரைத்தபடி அவரும் நைமிசாரண்யத்தோருக்கருளிச் செய்த வரலாற்று முறைமையாகிய காதையை, இலிங்கபுராணத்தில் நூற்றொன்றா மத்தியாயந்தொடங்கி முப்பத்திரண்டாமத்தியாயமாகக் கூறுகின்ற திருவவதாரச் சரித்திரங்களை மூன்றுலகத்தி லுள்ளாரும் உய்யும் பொருட்டுத் தென்மொழியாகிய தமிழினாலே கூறுகின்றே னென்றாறு.

2. பாத மன்றிப் பணியும் பணியிலார்
பாத மன்றிப் பணியும் பணியிலேன்.
பாமரர்க் கோதிலா றுயறுத்தம நாப்புகழ்

*āti mūlamen̲ r̲ōtiya vān̲aimun̲*
*vētai tīra viḷaṅkiya meypporuḷ*
*pāta man̲r̲ip paṇintiṭum pāmararkku*
*ōti lāruyar uttaman̲ nar̲pukaḻ.*

1. *ātiyil viyātan̲ colla varumar̲ai terinta ñān̲ac*
*cūtaru muraittār nēmi van̲attulōrk ken̲n̲uñ cūḻcci*
*ōtiya viliṅki yattil nūr̲r̲on̲r̲ā matti yāyak*
*kātaimū vulakō ruyyat tamiḻin̲ār̲ kaḻar̲a lur̲r̲ēn̲.*

2. *pāta man̲r̲ip paṇiyum paṇiyilār*
*pāta man̲r̲ip paṇiyum paṇiyilēn̲*
*pāmarark kōtilā r̲uyar̲uttama nāppukaḻ*

The elders will not relate the greatness
Of the Lord to ignorant commoners
Who do not worship the feet
Of the Supreme that appeared to the elephant
To remove its distress when it cried out,
'O Primal Being!".
Vyāsa recited it in the beginning.
Cūtar, knowledgeable in scriptures
Repeated it to the sages in Naimisa forest.

Now I proceed to retell in Tamil the story
Beginning with the hundred-and-first canto
Found in *Liṅka Purāṇam.*
I have nought to do but worship
The feet of those who worship
Only the Lord's feet. I speak of the greatness
Of the Supreme for the common man.

(முதநூல் வழிநூல் செய்த காரணம்)

11. ஆதியினிற் சதுர்முகனு மறைந்தான் வீணை
யருமுனிவன் வியாசருக்கங் கறைந்தான் ஞானச்
சூதமுனி வனுக்குரைக்கச் சவுன கர்க்குச்
சொன்னவட மொழியதனைச் சூட்ச மாக
வோதியபாத் துமகாண்ட முத்த ரத்தின்
உரைத்தபடி தென்மொழியா லுரைத்தோ மந்தச்
சீதரனார் பொன்னரங்கன் காதை யென்றுஞ்
செப்பிடுவோர் பரமபதஞ் சிறந்து வாழ்வார்.

எ-து ஆதிகாலத்திலே சதுர்முகனாகிய பிரம தேவரானவர் ரிஷிகளுக் கெல்லாஞ் சிரேட்டராகிய நாரத மகாமுனிவருக் கருளிச்செய்தபடி அவர் வியாச மகாமுனிவருக் குரைக்க அவர் சூத மகாரிஷிக்கு அனுக்கிரகஞ் செய்தபடியால் அந்த மகாரிஷியானவர் சவுனகாதி மகாரிஷிகளுக்கு ஆதியோடந்தமாய் வடமொழியினாலே சூட்சமாகச் சொல்லியதெப்படி யென்றால், பதினெண் புராணங்களிலு மதிசிரேட்டமாகிய பாத்தும புராணத்தி னுத்தரகாணடத்தி னுரைத்தபடி சமஸ்தமான சீவாத்துமாக்களுக்குந் தெரியும் பொருட்டாய்த் தென்மொழியினால் சொல்கிறோம். ஸ்ரீஇலட்சுமிபதியாகிய பொன்னரங்க நாயகருடைய திருவவதாரத் திவ்விய குணானுபவங்களைத் துதி செய்கின்ற பரம பாகவதர், நித்திய சூரியர்கள் வாசஞ்செய்கின்ற பர்வதத்திற் சிறந்து வாழ்வார்க ளென்றவாறு. (9)

வீணையருமுனிவன் - நாரதர். வியாசர் - பராசரரின் குமாரர்; பரிமளகந்தி என்னும் சத்தியவதியின் வயிற்றில் உதித்தவர்; ஐந்தாம் வேதம் எனப்படும் மகாபாரதத்தை வியாசர்கூற விநாயகர் எழுதினார் என்பது வரலாறு. சவுனகர் - சௌநகர - சூதமுனிவரின் மாணாக்கருள் ஒருவர்; ஆசுவலாயநரின் ஆசிரியர்.

உரை - பதினெண்புராணம் - ஆக்கிநேயம், இலிங்கம், காந்தம், காருடம், கூர்மம், சைவம், நாரதீயம், பதுமம், பவிடியம், பாகவதம், பிரமகைவர்த்தம், பிரமம், மச்சம், மார்கண்டேயம், வராகம், வாமனம், வாயவியம், வைணவம் என்பன. இவற்றுள் பதுமபுராணம் என்பதே பாத்மபுராணம் எனப்பட்டது; ஐம்பத்தையாயிரம் கிரந்தங்களையுடையது.

## Mutanūl vaḻinūl ceyta kāraṇam

*ātiyiṉiṟ caturmukaṉu maṟaintāṉ viṇai*
*yarumuṉivaṉ viyācarukkaṅ kaṟaintāṉ ñāṉac*
*cūtamuṉi vaṉukkuraikkac cavuṉa karkkuc*
*coṉṉavaṭa moḻiyataṉaic cūṭca māka*
*vōtiyapāt tumakāṇṭa mutta rattiṉ*
*uraittapaṭi teṉmoḻiyā luraittō mantac*
*cītaraṉār poṉṉaraṅkaṉ kātai yeṉṟuñ*
*ceppiṭuvōr paramapatañ ciṟantu vāḻvār.*

## Why this Tamil version?

In the beginning the four-faced Piramaṉ
Told the story to the lute-playing Nārataṉ
Who conveyed it to [16]Vyāsa; the sage Cūta
Received it from him and he retold the same
Skillfully to Saunaka and others in Sanskrit.
I am transcreating the same found
In the latter portion of *Patma Purāṇam.*
Those who speak of the story of Supreme Raṅka,
The Lord of Lakṣmi will gain the heavens
And live happily ever after.

12. குருமொழிகொண் டவரருளாற் றிருமொழிகேட்
பதுசெவியின் கொள்கை யாகும்
பருமணிசேர்ந் தொளிபரவுந் திருமுடியா
யிரம்பனக சயன மீதிற்

---

16. Vyāsa : Son of Parācara by Parimalakanti (Cattiyavati), he is said to have indited the Mahabharata which is known as the Fifth Vēda. Vināyaka is spoken of as his amanuensis.
Saunaka : Sage Cūta's dioscīple, and teacher of Ācuvalāyana.
The Patma Purānam is one of eighteen Purāṇas : the rest of them are, *Ākkinēyam, Iliṅkam, Kāntam, Kāruṭam, Kūrmam, Caivam, Nāratiyam, Paviṭiyam, Pākavatam, Piramakaivartam, Piramam, Maccam, Mārkanṭēyam, Varākam, Vāmanam, Vāyaviyam* and *Vaiṇavam.*

கருமுகில்மா றன்திகழ்க் கருங்கடல்போல்
　　கண்வளரக் காண்ப தேகண்
பெருகுறுமற் றவர்தம்மைப் புகழ்ந்திடும்வாய்
　　குகையெனவே பேசும் வேதம்.

எ-து. குருவினை யொப்பு மலபரியிகமாகிய வானமாக்க ளாசாரியரது வருளைக் கொண்டவர்களாய யாதொருவர்க்கும் அந்த ஸ்ரீஅரங்கநாயகரது திவ்விய குணானுபவங்களையும், அவரது அனந்த கலியாண விபூதி விக்கிரக திருவவதார விசேஷங் களையும் சொல்கின்றதே வாக்காம்; அந்தப் பரம புருஷனுடைய திருமொழிகளைக் கேட்கின்றதே செவியாம்: அந்த ஸ்ரீ இலட்சுமிபதி யினுடைய கைங்கரியங்களைச் செய்கின்ற கைகளே கைகளாகும்; பருமணியாகிய மாணிக்க மணிகளானவை ஆயிரம் பணாடவியினு மாயிரங் கோடி சூரியனைப் போலொளியை விரிக்கின்ற பனக சயனமாகிய ஒப்பற்ற அனந்த சயனத்தின் மீது நீருண்ட காளமேகத்தைப் போலொத்த திருமேனியில் ஸ்ரீமகாலட்சுமி தேவியும கவுத்துவா பரணமும் விளங்கத்தக்கதா யொரு கருங்கடலினைப்போல யோக நித்திரை செய்கின்ற எம்பெருமானைத் தரிசித்தால் அந்த இன்பத்தினை யடைகின்றதே கண்களாவன; மறற யிதரமாகிய தேவதாந்தங்களைக் கூறுகின்ற வாய்களானவை பர்வதங்களிலே விளங்குகின்ற குகைகளுக்குச் சமதையாகுமென்று வேதத்தில் கூறிய தென்றவாறு. (10)

திருமொழி - புகழுரை, சிறப்புச்செய்திகள் பருமணி - மாணிக்கமணி பனக சயனம - பனகம்- பாமபு (பன்னகம்), பாம்பாகிய படுககை பணாடவி - பணம் + அடவி; பணம் - பாம்பின்படம் படஙகளையுடைய ஆதிசேடன். அடவி - காடு கூடடம். தொகுதி. அனந்தசயனம் - ஆதிசேடனாகிய படுக்கை தேவதாந்தம் - (மனிதா முதல) தேவர்கள் முடிய.

*kurumolikoṇ ṭavararuḷāṟ rirumolikēṭ*
　　*patuceviyiṉ koḷkai yākum*
*parumaṇicērn toliparavun tirumuṭiyā*
　　*yirampaṉaka cayaṉa mītiṟ*
*karumukilmā ṟaṉtikaḻak karuṅkaṭalpōl*
　　*kaṇvaḷarak kāṇpa tēkaṇ*
*perukuṟumaṟ ṟavartammaip pukaḻntiṭumvāy*
　　*kukaiyeṉavē pēcum vētam.*

The ears are blessed by listening to the praises
Of the Lord by the grace of the *Guru*;
The eyes become worthy of their task when they gain
The vision of the Supreme resting like a Dark Cloud,
Verily a dark sea shining with Lakṣmi,

On the snake with a thousand hoods
That are illumined by a thousand brilliant gems.
The Vēdas say that the lips that praise
Anyone except this Lord is but a mere cave.

**புராண சங்கிரக மணி (புராணச் சுருக்கம்)**

13. **ஆதியின் முனிவோர் அயனருள் [1]அதனால்**
**அடைந்திடு நைமிச வனத்தில்**
**நீதிநான் மறையோன் அவதரித் ததுவும்**
**நேயமா மறைமொழி யதனை**
**வேதியர்க் குலகில் விதித்தது மூவாறு**
**[2]ஆகிய புராணத்தின் பதுமத்து**
**ஓதிய வராகத் தலத்தின்முச் சிறப்பும்**
**உரைத்திடும் பரத்துவப் பொருளும்**

எ-து. [3]ஆதிகாலத்தில் மிகுந்த தபோநிதிகளாகிய முனிவர் கூட்டங்கள், சதுர் முகனுடைய அனுக்கிரகத்தால் நைமிசமடைந்ததுவும், வேதவியாச மகாரிஷியானவர் திருவவதாரஞ் செய்தருளியதும், நான்கு வேதத்தை நான்கு முனிவருக் கருளிச்செய்ததும், [4]பதினெண் புராணத்திற் சிறந்த வதிசிலாக்கியமாகிய பாத்தும புராணத்தின் உத்தர காண்டத்திற் கூறுகின்ற வராகத்தலத்தினது தலவிசேடம், தீர்த்தவிசேடம், மூர்த்திவிசேடங்களைச் சூத மகாரிஷியானவர் சவுனகாதி மகரிஷிகளுக் கருளிச்செய்ததும் கூறுகின்றோ மென்றவாறு (11)

நைமிசவனம் - நைமிசாரணியம் - இமயமலைக் கருகிலுள்ள வனம். பிரமதேவனால் விடப்பட்ட தருப்பைப்புல்லாலாகிய சக்கரம் (நேமி) நின்ற இடம் ஆதலின் இப்பெயர் பெற்றது; கௌமதி நதிக் கரையில் உள்ளது.

உரை - தபோநிதி - முனிவன் வராகதலம் - கிரிவிரசத்துக்கு அரணாய் உள்ளமலை. திருமால் வராக வடிவமாய் எழுந்தருளியதலங்கள அனைத்துமே வராகதலம் என்ற பெயர் பெறுகின்றன. விருத்தாசலத்தின் அருகில் உள்ள ஸ்ரீமுஷ்ணம், கோலாசலமலை ஆகிய இடங்களில் வராகமூர்த்தி கோயிலகொண்டுள்ளதால் அவை வராகதலங்களாகினறன. புராண சங்கிரகமணி - சங்கிரகம் - சுருக்கம்; புராணச்சுருககம் கூறும் பாடல்; மணி - உயர்ந்த மணிபோன்றது இப்பாடல் (இப்பகுதி) என்னும் சிறப்பு நோக்கியது.

பா.வே. - 1. தன்னால். 2. ஆகிய புராணத்தி னிலிங்கம் 3. ஆதி காலத்தின் முனிவர்களாகிய நைமிசாரண்ய வாசிகள்ளனவர்கள் பிரம்மாவின் அனுக்கிரகத்தால். 4. மூவாறு பதினெண்.

## Purāṇa caṅkiraka maṇi (pūraṇac curukkam)

*ātiyiṉ muṉivōr ayaṉaruḷ ataṉāl*
*ataintitu naimica vaṉattil*
*nītināṉ maṟaiyōṉ avatarit tatuvum*
*nēyamā maṟaimoḻi yataṉai*
*vētiyark kulakil vitittatu mūvāṟu*
*ākiya purāṇattiṉ paṭumattu*
*ōtiya varākat talattiṉmuc ciṟappum*
*uraittiṭum parattuvap poruḷum*

## Synopsis

The epic speaks of how in the beginning
The sages reached Naimica wood by Piramaṉ's grace,
The birth of Vēdavyāsa, and how he taught
The four sages the Vedās four, of how Patumam
Of the eighteen Purāṇas hails the [17]triple-fame
Of the *varāka* land and of the Supreme.

(நாரதன் கூற அரங்கரையடைதல்)

14. பூருவங் கால நேமியின் றவத்தாற்
புகழ்பெறும் அமரர்கண் மிகுந்த
காருல கலைந்த கடல்பெரும் புவிசூழ்
கானகக் கடுவனங் கடந்து
மேருவின் அடைந்த விதங்களை யுணர்ந்த
மேன்மைசேர் நாரதன் மொழியாற்
பேருல களந்தோன் பொன்னடி யடைந்த
புகழினை விளம்பிய திறனும்.

எ-து. [1]பூர்வ காலத்தில் [2]கால நேமியாகிய அசுரனானவன் தன்னுடைய தபோ பலத்தினாலே இந்திரனுடனே எதிர்த்து யுத்தஞ்செய்து தேவர்களை யடித்துத் துரத்திவிட்டுத் தானிந்திர பட்டாபிடேகனா யிருக்கின்ற காலையில், [3]தேவர்கள் சதுர்சாகரஞ் சூழ்ந்த பூமண்டலங்களெல்லாம் நெடுங்கால மலைந்து மகமேருவைச் சேர்ந்து வாசஞ்செய்கையில்

---

17. triple-fame : Each holy place is describes as being famous individually for the land, for the water-sources there and for the Deity installed in the temple.

[4]ரிஷிகளுக்கெல்லாஞ் சிரேட்ட ராகிய நாரத மகாரிஷியானவர் அவ்விடத்துக் கெழுந்தருளி அவருடைய அனுக்கிரகத்தினாலே இந்தப்பூமண்டலங்களிலே யதிசிலாக்கியமாகிய கோலாசலத்தில் அனந்தவிமானசேகரராய் யோகநித்திரை செய்கின்ற. திரிலோகமும் ஓரடியாயளந்த ஸ்ரீ அரங்கநாதருடைய திவ்விய திருவடிகளிலே சரணாகதியடைநத வரலாறு மென்றவாறு. (12)

காலநேமி - ஒரு அசுரமன்னன் திருமாலுடன் போரிட்டு அவரது சக்கராயுதத்தால் கொல்லப்பட்டான். இராவணனின் அம்மான் எனவும் கூறுவர். இவனது அடுத்த பிறவியே கம்சன் காலநேமி பற்றிய இரு அத்தியாயங்கள் நூலில் உள்ளன. காருலகு - நீரால் சூழப்பட்ட நிலவுலகம்.

உரை - சதுர்சாகரம் - நான்குதிக்கிலும் உள்ள கடல் திரிலோகமும் ஓரடியாலளந்தவர் - திருமால். வாமனாவதாரம்; மகாபலிச்சக்கரவர்த்தியை அடக்க அதிதியிடம் தோன்றிய திருமாலின் ஐந்தாவது அவதாரம

பா.வே. - 1 உரை முழுமையும் வேறுபடுகிறது. 2. இந்திரமகாராசனானவன் 3. ஈசன் தனது பிரதமகணங்களுடன். . வேடராசன் இந்திரன் சிரத்திற புடைத்த போது. 4 இந்திரமகாராசனே; துவாபரயுகத்தின் பாண்டு புத்திரனாகிய அருச்சுனனா யவதரித்திதைத் தீர்த்துக் கொள்ளுவான் அனுப்பிய பின்பு.

## Nāratan̲ kūr̲a araṅkaraiyaṭaital

*pūruvaṅ kāla nēmiyin̲ r̲avattār̲*
*pukal̲per̲um amararkan̲ mikunta*
*kārula kalainta kaṭalperum puvicūl̲*
*kān̲akak kaṭuvan̲aṅ kaṭantu*
*mēruvin̲ aṭainta vitaṅkal̲ai yuṇarnta*
*mēn̲maicēr nāratan̲ mol̲iyār̲*
*pērula kal̲antōn̲ pon̲n̲aṭi yaṭainta*
*pukal̲in̲ai vil̲ampiya tir̲an̲um.*

When in the days of yore the demon Kālanēmi's askesis
Chased away the gods, they wandered on sea-girt earth,
Crossed terrible forests and reached the *mēru* Mount.
The words of good Nāratan̲ when he heard of it
Led them to the golden feet of the Lord
To seek refuge from Araṅkan̲
Who had measured the worlds.
This too is expertly retold here.

(அரங்கனின் புகழ்)

15. ஆதியின் வராக மாயவ தரித்தங்
கழகிய கங்கையாட் கருளிச்
சோதிசேர் சம்பீ ரத்தினாற் றுணித்துச்
சோமுகன் றனக்கரு ளியதும்
நீதிமார் கண்டர்க் கருள்புரிந் ததுவு
நீர்பத மடைந்தநற் குகன்றன்
வேதனை தவிர வெற்பதாய்த் தோன்றி
விமலனாங் கவர்க்கருள் செயலும்.

எ-து ஆதிகாலத்தி லெக்கிய [1]வராகத் திருஅவதாரஞ் செய்தருளியதும், தம்மைக் குறித்துத் தவஞ்செய்த தேவகங்கை, தமது திருவடிகளிலே யுதித்து வராக நதியாகப் பெருகியதும், [2]மத்தளராசனர்னவன் அரித்துரோக சிந்தையினாலே பிரமகத்தி மகாபாதகங்களை யடைந்து ஆரணியங்களிலே சித்தப் பிரம்மை கொண்டதும், சிவனது வரபாலனததினாலே [3]சோமுகன் உத்தியான வனத்தில் எலுமிச்ச விருட்சமா யுதிக்கின்ற காலையில், வராக மூர்த்தியானவர் தமது கோர தந்தங்களினாலே பிடுங்கி வாளாயுதமாகச் செய்து சோமுகனைத் தடிந்ததும, மீட்டுமவன் சரணாகதியடைய என்றும் நித்தியனாய்ச் சம்பீரவிருட்சமாக விருத்தியடையத்தக்கதாய் அருளிச்செய்ததும், ஊழிக்காலத்தில் சரணாகதியடைந்த மார்கண்டேயருக்காகத் தமது விசுவ சொரூபச் சேவையினைக் காண்பித்து ஸ்ரீ அரங்கநாயகராகக் கோலாசலத்திலே அனந்தவிமானசேகரராய்த் திருவவதாரஞ் செய்தருளியதும, சுப்பிரமணியரானவர் சரணாகதியடைய அவரைப் பாதுகாக்கவேண்டிக் கோலாசலமாக அவதரித்துச் சிம்மவர்த்தனனென்கிற அசுரனை மடித்து அவனுக் கருளகொடுத்தருளியதுமான பெரும் புகழினைக் கூறுகின்றோ மென்றவாறு. (13)

வராகம் - திருமாலின் அவதாரங்களில ஒன்று. இரணியாக்கதன் பூமியைச் சுருட்டிப் பாதாளத்தில் புகுந்தான திருமால் வராக உருவம் கொண்டு அவனைக் கொன்று பூமியை முன்போல விரித்தார் (வராகபுராணம). கங்கைக்கு அருளியது பூரணிமா எனபவா மகளாகிய தேவகுல்லியா என்பவள் திருமாலின திருவடிகளை வலம்வந்து தேவகங்கையாயினள. சமபீரம - சம்பிரம் - எலுமிச்சை.

பா.வே. - 1 வராககுவாமியானவர். 2. மததளராசன் நாராயணன் துரோகத்தினாலே எலுமிச்ச விருட்சமாய். . . சரணாகதியடைந்ததும். 3 ஊழிக்காலத்தில் மார்க்கண்டன் சரணாகதியடைய.

## Araṅkaṉiṉ pukaḻ

*ātiyiṉ varāka māyava tarittaṅ*
*kaḻakiya kaṅkaiyāṭ karuḷic*
*cōticēr campī rattiṉār ṟuṇittuc*
*cōmukaṉ ṟaṉakkaru ḷiyatum*

*nītimār kaṇṭark karuḷpurin tatuvu*
*nīrpata maṭaintanar kukaṉraṉ*
*vētaṉai tavira veṟpatāyt tōṉri*
*vimalaṉāṅ kavarkkaruḷ ceyalum.*

## Araṅkaṉ's Fame

Earlier He incarnated as [18]Boar; granted grace
To lovely *kaṅkai*; he clove Cōmukaṉ
With the illumined lemon-tree and granted grace;
He granted grace to the righteous Mārkaṇṭēya;
When [19]Kukaṉ sought refuge, He rose as a mountain
And chased away the sorrow of the Pure One.

**(திருமகள் வதிதல்)**

16. அண்டர்கள் துயரம் அகன்றிடக் கால
நேமியாம் அசுரனை மடித்துப்
[1]புண்டரீ கக்கணர் அருளினால் அமரர்
பொன்னுல கடைந்தநற் புகழும்
கொண்டல்சூழ் கோல வரையினிற் றவஞ்செய்
கோதையைத் திருமணம் புணர்ந்த
[2]மண்டலம் அளந்தோன் மார்பினில் மலர்மா
மகள்வதிந் திடும்பெரும் புகழும்.

எ-து. [3]இப்படியாகிய தேவர்களிடுக்கண் தீரத்தக்கதாய்க், கால நேமியென்கின்ற அசுரனைச் சம்மரித்ததும், செந்தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீஅரங்கநாயகருடைய அனுக்கிரகத்தினாலே இந்திரன் முதலாகிய தேவர்கள் தமது பொன்னுலகை யடைந்து அரசாட்சி செய்ததும், மேகங்கள் தவழாநின்ற புண்ணிய பர்வதமாகிய கோலாசலத்தில் தவஞ்செய்கின்ற ஸ்ரீமகாலட்சுமி வாசஞ் செய்கின்ற புகழுங்[4] கூறுகின்றோ மென்றவாறு. (14)

புண்டரீகக்கணர் - திருமால்; புண்டரீகம் - தாமரை. கணர் - கண்ணர் - கண்ணை உடையவர் பொன்னுலகு - தேவர் உலகம். கொண்டல் - மேகம். கோதை - பெண்; திருமகள். வதிதல் - வசித்தல்; தங்குதல்.

---

18. Boar : According to *Varāka Purāṇam*, when Iraṇiyakcaṉ hid the earth in the nether regions, the Supreme incarnated as a Boar, destroyed him and replaced the earth in its place.
19. Subramania

பா.வே. - புண்டரீகக்கண்ணருளினால 2. மண்டலமளந்தோன் அருளினாற்சூதன் - மாமறை சவுனகர்க் கறைந்தான் 3 தேவக்கூட்டங்கள் சரணாகதியடைய . மகுடாபிஷேகஞ் செய்ததும் 4 கவுனாதிகளாகிய விருடியர்க்கு திருவாய் மலர்ந்தருளினா ரென்றவாறு.

## Tirumakaḷ vatital

*aṉtarkaḷ tuyaram akaṉṟiṭak kāla*
*nēmiyām acuraṉai maṭittup*
*puṇṭarī kakkaṇar aruḷiṉāl amarar*
*poṉṉula kaṭaintaṉar pukaḻum*
*koṇṭalcūḻ kōla varaiyiṉiṟ ṟavañcey*
*kōtaiyait tirumaṇam puṇarnta*
*maṇṭalam aḷantōṉ mārpiṉil malarmā*
*makaḷvatiṉ tiṭumperum pukaḻum.*

## On [20]Tirumakaḷ

Of how the gods returned to their heavens
By the grace of the [21]lotus-eyed Lord
Who destroyed *kālanēmi* to end
Their sorrows, of how the Goddess of Wealth
Resides on the chest of the measurer of the earth
Who married the damsel performing askesis
On the clouds-girt Kōlavarai;

(சூதர் கூறியவை)

17. அண்டமா யிரத்தெண் கோடியு மகன்ற
அகில சராசரத் தினுமேற்
கொண்டவை குந்த நாதனா ரெழுந்த
கொள்கையும் வேங்கடத் தரசும்

20. The Goddess of Wealth
21. Nārāyaṇa

நின்றபொன் வரத ராசனுங் கருணா
நிதியெனும் பார்த்தசா ரதியுஞ்
சென்றநற் புகழைச் சூதமா முனிவன்
தெருளினன் சவுனகர் தமக்கே.

எ-து. அகிலமாகிய ஆயிரத்தெண்கோடி அண்டங்களுக்கு மேலாய் விளங்கிப் பிரகாசிக்கின்ற ஸ்ரீவைகுந்தநாதரானவர் கோலாசலத்தில் எழுந்தருளியதும், சேஷாசலவாசராகிய திருவேங்கிடத் தெம்பெருமா னெழுந்தருளியதும், அத்திகிரி அருளாளராகிய ஸ்ரீ வரதராசர் திருவவதாரஞ் செய்தருளியதும், திவ்விய கருணா நிதியாகிய ஸ்ரீ பார்த்தசாரதி திருவவதாரஞ் செய்தருளியதுமான சிறந்த பெரும் புகழாகிய திவ்விய அவதாரச் சரித்திரங்களைச் சூத மகாரிஷியானவர் அதிசிரேட்டராகிய சவுனகாதி மகாரிஷிகளுக் கருளிச்செய்தா ரென்றவாறு. (15)

சராசரம் - சரம் + அசரம் - அசையும் பொருள், அசையாப் பொருள்களடங்கிய இந்நிலவுலகம் வேங்கடம் - திருவேங்கிடமலை; திருப்பதி. கருணாநிதி - அருட்குணமுடையவன்.

உரை - சேஷாசலவாசர் - திருவேஙகடத்து இறைவர்; சேடமலை - திருவேஙகடம், சேஷன - ஆதிசேடன். ஆதிசேடனுக்கும் வாயுபகவானுக்கும் பலப்பரீட்சை நடந்தது; வாயுவினால் தள்ளப்பட்ட ஆதிசேடன் வந்து விழுந்து மலைவடிவானான். திருமாலும் அங்கு எழுந்தருளினார் (பவிஷயபுராணம்) அத்திகிரி-காஞ்சிமாநகரையடுதத மலை (காஞ்சிபுராணம்)

**புராண சங்கிரகமணி முற்றிற்று.**

## Cūtar kūṟiyavai

*aṉtamā yiratteṉ kōṭiyu makaṉṟa*
*akila carācarat tiṉumēṟ*
*koṇṭavai kunta nātaṉā reḷunta*
*koḷkaiyum vēṅkaṭat taracum*
*niṉṟapoṉ varata rācaṉuṅ karuṇā*
*nitiyeṉum pārttacā ratiyuñ*
*ceṉṟanaṟ pukaḻaic cūtamā muṉivaṉ*
*teruḷiṉaṉ cavuṉakar tamakkē.*

## What Cūtar Said

Of the Lord of Vaikuṇṭam
That has more than all the universes
Beyond the thousand-and-eight crores
Of universes, of the Lord of Veṅkaṭa,

Golden Varatarāca, Pārttacārati
Who is verily an ocean of compassion;
All these holy incarnations
Were related by the great sage Cūtar
To *cavuṉaka* and the sages with him.

(தொண்டை நாட்டுவளம் கூறுவாம் எனல்)

18. புண்ட ரீகனவ் வாணி புரந்தரன்
மண்ட லத்தர சர்புல வர்முனங்
கண்டு மேன்மை கழறும் புகழுடை
தொண்டை நாட்டு வளங்களைச் சொல்லுவாம்.

எ-து. ஆயிரமிதழினையுடைய தாமரைப் பீடத்தில் எழுந்தருளிய பிரமாவும் சரஸ்வதியும், புரந்தரனாகிய தேவேந்திரனும், இவ்வுலகத்தை ஆள்கின்ற அரசக் கூட்டங்களும், புலவராகிய கவிச்சக்கர வர்த்திகளும் பூர்வ காலத்திற் கண்டு மேன்மையாய்க் கூறுகின்ற தொண்டை நாட்டின் வளப்பங்களை யான் அறிந்த அளவினாற் சில கூறுகின்றே னென்றவாறு. (16)

## Toṇṭai nāṭṭuvaḷam kūṟuvām eṉal

*puṇṭa rīkaṉav vāṇı purantaraṉ*
*maṇṭa lattara carpula varmuṉaṅ*
*kaṇṭu mēṉmai kaḻaṟum pukaḻuṭai*
*toṇṭai nāṭṭu vaḷaṅkaḷaic colluvām.*

I shall now relate the richness of *toṇṭai* land
Spoken of in earlier times by lotus-born Piramaṉ,
Sarasvati, Intiraṉ, Rulers on earth
And poets.

## 2. ஆற்றுப் படலம்

வேனிற்கால மேகங்களானவை உருத்திரமூர்த்தியின் உருவம் கொண்டு கடலிற் படிந்தன, நீரினை உண்டு மரகதமலைபோன்ற நிறத்தைப் பெற்றன, கோலவரையின் உச்சியிற் பரந்து பரவின. திருமாலின் கிஞ்சுமாரச் சக்கரத்தைப்போல மின்னி, பாஞ்சசன்னியத்தைப்போல முழங்கி, சரமாரியினைப் போல நீர்த்தாரைகளைப் பொழிந்தன. அந்த வெள்ளமானது மலைகளை வேருடன் பெயர்த்துக்கொண்டு வருவதுபோலக் காணப்பட்டது. அவ்வாறு பரந்த வெள்ளமானது மணி, முத்து, பொன், மரகதம், பவழம், வச்சிரப் பொடி, அணிகலன், சந்தனக்கட்டை, யானைகள், கொன்றை, வன்னி, அசோகு, புன்னாகம், ஆச்சா போன்ற பலவகைப் பொருள்களையும் மரங்களையும் வாரிக்கொண்டு வந்து வராகநதியில் சேர்ந்தது; ஏரி, குளங்களையும் நிறைத்தது. இவ்வாறு எங்கும் பரவி விளங்கிய அவ்வெள்ளமானது எங்கும் பரந்துவிளங்கும் திருமாலை நிகர்த்து விளங்கியது. மேலும் பலவகைத் தண்டுகள், தருப்பை, அன்னக்கூட்டம், தாமரைமலர்கள் போன்றவற்றோடு வருவதால் அது பிரமனுக்கு ஒப்பாகக் காணப்பட்டது; தோலையுடைய யானைகள், எலும்புகள், வேங்கை மரங்கள், அணிகலன்கள் போன்றவற்றைக் கொண்டு வருதலால் சங்கரனை நிகர்த்து விளங்கியது; கரும்புத்திரள், பலவகை மலர்கள், அவற்றில் மொய்க்கும் வண்டுகள் போன்றவற்றைக் கொண்டுவருதலால் மன்மதனைப்போன்று விளங்கியது; வேல் ஆகிய மரங்கள், (வேலமரம்) வள்ளிக்கிழங்கு, யானைகள், தாமரைமலர்கள் போன்றவற்றைத் தாங்கிவருதலால் வேலவனைப்போல விளங்கியது. மள்ளர்கள் அவ்வெள்ளத்தை வயலிற் பாய்ச்சி விதைகளை விதைக்கத் தொடங்கினார்கள்.

அவ் வெள்ளமானது குறிஞ்சி நிலத்தில் தோன்றியது; வயல்கள் நிறைந்த மருதநிலத்தில் தவழ்ந்து சென்றது; மலர்கள் நிறைந்த முல்லை நிலத்தின்வழி மிகவிரைந்து ஓடி, வராக நதியிற்கலந்தது; அவ் ஆற்றின்வழிப் பெருகி ஓடி நெய்தல் நிலத்தைக்கடந்து கடலிற்கலந்தது. இச்செயல் நல்லோர் செயல் பலவகைப் பயனையளிப்பதைப் போன்று விளங்கியது.

மருதநில வயல்களை நிறைத்து, வனங்களில் பாய்ந்து, வைக்கோல் போர், கரும்பு ஆலைப்பொருள்கள் போன்ற ஐந்திணைப் பொருள்களையெல்லாம் வாரிக் கொண்டுபோய்க் கடலில் புகுந்துகொள்ளும் வராகநதியின் வெள்ளமானது, சிந்தைமாறிய மாக்களைப்போலக் காட்சியளித்தது. வேதத்தால் துதிக்கப்படும் பரம்பொருள் அநேக திருப்பெயர்களைப் பெற்றவன்; சராசரங்களைத் தழைக்கச் செய்பவன்; திரிபுவனங்களைப் பாதுகாப்பவன். அவனைப்போலவே இவ்வெள்ளமானது ஆறு, கால், குளம், கூவல், அகழ், ஏரி எனப் பல பெயர்களைப் பெற்றுச் சராசரங்களைத் தழைக்கச் செய்வதால் அப்பரம்பொருளை நிகர்த்து விளங்கியது.

(மேக உற்பத்தி)

19. கலைமதி நீற ணிந்த கடவுளிற் கனம்வான் சென்றாங்கு
அலைமுகந் தேறிக் கொண்டல் அம்பொடும் வில்லி னோடும்
உலவிய மின்னி னோடும் ஓங்கிமா லுருவங் கொண்டு
மலைதலில் கோல மான வரையின்மீப் பரந்த வன்றே.

எ-து. மூன்று கலையினையுடைய சந்திரிகையினையும் விபூதியினையும் அணிந்த கடவுளாகிய உருத்திர மூர்த்தியினது உருவத்தைக் கொண்டு, வேனிற் காலத்தின்கண் மேகசால சமூகங்களானவை சென்று கடலிற் படிந்தன; அதன் பின் அக்கடலிடத்திற் றோன்றுகின்ற அலையினைப் பொருந்தின. பின்பு அந்த மேகசால சமூகங்களானவை அம்பாகிய நீரினைச் சேற்றுடனே உழக்கியுண்ட புகழினால், கரிய நிறங்கொண்டு அவ் அம்பினுடனே, இந்திரதனு வென்கிற வில்லினாற் சிறப்படைந்துலவுகின்ற மின்னலை விளக்கிய பான்மையினாலே, கார்க்காலத்திலே வோங்கி உலகளந்த திருமாலினதுருவாகிய மரகத மலை போன்ற திவ்விய நிறமும், அவரமபு போலும், சாரங்கமென்கிற வில்லினைப் போலும், அவரது திருமார்பில் விளங்குகின்ற ஸ்ரீ மகாலட்சுமியினைப் போலும் விளங்கிப் பிரகாசித்த அந்த ஞானோதயமான கோலாசல கிரியினது சிகரத்திற் படர்ந்து பரவின அம்மேகசாலங்க ளென்றவாறு. (1)

கலை - வட்டத்தின ஒருசிறுபகுதி, வட்டத்தின் 1/360 பகுதி பாகை எனப்படும். அப்பாகையில் 1/60 பகுதி கலை எனப்படும். எனவே கலை என்பது வட்டதின் 1/21600 பகுதியாகும். மதி - நிலவு நீறு - திருநீறு, விபூதி மின் - மின்னல் மீ - மேல்

உரை - சந்திரிகை - சந்திரன் சாரங்கம் - திருமாலினவில் இந்திரதனு - வானவில், மரகதமலை - பச்சை நிறமலை; திருமாலின் மேனி.

## Mēka uṟpatti

*kalaimati nīṟa ṇinta kaṭavuḷiṟ kaṉamvāṉ ceṉṟāṅku*
*alaimukan tēṟik koṇṭal ampoṭum villi ṉōṭum*
*ulaviya miṉṉi ṉōṭum ōṅkimā luruvaṅ koṇṭu*
*malaitalil kōla māṉa varaiyiṉmīp paranta vaṉṟē.*

# II. The River

## An Array of Clouds

Taking the shape of Lord Civaṉ
Who wears the crescent and Holy Ash,
The clouds settled on the wavy ocean
With the background of Intiraṉ's bow and lightning,

The waters rose dark as the Lord
And canopied above the Kōlavarai hill.

(முல்லைநிலத்தில் மழைவெள்ளம்)

20. ஆழிபோல் மின்னல் மின்னி
அவன்சங்கம் போலா லித்துப்
பாழிவில் லுதைத்த கோல்போல்
படுமழைத் தாரை சிந்தி
வாழியில் வுலகம் எங்கும்
வளைந்தவெள் ளருவி வெள்ளம்
சூழவம் மலைப்ப றித்துச்
சுமந்தன வனங்கள் எல்லாம்.

எ–து. இவ்விதமாய் நாராயண மூர்த்தியினது உருவங்கொண்டு கோலாசல சிகரத்திற் பரந்த மேகமானது அவரது கிஞ்சுமாரச் சக்கரத்தினைப்போல மின்னலை யிடையிடைகளிலே மின்னியும், அவரது பாஞ்சசன்னியச் சங்கத்தினது பேரொலி யினைப்போல முழங்கியும், அவரது வில்லிற் பூட்டி விடுகின்ற சரமாரியினைப்போல உளதாகிய சல தாரைகளைப் பொழிந்தும், விரதியை யடைகின்ற இவ்வுலகெங்கணும் மேகம் பொழிகின்ற சல வெள்ளங்களானவை பெருக்கெடுத்து அருவிசலம் சூழ்ந்து உலகின்கட் டோன்றிய மலையினங்களை வேருடனே பறித்துக்கொண்டு வருகின்ற வெள்ளருவிகளைச் சுமந்து நின்றன அந்த முல்லைப் புறவமாகிய ஆரண்ணியங்கள் சூழ்ந்த பூமி யெங்கணு மென்றவாறு. (2)

ஆழி – சக்கரம். சங்கம் – சங்கு. ஆலித்தல் – ஒலித்தல், முழங்குதல், பாழிவில் – பெருமை மிக்கவில். கோல் – அம்பு.

**உரை** – கிஞ்சுமாரச்சக்கரம் – இறைவனின சர்வ தேவமயமானசககரம்; முதலையின் வடிவத்தை உடையது கிஞ்சுமாரம் – முதலை. பாஞ்சசன்னியம் – திருமாலின் சங்கு; பஞ்சசன் என்பவன் சங்கு உருவமான ஒரு அசுரன். இவனைக் கடலில் புகுந்து கொன்ற திருமால் அவனது உடலைப் பாஞ்சசன்னியமாகப் பெற்றார். விரதி – முறையான. முல்லைப்புறவம் – முல்லைநிலமாகிய காடு.

## Mullainilattil maḻaiveḷḷam

*āḻipōl miṉṉal miṉṉi*
*avaṉcaṅkam pōlā littup*
*pāḻivil lutaitta kōlpōl*
*paṭumaḻait tārai cinti*

*vāḻiyil vulakam eṅkum*
*vaḷaintaveḷ ḷaruvi veḷḷam*
*cūḻavam malaippa ṟittuc*
*cumantaṉa vaṉaṅkaḷ ellām.*

## Floods in [1]*mullai* land

The lightning flashed like the discus
And resounded like the Lord's conch;
Torrents of rain poured down
Like arrows from His great bow;
Spreading flood encircled the earth
In all spaces, uprooting hills
And flowing as water-falls.

(வெள்ளம் வாரிவந்த செல்வங்கள்)

21. மணியொடு முத்தும் பொன்னும் மரகதம் துகிரே வச்சிர
மணியொடு சந்தம் சிந்தூ ரத்தொடு பகர்க டுக்கை
யணிகொளும் புன்னை வன்னி யசோகுநா ரத்தை யாச்சா
துணிவொடு வாரிக் கோலத் திருநதிக் குய்த்த தன்றே.

எ-து. அந்தக் காட்டிடமெல்லாம் பரந்த பெரிய வெள்ளமானது மணிகளையும், முததினங்களையும், பொற்சன்னஙகளையும், மரகதத்தினையும், பவழத்தினையும் வசசிரப்பொடிகளையும, ஆபரணததினையும், சந்தன வனங்களையும், யானைக் கூட்டஙகளையும், கொன்றை விருட்சங்களையும், புட்பங்களால் அலங்காரமாய் விளங்கித் தோன்றுகின்ற புன்னாக விருட்சங்களையும், வன்னி, அசோகு விருட்சங்களையும், நாரத்தை விருட்சஙகளையும், ஆச்சா விருட்சங்களையும் துண்டித்து வாரிக்கொண்டு கோலாசல நதியாகிய வராக நதியின்கண் சேர்ந்த தென்றவாறு. (3)

துகிர் - பவளம், வச்சிரம் - வயிரம் சிந்தூரம் - யானை. கடுக்கை - கொன்றைமரம்.

---

1 The Tamils in ancient times divided their tracts of land into *kuṟiñci*, *pālai*, *mullai*, *marutam* and *neytal* according to the special characteristics of the region.

## Veḷḷam vārivanta celvaṅkaḷ

*maṇiyoṭu muttum poṉṉum marakatam tukirē vaccira*
*maṇiyoṭu cantam cintū rattoṭu pakarka ṭukkai*
*yaṇikoḷum puṉṉai vaṉṉi yacōkunā rattai yāccā*
*tuṇivoṭu vārik kōlat tirunatik kuytta taṉṟē.*

## The Riches carried by the flood

The flood uprooted gems, pearls,
Gold, emeralds, corals, diamonds,
Sandalwood, herds of elephants,
*Koṉṟai* trees, mastwood, mesquite,
Acōka, wildlime, and robusta trees,
And carried them to settle down
In the holy river of varāka.

(வெள்ளம் ஏரி, குளங்களை நிறைத்தல்)

22. திசைகளும் நிறைந்த வெள்ளம் திரைகளு மலம்ப வேகி
விசையொடு மதிர்வ ராக நதியினில் வீழ்ந்து பொங்கி
அசைவிலாக் கரைய ழித்து அலைகைகள் விரித்து நீண்டு
குசையுறு மலர்த்த டங்கள் குளங்களே ரிகள்நி றைந்து.

எ-து. திசைகளெல்லாம் நிறைந்து வருகின்ற வெள்ளமானது அலைகளானவை முழங்கத்தக்கதாக அதிக விசையுடனே போய்ச் சத்திக்காநின்ற வராக நதியிலே வீழ்வது ஒன்று அனந்தனந்த மாய்ப் பெருகிப் பொங்கி அசைவில்லாத கரைகளையெல்லாம் அழித்து அலையென்கின்ற கைகளை யனந்தமாய் விரித்து, நீண்டதாய தர்ப்பைகளானவை பவித்திரமாய்ப் பொலிந்து விளங்கிய தாமரைத் தடாகங்கள், குளங்கள், ஏரிகளை யெல்லாம் சமுத்தியாய் நிறைத்தது யென்றவாறு. (4)

திரை - அலை . குசை - தருப்பை. தடம் - தாமரைக் குளம்

உரை - சமுத்தி - நிறைவு. அனந்தனந்தம் - அளவில்லாமல்.

## Veḷḷam ēri, kuḷaṅkaḷai niṟaittal

*ticaikaḷum niṟainta veḷḷam tiraikaḷu malampa vēki*
*vicaiyoṭu matirva rāka natiyiṉil vīḻntu poṅki*
*acaivilāk karaiya ḻittu alaikaikaḷ virittu nīṇṭu*
*kucaiyuṟu malartta ṭaṅkaḷ kuḷaṅkaḷē rikaḷni ṟaintu.*

## The Flood fills up the tanks and tarns

The flood resounding with waves
And filling the directions
Poured into the *varāka* river fast,
Rose upwards, broke the firm embankments
With spreading waves that were like hands
And rendered brimful the lotus tanks;
Lakes, and pools rich in darbha grass.

(வெள்ளமும் நாராயணனும்)

23. வானி ழிந்து மலையிற் றவழ்ந்துமாக்
காணிற் சென்று கருகிச் சராசரம்
நானி லத்தி னுயிரி னயந்திடு
ஞான மேனியென் நாதனை யொத்தவே.

எ-து. வானாகிய மேகத்தினின்றிழிந்த சலதாரையானது மலையிடங்களிற் தவழ்தல் செய்து, மகத்தாகிய காட்டிடங்களிற் சென்று கடுகிய வேகத்துடனே பிரவேசித்து, இந்த நானிலமாகிய உலகத்தின்கண் பொருந்திய சராசரமாகிய நால்வகைத் தோற்றம், ஏழு வகைப் பிறப்பு, எண்பத்து நான்கு நூறாயிர சீவ பேதத்திலுஞ் சீவான்மா, அந்தரான்மா, பரமான்மாவாய் நிறைந் தொளிராநின்ற ஞானமே திருமேனியாகவுடைய எமது கர்த்தாவாகிய நாராயணமூர்த்தியினைப் போன்றது அவ்வெள்ளப்பெருக் கென்றவாறு. (5)

வான் - ஆகாயம், (இஙகு) மேகம். இழிந்து - இறங்கி. நயந்திடும் - நிறைந்துவிளங்கும்.

**உரை** - நால்வகைத தோற்றம் - பை, முட்டை, நிலம் வியர்வை. எழுவகைப்பிறப்பு - தேவர், மக்கள் விலங்கு, புள், நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம், இவற்றின்யோனிபேதம் எண்பத்துநான்கு நூறாயிரம் சீவான்மா - (சீவாத்மா) உயிர் அந்தரான்மா - (அந்தராத்மா) உயிருக்குள் உயிராயிருப்பவன். பரமான்மா- (பரமாத்மா) தூய உயிர்: இறைவன்

## Veḷḷamum nārāyaṉaṉum

*vāṉi ḻintu malaiyiṟ ṟavaḻntumāk*
*kāṉiṟ ceṉṟu karukic carācaram*
*nāṉi latti ṉuyiri ṉayantiṭu*
*ñāṉa mēṉiyeṉ nātaṉai yottavē.*

## The Flood and Nārāyaṇaṉ

The rains that descended from the sky
Were like my Lord Nārāyaṇaṉ's image
As they crawled on the mountains,
Entered the forests to become
The Indwelling Sustainer
For all life on earth.

(வெள்ளமும் பிரமனும்)

24. தண்டு நூலுந் தருப்பையுங் குண்டிகை
கொண்டு வன்னக் குழாங்க ளிரிந்திட
புண்ட ரீகமும் மேலுளப் போவதால்
மண்ட லத்து மலரயன் மானுமே.

எ-து. மேலும் அந்த வெள்ளப்பெருக்கானது பிரமாவைப் போன்றிருந்தது. அது எத்தன்மைத் தென்றால், பிரமாவானவர் சிறப்பமைந்த தண்டு, கமண்டலம் தாங்கிய கராம்புயமும், முப்புரி நூலும் தருப்பைகளும் அன்னவாகனமும் தாமரைப் பீடமும் விளங்கப் பிரகாசிக்கின்றவர். இந்த வெள்ளப் பெருக்கும் தண்டும் நூல்களும் தருப்பைகளும் குண்டிகையும் அன்னக்குழாங்களுந் தாமரைக்கமலங்களுங் கூடி வருதலால் இந்த மண்டலத்தினில் மலரயனாகிய பிரமாவினை ஒத்தது அந்த வெள்ளப்பெருக் கென்றவாறு. (6)

தண்டு, கமண்டலம் - சைவத்தவத்தோர் தாங்கும் பஞ்சமுத்திரைகளில் இரண்டும் அடங்கும். பஞ்சமுத்திரைகள் - உத்திராக்கம் கமண்டலம், காவிஉடை, சடை, தண்டு என்பன தண்டு - தடி. கமண்டலம் - நீர்கொள்ளும் பாத்திரம். நூல் - பூணூல், குண்டிகை-கமண்டலம். இரிந்திட - ஓட; வெள்ளப்பெருக்கு புண்டரீகம் - தாமரை.

## Veḷḷamum Piramaṉum

*taṇṭu nūlun taruppaiyuṅ kuṇṭikai*
*koṇṭu vaṉṉak kuḻāṅka ḷirintiṭa*
*puṇṭa rīkamum mēluḷap pōvatāl*
*maṇṭa lattu malarayaṉ māṉumē.*

## The Flood and Piramaṉ

The Flood resembled Piramaṉ
As it carried bamboo, threads,
The darbha grass, pots,
And had flights of swans swimming
And lotuses a-bloom.

(வெள்ளமும் சங்கரனும்)

25. தோலெ லும்பும் பணியும் சுமந்துமான்
மேலும் கொன்றையும் மேவுமுன் னாண்மதி
போல ணிந்து புலியொடும் போவதால்
வேலன் றந்தையை யொத்தது வெள்ளமே.

எ-து. மீட்டுமந்த வெள்ளமானது வேலவன் தந்தையாகிய சங்கரனை யொத்தது. அது எத்தன்மையினா லென்றால் சிவன் அணிகின்ற தோலினை ஆடையாய்ப் புனைந்தும், என்பினையும், பாந்தளாகிய சர்ப்பத்தினையும் புனைந்து, பராசத்தியினை இடப்புறத்தில் தாஙகிய, கொன்றை மாலையினை மேவுகின்ற, பிரதமையிற் பிரவேசிக்காநின்ற இளம் பிறையினைச் சூடி விளங்குகின்ற இறைவனது கருமத்தைப் புனைகின்றபடியே, அந்த வெள்ளமும் தோலாகிய யானைக் கூட்டங்களையும், என்பினையும் ஆபரணக் கூட்டங்களையுமான சகலவளங்களையும், வேங்கை மரங்களையும் உருட்டிக் கொண்டு வருகின்றபடியால் அந்த வெள்ளமானது சங்கரனையொத்தது யென்றவாறு (7)

மான் - சக்தி நாண்மதி - நாள் + மதி, இளம்பிறைச் சந்திரன். பணி - பாம்பு, நகைகள் புலி - வேங்கை, வேங்கைமரம் வேலன் - முருகபெருமான்

### Veḷḷamum caṅkaraṉum

*tōle lumpum paṇiyum cumantumāṉ*
*mēlum koṉṟaiyum mēvumuṉ ṉāṇmati*
*pōla ṇintu puliyoṭum pōvatāl*
*vēlaṉ ṟantaiyai yottatu veḷḷamē.*

### The Flood and Civaṉ

The Flood resembled [2]Vēla's father,
Civaṉ; it carried skin and bones,
And snakes like the Lord
Who has Sakti, wears *koṉṟai* blooms
And the crescent moon,
Moving along with *vēṅkai* trees.

---

2. One of the names of Subramania.

(வெள்ளமும் திருமாலும்)

26. பொன்னும் மண்ணும் போல்மணி யாரமும்
மின்னு சங்கந் திகிரியு மேந்திமெய்
மன்னு றுப்பின் மலர்ந்தசெந் தாமரை
யென்ன மாலி னியங்கிய நீத்தமே.

எ-து. மாலினையொத்து வந்த மீட்டுமவ் வெள்ளமாயது ஸ்ரீ மகாலட்சுமி தேவியும் பூமிதேவியும் பொருந்தி விளங்குதலானும், பொலிவு பெற்ற கவுத்துவாபரண திவ்விய காந்தியை விரித்து விளங்குதலானும், பிரகாசிக்காநின்ற சங்கமுந் திகிரியாகிய சக்கரமும் இருபுயத்தின்கண் ணேந்தலானும், மலர்ந்த செந்தாமரைச் சமூகம் பேரண்ட பலவுறுப்புகள் பொருந்துதலானும், இந்த வெள்ளத்தின்கண் பொன்னி னரிசன்னங்கள் இப் பூமண்டலங்களில் பொருந்துதலானும், பொலிவு பெற்ற மணியாரங்களை வாரி வருகின்ற தன்மையினாலும் மின்னுகின்ற பல சங்கக் கூட்டங்களாய்ப் பல பொருளுமேந்தி வருதலானும், செந்தாமரைத் திரள்க ளிடையிடையிற் பொலிதலானும் மேற்கூறிய திருமாலினை யொத்தது என்றவாறு. (8)

பொன் - பொன்னாகிய செல்வம், திருமகள். மண் - நிலவுலகம், பூமாதேவி, மணியாரம் - ஒளிபொருந்திய கவுத்துவ ஆபரணம்; பதுமராகமணி மாலை; தாமரை மணிமாலை எனினுமாம்.

உரை - பொன்னினரிசன்னங்கள் - பொன் போன்ற மஞ்சள் அரிசனம் - மஞ்சள்.

## Veḷḷamum tirumālum

*ponnum mannum pōlmani yāramum*
*minnu cankan tikiriyu mēntimey*
*mannu ruppin malarntacen tāmarai*
*yenna māli niyankiya nittamē.*

## The Flood and Tirumāl

The flood resembled Tirumāl
As it had gold, earth, necklaces
Of gems, bright conches, wheels,
A spread of lotuses in bloom
Lovely like the limbs of the Lord.

(வெள்ளமும் மன்மதனும்)

27. கரும்பும் வண்டுங் கடிமலர்த் தென்றலும்
விரும்பு வோர்க்கு மனங்களி கூரலும்
சுரும்பு நாரி தொடுக்கு மதனவேள்
அரும்பு வண்ண மழகிய வோதமே.

எ-து. மேலும் அந்த வெள்ளமானது மன்மதனது உருவ எழிலை யொத்தது. எவ்வாறு எனில் கரும்புவில்லை ஏந்தியும், வண்டுகள் பொருந்தவும், கடிமலராகிய திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற பஞ்ச பாணத்தைத் தூவியும், தென்றல் தேரினை யூர்ந்தும், விரும்புவோர்களைக் கவர்கின்ற சுரும்பு நாரியைப் பூட்டிய திறத்தோடும், விளங்கப்பட்டவரா கையா லிந்த வெள்ளமும் கரும்புத் திரளினையும், வண்டின் கூட்டங்களையும், நானாவிதமாகிய மலரீட்டங்களையும், தென்றல் காற்றினையு முடைத்தா யிருக்கின்ற தாகையால் மேற்கூறிய மன்மதனை யொத்தது அந்த வெள்ளப்பெருக் கென்றவாறு. (9)

கடிமலர்-புதுமணமிக்கமலர். களிகூரல் - மகிழ்ச்சிமிகுதல்.சுரும்பு - வண்டு. நாரி - வில்லின் நாண். மதனன் - மன்மதன். வேள் - மன்மதன். இருபெயரொட்டு. ஓதம் - வெள்ளம்

உரை - பரிமளம் - மிகுந்தமணம். பஞ்சபாணம் - அசோகு, சூதம், நீலம், முல்லை, வனசம் ஆகிய மலர்களாலான மன்மதன் கணை

## Veḷḷamum maṉmataṉum

*karumpum vaṇtuṅ kaṭimalart teṉṟalum*
*virumpu vōrkku maṉaṅkaḷi kūralum*
*curumpu nāri toṭukku mataṉavēḷ*
*arumpu vaṇṇa maḻakiya vōtamē.*

## The Flood and Maṉmataṉ

The lovely flood resembled Maṉmataṉ
As it carried sugarcanes.
Bees buzzed in the southern wind
Bringing the fragrance of flowers.
It gifted pleasure to aspirants
As it was pretty with blossoms.

(வெள்ளமும் வேலனும்)

28. வேலும் வள்ளியும் யானையும் மேவிப்பொன்
னாலு நூலொடு மாறு முகத்தினிற்
சாலும் பன்னிரு கைகள்பொற் றாமரை
போலும் நீத்தமும் வேலனைப் போன்றதே.

எ-து. பின்னுமந்த வெள்ளமானது வேலாயுதனை யொத்தது. வரசத்தி வேலினைக் கரத்தினிற் தாங்குதலானும், வள்ளி நாயகி, தெய்வயானையா ரென்கின்ற அருட்சத்திகளைக் களவு, கற்பினால் கவர்தலானும், பொன் மயமாகிய முப்புரி நூலானது மார்பில் அசைந்தாடுதலானும், ஆறு திருமுகங்களினும் பன்னிரு கைமலரானவை பொலிவெய்தலானும், இந்த வெள்ளப் பெருக்கும் வேல விருட்சங்களையும் வள்ளிக்கிழங்கினையும் யானைக் கூட்டங்களையும் ஆறு முகத்தவனது பன்னிரு கராம்புய மலரினை யொத்த தாமரைப் புட்பங்களையும் மருவி வருதலானும் மேற்கூறிய வேலவனையொத்தது என்றவாறு. (10)

யானை - தெய்வயானை. பொன்னாலுநூல் - முப்புரி நூல்; பொன் + ஆலும் + நூல் - பொன்னால் ஆனநூல் சாலும் - ஒக்கும். நீத்தம - வெள்ளம்.

## Veḷḷamum vēlaṉum

*vēlum vaḷḷiyum yāṉaiyum mēvippoṉ*
*ṉālu nūloṭu māṟu mukattiṉiṟ*
*cālum paṉṉiru kaikaḷpoṟ ṟāmarai*
*pōlum nīttamum vēlaṉaip pōṉṟatē.*

## The Flood and Vēlaṉ

The flood was like Vēlaṉ
Carrying as it did *Vēla* trees,
*Vaḷḷi* roots, herds of [3]elephants,
Golden threads gleaming on the waters,
And golden lotuses like the twelve hands
Illumined by the six visages.

(வெள்ளமும் வேளாளரும்)

29. வெள்ள மோங்கி விரிந்து பரந்தெங்குங்
கொள்ளை கொள்ளையிற் கால்களிற் கூட்டியே
பள்ளர் மள்ளர் பறைகள் கறங்கமீன்
துள்ளத் துள்ளநீர் சேர்த்துச்செய் தூர்த்துவார்.

எ-து. இத்தன்மையது ஆகிய வெள்ளப் பரப்பானது பலவாய் விரிந்து விரிந்தெங்குங் கொள்ளை கொள்ளையிற் காலினிடங்களெல்லாம் பிரவேசித்த மாத்திரத்தில், பள்ளமாகிய

3. The *vēla* tree reminds the poet of Subramanya's lance, the *vaḷḷi* root of his consort Vaḷḷi and the elephants (*yāṉai*) of Subramana's other consort, Teyvayāṉai.

வயலிடத்திற் பிரவேசிக்காநின்ற மள்ளர்கள் பறைகளாகிய பம்பை முதலானதுஞ் சத்திக்கத்தக்கதாய் அணை, கரைகட்ட, மீன் கூட்டங்களானவை துள்ளித் துள்ளிப்பாயவும், நீர் வெள்ளத்தை வயலிடத்திற் பாய்ச்சி விதைகளை விதைப்பார்கள் மள்ளர்கள் என்றவாறு. (11)

கால் - வாய்க்கால் மருஉச்சொல் பறை - ஒருவகை மேளம். கறங்க - ஒலிக்க. செய் - வயல் தூர்த்துவார் - நிரப்புவார்

## Veḷḷamum vēḷāḷarum

*veḷḷa mōṅki virintu parantеṅkuṅ*
*koḷḷai koḷḷaiyiṟ kālkaḷiṟ kūṭṭiyē*
*paḷḷar maḷḷar paṟaikaḷ kaṟaṅkamiṉ*
*tuḷḷat tuḷḷaṉīr cērttuccey tūrttuvār.*

## The Flood and Farmers

As the floods sprang high,
And spread around, reaching out
In plenty into the canals,
The [4]*maḷḷars* entered the lowlands,
Beat the *paṟai* drum,
Set up ridges where the fish leap
And directing the waters to fields
Sowed the seeds.

(வெள்ளமும் நல்லோரும்)

30. குன்றிடைத் தோன்றி மெல்லக் குளிர்வயல் தவழ்ந்து மிக்க
மன்றலத் தடங்க ணின்று மலர்ப்பொழில் நடந்து மான்போல்
சென்றது வராக வாற்றில் சேர்ந்தது வேலை வெள்ளம்
நன்றது புரிவோர் செய்யும் நடக்கையும் ஒத்த தம்மா.

எ-து. குறிஞ்சி நிலமாகிய மலையின்கண் உற்பவித்து, மெல்லென்கின்ற நடையினாற் குளிர்ந்த வயலிடத்திற் தவழ்தல் செய்து, திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற செந்தாமரை, வெண்டாமரை, செங்கழுநீர், நீலோற்பல வாவியினிடத்தில் நின்று, மலர்களை யலர்ந் தொளிராநின்ற உத்தியான வனங்களில் நடந்து, மானைப்போ லதிவேகமாய்ச் சென்று அந்த

---

4. farmers

வெள்ளமானது வராக நதியிலே பிரவேசித்த மாத்திரத்தில் அனந்தமாய்ப் பெருகிக் கடலி டத்திற் புகுந்தது எத்தன்மையென்றால், நன்கினைப்புரிந்தோர் செய்யும் நடக்கையானது அனேக பிரயோசனத்தைத் தருமாறு போன்றிருந்தது என்றவாறு. (12)

மன்றல்-மணம், வாசனை. பொழில்-மலர்ச்சோலை. வேலை-வெள்ளம்-கடல்போன்ற வெள்ளம்

உரை - உத்தியானவனம்-மலர்ச்சோலை.

## Vel̤l̤amum nallōrum

*kun̲ritait tōn̲ri mellak kul̤irvayal taval̲ntu mikka*
*man̲ralat tataṅka nin̲ru malarppol̲il natantu mān̲pōl*
*cen̲ratu varāka vār̲ril cērntatu vēlai vel̤l̤am*
*nan̲ratu purivōr ceyyum natakkaiyum otta tammā.*

## The Flood and Noble Persons

Springing in the mountain
Gently crawling towards cool fields,
Tarrying in fragrant lakes,
And walking in flowering groves,
The flood sped like a deer
To join the *varāka* river.
It was an image of how noble ones act
And the good that accrues from the action.

(வராகநதியும் கடலும்)

31. வயல்களை நிறைத்து வாச மலர்த்தண் டலைப்பு ரண்டு
கயல்விராற் கன்றுந் துள்ளக் கானவ ரென்னத் துன்னி
அயலுறும் போர டித்து அருங்கரும் பாலைப் போக்கி
மயலுறு மாந்த ரென்ன அழிவில்வா ரியிற்பு குந்த.

எ-து. மருத நிலத்தின்கண் மருவிய வயல்களையெல்லாம் [1]சமுத்தியாக நிறைவு செய்து, திவ்விய சுகந்த பரிமளங்களைக் கமழ்கின்ற தண்டலையாகிய உத்தியான வனங்களிற் பாய்ந்து பரவுதல் செய்து, கயல் மீன்களும், விரால் கன்றுகளும் துள்ளத் தக்கதாய்க் கானவராகிய வேடர் கூட்டங்களைப் போல, அருகிலுறுகின்ற நெற்போர் முதலிய வஸ்துக்களெல்லாம் அந்தப் புலந்தோறும் கானவர் கவர்தல்போலக் கவர்ந்து சுமந்து கொண்டும், அரிய கருப்பாலை [2]இயந்திரங்களிற் பொருந்துகின்ற பொருள்களை யெல்லாம் வாரிக்கொண்டு போக்கியும்,

அயலாகிய சிந்தை மாறிய மாக்களைப்போல வைந்திணைப் பொருள்களையுங் கொண்டு கடலிடத்திற் புகுந்தது வராகநதியினது வெள்ளப்பெருக் கென்றவாறு. (13)

தண்டலை - தண் + தலை - தண் - குளிர்ச்சி; தலை - இடம்; பூஞ்சோலை. கயல் - மீன் கானவர் - வேடர். மயல் - மயக்கம், ஆசை வாரி - கடல்

உரை - சமுத்தியாக - மிகுதியாக நிறையுமாறு கருப்பாலை - கரும்பு + ஆலை. ஐந்திணைப் பொருள்- குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐவகை நிலங்களில் உற்பத்தியாகும் பொருள.

பா. வே. - 1 சமுாதியாக 2 யெந்திரங்களில்

## Varākanatiyum kaṭalum

*vayalkaḷai niṟaittu vāca malarttaṉ taḷaippu raṇṭu*
*kayalvirāṟ kaṉṟun tuḷḷak kāṉava reṉṉat tuṉṉi*
*ayaluṟum pōra ṭittu aruṅkarum pālaip pōkki*
*mayaluṟu mānta reṉṉa aḻivilvā riyiṟpu kunta.*

## The Varāka River and the Sea

Having sumptuously filled the fields
And rolled in the scented gardens,
With *kayal* fish leaping in it,
Resembling hunters who carry away
Stalks of paddy in their sight
[5]And people who have stumbled
In stealing away rich produce,
The Varāka river entered the sea.

(வெள்ளமும் பரம்பொருளும்)

32. பேர னந்தமும் பெற்றுச் சராசரம்
ஊர னந்தந் தழைக்கநின் றோம்பலாய்ச்
சாரு மெவ்வுல கங்க டழைத்திடப்
பாரும் வேதப் பரம்பொரு ளாகுமால்.

எ-து மேலுமந்த வெள்ளமாயது பரம்பொருளை யொத்திருந்தது அப்பரப பொருளானது பேர்களனந்தமாய்ப பெற்றுச் சராசரங்களும் ஊரனந்தங்களும் தழைக்கத்தக்கதாகட

5. People who have stumbled from the straightforward path by yielding to temptation.

பாதுகாக்குந் தன்மையினாலும், சார்ந்திருக்காநின்ற திரிபுவனங்களை விரத்திக்கச் செய்கையாலும். மேலோர்கள் புகழ்கின்ற வேதத்தாற் துதிக்கின்ற பரம்பொருளினை யொத்தது இந்த வெள்ளம், ஆறு, கால், குளம், கூவல், அகழ், ஏரி முதலாகிய பெயரினை அனந்தமாய்ப் பெற்றுச் சராசரங்களையும் பல நகரங்களையுந் தழைக்கச் செய்குதலானும் வேதங்களேத்துகின்ற மேற்கூறிய பரம்பொருளினை யொத்தது என்றவாறு (14)

அனந்தம் - அளவற்ற. ஓம்பல் - பாதுகாத்தல்

உரை - விரத்திக்க - விருத்தியாகுமாறு, செழிப்படையுமாறு

ஆற்றுப் படலம் முற்றிற்று.

## Veḷḷamum paramporuḷum

*pēra ṉantamum peṟṟuc carācaram*
*ūra ṉantat taḻaikkaniṉ ṟompalāyc*
*cāru mevvula kaṅka ṭaḻaittiṭap*
*pārum vētap paramporu ḷākumāl.*

## The Flood and the Supreme

Holding innumerable names,
With the capacity to guard
The countless universes,
Bringing prosperity to the three worlds
That lean upon it, the flood
Resembled the Supreme
Who is hymned by the Vēdas.

# 3. நாட்டுப் படலம்

நாட்டில் சோலைகள் மிகுந்திருந்தன. அவற்றில் கொடிப்பூக்களும் கோட்டுப் பூக்களும் நிறைந்திருந்தன. அம்மலர்களில் இலக்குமியும் வண்டுகளும் ஒளியுடன் விளங்கினர். அவ்வனத்தில் முக்கனிகள், தேனீட்டம் போன்றவை நிறைந்திருந்தன. தாமரைத் தடாகங்களில் அன்னங்களும், மாமரங்களில் மயிலும் குயிலும் நிறைந்து விளங்கின. வராக நதியோரங்களில் உயர்ந்த கால்களையுடைய சேம்புகள் வளர்ந்திருந்தன. காற்றாகிய கால் தாக்கச சேம்பின் கால்கள் சாய்ந்து செங்கழுநீர் மலர்களின் இதழ்களை உதிர்த்தன. மதகுகள் நிறைந்த வராகநதியின் கால்வாய்கள் தோறும் சங்குகள் நிறைந்திருந்தன. இத்தன்மையானது பலவகைச் சாதிகளும் ஒன்றுகூடி மகிழ்ந்து வாழும் தன்மைக்கு எடுத்துக் காட்டாய் விளங்கியது

காராளர்கள் வெள்ளத்தைக்கண்ட மகிழ்ச்சியினால் இந்திரனைப் புகழ்ந்துபாடிப் பொன்னேரினை உழத்தொடங்கினார்கள். ஏர்களில் பூட்டப்பட்ட எருமைக் கிடாக்கள் அருகிலுள்ள கரும்புகளை முறித்துத் தின்றன. அக்கரும்பின் கணுக்களிலிருந்து முத்துகள் சிதறின. கரும்புக்கு வேலியாக விளங்கிய மூங்கில்கள் ஒடிந்து முத்துகளைச் சிதறின. உழவர்கள் சுழற்றிய உழவுக்கோல்களால் அம்முத்துகள் நிலங்களில் பரவி விளங்கின. படைசசால்களில் சங்குகளும் முத்துகளும் நிறைந்தன. வாய்க் கால்களில் அன்னக்கூட்டங்கள் மகிழ்ந்து விளையாடின. மள்ளர்கள் தங்கள் விளைச்சலில் ஒரு பாகத்தை அரங்கநாயகனுக்கு ஊட்டுவதாகப் பிரார்த்தனை செய்து, பரம்படித்து, செந்நெல் முளைகளை விதைத்தார்கள். பின நாற்றுநட்டு, நீர்பாய்ச்சி, களை நீக்கிப் பயிர்களைப் பக்குவப்படுத்தினார்கள். களைகளை வீசிய ஆரவாரத்தினால் துள்ளும் மீன்களும் வண்டுகளும் பள்ளர் மகளிரின் கண்களைப் போல ஒளிவீசின. நீலோற்பல மலர்கள் அம் மங்கையரின் கண்ணிழலினைப் போலவும், செவ்வாம்பல அவர்களின் வாயினைப்போலவும், செந்தாமரை அவர்தம் முகத்தினைப் போலவும விளங்கின. அம்மலர்களின் தோற்றத்தைக்கண்ட பள்ளர்கள் நமது மகளிரோவென்று மருண்டு நின்றார்கள். செந்நெலின் குலைகள் சாய, நன்னாளில், அனைவரும் கூடி அறுவடை செய்து மேருவினைப்போலப் போர்களைக் குவித்தார்கள்; களத்தில் அடித்து நெல்லினை மலையாகக் குவித்தார்கள்; பதரினை நீக்கிக், காளிமுதலிய கிராம தேவதைகளுக்குப் படைத்து, ஊழியருக்குப் பகிர்ந்தளித்தார்கள்; தொண்டைமண்டலத்து அரசனாகிய அரிவிரதமகாராசனுக்கு ஆறில் ஒருகடமை செலுத்தி, அரங்கநாயகரைப் பூசித்துப், பிதுர் தேவதைகள், அதிதிகள், அந்தணர்கள் ஆகியோருக்குரிய தருமங்களைச் செய்து ஆனந்தமடைந்தார்கள். அதனால் ஆலயங்களுக்கான தருமங்களும் நடைபெற்றன. நாட்டில் பலவிதமலர்கள் ஒன்று சேர்ந்தாற்போல மகளிர்க்கூட்டம் விளங்கியது அமமகளிர் தேவகன்னியரைப்போல நீரைச் சுமந்து வந்தார்கள். நாட்டில் பலவகை மரங்கள் நிறைந்திருந்தன. மகளிர் நீராடிய நீரின் பெருக்கினால் அவை தழைத்து ஓங்கின. சோலைகளில் நிறைந்த மலர்களும், தென்னையின் பாளைகளும், துளிக்கின்ற

தேனும் மதுவும் வயல்களிலும் குளங்களிலும் பாய்ந்து அங்கிருந்த மீன்களை உண்பித்து மகிழ்வித்தன. நாட்டில் மனுநெறி தழைக்க மாதமும்மாரி பெய்து, முப்போகம் விளைந்தது சோலை மயில்கள் மகளிரின் சாயலைக்காட்டின; அன்னங்கள் அவர்தம் நடையைக்காட்டின; கயல்கள் அவருடைய கண்களையும், கமுக மரங்கள் கழுத்தினையும், செவ்விளநீர் தங்கக்குடம், தாமரை அரும்பு ஆகியவை கொங்கைகளையும், மேகங்கள் கூந்தலையும் எடுத்துக்காட்டின. வயல்களில் முத்துகளும், குளங்களில் மீன்களும் நிரம்பிக் கிடந்தன. சோலைகள் மலர்களின் மணத்தையும், மேகங்கள் புகையின் மணத்தையும் பரப்பின. நெற்பயிர்கள் கருப்பஞ் சோலையோ என ஐயுறுமாறு காணப்படும். கரும்புத் தோட்டம் கமுகந் தோப்போ என ஐயுறுமாறு விளங்கும். கமுகந்தோட்டம் தென்னஞ் சோலைபோலக் காட்சியளிக்கும். புன்னை மலர்கள் இலக்குமியாரின் அழகைக் காட்டின. தாமரை மலர்கள் மறையவர் கைகளைப்போல விளங்கின. சோலைகள் நாடகமேடைகளாக விளங்கின கழனிகளில் கழுநீர்த்தேக்கம் மிகுந்து காணப்பட்டது. மலையருவிகள் தேனருவிகளாக விளங்கின. மா மரங்களில் குயில்கள் நிறைந்திருந்தன. சந்தனக் காடுகளில் வண்டுகள் மிக்கிருந்தன. மக்களின் நாவில் அறமே விளங்கியது.

**(சோலைப் பொருள்கள்)**

33. **பூவில் வண்டுந் திருவும் பொலியுஞ்செங்**
**காவி லாருங் கனியுஞ்செந் தேனிறால்**
**வாவி லாரும் வளர்மல ரன்னமும்**
**மாவி லாரும் மயிலுங் குயிலுமே.**

எ-து. செந்தாமரை, வெண்டாமரை, அல்லி, நீலோற்பலம் முதலிய கொடிப் பூவினும் புன்னாகம், தேவதாரு முதலிய கோட்டுப் பூவின்கண்ணும் ஸ்ரீ மகாலட்சுமி தேவியாரும் வண்டுகளும் பிரகாசித்து விளங்கவும், செவ்விய பிரபலமாகிய உத்தியான வனங்கடோறும முக்கனியாகிய மா, பலா, கதலி முதலிய கனிவர்க்கங்களும் தேனீட்டங்களும் விளங்கவும், தாமரைத்தடாக முதலியாதிகளில் வளர்ந் தொளிராநின்ற, வைதீக உணவையுடைய அன்னக்கூட்டங்களும், அந்தத் தடாகப் பந்திகள் சூழ்ந்த சோலையின்கண் மா விருட்சங்களில், மரகத வடிவாகிய அனேக மயில் கூட்டங்களும், குயில் கூட்டங்களும் நிறைவெய்திப் பிரகாசித்து விளங்கின என்றவாறு. (1)

திரு - இலக்குமி பொலிதல் - மிகுந்துவிளங்குதல். கா-சோலை ஆரும் - நிறைந்துள்ள தேனிறால் - தேன்கூடு. வாவி - குளம். மா - மாமரம்.

உரை - கதலி - வாழை. வைதீக உணவு - சைவ உணவு - அன்னத்தின் உணவாகக் கூறப்படுகிறது.

## Cōlaip poruḷkaḷ

*pūvil vaṇṭun tiruvum poliyuñceṅ*
*kāvi lāruṅ kaṉiyuñcen tēṉirāl*
*vāvi lārum vaḷarmala raṉṉamum*
*māvi lārum mayiluṅ kuyilumē.*

## III. The Land

### The Groves

The bees and the Goddess of Wealth
Glowed in the flowers; in the groves
An abundance of fruits and bee hives;
The lakes had lotuses and swans;
On the mango trees a large number
Of *kuyils* and peacocks.

**(வராக நதி)**

34. **சேம்பு கால்பொரச் செங்கழு நீருகத்**
**தூம்பு கோடிச் சுரிவளைத் தூரிட**
**சாம்பு நீர்கள் தனித்தனி போவன**
**கூம்பு சாதியின் கொள்கையி னொத்ததே.**

எ-து அந்த வராக நதியிலே பொருந்தி வளர்கின்ற சேம்புகளானவை காலாகிய தண்டுகளுயர்ந்து நீண்டிருக்க, அதன்மேல் காற்றுத் தாக்க அது வளைந்து செங்கழுநீரி னிதழ்கள உதிரத்தக்கதாகவும், பின்னையும் அந்தக் கால்கடோறும் தூம்பாகிய மதகுகள் அனேகம் விளங்கிட, வராக நதியினது சலப்பிரவாக மிகுதியும் வருகின்ற கால்கள் தோறும் கோடி கோடிகளாய்ச் சுரிமுகச் சங்கமானவை தொனிக்கவும், பின்னும் அந்தக் கால்வழிகளிலே பிரவேசித்து வருகின்ற நீர்வெளளமாயது பல கால்வழிகடோறும் பிரவேசித்தது எத்தன்மை யென்றால் பலவாகிய சாதிகள் பொருந்திக் கூடி வாழ்கின்ற தன்மையினையொத்தது என்றவாறு (2)

சேம்பு - சேப்பங்கிழங்கு (செடி) கால் - தண்டு. பொர - போரிட, உக - சொரிய. தூம்பு - ஏரிமதகு சுரிவளை - முறுககுண்ட சங்கு; வளை - சங்கு (சுரிமுகச் சங்கு). தூரிட -ஒலிக்க சாம்பு - ஒடுங்கிய கூம்பு - குவிந்த; ஒன்றுகூடிய

## Varāka nati

*cēmpu kālporac ceṅkaḻu nīrukat*
*tūmpu kōṭic curivaḷait tūriṭa*
*cāmpu nīrkaḷ taṉittaṉi pōvaṉa*
*kūmpu cātiyiṉ koḷkaiyi ṉottatē.*

## The Varāka River

The kales plants stood on tall stems
Swaying in the river, making the lotuses
Shed their petals; the spiralling conches
Made sounds in the sluices; waters
Flowing in from the various canals
Symbolised several castes living in amity.

(காராளர் பொன்னேர் பூட்டுதல்)

35. கூவ லாறுகால் பெருகிய நீரினாற் குறைவில்
தாவி லாக்கள மள்ளர்கள் கழனியிற் சாரத்
தேவர் கோமகன் றனைப்புகழ் தெளிவிசைப் பாட்டாற்
பூவ லர்ந்தபொன் னேரினைப் பூட்டியே உழுவார்.

எ-து. அந்த வராகநதியின் வெள்ளப்பெருக்கானது அந்த மருதத்திணைகளெங்கினும் நீர்எய்தி கிணறுகள், ஆறுகள், கால்வாய்கள், தடாகபந்திகள் முதலாகியதும் பெருகிய நீரின் வெள்ளத்தைக் கண்டு ஒப்பற்ற நகரத்தின்கண் வாழ்கின்ற மள்ளர்களானவர்கள் புலங்களில் எங்கிலும் புஷ்ப சாதிகள் அலராநின்ற கழனிகளிலே அனந்தமாகிய பொன்னேரினைப் பூட்டி யுழும்படியான காராளரான பேர்கள், மிகுந்த வின்பத்தினாலே தேவராசனுடைய கீர்த்தியைக் கூறுகின்ற தெளிவாகிய இசைப்பாட்டினாலே மூனறு லோகங்களும் சப்திக்கும்படியாய்ப் புகழ்ந்துழுவார்கள் என்றவாறு. (3)

கூவலாறுகால-கூவல்-கிணறு. ஆறு-நதி, கால்-கால்வாய் தாவிலாக்களமள்ளர்- தாவு-பகை, களம்-இடம். நகரம் மள்ளர்-உழவர். பொன்னேர்-புதிதாகத் தொடஙகும் உழவு.

## Kārāḷar poṉṉēr pūṭṭutal

*kūva lāṟukāl perukiya nīriṉāṟ kuṟaivil*
*tāvi lākkaḷa maḷḷarkaḷ kaḻaṉiyiṟ cārat*
*tēvar kōmakaṉ ṟaṉaippukaḻ teḷivicaip pāṭṭāṟ*
*pūva larntapoṉ ṉēriṉaip pūṭṭiyē uḻuvār.*

## Farmers Ready the Plough

Watching the floods fill up wells,
Rivers and canals sumptuously,
The *maḷḷars* who live in cities
That have no enemies, now sing
Extolling the fame of Intiraṉ,
While tilling the field covered by flowers
With their golden ploughs.

(ஏர் ஓட்டுதல்)

36. ஏர டித்திடும் மேதிக ளின்கரும்
பாரஞ் சிந்தும் வருந்து வரம்பிலே
சேர நின்ற கழைமுத்தஞ் சிந்திச்செய்
தூர வெங்குஞ் சுழலு முழவுக்கோல்.

எ-து பின்னும் அந்தப் பண்ணைகளில் அனேக இடங்கள் மேதிகளாகிய கிடாககளைக கட்டி ஓட்டுகின்ற சமயத்தில் அந்தப் புலத்தின அருகிலே இலங்காநின்ற கருமபினை மாடுகளானவை முறித்துத் தின்ன, அந்தக் கரும்பின் கணுக்கள்தோறுஞ் சிந்துகின்ற முத்தங்களானவை சிந்திககிடக்கின்றன வரம்புகடோறும் அவையன்றியும் அந்தக் கருமபுககு வேலியாகச் சூழ்ந்திருக்காநின்ற மூங்கிலானவை அந்தப் பண்ணைகளில் சாயந்திருப்பதால் அந்த மூங்கில்க ளொடிந்து உதிர்கின்ற முத்தங்களானவை அந்தப் புலஙகளெஙகினும் விளங்கிப் பிரகாசித்த தென்றால் அந்த உழவரான பேர்கள் நாத்துககோல்களைச் சுழற்றியடிக்கின்ற திறத்தினாலே முத்தங்களானவை எங்கும் நிறைந்து அந்தப புலங்கஎெல்லாம் பரவி விளங்கியதந்தச் சஞ்சிவி புரததினைச் சேர்ந்த நாட்டில் என்றவாறு (4)

மேதி - எருமை கருமபாரம - கரும்பு + ஆரம் - ஆரம் - முத்து வரம்பு - வரப்பு கழை - மூஙகில் செய் - வயல் தூர - தூருதல - வெளியடைதல். சிநதுதல்

## Ēr ōṭṭutal

*ēra ṭittiṭum mētika ḷiṉkarum*
*pārañ cintum varuntu varampilē*
*cēra niṉṟa kaḻaimuttañ cinticcey*
*tūra veṅkuñ cuḻalu muḻavukkōl.*

## Ploughing

Where the cattle munch sugarcanes
That grow close to the ridges,
The fields are ploughed by oxen
And the plough revolves everywhere
[1]Scattering pearls all over the place.

(நீர் மடைகள்)

37. படையெ ழுந்த பணிலம்பொன் முத்தமே
யிடைநி றைந்த யினமணி யின்றொகைப்
புடைவ யங்கும் பவழம் பொலிந்திடு
மடைவ யங்கும் அனங்க ளினங்களே.

எ-து. அந்த மள்ளர்களானபேர்க ளுழுகின்ற படைச்சாலிடங்கடோறும் பிரகாசிக்காநின்ற பணிலம், சங்கம், முத்தங்கள், பொன் முதலாகிய மணிக ளிடையிடைகளில் நிறைந்திருப்பவும், நவரத்தினத் தொகையானது எங்கினும் விளங்குகின்ற பக்கங்களில் சிறந்த பவழங்களானவை பொருந்திப் பிரகாசிக்கவும், அந்தக் கால்வாய்ச்சலம் பெருகுகின்ற மடைகளி லனந்தமாகிய அன்னத்தின் கூட்டங்களானவை அந்த மடைநீரிலே தங்களினத்துடனே கூடி, விளையாடி, நடித்துக் களித்து இன்பமெய்துமந்த கோலாசல நாட்டில் என்றவாறு. (5)

படை - கலப்பை. பணிலம - வலம்புரிச்சங்கு. புடை - பக்கம் மடை - நீர்பாயும்மடை. வாயக்கால் அனம் - அன்னம்.

உரை - படைச்சால் - உழவுச்சால், உழுத வரிசை

## Nīr maṭaikaḷ

*paṭaiye ḻunta paṇilampoṉ muttamē*
*yiṭaiṉi ṟainta yiṉamaṇi yiṉṟokaip*
*puṭaiva yaṅkum pavaḻam polintiṭu*
*maṭaiva yaṅkum aṉaṅka ḷiṉaṅkaḷē*

---

1. The pearls in the earth get dislodged by the plough and are brought up to the surface, and hence it appears as though the pearls have scattered on the field.

## Water Sluices

The conches and pearls upturned
By the plough were quite numerous;
On the sides flashed the corals;
Flights of swans swam
All over the canals.

(பரம்படித்து விதைத்தல்)

38. பரம்ப டிப்பவர் முன்செலப் பின்செலும்
வரம்பின் நென்முறை வித்துநர் வாழ்த்துவார்
கரங்கு வித்துக்கோ லாசலக் கண்ணனாம்
பரம்பொ ருட்கொரு பாகமு மீவரே.

எ-து பின்னும் அந்த நாட்டின் அனேகமாயிரம் மள்ளர்களான பேர்கள் பரம்பினைப் பூட்டி யடிக்கின்றவர்கள், பின்னர்க் கணக்கிறந்தனவாகிய செந்நெல் முளைகளைக் கொண்டு விதைக்கின்றவர்கள், வாழ்த்திக் கரங்களை உச்சியிற் கூப்பிக் கோலாசலத்தின்கண் மருவிய தாமரைக் கண்ணனாகிய அரஙகநாயகருக்கு ஒரு பாகம் கொடுக்கும்புடி பிராத்திச்சுப் பயிர்விருத்தி செய்வார்க ளென்றவாறு (6)

பரம்பு - கழனியைச் சீர்படுத்தும் பலகைக் கருவி வரம்பின் - வரம்பு + இல் எண்ணிறந்த; அளவற்ற. விததுநா - விதைப்போர் கரம் - கை.

## Parampaṭittu vitaittal

*parampa ṭippavar muṉcelap piṉcelum*
*varampiṉ neṉmuṟai vittunar vāḻttuvār*
*karaṅku vittukkō lācalak kaṇṇaṉām*
*parampo ruṭkoru pākamu mīvarē.*

## Ploughing and Sowing

As farmers advanced with harrows
Others sowed innumerable paddy grains,
And with hands held together in salutation
To pray, promised a portion of the harvest
To the Supreme Lord of Kōlācalam.

(நாற்று நடுதல்)

39. நாற்று வாங்கிப் பழனங்கள் நாட்டுவார்
ஆற்றுக் கால்கள் திருப்பி யரும்புனல்
சேற்றில் நெல்வய லிட்டுத் தினந்தினம்
மாற்றி மாற்றிப் பயிரை வளர்ப்பரே.

எ-து அந்த நாட்டிலே அனந்தமாகிய பள்ளச்செனங்களான பேர்கள் நாற்றினைப் பிடுங்கி வயலினிடத்தில் நடுவார்கள். நடுகின்ற பேர்களும், ஆற்றுக் கால்வாய் நீரினைத் திருப்பி யரும்புனலாகிய வயலினிற் பாய்த்துச் செந்நெல் முளைகளை வயலிடத்தினி லிட்டுக் கலப்புகள் முதலாகிய பக்குவங்களெல்லாம் செய்து பயிரினை விரத்திக்கச் செய்வாரந்தப் பொன்னாடாகிய கோலாசல நாட்டில் என்றவாறு. (7)

வாஙகி - பிடுங்கி பழனம் - வயல் நாட்டுவார் - நடுவார்களை

உரை - விரத்தி - விருத்தி

## Nāṟṟu naṭutal

*nāṟṟu vāṅkip paḻaṉaṅkaḷ nāṭṭuvār*
*āṟṟuk kālkaḷ tiruppi yarumpuṉal*
*cēṟṟil nelvaya liṭṭut tiṉantiṉam*
*māṟṟi māṟṟip payirai vaḷarpparē.*

## Transplanting

Plucking out the seedlings
The farmers proceed to transplant them.
They deflect the stream to make it flow
On the fields; and in that slush
Husband the crops and grow them well.

(களை நீக்குதல்)

40. பள்ளர் பெண்கள் பயிர்க்களை வாங்குவார்
கள்ள நீர்க்கயல் வண்டவர் கண்களைக்
கொள்ளை சூழக் குலாம்பல்செந் தாமரை
விள்ள வாயவ ராளை ஒெவருட்டுமே.

எ-து. பின்னும் அந்த வயலினிடங்கடோறும் அனந்தமாகிய பள்ளர்களான பேர்கள் தங்கள் மங்கையர்களுடனே வயலினிடத்துக்கு வந்து அந்தப் பயிரில் இருக்கின்ற பலவிதமாகிய களைகளைப் பிடுங்கி நான்கு திக்கினும் வீசுகின்ற ஆரவாரத்தினால், அந்த வயலில் பாய்ந்துலவுகின்ற மச்சங்களும், வண்டினங்களு மாகியவற்றின் நேத்திரங்களானவை அந்தப் பள்ள மங்கையர்களிட நேத்திரங்களைப்போல் விளங்கவும், அவரது கண்ணிழலி ணை நீலோற் பலங்களைப்போல விளங்கவும், அவருடைய வாய்கள் செவ்வாம்பல்களைப் போல் விளங்கவும், அவரது முகார விந்தங்களானவை செந்தாமரைப் புஷ்பத்தினைப்போல விளங்கவும், மலர்ந்த புஷ்பங்களைக் கண்டு பள்ளரானவர்கள் பிரமித்து நமது ஸ்ரீகளாகுமெனறு மிரட்சி கொண்டு நிற்பார்க ளென்றவாறு. (8)

கள்ள நீர்க்கயல் - நீரிலுள்ள கள்ளககயல், கள்ளவண்டு எனக்கொள்க. குல + ஆம்பல் - குலாம்பல் விள்ளவாயவா - (வியப்பினால்) சிறந்த வாயினை உடையவர். அவா ஆளை வெருட்டும்- அவா - பளளாபெண்கள்; அவர்ஆள் - அவர்களின் ஆடவர், வெருட்டும் - மயங்கச்செய்யும்

## Kaḷai nīkkutal

*paḷḷar peṇkaḷ payirkkaḷai vāṅkuvār*
*kaḷḷa nīrkkayal vaṇṭavar kaṇkaḷaik*
*koḷḷai cūḻak kulāmpalceṉ tāmarai*
*viḷḷa vāyava rāḷai veruṭṭumē.*

## Weeding

The womenfolk of the community
Pluck out the weeds; the fish
In the waters and the bees
As well as the lovely blue lilies
Look like their eyes; their mouths
Rival red lotuses leading the menfolk
To stare in wide-mouthed wonderment.

(பயிர் கதிர் விடுதல்)

41. வளர்ந்த செந்நெல் மணிகள் திகழ்ந்துமெய்
தளர்ந்து சாலிக் குலைகதிர் சாய்ந்திடக்
கிளர்ந்த செய்யிற் கிழமையொன் றுன்னிசீர்
இளந்தை யோர்களு மியாவரு மெய்துவார்.

எ-து. அப்படி காலமறிந்து பக்குவம் செய்கின்ற செந்நெல்லானது தழைத் தோங்கிப் பொன்மணிகளைப்போலத் திகழ்ந்து, தாள்களானவை தளர்ந்து, குலைக்கதிர்களானவை சாய்ந்திருப்பதைக் கண்ட மள்ளர்களானபேர்கள் செய்காலாகிய சமபூமியின்கண் சுத்தி செய்து நல்ல சுபதினத்தில் அறுப்புகளறுக்க யோசித்தவர்க ளினங்களும் பெண்கள், பிள்ளைகள் முதலாகிய பேர்களுடனே கூடிவருவார்க ளென்றவாறு. (9)

சாலி - செந்நெல் கிளாந்தசெய் - பயிர்வளர்ந்துள்ள விளைநிலம். செய் - வயல். கிழமை - நல்லநாள். உன்னி - தேர்ந்து. இளந்தை - குழந்தை.

## Payir katir viṭutal

*vaḷarnta cennel maṇikaḷ tikaḻntumey*
*taḷarntu cālik kulaikatir cāyntiṭak*
*kiḻarnta ceyyiṟ kiḻamaiyoṉ ruṉṉicir*
*iḷantai yōrkaḷu miyāvaru meytuvār.*

## The Ears of Grain

As the golden paddy grows heavy
With grains, and bends to the earth,
The farmers fix up an auspicious day.
They come to the fields then to reap,
Along with their children and others,
The crops that have grown sumptuous.

### வேறு

(அறுவடை)

42. வாளினாற் செந்நெ லரிந்துபின் வடவரை யனைய
வாளி மொய்ம்பினர் போர்செய்து வையினை யகற்றி
நீளிருங் குன்ற மென்னவே தூற்றிப்பின் னிறுவிக்
காளி யேமுத லாயினர்க் களித்தனர் கடனே.

எ-து. பின்னும் அந்தக்கள மள்ளர்களானவர் பழுத்த சாலிகளை வாளினாலரிந்து மகமேருவினைப்போலப் போர் செய்து அந்தக் களத்தின்கண் படுத்து, வைக்கோலினைக் களைந்து, நெல்லினை நீண்ட வட்டக் குலாசலப் பருவதங்களைப்போலக் குவித்துப் பின்பு பதரினைத் தூற்றி ராசி ராசியாகக் குவித்துக் காளி முதலாகிய கிராம தேவதைகளுக்குக் கொடுத்துப் பின்னும் ஊழிய சனங்களுக்கும் பகுந்து கொடுப்பார்க ளென்றவாறு. (10)

வடவரை - மேருமலை வாளிமொய்ம்பினர் - வாளி - அம்பு, மொய்ம்பு - வலி. வை - வைக்கோல் கடன் - நன்றிக்கடன்.

உரை - ராசிராசியாக - குவியல் குவியலாக

## Vēṟu

## Aṟuvaṭai

*vāḷiṉāṟ cenne larintupiṉ vaṭavarai yaṉaiya*
*vāḷi moympiṉar pōrceytu vaiyiṉai yakaṟṟi*
*nīḷiruṅ kuṉṟa meṉṉavē tūṟṟippiṉ niṟuvik*
*kāḷi yēmuṭa lāyiṉark kaḷittaṉar kaṭaṉē.*

## Reaping

Cutting the stalks with the sickle
They gather them together
To the size of the Mēru Mountain,
Remove the straw, pile up the paddy
As hill ranges, winnow it all,
And set aside portions to Kāḷi
As also for the retainers.

(ஆறிலொரு கடமை)

43. ஆறில் ஒன்றெனுங் கடனரி விரதனுக் களித்துத்
தேறு கின்றவர் பண்டியிற் கொண்டுபோய்த் தேவர்
மாறி லாவதிதி களுக்கு மாண்புடன் பூசை
வீற தாகவே யமைத்தவர் உண்டிட விதிப்பார்.

எ-து அந்தத் தொண்டை மண்டலத்தரசனாகிய அரிவிரத மகாராசனுக்கு ஆறிலொரு கடமைகள் கொடுத்துத தங்கள் குடிவாரத்தினைப் பண்டியில் ஏற்றிக் கொண்டுபோய்த் தங்கள் குலதேவதையாகிய அரங்க நாயகரைப் பூசித்துப் பின் பிதுர் தேவதைகள், அதிதிகள், அந்தணர்கள் முதலாகிய தர்மார்த்தங்களை விரதிக்கச் செய்து, தங்கள் பந்துக்களுடனே பொசித்து ஆனந்தப் பரவசராய் அந்த நாட்டில் விளங்கிய நான்கு வருணங்களும் மகிழ்சிறந்து வாழ்வார்க ளென்றவாறு. (11)

அரிவிரதன் - வைணவன்; பிறகடவுளரை நோக்காத உறுதிபூண்டவன். பண்டி - வண்டி அதிதி - பரதேசி, புதியவர்

உரை - குடிவாரம் - பயிரிடுவோருக்குரிய பங்கு. விரதி - முறையாக

## Āriloru kaṭamai

*āril oṉreṉuṅ kaṭaṉari virataṉuk kaḷittut*
*tēṟu kiṉṟavar paṇṭiyiṟ koṇṭupōyt tēvar*
*māṟi lāvatiti kaḷukku māṉpuṭaṉ pūcai*
*vīṟa tākavē yamaittavar uṇṭiṭa vitippār.*

## One-sixth Duty

Handing over one-sixth of the produce
To King Ariviratan̲, they cart away
The balance, worship properly the manes,
The guardian deities and pilgrims
And give sustenance to all.

(ஆலயப் பணிகள்)

44. அளகை மேவிய தனதனைப் போலவே அழகாய்
வளமி குந்தவர் வாழ்க்கையு மானிலத் தரசாய்
விளவி நல்கிய கடன்களை அரிவிர தப்போர்த்
தளவ மாலையான் செய்தன தருமமோ வனந்தம்.

எ-து. அந்த அளகையின்கண் மேவிய குபேரனைப்போலச், செல்வம் நிறைந்த குடிகளின் நில வாழ்க்கையினது தருமங்களாலும், இவ்வுலகத் தரசனாகிய அரிவிரத மகாராசனானவன் ஆறிலொரு கடமை வாங்குந் தன்மையினாலும், தேவாலயம், பிரமாலயங்கள் முதலாகிய தருமங்கள் அனந்தமாக விளங்கு மென்றவாறு. (12)

அளகை - அளகாபுரி, குபேரன்நகர். தனதன் - குபேரன். விளவிநல்கியகடன் - உழுதல் தொழிலால் அரசிறையாகக் கொடுக்கும் ஆறில் ஒரு கடமை. தளவமாலை - முல்லைமாலை. அனந்தம் - மிகப்பல; அளவில்லாமை

## Ālayap paṇikaḷ

*aḷakai mēviya taṉataṉaip pōlavē aḻakāy*
*vaḷami kuntavar vāḻkkaiyu māṉilat taracāy*
*viḷavi nalkiya kaṭaṉkaḷai arivira tappērt*
*taḷava mālaiyāṉ ceytaṉa tarumamō vaṉantam.*

## Service to the Temple

Like Kupēraṉ, the Lord of Aḷakāpuri
Was the King named Ariviratan
Who shone with the nobly-led lives
Of his wealthy subjects, and received
His portion from them. Innumerable
The charitable works instituted
By this King who wore a jasmine garland.

(மருத நிலமும் மகளிரும்)

45. தடங்க டோறும்பொற் றாமரை பூத்தல்போல்
மடங்கொள் மங்கையர் மால்வத னங்களாங்
குடங்கை யாம்பற் குவளை விழியுமாய்
இடங்க டோறு மிலங்கி யொளிருமால்.

எ-து. அந்த நாட்டின்கண் ணிராநின்ற தடாக பந்திகளிலே பொன்மயமாகிய தாமரைக் கமலமானது அலரினை விரித்துப் பொலிவெய்துந் தன்மையினைப்போல, நாண், மடம் முதலாகிய குணங்களையுடைய கன்னியர்களின் பெருமை தங்கிய முகமானது பொலி வெய்தவும், அவர்கள் உள்ளங்கைகளானவை செவ்வல்லியானது அலரை விரித்தலரும் தன்மையைப்போலப் பிரகாசிக்கவும், நீலோற்பலங் கண்ணா யொளி சிறந்திலங்கவும் இத்தன்மைத்தாய மருதத்திணைகடோறும் நானாவிதமாகிய கொடிப்பூ வெல்லா மோரிடத்திற் பூத்ததோ ரழகிய சொர்ணக் கொம்புகள் அநேகந் தோன்றி ஒளிகளை விரித்தலை யொக்கு மென்றவாறு. (13)

தடம் - குளம். மடம - மகளிரின் நாற் குணங்களுள் ஒன்று; கபடமில்லாமை மால் - பெருமை குடங்கை - உள்ளங்கை

## Maruta nilamum makaḷirum

*taṭaṅka ṭōṟumpoṟ ṟāmarai pūttalpōl*
*maṭaṅkoḷ maṅkaiyar mālvata ṉaṅkaḷāṅ*
*kuṭaṅkai yāmpaṟ kuvaḷai viḻiyumāy*
*iṭaṅka ṭōṟu milaṅki yoḷirumāl.*

## [2]The Maruta Land and Women

Even as golden lotuses bloomed in lakes,
The shy women had noble faces
That rivalled the lotuses; their palms
Were water - lilies; their eyes
The blue lily; thus everywhere
Louses spread their glow.

(நாட்டு மகளிர்)

46. பொற்கு டங்களில் வெளிக்கு டங்களிற்
சொர்க்க மங்கைய ரிற்புன றூக்குவார்
விற்கு நேர்புரு வம்மதி மேலுறு
நற்கும் பக்குல மாகுமந் நாட்டிலே.

எ-து. பொன்மயமாய் ஒளிவிடுகின்ற குடங்களிலேயும், வெள்ளிமயமாகிய குடங்களிலேயுந் தேவலோகததின்கண் வீற்றிருக்காநின்ற புஷ்பக்கொடி யொத்த சுந்தர சவுந்தரப் பிரபலமாகிய தேவ கன்னியர்களைப் போலவும், அந்நாட்டிலிராநின்ற ஸ்ரீகள் சலந்திரட்டுவார்கள் அது எத்தன்மைத்தென்றால், வில்லினையொத்த புருவத்தின்மே லொளிராநின்ற சந்திரனை ஒத்த நெற்றியின்மேல் அமுதகும்பம் நிறைவெய்தினாற் போலச் சிறந்திருந்தது அந்நாட்டின்கண் மருவிய மங்கையர்கள் செய லென்றவாறு (14)

வெளிக்குடம் - வெள்ளிமயமானகுடம். புனறூக்குவார் - புனல் + தூக்குவார். புனல் - நீர். மங்கையரில் - மங்கையர்போல; இல் - உவமை உருபு. விற்குநேர் - வில் + கு; விலலுக்கு. நேர் - உவமை உருபு கும்பக்குலம் - அமுதக்குடங்கள

## Nāṭṭu makaḷir

*porku ṭaṅkaḷil veḷikku ṭaṅkaḷiṟ*
*corkka maṅkaiya riṟpuṉa ṟūkkuvār*
*viṟku nērpuru vammati mēluṟu*
*naṟkum pakkula mākuman nāṭṭilē.*

---

2. One of the five divisions of land in *Saṅkam* aesthesis, the others being *mullai, kuṟiñci, pālai* and *neytal.*

## The Women of the Land

The heavenly damsels carried water
In golden pots and silver pitchers;
It was like placing the pot of nectar
On the moon-like forehead
Above the brows rivalling the bow.

(மகளிர் நீராடுதல்)

47. மஞ்ச ளிஞ்சி யரம்பைநன் மாதுளை
விஞ்செலு மிச்சி நாரத்தை வில்வமும்
அஞ்சொன் மாதர்க டம்மனை யாடுநீர்
எஞ்ச லிற்பயி ரெங்கணு மெய்துமால்.

எ-து. அந்த மருதத்திணைகளெங்கும் மஞ்சள்களும் இஞ்சிகளும் அரம்பையாகிய வாழைகளும், நன்கினையுடைய மாதுளைகளும், நெருங்கிய எலுமிச்சையும், நாரத்தையும், வில்வமும் ஆகிய விருட்சங்கள் நிறைந்திருந்தன. அழகிய வார்த்தையினை யுடைய அந்நாட்டின்கண் மருவிய பருவ மங்கையர்களெல்லாம் தங்கள் மனைகடோறும் தீர்த்தமாட அந்நீரானது பெருக்கெடுத்து முன்கூறிய விருட்சங்களை யெல்லாம் விரத்தி செய்த பின் கெடுதல் இல்லாத பண்ணையிற் பிரவேசித்துப் பயிரினங்களை யெல்லாம் விரத்திக்கச் செய்யு மென்றவாறு (15)

அரம்பை - வாழை.

## Makaḷir nīrāṭutal

*mañca ḷiñci yarampainaṉ mātuḷai*
*viñcelu micci nārattai vilvamum*
*añcoṉ mātarka ṭammaṉai yāṭunīr*
*eñca liṟpayi reṅkaṇu meytumāl.*

## Women take Bath

All over the land grew a-plenty
Turmeric, ginger, plantains,
Lovely pomegranate, lemons, oranges,
And the sacred bael. The waters
Used by the women for bathing
Would flow into those fields.

(தேன் வெள்ளம்)

48. சோலை வாயிற் சொரிந்திடு தேன்களும்
பாளை வாயிற் பனித்துளித் தேன்களுஞ்
சேலை யூட்டுசெந் தாமரைத் தேன்களுஞ்
சாலை யிற்றவழ் தேன்களுஞ் சாருமால்.

எ-து அந்நாட்டினிடத்தி லிராநின்ற புட்பங்களானவை அலர்களை விரித்துச் சுகந்தங்களை வீசிக் கமழாநின்ற சோலைகடோறும் நானாவிதமாகிய மலர்க் கூட்டங்களானவை துளிக்காநின்ற தேன்பெருக்கும், தென்னங்காவினங்களிலே பொருந்துகின்ற அதன் பாளைகளிற் பனித்துளிபோலத் துளித்துப் பெருகாநின்ற மதுக்களும், பண்ணைகளிற் பாய்ந்து அதன்கண் மருவிய சேலினங்களை யெல்லாம் ஊட்டிவைத்து உவப்பிக்காநின்றன. செந்தாமரைக் கமலத்தின்கண் மருவிய தேன்களும், சாலையிடங்கடோறும் தவழ்ந்து வருகின்ற தேன்களும், அனந்தமாக அந்தத் தடாகங்கடோறுஞ் சாரு மென்றவாறு. (16)

பாளை - தென்னை, பனை, கமுகு போன்றவற்றின் குலைக்குருத்து. சொரிதல் - உதிர்தல். சேலை - சேல் + ஐ; சேல் - கயல், கெண்டைமீன். சேலை ஊட்டுதல் - கயல் மீன்களை உண்பித்தல். சாலை - மரங்களிடை நடைபாதை

## Tēn veḷḷam

*cōlai vāyiṟ corintiṭu tēṉkaḷum*
*pāḷai vāyiṟ paṉittuḷit tēṉkaḷuñ*
*cēlai yūṭṭucen tāmarait tēṉkaḷuñ*
*cālai yiṟṟavaḻ tēṉkaḷuñ cārumāl.*

## Flood of Nectar

Honey dripping all over the groves,
And the droplets of dew on the spathes,
Fed the fish. The honey from lotuses
And other honey streaming on the paths
Entered the several lakes.

(மும்மாரியும் முப்போகமும்)

49. மாத ராடவர் மன்னவ ரந்தணர்
நீதி சேரு நெறிவழு வார்களால்
மாத மூன்று மழையுமுப் போகமுந்
தீதி லாது சொரியுமந் நாட்டினே.

எ-து ஸ்ரீமார்கள், அரசர்கள், அந்தணர்கள் முதலினாகளெல்லாம் மனுவிதித்த ஞாய சாததிர வழியினின்றும் அதமதாசிரம நெறியாகிய ஒழுங்குகளில் தவறுபடார்களாகி நடக்குந் தன்மையினாலே, மாதா மாதங்கள்தோறும் மூன்று மழை வளஞ்சுருங்காமற் சொரியும், அதனாலே மேழிசசெல்வம் பெருக, முப்போகங்களும் விரதியாய் விளையப் பாதுகாத்துச் சொரியும் மேகஙக ளென்றவாறு (17)

முப்போகம் - ஓராண்டில் மூனறுமுறை விளையும் விளைவு போகம் - விளைவு, பயிா விளைச்சல் சொரிதல - பொழிதல.

உரை - அதமதாசிரம நெறி - அத + மத + ஆசிரமநெறி, அத - பிறகு; சமய ஒழுக்கம்; அவை நான்கு வகை - பிரமசரீயம, இலவாழ்க்கை. வனப பிரத்தம், (வானப்பிரத்தம), சந்நியாசம்

## Mummāriyum muppōkamum

*māta rāṭavar maṉṉava rantaṇar*
*nīti cēru neṟivaḻu vārkaḷāl*
*māta mūṉṟu maḻaiyumup pōkamun*
*tītu lātu coriyuman nāṭṭiṉē.*

## [3]Three-fold Rains, Three-fold Crops

As the women, men, king,
And the brahmins followed the path
Of Dharma, rains fell thrice
A month; three crops for the year
Was the general rule.

### வேறு

(இயற்கைக் காட்சி)

50. மயிலினஞ் சாயல் காட்டு மடவன நடைகள் காட்டும்
கயலினம் நயனங் காட்டுங் கமுகின மிடறு காட்டும்
மயலுறு மிளநீர் கும்ப மரும்புகள் முலைகள் காட்டும்
இயலுறு மடவார்க் கூந்த லருந்தினமழை வளங்கள் காட்டும்.

---

3. Rain falling thrice a month in planned quantities is ideal for crops; the soil then becomes rich and helps the farmer reap three harvests in a year.

எ-து. அந்நாட்டின்கண் ணிராநின்ற பூஞ்சோலை யிடங்கடோறும் பொலிவெய்தி யிருக்கும் மயிலினங்களானவை தன்னாட்டிலுள்ள பருவ மங்கையரது சாயலினைக் காட்டின. இளமையனவாகிய பொன்னஞ் சிறகினையுந் தோலடியினையுஞ் செஞ்சூட்டினையு முடைய அன்னங்களானவை அவரது நடையைக் காட்டின. தாமரைத தடாகபந்திகளில் விளங்கித் தோற்றஞ் செய்கின்ற கயலினங்களானவை அவரது விழியினைக் காட்டின, கமுக பந்திகளானவை அவரது மிடற்றினைக் காட்டி, ரஞ்சிதமாய் விளங்கின மனோகரமாகிய செவ்விளநீருந் தங்கக்குடமும் அரவிந்தத்தினது மொக்கும் அவரது கொங்கையிணையைக் காட்டின. இத்தன்மையனவாகிய மடவாரது கூந்தலினை நீருண்ட காளமேகங்கள் காட்டுவன தன்னா டென்றவாறு. (18)

சாயல் - அழகு. கும்பம் - குடம். மிடறு-கழுதது அருந்தின மழை - நீருணடு கருதத மேகம்

உரை - செஞ்சூடு - சிவந்த கொண்டை. ரஞ்சிதம் - அழகு அரவிந்தம் - தாமரை மனோகரம் - அழகு. மகிழ்ச்சி.

## Vēru

## Iyaṟkaik kāṭci

*mayiliṉāñ cāyal kāṭṭu maṭavaṉa naṭaikaḷ kāṭṭum*
*kayaliṉam nayaṉaṅ kāṭṭuṅ kamukiṉa miṭaṟu kāṭṭum*
*mayaluṟu miḷanīr kumpa marumpukaḷ mulaikaḷ kāṭṭum*
*iyaluṟu maṭavārk kūnta laruntiṉamaḻai vaḷaṅkaḷ kāṭṭum.*

## Nature's Glory

The peacocks revealed the complexion
Of the women; the swans their gait;
The fish their eyes; the areca palm
Their neck; the tender-coconuts
And the lotus buds, their breasts;
The dark clouds, their tresses.

(வயலும் சோலையும்)

51. வயலெலாம் பணில முத்தம் வரம்பெலாந் தத்து மாநீர்க்
கயலெலாங் கயங்கு ளங்கள் கமழ்மலர்க் கணங்கள் காவிற்
புயலெலாம் வாசம் வீசும் பொங்குமோ டைகளின் வாளை
அயலெலாஞ் செந்தேன் வீசும் அரங்கர்பொன் னாட்டி னன்றே.

எ-து. அந்நாட்டின்கண் விளங்கித் தோன்றுகின்ற வயலிடங்களெல்லாம் பணிலமாகிய சங்கக் கூட்டங்கள் சொரிகின்ற முத்துக்களும், வயலிற்றோன்றுகின்ற வரப்பிடங்களெல்லாந் தத்தி வருகின்ற நீரினது பெருக்கமும், கயல் கூட்டங்களானவை கயங்களிலேயும் குளங்களிலேயும் நிரம்பிப் பாயுந் தன்மையினையுடையதும், நற்சுகந்தங்களை வீசாநின்ற கூட்டமாகிய மலரினையுடைய தன்மையினவாகிய உத்தியான வனங்கள் பரந்திருக்காநின்ற காவினங்களும், மேகசாலங்களெல்லாஞ் சற்கருமஞ் செய்கின்ற பதினெண் வகையான யாகாதிகளின் தூமமாகிய புகையினைக் கமழ்ந்து வீசவும், நீர்சமுற்றியாகிய ஓடைகடோறும் வாளைகள் பாயவும் அதனருகெல்லாஞ் செந்தேனானது பெருக்கெடுத்தோடும் அரங்கநாயகர் வீற்றிருக்காநின்ற பொன்னாடேயிது என்று சொல்லுகின்ற கோலாசல நாடென்றவாறு. (19)

பணிலமுத்தம் - சங்கில் தோன்றிய முத்து. கயம், குளம் என்றதனால் - கயம் - அகழிபோன்ற பிற நீர்நிலைகள் எனக் கொள்ளலாம். புயல் - காற்று. வாளை - வாளை மீன்.

**உரை** - சுகந்தம் - நறுமணம் உத்தியானவனம் - பூந்தோட்டம். கா - சோலை. பதினெட்டுவகை யாகம் - அங்கிசயன், அங்கிட்டோமம், அத்திராத்திரம், அஸ்வமேதம், இராசசூயம், உத்தியம், சாதுர்மாசியம், சோடசீ, சோதிட்டோமம், சோமயாகம, சௌத்திராமணி, பசுபந்தம, பிரணவமேதம், பிரமமேதம், புண்டரீகம், மவுதத்திரமேதம், வாசபேயம், விசுவசித்து என்பன.

## Vayalum cōlaiyum

*vayalelām paṉila muttam varampelāṉ tattu māṉirk*
*kayalelāṅ kayaṅku ḷaṅkaḷ kamaḻmalark kaṉaṅkaḷ kāviṟ*
*puyalelām vācam vīcum poṅkumō ṭaikaḷiṉ vāḷai*
*ayalelāñ centēṉ vīcum araṅkarpoṉ nāṭṭi ṉaṉṟē.*

## The Field and the Grove

All over the fields lay pearls from shells;
Plentiful water streams at the ridges;
Fish a- plenty in the lakes;
Scented blossoms in the groves;
Fragrance-wafting smokes a-swirl;
*Vāḷai*-fish leap in the canals;
Close by flow streams of good honey.
It was the golden land of Araṅkaṉ.

(பயிர் வளம்)

52. செந்நெலே கன்னல் காட்டுஞ்
செறிமலர்ச் சோலை தோறுங்
கன்னலே கமுகு காட்டுங்
கமுகுதெங் கினங்கள் காட்டும்
புன்னைப்பூம் பொறிகள் காட்டும்
பொற்குன்றைப் பொழியும் வள்ள
ன்னய மலர்கள் கையேற்
றிடுவரை நிகர்க்கு நாட்டின்.

எ-து. மீட்டுமந் நாட்டின் வளப்பம் எத்தன்மையாய் விளங்குமெனின், செஞ்சாலிப் பயிரினைப் பார்க்குமிடத்தில் இது கன்னற்காடோவென்று சந்தேகிக்க வளர்ந்து விரத்திக்கும் நந்தவனங்களில் விளங்குகின்ற கரும்பு எத்தன்மையாய் விளங்குவதென்னின், கமுகமரச் சோலைதானோ இது என விளங்கும். அக் கமுகினை நோக்குங்காலையில் தென்னஞ்சோலையோ இதுவெனத் தழைக்கும். புன்னைப் பூவானது இலக்குமியார் சுந்தரத்தைக் காட்டியது. பொற்குன்றைத் தானமாய்த் தத்தச் சலம் விடுகின்ற வள்ளல் தன்மையினை உடையவர்கள் கொடுக்கும் தானத்தைக் கைமலர்ந்து வாங்குகின்ற மறையோர்கள் கரத்தினை ஒத்தன தாமரை மலர்கள் முதலியன அந்நாட்டில் என்றவாறு. (20)

கன்னல் - கரும்பு. கமுகு- பாக்கு மரம். பொறி - இலக்குமி

உரை - சுந்தரம் - அழகு. தத்தசலம - நீர்வார்த்துக்கொடுக்கும் தருமம்; சலம - நீர்

## Payir vaḷam

*cennelē kaṉṉal kāṭṭuñ*
*ceṟimalarc cōlai tōṟuṅ*
*kaṉṉalē kamuku kāṭṭuṅ*
*kamukuteṅ kiṉaṅkaḷ kāṭṭum*
*puṉṉaippūm poṟikaḷ kāṭṭum*
*poṟkuṉṟaip poḻiyum vaḷḷa*
*ṉaṉṉaya malarkaḷ kaiyēṟ*
*ṟiṭuvarai nikarkku nāṭṭiṉ.*

## Rich Crops

The rich paddy resembles the sugarcane.
All over the gardens rich with flowers

The sugar-cane resembles the areca-palm.
The areca-palms are like coconut trees.
The mastwood is like the Goddess of Wealth.
The lotuses in the land resemble
The hands of liberal persons
Who give hills of gold in charity.

(மருத நிலத் தோற்றம்)

53. காவெலாம் அம்ப லங்கள் (சென்னெற்)
கழனியில் கழுநீர்க் கொள்ளைப்
பூவெலாம் மணங்கள் மிக்க
பொருப்பெலாம் அருவிச் செந்தேன்
மாவெலாம் குயில்கள் சந்த
வனமெலாம் வண்டின் ஈட்டம்
நாவெலாம் அறங்கள் என்றே
நல்வளம் பெருகு மாதோ! (21)

அமபலம் - மனறம நாடகமனறம போலவன, மயில், குயில போன்றவற்றின் ஆடல், பாடல்கள் நிறைநத இடமும் ஆம் கழுநீர் - ஆம்பல், கொள்ளைப்பூ - மிகுதியான மலர். மா - மாமரம் சந்தவனம - சநதனக்காடு நா - நாக்கு. அங்குள்ள உயிர்களின் நாவிலெலலாம் அறமே ஒலிக்கும்

## Maruta nilat tōṟṟam

*kāvelām ampa laṅkaḷ (ceṉṉeṟ)*
*kaḻaṉiyil kaḻunīrk koḷḷaip*
*pūvelām maṇaṅkaḷ mikka*
*poruppelām aruvic centēṉ*
*māvelām kuyilkaḷ canta*
*vaṉamelām vaṇṭiṉ īṭṭam*
*nāvelām aṟaṅkaḷ eṉṟē*
*nalvaḷam peruku mātō*

## The *Maruta* Land

The groves were like areas for dance.
In the fields were lotuses

In abundance, all fragrance.
All over the mountain there streamed
Honey-falls; the *kuyils*
Sang from the mango trees; the bees
Droned in sandal woods.
All the living beings here
Spoke of Dharma; hence the prosperity.

வேறு

(நகர் வளம்)

54. தொண்டை நாட்டைமுன் சொல்லினோ மியாமினிப்
பண்டை மாமறை யேத்தும் பரமனார்
கண்டு யிற்கடற் பூங்கட காமுக
மண்ட லத்தொளிர் மாநகர்க் கூறுவாம். (22)

கண்டுயிற் கடற்பூம்கடகாமுக மண்டலம - கண் + துயில் + கடல் + பூங்கடகா முகமண்டலம் பரமனார் துயிற் கொண்டுள்ள கடல் சூழ்ந்த நாட்டின் தொடக்கமாக விளங்கும் நகரம்

நாட்டுப்படலம் முற்றிற்று.

## Vēṟu

## Nakar vaḷam

*toṇṭai nāṭṭaimuṉ colliṉō miyāmiṉip*
*paṇṭai māmaṟai yēttum paramaṉār*
*kaṇṭu yiṟkaṭaṟ pūṅkaṭa kāmuka*
*maṇṭa lattoḷir mānakark kūṟuvām.*

## The City

We spoke of the *Toṇṭai* land.
Henceforth we shall speak of the city
In the land girt by the ocean,
Where rests the Supreme
Hailed by the ancient Vēdas.

## 4. நகரப் படலம்

சஞ்சீவிபுரம் என்னும் அந்நகரத்தின் மதிலானது சக்கரவாளகிரியை ஒத்து விளங்கியது. அம்மதிலின் மீது சித்திரப் பொறிகள் பல அமைந்திருந்தன. அவை பாசங்களை வீசின; வேல், சூலம், கோடரி, இரும்பு உலக்கை போன்ற கருவிகளைச் சுழற்றி வீசின. வானளாவி உயர்ந்த மதிலானது தடுத்து நிற்பதால் சந்திர, சூரியர் ஆகாயத்தின்கண் செல்லுங்காலை நேரே செல்லாமல் சிறிது ஒதுங்கிச் செல்லுகின்றனர். ஏழுவகையான கோட்டைகள், கோபுரங்கள், குகைகள் போன்றவை அடங்கிய அந்நகரினைக் கண்ட இந்திரன், இது கயிலாயமோ, பரமபதமோ, மனோவதி நகரமோ என்று நினைந்து வியப்படைந்தான். மதிலின் மீது அமைந்த கொடிகள் அசைந்து சூரியனது வெப்பத்தைப் போக்கின. நான்கு திக்கிலும் சூழ்ந்த மதில்களானவை சேடசயனம்போல விளங்கின.

அந் நகரத்தின் அகழியானது எழுகடலுக்குச் சமமாக விளங்கியது. அதன் நிழற்சாயையில் நகரத்தின் வளத்தைக் காட்டியது. அவ் அகழியில் யானைக் கூட்டங்கள் நிறைந்து கலக்கித் திரிந்தன. அச் செயல் திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்து அக்கடல் கலங்கியதுபோலக் காணப்பட்டது. இந் நகரத்தின்மீது ஐம்பத்தாறு தேசமன்னர்களும் சேர்ந்து படையெடுத்தாலும் அவர்களை வெல்லப் படைவீரர்கள் தேவையில்லை. மதில்களில் அமைந்த சித்திரப் பொறிகளும், அகழிகளில் விளங்கும் மீன் இனங்களுமே அவர்களைத் தோற்றோடச் செய்துவிடும்.

நான்கு புறங்களிலும் அமைந்துள்ள தெருக்களில் முறையே சந்தனச் சோலைகள், கமுகு, வாழை, மா, பலா, தெங்கு போன்ற பல வகை மரச்சாலைகள், கோயில்கள், சந்திரகாந்த மாட மாளிகைகள், சபைகள், வாயில்கள், மாணிக்கக் கபாடங்கள் போன்றவை விளங்கின. முனிவர்களும் அடியவர்களும் எழுந்தருளியுள்ள பன்னகசாலைகள், அரசவீதி முதலாகிய நான்கு வருணத்தாருக்கு முரிய தெருக்கள் ஆகியவை அமைந்திருந்தன. பஞ்சசுத்தியுடையவர்களாய், வேத வேள்விகளைச் செய்து, வேதவிதிகளைக் கற்று, பிரமசரியம் முதலாகிய ஒழுக்கத்தை மேற்கொண்டவர்கள் வாழும் தெருக்கள் ஒருபுறம் அமைந்திருந்தன. அவற்றுள் இந்திர வியாகரணத்தை இயற்றிய இந்திரனாலும் அரசர் தெருக்களின் சிறப்பைக் கூறமுடியாது. அரங்கநாயகனின் அருளால் நான் சிறிது கூறுகிறேன்.

குதிரைகளின் வரிசை கடல் அலைபோலவும், அவற்றின் கனைப்புஒலி கடல்ஒலி போலவும் விளங்கின. யானைப்பந்திகள் கந்தமாதனமலைபோல விளங்கின. தேர்ப்படையானது மந்தாசல மலைபோலக் காட்சியளித்தது. இம் முப்படையையும் வளைந்துநின்ற காலாட்படையானது பெரும்புறக்கடலை ஒத்துக் காணப்பட்டது. பரதநாட்டிய இலக்கணம் வழுவாமல் நடனஞ்செய்யும் தலைமை வாய்ந்த மகளிரின் நடனங்களையும், இசைஇலக்கணம் வழுவாமற் பாடுகின்ற இனிய இசையினையும் இயல் இலக்கண முணர்ந்த அரசர்கள் கண்டும் கேட்டும் மகிழ்ந்தார்கள். குதிரை, யானை, தேர் ஆகியவற்றில் ஊர்ந்து முறைப்படி செலுத்தி மகிழ்ந்தார்கள் அம்மன்னர்கள்.

வணிகர் தெருக்களைக் கண்டால் குபேரனும் நாணம் அடைவான். அவற்றின் சிறப்பை ஆதிசேடனாலும் சொல்ல முடியாது. அவர்கள் தெருக்களில் நவமணி மாலைகளும், இரத்தினக் குவியல்களும் வரிசை வரிசையாய்க் குவித்து வைக்கப்பட்டிருக்கும். இம்மியளவும் பொய் சொல்லாமல் விலையைக் கூறுவார்கள். குழந்தைகள் மாணிக்கத்தால் ஆன அம்மி, வச்சிரத்தாலான குழவி, வெள்ளியால் செய்யப்பட்ட உரல், பவழ உலக்கை, முத்துக்களாகிய அரிசி, புட்பராக அடுப்பு, பொற்குடம், அகிற்கட்டை, பன்னீராகிய நீர், தங்க நெருப்பு ஆகியவற்றைக்கொண்டு வீடுகட்டி விளையாடுவார்கள். பிறர் பொருளையும் தம் பொருள்போல் எண்ணும் நற்குண, நற்செயல்களையுடையவர்கள் ஆகையால் பெருஞ்செல்வத்துடன் வாழ்ந்தார்கள்.

அந்தணர், அரசர், வணிகர் ஆகிய மூவரையும் தாங்கும் வேளாளர் அடியார்களைக் கண்டால் கடவுளையே கண்டவர்போன்று வணங்குவார்கள். மகளிர் நவரத்தினங்களால் அமைந்த அணிகலன்களை அணிந்து விளங்கினார்கள். இலக்குமியை நிகர்த்த அவர்கள் தேவ மகளிரைப்போல வீற்றிருந்தார்கள். அணிகள் ஒலிக்க நாட்டியம் செய்யும் மகளிர், தோகை விரித்தாடும் மயிலை நிகர்த்து விளங்கினார்கள். தேவமகளிரைப்போல அன்னங்கள் உலாவின. அவற்றின் அருகில் தலைவியரும் பாங்கியரும் மகிழ்ந்து அமர்ந்திருந்தனர். மாளிகைகளின் உச்சியிலிருந்து பெருகிய பன்னீர் வெள்ளம், ஐராவதத்தின் மதநீரை ஒத்து விளங்கியது. மங்கையரின் உடல் ஆயிரம் மாற்றுத் தங்கத்தினை ஒத்து ஒளி வீசியது. தாங்க முடியாமல் வீசியெறிந்த அணிகலன்கள் தெருக்களில் ஒளிவீசின. அவர்களின் உடலின் ஒளியும் அணிந்துள்ள அணிகலன்களின் ஒளியும் மணிவிளக்கு ஏற்றி வைத்தாற்போல விளங்கின. நகர ஆடவரோ அளகாபுரி மக்களைப்போல விளங்கினர். பந்தாடும் மகளிர் முகத்தில் காணும் வியர்வை, சந்திரனின் கதிர்கள் சிந்தும் அமுதத்தாரையினை ஒத்தது. சந்தனக்கலவையின் மணம் தெருக்களில் கமழ்ந்தது. பலவகை அணிகள், அரசர்கள், மணிகள், மனுநெறி, உயிர்களின் வரம்பு போன்றவை யாவும் அந்நகரத்திற்கே உரியவையாகும். அறுபத்துநான்கு கலைகளும் நிறைந்த அந் நகரம் திருமாலின் உதரபந்தனம்போல விளங்கியது. உலகத்துக்கு அரசாக விளங்கிய சிங்கமாபுரம், பூமிதேவியின் முகக்கமலமோ, திருமாலின் மார்புப்பதக்கமோ, பூமிதேவியின் மங்கல அணியோ, ஆன்ம கோடிகளின் இருப்பிடமோ, இலக்குமி தேவியாரின் இருப்பிடமோ, என்றெல்லாம் ஐயுறுமாறு விளங்கியது.

இந்த நகரின் சிறப்பினைப் பிரம்மனாலும் சொல்ல முடியாது. காரணம் அவனே திருமாலின் உந்தியில் தங்கியவன். ஆதிசேடனால் கூறமுடியுமோ எனின் அவனாலும் முடியாது. ஏனெனில் அவன் திருமாலின் படுக்கையாகி விட்டவன். சிவபெருமானும் கலைமகளும் கூறுவார்களோ எனில் அவர்களுடைய இருப்பிடமாகிய கயிலையும் தாமரையும் வெளுத்துப்போயின. சந்திரனோ தன் கலையில் குறைந்து தேய்ந்து போனான் எனவே அவர்கள் யாராலும் இதன் சிறப்பினைக் கூறமுடியாது.

நகரின் வளப்பம் கூறினோம். இனி அரங்கநாதனின் திருவருளால், நான்மறைகளின் பொருளை ஓதியவனும், நின்மலனாகி விளங்கியவனுமாகிய வேதவியாசனின் புகழினைக் கூறுவோம்.

**(நகர மதில்)**

55. **சக்கர வாள சயிலமிந் நகர்க்குத்**
**தாழ்விலா வெயிலதாய்ச் சார்ந்து**
**முக்கிய மாக விளங்கவே யெண்ணிச்**
**சூழ்ந்தன முடிவிலா தலையின்**
**பக்கம தெல்லாஞ் சித்திரப் பொறிகள்**
**பாசம்வேல் கப்பண முலக்கை**
**திக்கெலாம் வீசிக் கணைமழை சிதறிச்**
**சிந்திடுந் திசையெல்லா மவண.**

எ-து சக்கரவாள சயிலமானது இந்த நகரத்திற்குத் தாழ்வில்லாத மதிலினமாய்ச் சூழ்ந்து, பிரகாசிக்காநின்ற முக்கியமாகிய முடிவில்லாத அம்மதிற்பக்கமெல்லாஞ் சித்திரப்பொறிகளானவை பாசங்களை வீசப்பட்டதாயும், வேல் முதலாகிய திவ்விய அஸ்திரங்களை விடப்பட்டதாயும், சத்தி திரிசூலம், கண்ட கோடரி, இருப்பு உலக்கைகளைச் சுழற்றி விடுகின்றதாயும், திக்குத் திகாந்தங்களெல்லாங் கணைமாரியைத் தூவிச்சிதறும் படியாகிய செயல்கள் நிறைந்திருக்கின்றன அம்மதிற்புறம்பெல்லா மென்றவாறு. (1)

சககரவாளசயிலம - பெரும்புறக்கடலை வளைந்துள்ள மலை. எயில் - மதில். கப்பணம் - இரும்பாலாகிய நெருஞ்சில முள் சித்திரப்பொறி - ஓவிய வடிவில் அமைந்த மதில் உறுப்புகள் பாசம் - ஒரு படைக்கலம்; பாசக்கயிறு கணைமழை - அம்புகளாகிய மழை

**உரை** - திகாந்தம் - திக்கின் முடிவு; திக்கு + அந்தம். திக்கந்தம் - திகந்தம்; இதுவே திகாந்தம் எனப்பட்டது. கோடரி - கிளைகளை வெட்டும கருவி. கோடு + அரி; கோடு - கிளை; கோடாலி என மருவி வழங்குகிறது. அஸ்திரம - அம்பு.

## Nakara matil

*cakkara vāḷa cayilamin nakarkkut*
*tāḻvilā veyilatāyc cārntu*
*mukkiya māka viḷaṅkavē yeṇṇic*
*cūḻntaṉa muṭivilā talaiyiṉ*
*pakkama tellāñ cittirap poṟikaḷ*
*pācamvēl kappaṇa mulakkai*
*tikkelām vīcik kaṇaimaḻai citaṟic*
*cintiṭun ticaiyellā mavaṇa.*

# IV. The City

## The Fort Wall

Rivalling the legendary cakkaravāḷa Hill
Was the fort wall of this city
Encircling it endlessly, as it were;
On it such wondrous armaments of war
That could aim towards all directions
The noose, the lance, the iron spike,
The pestle; or a shower of arrows.

(கோபுரங்கள்)

56. திங்களுங் கதிரு மொதுங்குபொன் னெயிலிற்
செறிந்தபொற் றுவசமுந் திகழ்ந்த
விங்கித மான சத்தமால் கிரியின்
எழில்பெறு கோட்டைக ளிசைந்தச்
சங்கரன் கயிலை மலைகொலோ வலது
சாரங்க பாணியினுல கிதுவோ
பங்கய னுறையு மனோவதி நகரோ
வென்றனன் பண்ணவர் கோமான்.

எ-து சந்திர சூரியர் வடமேரு கிரியைச் சூழ்ந்து ஆகாயத்தின்கண் விமானரதாரூடராய்ச் செல்லும்போது இந்த நகரினைச் சூழ்ந்துயர்ந்த மதிலினால் தடைபட்டொதுங்கிப் போவார்கள். அந்த மதிலினிடையிடையே பொன்மயமாகிய துசபடங்களசைந்தாடா நின்றன இங்கிதம் அமைந்த சத்த குலாசலத்தினைப்போன்ற ஏழு விதமான கோட்டையின் பிரகாரங்கள் அடுக்குக எந்தளங்கள், கோபுரங்கள், குகைகள், முதலாகியவை பிரகாசித்தல் எத்தன்மைத்தெனில் சங்கரன் வாழ்கின்ற கயிலாய கிரியோ அல்லது சாரங்க வில்லினைக் கராம்புயத்தினில் தாங்கிய நாராயண மூர்த்தியினது பரமபதமோ அல்லது தாமரை மண்டபத்தி னெழுந்தருளிய பிரம்மாவினது மனோவதியோவென்றிந்திர மகாராசன் நினைந்ததிசயத்தினை யடைந்தா னென்றவாறு. (2)

கதிர் - சூரியன் துவசம் - கொடி; த்வஜம். இங்கிதம் - அழகு, இனிமை. சாரங்கபாணி - திருமால்; சார்ங்கம் என்னும் வில்லை உடையவர். பங்கயன் - பிரமன்; பங்கயம் - தாமரை மனோவதி - பிரமனது நகரம்; சத்தியலோகம் என்பதும் அது. மனோபதி. பண்ணவர் - தேவர்

**உரை** - விமானரதாரூடர் - விமானம் + இரதம் + ஆரூடர் - விமானமாகிய தேரில் ஏறிச்செல்லுபவர் உருவகம். துசபடம் - கொடி, கொடிச்சீலை; த்வஜபடம் - படம் - துணி. சத்தகுலாசலம் - ஏழுமலைகள்: அவை: இமயம், ஏமகூடம், கயிலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தியம் என்பன பிரகாரம் - சுற்றுத்தெரு சுற்றுமதில். `அந்தளம் - கவசம்.

## Kōpuraṅkaḷ

*tiṅkaḷuṅ katiru motuṅkupoṉ ṉeyiliṟ*
*ceṟintapoṟ ṟuvacamuṉ tikaḻnta*
*viṅkita māṉa cattamāl kiriyiṉ*
*eḻilpeṟu kōṭṭaika ḷicaintac*
*caṅkaraṉ kayilai malaikolō valatu*
*cāraṅka pāṇiyiṉula kituvō*
*paṅkaya ṉuṟaiyu maṉōvati nakarō*
*veṉṟaṉaṉ paṇṇavar kōmāṉ.*

## Tower Gate

Even the sun and the moon
Would get out of the way
Of the golden fort; golden flags
Waved from above; the handsome fort
Was like the comely directions four.
Seeing it, Intiraṉ wondered whether
It was the Kailasa of Civaṉ,
Or the residence of Viṣṇu,
Or Maṉōvati, the abode of Pirama.

(சுனை, தடாகங்கள்)

57. சக்கர கிரியில் தழைத்திடுஞ் சுனைகள்
தடாகநீ டாமரை வனங்கள்
மிக்கபொற் கொடிக ளசைந்திடக் கதிரோன்
வெப்பது மாறிமெய் குளிர்ந்த
பக்கமென் மதில்பாற் கடலினிற் றுயின்றோன்
பணியென வமரர்கள் பகருந்
தக்கவெண் மாட மாளிகைப் பதும
ராகமாய்த் தழைத்திடு மன்றே.

எ-து. சக்கர கிரியினது அருகெல்லாந் தழைத்த சுனைகளும், தடாக பந்திகளிலே நீண்ட தாமரைக் காடுகளும் பூத்தலர்ந்து பிரகாசித்தன. மிகுந்த அலங்காரத்தினையுடைய பொன்மயமான துசபடங்களின் அசைவினால் சூரியனது வெப்பந் தீர அவனது உடலெல்லாங் குளிர்ச்சியை அடைந்தது. நான்கு திக்கினுஞ் சூழ்ந்த மதிலானது திருப்பாற்கடலின் நடுப்பிரதேசத்திலே அனந்த விமான சேகரராய் யோகநித்திரை செய்கின்றவனது சேடசயனமோவென்று யாவருங் கூறுமாறும், மாடமாளிகையானது பதுமராகமாய்த் தழைத்திலகாநின்ற தென்றவாறு. (3)

சுனை - நீர் ஊற்று : மலைப்பகுதியில் அமையும் குளம் நீடாமரை - நீள் + தாமரை; நீண்ட தாமரை (வனம்). வெப்பு - சூடு. பணி - பாம்பு. பதுமராகம் - நவமணிகளுள் ஒன்று, செம்பு சேடசயனம் - ஆதிசேடனாகிய படுக்கை.

## Cuṉai, taṭākaṅkaḷ

*cakkara kiriyil taḻaittituñ cuṉaikaḷ*
*taṭākanī ṭāmarai vaṉaṅkaḷ*
*mikkapoṟ koṭika ḷacaintiṭak katirōṉ*
*veppatu māṟimey kuḷirnta*
*pakkameṉ matilpāṟ kaṭaliṉiṟ ṟuyiṉṟōṉ*
*paṇiyeṉa vamararkaḷ pakarun*
*takkaveṉ māṭa māḷikaip patuma*
*rākamāyt taḻaittiṭu maṉṟē.*

## Tarns, Lakes

In that *Cakkarakiri* were brimming tarns
And lakes that were woods of lotus;
As the numerous golden flags waved,
The sun's heat was allayed
And he grew cool; the gods mistook
The surrounding fort for the snake
On which Viṣṇu sleeps; the palace
Gleamed like ruby.

(அகழி)

58. இவ்வித மான வெயிலினை வளைந்த
கிடங்குதா னெழுகட லெனலாஞ்
செவ்விசேர் மடுவின் றேவலோ கத்தின்
சிறப்பினை யவ்விடை தெரித்துத்
திவ்விய மாகக் காட்டிடு மோர்பாற்
றிரண்டயா னைக்குல முழக்கற்
பவ்வமத் தெனமந் தரகிரி யதனால்
கடைந்திடு பான்மையைக் கடுப்ப.

எ-து சக்கரவாள சயிலத்தினையொத்த வெயிற்புறமாகிய மதிற்புறத்தை வளைந்த கிடங்கென்னும் அகழானது, அந்தச் சக்கரவாளச் சயிலத்தைச் சூழ்ந்த வெழுகடலென்று சொல்லப் பாதாளமாகிய ஒப்பற்ற மடுவில் தேவலோகத்தின் சிறப்பெல்லாம் இவ்வண்ணமென்று அந்த நகரத்தினது நிறைந்த வளங்களை யெல்லாம் அந்த மடுவின் நிழறசாய்கையினிற் காட்டுகின்றன ஓரிடத்தினில் யானைக் கூட்டங்கள் சஞ்சரித்துக் கலக்கித் திரிகின்றது எத்தனமைத்தெனின், முற்காலத்தில் தேவர்களென்றும் அரக்கர்களென்றும் இருவருந் திரண்டு வந்து திருப்பாற் கடலில் மந்தர கிரியால் கடையாநின்ற காலததில் அந்தச் சாகரமான தெப்படி கலங்கிற்றோ வந்த வியல்பாய்க் கலங்கியது அக ழென்றவாறு (4)

எயில - மதில் கிடங்கு - அகழி. பவ்வம் - கடல். மத்து - தயிர் முதலியன கடையும மத்து. சாகரம் - கடல்

## Akaḻi

*ivvita māṉa veyiliṉai vaḷainta*
*kiṭaṅkutā ṉeḻukaṭa leṉalāñ*
*cevvicēr maṭuviṉ ṟēvalō kattiṉ*
*ciṟappiṉai yavviṭai terittut*
*tivviya mākak kāṭṭiṭu mōrpāṟ*
*ṟiraṇṭayā ṉaikkula muḻakkaṟ*
*pavvamat teṉaman tarakiri yataṉāl*
*kaṭaintiṭu pāṉmaiyaik kaṭuppa.*

## The Moat

Encircling this fort was the moat
Rivalling the seven seas; in its depths
One could watch the reflection
Of heaven's glory; a herd of elephants
Was causing commotion in one place;
It was like the scene when the Mantara Hill
Was used to churn by gods and demons.

### (அகழி மீன்கள்)

59. மகர மெண்ணில பாய்ந்துமேன் மருவலர் படையைத்
தகர வேசெய்து செயங்கொளுந் தாழ்விலா நகரில்
நிகரில் வீரரும் வேண்டுமோ நேரலர் வெல்லப்
புகரின் இம்மதிற் கிடங்குமே போர்முடித் திடுமால்.

எ-து. அந்த அகழியினின்று மெண்ணிறந்தனவாகிய மகர மச்சங்கள் பாயாநின்றன. மேலாகிய சத்திராதிகளுடைய சேனையைத் தகர்த்துச் செயங்கொள்ளுகின்ற தெக்காலத்தும் லயமில்லாத விந் நகரத்தின்மேல் இலக்காய் அன்பத்தாறு தேய வரசர்களு மெதிர்த்துச் சமர் செய்யின், அவரை வெல்லத் தக்கதாகிய வீராதி வீரர்களும், சூராதி சூரர்களும் வேண்டுமோ? இந்த நகர் மதிற் புறத்தில் விளங்குகின்ற சித்திரப் பிரதமைகளும் அகழியிலே விளங்குகின்ற மகரமச்சங்களுமே போதும் வீரத்தைச் செலுத்திச் செயங்கொள்வதற் கென்றவாறு. (5)

மருவலர் - பகைவர். நேரலர் - பகைவர். மதிற்கிடங்கு - மதிலும் கிடங்கும்.

**உரை** - மகரமச்சம் - மகரமாகிய மீன்; சுறாமீன். சத்திராதி - பகைவர்; சத்துராதி, சத்துரு + ஆதி; சத்துரு - பகைவன் ஆதி - முதலானவர்கள். லயம் - ஒடுக்கம், குறைவு

### Akaḻi mīṉkaḷ

*makara meṇṇila pāyntumēṉ maruvalar paṭaiyait*
*takara vēceytu ceyaṅkoḷun tāḻvilā nakaril*
*nikaril vīrarum vēṇṭumō nēralar vellap*
*pukariṉ immatiṟ kiṭaṅkumē pōrmuṭit tiṭumāl.*

## Fish Leaping in the Moat

Innumerable fish leapt in the water.
Is there a need for priceless heroes
For such a city to defeat enemies?
This fort and its surrounding moat
Would themselves efficiently do the job.

(மாட மாளிகை)

60. சந்தனச் சோலைப் பந்திசூழ் சாலைச்
சாளரத் தொகுதிகள் தளிம
மிந்துகாந் தத்தின் மாளிகை மன்றம்
எழிற்பெறும் வச்சிர வாயில்
நிந்தையி லொன்பான் மணிபயில் கதவ
நீள்சுவர்க் கனகமாய்த் திகழப்
பந்திசூழ் மாட மாளிகைப் பதும
ராகமாய்ப் படர்ந்திடு மன்றே.

எ-து சந்தனமாகிய தருக்கள் மிகுந்த சோலைகளும், அச்சோலைகளைச் சூழ்ந்திருக்கா நின்றனவாகிய பந்தியாகிய வரிசைக் கிரமமா யிருக்கின்ற கமுகு, வாழை, மா, தெங்கு, பலா மரச்சாலைகளும், மெத்தை, மேடைகளில் இருக்கின்ற சாளர வாயிலினுடைய பந்திகளும், கோயில்களும், சந்திரகாந்த மாடமாளிகைகளும், இரத்தின மயமாகிய சபையிடங்களும், அழகாகிய வச்சிரவாயிலும், அவ்வாசலினுக் கொன்பது வகையாகிய மணிகளாற் செய்த கபாடங்களும், சுவாத தலஙகளெல்லா மாயிரத்தெட்டு மாற்று அபரஞ்சிகளால் விளங்குகின்ற மாடமாளிகைப் பரப்பெல்லாம் பதுமராக முதலாகிய மாணிக்க மிட்டிழைத்த மாளிகையை யுடையது அந்த நான்கு வீதி நகரெல்லா மென்றவாறு. (6)

தளிமம் - திண்ணை, மெத்தை: உரையில் கோயில் எனக்கொள்ளப்பட்டது. இந்துகாந்தம் - சந்திரகாநதககல வச்சிரவாயில் - வயிரத்தாலானவாயில்.

உரை - கபாடம - கதவு. மாற்று - பொன்னின்தரம். அபரஞ்சி - பொன்.

### Māṭa māḷikai

*cantaṉac cōlaip panticūḻ cālaic*
*cāḷarat tokutikaḷ taḷima*
*mintukān tattiṉ māḷikai maṉṟam*
*eḻiṟpeṟum vaccira vāyil*

*nintaiyi lonpān maṇipayil katava*
*nīḷcuvark kaṉakamāyt tikaḻap*
*panticūḻ māṭa māḷikaip patuma*
*rākamāyp paṭarntiṭu maṉṟē.*

## High-rice Buildings

Woods of sandal ; rows of trees
Surrounding them; rows of windows
And piais; palaces and halls
Made of moonstone ; a handsome
Entrance of diamond ; doors wrought
With nine kinds of faultless gems;
Walls of gold : long rows
Of such high-rise buildings
Shone as lines made of rubies.

(தெருக்கள்)

61. **கோலமால் வரையின் வீதிகள் அதனை**
**வியாதனார் கோலசே வடியைச்**
**சாலவே துதித்துச் சாற்றுவன் மறையோர்**
**வீதியைச் சாந்ததத் துவத்தின்**
**மூலகா ரணராய் முதன்மையை யுணரு**
**முனிவரர் முளரியின் மணியுஞ்**
**சாலநீ டுளப மணிபயில் சான்றோர்**
**சார்ந்திடு மிடங்களைக் கண்டும்.**

எ-து அந்தச் சஞ்சீவி கிரியென்னுங் கோலாசலத்தினுடைய வீதிகளின் பெருஞ் சிறப்பை வேதவியாசரென்னும் மறைமுனிவனுடைய திவ்விய திருவடிகளை வந்தித்துச் சொல்லுகின்றேன். சாத்வீக மூலகாரணமான தத்துவத்தினையும், முதன்மையாகிய பிரம பாவனையையுமுடைய முனிக்கூட்டங்கள் தாமரைமாலை, துளசிமாலைகளணிந்த, பரம பாகவதர்கள் வைபவமா யெழுந்தருளிய பன்னக சாலைகள், ராசவீதிகள் முதலாகிய நான்கு வருணத்தின் விளங்குகின்ற வீதிகளின் `வளப்பங்களைச் சொல்ல யாவருக்கும் அரிதா மென்றவாறு. (7)

கோலமால்வரை - கோலாசலம் என்னும் மலை. முளரியின்மணி - தாமரைமணிமாலை நீடுளபமணி - நீள் + துளப + மணி - நீண்ட துளசிமணி மாலை.

உரை - சாத்வீகம் - சாத்துவிகம் - இராசதம், சாத்துவிகம், தாமதம் என்னும் முக்குணங்களுள் ஒன்று அது அருள், ஐம்பொறியடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம், வாய்மை என்னும் எட்டுத் தன்மைகளை உடையது. பிரமபாவனை - தேவதியானம் வைபவம் - சிறப்பு பன்னகசாலை- பன்னசாலை - பன்னம் - இலை, ஓலை; புல்வீடு.

## Terukkaḷ

*kōlamāl varaiyiṉ vītikaḷ ataṉai*
*viyātaṉār kōlacē vaṭiyaic*
*cālavē tutittuc cārruvaṉ maṟaiyōr*
*vītiyaic cāntatat tuvattiṉ*
*mūlakā raṇarāy mutaṉmaiyai yuṇaru*
*muṉivarar muḷariyiṉ maṇiyuñ*
*cālanī tuḷapa maṇipayil cāṉṟōr*
*cārntiṭu miṭaṅkaḷaik kaṇṭum.*

## The Streets

Saluting the holy feet of Vyāsa
I will now describe the glory
Of the streets of Kōlavarai Hill.
Here reside devotees expert in the Vēdas
Who know the concept of peaceful life,
Experts in Brahma- knowledge
Who wear garlands of lotus beads
And the sacred basil.

(பலதிற மக்கள் வாழ் தெரு)

62. பஞ்சசுத் தியினைப் பயின்றவர் வேள்வி
பயில்பவர் வேதத்தின் பயிற்சி
நெஞ்சினி விருத்தி விதியினை யோர்ந்து
நெஞ்சகந் திருவிநா யகன்பால்
தஞ்சமா யிருத்திச் சரணினைத் தாழ்ந்து
தாழ்விலாப் பிரமசா ரியங்கள்
விஞ்சு மில்லற வானப்பிரத் தமதாய்
விளங்கிய மறையினோ ரொருபால்.

எ-து. அப்படிச் சொல்லுகின்ற சஞ்சீவிபுரமாகிய நகரத்தில் வாசம் பண்ணாநின்ற மறையவர்க ளெப்படிப்பட்ட கிரிகையினை யனுட்டிப்பார்க ளென்றால், பஞ்ச சுத்தியாகிய பூதசுத்தி, மந்திரசுத்தி, பாத்திரசுத்தி, தலசுத்தி, அந்தக்கரணசுத்தியைச் செய்யப்பட்டவர்கள். வேத வேள்வியை விதிப்படி செய்யப்பட்டவர்கள் அவையன்றியும் விதிவாத, மதவாத, மந்திரவாத, நாமதேயமென்னும் வேதவிதியை நெஞ்சினழுந்திடக் கற்றவர்கள், அந்த நெஞ்சத்தை ஸ்ரீ லட்சுமிபதியாகிய அரங்கநாயகனிட பாதத்திற் செலுத்தாநின்றவர்கள், பிரமசாரி, இல்லறத்தான், வானப்பிரத்தன் முதலாகிய ஆசிரமத்தினின் றொழுகுகின்றவர்கள் ஆகியோர் வாசம் பண்ணப்பட்ட வீதிகளொரு பக்கத்தில் விளங்கா நின்றதந்த சஞ்சீவிபுர மென்றவாறு. (8)

பஞ்சசுத்தி - ஆத்தும, இலிங்க, திரவிய, பூத, மந்திரசுத்திகள் எனவும் ஆம். பிரமசரியம் - நான்கு ஆச்சிரமங்களுள ஒன்று; ஆசிரியரிடத்தில் ஓதி, திருமணமின்றி இருக்கும் நிலை. நான்கு ஆச்சிரமங்கள்: 1. பிரமசரியம். 2. கிருகஸ்தம். 3 வானப்பிரஸ்தம். 4. சந்நியாசம்; கிருகஸ்தம் - இல்லறம் - இல்லாளுடன் இல்லறத்தில் வழாது ஒழுகும் நிலை வானப்பிரத்தம் - இல்லறந்துறந்து இல்லாளுடனாயினும், தனித்தாயினும் வனத்தில் தவம் செய்யும் நிலை நான்காம் ஆச்சிரமம் சந்நியாசம்- முற்றத்துறந்த நிலை.

## Palatiṟa makkaḷ vāḻ teru

*pañcacut tiyiṉaip payiṉṟavar vēḷvi*
*payilpavar vētattiṉ payiṟci*
*neñciṉi lirutti vitiyiṉai yōrntu*
*neñcakan tiruvinā yakaṉpāl*
*tañcamā yiruttic caraṇiṉait tāḻntu*
*tāḻvilāp piramacā riyaṅkaḷ*
*viñcu millaṟa vāṉappirat tamatāy*
*viḷaṅkiya maṟaiyiṉō rorupāl.*

## Various Communities

Among the residents there lived
Followers of the [1]Five Purities;
Priests expert in Vēdic ritualism;
Devotees who had surrendered at the feet
Of Nārāyaṇa; followers of [2]brahmacharya,

---

1. Concerning the self-discipline of following Atma (self), Linga (continence), Dravya (wealth), Bhuta (elements) and Mantra (ritual chanting) purities.
2. Self - continence.

Praiseworthy ways of the householder,
And retirement into the forest.

(அரசர் தெரு)

63. அரசர்கள் வீதி யினைவியந் துரைக்கி
னரசர்தா மிந்திர னழகார்
முரசம்போ லொலிக்கு மிலக்கணம் பகர்ந்தா
னாயினு மொழிகுவ தரிதாம்
பரவுறு மடியேன் அரங்கநா யகன்றன்
பார்வையாம் வாரிச மதனாற்
றிரமதா யுரைப்ப னவன்செய லன்றித்
தேர்ந்ததுஞ் சிலவில வாமால்.

எ-து. அந்த நகரத்தில் வசியாநின்ற வரசகுலத்தில் ராச சூடாமணியானவர்கள் வீதிகளின் பிரதாப சிரேட்டத்தைச் சொல்ல வேண்டுமாகில், இந்திர மகாராசன், முரசம் போல வொலிக்காநின்ற இந்திர வியாகரணமாகிய இலக்கணத்தை வகுக்கின்றவராயினும் அந்த நகர வளத்தைக் கூறமாட்டார். அப்படிப்பட்ட சிங்கார சுபகர சுகுணமாகிய வரசவீதியைச் சிறப்பிக்க அடியேனால் ஆகாதாயினும், அரங்கநாயகன் அனுக்கிரகப் பார்வையாகிய கிருபா நோக்கத்தால் அறிந்த மாத்திரஞ் சில கூறுவதல்ல திலக்கண இலக்கிய ஆராய்ச்சியாற றெளிந்து [1]சொல்லுவதில்லை என்றவாறு. (9)

வாரிசம - சஙகு. அருள. திரம் - உறுதி.

உரை - இந்திரவியாகரணம - இநதிரனால் செய்யபபட்ட வடமொழி இலக்கணம்

பா.வே. - 1 சொல்லுவதுஞ்சில என்றவாறு

## Aracar teru

*aracarkaḷ vīti yiṉaiviyan turaikki*
*ṉaracartā mintira ṉaḻakār*
*muracampō lolikku milakkaṇam pakarntā*
*ṉāyiṉu moḻikuva taritām*
*paravuṟu maṭiyēṉ araṅkanā yakaṉṟaṉ*
*pārvaiyām vārica mataṉāṟ*
*ṟiramatā yuraippa ṉavaṉceya laṉṟit*
*tērntatuñ cilavila vāmāl.*

## Royal Street

To speak of the wonders discovered
In the royal street; even Intiraṉ
Who indited the grammar
Which reverberates like the drum
Would not find it easy to describe it.
I seek to speak just a little
By the grace of Araṅkaṉ's glance
That is lotus-like; nought else.

(யானை, குதிரைப் படை)

64. கந்துகப் பந்தி பாற்கட றிரைபோற்
கவின்றிடக் கராசலக் களிறு
விந்தையாய் அமருங் கந்தமா தனம்போல்
விளங்கிட விரதத்தின் றொகுதி
மந்தரம் போல வயங்கிடச் சேனைப்
பெரும்புறக் கடலென வழங்குஞ்
சந்திர காந்த வுபரிகை மாணிக்
கத்தினா றழைத்தமே டைகளும்.

எ-து. குதிரைக் கூட்டங்கள் வெண்மையாகிய நிறத்தினையுடைய [1]உச்சைச்சிரவம் போலப் பந்தி பந்தியாய்க் கட்டியிருப்பது, திருப்பாற்கடலின் அலையைப்போல அணியணியாய் வெண்மை நிறத்தால் விளங்கியும், அக்கடலின் ஓசையைப்போலக் கனைத்து மிகுந்தன. கையினையுடைய மலைபோன்ற [2]யானைப் பந்திகளானவை அநேக விநோத சுகுணமாய் விளங்க, அவை கந்தமாதன மலையை யொத்தன. [3]இரதப் பந்திவர்க்கமானவை மந்தராசல மலையைப்போல வீற்றிருந்தன. சேனைகளாகிய காலாள் கூட்டங்கள் பெரும்புறக் கடலைப்போல் இம் மூன்றினையும் வளைந்து நின்றன. அதுவன்றியுஞ் சந்திரகாந்த வுப்பரிகைகளும், மாணிக்கத்தாற் றழைத்த மாடமாளிகை, கூடகோபுரங்கள் அடுக்குகள், அந்தளங்கள், மேடைகளும் உசிதவுல்லாச ரஞ்சித ரமணிய மங்கலமாய் விளங்குகின்றன அரசர்களின் வீதிக ளென்றவாறு. (10)

கந்துகம் - குதிரை. கவின் - அழகு கராசலம் - கரம் + அசலம் - கரத்தை உடையமலை - யானை. அன்மொழித்தொகை. கந்தமாதனம் - அட்டகுலமலைகளுள் ஒன்று - இராமேசுவரத்துக்கு அருகிலுள்ள ஒரு மலை. இரதம் - தேர் மந்தரம் - அட்டகுல மலைகளுள் ஒன்று; அவை - இமயம், ஏம கூடம், கந்தமாதனம், கயிலை, நிடதம், நீலமலை, மந்தரம், விந்தம் என்பன.

உரை - உச்சைச்சிரவம் - இந்திரன் குதிரை; உசிதம் - அழகு, மேன்மை. உல்லாசம் - மனமகிழ்ச்சி ரஞ்சிதம் - இன்பம், அழகு, ரமணியம் - ரம்மியம், சிறந்த மகிழ்ச்சி.

பா-வே. - 1. உசசுவச்சொரூபம். 2. வானைப்பந்தி. 3. விரதப்பந்தி.

## Yāṉai, Kutiraip paṭai

*kantukap panti pāṟkaṭa ṟiraipōṟ*
*kaviṉṟiṭak karācalak kaḷiṟu*
*vintaiyāy amaruṅ kantamā taṉampōl*
*viḷaṅkiṭa viratattiṉ ṟokuti*
*mantaram pōla vayaṅkiṭac cēṉaip*
*perumpuṟak kaṭaleṉa vaḷaṅkuñ*
*cantira kānta vuparikai māṇik*
*kattiṉā ṟaḷaittamē ṭaikaḷum.*

## Elephants, Cavalry

Rows of horses like the foam
Of the milky ocean; elephants
Like mountains with trunks wondrously
Stood in lines verily rivalling
The Kantamātaṉa Hill; units of infantry
That appeared like the immense ocean.
High-rise buildings of moonstone;
Also wide platforms inlaid with gems.

(மன்னர்கள்)

65. அரமிய மதனி னூல்வழி யாடும்
பதுமைபோ லான்றவே சியர்கள்
சிரமதாம் பரத விதியினின் வழுவா
திசைத்திடு மந்தநா டகத்தின்
பரவுறு மிலக்க ணத்தின திசைவு
பார்த்தபார்த் தீபர்கள் மகிழ்ந்துத்
திரமதா மிசைநூற் கேட்டுள மகிழ்வர்
இயலுணர் தெரியல்சூழ் வேந்தர்.

எ-து. அரமியமாகிய சந்திரகாந்த நிலாமுற்றங்களில் சூத்திரநூலின் வழியிலே யாடுகின்ற பதுமைகளைப்போல ரஞ்சித, அபகர, சுந்தரமாகிய வடிவழகினையுடைய தேவதாஸ்ரீகள், ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலாகிய ஸ்ரீகளிலுந் தலைமையாய் விளங்குகின்ற பரத நாடக விலக்கணம் வழுவாமல் நடனஞ்செய்யு மசைவுகளைக் கண்களிகூரப் பார்த்தருளிய வரசக் கூட்டங்கள், மகிழ்ச்சியை யடைந்ததுவு மல்லாமல் இசைக்கியான நூல்களைக் கீதங்களினின்று வழுவாதவராய் அழகிய வாம்பலினைத் திறந்து அமுதரசமாய்ப் பாடுகின்ற இன்ப மொழியைக் கேட்டு மகிழ்ச்சியை யடைவார்கள். இயல் இலக்கணத்தை யறிந்தனராய் திவ்விய சுகந்தங்களைக் கமழுகின்ற மாலையைத் தரிக்காநின்ற அரசக் கூட்டங்க ளென்றவாறு. (11)

அரமியம் - நிலாமுற்றம். நூல் - சூத்திரநூல், பாவையாட்டும் நூற்கயிறு. சிரம் - தலை; முதன்மை வாய்ந்தது. பார்த்தீபர் - மன்னர். இயல் - இயற்றமிழ், இலக்கணம் தெரியல் - மாலை

உரை - ஆம்பல் - குமுதமலர், மலர்போன்ற வாயினுக்கு ஆகி வந்தது. அபகரம் - கவர்ச்சி சுந்தரம் - அழகு.

## Mannarkal

*aramiya matani nūlvali yātum*
*patumaipō lānravē ciyarkal*
*ciramatām parata vitiyinin valuvā*
*ticaittitu mantanā takattin*
*paravuru milakka nattina ticaivu*
*pārttapārt tiparkal makilntut*
*tiramatā micainūr kēttula makilvar*
*iyalunar teriyalcūl vēntar.*

## Kings

In the terraces were women like statues
Moved by mechanics; excellent courtesans
Who danced according to Bharata Sastra
Witnessed by kings who were pleased
By such adherence to the rules of dance;
Wearing scented garlands, these kings
Who knew the grammar of music
Enjoyed the well-tuned music recitals.

(இன்ப விளையாட்டுகள்)

66. கந்துக நடத்துங் களிறுக ளிவருங்
கனதைதேர்க் கணமதைக் கவினாய்
விந்தையா யுருட்டும் விளங்குமா டரங்கின்
மெல்லிய லார்விளைத் திடுமோர்
நிந்தையிற் சரச வின்பத்தால் நிகழ்ந்த
காமநூல் நியதியைக் கண்டு
சந்தத மகிழ்ந்தங் கின்பங்க டுய்க்குஞ்
சால்பினை யுடையவ ரனந்தம்.

எ-து. சில அரசர்கள் குதிரையைக் கதியின் வரன்முறை தவறாது நடத்துவார்கள் சிலபேர்கள் யானையின் பேரில் அம்பாரி பிரகாசிக்க வேறி நடாத்துவார்கள். சிலபேர்கள் கனதை யாகிய தேர்க்கூட்டங்களை அழகாயேறித் திரிவார்கள். சிலபேர்கள் பிரகாசியாநின்ற நிலா முற்றங்களிலே பரத இலக்கணப்படி நடிக்காநின்ற, கொக்கோக இலக்கணப்படி தேவதாஸ்ரீகள் சரச சல்லாப மோகனத்தால் மயங்கி, உருகி, நாடோறும் மகிழ்சிறந்து அவருடைய இன்ப சுகத்தை மருவி ஆனந்தப் பரவசராயிருக்கப்பட்டவர்கள் அனந்தம் பேர்கள் அந்த ராசவீதியி லென்றவாறு. (12)

இவர்தல் - நடத்துதல். கனதை - கனம். கணம் - கூட்டம். மெல்லியலார் - மகளிர் நிந்தையில் - குற்றமற்ற கதி - குதிரை நடை

## Iṉpa viḷaiyāṭṭukaḷ

*kantuka naṭattuṅ kaḷiṟuka ḷivaruṅ*
*kaṉataitērk kaṇamataik kaviṉāy*
*vintaiyā yuruṭṭum viḷaṅkumā ṭaraṅkiṉ*
*meḷḷiya lārviḷait tiṭumōr*
*nintaiyiṟ caraca viṉpattāl nikaḻnta*
*kāmanūl niyatiyaik kaṇṭu*
*cantata makiḻntaṅ kiṉpaṅka ṭuykkuñ*
*cālpiṉai yuṭaiyava raṉantam.*

## Games of Pleasure

Some rode the horses; others mounted
The elephants and strode around;
Yet others drove heavy chariots;

On the terraces they held games of pleasure
Found in the rule books on sex;
There were several kings of this kind
Who laved in joy at all times.

(வாணிகர் தெரு)

67. வணிகர்தம் வீதி வகையினை யுரைக்கிற்
குபேரனும் வெள்கியே வணங்கும்
பணிகளிற் சிறந்த சேடனார் நாவு
மடங்கிடும் வீதியின் பரப்பில்
மணிகளின் மாலைக் கோவையாய் நிறுத்தி
மாநிதிக் குவையினைக் குவித்து
நணுகுவோர் விலைகள் கேட்கிலோ விம்மி
வழாமலே விலையினை நாட்டும்.

எ-து. வணிகராகிய வர்த்தக வீதி சிங்கார வளப்பத்தைச் சொல்லக் குறித்தால் அளகையில் வாசம் பண்ணாநின்ற குபேரனும் வெட்கப்பட்டு வணங்கித் தொழுவான். சர்ப்பக் கூட்டத்தில் சிறந்திடுகின்ற அனந்தனென்னு மாயிர நாவினையுடைய ஆதிசேஷனுஞ் சொல்லி முடியாத அந்த நகரப்பரப்பெல்லாம், நவமணிமாலைகளைக் கோவையாய்ப் பரப்பி வைத்துத் திரவியக் குப்பையைக் கடைகளிலே குவித்து, ராசி ராசிகளாய் விலை கேட்போர்க்கு இம்மியளவும் பொய்கூறாது விலையைப் பகர்ந்து விற்பார்க ளென்றவாறு. (13)

வெள்கி - வெட்கமடைந்து. பணி - பாம்பு. சேடன் - ஆதிசேடன். மணிகள் - நவமணிகளாகிய இரத்தினங்கள். இம்மி - நுண்மை, ஒருசிறிதும். குவை - குவியல்.

உரை - குப்பை - குவியல். ராசி - வரிசை, வகை.

## Vāṇikar teru

*vaṇikartam vīti vakaiyiṉai yuraikkiṟ*
*kupēraṉum veḷkiyē vaṇaṅkum*
*paṇikaḷiṟ ciṟanta cēṭaṉār nāvu*
*maṭaṅkiṭum vītiyiṉ parappil*
*maṇikaḷiṉ mālaik kōvaiyāy niṟutti*
*mānitik kuvaiyiṉaik kuvittu*
*naṇukuvōr vilaikaḷ kēṭkilō vimmi*
*vaḻāmalē vilaiyiṉai nāṭṭum.*

## The Street of Trade

Even [3]Kupēra would grow shy and salute
To speak of the street of trade.
Not even the tongue of the best
Of snakes, Āticēṣaṉ can do justice to it.
All over the vast stretches were found
Strings of gems and hillocks of wealth.
When customers asked for the price,
The traders quoted only the correct amount.

(வாணிகர் சிறார்கள்)

68. மாணிக்க வம்மி வச்சிரக் குழவி
மருவிய வெள்ளியால் உரல்கள்
காணிய தான பவளத்தால் உலக்கைக்
கசடறு முத்தினம் அரிசிப்
பூணரும் புட்ப ராகத்தால் அடுப்புப்
பொன்குட மழலகின் மாட்டி
மாணதாம் பனிநீ ருலைபெய்து சிறார்கள்
மடவரல் சிற்றிலை வகுப்பார்.

எ-து அந்த வர்த்தக வீதியிலே சிறு வீடுகட்டிக் குழந்தைகள் முதலாகிய பேர்கள் விளையாடுகின்ற தியாதென்றால், மாணிக்கத்தால் அம்மி வகுத்து, வச்சிரத்தினாலே குழவியமைத்து, வெள்ளியால் உரல்கள் செய்து, பவழத்தால் உலக்கைப் பணித்துக் குற்றமற்ற முத்தினமாகிய அரிசியைப் புட்பராக அடுக்கிலே வைத்திருக்கின்ற பொற்குடத்திலே, பனனீராகிய உலை நீரிலே விட்டுத் தங்க நெருப்பை மூட்டி அகில் கட்டைகளாகியதை மாட்டிச் சிறு வீடுகள் கட்டியாடுகின்ற சிங்கார சுந்தர வளப்பத்தினை உடையன அவ்வீதிக ளென்றவாறு. (14)

வசசிரம - வயிரம் குழவி- அம்மிக்குழவி. கசடு - குற்றம். முத்தினம் - முத்துக்கள். மடவரல்- இளம்பெண் புடபராகம - நவமணிகளுள் ஒன்று மாட்டி - மூட்டி. அழல் - நெருப்பு. அகில் - அகிறகட்டை

3. The God of Wealth

## Vāṇikar ciṟārkaḷ

*māṇikka vammi vaccirak kuḻavi*
*maruviya veḷḷiyāl uralkaḷ*
*kāṇiya tāṉa pavaḷattāl ulakkaik*
*kacaṭaṟu muttiṉam aricip*
*pūṇarum puṭpa rākattāl aṭuppup*
*poṉkuṭa maḻalakiṉ māṭṭi*
*māṇatām paṉinī rulaipeytu ciṟārkaḷ*
*maṭavaral ciṟṟilai vakuppār.*

## The Children of Traders

Over there little girls set up
Doll's houses to play and filled them:
A grinding stone of gem, pestle of diamond,
A pounding-mortar made of silver,
A pestle of coral, pearls as rice,
A stove of topaz, pitchers of gold.
Igniting fire with incense, they pour
Rosewater into the vessel set to boil.

(வாணிகர் பெருமை)

69. பிறர்பொரு ளதனைத் தம்பொருள் போலப்
பெரிதெனும் பெற்றிய தாலே
குறைவிலாச் செல்வ மோங்கியே தழைத்துக்
குன்றம்போ னிதிகுறை விலாமற்
பொறையினாற் றழைத்துத் தருமத்தின் பொருட்டாற்
பொன்னள வில்லதாய் வழங்கி
முறையினின் றொழுகும் வணிகர்தம் வீதி
முறைமையை மொழிகுவ தரிதாம்.

எ-து. பிறத்தியார் பொருளெல்லாந் தமதாக எண்ணுகின்ற நற்குண நற்செய்கையால், அச் செல்வம் ஒன்று அனந்தமாய்ப் பெருக, மலைகளைப்போலக் குவிந்தோங்கவும், சாந்த குணமாய்த் தழைத்து தருமத்தின் வழியிலே அளவிறந்த பொன்னைச் செலவு செய்து

வருண வொழுக்கமும் வழுவாமல் நடந்து இன்னமார்க்கம் நீங்காதவர் நகரவீதியின் பிரதாப வுல்லாச சிங்காரத்தைச் சொல்லுதல் எவர்கட்குமரிதா மென்றவாறு. (15)

பெரிதெணும் - சிறப்பாக எண்ணுகின்ற. பெற்றி - தன்மை. குணம். குன்றம் போனிதி - குன்றம் போல்நிதி: பெருஞ்செல்வம். பொறை - பொறுமை. முறையினின்றொழுகும் வணிகர் - கொடுப்பதுங் குறைகொடாது, கொள்வதும் மிகைகொளாது ஒழுகும் வாணிக ஒழுக்கம்.

## Vāṇikar perumai

*piṟarporu ḷataṉait tamporuḷ pōlap*
*periteṇum peṟṟiya tālē*
*kuṟaivilāc celva mōṅkiyē taḻaittuk*
*kuṉṟampō ṉitikuṟai vilāmaṟ*
*poṟaiyiṉāṟ ṟaḻaittut tarumattiṉ poruṭṭaṟ*
*poṉṉaḷa villatāy vaḻaṅki.*
*muṟaiyiṉiṉ ṟoḻukum vaṇikartam vīti*
*muṟaimaiyai moḻikuva taritām.*

## The Noble Traders

As they were all scrupulously honest
In guarding the wealth of others as their own,
Their sumptuous riches waxed well
Like a mountain; never lessening
Due to their patient husbandry;
They gave away illimitable gold
For purposes of charity.

(வேளாளர் தெரு)

70. மூவரைத் தாங்கு முறையினின் றொழுகு
சூத்திர வீதியின் முறைமை
நாவலர் கல்விப் பயிற்சியி னடங்கா
தாயினு நலத்தினைச் சிறிது
பூவைபோல் வண்ண னரங்கநா யகன்றாள்
பேணிய புகழினாற் புகல்வேன்
றேவனா ரடியார் காணிடி னரசர்
புத்திரர் தெய்வம்போற் றொழுவார்.

எ-து. மறையவர், அரசர், வணிகரென்னும் மூவரையுந் தாங்காநின்ற முறைமையாகிய சதுர்த்தரான, சூத்திரர்கள் வீதியினுடைய சிறப்பை வித்துவ சனங்கள் மிகவும் புகழ்ந்து கூறினாலும் அடங்காது ஆயினும் சிறிது கூறுகிறேன். அரங்கநாயகனுடைய அடியார்களாகிய பரம பாகவதர்களைக் கண்டால், அரச புத்திரரைக் கண்டால் எப்படி அச்சப்படுவார்களோ அத்தன்மைத்தாயும், தெய்வத்தைக் காணுமாறு போலவும் தொழுது வணங்குவார்க ளென்றவாறு. (16)

நாவலர் - புலவர். பூவை - காயாமரம்; பூவைபோல்வண்ணன் - காயாம்பூ மேனியன் தேவனார்- அரங்கநாதன். அடியார் - திருத்தொண்டர்

உரை - சதுர்த்தர் - வலிமையுடையோர், நான்காம் வகையினர், வேளாளர்

## Vēḷāḷar teru

*mūvarait tāṅku muṟaiyiṉiṉ ṟoḻuku*
*cūttira vītiyiṉ muṟaimai*
*nāvalar kalvip payiṟciyi ṉaṭaṅkā*
*tāyiṉu nalattiṉaic ciṟitu*
*pūvaipōl vaṇṇa ṉaraṅkaṉā yakaṉṟāḷ*
*pēṇiya pukaḻiṉāṟ pukalvēṉ*
*ṟēvaṉā raṭiyār kāṇiṭi ṉaracar*
*puttirar teyvampōṟ ṟoḻuvār.*

## The Street of Farmers

Now to describe the street
Where lived the Sudhras who sustained
[4]The other three; even scholars
Cannot exhaust the praise due to them.
When the farmers saw Araṅkaṉ's devotees
They would behave as if facing royalty
And salute them as if they visioned God.

---

4. Brahmins, Kshatriyas and Vaisyas

## வேறு

### (நகர மகளிர்)

71. பன்மணிப் பணிகள் பூண்டு பனிமதி முகத்த ராகி
யன்னமுங் குயிலு நாண அணிமணி மாட மீதில்
மின்னிடைத் துவள நிற்கும் விண்ணிடை மாதர் போல்வார்
பொன்மல ரரசி ருந்து பொலியுஞ்செந் திருவை யொப்பார்.

எ-து. மாணிக்கம், முத்தம், வயிடூரியம், வச்சிரம், பச்சை, கோமேதகம், பவழம், நீலம், புட்பராகமாகிய நவரத்தினங்களாற் செய்த பல ஆபரணங்களைத் தரித்து, சந்திரோதயம் போன்ற குளிர்ச்சிதங்கிய முகத்தினை யுடையவர்களாகி, அன்ன சமூகங்களும், குயிலினது வருக்கமும் நாணத்தைக் கொள்ள, அடுக்காகிய அழகினையுடைய மாடமாளிகையின் மீதிலே மின்னலினை யொத்ததாகிய இடையானது துவள, எதிரே வந்து நிற்கும் விண்ணிழிந்து வந்த மடவரல்களைப்போன்ற மகளிர் பொன்னிதழா னலர்ந்தொளிராநின்ற தாமரைப் போதிலே வசிக்கப்பட்ட பொலிவு பொருந்திய ஸ்ரீமகாலட்சுமியை யொப்ப வீற்றிருப்பார்க ளென்றவாறு. (17)

பன்மணி - பலவகை மணிகள்; நவரத்தினங்கள். பணி - நகை. பனிமதி - குளிர்ச்சி பொருந்திய சந்திரன் அணி - அழகு. மணிமாடம் - மணிகள் பதிக்கப்பெற்ற மாளிகை. இடை - இடுப்பு விண்ணிடைமாதர் - தேவருலக மகளிர். திரு - இலக்குமி.

## Vēr̲u

### Nakara makaḷir

*pan̲man̲ip paṇikaḷ pūṇṭu pan̲imati mukatta rāki*
*yan̲n̲amuṅ kuyilu nāṇa aṇimaṇi māṭa mītil*
*min̲n̲iṭait tuvaḷa nir̲kum viṇṇiṭai mātar pōlvār*
*pon̲mala raraci runtu poliyuñcen tiruvai yoppār.*

### Damsels in the City

Wearing ornaments of several gems,
With faces cool as the moon,
They tarry in gem-laid terraces
With lightning waists, putting to shame
The swans and *kuyils*, verily
They were like heavenly damsels
And were like the Goddess of Wealth
Seated luminously on the golden lotus.

(மகளிர் ஆடல்)

72. மணியிற்செய் குன்ற மீதில் வளரிளம் பேதை மார்கள்
பணிகளு மலம்பக் கையிற் பல்வளை யொலிப்ப வம்பொன்
துணிகளும் விரிய வாடற் செய்துவோர் தோகை மஞ்ஞை
அணிகொளுஞ் சிறைவி ரித்து மலையின்மீ தாட லொக்கும்.

எ-து. நவமணிகளாற் செய்கின்ற செய்குன்ற மலையின் மீதிலே, வளர்கிற இளமைத் தன்மையினையுடைய மங்கைமார்கள் பூண்ட ஆபரண வகையெல்லாஞ் சத்திக்கவும், அங்கையில் அணிந்த பலவிதமாகிய வளையலானவை ஒலியினைச் செய்யவும், பொன்மயமாகிய கலைகளானவை விரிந்து தோன்றவும், பரத நாடக இலக்கண முறை தவறாமல் நடிப்பார்கள். அது எத்தன்மையதாய் விளங்குமென்னில், மயிலானது சிறகினைவிரித் தொருமலையி னுச்சியிலே நடித்தலை யொத்திருந்தது என்றவாறு. (18)

பேதைமார் - மகளிர். அறிவால் அடங்கி ஒழுகுபவர் செய்குன்று - வினைத்தொகை அலம்ப - ஒலிக்க. பல்வளை - பலவகைவளையல்கள். தோகை - மயிலின் சிறகுத்தொகுதி. அணி - அழகு.

உரை - அங்கை - அம் + கை - அழகிய கை

## Makaḷir āṭal

*maṇiyiṟcey kuṉṟa mītil vaḷariḷam pētai mārkaḷ*
*paṇikaḷu malampak kaiyiṟ palvaḷai yolippa vampoṉ*
*tuṇikaḷum viriya vāṭaṟ ceytuvōr tōkai maññai*
*aṇikoḷuñ ciṟaivi rittu malaiyiṉmī tāṭa lokkum.*

## The Dance of the Women

Up on the gem-encrusted mountain
Young girls of increasing loveliness,
With ornaments a-jingle, the bangles
On their arms clinking,
Their swirling garments of golden sheen,
They dance, resembling
The dance of peacocks on hills
With their wings outspread.

(தோழியருடன் மகளிர்)

73. சலவைமண் டபத்தைச் சூழ்ந்தத் தாமரை வனத்த னங்க
ளுலவிய தேவ மாத ரொப்பதா லருகி ருந்து
பலபல தாய ரோடும் படுவமு துறையுங் கும்பக்
கலசச்செந் திருவு மாட மாதருங் கலந்த தொத்தார்.

எ-து. சலவைக் கல்லினாற் கட்டிய மண்டபத்தினைச் சூழ்ந்திலங்காநின்ற தாமரைத் தடாகப் பந்திகளில் அன்னங்களானவை சஞ்சரித்தல் எத்தன்மைத்தென்றால். பொன்னுலகின்கண் சஞ்சரித்து உலவுகின்ற தேவமகளிரினை யொத்ததா யிருந்தது. அதனருகெல்லாம் பலபல தாயர் கூட்டங்களுடனே தலைவியர் பாங்கி மாருடன் அமருகின்ற தோற்றம் எத்தன்மைத்தெனில், சுவைபடுகின்ற அமுத கும்பத்தில் அமருகின்ற ஸ்ரீ மகாலட்சுமி தேவியானவள் இந்நகரின்கண் மருவிய பருவ மங்கையருடன் [1]ஒற்றுமையாய்ச் சூழ்ந்திருத்தலை யொத்தது என்றவாறு. (19)

சலவை - சலவைக்கல். வனததனங்கள - வனத்து + அனங்கள்; அனங்கள் - அன்னங்கள் திருப்பாற்கடலில் அமுதம் கடைந்த காலத்து ஜேஷ்டாதேவியுடன் பிறந்து, திருமாலை மணந்த இலக்குமி படுவமுதுறையுங் குமபக்கலசச செந்திரு என்று சிறப்பிக்கப்படுகிறாள்

பா.வே. - 1. ஒத்துமையாய்

## Tōḻiyaruṭaṉ makaḷir

*calavaimaṉ ṭapattaic cūḻntat tāmarai vaṉatta ṉaṅka*
*ḷulaviya tēva māta roppatā laruki runtu*
*palapala tāya rōṭum paṭuvamu turaiyuṅ kumpak*
*kalacaccen tiruvu māṭa mātaruṅ kalanta tottār.*

## The Ladies with Maids

The swans swimming in tanks
Of lotus around the marble hall,
Resembled the divine damsels
Walking in the heavens'; near them
Were many ladies seated with maids,
And they appeared as the Goddess of Wealth
In the pitcher of nectar.

(மாளிகையும் அருவியும்)

74. சந்திர காந்தக் கல்லின் றசும்பினிற் பன்னீர் தோய்ந்து
சுந்தர மாய மாடந் தொகுத்தவெள் ளருவி பாய்தல்
இந்திர னியானை யுச்சி யிழிந்திடு மதத்துக் கொப்ப
அந்நகர் அரசர்க் கெல்லாம் வழங்கிடுங் குளிர்ச்சி யன்றே.

எ-து. சந்திர காந்தக் கல்லினால் தொழில் நிரம்பிய குடங்களின் பந்திகடோறும் பன்னீரானது நிறையப்பட்டு, நானாவித விசித்திர சுந்தரமானது அமைந்திலகாநின்ற மாடமாளிகை யுச்சியின்கண்ணிழிந்து பெருகாநின்ற வெள்ளருவியினது பெருக்கு எத்தன்மைத்தெனின், இந்திர மகாராசனது ஊர்தியாகிய அயிராவதமென்னுந் தெய்வயானையினது உச்சியின்கண்ணிழிந்து பெருகாநின்ற கபோல மதத்தினை யொத்தது. அஃதன்றியும் அந்தப் பொன்னுலக வாசர்களாகிய தேவ, காந்தருவர் முதலிய பேர்கட்குங் குளிர்ச்சியை வளரச்செய்யு மென்றவாறு. (20)

சந்திரகாந்தக்கல் - சந்திர உதயகாலத்தில் நீர்வழியும் கல், தசும்பு - குடம். சுந்தரம் அழகு, நிறம் மாடம் - மாளிகை.

உரை - ஊர்தி - வாகனம். கபோலமதம் - யானையின் முடிகளினின்று வழியும் மதநீர்.

## Māḷikaiyum aruviyum

*cantira kāntak kallin ṟacumpiniṟ paṉṉir tōyntu*
*cuntara māya māṭan tokuttaveḷ ḷaruvi pāytal*
*intira ṉiyāṉai yucci yiḻintiṭu matattuk koppa*
*annakar aracark kellām vaḷaṅkiṭuṅ kuḷircci yaṉṟē.*

## The Palace and the Waterfalls

The foaming rose-water that flaved
From the marbles at the top
Of the palace, resembled the rut
That flowed from the forehead
Of Intiraṉ's elephant-mount.
This made the city cool for the kings.

**வேறு**

**(மகளிர் ஒளி)**

75. **மின்னென விளக்கென விளங்கும் மாதர்மெய்ப்**
**பொன்னவிர் மாடமேற் பொலிய வெங்கணுந்**
**தன்னிக ரின்மலர்த் தவிசிற் றங்கிய**
**வன்னைசெந் திருவென வயங்கித் தோன்றுமால்.**

எ-து. மின்னலைப்போலும், ரத்னதீபம்போலும் எழிலாற்றோன்றுகின்ற மங்கையரது சரீர காந்தியானது ஆயிரமாத்து அபரஞ்சியினைப்போல ஒளிவிட, மாட மாளிகையின்கண்

பொலிவெய்தல் எத்தன்மைத்தெனின் தனக்கிணையின்றிப் பொன்னந் தாமரைப்பீடத்தில் எழுந்தருளிய ஸ்ரீ மகாலட்சுமியினது தோற்றம்போலத் தெய்வ மங்களாகர ரஞ்சிதமாய்ப் பொலிதலையொத்தது என்றவாறு. (21)

மின் - மின்னல் என - உவமை உருபு, போல. மெய் - உடல். மலர்த்தவிசு - தாமரை மலராலான பீடம் அன்னை - தாய். திரு - இலக்குமி

## Vēṟu

## Makaḷir oḷi

*miṉṉeṉa viḷakkeṉa viḷaṅkum mātarmeyp*
*poṉṉavir māṭamēṟ poliya veṅkaṇun*
*taṉṉika riṉmalart tavicir ṟaṅkiya*
*vaṉṉaicen tiruveṉa vayaṅkit tôṉṟumāl.*

## The Glow of Women

Women were like the lightning, the lamp;
Their glow illumined the golden halls;
The images resembled the Goddess of Wealth
Who resides in the unrivalled golden lotus.

## வேறு

### (தெருக்களில் அணிகலன்)

76. மாதர் நித்தம் பரிந்த மணிகலன்
வீதி தோறும் விளங்கிடு மெய்யிலார்
சோதி யாலுந் துலங்கிடு மில்லெலாந்
தீத கற்றும் பணிமணித் தீபமே.

எ-து. அந்நகரத்தினது நிலாமுற்றங்களிலே மருவி யிலகாநின்ற மடந்தையர்களானவர்கள் தாங்குதற்குச் சகியாதவர்களாய் நீக்கி யெறிகின்ற பணிகளானவை, வீதிகடோறும விளங்கி ஒளிகளை விரிக்கும். அவரது தேக காந்திகளாலும் பிரகாசத்தினை யடையும் இல்லங்களாகிய வீட்டிடங்கடோறும் மணிவிளக்கேற்றி வைத்தலையொத்தன அந்நகரின்கண் மருவிய மடந்தையர்கள் மீட்டு மணிகின்ற ஆபரணத்தினதுஒளி யென்றவாறு. (22)

நித்தம் - நாள்தோறும், எப்பொழுதும். பரிந்த - நீக்கிய. மெய்யிலார் - மெய் - உடல்; மெய்யில் ஆர்; ஆர் - நிறைந்துள்ள

உரை - மருவி - பொருந்தி யிலகாநின்ற - விளங்கி வருகின்ற. பணி - ஆபரணம். காந்தி - ஒளி.

## Veṟu
## Terukkaḷil aṇikalaṉ

*mātar nittam parinta maṇikalaṉ*
*vīti tōṟum viḷaṅkiṭu meyyilār*
*cōti yālun tulaṅkiṭu millelāṉ*
*tīta kaṟṟum paṇimaṇit tīpamē.*

## The Street Decorations

The ornaments thrown away daily
By women made the streets bright.
The ornaments worn by the women
Who were glowing also shone in the homes
Like lamps that remove darkness.

**வேறு**

**(சுவர்க்கமாகிய நகரம்)**

77. **பொன்னக [1]ரிந்நகர் பொலியத் தோன்றிடு**
**மன்னமென் மாதர்க ளரம்பைய ராகுவார்**
**நன்னிதி மாந்தர்கள் நவிலு மும்பராஞ்**
**சொன்னிதிக் குபேரனா ரளகை தோற்குமால்.**

எ-து. பொன்மயமாய் ஒளிவிடுகின்ற சுவர்க்க உலகமே இந்நகராகி இவ்வுலகெங்கும் பிரகாசித்து யாவரும் வணங்கத் தோற்றஞ்செய்யும். அன்னத்தைப் போன்ற மெல்லிய நடையினையுடைய இராசகன்னியர் முதலாகிய மங்கையர்கள், அரம்பையரினைப் போன்றிலகி வைகுவார்கள். நன்கு சிறந்த நிதியாகிய திரவியக் குவையினையுடைய செல்வம் நிறைவெய்திய அந்நகரின்கண்ணுள்ள ஆடவர்களெல்லாம் யாரினை ஒப்பவரென்னில், தேவர்கூட்டம் பரவுகின்ற நல்ல சொர்ண சாய்கையினையுடைய குபேரனது அளகாபுரமானது இந்நகர வளத்திற்குடைந்து தோற்கு மென்றவாறு. (23)

பொன்னகர் - பொன் + நகர் - தேவர் உலகம். இந்நகர் - இ + நகர் - இந்த நகரம். நன்னிதி - நல் + நிதி. சொன்னிதி - சொல் + நிதி. அளகை - அளகாபுரி; குபேரன் நகர். உம்பர் - வானோர்.

**உரை** - குவை - குவியல். சொர்னம் - சொர்ணம் - பொன். சாய்கை - சாலை.

**பா.வே.** - 1. ரின்னகர்.

## Vēr̲u

## Cuvarkkamākiya nakaram

*pon̲n̲aka rinnakar poliyat tōn̲r̲iṭu*
*man̲n̲amen̲ mātarka ḷarampaiya rākuvār*
*nan̲n̲iti māntarkaḷ navilu mumparāñ*
*con̲n̲itik kupēran̲ā raḷakai tōr̲kumāl.*

## The Heavenly City

The city appeared like the heavens.
The gentle, swan-like ladies
Resembled heavenly damsels;
The menfolk who were very rich
Made the city appear as Kupēran̲'s land.

## வேறு

### (பந்தாடும் மகளிர்)

78. பந்த டிப்பவர் பங்கய வாண்முகஞ்
சிந்து வேர்வைக டிங்கள் சிதறல்போற்
கொந்தள கங்குலை யக்கல வைத்திகழ்
சந்த ணங்கரை யத்தவ ழும்மதில்.

எ-து பந்தினைப் பயிற்றுகின்ற மங்கையரது தாமரை மலரினையொத்த வாண் முகமானது சிந்துகின்ற வேர்வையானது எத்தன்மைத்தெனில், பூரணச் சந்திரனானவன் கிரண சமுகங்களை விரித்து அமுதத்தாரையினைச் சொரிதலொத்தது; வாரி முடித்திலகாநின்ற அளக பாரமானது அவிழ்ந்து குலைந்திருப்பக் கலவை கலத்தலாகிய பரிமளங்கமழ்கின்ற பலகலவைகளும், சந்தனக் குழம்பும் அவ்வீதியிடங்களெல்லாம் கமழ்கின்ற கோலாசலநக ரென்றவாறு. (24)

பஙகயம் - தாமரை. திங்கள் - நிலவு

வாணமுகம - வாள் + முகம், ஒளிபொருந்திய முகம். அளகம் - மகளிர்க்கூந்தல் கொந்தளகம் - கொத்தாகிய கூந்தல்; முடித்துள்ள கூந்தல்.

உரை - பரிமளம் - மணம்.

## Vēr̲u

## Pantāṭum makaḷir

*panta ṭippavar paṅkaya vāṇmukañ*
*cintu vērvaika ṭiṅkaḷ citar̲alpōr̲*
*kontaḷa kaṅkulai yakkala vaiṭṭikaḷ*
*canta ṇaṅkarai yattava ḻummatil.*

## The Women Playing Ball

The sweat that poured out when women
With bright faces threw the ball,
Were like the droplets of nectar
From the moon; their bound tresses
Loosened to release scented dust
And sandal paste all over the place.

(நகரில் மணம்)

79. சங்கு முத்துந் தழைத்த மணிகளும்
பொங்கு நானம் புனுகுசவ் வாதுடன்
கொங்க லர்க்குரு வேர்மருங் கோதைக
ளெங்கெங் குங்கமழ்ந் தேயெழில் வாய்க்குமே.

எ-து. வலம்புரி, இடம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் ஆகிய நான்கினது முத்தங்களும், தழைத்த மற்றைய எண்வகை மணிகளும், மிகுந்த சுகந்தங்களையுடைய கஸ்தூரி, புனுகு, சவ்வாதுடனே நற்கந்தங்களைத் தருகின்ற குருவேர், வெட்டிவேர் முதலியனவும், மாலைத் தொகுதிகளும் அந்நகரப்பரப்பெல்லாஞ் சுகந்தங்களைக் கமழ்ந்து, வீசுகின்ற திசைகளெல்லாம் மணங்கமழு மென்றவாறு. (25)

மணி - நவமணிகள்; முத்துதவிர பிற எண்வகை மணிகள் என்றது

உரை - நானம்- கஸ்தூரி. கொங்கு - மணம். குருவேர் - வெட்டிவேர். மரு - மருக்கொழுந்து. கோதை - பூமாலை. மருக்கோதைகள் எனப்பட்டது. மணமிக்க மாலைகள் எனினுமாம்.

## Nakaril manam

*canku muttun talaitta manikalum*
*ponku nānam punukucav vātutan*
*konka larkkuru vērmarun kōtaika*
*lenken kunkamaln tēyelil vāykkumē.*

## Scented City

The city was scented by pearls
From conches; varieties of gem
Sweet-scented musk, civet, herbs,
And a variety of garlands
Made the place smell very sweet.

(சிங்கபுரத்தின் சிறப்பு)

80. அணியெலா மவண வரசெலா மவண
அருந்திரட் பொருளெலா மவண
மணியெலா மவண மனுவெலா மவண
மலரயன் வகுத்தபல் லுயிரின்
கணியெலா மவணக் கரிபரி யிரதங்
கடல்இரைத் தன்னவான் கலையுந்
திணிகொள்மா லுதர மென்னவுந் தோன்றும்
சிங்கமா புரமெனு நகரே.

எ-து. ஆபரணத்தினது ரஞ்சித விங்கிதங்களெல்லாம் அந்நகரினுண்டானவை. அரசர்களெல்லாம் அவ்விடத்தினுண்டானவர், அருமையவாகிய திரவியங்களும், அவ்விடத்தின்கண் ணுளதாய நவரத்தின சமூகங்களும் அவண்கண் மனுவினூல் நடக்கையும் அவ்விடத்திற்குரியன. மலரயனாலே வகுக்காநின்ற பலவுயிர்த் தொகையினது கணிதமாகிய வரம்புகளும், அவண் யானைகள் குதிரைகளின் கூட்டங்களும், தேர்ப்பந்திகளும், கடலானது இரைத்தா லெத்தன்மைத்தோ அத்தன்மையதாய்க் கோஷ்டிக்காநின்ற வேத முதலாகிய அறுபத்துநான்கு கலையும் நிறைந்திருப்பதனால் நாராயண மூர்த்தியினது உதரபந்தனம் போன்றிருந்தது சிங்கமாபுர மென்கின்ற நகர மென்றவாறு. (26)

அவண - அவ்விடத்தன (அவண் - அவ்விடம்) திரட்பொருள் - திரள் + பொருள் - திரட்சியாகிய பெருஞ்செல்வம். மனு - நீதி. உதரம் - வயிறு. அயன் - பிரமன்.

உரை - இரைதல் - ஒலித்தல் உதரபந்தனம் - அரைப்பட்டிகை, ஆடவர் இடையணி. இங்கு - திருமாலின் வயிறு.

## Ciṅkapurattiṉ ciṟappu

*aṇiyelā mavaṇa varacelā mavaṇa*
*aruntiraṭ poruḷelā mavaṇa*
*maṇiyelā mavaṇa maṉuvelā mavaṇa*
*malarayaṉ vakuttapal luyiriṉ*
*kaṇiyelā mavaṇak karipari yirataṅ*
*kaṭalirait taṉṉavāṉ kalaiyun*
*tiṇikoḷmā lutara meṉṉavun tōṉṟum*
*ciṅkamā purameṉu nakarē.*

## Glory of Ciṅkapuram

All ornaments were there; all the kings
Were raised there; treasures innumerable

Were there; gems were all there;
Justice of [5]*manu* was there;
The innumerable varieties of lives
Created by Piramaṉ were there;
Elephants, horses, chariots,
As also the chanting of scriptures
Resembling the loud sounds of the sea
Made the city of Ciṅkapuram
Resemble the waist-band of Viṣṇu.

(சிங்கபுரத்தின் அழகு)

81. நிலமகட் கினிய முகங்கொலோ வன்றி
நெடுமணி மார்பினி னமர்ந்து
பலமணி பதித்த பதக்கமோ வன்றிக்
பகரும்பொன் மங்கலந் தானோ
விலகிய வுயிரி னிருப்பிடந் தானோ
விலக்குமி யிருப்பிடந் தானோ
அலகில்பல் லுயிருந் தொழவும்வீற் றிருக்கு
மங்கண்மா ஞாலத்துக் கரசே.

எ-து. இவ் வுலகத்துக்கரசாகிய சிங்கமாபுரமானது பூமிதேவிக்கினிய முகக்கமலமோ அல்லது நெடியவனாகிய நாராயண மூர்த்தியினது மார்பில் வீற்றிருக்காநின்ற கவுத்துவாபரணத்திற்றங்குகின்ற பதக்கந்தானோ அல்லது அப்பூமிதேவியினது மங்கலமோ அல்லது இவ்வுலகின்கண் நான்குவகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பெங்கின்ற ஆன்மகோடிகளெல்லாம் இருக்கும் இருப்பிடமோ அல்லது ஸ்ரீமகாலட்சுமி தேவியாருக்கிருப்பிடமோ என்னுமாறு திரிபுவனத்துயிர்களுந் தொழுது வணங்க வீற்றிருப்பது அந்நகர மென்றவாறு. (27)

கொலோ - கொல் + ஓ; அசைச்சொற்கள். நெடு - நெடியவனாகிய திருமால்; திரிவிக்கிரம வடிவம். மங்கலம் - மங்கலநாண். ஞாலத்துக்கரசு - உலகத்தில் உயர்ந்த நகரம் - சிங்கமாபுரம்.

உரை - கவுத்துவம் - கௌத்துவம் - துளசிமணிமாலை. ஆன்ம கோடி - உலக உயிர்கள் தோற்ற நான்கு - பை, முட்டை, நிலம், வியர்வை. பிறப்பு ஏழு - தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வ நீர்வாழ்வன, தாவரம் என்பன.

5. King *manu* who wrote Dharma Shastra, a code of conduct for social-political life.

## Cinkapurattin alaku

*nilamakaṭ kiniya mukankolō vanri*
*neṭumaṇi mārpini namarntu*
*palamaṇi patitta patakkamō vanrik*
*pakarumpon mankalan tānō*
*vilakiya vuyiri niruppiṭan tānō*
*vilakkumi yiruppiṭan tānō*
*alakilpal luyirun toḻavumvīr rirukku*
*mankaṇmā ñālattuk karacē.*

## Cinkapuram's Beauty

Is this the sweet face of Mother Earth?
Or, is it the gem - encrusted pendent
On the broad chest of Lord Viṣṇu?
Or the golden, auspicious thread?
Or the residence of the lives innumerable
In all creation? Or the residence
Of the Goddess of Wealth?
Such was the city saluted by
The living beings of this wide world.

(சொலற்கரிய சிங்கபுரம்)

82. பங்கய னுரைப்ப னென்னிலோ வவனப்
பட்டினத் துறையுமா லுந்தி
தங்கிய மலரு ளடங்கினன் சேடன்
றனியணை யாகிப்பின் சார்ந்தான்
சங்கரன் வாணி வெளுத்தனர் மதியுந்
தண்கலை குறைந்தன னென்றால்
அங்கண்மா ஞாலத் தன்னக ரொப்ப
வறைகுவ தெவன்கொலோ வறியேம்.

எ-து அந்தச் சிங்கமாபுரத்தினது அனந்த கல்யாணகுண சிங்கார வளத்தினைத் தாமரைப் பீடத்தின்கண் வீற்றிருக்காநின்ற சிருட்டி கர்த்தாவாகிய பிரம்மா வானவர்

கூறிமுடிப்பரென்றாலோ அவர் அந்தப் பட்டினத்தின்கண் யோகநித்திரை செய்கின்ற அரங்கநாயகர் உந்திக் கமலத்தின்கண் ணடங்குவார். ஆதிசேடனானவன் கூறிமுடிப்ப னென்கிலோ அவனும் அரங்கநாயகரது நித்திரை சயனப் பாயலாய் அவரது பின்னடங்கப் பெற்றான். கயிலையங்கிரியின்கண் வீற்றிருக்காநின்ற சிவனானவரு மல்லது கலைமகளானவளுங் கூறி முடிப்பாரோவென்றால் அவர்கள் தமக்கிருப்பிடமாகிய கயிலாய கிரியுந் தாமரைக் கோயிலும் வெளுத்துப்போய்விட்டன என்றால் அவர்களெத்திறங் கூறிமுடிப்பார்க ளென்றவாறு. (28)

அப்பட்டினம் - சிங்கமாபுரம். மால் - திருமால். சேடன் - ஆதிசேடன் மதி - சந்திரன். ்புறைகுவது - எடுத்துக் கூறுவது. சந்திரன் கூறுவான் எனில் அவன தன் தண்ணிய கலைகளில் றைந்து தேய்ந்தனன் என்னும் கருத்து உரையில் விடுபட்டுள்ளது.

## Colarkariya cinkapuram

*pankaya nuraippa nennilō vavanap*
*pattinat turaiyumā lunti*
*tankiya malaru latankinan cētan*
*raniyanai yākippin cārntān*
*cankaran vāni veluttanar matiyun*
*tankalai kuraintana nenrāl*
*ankanmā ñālat tannaka roppa*
*varaikuva tevankolō variyēm.*

## Cinkapuram Beyond Praise

If Piraman wished to speak
Of the city's greatness, he was contained
By the lotus on Visnu's navel;
If Āticētan wished to, he became
The Lord's bed and was hidden behind;
Cankaran and Sarasvati grew pale,
And the moon lost his digits.
It is beyond our comprehension
Whether anyone could describe it at all.

## வேறு

### (வேதவியாசரின் புகழ் கூறத் தொடங்குதல்)

83. நகரி னல்வள மோதினம் நான்மறை
பகரு வேதப் பரம்பொரு ளாதியில்
நிகரி லாதெழுந் தோதிய நின்மலன்
புகழு ரைப்பதுன் பேரரு ளாகுமால்.

எ-து. நகர்வளம் கூறினோம் இனி வேதப் பரம்பொருளாகிய நாராயண மூர்த்தியானவர் முனிவர் கூட்டத்தைப் பார்த்துக் கூறியபடியே தோன்றியவரும், கலை அவதாரமாய் விளங்குபவருமாகிய வேதவியாசரது புகழினைக் கூறத்தொடங்குவோம் அரங்கநாயகனே! நாம் எடுத்துக்கொண்ட இக்காரியம் உமது அருளினாலே இனிதே நிறைவு பெறுமாக. (29)

ஓதினம் - கூறினோம் நின்மலன் - தூயவன்: வேத வியாசர்.

நகரப் படலம் முற்றிற்று.

## Vēṟu

### Vētaviyācariṉ pukaḻ kūṟat toṭaṅkutal

*nakari ṉalvaḷa mōtiṉam nāṉmaṟai*
*pakaru vētap paramporu ḷātiyil*
*nikari lāteḻun tōtiya niṉmalaṉ*
*pukaḻu raippatuṉ pēraru ḷākumāl.*

### Speaking of Vēda Vyāsa

We have spoken of the city's riches
We will now speak of the greatness
Of the Pure One who incarnated
As promised by the Supreme,
And who shines as the poet.
This would be by your grace.

# 5. முதலாவது

## வியாசன் உற்பத்தி நைமிசாரணிய அத்தியாயம்

நின்மலர்களான சவுனகாதி மகாமுனிவர்கள் நித்தியமாகிய தவ, யோக, யாகாதிகளைச் செய்ய விரும்பியவர்களாய், மனோவதி நகரம் எனப்படும் சத்திய லோகத்தை அடைந்து, பிரமதேவனை வணங்கித் தங்கள் கருத்தைத் தெரிவித்து, நின்மலமாகிய ஒருதலத்தை அருளிச்செய்யுமாறு வேண்டினார்கள். பிரமதேவன் புனிதமாகியதும் வெற்றி நிறைந்ததுமான தருப்பையினால்ஆன சக்கரம் ஒன்றினை உருவாக்கி உருட்டிவிட்டான். அந்தச் சக்கரம் எந்தத் தலத்திலே சென்று நிற்கிறதோ அந்தத் தலமே உங்கள் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளத்தக்க இடமாகும் என்று கூறியருளினார். அதன்படி அச் சக்கரமானது உருண்டு ஓடித் தங்கிய வனத்திற்கு, நேமியாகிய தருப்பைச் சக்கரம் சார்ந்ததால், நைமிசாரணியம் என்று பெயர் வைத்து அவ்விடத்திலிருந்து தவம் முதலியன மேற்கொண்டார்கள். அவர்களின் முன்னிலையில் சூதபுராணிகர் என்னும் முனிவர் வந்து தோன்றினார்.

அம்முனிவரை முறையாக வணங்கிய சவுனகாதி முனிவர்கள் திருமாலின் சிறந்த தலத்தினது பெருமையைக் கூறியருளுமாறு வேண்டினார்கள். அவர்களுக்குச் சூதபுராணிகர் கூறுகிறார். 'முனிவர்களே! பூர்வகாலத்தில் இவ் உலகில் வேத ஒழுக்கம் நிறைந்து விளங்கியது; பிறகு உயிர்கள் செய்த பாவத்தினால் மோக நூல் மிகுதியாகி வேதநூலின் இன்பம் மங்கியது. தருமங்களும் யோகங்களும் வேள்விகளும் தாழ்ந்தன. இந்நிலையை முனிவர்கள் திருமாலிடம் கூறி முறையிட்டார்கள். 'முனிவர்களே! எமது கலையானது வியாச முனிவராய் அவதரிக்கவும், அவரால் உங்கள் குறைகள் அனைத்தும் நீங்கவும் செய்கிறோம்' என்று அருள் செய்தார் திருமால். முனிவர்கள் உள்ளம் குளிர்ந்தார்கள்.

பிரமாவின் மரபிற் றோன்றிய வதிட்டருடைய மகனாய்த் தோன்றி மெய்ஞ்ஞான அறிவினை உடையவராய் விளங்கியவர் சத்தியர் என்னும் சான்றோர். அவருடைய மகனாகிய பராசரமுனிவர் ஒரு சமயம் கங்கையாற்றினைக் கடக்க ஒரு ஓடத்தின்மீது ஏறினார். அவ் வோடத்தைச் செலுத்திய பரிமளகந்தி என்பாளை மோகித்து அவளை அடைந்தார். அப்போது திருமாலின் ஒருகலையானது பரிமளகந்தியின்வழி வியாசமுனிவனாய் அவதரித்தது. இவ்வாறு அவதரித்த பராசரபுத்திரரானவர் வெதிரிகாச்சிரமம் என்னும் ஆசிரமத்தில் தங்கியிருந்தமையால் வாதராயணன் என்ற பெயரைப்பெற்றார். தாமே ஈசுவரனாய்த் தாம், ஓதாது உணர்ந்த வேதங்களைப் பயிலவர், கண்ணுவர், வைசம்பாயனர், துவந்தர் ஆகிய நால்வருக்கும் அருளிச்செய்தார். வேதங்களின் உட்பொருளடங்கிய சுவைகளைப் பதினெண் புராணங்களாக அமைத்து அடியேனாகிய எனக்கு அருளிச்செய்தார் என்று கூறினார் சூதபுராணிகர். மேலும் அவர் ஐவகைப் பொருள், ஐவகைப்புலன் அவற்றின் விடையங்கள், அந்தக்கரணம்; சதுட்டயம் ஆகியவற்றின் கருவி ஆகிய உடலை நடத்துகின்றவன் இறைவன். அவனது இச்சையால் தோன்றியவை காம குரோதங்கள். அவனது அருளாலேயே அவை அழியும் என்று கூறி வேதாந்த மார்க்கங்களை அருளிச் செய்தார்.

அவற்றைக் கேட்ட சவுனகாதி முனிவர்கள் சூதபுராணிகரை நோக்கி, மகானுபாவரே! யோகத்தைத் தவிர்த்துச் சாத்வீக ஞானத்தையடையவும், தர்மார்த்தங்கள், வேதவேள்விகள் முதலானவை தழைக்கவும் வேண்டி, செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் வீற்றிருக்கின்ற தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றின் சிறப்புகளைக் கூறியருளுங்கள் என்று வேண்டினார்கள்

**(சவுனகாதி முனிவர்கள்)**

**84. ஆதியிற் சிறந்த அருந்தவ நிதிக**
**ளாகிய முனிவர ரியாருஞ்**
**சோதியாம் பரனைத் தொழுவதற் குரிய**
**தூயநின் மலமன துளராய்**
**நீதிநான் மறைநூ னெறியறம் வேள்வி**
**நிறைதவ மிழைத்திட நினைந்தங்**
**கோதிய வீரே ழுலகினு மிகுந்த**
**[1]வுயர்மனோ வதிநக ரடைந்தார்.**

எ- து ஆதிகாலத்திலே ஞானத்தினாற் சிறந்த அரிதாகிய தபோநிதிகளான சவுனகாதி மகா முனிவர்கள் [2]யாவருஞ் சோதிமயமாகிய பரப்பிரம்மத்தைத் தொழுவதற்குரித்தாகிய சுத்த [3]பவித்திர நின்மலமான அந்தக் கரணத்தினை யுடையவர்களாய், நீதியாகிய வேதநூல் விதிப்படி [4]தர்மார்த்த காம மோட்சமென்று சொல்லுகின்ற சதுர்விதப் புருடார்த்தங்களிலும் உசிதமாகிய பவப்பிரயோசனத்தை யடையும்படியான வேத வேள்விகளும், நிறைந்த தவங்களுஞ் செய்யத்தக்கதாக நினைந்தவர்களாய்ப் பதினான்கு உலகத்தினும் மிகுந்த சிலாக்கியமான மனோவதியென்னுஞ் சிறந்த நகரத்தை யடைந்தார்க ளென்றவாறு. (1)

தவநிதி - முனிவர், முனிவரரியாரும் - யகர வருமொழியின் முன் இகரச்சாரியைபெற்றது. நின்மலம - தூய்மை தூயநின்மலம் - ஒருபொருட்பன்மொழி.

**உரை** - பவித்திரம் - தூய்மை, சுத்தபவித்திரநின்மலம் - சிறப்பு நோக்கி அமைந்த தொடர். அந்தக் கரணம - உட்பொறி, மனம். தர்மார்த்த காமமோட்சம் - தர்மம், அர்த்தம், காமம், மோட்சம்; முறையே அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றின் வடசொற்கள். சதுர் - நான்கு. புருடார்த்தம் - அடையவேண்டுவன, பயன், பவப்பிரயோசனம் - பிறவிப்பயன், வீடு.

**பா.வே.** - 1 மநோவதிநகர். 2. யாவருங்கூடி 3. பவுத்திர. 4. தன்மாற்த.

### Cavuṉakāti muṉivarkaḷ

*ātiyiṟ ciṟaṉta aruntava nitika*
*ḷākiya muṉivara riyāruñ*
*cōtiyām paraṉait toḻuvataṟ kuriya*
*tūyaniṉ malamaṉa tuḷarāy*
*nītināṉ maṟainū ṉeṟiyaṟam vēḷvi*
*niṟaitava miḻaittiṭa niṉaintaṅ*
*kōtiya vīrē ḻulakiṉu mikunta*
*vuyarmaṉō vatinaka raṭaintār.*

## V. Incarnation of Vyāsa

### Cavuṉaka and Other Sages

In days of yore great sages and scholars
With pure, crystalline hearts
Worthy of saluting the Supreme Being
Who is a Brilliance, wished to perform
According to sanctified scriptures
Several austerities to gain results
By leading a pure life,
And performing sacrifices; they reached
Maṉōvati city, praised in the seven worlds
As superb in every respect.

(ம்னோவதி நகரம்)

85. சத்திய வுலகிற் சரோருகக் கிழவன்
றாளினைத் தாழ்ந்தடி பணிந்து
நித்திய மாகுந் தவமதை யியற்ற
நிமலமாம் நிலையருள் கென்ன
வெத்திசேர் தருப்பைத் திகிரிய தாக
விதித்திது தங்கிடு மிடத்திற்
புத்திசேர் [1]முனிகா டவம்புரிந் திடும்நற்
புனிதமாந் [2]தலமெனப் புகன்றான்.

எ-து. மனோவதியாகிய சத்திய உலகத்தின்கண் வாசஞ்செய்கின்ற தாமரைப் பீடத்தி லெழுந்தருளிய சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவனுடைய உபய சரணாரவிந்தத்தை முனிவர் கூட்டங்களெல்லாம் வந்தனை செய்து யாங்கள் நித்தியமாகிய தவ, யோக, யாகாதிகள் செய்யத்தக்கதாய, நின்மலமாகிய [3]ஒருதலத்தை அருளிச்செய்யக் கடவீரென்று விண்ணப்பஞ் செய்ய, அருளிச் செய்கின்றார். வாரீர் முனிவர் கூட்டங்களே! புனித [4]வெற்றியானது சேர்ந்த தருப்பையினாலே சக்கர மொன்றுண்டாக்கி விடுகின்றோம். அந்தச் சக்கரமான துருண்டோடி எந்தத் தலத்திலே வசிக்குமோ அந்தத் தலமானது பரம [5]பவித்திரமாகையால் அந்தத் தலங்களில் தவம், யோகம் முதலாகிய யாகாதிகளைச் செய்து, தபோ பலங்களையடைந்து, வைதீக விதிகளை [6]விருத்தி செய்து, சுகமாக வாழ்கப்பெறுவீரென்று அனுக்கிரகஞ் செய்து தருப்பைச் சக்கரத்தைப் பிரயோகஞ் செய்து விட்டார் பிரம்மதேவ ரென்றவாறு. (2)

சத்திய உலகம் - மனோவதி நகரம் எனப்படும் பிரமனது நகரின் வேறுபெயர் சரோருகம் - தாமரை நித்தியம் - நிலையான நிமலம் - நின்மலம் - தூய்மை. வெத்தி - வெற்றி, எதுகை நோக்கி அமைந்தது. தருப்பை - தருப்பைப்புல். திகிரி - சக்கரம். முனிகாடவம் - முனிகாள்! + தவம். தவம் - புற, அகப்பொறிகளை அடக்கி, யான் என்னும் தன்மையை நீக்க முயற்சிசெய்யும் விரதம். யோகம் - ஐம்புலன்களை அடக்கித் தன்முயற்சியை நிலை நிறுத்தச் செய்யுந் தியானம். யாகம் - வேளவி; இவை தவ யோக, யாக, ஆதிகள் எனப்பட்டன. ஆதிகள் - முதலானவை. பிரயோகம் - செலுத்துதல் புனிதம் - தூய்மை.

பா.வே. - 1. முனிகா டவம்புரிந்துடுவீர். 2. தவாமனப் 3. தவத்தை. 4. வெ்த்தியானது 5 பவுத்திர. 6. வளத்து

## Maṉōvati nakaram

*cattiya vuḷakiṟ carōrukak kiḻavaṉ*
*ṟāḷiṉait tāḷntaṭi paṉintu*
*nittiya mākun tavamatai yiyaṟṟa*
*nimalamām nilaiyaruḷ keṉṉa*
*vetticēr taruppait tikiriya tāka*
*vitittiṭu taṅkiṭu miṭattiṟ*
*putticēr muṉikā ṭavampurin tiṭumnaṟ*
*puṉitamān talameṉap pukaṉṟāṉ.*

## Maṉōvati City

Saluting the feet of Piramaṉ on the lotus
Residing in the Satyalōka, the sages
Made a request: 'Do grant us

A pure space for performing austerities.
'I shall release a discus
Made of victorious *Taruppai* grass.
O great sages! The spot where
The wheel comes to rest
Would be holy for your austerities.

(நைமிசாரணியத்தில் சூதமுனி)

86. அதிபெரும் புகழ்ோ னளித்திடுந் திகிரி
யடைந்ததவ் வனத்தினி னழகார்
முதியதோர் நைமிய சாரணிய மென்ன
முனிவரர் மொழிந்தவ ணிருந்து
கதிபெறும் வேள்வித் தவமியோ கங்கள்
கணிப்பிலா துஞற்றியே கழித்துப்
புதியதா மரையோன் தாளிணை வழுத்தப்
புகுந்தனன் சூதமா முனிவன்.

எ-து. அளவிடப்படாத பெரும் புகழினைப் பெறுகின்ற பிரம்மதேவன் அனுக்கிரகஞ் செய்தருளிய சக்கரமானது, உருண்டோடித் தங்கிடும் படியாகிய அந்த ஆரணியத்தினை அழகு நிறைந்த நைமியஞ் சார்ந்த காரணப்பெயரினால் நைமிசாரண்ணிய மென்று நாமகரணஞ் செய்வித்து, முனிக்கணங்க ளவ்விடத்திலிருந்து வேள்விகள், தவங்கள், யோகங்கள் அளவிறந்தன[1] செய்து, திவ்விய பரிமளங்கள் கமழாநின்ற தாமரைப் பீடத்திலெழுந் தருளிய மேலவனுடைய உபய சரணார விந்தத்தை வேதவாக்கியத்தாற் புகழ்கின்ற முனிவர்களது கிரியையினாலே அங்ஙனம் பிரவேசித்தார் சூதபுராணிகரென்னும் முனிபுங்கவ ரென்றவாறு. (3)

நைமியம் - நைமிசம் - நிமித்தம், ஆராதனை, தவம் அவண் அங்கு, அவ்விடம், தவமி யோகம் - தவம், யோகம் - யகரவருமொழியின் முன் இகரச் சாரியைபெற்றது. கணிப்பு - அளவு. உஞற்றி - செய்து. அங்ஙனம் பிரவேசித்தார் - அவ்விடம் வந்து சேர்ந்தார். தாமரையோன் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். உபயம் - இரண்டு. சரணாரவிந்தம் - சரணம் + அரவிந்தம்; சரணம் - திருவடிகள்; அரவிநதம் - தாமரை. கிரியை - செய்கை; சைவசமய நிலை நான்கில ஒனறு அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன சரியை — ஒழுக்கம்; கிரியை - செய்கை; யோகம் - தியானம்; ஞானம் - தெளிவு.

பா.வே. - 1. செய்தனர்

## Naimicāraṇiyattil Cūtamuṉi

*atiperum pukalō ṉaḷittiṭun tikiri*
*yaṭaintatav vaṉattiṉi ṉaḷakār*
*mutiyatōr naimiya cāraṇiya meṉṉa*
*muṉivarar moḻintava ṇiruntu*
*katiperum vēḷvit tavamiyō kaṅkaḷ*
*kaṇippilā tuñaṟṟiyē kaḻittup*
*putiyatā maraiyōṉ tāḷiṇai vaḻuttap*
*pukuntaṉaṉ cūtamā muṉivaṉ.*

## Sage Cūtar in Naimicāraṇya

The forest-space where the wheel
Aimed by the far-famed Piramaṉ rested
Was named by the sages
As [1]*naimicāraṇya*; they remained there
And performed innumerable sacrifices
And austerities that lead to higher planes.
When they saluted the feet of Piramaṉ
The great sage Cūtar entered.

(திருமாலின் தலச்சிறப்பு வேண்டுதல்)

87. முனிவரன் பாத பங்கய மிறைஞ்சி
நைமிசர் மொழிகுவ ரெமக்குத்
தனியதா மூவா றாகிய புராணம்
அதனின்மால் தலச்சிறப் புடைத்தாற்
கனியென வெமக்கிங் குரைத்தருள் புரிதி
யென்றலுங் கருதியொன் றுரைப்பார்
இனியதா முலகில் மோகநூல் அதனா
'னிலைதவிர்ந் தனர்புகழ் மறையோர்.

---

1. The wood (āraṇya) where the naimi (wheel) came to rest.

எ-து. அந்த நைமிசாரணியத்தினெழுந்தருளிய சூத முனிவர்க்கு [2]அர்க்கிய, பாத்திய, ஆசமனீயம் முதலானதுங் கொடுத்து, முனிவர்க்கூட்டங்களெல்லாம் அவரது பாதபங்கயங்களிலே இறைஞ்சி ஒரு வார்த்தை [3]யருளிச் செய்கின்றார்கள். ஒப்பற்ற புராணம் பதினெட்டுக்குள் திருமால் சிறந்தருளிய தலத்தினது பெருமையை முக்கனியினது ரசத்தைப் போல் யாங்களுண்டு களிக்க அனுக்கிரகம் பண்ணவேணு [4]மென்று விண்ணப்பஞ் செய்ய, அதை யூகித்து ஆலோசனை செய்து திருவாய் மலர்ந்தருளுகின்றார். வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! பூர்வ காலத்திலே வேத வொழுங்கமைந்த இவ்வுலகத்தின்கண் உயிர்கள் செய்த பாவமிகுதியால் மோகநூல் விர்த்தித்த வதனால் வேத மார்க்கத்தி னின்பங்களெல்லாந் தலையெடுக்காமல் மயங்கிற் றென்றவாறு. (4)

பாத பங்கயம் - திருவடித்தாமரை இறைஞ்சுதல் - வணங்குதல். தனியது - ஒப்பும் உயர்வும் அற்ற ஒன்று; மிக உயர்ந்தது. மூவாறாகிய புராணம் - பதினெண் புராணங்கள். மால் - திருமால். அருள்புரிதி - அருட்செய்யுங்கள்; புரிதி - புரியுங்கள் என்னும் முற்றுச்சொல். நிலைதவிர்தல் - ஒழுக்க நிலைகளிலிருந்து வழுவுதல்.

**உரை** - அர்க்கிய, பாத்திய, ஆசமன்னியம் - உபசரிக்கும் முறைகள் அர்க்கியம் - அருக்கியம் - படையல் போடுதல், மந்திர நீர் இறைத்தல் -முதலிய பூசை முறைகள்; பாத்தியம் - பாதம் அலம்பக்கொடுக்கும் நீர்; ஆசமன்னியம் - ஆசமனீயம் - உட்கொள்ளுதற்குக் கொடுக்கும் நீர் - ஆசமனம் - உட்கொள்ளுதல். விர்த்தித்தது - விருத்தியடைந்தது: மிகுதியாயிற்று

பா.வே. - 1. வைதிக நிலமை நீங்கிற்றால். 2 வற்கபாத்திய. 3 கூறுகின்றார்கள் 4 மென்றன்பினுடனே கேட்க.

## Tirumāliṉ talacciṟappu vēṇṭutal

*muṉivaraṉ pāta paṅkaya miṟaiñci*
*naimicar moḻikuva remakkut*
*taṉiyatā mūvā ṟākiya purāṇam*
*ataṉiṉmāl talacciṟap puṭaittāṟ*
*kaṉiyeṉa vemakkiṉ kuraittaruḷ puriti*
*yeṉṟaluṅ karutiyoṉ ṟuraippār*
*yiṉiyatā mulakil mōkanūl ataṉā*
*ṉilaitavirn taṉarpukaḷ maṟaiyōr.*

## Praying for a Holy Account

After saluting the sage's feet
*Naimicar* said: 'Speak to us
Like the juice of sweet fruit

The account that unveils
Among the eighteen *purāṇās*
The greatness of Viṣṇu's residence.'
Taking it in, the sage replied
'In times of yore, the ways of Dharma
Were lost to the common man
As there was an increase in sacriligeous works.

(திருமாலைப் புகழ்தல்)

88. தருமயோ கங்க ளறம்பொருள் வேள்வித்
தவற்றினை யடைந்ததிவ் வுலகி
னருமறை யோது முனிவரர் சிறந்த
வரனயன் அமரர்க டுதிக்குங்
குருபர னாகி வரியபாற் கடலிற்
குலவிவீற் றிருந்திடும் பரமன்
சரணியைப் புகழ்ந்து மோகநூன் மார்க்கஞ்
சாற்றியே தாழ்ந்தடி பணிந்தார்.

எ-து. அப்படி வேதமார்க்க வைதீக வாசாரம் நீங்கிய காரணத்தினாலே தருமங்களும் யோகங்களும் தர்மார்த்தங்களும், பதினெண் வகையாயுள்ள வேள்விகளும் விர்த்தியாமல் அபவிர்த்தியடைந்து அரிய வேதங்களைப் பாராயணம் பண்ணாநின்ற முனிவர்களுஞ், சிறப்புற்ற சிவன், பிரம்மா முதலாகிய தேவர்களும் துதிக்காநின்ற குருபர [1]மூர்த்தமாய்த் திருப்பாற் கடலினில் யோக நித்திரை செய்கின்ற பரம்பரனுடைய உபய சரணார விந்தத்தைப் புகழ்ந்து, மோகநூல் மார்க்கத்தினாலே சற்கருமங்களெல்லாங் கிலமாய்ப் போனதைக் கூறிவந்தித்தார்கள் திரிலோகத்திலுள்ள முனிவர்க்கூட்டங்க ளென்றவாறு. (5)

அமரர்கடுதிக்கும் - அமராகள் துதிக்கும் சரணி - திருவடி, கால்வழி.

உரை - வைதீக ஆசாரம - வேதநெறி ஒழுக்கம் அபவிர்த்தி - அபவிருத்தி - குறைதல்; வளர்ச்சி குன்றுதல் மூர்த்தம் - உருவம். சற்கருமம் - புண்ணியச் செயல். கிலம் - அழிவு. சிறுமை வந்தித்தல் - புகழ்ந்து கூறுதல், வணங்குதல்.

பா.வே. - 1 முகுர்த்தமாய்.

## Tirumālaip pukalṯal

*tarumayō kaṅka ḻaṟamporuḷ vēḷvit*
*tavaṟṟiṉai yaṭaintativ vulakiḷ*
*ṉarumaṟai yōtu muṉivarar ciṟanta*
*varaṉayaṉ amararka ṭutikkuṅ*
*kurupara ṉāki variyapāṟ kaṭaliṟ*
*kulaviviṟ ṟiruntiṭum paramaṉ*
*caraṇiyaip pukaḻntu mōkanūṉ mārkkañ*
*cāṟṟiyē tāḻntaṭi paṇintār.*

## Praising Viṣṇu

'As Dharma, yōga, prosperity, sacrifice
And austerities waned in the world,
The great sages with expertise in scriptures
Drew close to the Supreme
Who rests in the Milky Sea,
The One who is the Supreme
Saluted by Civaṉ, Piramaṉ and gods,
Praised his feet, submitted the news
Regarding the ways of unrighteousness
And paid homage.

(வியாசனாய்ப் பிறப்பேன் எனல்)

89. நாரண னருளால் மோகநூன் மார்க்கம்
நலிந்திடக் கருதியொன் றுரைப்பர்
நாரண முனிவீ ரழகிய நமதங்
கருங்கலை வியாதனா யுதித்துப்
பூரண ஞான மாம்பொருள் வேள்விப்
புனிதமா முனிவரர் மரபுந்
தாரணி தன்னிற் றழைத்தினி தோங்கு
மென்னவே தயைபுரிந் தனனால்.

என்று இவ்விதமாகக் கூறிய முனிவர் கூட்டத்தினிடரினை யந்த நாராயண மூர்த்தியானவர் தனது [1]கடாக்ஷ கிருபாவிசேடத்தினாலே அருளிச் செய்கின்றார். வேதபாராயணஞ் செய்கின்ற முனிவர் கூட்டங்களே! எனது கலையானது [2]வியாச முனிவனா யிவ் வுலகத்தில் அவதரித்துப் பரிபூரண ஞானங்களுந் தர்மார்த்தம் முதலானதும், யாகங்களும், புனிதமாகிய முனிவர் வர்க்கங்களும் இவ்வுலகத்தின்கண் தழைத்தோங்கும்படியாய்த் திருவவதாரஞ் செய்கின்றோ மென்று திருவாய் மலர்ந்தருளினா ரென்றவாறு. (6)

நலிந்திட - அழிந்திட, மெலிந்திட நமதங்கருங்கலை - நமது + அங்க + அருங்கலை, நமதங்க அருங்கலை அகரம் தொக்கு நின்றது; வருக என என்பது வருகென என்றாற் போல; அங்க அருங் கலை - சாயையாகிய அரிய கலை, சாயை - நிழல.

உரை - கடாட்சம் - கடை + அட்சம் - கடைக்கண், கருணை; அட்சம் - கண், கிருபாவிசேடம் - கிருபை விசேடம், கிருபை - அருள்; அருட்சிறப்பு.

பா.வே. - 1, கடாட்சபரிபூரண கிருபையினாலே யூகித்து...... கூறுகின்றார். 2. வியாதமுனிவனாய்.

## Viyācaṉāyp piṟappēṉ eṉal

*nāraṇa ṉaruḷāl mōkanūṉ mārkkam*
*nalintiṭak karutiyoṉ ṟuraippar*
*nāraṇa muṉivī raḻakiya namataṅ*
*karuṅkalai viyātaṉā yutittup*
*pūraṇa ñāṉa māmporuḷ vēḷvip*
*puṉitamā muṉivarar marapuṉ*
*tāraṇi taṉṉiṟ taḻaittiṉi tōṅku*
*meṉṉavē tayaipurin taṉaṉāl.*

## The Lord's Promise

To put an end to the false scriptures
Nārāyaṇaṉ spoke words of grace:
'Sages! my special emanation
Will incarnate as Vyāsar
To revive on earth total knowledge,
The ways of prosperous life,
Sacrifices, and the tradition
Of realised souls.'

(முனிவர்கள் மகிழ்ச்சி)

90. வறியவன் செல்வம் பெற்றது போலுங்
கண்ணிலான் வண்மைய தான
குறிதிகழ் விழிகள் விளங்குதல் போலு
முனிவரர் உளங்குளிர்ந் திருந்தார்
நறியதா மரையோன் மரபினி னுதித்த
வதிட்டனார் புத்திரர் நலமாஞ்
செறிவறி வுடைய சத்தியர் புத்திரர்
பராசராய்ச் செறிந்திடு முனிவர்.

எ-து. அப்படி நாராயண மூர்த்தியானவர் அனுக்கிரகஞ் செய்தருள, தரித்திரனானவன் மிகுந்த செல்வமடைந்தது போலும், குருடானவன் கண்ணினைப் பெற்றதுபோலும், முனிவரர்களுளங் குளிர்ந்து [1]ஆனந்த வைபவத்தினை யடைந்தார்கள். திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற தாமரைக் கோயிலை யாதனமாகவுடைய பிரம்மாவினது மரபிற் பிறந்தவர்கள் வதிட்டரும், அவருடைய புத்திரராய மெய்ஞ்ஞான யறிவினையுடைய சத்தியரும், அவருடைய புத்திரர் பராசரரும் என்று கூறுவார்க ளென்றவாறு. (7)

வண்மை - வளமை. குறி - முறை. நறிய - நறுமணமிக்க தாமரையோன் - பிரமன் வதிட்டர் - வசிட்டர்.

பா.வே. - 1. இறும்பூதுற்றார்கள்.

## Munivarkaḷ makiḻcci

*vaṟiyavaṉ celvam peṟṟatu pōluṅ*
*kaṇṇilāṉ vaṇmaiya tāṉa*
*kuṟitikaḻ viḻikaḷ viḷaṅkutal pōlu*
*muṉivarar uḷaṅkuḷirn tiruntār*
*naṟiyatā maraiyōṉ marapiṉi ṉutitta*
*vatiṭṭaṉār puttirar nalamāñ*
*ceṟivaṟi vuṭaiya cattiyar puttirar*
*parācarāyc ceṟintiṭu muṉivar.*

## The Sages are Happy

Like a poor man gaining riches,
Like a blind man being granted eyes
That can vision what they look at,

The sages grew happy of heart.
Vaciṣṭa who was born in the dynasty
Of the lotus-seated Piramaṉ,
His son the good Cattiyar,
And his son Parācarar of great wisdom
Are spoken of till today.

(வியாசர் பிறப்பு)

91 புண்ணிய நதியிற் பொருந்திய வோடம்
புகுந்தனர் பரிமள கந்தி
எண்ணமோ டமர்ந்தா ளிருவருங் கூடி
இன்பமுற் றனர்புக ழீசன்
கண்ணிய கலையி னோர்கலை வியாதன்
கமழ்தரு முனிவனா யுதித்து
நண்ணிய வந்தான் மறைகளுந் தழைக்க
நாடியே நதிவனங் கடந்தார்.

எ-து அந்தப் பராசரரானவர் புண்ணிய தீர்த்தமாகிய [1] கங்கையிலே ஓடமேற் புகுந்தார். அவ்வோடததின்கண் ணெணணிய வெண்ணம் நிறைவெய்தப் பரிமள கந்தியானவள் அமர்ந்து வீற்றிருந்தாள அநதக் காலத்தில் அவளழகினைக் கண்டு பராசரர் மோகித்தார். அபபொழு திரண்டுபேருஞ் சரச சல்லாப சையோகஞ் செய்யும் போது, நாராயண மூர்ததியினுடைய கண்ணிய கலை சமுகங்களிலே ஒரு கலையானது ஞான மணங்களைக் கமழாநின்ற வியாசமுனிவனாய் அவதரித் திவ்வுலகத்தின்கண் தர்மார்த்த காம மோக்ஷங்களை [2]விதிததுரைககாநின்ற வேதஙகளுந தழைத்தோங்கும் [3]பொருட்டாகத் திருவுள்ளத்தில் நினைந்து அந்த நதியைக் கடநது அநேக ஆரணியங்களை யெல்லாங் கடந்து வந்தா ரென்றவாறு (8)

பரிமளகநதி - மசசகநதி, சத்தியவதி எனனுமபெயர்களை உடையவள்; வியாசரின் தாய்.

பா.வே. - 1 ஒருநதியிலே 2 விதிவிதிததுரைககா 3. பொருட்டாயெண்ணி

## Viyācar piṟappu

*puṇṇiya natiyiṟ poruntiya vōṭam*
*pukuntaṉar parimaḷa kanti*
*eṇṇamō ṭamarntā ḷiruvaruṅ kūṭi*
*iṉpamuṟ ṟaṉarpuka ḻīcaṉ*

*kaṉṉiya kalaiyi ṉōrkalai viyātaṉ*
*kamaḻtaru muṉivaṉā yutittu*
*naṉṉiya vantāṉ maṟaikaḷun taḻaikka*
*nāṭiyē nativaṉaṅ kaṭantār.*

## Vyāsa's Birth

Parācarar entered a comely boat
On the holy river Kaṅka.
[2]Parimaḷakanti was seated there.
The two came together in love.
One of the emanations of the Supreme
Was born to them as Vyāsa, the sage;
He then journeyed forth across
Rivers and forests to bring about
An increase in scriptures.

(வியாசர் ஓதாதுணர்தல்)

92. [1]வதிரிகாச் சிரமம் புகுந்தன னதனால்
வாதரா யணப்பெயர் விளங்கப்
பதியதாய் ஓதா துணர்ந்தனன் வேத
சாகைகள் காண்டங்கள் பரித்த
விதியினைப் பயில வர்பெயர் முதலாய்
விளங்குநான் மறையவர்க் கிசைத்தான்
மதியினால் வேதார்த் தங்கள்மூ வாறு
புராணமா யுரைத்தனன் மகிழ்வால்.

எ-து. அந்த ஆரணிய நதிகளெல்லாங் கடந்து அந்தப் பராசரபுத்திரரானவர் [1]வதிரிகாச்சிரம மென்னும் ஆசிரமத்தின் புகுந்தஙகே வாசஞ்செய்த காரணப் பெயரினால் அவருக்கு வாதராயண னென்கின்ற பெயரானது உலகப் பிரசித்தமாய் விளங்கத்தக்கதாகத் தாமே ஈசுவரனாய் ஒரு குருவினிடத்திற் கேட்டல், சிந்தித்தல் முதலாகிய காரணமில்லாமல் ஓதா [2]துணர்ந்தார் வேத சாகைகள் காண்டங்களினுடைய விதிவாத [3]முதலியவற்றைப் பயிலவர், கண்ணுவர், வைசம்பாயனர், துவந்தா முதலிய நால்வர்க்கு நான்கு வேதத்தையும் அருளிச்செய்து அந்த வேதத்தினுடைய நுட்பமாகிய நவரச வலங்காரத்தைப் பதினெண்

---

2. Also known as Cattiyavati and Maccakanti in the **Mahābhārata.**

புராணமாய் விதித்து அடியேனுக் கனுக்கிரகஞ் செய்தருளினார் கிருபா பரிபூரண மூர்த்தியாகிய வாதராயணமுனிவ ரென்றருளிச் செய்தார் சூதபுராணிக ரென்றவாறு. (9)

வதிரிகாச்சிரமம், வெதிரிகவனம், இலந்தை வனம் என்னும் பெயர்களை உடையது. வதிரி - இலந்தை. வாதராயணம் - ஒருவகை மரம் பதி - இறைவன் சாகை - வேதநூற் (பிரிவு). பரித்த - பெற்றுள்ள, கூறுகின்ற. வேதார்த்தம் - வேதம + அர்த்தம் - மறைகளின் உட்பொருள்.

**உரை** - பயிலவர் - இருக்குவேதம் உணர்ந்தவர்; உதங்கரின் ஆசிரியர். கண்ணுவர் - விசுவாமித்திரருக்கு மேனகையிடம் பிறந்த சகுந்தலையை வளர்த்த முனிவர். வைசம்பாயனர் - ஜனமேஜயனுக்குப் பாரதத்தை அருளிச செய்தவர்; யசுர்வேதம் உணர்ந்தவர். துவந்தர் - சுமந்தர் - சைமினி முனிவரின் குமாரர்.

பா.வே. - 1. வெதிரிகாச் 2. துணந்தார் 3. முதலியதைப்.

## Viyācar ōtātuṇartal

*vatirikāc ciramam pukuntaṉa nataṉāl*
*vātarā yaṇappeyar viḷaṅkap*
*patiyatāy ōtā tuṇarntaṉaṉ vēta*
*cākaikaḷ kāṇṭaṅkaḷ paritta*
*vitiyiṉaip payila varpeyar mutalāy*
*viḷaṅkunāṉ maṟaiyavark kicaintāṉ*
*matiyiṉāl vētārt taṅkaḷmū vāṟu*
*purāṇamā yuraittaṉaṉ makiḻvāl.*

## Vyāsa's Realisation

He entered the retreat at Badari
Hence he was called
Badarayana after the residence.
He realised all knowledge
Without the conventional tools of education.
He then taught the branches
And sections of the Vēda
To four great student-scholars.
With his crystalline intelligence
He joyously retold
The significance of the Vēdas
As eighteen Purāṇas.

(தலச்சிறப்பு கூறுமாறு வேண்டுதல்)

93. ஐவகைப் பொருளும் அருமறை நான்கு
மடைந்தமுக் குணங்களு மறையோர்
செய்வினை இரண்டுஞ் செழுந்தவர் முனிவர்க்
குரைத்தபின் சூதமா முனிவன்
பொய்யிருள் அகலப் பொருளறம் வேள்விப்
புவிதனிற் கதிரென விளங்கக்
கைவள ராழிச் செங்கண்மா லருளாற்
கதிபெறுந் தலத்தினைக் கழறும்.

எ-து. வாரீர் சவுனகாதி இருடியர்களே! ஐவகைப் பொருளாகிய பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், [1]இந்திரிய மாகிய சத்த, பரிச, ரூப, ரச, கந்தமாகிய ஞானேந்திரியங்களைந்துங் கன்மேந்திரியங்களைந்தும், ஞானேந்திரிய விடையமைந்தும், கன்மேந்திரிய விடையமைந்தும், அந்தக்கரணச் சதுட்டயமும் ஆகிய இந்த இருபத்து நான்கு தத்துவத்தாலாகிய மாயாபாசக் கருவியான சத்த தாதுக்களாற் போர்த்திய குரம்பையைச் சூத்திரதாரியாய் நடாத்தாநின்ற புருடனும் அந்தப் புருடனிச்சையா லுண்டாகிய ராசத, தாமத, சாத்வீக மென்று கூறுகின்ற முக்குணங்களாலே சுழல்கின்ற மோகங்களைத் தவிர்த்து, சுத்த தத்துவ சாத்வீக ஞான சொரூபனான வாத்தும சொரூபத்தில் கலந்த மெய்யறிவினை யுடையவனாய் [2]விடையவாதனைகளைக் கடந்து, [3]பரமாத்மாவே தனக்கும் ஆத்துமாவென்று நிச்சயித்து, முன்பு அனந்த சென்மங்களிற் செய்த புண்ணிய பலன்களினாலே நல்வினை, தீவினைகளாகிய [4]காமக் குரோதாதிகளைக் கடிந்து யாக, யோக, தப, செபாதிகளை விதிக்கின்ற வேதாந்த மார்க்கங்களெல்லா மருளிச்செய்ய, சவுனகாதி மகாரிஷிகள் விண்ணப்பஞ் செய்கின்றார்கள். மகானுபாவரே! பொய்யிருளாகிய போகத்தினைத் தவிர்த்து இராசத, தாமச குணங்களை உள்ளடக்கிச் சுத்த சத்துவ சாத்வீக ஞானத்தையடைந்து, தர்மார்த்தங்கள் விருத்தியடையத்தக்கதாய் வேத வேள்விகள் மூன்று லோகங்களிலும் ஆதித்தனைப்போல விளங்கிப் பிரகாசிக்கத் தக்கதாய்ச் சக்கரதரனாகிய செந்தாமரைக் கண்ணன் வீற்றிருக்கின்ற அதி சிலாக்கியமாகிய தலத்தினது விசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடங்களை விசிதமாய் அருளிச் செய்யவேணுமென்று விண்ணப்பஞ் செய்தார்க ளென்றவாறு (10)

முக்குணம் - இராசதம், தாமதம், சாத்விகம். **இராசதம்** - மனஊக்கம், ஞானம், வீரம், தானம், தருமம, கல்வி, கேள்வி முதலியன **தாமதம்** - பேருண்டி, நெடுந்துயில், சோம்பல், நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை போல்வன **சாத்விகம்** - சததுவம் - ஞானம், அருள, தவம், பொறை, வாய்மை, ஐம்பொறி அடக்கல் போனறவை செய்வினை இரண்டு - நல்வினை, தீவினைகள்.

**உரை** - ஞானேந்திரியவிடயம் - ஐந்து - ஞானேந்திரியம் - அறிகருவிகள் - அவை - மெய், வாய், கண், மூக்கு, செவி; ஞானேந்திரிய விடையம் - இக்கருவிகளால் அறிதல் கன்மேந்திரிய விடையம் - ஐந்து - கன்மேந்திரியம் - செய்கைக்கருவிகள் அவை - உபததம, பாணி, பாதம், பாயுரு, வாக்கு - இவை முறையே குறி,(தொடை) கை, கால், குதம், வாய் ஆகியவையாகும். கன்மேந்திரிய

விடையம் - இக்கருவிகளினால் செய்தல். விடையவாதனை - உலக ஞானப் பயிற்சி. அந்தக்கரணச் சதுட்டயம் - அந்தக்கரணம - உட்கரணம் - மனம். மனம், புத்தி, சித்தம் அகங்காரம் என்னும் நான்கும் அடங்கும். சதுட்டயம் நான்குமடங்கு சத்ததாது - இரதம் (உமிழ்நீர்) இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை என்னும ஏழுதாதுக்கள். குரம்பை - உடல்.

பா,வே. - 1 சூட்சும பூதங்களாகிய 2, விடய 3 பரமான்மாவை, பலசொரூப சுக நிஷ்டையை யுடையவன் நலவினை. 4 பொன்னிரும்பாகிய விலங்கினைக் கடிந்து.

வியாசன் உற்பத்தி முற்றிற்று.

## Talaccir̲appu kūr̲umār̲u vēṇṭutal

*aivakaip poruḷum arumar̲ai nān̲ku*
*mataintamuk kuṇaṅkaḷu mar̲aiyōr*
*ceyvin̲ai iraṇṭuñ ceḷuntavar mun̲ivark*
*kur̲aittapin̲ cūtamā mun̲ivan̲*
*poyyiruḷ akalap poruḷar̲am vēḷvip*
*puvitan̲ir̲ katiren̲a viḷaṅkak*
*kaivaḷa rāḻic ceṅkaṇmā laruḷār̲*
*katiper̲un talattin̲aik kaḷar̲um.*

## Praying for an Account

After speaking to the sages
Of the [3]five elements, the [4]four Vēdas,
The [5]three qualities as also
The [6]twin springs of action,
The sage Cūtar began to speak
Of the greatness of the place
Where resides the discus-wielding Viṣṇu
Granting an increase in Dharma and sacrifices,
And removes the darkness of falsity.

---

3. Earth, Fire, Wind, Water and Space.
4. Rig Vēda, Yajur Vēda, Sama Vēda and Atharvana Vēda.
5. Sattwa, Rajas and Tamas
6. Jnanendriyas and Karmendriyas

## 6. இரண்டாவது
## தலவிசேட, தீர்த்த விசேட அத்தியாயம்

உயிர்கள் எல்லாம் வீடுபேற்றினை அடைதற்கு ஏதுவாகிய தல, தீர்த்த, மூர்த்தி விசேடங்களை அருளுமாறு வேண்டிய முனிவர்களுக்கு முதலில் தலவிசேடங் கூறுகிறார் சூதபுராணிகர்.

வாரணவாசி என்னும் காசியை அடைந்தவர்கள் பெறும் பேற்றினைக் கோலாசலம் என்னும் தலத்தை அடைந்தவர்கள் பூரணமாக அடைவார்கள். மேலும் அவர்கள் இராச கண்டீரவனைப்போல, எல்லாவகையான அரசச் செல்வங்களையும் அனுபவித்துச், செங்கோல் நடத்தி, நாராயணமூர்த்தியின் பரமபதத்தை அடைந்து, நித்திய சூரியர்களாய் வீற்றிருப்பார்கள்.

கோலாசலம் என்னும் மலையானது ஆயிரத்தெட்டு சிகரங்களை உடையது; மேருமலையின் தோற்றமாக விளங்குவது; வேதங்களால் போற்றத்தக்கது; வாலகில்லியர் முதலானவர்கள் தங்கியிருக்கும் பெருமை வாய்ந்தது. அதனை வலம் வந்து, அரங்கநாதனைக் கண்டு வணங்கியவர்கள் நித்திய சூரியர்களாய் வீற்றிருப்பார்கள். கோலாசலம் என்னும் மலையைச் சார்ந்து விளங்குவது சஞ்சீவிபுரம் என்னும் தலம். அது முனிவர்கள் மகிழ்ந்திருக்கும் பெருமை வாய்ந்தது; கங்கை தவம் புரிந்து, வராக மூர்த்தியின் திருவடிகளில் உதித்த பெருமை பெற்றது; நான்முகனாலும் அளந்து கூற இயலாத பெருமைகளைப் பெற்றது; அவதார மூர்த்தியாகிய திருமால் அரங்கநாதராய்த் தோன்றிய புகழினை உடையது; இத்தலத்தை அடைந்த காரணத்தால், இந்திரன் தான் இழந்த அரசினைப்பெற்று அரசுபுரிந்தான் என்னும் பெருமைக்கு உரியதாய் விளங்குவது. அந்தச் சஞ்சீவிபுரத்தின் பெருமையை ஆதிசேடனுடைய ஆயிரம் நாவினாலும் கூற இயலாது. அத்தகு தலத்தில் முப்பத்திரண்டு உபநிடதம், வேதத்தின் பதப்பொருள் ஆகியவற்றை உணர்ந்த சித்தர் முதலாய முனிவர்கள் பெரும்பேறு பெற்றவர்களாய் மகிழ்ந்திருப்பார்கள். அவர்களுக்கெல்லாம் அருள்புரியும் எம்பெருமான் வீற்றிருக்கும் இத்தலம் பூலோகபரமபதம் என்று சிறப்பிக்கப்படுகிறது.

**பிரயாகை** என்னும் நதியில் பிதுர்களுக்காகப் பிண்டமிட்டவர்கள் பெரும்பேறு பெறுவார்கள்; வராகநதியில் மூழ்கினால் அப்பேற்றினைக்காட்டிலும் பெரும் பயன் அடைவார்கள். விரசாநதியானது தரும் பயனை எல்லாம் தருவது வராகநதியாகும். நான்முகன், பரமசிவன், முருகன் ஆகியோர் அந் நதியில் மூழ்கி எண்ணியவெல்லாம் எய்தப்பெற்றார்கள் என்றால் மேலும் அந்நதியின் பெருமையைக் கூறவேண்டுவதில்லையல்லவா? அதில் மூழ்கியவர் திருமாலின் அருள்பெற்று முக்தியடைவார்கள். நவமணிகளுள் ஒன்றையிட்டு அந் நதியில் மூழ்கியவர் நரகம் அடையமாட்டார்கள்; இலக்குமியை உள்ளத்தில் தியானித்து மூழ்கியவர்கள்

இந்திரனைப்போல வாழ்வார்கள்; திருமாலைத் தியானித்து முழுகியவர்கள் பரமபதச் செல்வத்தை யடைவார்கள்.

தாய்த்தந்தையர், குரு, தெய்வம் ஆகியோரை இழிவாகப் பேசியவர்கள், அந்தணர், பசு, கரு ஆகியவற்றைச் சிதைத்துக் கொலை செய்தவர்கள், தவத்தை இகழ்ந்தவர்கள், பெரியவர்களையும் கற்புடையோரையும் பழித்தவர்கள், காலை, மாலை நியமங்களைத் தடுத்தவர்கள், பொய் கூறியவர்கள் போன்ற பாவிகள் யாவராயினும் இந்நதியிலே மூழ்கி, அரங்கனின் திருவடிகளைத் தொழுவார்களாயின் பாவம் நீங்கிப் புனிதமடைவார்கள்.

இலக்குமியானவள் திருமாலின் வலது மார்பில் விளங்க எழுந்தருளியுள்ள தலம் கோலாசலம். மூவுலக நதிகளும் திரண்டு ஒரு வடிவமாய் இலக்குமியின் திருவடிகளிற் தோன்றி இலக்குமி தீர்த்தம் என்ற பெயரைப் பெற்றன. வராகநதியானது திருமாலின் திருவடிகளில் பிறந்தது. எனவே அதன் பெருமையைப் பிரமனாலும் கூறமுடியாது. சிவபெருமான் ஏந்திய பிரம கபாலமானது பலநதிகளிலும் மூழ்கிய காலத்து நீங்காமல்,கோலாசலத்தில் உள்ள இலக்குமி தீர்த்தத்தில் முழுகியவுடன் இறைவனது கையிலிருந்து நீங்கியது. அவ்வாறு நீங்கிய அப் பிரமகபாலமானது இந்த உலகத்தை உண்டுவிடுவேன் என்று ஆர்ப்பரித்தது. அரங்கநாயகர் அக் கபாலத்தைச் சாந்தப்படுத்திப், பொன்மலையனூர் என்னும் தலத்திலே, மக்கள் பூசிக்கும் நிலையில் வீற்றிருக்கச் செய்தார். கயிலாயபதியும் அத்தலத்திலே எழுந்தருளினார். தன் தந்தையினை வஞ்சித்துப் பிரமகத்திப் பாவத்தை அடைந்த பிரகலாதன பலநதிகளிலும் மூழ்கி அத்தி தீராமல், கோலாசலத்தில் விளங்கும் அத்தித் தீர்த்தத்தில் மூழ்கி அவ் அத்தி நீங்கினான்.

விரசாநதியில் மூழ்கியவர் இவ்வுலகில் பிறக்கும் பிறப்பினை ஒழிவார்கள். கோலாசலத்திற்கு வர நினைத்தவர்கள் பிறவி ஒழிவதோடன்றி, பரமபதத்தையே அடைவார்கள்,

(தல விசேடம்)

94. ஆகையா லான்மாக்க ளனைவர்களு
முத்திநெறி யடைதற் கேது
வோகையா னெளிதாக இகபரத்திற்
செல்வமெலா முறுவ தாகச்
சாகையான் வேதங்க ளேத்தெடுக்கு
முச்சிறப்புந் தழைத்திங் கோங்கும்
வாகைபெறுந் தலமதனை யெமக்குரைப்பா
யெனச்சூதன் வகுப்ப தானான்.

எ–து. ஆகையினாலே இந்தப் பூவுலகின்கண் செனித்த ஆன்மாக்களெல்லாம் முத்தி மார்கத்தை எளிதாய் அடைவதற்கு ஓர் உபாய மார்கத்தினாலே இகபரத்தினது செல்வத்தை யெல்லாம் அடையத்தக்கதாய் வேதசாகையினாலே விளங்கித் தோத்தரிக்காநின்ற தலவிசேட, மூர்த்திவிசேடந் தீர்த்தவிசேடமாகிய மூன்றுந் தழைத்தில் வுலகில் ஓங்காநின்ற வெற்றியைப் பெறுகின்ற தலமகத்துவத்தை யருளிச்செய்ய வேணுமென்று முனிவர் கூட்டங்கள் கேட்கச் சூதபுராணிகர் கூறுகின்றா ரென்றவாறு. (1)

ஏது – மூலகாரணம், முயற்சி. ஓகை – உவகை. இகபரம் – இகம், பரம் .– இம்மை, மறுமை; நிலவுலக, மேலுலகங்களின் அனுபவம். உறுதல் – பெறுதல் வாகை – வெற்றி, நன்மை.

## Tala vicēṭam

*ākaiyā lāṉmākka ḷaṉaivarkaḷu*
*muttineṟi yaṭaitaṟ kētu*
*vōkaiyā ṉeḷitāka ikaparattiṟ*
*celvamelā muṟuva tākac*
*cākaiyāṉ vētaṅka ḷētteṭukku*
*muccirappun taḻaittiṅ kōṅkum*
*vākaiperun talamataṉai yemakkuraippā*
*yeṉaccūtaṉ vakuppa tāṉāṉ.*

## VI. On the Place, the Spring

### On the Place

Do tell us of this victorious place
Where the atmosphere makes it easy
For souls to attain Realisation,
Which grants all imaginable riches
On earth and in the beyond,
And which is praised by the
Many-branched Vēdas
And has the [1]triple greatness.

---

1. Of the Image, of the Place and the Spring

(கோலமலை பற்றிக் கூறத்தொடங்குதல்)

95. வாரணவா சியையடைந்து வதிந்திடுவோர்க்
கதிகமிந்த வண்மை யான
தாரணியோர் புகழ்பெறுகோ லாசலமாந்
தலமதனைச் சார்ந்த பேர்கள்
பூரணஞா னச்செல்வப் புகழடைந்து
பூபதியாய்ப் பொருந்தி யென்றும்
நாரணனார் பதமடைந்து நித்தியசூ
ரியராகி நயந்து வாழ்வார்.

எ-து வாரணவாசியாகிய காசித்தலத்தினை யடைந்து வாசம் பண்ணப்பட்ட பேர்கள் அடைகின்ற பலன், யோகப் பயிற்சியினது நிட்டைகளை இந்த வுலகமெல்லாம் பிரசித்தமாய்ப் புகழ்கின்ற கோலாசலபர்வதமாகிய தல விசேடத்தினைச் சார்ந்த பேர்களானவர்கள், பரிபூரண மெய்யறிவாகிய தத்துவ ஞானச் செல்வப் புகழினை யடைந்து, சத்திரபதியாகிய ராசகண்டீரவ சார்வ பூமனாயச் செங்கோனடாததிச சகல போகபாக்கிய செல்வங்களை யனுபவித்து, நாராயணமூர்ததியினுடைய பரமபத்தியிலே அதிக சிலாக்கியராய், அதன்பின்பவருடைய பரமபதத்தில் நித்திய சூரியர்களாய்த் தெரிசினை செய்கின்ற வானந்த வைபவத்தில் வீற்றிருப்பார்க ளென்றவாறு (2)

வாரணவாசி - காசிமாநகர். வரணா, (வரணை) அசி என்னும் இரண்டு ஆறுகளுக்கு இடையில் உள்ளது வரணை - பாவத்தடுப்பு. அசி - பாவநீக்கம.

**உரை** - சத்திரபதி - சத்திரபாதி - தனிக்குடைநிழற்றி அரசுபுரிவோன் இராசகண்டீரவ சார்வபூமன் - இராசகண்டீரவன் - கண்டீரவன் - சிங்கம் போன்றவன் சர்வபூமன - ஒருவரைப் பணியாது உலகாள்பவன், செஙகோல் + நடாததி நிததியசூரியர் - அழிவில்லாத சிறப்பு பெற்றவர்

## Kōlamalai paṟṟik kūṟat toṭaṅkutal

*vāraṇavā ciyaiyaṭaintu vatintiṭuvōrk*
*katikaminta vaṇmai yāṉa*
*tāraṇiyōr pukaḻpeṟukō lācalamān*
*talamataṉaic cārnta pērkaḷ*
*pūraṇañā ṉaccelvap pukaḻaṭaintu*
*pūpatiyāyp porunti yeṉṟum*
*nāraṇaṉār patamaṭaintu nittiyacū*
*riyarāki nayantu vāḻvār.*

## Speaking about the Hill

The results gained by people
Who live in Benāres are attained
By those who have decided
To live in Kōlācalam, famous
On earth; they will gain
Full knowledge, riches, fame,
And a regal life: afterwards,
They will reach the feet of Nārāyaṇaṉ
And live as immortals.

(கோலவரையை வலம் வரும் பயன்)

96. ஆயிரத்தெண் சிகரமுள வழகியமே
ருவினுதித்தங் கமர்ந்த மேலாம்
பாயிரமா மறைதுதிக்குங் கோலகிரி
தனிற்பயிலும் பரம யோக
ஞாயிறைக்கண் டுளமகிழும் வாலகில்
லியர்முதலோர் நாடுங் கெற்பத்
தாயினைப்போ லக்கிரியை வலம்வந்திங்
கரங்கனடி சார்வீ ரென்றான்.

எ-து. வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! ஆயிரத்தெட்டு சிகரங்களோடுங் கூடியதும், மக மேருவாகிய அழகு நிறைந்த கனக மலையி னுற்பவமாகிய சுபுத்திரனாய் வாழ்கின்றதும், பாயிரத்தோடு பொருந்திய வேதங்களாலே துதிக்காநின்றது மாகிய கோலாசல கிரியிலே வாசம் [1]செய்யப்பட்டவர்கள், பரம யோக நிட்டையால் ஞான சூரியனை அறிவே சொரூபமாய்க் கண்டானந்த வைபவமடைகின்ற, வாலகில்லியர் முதலாகிய பேர்கள் வாசஞ் செய்கின்ற அந்தக் கிரியைக் கற்பவதிகளைப்போல வலம் வந்து அரங்க நாயகரது திவ்விய பாத தாமரைகளைத் தரிசித்துச் சகல பாவங்களினின்றும் விடுபட்டுப் பரமபதத்தி னித்திய சூரியர்களாய்[2] வீற்றிருப்பார்கள் என்றவாறு. (3)

சிகரம் - மலைமுகடு, உச்சி. மேரு - மேருமலை. பாயிரம் - முகவுரை, வரலாறு மறை - வேதம். கோலகிரி - கோலாசலம் என்னும் மலை. பயிலும் - வாழ்ந்து வரும். வாலகில்லியர் - அறுபதினாயிரம் முனிவர்கள்.

உரை - சுபுத்திரன் - நற்புத்திரன், உற்பவம் - பிறப்பு, தோற்றம்.

பா.வே. - 1. செய்கின்றவர்கள் 2. இருப்பார்கள்.

## Kōlavaraiyai valam varum payaṉ

*āyiratteṇ cikaramuḷa vaḻakiyamē*
*ruviṉutittaṅ kamarnta mēlām*
*pāyiramā maṟaitutikkuṅ kōlakiri*
*· taṉiṟpayilum parama yōka*
*ñāyiṟaikkaṉ ṯuḷamakiḻum vālakil*
*liyarmutalōr nāṭuṅ keṟpat*
*tāyiṉaippō lakkiriyai valamvantiṅ*
*karaṅkaṉaṭi cārvī reṉṟāṉ.*

## Circumambulating the Hill

A thousand and eight spires
Has the Kōlācalam; a veritable offspring
Of beautiful *Mēru* Mountain;
It is praised by scriptural hymns.
Aspirants salute the sun of *yōka*
Resting here; they circumambulate
Like pregnant women the hill
Where live sages like Vālakilliyas
And surrender at Araṅkaṉ's feet.

(அத்தலத்தை வணங்கும் பயன்)

97. பூதலத்தி லுண்டான தலங்கட் கெல்லாம்
புனிதமுறுங் கோலகிரிப் புவியின் மீது
[1]மாதவத்தி லுண்டான முனிவர் தேவர்
மகிழ்சிறந்தோர் அத்தலத்தின் வசித்து முன்னம்
[2]மேதலத்தி லுண்டான கங்கை யன்னாள்
பணிந்துதவம் புரிந்துபத மடைந்தா ளந்தப்
போதமுறுந் தலமதனைத் தெரிசிப் போர்கள்
புண்ணியரா யரங்கனடி பொருந்தி வாழ்வார்.

எ-து. பூவுலகில் தங்கிய தலங்களுக்கெல்லாஞ் சிலாக்கியமாகிய புனித பாவனமா யுயர்ந்த தலமானதேதென்றால், கோலாசலமென்னும் மகமேருவினுற் பத்தியா யெழுந்தருளிய சஞ்சீவிபுரமாகிய [3]தலேச்சுரமானது தலங்களுக் கெல்லாஞ் சிரேட்டத்தை யுடையது. அந்தப் பிரதாபத்தால் மகத்தாகிய தபோபலங்களினால் வராநின்ற முனிவர்கள், தேவர்கள் முதலாகிய பேர்களெல்லாம் அந்தத் தலத்திலே வாசஞ்செய்து மகிழ்ச்சியை யடைந்தார்கள். முற்காலங்களிலே பாதலத்திலே வாசஞ் செய்கின்ற கங்கையானவளிந்தத் தலத்திலே வாசம்பண்ணித் தவம் புரிந்து வராக மூர்த்தியினது பாத கமலங்களிலே யுதிக்கப் பெற்றாள். இப்படியாகிய ஞான போதகத்தினையுடைய இந்தத் திவ்வியமாகிய சஞ்சீவி புரத்தைச் சேவித்த பேர்கள் நித்திய சூரியர்களாய் அரங்கநாயகருடைய பொற்பாத கமலங்களினது நிழலி லெந்நாளும் பொருந்தி வாழ்வார்க ளென்றவாறு. (4)

தலம் - திருத்தலம், இறைவன் எழுந்தருளியுள்ள இடம். புனிதம் - பரிசுத்தம். மேதலம் - மேல்தலம் - மேலுலகம்; உரையில் பாதலம் என்று குறிப்பிடப்படுகிறது. அன்னாள் - அவள்; கங்கையாகிய அவள். போதம் - ஞானம், நல்லறிவு.

**உரை** - பாவனம் - எடுத்துக்காட்டு. தலேச்சுரம் - தலம் + ஈசுவரம் - இறை எழுந்தருளியுள்ள திருத்தலம். சிரேட்டம் - உயர்வு; சிறப்பு. பிரதாபம் - புகழ், பெருமை.

பா.வே. - 1. மாதலத்தினுண். 2. பாதலத்தி. 3. தலேச்சரமானது.

## Attalattai vaṇaṅkum payaṉ

*pūtalatti luṇṭāṉa talaṅkaṭ kellām*
*puṉitamuṟuṅ kōlakirip puviyiṉ mītu*
*mātavatti luṇṭāṉa muṉivar tēvar*
*makiḻciṟantōr attalattiṉ vacittu muṉṉam*
*mētalatti luṇṭāṉa kaṅkai yaṉṉāḷ*
*paṇintutavam purintupata maṭaintā ḷantap*
*pōtamuṟun talamataṉait tericip pōrkaḷ*
*puṇṇiyarā yaraṅkaṇaṭi porunti vāḻvār*

## Worshipping the Place

Holier than all holy places on the earth
Is Kōlācalam; here have lived happily
Sages and gods who have risen
From immense austerities.
*Kaṅka* who rose in the heavens
Worshipped the Lord here in days of yore

And reached his feet.
Those who visit the holy place
Where one gains Realisation
Will become holy and live at the Lord's feet.

(இந்திரன் பலன் பெற்றான் எனல்)

98. ஆரணம் பெருக அகிலமா முலகின்
அனந்தமாய் அவதரித் தருளுங்
காரண மதனாற் கண்டுரைப் பதற்குக்
கமலனுக் கரிதென விளங்கும்
பூரண மாகப் புகழ்பெறு கோலா
சலத்தினிற் புனிதபா வனமாம்
வாரணத் தரச னித்தல மடைந்து
மகிழ்சிறந் தரசுவீற் றிருந்தான்.

எ-து. வேதவிதிகளெல்லாந் தலையெடுத்தோங்கித் தழைக்கும் பொருட்டாய்த் தனதிச்சையினாலே மச்சாவதார முதலாகிய அனந்த திருவவதாரராய் அவதரித்தருளுகின்ற அனந்த கல்யாண குண விக்கிரக சொரூபத்தினது விளையாட்டினை ஒரு காரணத்தினாலேயுங் கண்டு, அளவை நூலாகிய நியாய சாத்திரத்தினாலேயுஞ் சொல்லி முடிக்கக் கமல பீடிகையி னெழுந்தருளிய நான்முகனுக்கும் அரியதென்று கூறத்தக்கதாய் விளங்காநின்ற பரிபூரணமாகிய புகழினைப் பெறுகின்ற கோலாசலத்திலே பூரண அரங்கராய்த் திருவவதாரஞ் செய்தருளிய புகழினாலே, வாரணத்தரசனாகிய அயிராவதப் பாகனான இந்திர மகாராசனானவன் இந்தச் சிங்கபுரமாகிய தலத்தினை அடைந்த பிரதாபத்தால் மகிழ் சிறந்தவனாய் இழந்துபோன வரசினை மீட்டும் பெற்றரசாட்சி செய்து பஞ்சதாருவின் நிழலிலே வீற்றிருக்கப்பெற்றா னென்றவாறு. (5)

ஆபரணம் - வேதத்தின் ஞானப்பகுதி. அனந்தம் - முடிவில்லாதது; அளவின்மை. கமலன் - பிரமன. பாவனம் - தூய்மை. வாரணத்தரசன் -அயிராவதத்தையுடைய இந்திரன்; வாரணம் - யானை.

**உரை** - மச்சம் முதலாகிய அவதாரங்கள் பத்து. அவை:

1. மச்சம் - வேதத்தைத்திருடிய சோமுகாசூரனை அழித்தது.
2 கூர்மம் - கடலைக்கடைந்தபோது மந்தரமலையைத் தாங்கியது.
3. வராகம் - பூமியைப் பாயாகச் சுருட்டிக கடலில் ஒளித்த இரணியாக்கதனைக் கொன்றது.
4 நரசிங்கம் - பிற இறைவணக்கத்தை விலக்கிய இரணியனைக் கொன்றது
5 வாமனன் - மாவலிச் சக்கரவர்த்தியை அடக்கியது. (காசிபன்-திதி-பெற்றோர்)

6. பரசுராமன் - அந்தணர் பொருட்டு அரசரைக் கொன்றது. (சமதக்கினி - இரேணுகை - பெற்றோர்)
7. இராமன் - இராவணன் முதலாய அரக்கரை அழித்தது. (தசரதன் - கௌசலை - பெற்றோர்)
8. பலபத்திரன் - பிரலம்பன் முதலாய அரக்கரை அழித்தது. (வாசுதேவன் - தேவகி - பெற்றோர்).
9. கண்ணன் - பாரதப்போர் நிகழ்த்தியது (வசுதேவன் - தேவகி - பெறறோர்).
10. கற்கி - அறத்தை நிலைபெறச் செய்தது.

கலியாணகுணம் - மகிழ்ச்சிதரும் நற்குணம். விக்கிரகசொரூபம் - கல்வடிவம். பஞ்சதரு - ஐந்து தருக்கள். அவை: அரிச்சந்தணம், கற்பகதரு, சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன.

## Intiran palan peṟṟāṉ eṉal

*āraṇam peruka akilamā mulakiṉ*
*aṉantamāy avatarit taruḷuṅ*
*kāraṇa mataṉāṟ kaṇṭuraip pataṟkuk*
*kamalaṉuk kariteṉa viḷaṅkum*
*pūraṇa mākap pukaḻperu kōlā*
*calattiṉiṟ puṉitapā vaṉamām*
*vāraṇat taraca ṉittala maṭaintu*
*makiḻciṟan taracuviṟ ṟiruntāṉ.*

## Intiraṉ's Attainments

For the increase of Vēdas, the Eternal
Incarnates on earth. To realise this
And describe the same is a difficult task
Even for the lotus-resting Piramaṉ.
In Kōlācalam of such fulsome fame
Lived happily the [2]Lord of Elephant,
As King, when he came here.

(கோலமலையில் வசிப்போர்)

99. அத்தலப் பெருமை யுரைத்திட ஆதி
சேடனுக் கடங்கிடா ததனால்
முத்தர்கள் சித்தர் வாலகில் லியர்கள்
முனிவரர் முடிவின்வே தாந்த

2. Intiraṉ who rides the elephant, Airāvata

பத்தர்கள் வேதப் பயிற்சியை யுணர்ந்தோர்
பான்மைசே ரம்மலை வசிப்பர்
எத்தலங் களினு மிதற்கிணை கூறார்
இறைவனே யம்மலை யிசைந்தான்.

எ-து. அந்தத்தலத்தினது பெருமையினைக் கூற ஆதிசேடன் ஆயிர நாவாலு மடங்காதாகையால் சீவன் முத்தர்கள், ஒன்பது வகைச்சித்தர்கள், வாலகில்லியர்கள், முனிவர் கூட்டங்கள், எக்காலும் அழிவின்றி அவ் உபநிடதம் முப்பத்திரண்டினையும் ஆராய்ந்த அறிவினையுடைய பரம பாகவதர்கள், வேதத்தினது பதக்கிரம சடைகளை யோதி யுணர்ந்தவர்கள் பிரதாப சுந்தர ரஞ்சித தெய்வீகமாகிய அந்தக் கோலாசலத்திலே பரமபதம்போல வாசம் பண்ணி மகிழ் சிறப்பார்களாகையினாலே இந்த லோகத்திலே தெய்வீகத்தல மனேகமாய் முனிவர்களும் தேவர்களும் இயக்கரும் கின்னரர்களும் காந்தருவர்களும் அரக்கர்களும் முதலாகிய பேர்களுக்கும் அனுக்கிரக மூர்த்தமாகிய எம்பெருமானானவர் நின்ற திருக்கோலமாயும் இருந்த திருக்கோலமாயும் வீற்றிருக்காநின்ற தலங்களெல்லா மிதற்கிணையாகக் கூறமாட்டார்களாகையால் இந்தத் தலம் பூலோகப் பரமபத மென்றவாறு. (6)

**உரை** - ஒன்பதுவகைச் சித்தர்கள் - சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர் எனப்படுபவர்கள். பதக்கிரமச்சடைகள் - வேதபொருள்களும் அவற்றின் அடிப்படைகளும், சடை - வேர், அடிப்படை, மூலம். உபநிடதம் - வேதத்தின் உட்பொருளடங்கிய வேதசாஸ்திரம் அவை - சீருத்திரம், கைவல்லியம், காலாக்கினி முதலாக மாண்டூகம், முண்டிரம், மௌண்டிகம் ஈறாக முப்பத்திரணடு.

தலவிசேடம் முற்றிற்று.

## Kōlamalaiyil vacippōr

*attalap perumai yuraittiṭa āti*
*cēṭaṉuk kaṭaṅkiṭā tataṉāl*
*muttarkaḷ cittar vālakil liyarkaḷ*
*muṉivarar muṭiviṉvē tānta*
*pattarkaḷ vētap payiṟciyay yuṇarntōr*
*pāṉmaicē rammalai vacippar*
*ettalaṅ kaḷiṉu mitaṟkiṇai kūṟār*
*yiṟaivaṉē yammalai yicaintāṉ.*

## Denizens of Kōlācalam

Even Āticēṭa finds it hard
To recite the greatness of the hill;

The realised ones, the *Cittar*,
Vālakilliyar sages, great rishis,
Philosophers, devotees, experts in scriptures
And their ilk come here; they cannot
Compare it with any other holy place.
The Lord himself chose this holy hill.

**(தீர்த்த விசேடம்)**

100. **பிரயாகை தனிற்பிதுர்க்குப் பிண்டமிட்டுப்**
**பெருங்கதியிற் பெற்றோ ரெல்லா**
**நிறைவாக வராகநதி தனிற்படிந்திங்**
**கதிகபல னிறைந்து வாழ்வார்**
**குறையாத விரசநதி குடைந்திடுநற்**
**பலன்களெல்லாங் கொடுக்கா நிற்கு**
**முறையாக முனிவர்பெறு முத்திதனி**
**லென்னாளு முந்தி வாழ்வார்.**

எ-து. பிரயாகை யென்கின்ற நதியிலே பிதுர்களைக் குறித்துப் பிண்டமிட்டுப் பெருங்கதியிலே பெறுபவர்கள் எல்லாம் நிறைந்த ஞான வொழுக்கத்தினையுடைய வராகநதியிலே படிந்தால், புனித சீலர்களாய் அதிகமாகிய பலன்களுடன்கூடி நிறைந்த சாந்தத் தத்துவத்துடன்கூடி வாழ்ந்திருப்பார்கள். குறைவில்லாத பரமபதத்திற் குடியாயிருந்து நிலையாய் வாழ்கின்ற விரசாநதியிலே சாத்திரவிதிப்படி தீர்த்த மாடுகின்றவர்கள் பெறுகின்ற பேறெல்லா மொருங்கெய்தக் கொடுத்திடும். வேதமுதலாகிய அறுபத்துநான்கு வித்தைகளையும் முறையாக யூகித்த தனது பலப்பிராப்தியை யெல்லாம் அறிந்த முனிக் கூட்டங்கள் பெறுகின்ற முத்தியாகிய பரம பதத்திலே முதன்மையாயிருந்து வாழ்வார்க ளென்றவாறு. (1)

பிரயாகை - காசியின் அருகில் ஓடும் ஓர் ஆறு. பிதுர்கள் - தந்தைவழி காலஞ்சென்ற மூதாதையர்; தேவதைகளில் ஒருவகையினர் பிதுர் தேவதைகள் எனப்படுவர். நாம் கொடுக்கும் பிதுர்பலியானது பிதுர் தேவதைகள் மூலம் நம் பிதுர்களுக்குச் சேருகிறது. பிண்டம் - பிதுர்பலி. விரசநதி - விரசாநதி-வைகுந்தத்தில் உள்ள ஆறு. குடைந்திடுதல் - நீராடுதல்

**உரை** - சாந்தத் தத்துவம் - சாந்தம் - அமைதி, பொறுமை; தத்துவம் - சுபாவம்.

## Tīrtta vicēṭam

*pirayākai taṉiṟpiturkkup piṇṭamiṭṭup*
*peruṅkatiyiṟ peṟṟō rellā*
*niṟaivāka varākanati taṉiṟpa ṭintiṅ*
*katikapala ṉiṟaintu vāḻvār*
*kuṟaiyāta viracanati kuṭaintiṭunaṟ*
*palaṉkaḷellāṅ koṭukkā niṟku*
*muṟaiyāka muṉivarpeṟu muttitaṉi*
*leṉṉāḷu munti vāḻvār.*

## The Holy Spring

If the devotees who place rice-balls
For their manes in the *Pirayākai* river,
Bathe in the Varāka river,
They will gain even more.
This river grants all that is good
Given to those who bathe in heavenly *Viracā*.
Those who associate with it
Gain the first place in the heavens
Attained by sages on Realisation.

(முத்தி நெறி பெறலாம்)

101 நான்முகனு மைமுகனு மறுமுகனும்
படிந்துமதில் நலனுற் றார்கள்
மேன்முறையா [1]யிசைப்பதென்ன விளங்குமதில்
மூழ்கினபேர் விபுத ராவர்
பான்மையினைப் பெரிதுவக்கும் பண்ணவரு
முனிவர்களும் பணிந்து போற்று
மான்மகிமைத் திருவருள்பெற் [2]றெந்நாளும்
முத்திநெறி வ்ழங்கு மாதோ.

எ-து நான்கு [3]திருமுகங்களையுடைய பிரம்மாவும், ஐந்து திருமுகங்களையுடைய பரமசிவனும், ஆறு திருமுகங்களையுடைய குமரகுருபர மூர்த்தியும் அந்த நதியிலே

தீர்த்தமாடித் தாங்களெண்ணிய வெண்ணமெல்லாம் ஒருங்கெய்தப் பெற்றார்களென்றால், இதற்கு மேலே மேன்மையாகிய முறையினை என் சொல்லக் கடவோம். இப்படிச் சிலாக்கியமாய் விளங்கிய அந்த நதியிலே மூழ்கினபேர்களெல்லாம் விபுதராகிய தேவத் தன்மையடைவார்கள். அவர்கள் பான்மையாகிய கிரமத்தையறிந்த தேவலோகத்தினிருக்கின்ற பழமையாகிய தேவர் கூட்டங்களும் முனிவர் கூட்டங்களும் அவரது பாத பங்கயங்களிலே பணிந்து போற்றி செய்வார்கள். திருமாலினால் மதிக்கப்பெற்றவரது திருவருளினாலே [4]யெந்நாளும் பரம பதத்திலே நித்திய சூரியராகிப் பரவாசுதேவனைச சேவித் தானந்த வைபவத்தில் வாழ்வார்க ளென்றவாறு. (2)

ஐமுகன் - சிவபெருமான்; பஞ்சமுகங்கள் - ஈசானம், தற்புருடம, அகோரம், வாமதேவம், சத்தியோசாதனம் என்பன, இசைப்பது - சொல்லுவது, விபுதர் - தேவர். பண்ணவர் - தேவர்கள். மான்மகிமை - மால்மகிமை - திருமாலின் பெருமை.

**உரை** - பான்மை - தன்மை, குணம் கிரமம் - முறைமை.

பா.வே. - 1. யிசைப்பதெனை 2. றென்னாளும். 3 திருமுகத்தினை 4 யென்னாளும்.

## Mutti neṟi peṟalām

*nāṉmukaṉu maimukaṉu maṟumukaṉum*
*paṭintumatil nalaṉuṟ ṟārkaḷ*
*mēṉmuṟaiyā yicaippateṉṉa viḷaṅkumatil*
*mūḻkiṉapēr viputa rāvar*
*pāṉmaiyiṉaip perituvakkum paṉṉavaru*
*muṉivarkaḷum paṇintu pōṟṟu*
*māṉmakimait tiruvaruḷpeṟ ṟennāḷum*
*muttineṟi vaḷaṅku mātō.*

## Promise of Realisation

The four-faced Piramaṉ, Civaṉ
And the six-faced Subramania
Gained all good by bathing here.
To speak further of its sanctity:
Those who bathe here gain immortality.
Recognising this, gods and sages
Salute and hail them.
They receive grace from the Goddess of Wealth
And Realisation in the end.

(நதியில் மூழ்கும் பயன்)

102. நவமணியி னோர் [1]மணியந் நதியினிட்டு
மூழ்குவோர் நரக மெய்தார்
பவமகலும் பொன்னினடி பதித்துமனம்
படிவோர்க்குப் பகரு ஞானத்
தவமுயரு மிந்திரன்போற் சந்ததமும்
வளம்பெருகித் தழைத்து வாழ்வர்
சிவமமரு மரங்கனடி சிந்தைநினைந்
தாடமுத்திச் சேருந் தானே.

எ-து வாரீர் சவுனகாதி மகா முனிவர்களே! அந்த அதிசிரேட்டமாகிய வராக நதியிலே ஒன்பது வகையாகிய ரத்தினமணிகளிலே ஒரு மணியானதை [2]அந்நதியிலே விட்டுத் தீர்த்தமாடிய பேர்கள் புனித பாவனமாவார்கள்; ஒரு காலத்திலும் நரகவேதனை யடையமாட்டார்கள். ஆகிலும் ஸ்ரீ மகாலட்சுமியினது திவ்விய திருவடிக் கமலங்களை மனத்திலே நிச்சயித்தவர்களாய்த் தீர்த்தமாடிய பேர்கள் புனித பவித்திரமாய் யாவரும் மேலாய்க் கூறுகின்ற ஞான, தவ, யோகாதிகளை யடைந்து அந்த யோக பலத்தினால் சந்ததமும் இந்திர மகாராசனைப்போல சகல வளங்களும் பெருகத்தக்கதாக வாழ்வார்கள். ஆகையால் அனந்தமாகிய மங்கள சுபகுணங்களையுடைய ஸ்ரீ அரங்கநாயகரது திருவடித் தாமரைகளை இதய கமலத்தில் நிலைபெற்றவர்களாய்த் தீர்த்தமாடிய பேர்க ளென்றும் நித்தியமாகிய பரமபதச் செல்வத்தை அடைவார்க ளென்றவாறு. (3)

நவமணி - ஒன்பது இரத்தின மணிகள். அவை - கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம் மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் என்பன பவம் - பிறப்பு. பொன் - பொன் போன்றவளாகிய திருமகள் இலக்குமி. சந்ததம் - எப்பொழுதும். படிவோர் - மூழ்குவோர். குளிப்போர்

பா.வே. - 1 மணியன்னதியினிட்டு 2 வன்னதியிலே.

## Natiyil mūḻkum payaṉ

*navamaṇiyi ṉōrmaṇiyan natiyiniṭṭu*
*mūḻkuvōr naraka meytār*
*pavamakalum poṉṉiṉaṭi patittumaṉam*
*paṭivōrkkup pakaru ñāṉat*
*tavamuyaru mintiraṉpōṟ cantatamum*
*vaḷamperukit taḻaittu vāḻvar*
*civamamaru maraṅkaṉaṭi cintainiṉain*
*tāṭamuttic cērun tāṉē.*

## The Holy Bath

Those who bathe here after offering
One of the nine gems, escape hell;
Those who bathe while meditating
On the feet of the Goddess of Wealth
Gain wisdom and austerities,
And increasing riches as that of Intiran̲.
Bathing while meditating
Upon the auspicious feet of Civan̲
One gains salvation.

(பாவியர்கள் பாவம் நீங்க)

103. தந்தைதாய் குருவின் தெய்வநிந் தனையும்
தவங்களை யிகழ்ந்திடு தாழ்வும்
அந்தணர் பசுக்கள் கருவினை யழித்த
அருங்கொலை யாளர்க ளனந்த
நிந்தைசொல் புரிவோர் சந்திகள் தவிர்ந்தோர்
நிலைதவிர்ந் துரைத்தபொய் மொழியோர்
சந்தத மந்தத் தலத்தினை யடைந்தவ்
வரங்கனைத் தொழுதிடிற் சாரா.

எ-து. தனக்காதரவாய் நின்று வளர்த்த தந்தையினையும் தாயினையும், ஆன்மாவினைப் புனிதமாக்கும்படியாகிய குருவினையும், முத்தியினை யளிக்கும்படியான தெய்வத்தையும் நிந்தனை செய்கின்ற பஞ்சமா பாவிகளும், மகா தவங்களையெல்லா மிகழாநின்ற தாழ்வினையும், மகா பஞ்சமா பாதகமாகிய அந்தணரான சாதவீக ஞானத்தினையுடைய பிராம்மணாளையும், பசுக்களினையும், கருவினையும [1]சிதைத்து அழித்தலாகிய கொலை செய்பவர்களும், [2]அனந்தமாகிய பெரியவர்களையும் பத்தினிகளையும் நிந்தையாகிய சொல் புரிவோர்களும், சந்திவந்தனைகளைத் தவிர்த்த பேர்களும், நிலைமையினை நீக்கிப் பொய்ம்மொழி கூறுகின்றவர்களும் இப்படியாகிய பாவியர்களெல்லாம் எப்போதும் இந்தக் கோலாசலமாகிய வராகத்தலத்திலே வாசஞ்செய்து வராக நதியிலே தீர்த்தமாடி அரங்கன் தாளினைத் திரிகாலமுந் தொழுது வணங்கினால் மேற்சொல்லிய பாவங்களெல்லாம் அவரைவிட்டு நீங்கிப் புனித பாவன மடைவார்க ளென்றவாறு. (4)

நிந்தைசொல - பழிச்சொல் சொல்லுதல். இகழ்தல். சந்திதவிர்தல் - காலை, மாலை வேளைகளில் செய்யும் நியமநிட்டைகளைக கைவிடுதல்

**உரை** - பஞ்சமாபாவிகள் - களவு, கள்உணவு, குருநிந்தை, கொலை, பொய் ஆகிய ஐந்து பாவச் செயலகளைச் செய்பவர். பத்தினி - கற்புடைய பெண்.

பா.வே. - 1 அழித்தலாகிய 2. தன்னைரக்ஷித்த போக நிந்தையாகிய வார்ததைையைக் கூறுகின்றவர்களும்

## Pāviyarkaḷ pāvam nīṅka

*tantaitāi kuruviṉ teyvaniṉ taṉaiyum*
*tavaṅkaḷai yikaḻntiṭu tāḻvum*
*antaṇar pacukkaḷ karuviṉai yaḻitta*
*aruṅkolai yāḷarka ḷaṉanta*
*nintaicol purivōr cantikaḷ tavirntōr*
*nilaitavirn turaittapoy moḻiyōr*
*cantata mantat talattiṉai yaṭaintav*
*varaṅkaṉait toḻutiṭiṟ cārā.*

## For Cleansing Sins

Sins gathered by speaking ill
Of mother, father, teacher and god,
Of holy places; by destroying
Brahmins, cows, foetuses;
By cursing without end
And by giving up ritual discipline;
By straying from the moral path
And by lying will not touch them
Who come to this place to worship
Araṅkaṉ at all times.

(தீர்த்தத்தின் சிறப்பு)

104. மங்கையர்க் கரசி வலப்புற மடைந்த
மால்வரைத் தலத்திடை மகிழ்வாய்க்
கங்கைமூ வுலகின் வதிந்திடு நதிகள்
கமலைபொன் னடியினிற் பெருகச்

செங்கண்மால் பதத்திற் செனித்திடும் வராகத்
தீர்த்தத்தி னுயர்ந்திடு சிறப்பைப்
பங்கய னுரைப்ப தரிதெனச் சூதர்
பகர்ந்தனர் சவுனகர் தமக்கே.

எ-து மங்கையர்க்கரசியாகிய, திரிபுவனத்திலுள்ள இலக்கண நிறைந்த கன்னியர்களுக்கெல்லாம் அரச நாயகமாகி விளங்குகின்ற ஸ்ரீமகாலட்சுமி தேவியானவள், பரவாசுதேவனது வலப்புறமாகிய [1]வக்ஷத்தலத்திடையி னெழுந்தருளிய அழகினையுடைய சொர்ணமயமான கோலாசலத்தின்கண், மூவுலகிற் றங்கிய புண்ணிய தீர்த்த சமூகங்களெல்லாந் திரண்டோர் வடிவாய்ப் பிராட்டியார் பாதகமலத்தி னுற்பவித்த இலக்குமியார் தீர்த்தம் வசியாநின்ற, திருப்பதியின், அனந்த கலியாண குண விபூதி விக்கிரக சொரூபராகிய தாமரைக் கண்ணையுடைய எம்பெருமானது திவ்விய திருவடிக் கமலத்தின்கண் ணுற்பவித்த, வராக தீர்த்தத்தி னுயர்ந்த புனித பாவனமாகிய பலன்களைப் பிரம்மாவினது செந்தாமரைக் கமலம் [2]விரிந்த வாயின்கண் மருவிய அழகிய நாவினாலுங் கூறி முடியாதென்றார் சூதபுராணிக ரென்றவாறு (5)

மால்வரை - கோலாசலம். வரைத்தலம் - மலையையுடைய திருத்தலம். கமலை - இலக்குமி பங்கயன் - பிரமன. பங்கயம் - தாமரை

உரை - வக்ஷத்தலம் - மார்பு; வக்ஷஸ்தலம் - வக்ஷஸ் - மார்பு. சொர்ணம - பொன். ஸ்வர்ணம்.

பா.வே. - 1 வக்ஷத்திடையி. 2. விரிந்தரவாயின.

## Tīrttattiṉ ciṟappu

*maṅkaiyark karaci valappuṟa maṭainta*
*mālvarait talattiṭai makiḻvāyk*
*kaṅkaimū vulakiṉ vatintiṭu natikaḷ*
*kamalaipoṉ ṉaṭiyiṉiṟ perukac*
*ceṅkaṇmāl patattiṟ ceṉittiṭum varākat*
*tīrttatti ṉuyarntiṭu ciṟappaip*
*paṅkaya ṉuraippa tariteṉac cūtar*
*pakarntaṉar cavuṉakar tamakkē.*

## On the Spring

In the hill of Araṅkaṉ
Who has his consort on the right,
All the rivers in the three worlds
Flow together at the feet of Lakṣmi.

Cūtar told Cavuṉakar and others
That it was impossible even for Piramaṉ
To speak of the glory
Of the *Varāka* spring which rises
From the feet of Araṅkaṉ.

(இலக்குமிதீர்த்தம்)

105. கொண்டல்தவழ் கயிலையில்வாழ் பரமன் முன்னங்
கொடும்பிரம கபாலமதைக் கரத்தி லேந்தி
மண்டலஞ்சூழ் தலங்களெல்லாம் வதிந்து மேலா
மறைபுகழுங் கோலவரை வலமாய்ச் சூழ்ந்தங்
கண்டர்புகழ் நதிகளெல்லாங் குடைந்த ரங்கன்
அழகியமா திலக்குமிதீர்த் தத்தில் நீல
கண்டனிட கபாலமது நீங்க வுந்திக்
கமலனடி பணிந்துமின்பங் கருதி நின்றார்.

எ-து. அந்த இலக்குமியார் தீர்த்தமான தெப்படிப்பட்டதென்றால், பூர்வத்திலே மேகந்தவழ்கின்ற வெள்ளியங்கிரியில் வாசம் பண்ணப்பட்ட கையிலாய பதியானவர், அதிகொடூரமாகிய பிரம்ம கபாலத்தைத் தமது கரத்தில் தாங்கினவராய் இந்தப் பதினாலு லோகங்களினுமுளள சிலாக்கியமாகிய தலங்களில் நீங்காமையால் அங்கெல்லாம் வாசஞ்செய்து வேத வேதாந்தங்களினாலே துதி செய்கின்ற கோலாசலத்தை வலமாகச்சூழ்ந் தங்குத் தேவர்கள் அமைத்த தீர்த்தங்களிலெல்லா மூழ்கி, மேலாகிய ஸ்ரீ அரங்கநாதனுடைய தேவியாகிய அழகிய லோகமாதாவான இலக்குமியார் தீர்த்தத்தில் மூழ்கிய பலத்தினாலே நீலகண்டனுடைய கபாலமானது நீங்கியபடியால் அந்த உந்திக்கமலத்தில் பிரம்மதேவனைப் பெற்ற ரட்சகனுடைய திவ்விய திருவடிகளிலே சரணாகதியாகப் பணிந் தானந்தப் பரவசராய் இன்பசாகரத்தில் மூழகித் துதி செய்கின்றா ரென்றவாறு. (6)

கொண்டல - மேகம். பிரமகபாலம் - பிரமன் கருவம் அடைந்தபோது அவனது ஒரு தலையைக் கிளளி எறிந்த சிவபெருமான் அவனது வேண்டுகோளால் கையில் ஏந்திய கபாலம். கபாலம் - மண்டைஓடு

**உரை** - பவம - பலன்.

## Ilakkumi tīrttam

*koṇṭaltavaḻ kayilaiyilvāḻ paramaṉ muṉṉaṅ*
*koṭumpirama kapālamataik karatti lēnti*
*maṇṭalañcūḻ talaṅkaḷellām vatintu mēlā*
*maṟaipukaḻuṅ kōlavarai valamāyc cūḻntaṅ*

*kaṇṭarpukaḻ natikalellāṅ kuṭainta raṅkaṉ*
*aḻakiyamā tilakkumitīrt tattil nīla*
*kaṇṭaṉiṭa kapālamatu nīṅka vuntik*
*kamalaṉaṭi paṇintumiṉpaṅ karuti niṉṟār.*

## The Lakṣmi Spring

Lord Civaṉ who lives in Kailāca
Canopied by clouds,once carried
The skull of Piramaṉ in his hands
And went to all holy places in the world.
In the end he came to Kōlācalam
Praised by scriptures; he bathed
In all the rivers created by gods.
Finally when he bathed in the lovely
Lakṣmi Spring, the skull
Fell away from his hand. He saluted
The Lord who sports a lotus on his navel
And worshipped him.

(அரங்கர் கபாலத்தை ஆதரித்தல்)

106. நின்றுதுதி யரன்முதலோர் கடல்போற் சூழ்ந்து
நிறைந்தனர்பொன் னரங்கனருள் புரித லாலே
அன்றயனார் கபாலமதுஅங் ககில லோகம்
தீர்ந்திடவு மார்ப்பரித்தங் ககன்ற வாயா
லின்றுலகை யுண்டிடுவோ மென்று சீற
எழிற்கரத்தா லமைத்துமிக வினையங் கூறி
என்றுமிந்த மண்டலத்தின் மலைபொன் னூரி
னெழிற்சிறந்து பலர்போற்ற விருப்பா யென்றார்.

எ-து. அப்படித் துதிசெய்கின்ற சிவன் முதலாகிய தேவர்கள் சமுத்திர கோஷ்டம்போலச் சூழ்ந்து வேத வேதாந்தங்களால் புகழ, அவர்களுக் கனுக்கிரகஞ் செய்ய அந்தப்பிரம்ம கபாலமானது பதினாலு லோகங்களுங் கடகடவென்று நடுங்கத்தக்கதாய் ஆர்ப்பரித்து அதனது அகன்ற வாயினாலே இந்த அகிலமான செகத்தை யெல்லாம்

உண்டுவிடுவோமென்று கோபங்கொள்ள, ஸ்ரீஅரங்கநாயகரானவர் தமது திவ்விய கராம்புய மலரினாலே யந்தக் கபாலத்தை அணைத்தாதரித்து, மிகுந்த வமுத மொழிகளினாலே சாந்தபபடுத்திச் சர்வ காலங்களினுங் குறைவில்லாமல் விளங்குகின்ற பொன்மலையனூரென்கின்ற தலத்திலே சகல ஆத்தும கோடிகளுு முன்னைப் பூசிக்கத் தக்கதாய் வீற்றிருக்கக் கடவாயென்றருளிச் செய்தா ரென்றவாறு (7)

அகிலலோகம - உலகமனைத்தும்; ஈரேழு பதினான்கு உலகமும் தீர்ந்திட - அழிந்திட. ஆாப்பரித்தல - ஆரவாரித்தல், பெருஞ்சததமிடுதல சீற - கோபிகக அமைதது - அடக்கி, அமைதியாகச் செயது வினையம்- விநயம் - மரியாதை

உரை - கோஷ்டம் - ஆரவாரம அனுககிரகம் - அருள் கராம்புயம் - கரம் + அம்புயம் - கைகளாகிய தாமரை

## araṅkar kapālattai ātarittal

*niṉrututi yaraṉmutalōr kaṭalpōṟ cūḻntu*
*niṟaintaṉarpoṉ ṉaraṅkaṉaruḷ purita lālē*
*aṉṟayaṉār kapālamatuaṅ kakila lōkam*
*tīrntiṭavu mārpparittaṅ kakaṉṟa vāyā*
*liṉṟulakai yuṇṭituvō meṉṟu ciṟa*
*eḻiṟkaratta lamaittumika viṉaiyaṅ kūṟi*
*eṉṟuminta maṇṭalattiṉ malaipoṉ ṉūri*
*neḻirciṟantu palarpōṟṟa viruppā yeṉṟār.*

## Araṅkaṉ Cools the Skull

As Civaṉ and others surrounded
Araṅkaṉ like the sea and praised him
He granted them grace.
But Piramaṉ's skull roared thunderously
As if it would destroy all the worlds
Saying it would eat up everything
With its vast mouth; Araṅkaṉ
Stroked it with his beautiful hands,
Calmed it and assured the skull
That it would remain in this hill
With many praising its presence.

(இலக்குமி தீர்த்தப் பலன்)

107. ஆதலினால் துர்க்கையொரு வமிசங் கொண்டங்
கண்டமென விளங்கியநற் கபாலங் கொண்டு
சோதிதிகழ் பொன்மலையூ ரெழுந்தாள் கண்டு
செகமூன்றும் போற்றிடச்செஞ் சடைக ளாட
வோதவரி தாகியதாண் டேச னென்றே
வுளங்களித்து நடம்புரிந்தா ரும்பர் போற்றத்
தீதகலு மிலக்குமியார் தீர்த்தங் காண்போர்
தேவாதி தேவனடி சிறந்து வாழ்வார்.

எ-து. அப்படி யனுக்கிரகஞ் செய்த ஸ்ரீ அரஙகநாயகருடைய சந்நிதானத்திலே யெழுந்தருளியிருக்கின்ற துர்க்கையானவள் தனது சோடச கலைகளிலே யொரு கலையினாலே ரூபிகரித்துக் கோடி சூரியப் பிரகாசமா யெழுந்தருளி யண்டத்துக்குச் சமதையாகிய பிரம்ம கபாலத்தைத் தமது கராம்புய மலரிலே தாங்கினவளாய்ப் பிரகாசிக்கினற பொன்மலையூரி லெழுந்தருள, அகண்ட திரிலோகமும் போற்றத் தக்கதாய்ச் சிவந்த சடைகளானவை குலுஙகச் சொல்வதற்கரிதாகிய கயிலாயபதியானவர் ஆனந்த வைபவத்தினை யடைந்தவராய், ஆனந்தக் கூததாடிய பெரும் புகழினால், தாண்டவேசுவரனென்று சகல தேவர்களும் போற்றும்படியாய் அந்தப பொன்மலையனூ ரென்கின்ற தலத்திலே வாசஞ் செய்கின்றார் ஆகையால் அந்த லோகமாதாவாகிய இலக்குமியார் தீர்த்தத்தினைக் காண்போர்களெல்லாஞ் சகல பாபஙகளினின்றும விடுபட்டவர்களாய்த் தேவாதி தேவருடைய திருவடிக் கமலங்களிலே சிறந்து வாழ்வார்க ளென்றவாறு (8)

துர்க்கை - கொற்றவை துர்க்கம - நெருங்கமுடியாத்து அது மூன்று வகைப்படும் அவை 1 ஜலதுாக்கம 2. வனதுர்க்கம். 3 சிலாதுர்ககம் எனபவையாகும் இவ்விடங்களில வசிப்பவள துாக்கை (ஜலம் - நீர், வனம் - காடு, சிலை - கல, மலை)

உரை - ரூபீகரித்து - உருவமெடுத்து உரையில பொன்மலையூர், பொன்மலையனூா என்னும இரணடு பெயர்கள இடம்பெறுகின்றன

## Ilakkumi tīrttap palan̲

*ātalin̲āl turkkaiyoru vamicaṅ kon̤taṅ*
*kan̤tamen̲a vil̤aṅkiyanar̲ kapālaṅ kon̤tu*
*cōtitikal̤ pon̲malaiyū rel̤untāl̤ kan̤tu*
*cekamūn̲r̲um pōr̲r̲itaccen̄ catạika l̤āta*

*vōtavari tākiyataṉ tēca ṉeṉṟē*
*vuḷaṅkaḷittu naṭampurintā rumpar pōṟṟat*
*tītakalu milakkumiyār tīrttaṅ kāṇpōr*
*tēvāti tēvaṉaṭi ciṟantu vāḻvār.*

## Gifts of Lakṣmi Spring

Hence Durga incarnated a portion
Of her being, held the skull in her hand
And came to reside in the golden hill;
The three worlds hailed the phenomenon.
Civaṉ with red matted tresses,
The Dancer supreme, became happy
And danced here praised by the gods.
Those who even see the Lakṣmi spring
That chases away all ills
Will reach the feet of the Supreme Lord.

(பிரக்கலாத தீர்த்தம்)

108. பின்னுமந்தத் திருமலையி னுத்த ரத்தின்
பிரக்கலாத தீர்த்தமொன்று பெருகித் தோன்று
முன்னவன் பிதாக்கொலையா னுலகி னுள்ள
மூன்றரைகோடி யின்நதியும் மூழ்கித் தீரா
மன்னுமிந்த நதிமூழ்க வத்தி நீங்கி
மகிழ்ந்தரங்கன் பொன்னடியின் மருவி நின்றா
ரென்னுமிந்த வத்திதடா கத்தின் மூழ்க
இகபரசெல் வத்தினதங் கின்ப மெய்தும்.

எ-து பின்னும அந்தத் திருமலையி னுத்தரபாகத்திலே பிரக்கலாத தீர்த்தமென்று ஒரு தடாகமானது விளங்கிப் பிரகாசிக்கும். முற்காலத்தில் பிரக்கலாதனானவன் பிதாவினை வஞ்சித்த துரோகத்தினாலே பிரம்மஹத்தி மகாபாதகத்தினை யடைந்திந்த மூன்று லோகங்களிலும் விளங்குகின்ற அதிசிலாக்கியமாகிய [1]மூன்றரை கோடி புண்ணிய தீர்த்தஙகளிலும் மூழ்கி, யத்தி தீராமல், நிலைபெற்றோங்கிய கோலாசலததின்கண் மருவிய அத்திதீர்த்ததின் மூழ்கி, அவரது பிரம்மகத்தியானது நீங்கி அனந்த விமான சேகரரா யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரஙகநாதருடைய திவ்விய திருவடிக் கமலங்களின் பொருந்தி வாழ்கினறா ராகையால், என்றுமிந்த வத்தி தடாகத்தில் மூழ்கிய

பேர்கள் பஞ்சமா பாதக முதலாகிய மகாபாதகங்களினின்றும் விடுபட்டவர்களாய்த் திவ்விய லோகத்தை அடைவார்களென்றவாறு (9)

உத்தரம் - வடக்கு அத்தி - கொலை, கொலைத்தோஷம், கொலைப்பாவம பிரம கத்தி - அந்தணரைக் கொன்ற தோஷம்.

## Pirakkalāta tīrttam

*pinnumantat tirumalaiyı nutta rattin*
*pirakkalāta tīrttamonru perukit tōnru*
*munnavan pitākkolaiyā nulaki nulla*
*mūnraraikōti yinnatiyum mūlkit tīrā*
*mannuminta natimūlka vatti nīṅki*
*makilntaraṅkan ponnatıyin maruvi ninrā*
*rennuminta vattitatā kattin mūlka*
*ikaparacel vattinataṅ kinpa meytum.*

## Pirakkalāta Spring

In the northern portion of the hill
Rises the Pirakkalāta spring;
In ancient times the fratricide[3]
Bathed in the ten million rivers
Of the world, yet could not be cleansed
Of his sin; when he bathed here,
He was purified. He is living
Happily at the feet of Araṅkan.
Those who bathe in this spring
Will be cleansed and also gain
Riches in this world and in the beyond

3. Pirakkalāta, who had become the cause of his father Hiranyakasipu's death in the hands of Viṣṇu.

(விரசை மாநதி)

109. விரசைமா நதியினில் மூழ்க மீள்கிலார்
வரசிரேட் டந்தரு வரையி லுள்ளதப்
பெருமையு மெளிதவப் பேசி விந்திரன்
அரசுமால் பதவியு மடைவர் மெய்யதே.

எ-து. பரமபதத்தின்கண் தோன்றிய விரசைமா நதியினின்கண் ணெவ்வகை மேம்பட்டார்களும் மூழ்குவாராகில் மீட்டுமிந்தக் கர்ம பூமியினவதரித்துக் கன்ம போகத்தை யனுபவிக்கார்கள் இந்தக் கோலாசலத்துக்கு வரத்தக்கதாய் நினைத்தால் அதி சிரேட்டமாகிய பதவியினையடைவார்கள் அந்தக் கிரியினிடத்திற் தோன்றிய சுனைகள், தடாகங்கள் ரிஷிகளினாலே நிர்மிக்கப்பட்டவை. அதனுடைய பல பிரயோசனங்களை யாவராலும் சொல்வதற்கரிதாம். ஆகிலு மிந்திர போகங்களை யனுபவித்துத் திருமாலாகிய அரங்க நாயகர் வதிகின்ற ஸ்ரீவைகுண்டத்திலும் நித்திய சூரியர்களுடனே வாசஞ் செய்வார்க ளென்றவாறு (10)

மீள்கிலார - மீண்டும் பிறவியெடுக்கமாட்டார்கள்.

உரை - நிர்மிக்கப்பட்டவை - நியமிக்கப்பட்டவை, உண்டாக்கப்பட்டவை.

தீர்த்த விசேடம் முற்றிற்று.

## Viracai mānati

*viracaimā natiyiṉil mūḻka mīḷkilār*
*varacirēṭ ṭantaru varaiyi luḷḷatap*
*perumaiyu meḷitavap pēci vintiraṉ*
*aracumāl pataviyu maṭaivar meyyatē.*

## Viracai River

Those who bathe in the Viracai river
Do not return; if they come here
They will gain supreme states; it is true
They will become emperors like Intiraṉ.

# 7. மூன்றாவது

# மூர்த்தி விசேடம் உரைத்த அத்தியாயம்

உலகம் புகழும் கோலாசலத்தின் தலப்புகழினை அருளினீர். அத் தேனை உண்டு மகிழ்ந்த எங்கள் செவிகளானவை அத்தலத்தில் எழுந்தருளியுள்ள மூர்த்தியினது புகழினையும் அறிய விரும்புகின்றன. உலகப்பொருள் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கின்ற நின்மலனுடைய சிறப்பினைக் கூறியருள வேண்டும் என்று சவுனகாதி முனிவர்கள் சூதபுராணிகரை வேண்டினார்கள்.

பார்வதி தேவியின் நாயகராகிய பரமசிவனுக்கும் அரியவராகிய திருமாலின் திருவடிகளை வணங்கும் உங்களுக்கு ஒப்பானவர்கள் உலகத்தில் யாருமில்லை. அந்தத் திருமாலாகிய பரப்பிரம்மத்தை அறிந்தவர்கள் பிறவியாகிய கடலைக் கடப்பார்கள். உணர்ந்தவர்கள் மட்டுமேயன்றி, அந்தப் பரம்பொருளை இடைவிடாது நினைக்கும் அடியார்கள் அப்பரம்பொருளின் பெருமைகளைக் கூறக் கேட்டவர்களும், அவ்வாறு கேட்டு இன்பம் துய்த்து அவ் இன்பத்தினைப் பிறருக்கு எடுத்து உரைத்தவர்களும் பிறவிக் கடலைக் கடந்து பெரும் பேற்றினை அடைவார்கள். எனவே நீங்களும் ஐம்பொறிகளை அடக்கியிருந்து கேட்பீர்களாக என்று சொல்லி மேலும் கூறத் தொடங்குகிறார் சூதபுராணிகர்.

அகில உலகங்களையும் கருப்பத்தில் வைத்துப் பாதுகாத்து, அவற்றைத் தோற்றுவித்துச் சிவான்மாக்களின் ஆன்மாவாய் விளங்குபவன் அந்த நாராயணன். எங்கும் முழுமையாய் நிறைந்து நிற்பவனாகிய அவனை அறியாமல் வீணே காலங்கழித்து, மோகன நூல்களிலேயே தம் அறிவைச் செலுத்துபவர்கள் பிறவிக்கடலிலேயே மூழ்கிக் கிடப்பார்கள்.

மேலும் அந்த நாராயணமூர்த்தியானவர் இவ்வுலகத்தையெல்லாம் தம் மணிவயிற்றிலே அடக்கியிருந்தார். அவரது உந்திக்கமலத்தில் தோன்றிய பிரமாவானவர் படைப்புத் தொழிலை மேற்கொண்டார். அவர் அருளால் நீலகண்டராகிய முக்கண் கடவுள் (பரமசிவன்) தோன்றினார். அந்தப் பிரமாவுக்கு ஒரு நாள் என்பது இரண்டாயிரம் சதுர்யுகமாகும். அந்த நாள் முப்பது கொண்டது ஒரு மாதம். அந்த மாதம் பன்னிரண்டு கொண்டது பிராமாவின் ஒரு ஆண்டு ஆகும். இவ்வாறான ஆண்டுகள் நூறு கடந்தபின் பிரமா இந்த உலகத்துடன் ஒடுக்கம் அடைவார். இக்காலத்தில் சிவபெருமான் பலமுறை பிறந்து இறப்பார். இவ்வாறான எல்லாப் பிரளய காலங்களிலும் நாராயணமூர்த்தியானவர் புன்னகை கொண்டு விளங்குவார்.

நான்முகனும் பரமசிவனும் அசுரர்களுக்கு வேண்டிய வரத்தைக் கொடுத்துவிட்டு. அவர்களை வெல்ல முடியாமல் நிற்பார்கள். அதனால் தருமங்கள் ஒடுங்கி அதர்மங்கள் ஓங்கிநிற்கும். அக்காலங்களிலே தமது விருப்பப்படி உலகில் தோன்றி அதர்மங்களை அழித்துத் தருமங்களை நிலைநிறுத்துவார் நாராயணமூர்த்தி. அப்பெருமானுடைய அவதாரப் பெருமைகளைக் கூறுவது பிரமா, சிவன், அறுபத்துநான்கு கலைகளை உணர்ந்த சான்றோர்

ஆகியவர்களுக்கே அரியசெயலாகும். அப்பெருமானது அருளினாலே அடியேன் கூறுகின்றேன் திருமால் தனது விருப்பத்தினால் எடுத்த திரு அவதாரங்கள் அனைத்தும் இப்பூவுலகத்தினைக் காத்தருளுவதற்கேயாகும்.

வராகத் திருஅவதாரம் செய்தருளிய திருமால் இலக்குமி தேவியாரை மகிழ்விக்கும் பொருட்டுத் திருப்பாற்கடலைவிட்டு நீங்கி, கோலாசலம் என்னும் இம்மலையிலே அரங்கநாயகர் திருவுருவாய் எழுந்தருளியுள்ளார். அத்திருமால் வேதங்களால் அறிய இயலாதவர்; இந்திரன் முதலிய தேவர்களுக்கும் அரியவர்; சீவகோடிகளைப் பாதுகாக்கும் அருள்வள்ளல்; இலக்குமியின் நாயகர். அவரை இடைவிடாது நினைந்து அவரருளால் நித்திய சூரியர்களாய் வாழ்வீர்களாக என்று கூறி, மேலும் முனிவர்கள் கேட்க, வியாசர் அம்முனிவர்களுக்குக் கூறியதை எடுத்துரைக்கிறார் சூதமுனிவர்.

ஆதிசேடன் தனது ஆயிரம் படங்களை விரித்துநிற்க, அவற்றிலுள்ள மாணிக்க ஒளியானது உலக இருளை விழுங்கியது. அந்த அரவணையில் மரகத மலைபோல வீற்றிருக்கிறார் திருமால். அவரது ஆதரவினாலே நித்தியத்தை அடையும்படியான பரத்துவத்தைக் கூறினீர்கள். சில புராணங்களிலே பிரமாவைப் பிரம சொரூபமாகக் கூறியுள்ளீர்கள். பல புராணங்களிலே நாராயணமூர்த்தியே பரப்பிரமம் என்று கூறியுள்ளீர்கள். உருத்திர மூர்த்தியே பிரமம் என்று சிலவற்றில் சொல்லினீர்கள். இவற்றைப் போன்றே சூரியன், அக்கினி ஆகியவர்களையும் சில புராணங்களில் கூறியுள்ளீர்கள். இவற்றின் காரணம் என்ன என்று முனிவர்கள் கேட்டார்கள். அதற்கு வியாசர், இவ் உலகைக் காத்தருளும மங்கள குணவந்தனாகிய வாசுதேவனே பரத்துவப்பொருளாகிய ஆதிமூலம் என்று பதில் கூறினார் இவ்வுலகத்தில் வாரணவாசி எனப்படும் கங்கை ஆற்றினைச் சார்ந்த மணிகரணிகைத் தலத்தில்நின்று ஒரு முதல்வனை அருளிச்செய்தால் நாங்கள் பேறு பெற்றவர்களாவோம் என்று முனிவர்கள் கேட்டுக் கொண்டார்கள். தமது வெதிரிகாசிரமமாகிய இலந்தையை விட்டு நீங்கிய வியாசர், அம்முனிவர்கள் சூழ்ந்துவரக் காசியை யடைந்து மணிகரணிகைத் தலத்திலேநின்று இரண்டு கைகளையும் தலையின்மேல் கூப்பியவாறு கூறுகின்றார். அந்த நாராயணனே இவ் உலகத்துக்குச் சுவாமி ஆவார். அவரே விக்கிரக விசேடர்; அழிவில்லாதவர்; உண்மை அறிவுள்ளவர்; படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய முத்தொழிலுக்கும முதல்வராக விளங்குபவர், செயல் முயற்சியிலே விருப்பமில்லாதவர், பொருள்கள் அனைத்திலும் நிறைந்திருப்பவர்; அவரே அரியபெரும் புகழையுடைய பரபபிரமமாவாா முதலையால் பிடிக்கப்பெற்ற கசேந்திரன் என்னும யானைக்கு அருள்புரிந்த அந்த ஆதிமூலமே உலகமுதல்வர் ஆவார். மேலும் அவர் அரி, அனந்தன், அச்சுதன், பராபரன் என்னும் பெயர்களைப் பெற்றவர்; ஞானத்திருவுருவாகவும் அந்தரான்மாவாகவும் விளங்குபவர், மச்சம், கூர்மம் முதலாகிய திரு அவதாரங்களைச் செய்தவர்; அகில உலகத்தையும் தன் ஆணையின்கீழ் நடத்துபவர் ஆவார் என்று வியாச முனிவர் கூறினார் எனறார் சூதபுராணிகர். மேலும் யசுர் வேதத்தின் முற்பகுதி, ஐந்தாம் பகுதிகள், ஆகமங்கள், வியாசர் அருளிய நாரதீயம் முதலிய புராணங்கள், பிற சரித்திர நூல்கள் போன்றவற்றிலும்

அவரே பரத்துவம் என்று கூறப்பெற்றுள்ளது. துளசி மாலையும், திருமண்ணும் அணிந்து, சங்கு, சக்கரம் ஏந்தி, அடியவருக்கு அருளும் திருவுள்ளத்தோடு விளங்குபவர் அப்பரம்பொருள். கன்னியரின் மையலிலிருந்து விடுபட்டவர்கள் அப்பரம்பொருளின் திருவடி நிழலில் நித்திய சூரியர்களாய் விளங்குவார்கள். அந்த அரங்கநாயகருக்கு ஆராதனம் செய்கின்ற பிரசாதங்கள், ஸ்ரீபாத தீர்த்தங்கள், அவர் அணிகின்ற துளபமாலை, பரிவட்டம், பரிமளப்பொருள்கள் போன்றவற்றை முனிவர்களும் தேவர்களும் உண்டும் அணிந்தும் மகிழ்வார்கள் என்று கூறினார் சூதமுனிவர்.

அரங்கநாயகரின் திருஅவதாரப் பெருமைகளைக் கேட்டு மகிழ்ந்தோம். மேலும் அவர் இந்தக் கங்கை மணிகர்ணிகையில் தோன்றிய புகழினைக் கூறுங்கள் என்று விண்ணப்பித்த முனிவர்களுக்கு மேலும் கூறுகிறார் சூதபுராணிகர்.

**(சவுனகாதியர் வேண்டுகோள்)**

110. **தராதலம் புகழுங் கோலமால் வரையின்**
**தலச்சிறப் புரைத்திடத் தணியாச்**
**சராசர மனைத்துந் தழைத்தல்செய் முதல்வன்**
**றனிப்பெரும் புகழினைச் சார்ந்த**
**நிராமய மாகி நிறைந்தநின் மலனை**
**நீடுல கேழினுந் துதிக்கும்**
**பராபரப் பொருளாய்ப் பன்மறை புகழும்**
**பரமனை யருளெனப் பகர்ந்தார்.**

எ-து. இவ்விதமா யருளிச்செய்த குருபரம்பரனாகிய சூதபுராணிகரை யொன்று வினவுகின்றார்கள் சவுனகாதி முனிவர்களானவர்கள். இந்தப் பூமண்டலம் முதலியன வெல்லாந் துதித்துப் புகழ்கின்ற கோலாசல மகத்துவமாகிய தலச் சிறப்பான அமுதங்கலந்த தேனை யெங்கள் செவியாகிய வாய் பருகியின்புறும்படியாய் அனுக்கிரகித்ததனா லெங்களுள்ள முவரிநீருண்டவன் தாகந்தணியாது நன்னீர் வேட்டல்போல, மூர்த்தி விசேடத்தை அறிய விரும்புகிறது. இனிமேல் 'தங்கள் திருவாக்கினாலே அதை யருளிச் செய்ய வேண்டும சராசரமாகிய அசையும் பொருள் அசையாப் பொருளெவறறினும எள்ளுக்குள எண்ணெய்போல வியாபித்தருளுகின்ற [2]முதல்வனாயும், ஒபபற்ற புகழெல்லாம் திரண்டோர் வடிவாகிய நிராமயமான நிமலனை நீண்டவுலகேழின்கண்ணுந் துதிக்காநின்ற பராபரப் பிரம பாவனைப் பொருளாயும், பலபல வேதம் காண்டம் அத்தியாயம், வருக்கம முதலானதெல்லாந் தெளிவாய்க் கூறுகின்ற பரம புருடவிசேடத்தை அனுக்கிரகிக்க வேணடுமென்றார்க ளென்றவாறு (1)

தராதலம் - தலாதலம் - நிலவுலகம, கீழ் ஏழுலகங்களுள் ஒன்று. அவை: அதல, விதல, சுதல, தராதல, இரசாதல, பாதால, பூதலம் ஆகிய லோகங்கள் நிராமயம் - நிர் + ஆமயம் - உருவமறறநிலை, இறை நிலை பராபரப்பொருள் - பர + அபர + பொருள் பரம - உயாந்தது அபரம் - தன்னினும உயர்ந்த பொருள் இலலாதது; மேலானபொருள், இறை

,உரை - உவரிநீர் - கடல்நீர். உப்புநீர். காண்டம் - பெருநூலின் ஒரு கூறுபாடு அத்தியாயம் - வேத நூலின் ஒரு கூறுபாடு வருக்கம - அத்தியாயம போன்றதொரு பகுதி. இவை நூலின் உறுப்புகள்

பா.வே. - 1 தங்கடிருவாய் மலரவேணடும் 2 முதல்வனாய.

## Cavuṉakātiyōr vēṇṭukōḷ

*tarātalam pukaḻun kōlamāl varaiyiṉ*
*talacciṟap puraittiṭat taṉiyāc*
*carācara maṉaittun taḻaittalcey mutalvaṉ*
*ṟaṉipperum pukaḻiṉaic cārnta*
*nirāmaya māki niṟaintaniṉ malaṉai*
*niṭula kēḻiṉun tutikkum*
*parāparap poruḷāyp paṉmaṟai pukaḻum*
*paramaṉai yaruḷeṉap pakarntār.*

## VII. On the Image
## Prayer of Cavuṉaka and Others

The sages prayed: 'Having spoken
Of the Kōlācalam famous on earth,
Do kindly tell us now
Of the glory of the Primal One
Who pervades all creation;
The Pure One who is formless,
The Supreme who is worshipped
In all the seven worlds
And praised by all scriptures.'

(சூதர் முனிவர்களுக்குக் கூறுதல்)

111. வாரீர் முனிவ ரந்தணரே மாயை கடக்க மனமகிழ்ந்து
நாரி பாகற் கெட்டாத நாத னடியி னல்லன்பு
கூரு முங்கட் கிணையொருவர் கூறத் தகுமோ குவலயத்தின்
யாரும் பரனை யறியார்கள் அறிவார் பவத்தை யகற்றுவரே.

எ-து. வாரீர் மிகுந்த தவத்தையுடைய சவுனகாதி மகா முனிவர்களே! நாராயணனுடைய லீலா விபூதி மாய்கைகளைக் கடக்க வேணுமென்று மனமகிழ்ந்தீர்களாகையால், பார்வதி தேவிக்கு நாயகராகிய பரமசிவனுக்கு மறியக்கூடாத பரவாசுதேவனுடைய திவ்விய சரணார விந்தங்களிற் பத்தி செய்யும் உங்களுக்குச் சத்தசாகரஞ் சூழ்ந்த பூமண்டலங்களி னொருவரையுமொபபுச் சொல்லத் தகுமோ?அப்படி யாராலுமறியக் கூடாத அந்தப் பரப்பிரம்மத்தை யறியப்பட்ட [1]மானுடர்கள் பவமாகிய [2]துன்பசாகரத்தைக் கடந்தவர்களாய்ப் பரமபதமான வைபவத்தை யடைவார்களென்று பின்னுங் கூறுகின்றார் சூதமுனிவ ரென்றவாறு. (2)

நாரி - உமையம்மை. குவலயம் - நிலவுலகம். பவம - பாவம், பிறபபு

**உரை** - சததசாகரம் - ஏழுகடல்கள - அவை - உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பன

பா.வே. - 1 மானுக்கள் 2 துக்கசாகரததைக.

## Cūtar muṉivarkaḷukkuk kūṟutal

*vārīr muṉiva rantaṇarē māyai kaṭakka maṉamakiḻntu*
*nāri pākaṟ keṭṭāta nāta ṉaṭiyi ṉallaṉpu*
*kūru muṅkaṭ kiṇaiyoruvar kūṟat takumō kuvalayattiṉ*
*yārum paraṉai yaṟiyārkaḷ aṟivār pavattai yakaṟṟuvarē.*

## Speaking to the Sages

'Come, O learned ones!
If you are pleased to go beyond
Illusion, you who have devotion
To the feet of the Lord
Unrealisable even for Civaṉ,
Who can equal you?
No one knows of the Supreme here.
Those who know would cross the sea of birth.

(அரங்கன் புகழ் கூறத் தொடங்குதல்)

112. உலகிற் சிலரப் பரம்பொருளை
உணர்வோர் கேட்போ ருரைத்திடுவோர்
அலகிற் பவமாங் கடற்கடந்தங்
கழியாப் பரம பதமடைவர்
நிலையிற் பொறிக ளைந்தடக்கி
நிமிட மேக மனத்தினராய்
அலையிற் பொலியும் பரன்சீர்த்தி
யறிந்த சிலநா னறைகுவனால்.

எ-து இப்படி மிகுந்த சிலாக்கியமாகிய உலகத்தினிடத்திலே யந்தப் பரம்பொருளாகிய நாராயணனுடைய திவ்விய குணானுபவங்களைச் சர்வ காலங்களிலும் இடைவிடாது நினைக்கும் பரம பாகவதர்களாலே கேள்வி செய்த மாத்திரத்திலே அமுதபானம் [1]பண்ணினது போல நித்தியானந்தங்களை யடைந்தந்த நாமதேயத்தைத் தோத்தரித்தளவின் அளவிடப்படாத செனனமாகிய கடலினைக்கடந் தழியாத பரமபதத்தை அடைவார்கள் ஆகையால் நீங்களும் பஞ்சேந்திரியங்களை யுள்ளடக்கிச் சாத்வீக ஞானத்தை யடைந்து ஒரு நிமிடமாவது கேள்வி செய்வீர்களாகில், அனந்தமான பலப்பிரயோசனத்தையடைவீர்கள் ஆகையால் திருப்பாற் கடலின் அனந்த விமான சேகரரா யோக நித்திரை செய்கின்ற பரம புருடனுடைய கீர்த்தியை யானறிந்த மாத்திரங் கூறக் கேட்பீராக வென்றவாறு. (3)

அலகு - எண், அளவு பவம - பாவம், பிறவி. நிலையிற்பொறி - அழியுந்தன்மைவாய்ந்த உறுப்புகள் பொறிகள ஐந்து - மெய், வாய், கண், மூக்கு, செவி ஏகமனம் - ஒரே உள்ளம் - இங்கு கேள்வியறிவு ஒனறினை மட்டும. அலை - கடல் அலை (திருபபாற்கடல்) சீர்த்தி - புகழ், பெருமை.

உரை - பஞசேந்திரியம் - பஞ்ச + இந்திரியம் - ஐம்பொறி சாத்வீகஞானம் - அருட்குணம்.

பா.வே. - 1 பண்ணதுபோல

## Araṅkaṉ pukaḻ kūṟat toṭaṅkutal

*ulakiṟ cilarap paramporuḷai*
*uṇarvōr keṭpō ruraittituvōr*
*alakiṟ pavamāṅ kaṭaṟkaṭantaṅ*
*kaḻiyāp parama patamaṭaivar*
*nilaiyiṟ poṟika ḷaintaṭakki*
*nimiṭa mēka maṉattiṉarāy*
*alaiyiṟ poliyum paraṉcīrtti*
*yaṟinta cilanā ṉaṟaikuvaṉāl.*

## On Araṅkaṉ's Greatness

There are some in this world
Who realise that Supreme,
Listen about him or speak of him,
Pass through the shoreless sea of birth
And reach the immortal state.
Do control your five senses
And meditate for a moment.
I shall speak of the glory
Of the Lord who rests on the wavy sea.

**(கலியாண் குணங்கள்)**

113. **உலகுதந் தானும் பல்வே றுயிர்கடந் தானு முள்ளே**
**யலகிற்பல் லுயிர்க டோறு மங்கங்கே யமரு வானும்**
**பலமறை சாத்தி நிற்கும் பரமநாரணனார் தன்மை**
**சொலவறி யார்கண் மோக னத்தினிற் சுழல்வ ரன்றே.**

எ-து.- வாரீர் சவுனகாதி முனிவர்களே! அகிலமாகிய சராசரங்களை யெல்லாங் [1]கர்ப்பத்தின்கண் வைத்துப் பாதுகாத்து [2]மீட்டுமவைகளைச் சிருட்டிதது நான்முகன் முதல் புல்லு பரியந்தமாகிய சீவான்மாக்களுக் கெல்லாம் அந்தரியாமியாயும். புட்பத்தின் வாசனைபோலவும். அக்கினியிற் சூடுபோலவும் எங்குமு பரிபூரணமாய் நிறைந்து நினற நாராயணனுடைய அனந்தமான கல்யாண குணங்களை யுணராமல். விருதாவான மோகன நூலை மெய்ம்மை யென்றறிந்து புத்தி மயங்கித் தெளிவில்லாத மூடர்கள். பிறப்பாகிய சாகரத்தில் வீழ்ந்தநதச் சுழியிலே யகப்பட்டு மூழ்குவார்கள் பலபோகள் என்றவாறு (4)

உயிகடந்தானும் - உயிர்கள் + தந்தானும் மோகனம் - மயக்கம்

**உரை** - சராசரம் - சரம + அசரம். சரம் - அசையும் பொருள்: அசரம - அசையாபபொருள் அந்தரியாமி - ஆன்மா அனந்தம - முடிவிலலாதது அநதம X அனந்தம் சாகரம் - கடல்.

பா.வே - 1. கெற்பத்தின் 2 ஊட்டுமவை.

## Kaliyāṇa kuṇaṅkaḷ

*ulakutan tāṉum palvē ṟuyirkaṭan tāṉu muḷḷē*
*yalakiṟpal luyirka tōṟu maṅkaṅkē yamaru vāṉum*
*palamaṟai cātti niṟkum paramanāraṇaṉār taṉmai*
*colavaṟi yārkaṇ mōka ṉattıṉiṟ cuḻalva raṉṟē.*

## God's All-auspicious Qualities

The creator of earth, giver of life,
The indwelling universal everywhere,
The One who is praised by many scriptures,
The Supreme Nārāyaṇaṉ;
Those who know him not
Live in total delusion.

**(இறைவர்களின் காலம்)**

114. அண்ட மளிக்கு மொருதெய்வம்
அதனு ளடங்கு மனைத்துலகும்
புண்ட ரீக னதற்கிறையாய்ப்
பொருந்து மவன்றன் பேரருளாற்
கண்டங் கறையச் சிவனுதிப்பன்
கழறு [1]மிவனாட் களைவேதம்
விண்ட ததுவுஞ் சொலக்கேளு
மேலோ ருரைத்த படியென்றான்.

எ-து. ஆதிகாலத்திலே நாராயணமூர்த்தியானவர் தமது மணிவயிற்றிலே லோகாந்திரங்களை யெல்லாம் உள்ளடக்கி இந்த அண்டங்களுக்குக் கர்த்தாவாகிய செந்தாமரைக் கமலம்போன்ற உந்திக் கமலத்தி னுற்பவித்த பிரமாவானவர் சிருட்டி காத்தாவாகியிருப்பார். அவருடைய கிருபையினாலே காளகண்ட திரிநேத்திரதாரியாகிய பரமசிவ னுற்பவிப்பார் ஆகையால் அவர்களுடைய ஆயிசு பிரமாணததை வேத சாததிரஙகளில் சொல்லுகின்ற பிரமாணங்களினாலே பெரியோர்கள் கூறிய மார்க்கப்படி யானெடுத்துச சொல்லுகின்றேனென்றார் சூதபுராணிக ரென்றவாறு (5)

அண்டம - உலகம் புணடரீகன் - தாமரைமலரில் வீற்றிருப்போன்; பிரமன் கறை - கறுப்பு, நஞசு, கறையையுடைய சிவன் நாடகளை - வாழ்நாடகளை விண்டது - கூறியது (விள்ளுதல - கூறுதல)

**உரை** - காளகண்டதிரிநேத்திரதாரி - காளம் - கருமை, நஞசு. கண்டம் - நெஞ்சு; திரி - மூன்று நேத்திரம - கண்; தாரி - தரித்தவன், உடையவன, சிவபெருமான் பிரமாணங்கள் - அளவுகள்.

பா.வே. - 1 மிவனாறகலைவேதம்

## Iṟaivarkaḷiṉ kālam

*aṇṭa maḷikku moruteyvam*
*ataṉu laṭaṅku maṉaittulakum*
*puṇṭa rīka naṭaṟkiṟaiyāyp*
*poruntu mavaṉṟaṉ pēraruḷāṟ*
*kaṇṭaṅ kaṟaiyac civaṉutippaṉ*
*kaḷaṟu mivaṉāṭ kaḷaivētam*
*viṇṭa tatuvuñ colakkēḷu*
*mēlō ruraitta paṭiyeṉṟāṉ.*

## The Age of Gods

There is but one God
Who creates the universe.
All else are contained in it.
Piramaṉ is its Lord.
By his supreme grace
Is born Civaṉ whose neck is dark.
The Vēdas speak of their ages.
Listen to me as I recount
According to received tradition.

(பிரமனுக்கு நாள் அளவு)

115. அயற்கு மிரண்டா யிரஞ்சதுரி
யுகங்க ளொருநா ளாகுமது
வியற்கை முப்பதா கில்திங்கள்
இசையு மதுவோர் பன்னிரண்டு
செயற்கை வருட நூறாகுஞ்
சிவனும் பலகாற் செனித்திறப்பன்
புயற்கும் வெண்மை யளித்தருளும்
பரமன் சிறிய நகைபுரிவான்.

எ-து. ஆகையால் சிருட்டி கர்த்தாவாகிய பிரம்மாவுக் கிரண்டாயிரஞ் சதுாயுகஞ் சென்றால் அது ஒரு நாளாம் அந்த நாள் முப்பது சென்றால் ஒரு மாதம் அந்த மாதம்

பன்னிரெண்டு சென்றால் ஒரு வருடமாம் அந்த வருடம் நூறு சென்றால் பிரம்மாவுக்கு அண்டத்துடனே லயம் வருமாகையால் இவராயிசுக் குள்ளாய் கயிலாய பதியாகிய பரம சிவனும் அனேகதரம் பிறந்திறப்பார். அந்த மகாப் பிரளயங்களிலே மேகத்தினும் மிகுந்த கரிய திருமேனியினையுடைய பரவாசுதேவரானவர் தமது செம்பவளம்போன்ற திருவாய் மலரினால் புன்னகை கொண்டருளுவா ரென்றவாறு. (6)

அயற்கு - அயன் + கு அயன் - பிரமன் சதுரியுகம் - சதுாயுகம் - நான்குயுகங்களும் கூடிய ஒருயுகம் திங்கள் - மாதம் புயற்கு - புயல் + கு புயல - மேகம்

உரை - அண்டம் - உலகம லயம் - ஒடுக்கம

## Piramaṉukku nāḷ aḷavu

*ayaṟku miraṇṭā yirañcaturi*
*yukaṅka ḷoruṇā ḷākumatu*
*viyaṟkai muppatā kiltiṅkaḷ*
*icaiyu matuvōr paṉṉireṇṭu*
*ceyaṟkai varuṭa nūṟākuñ*
*civaṉum palakāṟ ceṉittiṟappaṉ*
*puyaṟkum veṇmai yaḷittaruḷum*
*paramaṉ ciṟiya nakaipurivāṉ.*

## Piramaṉ's Single Day

Two thousand of four yugas
Make one day of Piramaṉ
Thirty of those days, a month;
Twelve of them, a year.
When a hundred years pass thus
Piramaṉ's time for withdrawal is near.
By now Civaṉ would have been born
Several times and died too.
The Supreme who has cloud-like complexion
Smiles in the times of deluge.

(பிரமனின் வரம்)

116. சொல்லு மயற்கு மரனுக்குந்
தொலையாச் சூர துட்டர்பலர்
வெல்லு முலகிற் பவமிகுந்த
வினையை மிகவாய் விளைத்திடுநாட்
கல்ல லவரை இச்சையினா
னறத்தைக் காப்பா னருட் கடவுள்
ஒல்லை யவதா ரங்கள்பல
வியற்றி யுலகை யளித்திடுவான்.

எ-து. அப்படி சிருஷ்டி கர்த்தாவாகிய நான்முகனுங், கயிலாய பதியாகிய பரமசிவனும் [1]அசுரர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து அவர்களைச் செயிக்கத் தங்களால் முடியாமல் இந்திரன் முதலாகிய பெயர்களுக்கும், முனிவர்கள் அந்தணர் முதலாகிய வருணங்களுக்கும் உசிதமாகிய [2]தர்மங்கள் லயத்தையடைந்து அதர்மங்களானவை மிகுதியும் வளர்ந்து வருகின்ற சமயங்களிலே தமதிச்சாமாத்திரத்தால் இந்த லீலாவிபூதியின் திருவவதாரங்களைச் செய்து பரம வைதீகமான தர்மங்களைப் பரிபாலனஞ் செய்கின்றார் ஆகையினாலே அந்தப் பரம புருடனுடைய திவ்விய சரணார விந்தத்தினை உபாசிப்பா மென்றவாறு. (7)

துட்டர் - தீயோர். பவமிகுந்தவினை - பாவச்செயல்கள். அல்லலவர் - துன்பமுற்றோர். ஒல்லை - விரைவாக.

**உரை** - லயம் - ஒடுக்கம். இச்சாமாத்திரம் - விருப்பத்தினால். லீலாவிபூதி - திருவிளையாடற் பண்பு. உபாசித்தல் - வழிபடுதல்.

**பா.வே.** - 1. சுரர்களுக்கு. 2. தர்மங்களயத்தை.

**Piramaṉiṉ varam**

*collu mayaṟku maraṉukkun*
*tolaiyāc cūra tuṭṭarpalar*
*vellu mulakiṟ pavamikunta*
*viṉaiyai mikavāy viḷaittiṭunāṭ*
*kalla lavarai iccaiyiṉā*
*ṉaṟattaik kāppā ṉaruṭ kaṭavuḷ*
*ollai yavatā raṅkaḷpala*
*viyaṟṟi yulakai yaḷittiṭuvāṉ.*

## Piramā's Boon

As many evil demons
Receive gifts from Piramaṉ
And Civaṉ too, unrighteousness
Increases on earth in a big way.
It is then the compassionate Lord
Decides to guard Dharma
And swiftly incarnates on the earth
And saves it from nescience.

(திரு அவதாரங்கள்)

117. பரத்தி னவதா ரத்தைச்சில
[1]பகர்வா ருணர்ந்தோர் பங்கயனுஞ்
சிரத்திற் கங்கை யணிந்தோனுந்
தினையி னளவிற் சிறியேனும்
வரத்திற் பலத்தா னதிற்சிறிதிங்
கறைவன் கேளு மனமகிழ்ந்து
திரைத்தண் கடலி னுறைபரமன்
செகத்தை யளிப்பான் திருக்கோலம்.

எ-து. அந்தப் பரப்பிரம்ம மாகிய நாராயணனுடைய அனந்த அவதாரங்களின் பெருமையினை வேத முதலாகிய அறுபத்துநான்கு வித்தையை யுணர்ந்த பெரியோர்களும், தாமரைமண்டப பீடத்தின் வீற்றிருக்காநின்ற சதுர்முகப் பிரம்மாவும், சடாமகுடத்திலே கங்கையைத் தரிக்காநின்ற பரமசிவனும் கூறுதற்கரிய திவ்விய அவதாரச் சரித்திரங்களைத் தினையைப் பார்க்கிலும் அற்ப சிறியவனாகிய அடியேன் அரங்கநாயகனுடைய வரபலனத்தினது வலியினாலே யறிந்த மாத்திரங் கூறுகின்றேன், மகிழ்ச்சியாய்க் கேட்கக் கடவீர்களென்று அருளிச் செய்கின்றார். அலைகளையுடைய திருப்பாற்கடலிலே வாசஞ்செய்கின்ற பரமனானவன் றனதிச்சா மாத்திரத்தால் செய்த திருவவதாரங்களெல்லாம் செகத்தை இரட்சிக்கும் படியாகிய திருக்கோலமென்று பின்னுங் கூறுகின்றார் சூத புராணிக ரென்றவாறு.
(8)

பரம - இறைவன பஙகயன் - பிரமன. கங்கையணிந்தோன - சிவபெருமான் தினை - சாமை, ஒருவன்கப்பயிா அறைவன் - கூறுவேன், திரை - அலை

பா.வே. - 1 பகாவர்கணதநோர்

## Tiru avatāraṅkaḷ

*paratti ṉavatā rattaiccila*
*pakarvā ruṇarntōr paṅkayaṉuñ*
*cirattiṟ kaṅkai yaṉintōṉun*
*tiṉaiyi ṉaḷaviṟ ciṟiyēṉum*
*varattiṟ palattā natiṟciṟitiṅ*
*kaṟaivaṉ kēḷu maṉamakiḻntu*
*tiraittaṇ kaṭali ṉuṟaiparamaṉ*
*cekattai yaḷippāṉ tirukkōlam.*

## Incarnations

It is impossible for wise ones
To describe the Lord's incarnations;
Indeed it is so for Piramaṉ,
And the Kaṅka-crowned Civaṉ;
I am lesser than a millet seed.
I shall speak of the phenomenon
As best as I can
By the grace of the Lord;
Listen to the same with joy.
The incarnations of the Lord
Who resides in the waves
Is for the good of the world.

(அரங்கன் அவதாரம்)

118. வராக மாகி முற்பரமன்
மலராள் திருவுக் கிதங்கொடுப்பான்
பராவுந் திருப்பாற் கடறணைந்து
பரம பதம்போ லொளிதிகழும்
புராத னத்தாற் புகழிலகு
கோலா சலத்திற் பூரணமா
நிராம யத்தத் திருவரங்க
வுருவாய் நிறைந்தா னின்மலனே.

எ-து. வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! ஆதி காலத்திலே மிகுந்த சிரேஷ்டமாகிய எக்கிய வராகமாகத் திருவவதாரஞ் செய்தருளிய பரமனான நாராயண மூர்த்தியானவர், பொன்னந்தாமரைக் கமலத்திலே வாசஞ்செய்கின்ற ஶ்ரீ மகாலட்சுமி தேவிக் கிதங்கொடுக்கும் பொருட்டுத் திருப்பாற்கடலை விட்டு நீங்கிப் பரம பதத்தைப்போலப் பிரகாசிக்காநின்ற கோலாசல கிரியிலே பூரணமாகிய திருவவதாரஞ் செய்து நிராமயப் பரம்பொருளாகிய அரங்கநாயகத் [1]திருவுருவாய் நிறைந்தெங்கும் வியாபித்திருக்கின்றான் நின்மல சொரூபியானவ னென்றவாறு (9)

வராகம் - திருமால் அவதாரங்களில் ஒன்று; பன்றி வடிவம் இதம் - இன்பம். கடறணந்து - கடல் + தணந்து - கடலைவிட்டுநீங்கி. புராதனம் - பழமை நிராமயம் - அழிவில்லாமை, நோயின்மை நின்மலன் - தூயவன்

**உரை** - எக்கியம் - யாகம்.

பா.வே. - 1 உருவாய்

## Araṅkaṉ avatāram

*varāka māki muṟparamaṉ*
*malarāḷ tiruvuk kitaṅkoṭuppāṉ*
*parāvun tiruppāṟ kaṭaṟaṇantu*
*parama patampō loḷitikaḻum*
*purāta ṉattāṟ pukaḻilaku*
*kōlā calattiṟ pūraṇamā*
*nirāma yattat tiruvaraṅka*
*vuruvāy niṟaintā ṉiṉmalaṉē.*

## Incarnating as Araṅkaṉ

The Lord who manifested as the Boar
Wished to please the Goddess of Wealth.
Hence he left the Milky Sea
To come to Kōlāchala that gleams
Like the heavens above
And has acquired fame
Since ancient times.
Here he remained as Araṅkaṉ,
The One, the Indestructible, the Pure.

(சாத்வீக ஞானத்தால் வணங்குங்கள் எனல்)

119. வானோர் கோவு மயனரனும்
வளரு மறைக ளறம்வேள்வி
தானோ வறியாப் பரம்பொருளைச்
சகல லோக தயாபரனைத்
தேனார் கமலை மணவாள
னென்றே சிந்தை சலியாது
பூநே ரடியைத் தினந்துதித்துப்
புனித ராகிப் பொருந்துவிரே.

எ-து. இந்திரன் முதலாகிய தேவர்கூட்டங்களும் பிரமாவும் பரமசிவனும், வேதங்களும் காண இயலாத பரம புருடோத்தமனை, சகல சீவகோடிகளையுந் தயைபுரிந்து இரட்சிக்கப்பட்ட தயாபர மூர்த்தியை, தேனைச் சொரிந்து திவ்விய வாசனையை வீசாநின்ற செந்தாமரைக் கமலத்தில் வாசம் பண்ணப்பட்ட ஸ்ரீ மகாலட்சுமி தேவிக்கு நாயகனாகிய நாராயணனைச் சாத்வீக ஞானத்துக்கு ஈடுபட்டு, அவரை இடைவிடாது நினைந்து உபாசித்து, அவருடைய அனுக்கிரகத்தினாலே ஞானசவுபாக்கியத்தை யடைந்து, நித்திய சூரியராய்ப் பரம பதத்திற் பொருந்தி வாழ்வீர்களென்றார் சூதபுராணிக ரென்றவாறு. (10)

அறம் - தருமம், நீர்மை. வேள்வி - யாகம், ஆராதனை தயாபரன் - அருளுடையோன் கமலை - இலக்குமி. பூநேரடி - மலரை நிகர்த்த திருவடி.

## Cātvīka ñāṉattāl vaṇaṅkuṅkaḷ eṉal

*vāṉōr kōvu mayaṉaraṉum*
*vaḷaru maṟaika ḷaṟamvēḷvi*
*tāṉō vaṟiyāp paramporuḷaic*
*cakala lōka tayāparaṉait*
*tēṉār kamalai maṇavāḷa*
*ṉeṉṟē cintai caliyātu*
*pūnē raṭiyait tiṉantutittup*
*puṉita rākip poruntuvirē.*

## Cātvīka Prayers

He cannot be envisaged
By Intiraṉ, Piramaṉ, Civaṉ,
The everlasting Vēdas,

*Dharma* or Sacrifices;
Pray with an undisturbed consciousness
To this Lord, the One
Who has compassion for all life,
The consort of Lakṣmi on the lotus.
Pray daily to his blossom - like feet,
Become pure and gain Realisation.

(வேறு)

(வியாசரிடம் முனிவர்கள் விண்ணப்பம்)

120. இத்திறத் தனவர மெம்பிரான் றுயில்கூர்ந்
தினியதாஞ் சேடனா ரியலார்
மைத்தலை கவித்த பணாமுடி விளக்கம்
பாயிருள் பரப்பினை யகற்றி
நித்திய ஞானர்க் கருள்புரிந் தருளு
நிமலனை வேதவே தாந்தச்
சித்தியார் வியாத முனிவனைத் துதித்து
வினாவுவார் சிறந்தமா முனிவர்.

எ-து. இவ்விதமாகிய சர்வ மங்கள குணங்களையுடைய எமபெருமானாகிய அரங்க நாயகரானவர், ஆயிரம் பணாடவியை விரித்துச் சேடனாகிய அனந்த மூர்த்தியானவர் பரப்ப யோகநித்திரை செய்கின்றவர், அந்த மாணிக்கத்தினது வொளியானது திக்குத் திகாந்தரங்களின் நிறைந்திருக்கின்ற விருட்படலங்களை விழுங்குதல் செய்ய, அந்த அரவணையினில் மரகத மலைபோல வீற்றிருக்காநின்ற பரம்பொருளைக் குறித்து வேத வேதங்களின் சித்தியைத் தருகின்ற வியாசமுனிவரை வணங்கி முனிக்கூட்டங்களானவர் ஒரு விண்ணப்பம் செய்கின்றார்க ளென்றவாறு (11)

துயில்கூர்தல் - நித்திரை செய்தல். சேடனார் - ஆதிசேடன் என்னும் பாம்பு. பணாமுடி - பாமபின தலை உச்சி; பணம் - பாம்பு. விளக்கம் - ஒளி; பாம்பின் தலையிலுள்ள மாணிக்கம் தரும் ஒளி பாயிருள் - பரவியுள்ள இருட்டு. நிமலன் - தூயவன்; இறைவன். பணாடவி - பணம் + அடவி; அடவி - காடு; பாம்பின் படங்களாகிய காடு. ஆதிசேடனின் ஆயிரம் படங்கள். இருட்படலம் - இருளாகிய கூட்டம்; அடர்ந்த இருட்டு. அரவணை - பாம்பாகிய படுக்கை; அனந்தன். மரகதமலை - பச்சை நிறமலை

## Vēṟu

## Viyācariṭam muṉivarkaḷ viṇṇappam

*yittiṟat taṉavara mempirāṉ ṟuyilkūrn*
*tiṉiyatāñ cēṭaṉā ṟiyalār*
*maittalai kavitta paṇāmuṭi viḷakkam*
*pāyiruḷ parappiṉai yakaṟṟi*
*nittiya ñāṉark karuḷpurin taruḷu*
*nimalaṉai vētavē tāntac*
*cittiyār viyāta muṉivaṉait tutittu*
*viṉāvuvār ciṟantamā muṉivar.*

## The Sages to Vyāsa

Such is our Lord who rests
Gracefully on the Āticēṣa
From whose hood gleam gems
That remove the darkness around.
The great sages saluted sage *Vyāsa*,
Expert in scriptures and philosophy
And requested him to tell them
About this blemishless Lord
Who grants grace to men of wisdom.

(பரத்துவம் கூறியது)

121. **வேத சாகைக ளாகுமெண் ணெண்கலை விதித்த**
**போதகா சிரிய ராகிய வியாதன்றாள் புனைந்து**
**சீத ளக்குண[1] முனிவர்க ளாசிரியோ யெமக்கிங்**
**காத ரத்துடன் பரத்துவம் புகன்றனை யடைவாய்.**

எ-து. வேதமாகிய நான்கு தாருக்களின் கிளை வர்க்கங்களாகிய அறுபத்து நான்கு கலைகளை, ஞானமணங்கமழத் திருவாய் மலர்கின்ற போதகாசிரியராகிய வாதராயண முனிவரது பாதத்தாமரையைத் திருமுடியிற் புனைந்து, சாந்தத்துவ ஞானத்தினையுடைய நற்குண நற்செயல் வாய்ந்திருக்காநின்ற முனிபுங்கவர்கள் சூதமகா முனிவரைத் துதிசெய்து, வரிசைக்கிரமமாகிய ஆதரவினாலே யாங்கள் சித்த சலனமில்லாமல் நித்தியத்தை யடையத் தக்கதாய்ப் பரத்துவங் கூறினீர் என்றவாறு. (12)

சாகை - வேதநூற் பிரிவு. எண்ணெண்கலை - 64 கலைகள. போதகாசிரியா - போதகம் + ஆசிரியா; போதகம் - கற்பித்தல். வியாதன் - வியாசமுனிவா வாதராயணன் என்பதும் வியாசரைச் குறித்தது பரத்துவம் - இறைததன்மை; தீவம் - தன்மை. அடைவு - முறை

உரை - தாரு - தேவதாரு மரம். வாதராயணா - வியாசமுனிவா சித்தசலனம் - மனத்தளர்வு.

பா.வே. 1. முனிவாகாள் சிரியோவெமக்கிங்

## Parattuvam kūṟiyatu

*vēta cākaika ḷākumeṉ ṇeṉkalai vititta*
*pōtakā ciriya rākiya viyātaṉṟāḷ puṉaintu*
*cīta ḷakkuṇa muṉivarka ḷāciriyō yemakkiṅ*
*kāta rattuṭaṉ parattuvam pukaṉṟaṉai yaṭaivāy.*

## On the Transcendent

Saluting the feet of the teacher, Vyāsa
Who taught the sixty-four arts
Which are branches of the four Vēdas,
The gentle-natured sages prayed
To Cūtar: 'You have affectionately spoken
Of the nature of the transcendent.

(இதுவரை முனிவர்கள் அறிந்தவை)

122. சிலபுரா ணத்தாற் பிரமனை பிரமமாய்ச் செப்பிப்
பலபுரா ணத்தான் விண்டுவின் பரத்துவம் பகர்ந்தீர்
குலவு செஞ்சடை உருத்திரன் பிரமமாய்க் கூறி
நலம தாகிய பதங்கனக் கினியினை நாட்டி.

எ-து வாரீர் மகானுபாவரே! சிலவாகிய புராணங்களினாலே அன்னவாகன ரூடராய்க் கலைமகள நாயகராகிய பிரமாவைப் பிரம்ம சொரூபமாய்ச் சொன்னீர்; அதன் பின்பு பல புராணஙகளினாலே நாராயண மூர்த்தியே பரப்பிரமமென் றருளிச்செய்தீர். மீட்டும பிரகாசிக்காநின்ற சிவந்த சடாபாரத்தினையுடைய உருத்திர மூர்த்தியே பிரமமென்று கூறினீர் அதனறியுஞ் சூரிய பகவானையும அக்கினித தேவனையும் பிரம கைவர்த்தம ஆக்கினேயப் புராணஙகளினாலே அருளிசசெய்தீ ரென்றவாறு. (13)

பிரமம் - மூலகாரணம் செப்புதல - சொல்லுதல விண்டு - விஷ்ணு - திருமால். பரததுவம - கடவுட்டன்மை குலவு - ஒளிபொருந்திய பதங்கன் - சூரியன் அககினி - அக்கினித்தேவன்

**உரை** - பிரமகைவர்த்தம் - பதினெண் புராணங்களுள் ஒன்று. ஆக்கினேயப் புராணம் - பதினெண் புராணங்களுள் ஒன்று.

## Ituvarai munivarkaḷ arintavai

*cilapurā ṇattār piramaṉai piramamāyc ceppip*
*palapurā ṇattāṉ vintuviṉ parattuvam pakarntīr*
*kulavu ceñcaṭai uruttiraṉ piramamāyk kūri*
*nalama tākiya pataṅkaṉak kiṉiyiṉai nāṭṭi.*

## What the Sages knew

In some Purāṇas you have spoken of Piramaṉ
As the Piramaṉ; in other Purāṇās
You hail Nārāyaṇaṉ as the Piramaṉ.
In yet others you refer to Piramaṉ
As Ruttra with russet tresses.
You have also hailed Cūrya and Akṉi.

(பரமபதம் தெளிய)

123. என்ற மாமொழி வாதரா யணப்பெய ரெம்மான்
நன்ற தாகிய வினாவினைக் கேட்டுளம் நயந்தங்
கொன்று கூறுவ னுண்மையா முலகிற்கு மொருவன்
சென்ற நற்பர மப்பதந் தெளிதலே திண்ணம்.

எ-து. இவ்விதமாய் முனிசிரேட்டர்கள் திருவாய் மலர்ந்தருளிய வார்த்தையினைக் கேட்டு வாதராயணராகிய வியாத முனிவரானவர் அவர்கள் கேட்ட நன்றினையுடைய மொழியினை ஆலோசித் தருளிச்செய்கின்றார் வாரீர் மகாரிஷிகளே! நிலமையாகிய இவ்வுலகத்தினைப் பாதுகாக்காநின்ற சாத்வீக சர்வமங்கள குணவந்தனன் யோக்கிய பாத்திரராகிய வாசுதேவனே பரத்துவப் பொருளாகிய ஆதிமூல மென்றார் வியாதமுனிவ ரென்றவாறு. (14)

நயத்தல் - விரும்புதல், மகிழ்தல

**உரை** - சாத்துவிகம் - அருட்குணம் சர்வமங்கள குணம் - எல்லா நற்குணங்கள். யோக்கிய பாத்திரம் - யோக்கியவான், தகுதிவாய்ந்தவன.

## Paramapatam teḷiya

*en̲r̲a māmoḻi vātarā yaṇappeya remmān̲*
*nan̲r̲a tākiya vin̲āvin̲aik kēṭṭuḷam nayantaṅ*
*kon̲r̲u kūr̲uva ṉuṇmaiyā mulakir̲ku moruvan̲*
*cen̲r̲a nar̲para mappatan teḷitalē tiṇṇam.*

## To know of the Transcendent

Listening to the thought-provoking words
Teacher Bādarāyaṇa cogitated and spoke:
'I have this to say: the one Supreme
Who guards the worlds is the Cause,
The transcendent, Vācutēva.'

(சவுனகர் வினவுதல்)

124. என்ற காலையி னிருடிய ரறைகுவா ரிறையோய்
நன்ற தாகிய வாரண வாசியில் நண்ணி
வென்றி யாமணிக் கரணிகைத் தலத்தினில் விளங்கி
நின்று கூறுவீ ராகிடில் நிச்சய மெமக்கே.

எ-து இவவணணம் வியாசமுனிவரானவர் திருவாய மலர்ந்தருளிய திருமொழியினைப் பரம சிலாககியமென்று ஒரு விண்ணப்பம் செயகின்றார் வாரீர் மகானுபாவரே! தேவரீர் அருளிச் செயதபடி யிந்தப் பூமண்டலத்தின் அதிசிரேஷ்டமாகிய வாரணவாசியென்று சொலலுகின்ற கஙகா தீர்த்தத்தில மணிக்கரணிகைத் தலத்திலே நின்று நிசசயமாக வொரு முதலவனையருளிச் செய்வீராகில். நின்மலமாகிய சிததத்தினை யடைவோமென்றனா சவுனகாதி மகாரிஷிக ளென்றவாறு (15)

இருடியா - முனிவர்கள வாரணவாசி - வாரணாசி, காசி மணிக்காணிகை - காசியிலுள்ள ஒரு தீாததம, தீாததககரையிலுளள தலம

## Cavun̲akar vin̲avutal

*en̲r̲a kālaiyi n̲iruṭiya rar̲aikuvā rir̲aiyōy*
*nan̲r̲a tākiya vāraṇa vāciyil naṇṇi*
*ven̲r̲i yāmaṇik karaṇikait talattin̲il viḷaṅki*
*nin̲r̲u kūr̲uvī rākiṭil niccaya memakkē.*

## Cavuṉakā's Query

When sage Vyāsa said so, Cavuṉaka
Applauded: 'My Lord! If you could
Reside in the Maṇikarṇika ghat
That is situated in great Vāraṇāci
And speak of the Supreme Piramaṉ,
We will be blessed.'

(வாரணவாசி யடைதல்)

125. வாத ராயணன் றனதிட மகன்றுவான் முனிவர்
போத வேதிரு வாரண வாசியிற் புகுந்து
நாத னார்மணிக் கரணிகைக் கரையினி னண்ணிச்
சீத ளக்கர முச்சியிற் சேர்த்திவை செப்பும்.

எ-து. அப்படி விண்ணப்பம் செய்கின்ற மகா முனிவர்கூட்டங்களெல்லாம் சூழ்ந்து வரத்தக்கதாக வேதவியாச மகாமுனிவரானவர் தமது வெதிரிகாசிரமமாகிய இலந்தையின் காட்டினை விட்டு நீங்கிப் பரிசுத்த பவித்திரமாகிய காசி கங்கையினைக் கண்ணுற்று, நாதனாகிய ஸ்ரீமன் நாராயணன் முற்காலத்தில் கயா சூரனுக்காகத் தமது திவ்விய திருவடி விளங்கிப் பிரகாசிக்கத் தக்கதாய் நேமித்த மணிக்கரணிகைத் தலத்திலேநின்று தமது கராம்புய மலரை யுச்சியிற் கூப்பியவாறா யொருநிச்சயமாகிய திருவாக்கருளிச் செய்கின்றா ரென்றவாறு. (16)

தனதிடமகன்று - தன் இருப்பிடத்தை விடடு நீங்கி. போத - உடன்வர நண்ணுதல் - அடைதல்

## Vāraṇavāci yaṭaital

*vāta rāyaṇaṉ ṟaṉatiṭa makaṉṟuvāṉ muṉivar*
*pōta vētiru vāraṇa vāciyiṟ pukuntu*
*nāta ṉārmaṇik karaṇikaik karaiyiṉi ṉaṇṇic*
*cīta ḷakkara mucciyiṟ cērttivai ceppum.*

## At Vāraṇāci

Bātarāyaṇa left his residence
Accompanied by the sages,
Entered auspicious Vāraṇāci,
Drew close to the Supreme's Maṇikarṇika,
Raised his cool hands to his head
In salutation and spoke as follows:

(நாரணன் செயல் கூறல்)

126. உலக மியாவையும் படைத்தளித் தழிப்பவ னொருவன்
அலகி லாப்புகழ் சேர்ந்திடு நாரண னாதிக்
குலவு நற்கரி கூவிடக் கராவினைக் கொன்றோன்
பலர்பு கழ்ந்திடு சமையகோ டிகளெல்லாம் படைப்போன்

எ-து வாரீர் மகாமுனிவர்களே! இந்த அகிலமான செகத்துக்குச் சுவாமியாயும் அனந்த கலியாணகுண விபூதி விக்கிரக விசேடராயும், அபப்பிராகிருதராயும், நித்திய வர்ணராயும், சகத்து சிருஷ்டியாதி ரூபமான விளையாட்டைப் பிரயோசனமாக உடைத்தானவராயும், கருமாயத்தமான சந்தமில்லாதவராயும், சர்வ வஸ்துவினும் உள்ளும் புறம்பும் வியாபித்தவராயும், சகல ஆத்துமகோடிகளையும் வகுத்து அவைகளை இரட்சித்தருளுபவராயும், அதன்பின்பு சர்வ சம்மாரஞ் செய்தருளுபவராயும் விளங்கும் பரப்பிரம்மமான ஸ்ரீமன் நாராயணன் ஒருவன் பரமல்லது வேறில்லை யென்னுகைக்கு அசக்கியமாகிய பெரும்புகழினை யடைந்த சாத்வீகப் பரத்துவத்தை ஆதிகாலத்திலே செந்தாமரை, வெண்டாமரை, செவ்வல், நீலோற்பலம் முதலாகிய புட்பசமூகங்களால் நிறைந்த தடாகத்தில் வாசஞ்செய்கின்ற முதலையினாலே பிடிக்கப்பட் டிரங்காநின்ற கசேந்திரனாகிய யானையானது ஆதிமூலமென்று கூப்பிட, அந்த முதலையைச் சக்கரத்தினாலே இருபிளவாகத் தடிந்து அந்தக் கசேந்திரனைப் பாதுகாத்தருளிய ஆதிமூலமானவர், இவ்வுலகத்தின் எச்சமயத்தாரும் புகழ்கின்ற சமய கோடிகளையெல்லாம் வகுப்பவனொருவனே இந்த உலகத்துக்குப் பரமாத்மாவாகிய முதல்வன் என்றருளிச் செய்தார் வியாதமுனிவ ரென்றவாறு. (17)

அலகிலா - அளவற்ற கரி - யானை, கசேந்திரன் கரா - முதலை.

உரை - அபப்பிராகிருதர் - அழிவில்லாதவர், உண்மை அறிவுள்ளவர். பிராகிருதர் - அழியத்தக்கோர், உண்மை அறிவு அற்றோர் நித்தியவர்ணர் - அழிவற்ற தன்மை உடையவர். சிருட்டியாதி - படைத்தல் முதலானவை; அவை படைத்தல, அளித்தல், அழித்தல் ஆகியவை. கருமாயத்தம் - கரும ஆயத்தம், செய்கை முயற்சி சந்தம் - விருப்பம். அசக்கியம் - அரியதானசெயல் ஆத்துமகோடி - உலக உயிர்கள் சம்மாரம் - அழிததல்

## Nāraṇaṉ ceyal kūṟal

*ulaka miyāvaiyum paṭaittaḷit taḻippava noruvaṉ*
*alaki lāppukaḻ cērntiṭu nāraṇa ṉātik*
*kulavu naṟkari kūviṭak karāviṉaik koṉṟōṉ*
*palarpu kaḻntiṭu camaiyakō ṭikaḷellām paṭaippōṉ.*

## On Nārāyaṇa

The Supreme creates all the worlds,
Guards them and destroys them.

He is Nārāyaṇa of shoreless fame.
When the elephant called out
He killed the crocodile; the Creator
Of all religions and praised by many.

(நாரணன் அவதாரங் கூறுதல்)

127. அரிய னந்தனே பராபர னமலஞா னத்தான்
தெரிகி லாததோ ரந்தரான் மாவெனத் திகழ்வோன்
பருகி யேயுல களித்திடும் பரமனே யாதித்
திருப்பெ ரும்புக ழிச்சையால் செனித்துவீற் றிருப்போன்.

எ-து. வேதங்களின் ஆதியந்தமாய்ப் பரத்துவமாய்ப் புகழ்கின்ற அரியென்றும், அனந்தனென்றும் அச்சுதனென்றும், பராபரமென்றும், அமலமாகிய ஞானமே திருவுருவமாகியவரென்றும், அனுமான அளவைகளாற் தெரிகின்ற அந்தரான்மாவென்றும், இவ்வுலக முதலாகியதை உண்டு உமிழ்ந்தவற்றைப் பாதுகாத்தவனென்றும், ஆதி மூலமென்றுந் தனதிச்சை விசேடத்தால் மச்ச, கூர்ம முதலாகிய திருவவதாரங்கள் செய்து வீற்றிருப்ப னென்றவாறு. (18)

அனந்தன் - அழிவில்லாதவன், திருமால். அந்தரான்மா - உயிருக்குள் உயிராயிருப்பவன். தெரிகிலாத - அளந்து அறிய முடியாத; அனுமான அளவையால் மட்டுமே அறியத்தக்க.

உரை - அச்சுதன் - திருமால், அழிவில்லாதவன். அனுமான அளவை - உரைத்தவற்றை அளவாகக் கொண்டு உரையாதவற்றை அறிதல். மச்சம் - மீன். வேதத்தைக் கொண்டு ஒளித்த சோமுகாசூரன் என்னும் அசுரனைக் கொல்ல எடுத்த அவதாரம் கூர்மம் - ஆமை; மந்தரமலையைத் தாங்குவதற்காக எடுத்த அவதாரம்

## Nāraṇaṉ avatāraṅ kūṟutal

*ariya ṉantaṉē parāpara ṉamalañā ṉattāṉ*
*teriki lātatō rantarāṉ māveṉat tikaḻvōṉ*
*paruki yēyula kaḷittiṭum paramaṉē yātit*
*tiruppe rumpuka ḻiccaiyāl ceṉittuvīṟ ṟiruppōṉ.*

## On Nārāyaṇa's Incarnation

'He is hailed as Hari, the Eternal,
The Transcendent, the image of purity,
The indwelling Universal
Who cannot be computed,

Devours the worlds and spews it back,
The Primal One who incarnates
To gather increasing fame.

**(காரணனே ஏக நாயகன் எனல்)**

128. **சகல மங்கல குணத்தினாற் சார்ந்ததத் துவத்தோன்**
**அகில லோகன் நியாமக னந்தரி யாமி**
**பகரு முந்தியிற் பிரமனை யளித்தருள் பதியோன்**
**நிகரி லாதபொன் னரங்கனே [1]பரமென நுவன்றான்.**

எ-து வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! அனந்த கல்யாண மங்கல குணவந்தனை யோக்கிய பாததிரராயும், சாத்வீக தத்துவ சொரூபராயும், அகில லோக நியாமகனாயும், அளவிடப்படாத [2]ஞான சுததமாதி சம்பூரணராயும் விளங்கி, சர்வ அணுவிலும் உள்ளும் புறமும் வியாபித்தருளிய, செந்தாமரைக் கமலம் போன்ற உந்திக் கமலத்திலே சதுர் முகனைப்படைத்த, சர்வ தேவசிகாமணியாகிய ஒப்பற்ற பொன்னரங்கனே பரப்பிரம்மமாகிய உலகத்துக்கெல்லாம் ஏக நாயகனென்று பிரசித்தமாயருளிச் செய்தார் வியாச முனிவரென்று சூதமகாரிஷியானவர் சவுனகாதி மகாரிஷிகளுக் கருளிச்செய்தா ரென்றவாறு. (19)

நியாமகன - ஆணையிடுவோன், செலுததுபவன் அந்தரியாமி - ஆன்மாக்களோடு கலந்தவன்.

பா.வே. - 1 பரமமென் றவன்றான 2 ஞானசக்தி சம்பூர்ணராயும்.

## Kāraṇaṉē ēka nāyakaṉ eṉal

*cakala maṅkala kuṇattiṉāṟ cārntatat tuvattōṉ*
*akila lōkaṉ niyāmaka ṉantari yāmi*
*pakaru muntiyiṟ piramaṉai yaḷittaruḷ patiyōṉ*
*nikari lātapoṉ ṉaraṅkaṉē parameṉa nuvaṉṟāṉ.*

## The Cause is the Supreme

He is the very image conceived
Of all auspicious qualities,
The Lord of the world, the Ruler,
The Indweller, the One whose navel
Gifts Piramaṉ, the unequalled
Golden Araṅkaṉ. He is the Supreme.'

### (நாரணனே பரத்துவம்)

129. இரண்ட தாமறை யாதியாம் பருச்சமைந் திடத்துத்
திரம தாமனு வாகத்தின் வியாதனார் செப்பும்
பரம நாரதீ யப்பெயர் பாகவ தப்பேர்
விரவும் விண்டுநற் புராணத்தும் பரத்துவம் விளக்கும்.

எ-து. வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! இரண்டாம் வேதமாகிய யசுர் வேதத்திலே [1]முதல் பரிச்சேதத்தினும், ஐந்தாம் பரிச்சேதத்தினும், நித்தியமாகப் பிரசித்தமாய் விளங்குகின்ற வாகமங்களினும், வியாசர் திருவாய் மலர்ந்தருளிய நாரதீய புராணம், ஸ்ரீ பாகவதம், விஷ்ணுபுராணம், காருட புராணம் முதலாகிய புராணங்களினும் இருடியாகளால் அருளிச் செய்கின்ற சங்கிதைகள், மிருதிகள் முதலாகிய சகல சாஸ்திரங்களினும் அதி சிரேஷ்டராகிய ஸ்ரீமன் நாராயணனே பரத்துவமல்லது வேறுண்டோ வென்றருளிச் செய்தார் சூதபுராணிக ரென்றவாறு. (20)

இரண்டதாம்மறை - இரண்டாவது வேதமாகிய யசுர்வேதம். பருச்சம் - பரிச்சேதம் - பிரிவு, நூலின் பிரிவு. மனுவாகமம் - மனுமுறை நூல். நாரதீயப் பெயர் - பதினெண்புராணங்களுள் ஒன்று நாரதீயப்புராணம். பாகவதப்பெயர் - பாகவதப்புராணம். விண்டுபுராணம் - விஷ்ணுபுராணம், காருடபுராணம் ஆகிய இரண்டும்; இவை விஷ்ணுவைப் பற்றிக் கூறுவன பரத்துவம் - கடவுள்தன்மை சங்கிதை - சரித்திரம் மிருதி - ஸ்மிருதி - அறநூல்.

பா.வே. - 1 முதற் பரிச்சத்தினு மைந்தாம் பரிச்சத்தினும்.

### Nāraṇaṉē parattuvam

*iraṇṭa tāmaṟai yātiyām paruccamain tiṭattut*
*tirama tāmaṉu vākattiṉ viyātaṉār ceppum*
*parama nāratī yappeyar pākava tappēr*
*viravum viṇṭunaṟ purāṇattum parattuvam viḷakkum.*

### Nārāyaṇaṉ is the Transcendent

The first and fifth sections
Of the Yajur Vēda which comes second,
Manu's works and the Purāṇas
Indited by Vyāsa as Nāratiya
And Pākavata, explain
The transcendent nature of Nārāyaṇaṉ.

(துளபம் முதலிய அணிகள்)

130. துளப மாலிகை புனைந்தவ னூர்த்துவந் துலங்க
வளவி லாப்பத மளித்திடும் ரஞ்சன மணிந்து
களபக் கொங்கையர் மயலினை நீங்கிகா தலினால்
வளம தாங்கிய மலரடி யடைந்தினி மகிழ்வீர்.

எ-து துளப மாலிகையினை மனோரஞ்சிதமாய் அணியப்பட்டவன். ஊர்த்துவ புண்டரம் விளங்குகின்ற அவையவத்தினது பிரகாசத்தினையுடைய அளவைகளால் அளக்கப்படாத சங்கு சக்கர வாஞ்சனத்தை இரண்டு திவ்விய திருப்புயங்களில் தாங்கி, களப குங்கும கந்தப் பொடிகளை யணிகின்ற கொங்கைகளையுடைய கன்னியரது மையலினை நீங்கி, அவரது பரிபூரண கடாக்ஷத்தினை விரும்பிய அடியவர்களெல்லாம் பரமபதத்தின்கண் வீற்றிருக்காநின்ற பரவாசுதேவனது மலரடி நிழலின் கண்ணே பிறவி வெப்பந் தீர்ந்து நித்திய சூரியர்களாய்ப் பரமானந்த அமுதத்தைப் பருகி வீற்றிருப்பார்க ளென்றவாறு (21)

துளபமாலினை - துளசிமாலை ஊர்த்துவம - ஊர்த்துவபுண்டரம, மேல்நோக்கியிடும் திருமண். ரஞ்சனம் - செஞ்சந்தனம். களபம - கலவைச்சாந்து

## Tuḷapam mutaliya aṇikaḷ

*tuḷapa mālikai puṉaintava ṉūrttuvan tulaṅka*
*vaḷavi lāppata maḷittiṭum rañcaṉa maṇintu*
*kaḷapak koṅkaiyar mayaliṉai nīṅkikā taliṉāl*
*vaḷama tāṅkiya malaraṭi yaṭaintiṉi makiḻvīr.*

## Tuḷaci and other Decorations

He wears a garland of *Tuḷaci.*
His forehead is adorned
By the vertical mark; he is smeared
With red sandal paste that spreads joy.
Gain happiness by drawing close to his feet
That are cool, giving up the desire
For womenfolk with sandal-smeared breasts.

(நாரணனால் பேறுபெற்றோர்)

131. நித்தியமாய்த் திருவாரா தனஞ்செய் சேட
நிகழ்கமலப் பொன்னடியி னிகழுந் தீர்த்தம்
பத்திகமழ் திருமாலைத் துளப ஞானப்
பரிவட்டம் பரமனணி களபச் சாந்தம்
வெத்திபுனை யரனயன்மா தவர்விண் ணோர்கள்
விரும்பிமிகப் பெரும்புகழை யடைந்தா ரென்று
சத்தியமாய் வியாசமுனி யுரைத்தார் கங்கை
தழைத்தமணிக் கரணிகையாந் தலத்தி னென்றார்.

எ-து. வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! அந்த அனந்த கல்யாண குண விபூதி விக்கிரக விசேடராகிய ஸ்ரீ அரங்கநாயகரது நித்தியமாகிய திருவாராதனஞ் செய்கின்ற பிரசாதங்களும், பிரகாசித்து விளங்குகின்ற கமலம் போன்ற திவ்விய ஸ்ரீ பாத தீர்த்தங்களும், திருமுடி முதலாகிய திருமேனியில் அணிகின்ற பத்திமாலையாகிய துளபமாலையும், ஞான விநோதமாகிய பரிவட்டமும், அவரணிகின்ற களப, கதம்ப, கஸ்தூரி, சாந்து, சந்தனாதிகளாகிய பரிமளத் திரவியங்களும் ஆகியவற்றைச் சிவன், பிரமா, தேவர்கூட்டங்கள், முனிவர்கூட்டங்களுண்டும் அணிந்தும் சர்வ காலங்களிலும் அவரிட சரணார விந்தங்களைத் துதிசெய்து மிகுந்த இன்பத்தினை அடைந்தவர்களாய் அகன்ற பெரும்புகழினைப் பெற்றார்கள். அந்தப் பிரபல ஞான சாத்வீக சர்வக்கியராகிய ஸ்ரீமன் நாராயணனே பரத்துவியென்று ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டராகிய வேதவியாச மகாரிஷியானவர் காசி கங்கையாகிய மணிக்கரணிகைத் தலத்தினின்று சமஸ்தமான முனிவர் கூட்டங்களுக்கெல்லாம் சந்தேக நிவர்த்தி செய்யும் பொருட்டாய், நிச்சயமாக அருளிச் செய்தாரென்று சவுனகாதி மகாரிஷிகளுக்குச் சூதபுராணிக ருரைத்தருளினா ரென்றவாறு. (22)

ஆராதனம் - பூசை சேடம் - நிவேதித்தபொருள், பிரசாதம். வெத்தி - வெற்றி. எதுகைநோக்கி வந்தசொல். ஞானப்பரிவட்டம் - இறைவனுக்கு அணியும் உடை

**உரை** - சர்வக்கியர் - சருவஞ்ஞன், இறைவன்.

## Nāraṇaṉāl pēṟupeṟṟōr

*nittiyamāyt tiruvārā taṉañcey cēṭa*
*nikaḻkamalap poṉṉaṭiyi ṉikaḻun tīrttam*
*pattikamaḻ tirumālait tuḷapa ñāṉap*
*parivaṭṭam paramaṉaṇi kaḷapac cāntam*

*vettipuṉai yaraṉayaṉmā tavarviṉ ṇōrkaḷ*
*virumpimikap perumpukaḷai yaṭaintā reṉṟu*
*cattiyamāy viyācamuṉi yuraittār kaṅkai*
*taḷaittamaṇik karaṇikaiyāṉ talatti ṉeṉṟār.*

### The Realised Ones

The victorious Civaṉ, Piramaṉ, sages and immortals
Attained great fame when they
Accepted with joy the food offerings to Araṅkaṉ,
The water that had washed his feet,
The well-strung *Tuḷaci* garland, the headscarf,
And the sandal-paste smeared on his image.
Cūtar told Cavuṉakā and others
That this was truthfully spoken by Vyāsa.

**(மணிகர்ணிகையில் நாரணன் திருவடிகள்)**

132. அரும்புகழோ தியமுனிவ னடிபணிந்தங்
கறைந்திடுவா ரமல னாதிப்
பெரும்புகழோ தியவுமது பெருமைதனை
யாவரிங்குப் புகல வல்லார்
அரும்புகழோ திடவரங்கன் கங்கைமணிக்
கரணிகையின் வதிந்த பாதந்
தரும்புகழோ திடவேண்டு மெனவிளம்ப
மாமுனிவன் சாற்ற லுற்றான்.

எ-து வேத வேதாந்தஙகளில் கூறுகின்ற அரும்புகழாகிய பரம மூர்த்தியினது திவ்விய குணானுபவங்களை யருளிச் செய்கின்ற சூதமகாரிஷியைச் சவுனகாதி மகாரிஷிகள் வந்தனஞ் செய்து ஒரு விண்ணப்பஞ் செய்கின்றார் வாரீர் மகானுபாவரே! அமலனாகிய ஆதி பரமபுருஷோத்தமனது திவ்விய திருவவதார லீலா விபூதிகளைக் கேள்வி செயது ஆனந்தப் பரவசத்தினை யடைந்தோமாகிலும், தேவரீரிட பெருமையைக் கண்டு கேட்கத்தக்கபேர்க ளிந்தத் திரிலோகங்களினும் உண்டோ? அந்தக் கிருபாநிதியாகிய ஸ்ரீமன் நாராயணனிட செந்தாமரைக் கமலம்போன்ற திவ்விய திருவடிகளானவை இந்தக் கங்கை மணிகரணிகையில் உதிக்கின்ற பெருமபுகழினைத் தேவரீர் அருளிச் செய்ய வேண்டுமென்று விண்ணப்பம் செய்ய, கிருபை கூர்ந்தவரா யருளிசசெய்கின்றார் சூதபுராணிக ரென்றவாறு (23)

அமலன் - தூய்மையானவன், இறைவன். வதிந்த - தங்கிய. பாதம் - திருவடி.

**உரை** - வேத வேதாந்தம் - வேதம், வேதமுடிவுகள். உபநிஷத்து எனப்படும் குணானுபவங்கள் - குணம் + அனுபவங்கள். லீலா விபூதிகள் - லீலை + விபூதி. லீலை - திருவிளையாட்டு; விபூதி செல்வம், பெருமை

**மூர்த்தி விசேடம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

## Maṇikarṇikaiyil nāraṇaṉ tiruvaṭikaḷ

*arumpukaḻō tiyamuṉiva ṉaṭipaṇintaṅ*
*kaṟaintiṭuvā ramala ṉātip*
*perumpukaḻō tiyavumatu perumaitaṉai*
*yāvariṅkup pukala vallār*
*arumpukaḻō tiṭavaraṅkaṉ kaṅkaimaṇik*
*karaṇikaiyiṉ vatinta pātan*
*tarumpukaḻō tiṭavēṇṭu meṉaviḷampa*
*māmuṉivaṉ cāṟṟa luṟṟāṉ.*

## Nārāyaṇā's Feet in Maṇikarṇika

Saluting the feet of the far - famed sage
Cūtar who was speaking of the greatness
Of the Pure One, the Primal Cause,
The sages said: Who can speak here
Of your greatness? Do explain in detail
The glory of Araṅkaṉ's feet
That glow in *Maṇikarṇika*.'
The great sage proceeded to speak.

## 8. நான்காவது
## கயை தோற்றமுரைத்த அத்தியாயம்

அகததியரிடம் மந்திர உபதேசம் பெற்றவன் கயன் என்னும் அசுரன். அவன் கங்கையாற்றங் கரையிலிருந்து அருந்தவம் செய்தான். அவன்முன் சிவபெருமான் தோன்றி அவனது வேண்டுகோளைக் கேட்டார். அவன் நான் மிகஉயர்ந்த வடிவினைப் பெறவேணடும், அவ்வடிவில் நின்று இவ் உலகை நோக்கும்போது எனது பார்வைக்குக் காணப்படும் அனைத்து உயிர்களுக்கும் தலைவனாய் விளங்கவேண்டும்; பொன்னுலகில் சுவர்க்கபோகங்களை அனுபவிக்கவேண்டும் என்று வரம் கேட்டான். அவ்வாறே அருள் புரிந்தார் சிவபெருமான் அதன்படி இந்த விந்திய மலையினைப்போல உயர்ந்து எல்லாத் திக்குகளையும் நோக்கினான். அப் பார்வைக்குட்பட்ட உயிர்கள் அனைத்தும் தேவர்வடிவில் பொன்னுலகிற்குச் செல்லத் தொடங்கின. இதைக்கண்ட தேவர்கள் வியந்து கயிலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட்டார்கள். திருமாலின் உதவியால்தான் உங்கள் துன்பம் நீங்கும் என்று கூறிய சிவபெருமான், அனைத்துத் தேவர்களுடன் திருப்பாற் கடலை அடைந்தார். அவர்கள் முறையீட்டினைக் கேட்ட நாராயணன், நீங்கள் பொதிய மலையில் உள்ள அகததியரிடம் சென்று, அவரை அழைத்துக்கொண்டு அசுரனிடம் செல்லுங்கள். அவன்தன் குருவாகிய அகத்தியர் அடிகளிலே விழுந்து பணிவான். அப்போது நீங்கள் அனைவரும் அவன் முதுகில் ஏறிநின்று பூமியோடு அழுந்திவிடச் செய்யுங்கள் என்று கூறி அனுப்பினார். திருமாலின் கட்டளைப்படியே அகத்தியரை அழைத்துச் சென்றபோது அவ அசுரனும் அவர் கூறியவாறே அகத்தியர் திருவடிகளில் விழுந்து வணங்கினான். அவனது வலதுபுயத்தில் சிவபெருமானும் இடது புயத்தில் பிரமதேவனும், வலது இடது கரங்களில் முறையே விநாயகனும் முருகனும், அவனது முதுகில் முனிவர்களும் தேவர்களுமாக ஏறி நினறு அசுரனைப் பாதாளத்தில் அழுந்தச் செய்தார்கள். மிகுந்த துன்பத்தையடைந்த கயன், நமக்கு வரங்கொடுத்த சிவபெருமானே இவ் வஞ்சகச்செயலைச் செயதார் என்பதை யூகித்து அறிந்தான். உடனே திருமாலைத் தியானித்து யோக நிலையில் நினறான. அந்த யோகத்தின் பயனாக மீண்டும் முன் போலவே வளர்ந்து நின்றான். தேவர்கள் திகைத்தார்கள். நாராயண மூர்த்தியானவர் அனைவரும் போற்றுமாறு அசுரன் முன் தோன்றி, அவனது தலையில் தன் திருவடிகளை வைத்துத் திருத்தினார். அசுரனுடைய பாவ வினைகளெல்லாம் நீங்கின. அவன் பாதாளத்தில் அழுந்தினான். அத்துன்பத்தைப் பொருட்படுத்தாமல் தான் பெற்ற பேற்றினை எண்ணி மகிழ்ந்தவனாய்த் திருமாலிடம் தன் செயலைக் குறித்து முறையிட்டான்.

திருமால் அசுரனை நோக்கி, இந்தக் கங்கையாற்றைக் காட்டிலும் மிக உயர்ந்த, பஞ்சக்குரோசம் என்னுமிடத்திலுள்ள புண்ணிய தீர்த்தமானது உன் பெயரால் கயா என்று வழங்கும். அத்தீர்த்தத்தின் அருகில் உள்ள வடவால மரத்தின் அடியில், உனது தலையில் வைத்த நமது திருவடிகள் காணப்படும். மக்கள் தங்கள் பிதுர்களைக்குறித்து அங்கே

பிண்டமிட்டுப் பேறு பெறுவார்கள் என்று வரங்கொடுத்தருளினார். நமது திருவடிகளில் பிண்டம் விழாதபோது முன்போல பெரிய உருவத்தை அடைவாய் என்றும் கூறியருளினார். மீண்டும் அவ் அசுரனால் துன்பம் ஏற்படும் என்று எண்ணிய தேவர்கள் முறையிட்டார்கள். திருமால் எப்போதும் இங்கு பிண்டம் விழாமலிராது. இருக்குமாயின் அமரர்களாகிய நீங்களே பிண்டமிட்டுப் பரமபதத்தை அடையுங்கள் என்று கூறித் திருப்பாற்கடலை யடைந்தார். தேவர் அனைவரும் திருமாலே பரப்பிரமமென்று உணர்ந்து மகிழ்ந்தார்கள். இதற்குமேல் நான் என்ன கூறவேண்டும் என்று கூறியருளினார் வேதவியாசர் என்று சூதமுனிவர் கூறினார்.

இந்தக் கோலாசலத்திலே வந்து தவம்செய்து அரங்கநாயகருடைய கருணையைப் பெற்ற இந்திரனானவன் காலநேமியை வென்று அவனால் இழந்து வந்த செல்வங்களையெல்லாம் மீண்டும் அடைந்தான் என்று கூறினார் சூதமுனிவர்.

கேட்ட முனிவர்கள் மகிழ்ச்சியடைந்து, கால நேமியால் இந்திரன் தன்வளப்பங்களை இழக்கவும், இந்தக் கோலாசலத்திலே வந்து தவம் செய்யவும் காரணம் என்னவென்று கேட்டார்கள்.

**(கயன் தவஞ் செய்தல்)**

133. **முன்னமொரு காலசுரன் அகத்தியனாங்**
**குருவுரைத்த மொழியி னாலே**
**தன்னிகரிற் கங்கைதனிற் தாழ்வில்லாத்**
**தவமியற்றச் சடையோன் றானு**
**மென்னவரம் வேண்டியிந்த வடவாலின்**
**அடிதவத்துக் கிசைந்தா யென்னப்**
**பொன்னினடி பணிந்துமிகப் புகழ்ந்தவரை**
**மிகவருந்திப் புகலு கின்றான்.**

எ-து. ஆதிகாலத்தில் கயனென்கின்ற அசுரனானவன் அகத்தியராகிய குருவினாலே மந்திர உபதேசங்கள் பெறப்பெற்றவனா யிந்தப் பூமண்டலத்தின் அதி சிலாக்கியமாகிய கங்கா நதிக்கரையில் அரிதாகிய தவத்தினைச் செய்ய, அவன் தவத்துக்கு இரங்கிப் பரமசிவன் பிரத்தியட்சமாய் உனக்கு என்ன வரத்தினை வேண்டியிந்த வடவாலினடியில் அரிதாகிய தவஞ்செய்கின்றா யென்றயருளிச் செய்ய, அவரது பொன்னந் தாமரைபோன்ற சரணார விந்தத்தில் பணிந்து ஆனந்தப் பரவசனாய் அவரது வேதவேதாந்தங்களிலே புகழ்ந்துருகினவனா யொருவிண்ணப்பஞ் செய்கின்றா னென்றவாறு (1)

ஒருகால் - ஒருசமயம். சடையோன் - சடாமுடியையுடைய பரமசிவன்.

**உரை** - பிரத்தியட்சமாய் - நேரில் காணத்தக்கதாய்த் தோன்றி. வடவால் - வட + ஆல்; வடவாலமரம்.

### Kayan̲ tavañ ceytal

*mun̲n̲amoru kālacuran̲ akattiyan̲āṅ*
*kuruvuraitta mol̲iyi n̲ālē*
*tan̲n̲ikarir̲ kaṅkaitan̲ir̲ tāl̲villāt*
*tavamiyar̲r̲ac caṭaiyōn̲ r̲ān̲u*
*men̲n̲avaram vēṇṭiyinta vaṭavālin̲*
*aṭitavattuk kicaintā yen̲n̲ap*
*pon̲n̲in̲aṭi paṇintumikap pukal̲ntavarai*
*mikavaruntip pukalu kin̲r̲ān̲.*

### VIII. On Kaya

### Kaya's Austerities

In days of yore, the *Acuran̲* Kaya,
Having heard the words of his teacher
The sage *Akastiya*, decided
To perform tremendous austerities
On the banks of the Kaṅka river.
Civan̲ appeared to him and asked:
'Why are you performing austerities
Beneath the banyan tree?'
Kaya saluted his golden feet
Praised him and submitted.

(கயன் வரம் வேண்டுதல்)

134. ஆண்டருளும் அரும்பொருளே அமரர்தொழுந்
திருவடியை யடைந்தே னின்று
நீண்டவுரு வெடுத்தெனது நோக்கத்தாற்
பார்த்ததிசை நின்ற நீதி
மாண்பிலகு வுயிர்களெல்லாம் விமானசே
கரராகி மன்னி வாழ்ந்து
சேண்டயங்கு பொன்னுலகின் அரம்பையர்போ
கந்துய்க்கச் சேர வேண்டும்.

எ-து. வாரீர் மகானுபாவரே! அடியேனை ஒரு பொருளாக மதித்து இங்கெழுந்தருள என்ன பாக்கியஞ் செய்தேனாகிலுந் தேவர்கள், மகாரிஷிகள் வணங்கத்தக்கதாகிய திவ்விய திருவடிகளைக் கண்ட எனக்கு மற்றொரு பிரயோசனங்களும் வேண்டுமோ? ஆகிலும் அடியேன் மிகுந்த உன்னதமாகிய நீண்ட உருவத்தினைக் கொண்டிந்த கங்கா நதிக்கரையில் நின்றுயர்ந்த உருவத்தினாலிந்த பூமண்டலங்களை அடியேன் பார்க்க, எனது திருவடிக்குள்ளாகக் காணப்பட்ட ஆத்தும கோடிகளுக்கெல்லாம் விமான சேகரராய்ப் பொன்னுலகத்தினையடைந்து, அரம்பை முதலாகிய ஸ்ரீகளுஞ் செய்ய சொர்க்காதி போகங்களை அனுபவிக்கத் தக்கதாய் வரந்தர வேண்டுமென்றான் கயனென்கின்ற அசுர னென்றவாறு. (2)

நீண்ட உரு - மிக உயர்ந்த வடிவம். திருமால் தோன்றிய திரிவிக்கிரமத்தோற்றம்போல உயர்ந்த வடிவம். விமான சேகரர் - தேவர் கூட்டத்தார். சேண்டயங்கு - சேண் + தயங்கு - தேவருலகில் விளங்குகின்ற.

**உரை** - திருஷ்டி - பார்வை.

## Kayaṉ varam vēṇṭutal

*āṇṭaruḷum arumporuḷē amarartoḻun*
*tiruvaṭiyai yaṭaintē niṉṟu*
*nīṇṭavuru veṭutteṉatu nōkkattāṟ*
*pārttaticai niṉṟa nīti*
*māṇpilaku vuyirkaḷellām vimāṉacē*
*kararāki maṉṉi vāḻntu*
*cēṇṭayaṅku poṉṉulakiṉ arampaiyarpō*
*kantuykkac cēra vēṇṭum.*

## Kayaṉ Asks for a Boon

Guardian Lord! Today I have gained
The feet worshipped by gods.
May I be gifted with an immense form
So that I can see all directions,
Be the crown of all living beings
And then all of us become immortal,
To reach the heavens above
And gain the community of divine damsels.

(வரம் பெற்ற கயன்)

135. இந்தவரந் தந்தருள்வீ ரெனவேண்டி
யடிபணிந்தா னிமையோர் காணக்
கந்தமலர்ச் சடையானுங் கருணையுடன்
தந்தருளிக் கயிலைக் கேக
விந்தைகிரி யெனவளர்ந்தான் பார்த்ததிசை
சராசரங்கள் விமான மீதிற்
பந்தியதாய்ப் பொன்னுலகில் படர்ந்தனர்கள்
பரமனிடைத் தேவர் புக்கார்.

எ-து. இவ்விதமாகிய வரத்தினை அடியேன் பொருட்டா லருளிச் செய்ய வேணடுமென்று அவரது உபய சரணார விந்தங்களில் அனந்தமான தெண்டன் சமர்ப்பிக்கச் சகல தேவாதிகளுங் காணத்தக்கதாய், அந்தத் திவ்விய பரிமளங் கமழ்கின்ற கொன்றை மாலையினைத் தரித்த சடையை யுடையவனாகிய சங்கரனானவர் அவ்வசுரன் தவத்துக்கிரங்கி, உன் மனதின்படி யாகக் கடவதென் றருள்புரிந்து கயிலாயத்துக் கெழுந்தருளினார். அதன் பின்பு அந்த அசுரனானவன் இந்த விந்தியகிரியினைப்போல வளர்ந்து ஆகாயமளவா யுயர்ந்து திக்குகளைப் பார்க்கும்போது அந்தத் திக்குக்குள்ளாகிய வாத்தும கோடிகளெல்லாம் மிகுந்த தேவ ரூபங்களைக் கொண்டு, விமான சேகரராய்ப் பந்தி பந்தியாகப் பொன்னுலகத்துக்குப் போகத் தொடங்கினார்கள். அதைக் கண்ட தேவர்கூட்டங்களெல்லாம் இதென்ன ஊழிக்காலமென்று அவர்கள் யாவரும் கயிலாயத்தை நோக்கி நடந்தார்கள் எனறவாறு (3)

கந்த மலர்ச்சடையான் - கந்தம் - மணம்; கொன்றை மலரை யணிந்தவனும், சடாமுடியையுடையவனுமாகிய சிவபெருமான் விநதைகிரி - விந்தியமலை சராசரம் - சரம் + அசரம்; சரம் - அசையும்பொருள்; அசரம் - அசையாப்பொருள்.

## Varam peṟṟa kayaṉ

*intavaran tantaruḷvī reṉavēṇṭi*
*yaṭipaṇintā ṉimaiyōr kāṇak*
*kantamalarc caṭaiyāṉuṅ karuṇaiyuṭaṉ*
*tantaruḷik kayilaik kēka*
*vintaikiri yeṉavaḷarntāṉ pārttaticai*
*carācaraṅkaḷ vimāṉa mītiṟ*
*pantiyatāyp poṉṉulakil paṭarntaṉarkaḷ*
*paramaṉiṭait tēvar pukkār.*

## Kayan̲ Gains the Boon

Kaya asked for this boon
And saluted Civan̲'s feet; as gods looked on
The Lord with flower-decked tresses
Granted the boon with compassion
And returned to Kailâs. The *Acura*
Now waxed like the Vintiya Mountain.
The living beings everywhere
Became godly beings and proceeded
To occupy the heavens.
The gods rushed to Civan̲.

(தேவர்கள் பாற்கடலுக்குவருதல்)

136. முறைமூன்றாம் பிறையணிந்தோன் திருவடியில்
அமரர்முடி தாழ்ந்து நின்றார்
குறையுளதோ வரசவென வரன்கூற
அமராவதி கூறு கின்றான்
இறைமொழியா லுரைத்திடுவா னசுரனுந்தன்
திருவாக்கா னிறைந்து நீண்ட
கறைதவிர்ஞா லத்துயிர்கள் வன்கண்ணாற்
றேவரெனக் கலந்து நின்றார்.

எ-து அப்படிப் பணிந்த இந்திரன் முதலாகிய தேவர்களை நோக்கிக கயிலாய பதியானவர் அருளிச் செய்கின்றார்' என்றும் நித்தியனாகிய அசகுதனாலே உஙகள இடரானது நீங்க வேண்டுமாகையால், யாம் அங்கெழுந்தருளுகின்றோ மென்று அவரது ரிஷபவாகனத்தில் எழுந்தருள, சுப்பிரமணியர், விநாயகர், இந்திரன முதலாகிய தேவர்களிருபுறமும் சூழ்ந்து வரத்தக்கதாய்ச் சத்திய லோகத்துக கெழுந்தருள, அவர் அன்னவாகனத்தி னாரோகணிதராய்ச சமுத்திரக் கோஷ்டம்போலவொருநிமிட மாத்திரததில் திருப்பாற்கடலினை வந்து சூழ்ந்தார்க ளென்றவாறு (4)

அரன் - சிவபெருமான் அமராவதி - அமராபதி - தேவேந்திரன் அசுரன் - கயன

உரை : பொருததமிலலை

## Tēvarkaḷ pāṟkaṭalukku varutal

*muṟaimūṉṟām piṟaiyaṉintōṉ tiruvaṭiyil*
*amararmuṭi tāḻntu niṉṟār*
*kuṟaiyuḷatō váracaveṉa varaṉkūṟa*
*amarāvati kūṟu kiṉṟāṉ*
*iṟaimoḻiyā luraittiṭuvā ṉacuraṉuntaṉ*
*tiruvākkā ṉiṟaintu niṉta*
*kaṟaitaviṟñā lattuyirkaḷ vaṉkaṇṇāṟ*
*ṟēvareṉak kalantu niṉṟār.*

## The Gods Come to the Milky Sea

The gods saluted the feet
Of Civaṉ who wears the crescent moon.
He asked them of their problem
Intiraṉ spoke in terms of godliness:
'The Acura helped by your gift
Has waxed and all lives on earth
Now seek immortality.

(சுயனால் ஏற்பட்ட அச்சத்தைக் கூறுதல்)

137. இந்திரனே முதலானோர் சூழ்ந்துவரப்
பாற்கடலி னெய்தி யங்ஙன்
சந்திரசே கரன்முதலோர் முறையிடலும்
நாரணனார் சயனம் நீங்கி
வந்தவரா லாறுரைப்பீ ரெனவினவச்
சிவனெனது வரத்தி னாலே
விந்தமென வசுரர்பிரா னுயிரையெலாம்
விண்ணினிடை விளங்கச் செய்தான்.

எ-து. இந்திரன் முதலாகிய தேவர்களுடனே திருப்பாற் கடலினைச் சேர்ந்த சந்திரசேகரன் முதலாகிய தேவர்கள் முறையிட ஸ்ரீமன் நாராயணரானவர் தமதனந்த சயனத்தை நீங்கினவராய் அருளிச்செய்கிறார். வாரீர் தேவர்களே! நீங்கள் வந்த காரணத்தைக் கூறக்கடவீ ரென்று அனுக்கிரகஞ் செய்ய, சிவனானவர் விண்ணப்பஞ் செய்கின்றார் வாரீர் மகானுபாவரே!

அடியேன் கொடுத்த வரபாலனத்தினாலே, அசுரனானவன் ஆத்தும கோடிகளையெல்லாம் திவ்விய தேகத்துடனே சொர்க்காதி போகத்துக் கனுப்புவிக்கத்தக்கதாய்க் கண்டு வந்தோம். தேவரீர் தேவர்களை இரட்சிக்க வேண்டுமென்றார் கயிலாயபதி யென்றவாறு. (5)

சந்திரசேகரன் - சந்திரனைத் தரித்தவன், சிவபெருமான்; சேகரம் - சிரம், தலை. சயனம் - அனந்தசயனம்; ஆதிசேடனாகிய படுக்கை. அனுக்கிரகம் - அருள். வரபாலனம் - வரத்தின் பயன்; பாதுகாப்பு

## Kayaṉāl ēṟpaṭṭa accattaik kūṟutal

*intiraṉē mutalāṉōr cūḻntuvarap*
*pāṟkaṭali ṉeyti yaṅṅaṉ*
*cantiracē karaṉmutalōr muṟaiyiṭalum*
*nāraṇaṉār cayaṉam nīṅki*
*vantavara lāṟuraippī reṉaviṉavac*
*civaṉeṉatu varatti ṉālē*
*vintameṉa vacurarpirā ṉuyiraiyelām*
*viṇṇiṉiṭai viḷaṅkac ceytāṉ.*

## Kayaṉ Unleashes Terror

Coming to the milky sea
Along with Intiraṉ and other gods,
Civaṉ and the rest, the complaint was made.
Nārāyaṇaṉ rose from his sleep
And asked them the reason for their visit.
Civaṉ said: 'Due to my boon
The Lord of *Acuras* has made all lives
Shine as gods in heaven.

(அகத்தியருடன் செல்லுமாறு கூறுதல்)

138. எனவுரைக்கத் தாமரைக்கண் ணெம்மானு
முரைத்திடுவா னெபதி நீவிர்
கனகவரைப் பொதியத்தி னகத்தியனை
யடைந்திவைகள் கழறு வீரேல்

**மனமகிழ்ந்தங் கெழுந்தருள்வர் அதனைக்கண்**
**டப்பொழுதவ் வசுரன் வந்து**
**பனவனது கழல்தொழுவ னக்காலை**
**யவன்முதுகிற் படர்தி ரென்றான்.**

எ-து அப்படி விண்ணப்பம் செய்கின்ற தேவர்களை நோக்கிச் செந்தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீமன் நாராயணன் அருளிச் செய்கின்றார். வாரீர் தேவர்களே! நீங்கள் கனக வரையாகிய பொதியத்தில் வாசஞ் செய்கின்ற அகத்தியனை அழைத்துக்கொண்டு அந்த அசுரனிடத்துப் போவீர்களாகில், அந்த அசுரனானவன் தனது குருவாகிய அகத்தியர் வருவது கண்டு அவர் திருவடிகளிலே பணிந்து துதிக்கின்ற சமயத்தில், அவன் முதுகினிடை நீங்கள் யாவரும் எழுந்து அவனைப் பூமியுடனே அழுத்திவிடக் கடவீரென்றருளிச் செய்தா ரென்றவாறு (6)

கனகவரை - பொன்மலை, பொனமயமான பொதியமலை பொதியமலை - மலையமலை எனனும் தெனமலை. பனவன் - அந்தணன், ஆசாரியன்

## Akattiyaruṭaṉ cellumāṟu kūṟutal

*eṉavuraikkat tāmaraikkaṇ ṇemmāṉu*
*muraittiṭuvā ṉepati nīvir*
*kaṉakavaraip potiyatti ṉakattiyaṉai*
*yaṭaintivaikaḷ kaḻaṟu vīrēl*
*maṉamakiḻntaṅ keḻuntaruḷvar ataṉaikkaṇ*
*ṭappoḻutav vacuraṉ vantu*
*paṉavaṉatu kaḻaltoḻuva ṉakkālai*
*yavaṉmutukiṟ paṭarti reṉṟāṉ.*

## Go with Akastiya!

The lotus-eyed Lord replied:
'If you go to sage Akastiya
Who lives in the golden *potikai* hill,
And tell him of this, he would come
Happily there. On seeing him
The rakshasa would proceed
To salute his feet. You could
Then go up his back.
And press him down.

(கயனை அழித்தல்)

139. அவனுரைத்த மொழிகேளா வரன்முதலோ
ரகத்தியனை யணுகிக் கூறச்
சிவனுரைத்த மொழிகேளா முனிக்கரசு
மவனிடத்திற் சென்றான் அந்நாள்
[1]பவமகற்று மாரியனைக் கண்டளவி
னடிதாழ்ந்தான் பரமன் றானுங்
கவலையிலா வலப்புறத்தி னிவர்ந்தான்பின்
னிடத்திவர்ந்தான் கமல வூர்தி.

எ-து. அந்தத் திருவாக்கினைச் சிரேஷ்டமாகக் கொண்டு அனுமதிபெற்றவர்களாய் அதிவேகத்துடனே அகத்தியரிடத்துக்கு எழுந்தருளி, நடந்த விருத்தாந்தங்களெல்லாந் தெரிவிக்க, அந்த மகாரிஷியானவர் எழுந்தருளிக் கங்கா தீரத்தை நோக்கி நடக்கும்போது அவ்வசுரனானவன் கண்டு மனங்களி கூர்ந்தவனாய்த் தமது பாவவினைகளையெல்லாம் நிவர்த்தி செய்கின்ற ஆசாரியர் எழுந்தருளினாரென்று அவரது திருவடிகளிலே பணிந்தான். அந்தச் சமயத்தில் அவன் வலது புசத்தில் பரமசிவனும் இடது புசத்தில் பிரமதேவனும் படிந்தார்க ளென்றவாறு (7)

கேளா - கேட்டு, செய்யா எனும் எச்சம முனிக்கரசு - அகத்தியன், பவம் அகற்றும் ஆரியன் - பவம் - பாவம், பிறப்பு; ஆசிரியனாகிய அந்தணன், அகத்தியன். இவர்தல் - ஏறிமிதித்தல் இடத்து - இடதுபுறத்தில், கமலவூர்தி - பிரமன் சிரேஷ்டம் - சிறந்தது, முதன்மை.

**பா.வே.** - 1. பவமகத்து.

## Kayaṉai aḻittal

*avaṉuraitta moḻikēḷā varaṉmutalō*
*rakattiyaṉai yaṇukik kūṟac*
*civaṉuraitta moḻikēḷā muṉikkaracu*
*mavaṉiṭattiṟ ceṉṟāṉ annāḷ*
*pavamakaṟṟu māriyaṉaik kaṇṭaḷavi*
*ṉaṭitāḻntāṉ paramaṉ ṟāṉuṅ*
*kavalaiyilā valappuṟatti ṉivarntāṉpiṉ*
*ṉiṭattivarntāṉ kamala vūrti.*

## Destruction of Kayaṉ

Having heard him, Civaṉ and other gods
Approached Akastiya and spoke.
The king of sages heard Civaṉ's words,
Went to Kayaṉ who saluted him
As the teacher who removes one's sins.
Civaṉ ascended his right shoulder,
Piramaṉ his left and both pressed him down.

(மீண்டும் கயன் வளர்தல்)

140. வலதுகரம் வேழமுக னிடதுகரம்
விளங்கினனன் மயிலை யூர்ந்தோன்
பலர்புகழு மிருடிகளும் வானவரு
முதுகினிடைப் படரச் சூரன்
தலமதனில் அழுந்தியபின் னூகித்து
யோகத்தால் தாழ்வில் லாத
திலகமென மூவருக்குள் முதலோனை
மனதிலுன்னித் திகழ்ந்தான் முன்போல்.

எ-து அந்த அசுரனுடைய வலது கரத்தில் வேழமுகன், இடது கரத்தில் சுப்பிரமணியர், அவனது முதுகினிடை மையத்தில் இந்திரன் முதலாகிய தேவர்கள், மகாரிஷிகள் எழுந்தருள, அந்த அசுரனானவன் பாதாள லோக பரியந்தமாக வழுந்தி மிகுந்த துன்பத்தினாலே யூகித்து, நமக்கு வரங்கொடுத்த சிவனானவர் இந்தப் பிராகிருத மனிதரைப்போலத் தேவர்களுடனே கூடிவந்து இந்த வஞ்சத்துக்குள்ளானார் ஆகையால் மேலாகிய இராசத, தாமதங்களை யுள்ளடக்கிச் சாத்விக யோகாரூடரா யென்றும் நித்தியராகியும் நின்மலராகியும் தாழ்வில்லாத திருமூர்த்திகளிலே திலதம்போல முதன்மையாகி விளங்கும் பரம புருஷனை மனத்தில் தியானித்து யோகாரூடனாயிருக்க அந்த யோக மகிமையினாலே மறுபடியும் வளர்ந்து சராசரங்களெல்லா முருவி நின்றான் அசுர னென்றவாறு. (8)

வேழமுகன் - விநாயகன், வேழம் - யானை. மயிலை ஊர்ந்தோன் - முருகபெருமான். மூவர் - மும்மூர்த்திகளாகிய, பிரமா, விஷ்ணு, உருத்திரன் ஆகியோர். உன்னி - நினைத்து.

உரை - யோகாரூடர் - யோகம் + ஆரூடர் - யோகத்தில முதிர்ந்தவர்.

## Miṉṭum kayaṉ vaḷartal

*valatukaram vēḻamuka ṉiṭatukaram*
*viḷaṅkiṉaṉaṉ mayilai yūrntōṉ*
*palarpukaḻu miruṭikaḷum vāṉavaru*
*mutukiṉiṭaip paṭarac cūraṉ*
*talamataṉil aḻuntiyapiṉ ṉūkittu*
*yōkattāl tāḻvil lāta*
*tilakameṉa mūvarukkuḷ mutalōṉai*
*maṉatiluṉṉit tikaḻntāṉ muṉpōl.*

## Kayaṉ Waxes Again

Kaṉēca on his right hand; on his left
Cupramaṉia; all over his back
Great sages and other gods.
As the demon was pressed down
To the earth below, he realised
That he had been tricked.
He meditated in yōga
Upon the best and highest of the Three
And grew immense as before.

(கயனை நாரணன் திருந்தச் செய்தல்)

141. தேவர்க ளெலாந்திகைக்கத் தூசிகள்போ
லுதறிவிட்டான் தேவ தேவன்
மூவருக்குள் முதல்வனன்றே முன்னெழுந்து
கமலத்தாள் முடியிற் சூட்டப்
பாவவினைப் பற்றறுந்து பாதலத்தின்
மாந்தவரைப் பணிந்து பாரில்
மேவவருள் புரிந்துலகோர் விண்ணினிடை
விளங்கிடப்பல் வினையங் கூர்வான்.

எ-து. அப்படி யோக மகிமையினால் அந்த அசுரனானவன் ஆகாயமளவாக உயர்ந்தது கண்ட தேவர்களெல்லாம் திகைக்க, அந்த அசுரனானவன் தனது தேகத்தில்

படிந்த தூசிகளைப் போல உதிர்த்துவிட்டான். அப்போதவனுடைய யோக மகிமைக் கிரங்கினவராயும், தேவதேவ சிகாமணியாயும், திலகம்போல விளங்கிய மூவருக்குள் முதல்வராயும் விளங்குகின்ற ஸ்ரீமன் நாராயணமூர்த்தியானவர் சகல தேவர்களும் போற்றத் தக்கதாக வந்து அவ்வசுரன் முன்பாக எழுந்தருளி அவனது சிரத்திலே தமது கமலம் போன்ற திவ்விய திருவடிகளை வைத்துத் திருத்தி நின்றார். அப்போது அவனது பாவ வினைகளெல்லாம் பற்றறக் கழிந்து, பாதாள லோகத்தின்கண் ணழுந்திப் பின்னும் அந்தப் பரம புருஷனைத் தனது நெஞ்சத்தினிருத்தி அவரை மனத்தினா லுபாசித்துப் பணிந்துருகிப் புகழ்ந்தவனாகச், சகல ஆத்தும கோடிகளுஞ் சொர்க்காதி போகங்களை யனுபவிக்கத் தக்கதாய் மிகுந்த வினையத்துடனே விண்ணப்பஞ் செய்கின்றா னென்றவாறு. (9)

மாந்து - உள்ளடக்கி, அழுந்தி வினயம், விநயம் - பணிவு.

## Kayaṉai nāraṇaṉ tiruntac ceytal

*tēvarka ḷelāntikaikkat tūcikaḷpō*
*lutarivittāṉ tēva tēvaṉ*
*mūvarukkuḷ mutalvaṉaṉṟē muṉṉeḻuntu*
*kamalattāḷ mutiyiṟ cūṭṭap*
*pāvaviṉaip paṟṟaṟuntu pātalattiṉ*
*māntavaraip paṇintu pāril*
*mēvavaruḷ purintulakōr viṇṇiṉiṭai*
*viḷaṅkitappal viṉaiyaṅ kūrvāṉ.*

## Nārāyaṇaṉ transforms Kayaṉ

As the gods were dumb founded,
They were shaken away by him
As dust. The supreme of the three,
Nārāyaṇaṉ, placed his lotus-feet
On his crown and transformed him.
Kaya was pressed into the nether world
And cleansed of his sins. He saluted
And began to speak in terms
Of divine life in the heavens.

(கயனின் மகிழ்ச்சி)

142. வேதாந்தங் காணாத விமலபதஞ்
சிரத்தணிந்தேன் விமல மான
யோகாந்தஞ் செய்ததவப் பயனடைந்தே
னென்போல வுய்ந்தார் யாவர்
போதாந்தப் பரஞ்சுடரே யென்றனக்குப்
புத்தியெனப் புகல்தி யென்ன
நாதாந்தங் கடந்தவனும் நற்பவள
வாயலர்ந்து நவில்வ தானார்.

எ-து. பின்னும் அந்த அசுரனானவன் பாதாளத்தின்கண் அழுந்தித் தனக்கு வந்த இடரினை யோசியாமல், சகல ஆன்மாக்களுக்கு இதத்தினையடைந் தேனாகிலும், யாகாதி கிருதுக்கள், தவங்கள், யோகங்கள் செய்கின்ற மகாரிஷிகள் முதலாகிய பேர்களாலும் காணப்படாத பெரும் புகழினை யடைந்தேன். என்னைப்போ லடைந்தவர் யாவர்? சர்வ வஸ்துக்களினும் உள்ளும் புறமும் வியாபித்தருளிய சர்வதேவ சிகாமணியே! அடியேனுக் கென்னபுத்தி யென்று விண்ணப்பஞ் செய்யப் பரப்பிரம்ம சொரூபியாகிய பரமமூர்த்தி களிகூர்ந் தருளிச்செய்கின்றார் என்றவாறு. (10)

வேதாந்தம் - வேதம் + அந்தம் - வேதமுடிவுகள் விமலபதம் - விமலம் - தூய்மை, தூயதிருவடி. இறையடி யோகாந்தம் - யோகங்களின முடிவு, அம்முடிவின் பயன. போதாந்தம் - ஞானமுதிர்வு போதம் - ஞானம், பேரறிவு நாதாந்தம் - ஞானநெறி

## Kayaṉiṉ makiḻcci

*vētāntaṅ kāṇāta vimalapatañ*
*cirattaṇintēṉ vimala māṉa*
*yōkāntañ ceytatavap payaṉaṭaintē*
*ṉeṉpōla vuyntār yāvar*
*pōtāntap parañcuṭarē yeṉṟaṉakkup*
*puttiyeṉap pukalti yeṉṉa*
*nātāntaṅ kaṭantavaṉum naṟpavaḷa*
*vāyalarntu navilva tāṉār.*

## Kayaṉ's Joy

'I have decorated my head
With the blameless feet that is
Beyond the ken of even the Vēdas;

I have gained the results
Of persevering with pure yōka.
Who has gained divinity like me?
O Brilliance that is knowledge!
What do you advice me to do? Do tell.'
He said. The Supreme
Who beyonds knowledge uttered words
From his coral-red lips.

**(கயை என்று நதிக்குப் பெயர் தருதல்)**

143. **உலகிலுள்ள நதியதற்கிங் கரசாகுங்**
**கங்கையினு முசித மாகப்**
**பலர்புகழும் பஞ்சக்குரோ சத்தினது**
**உனதுபெயர்ப் பகரு நாமம்**
**நிலவியக யாசூர னென்றேயிவ்**
**வுலகமெலாம் நிகழத் தந்தோ**
**மலர்பெருகும் வடவாலி னமதடியிற்**
**பிண்டமிட்டு மகிழ்வா ரன்றே.**

எ-து. வாராய் அசுர சூடாமணியே! இந்த உலகங்களிலுள்ள நதிகளுக்கெல்லாம் அரசாகிய இந்தக் கங்கா தீரத்தினும் அதி சிரேஷ்டமாகிய பஞ்சக் குரோசத்தினது அளவையுள்ளாகிய புண்ணிய தீர்த்தமானது, உனது பெயரினாலே என்றும் விளங்கத் தக்கதாய்க் கயாவென்கின்ற நாமதேயத்தை இந்த லோகங்களெங்கினும் விளங்கத்தக்கதாய் வரங் கொடுத்தோமாகிலும், இந்தக் கயா தீரத்தினென்றும் விளங்குகின்ற வடவால விருட்சத்தினடியில் உனது சிரத்திற் தரித்த நமது பாதமானது விளங்கத் தக்கதாயும், இந்தப் பூமண்டலங்களிலுள்ள ஆத்தும கோடிகளெல்லாம் அவர்கள் பிதுர்களைக் குறித்துத் தமது திருவடியினைப் பிண்டமிட்டுப் பிதுர்க் கோடிகளுடனே என்று மழிவில்லாத நமது ஸ்ரீவைகுண்டத்தினை யடைவார்கள் என்று பின்னுமருளிச் செய்கின்றா ரென்றவாறு. (11)

உசிதம் - உயர்வு, மேன்மை பஞ்சக்குரோசம் - காசிநகரத்தைச் சார்ந்த ஓரிடம்; இங்குத் தூய்மையற்றவர் வரக்கூடாது. பிண்டம் - பிதுர்களுக்கு இடும் அன்னத்திரள்.

**kayai eṉṟu natikkup peyar tarutal**

*ulakiluḷḷa natiyataṟkiṅ karacākuṅ*
*kaṅkaiyiṉu mucita mākap*
*palarpukaḻum pañcakkurō cattiṉatu*
*uṉatupeyarp pakaru nāmam*

*nilaviyaka yācūra ṉeṉṟēyiv*
*vulakamelām nikaḻat tantō*
*malarperukum vaṭavāli ṉamataṭiyiṟ*
*piṇṭamiṭṭu makiḻvā raṉṟē.*

**The River is named Kayā**

This be the king of the rivers
In all the world. Holier than this Kaṅka
Is the famous river five **krosa** long.
It would carry your name,
Such is the boon granted by me.
Beneath the banyan tree full of blooms
Here, people will offer food to the manes.

**(திருவடிகளில் பிண்டமிடாதோர்)**

144. **எனதுபத சம்மந்த பிண்டமிட்டோர்**
**மீட்டுமொரு பிறப்பி னெய்தார்**
**கனதைதிகழ் அசுரசூ டாமணியே**
**இக்கரையிற் பிண்டங் காணாத்**
**தினமளவி னீயுமுன்போற் றிகழ்ந்திடுவா**
**யென்றளவிற் றேவர் வந்து**
**நினைவறியா திவ்வரத்திற் கேதுசெய்வோ**
**மென்றளவி னிமலன் கூறும்.**

எ-து அப்படி உனது சிரத்தினின் விளங்குகின்ற நமது திருவடிகளிலே பிதுர்களைக் குறித்துப் பிண்டமிட்டோர்கள் செனனசாகரத்தைக் கடந்து நமது திவ்விய லோகத்தினை யடைவார்களாகையால், அவனது புகழானது கனதையாகிய லோகாதி லோகங்களெல்லாம் விளங்கிப் பிரகாசிக்கத் தக்கதாய் அருளிச் செய்தோம். வாராய் கயா சூரனே! அப்படி யொரு காலத்தில் நமது திருவடிகளில் பிண்டம் விழாமலிருக்கக் காணுவையாகில் அப்போது இந்த நீண்ட உருவத்தினை முன்போலக் கொண்டு இந்த ஆத்தும கோடிகளைச் சொர்க்காதி போகத்திற்கு அனுப்பக் கடவாய் என்றருளிச் செய்ய, இந்திரன் முதலாகிய தேவர்களெல்லாம் ஓடி அந்தப் பரமமூர்த்தியினைப் பணிந்தொரு விண்ணப்பஞ் செய்கின்றார்கள்: அந்த அசுரனுடைய மனோ பீஷ்டப்படியாகத் தேவரீர் அருளிச் செய்தால் அடியார்களுக்கென்ன கதியென்று பணிந்தார்க ளென்றவாறு. (12)

பதசம்மந்தம் - திருவடிகளில்; சம்மந்தம் - சம்பந்தம் - இணக்கம். கனதை - பெருமை. பரந்தது முன்போல் திகழ்ந்திடுவாய எனறது இந்த நீண்ட உருவத்தைப் பெற்று உலக உயிர்களை தேவருலகுக்கு அனுப்புவாய என்பதைக் குறித்தது

## Tiruvaṭikaḷil piṇṭamiṭātōr

*eṉatupata cammanta piṇṭamiṭṭōr*
*miṭṭumoru piṟappi ṉeytār*
*kaṉataitikaḷ acuracū ṭāmaṇiyē*
*ikkaraiyiṟ piṇṭaṅ kāṇāt*
*tiṉamaḷavi nīyumuṉpōṟ ṟikaḻntiṭuvā*
*yeṉṟaḷaviṟ rēvar vantu*
*niṉaivaṟiyā tivvarattiṟ kētuceyvō*
*meṉṟaḷavi ṉimalaṉ kūṟum.*

## Failure to Make Offerings

Those who make offerings to manes
At my feet will not be reborn.
Famous crest-jewel of the Acura clan!
If there is a day when no offerings
Are made here, you can take your old form
And send all lives to heavens.
The gods immediately rushed there
And asked: 'If that happens,
What shall we do?' The Supreme replied:

(தேவர்களைப் பிண்டமிடச் செய்தல்)

145. எப்போது மிக்கரையில் பிண்டம்விழா
திருப்பதிலை யெய்தா தாயின்
அப்போதங் கமரரங்கு பிண்டமிட்டுப்
பெருங்கதியை யடைவீ ரென்றுஞ்
செப்பரிய பிதுர்களா யிரங்கோடி
குலத்தவர்கள் சிறக்க வோதி
முப்புவனந் தொழுதேத்த முகில்வண்ணன்
பாற்கடலில் அமுந்தி வாழ்ந்தான்.

எ-து மிகுந்த துன்பத்தினை யடைந்த தேவர்களை நோக்கி யருளிச செய்கின்றாா, வாரீர் தேவர்களே! நாமருளிச்செய்த இந்தக் கயாதீரத்தில் எப்போதும பிண்டம் விழாமலிருப்பதே யில்லை ஆகிலும ஒரு காலததில் பிண்டம் விழாமலிருககக கணடீர்களேயாகில, அன்று நீங்களிஙகு பிண்டமிட்டு, உஙகள் பெருங்குலமாகிய ஆயிரஙகோடி குலததவர்கணமது பரமபதச் செல்வததினை யடைந்து சிறநது வாழக கடவீர்களென றருளிசசெயது, பிரமமா, சிவன், இந்திரன் முதலாகிய மூனறு லோகததாரும் போற்றததககதாய எழுந்தருளித் திருபபாற கடலில் அனநத விமான சேகரரா யோக நிததிரை செய்தருளுகின்றார் என்றவாறு (13)

**உரை** - குலததவாகணமது - குலத்தவர்கள + நமது

## tēvarkaḷaip piṇṭamiṭac ceytal

*eppōtu mikkayaiyil piṇṭamviḻā*
*tıruppatılaı yeytā tāyiṉ*
*appōtaṅ kamararaṅku piṇṭamiṭṭup*
*peruṅkatiyai yaṭaivī reṉṟuñ*
*cеppariya pıturkaḷā yiraṅkōṭi*
*kulattavarkaḷ ciṟakka vōtı*
*muppuvaṉan toḻutētta mukılvaṇṇaṉ*
*pāṟkaṭalıl aḻuntı vāḻntāṉ.*

## Gods Asked to Make Offerings

There is never a time when
This Kaya goes without offerings;
If it happens, the gods could offer
For the immortals and gain
The supreme state. So will
The millions of million manes
Belonging to several clans.'
Having said this, the cloud-hued
Returned to rest in the milky sea.

வேறு

(சூதர் கூறும் முடிவு)

146. ஆத லாலய னரன்முனி வரர்கள்மற் றமரர்
தீதி லாதபொன் னரங்கனே பரமெனத் தெளிந்தா
ரோத வேண்டு மொருமெய்க் குதவிவே றுளதோ
வாத ராயண னுரைத்தன னெனமுனி வகுத்தான்

எ-து. பிரம்மா, உருத்திரன், தேவர்கள், மகாரிஷிகள் யாவரும் நித்தியானந்த சுபமங்கள குண விசேடரான நின்மலனாகிய பொன்னரங்கனே பரம புருஷோத்தமனென்று தெளிந்தவர்களாய்ச் சர்வ காலங்களிலும் அவரைச் சுமரித் தானந்த வைபவத்தினை அடைகின்றார்க ளாகையால் இதற்கு மேலாகிய பெரும்புகழினை யானென்ன கூற வேண்டுமென்று ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டராகிய வியாச மகாரிஷி யருளிச்செய்தார் என்று சூதமகாரிஷியானவர் சவுனகாதி மகாரிஷிகளுக் குரைத்தருளினா ரென்றவாறு. (14)

**உரை** - சுமரித்து - சுமந்து, போற்றி

**பா.வே.** - 1 மைத்தமரர்

## Vēru

### Cūtar kūṟum muṭivu

*āta lālaya ṉaranmuṉi vararkaḷmaṟ ṟamarar*
*tiṭi lātapoṉ ṉaraṅkaṉē paramenat teḷintā*
*rōta vēṇṭu morumeyk kutavivē ṟuḷatō*
*vāta rāyaṇa ṉuraittaṉa ṉeṉamuṉi vakuttāṉ.*

### Cūtar Speaks

'Thus did Piramaṉ, Civaṉ
The sages and other gods
Recognise the faultless Araṅkaṉ
To be supreme: is there a fame
Greater than this? said Vyāsa',
Cūtar concluded.

(இந்திரன் மகிழ்தல்)

147. **சந்திர சேகரன் றாமத குணத்தினாற் சனித்து**
**வந்த சூரனால் வளம்பெறு பொன்னுல கிழந்த**
**இந்தி ரன்முத லமரர்க ளித்தல மடைந்து**
**சந்த தம்புகழ் சசியுடன் பொன்னகர் சார்ந்தார்.**

எ-து. சடாமகுடத்திலே சந்திரிகையைத் தரித்த சந்திரசேகரனாகிய பரமசிவனானவன் இந்திரன்பேரில் தாமத குணத்தினாலே பிறந்து வந்த காலநேமியென்னும் சுரேந்திரனாலே காமதேனு, கற்பக விருட்சம், சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி, இந்திராணி, அயிராவதம், சயந்தன், அரம்பையர்கள் முதலாகிய வளத்தினைப் பெறுகின்ற தன்னுலகத்தை அவ் வசுரனானவன் பற்றிக் கொள்ளத்தக்கதாய்த் தானதை விட்டுப் பெயர்ந்து, சசியாகிய இந்திராணி,

சயந்தமகாராசன் முதலாகிய தேவர்கூட்டங்களுடனே, இந்த கோலாசல கிரியிலே வந்து தவம்பண்ணி யரங்க நாயகருடைய கிருபையினாலே அவரது விசுவ சொரூபானந்த சேவையைத் தரிசித்து ஆனந்த வைபவத்தை யடைந்ததன் பின்பு, அவராலே கால நேமியினைச் செயித்து இந்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தனுப்பிவைக்கப் பட்டாபிஷேக பதியாய்ப் பொன்னுலகத்தைச் சார்ந்து அரசாட்சி செய்து சக்கரநடாத்தி வாழ்ந்தானென்று கூறினார் சூதபுராணிக ரென்றவாறு. (15)

சசி - இந்திராணி

## Intiraṉ makiḻtal

*Cantira cēkaraṉ rāmata kuṇattiṉāṟ caṉittu*
*vanta cūraṉāl vaḷamperu poṉṉula kiḻanta*
*inti raṉmuta lamararka ḷittala mataintu*
*canta tampukaḷ caciyuṭaṉ poṉṉakar cārntār.*

## Intiraṉ's Joy

Kālanēmi was an Acura born
To Civaṉ's **tamas.** He drove out
Intiraṉ and the gods from the heavens.
They came to this spot
Worshipped and returned
To the heavens above along with
Intiraṉ's queen, famous Caci.

**(காலநேமி பற்றிக் கூறுமாறு கேட்டல்)**

**148.** **என்றபோ தருந்தவ ரிறைஞ்சி யெங்கட்கு**
**நன்றுநன் றுரைத்தனை நவையிற் கேட்டன**
**மன்றுல கெங்கணு மாளு மிந்திரன்**
**சென்றதென் காரணஞ் செப்புவீ ரென்றார்.**

எ-து. இந்தப்பிரகாரம் இருடியர்சிரேட்டராகிய சூதர் சொல்ல வரியதவசிகளானவர் கூறுகின்றார்; சுவாமி! நன்மையனவாகிய கதாபிரசங்கத்தை யெல்லாம் வரன்முறையாய்ச் சொன்னீர். யாங்களும் பவுத்திரமாய்க் கேட்டுக் கியானத்தை அடைந்தோம். இப்படியாகிய திரி புவனத்தை யாளுகின்ற ராச கண்டீரவனாகிய இந்திரனானவன், கால நேமியால் தனது வளப்பங்களையெல்லாம் இழந்து கோலாசல கிரியிலே வந்து தவஞ்செய்த காரண மெந்த

ஏதுவினாலே வந்தது? அந்தக் கதாப்பிரசங்கததை ஆதியோடந்தமாய்க் கூறுகவென்று கேட்கச் சூதபுராணிகர் [1]அருளிச் செய்கின்றா ரென்றவாறு. (16)

நவையில் - நவைஇன்றி - நவை - குற்றம்

உரை - பவுத்திரமாய் - அடக்கமாக, தூய்மையாக.

பா.வே. - 1 சொல்கின்றாரென்றவாறு.

கயைதோற்ற முரைத்த அத்தியாயம் முற்றிற்று.

## Kālanēmi paṟṟik kūṟumāṟu kēṭṭal

*eṉṟapō taruntava riṟaiñci yeṅkaṭku*
*naṉṟunaṉ ṟuraittaṉai navaiyiṟ kēṭṭaṉa*
*maṉṟula keṅkaṇu māḷu mintiraṉ*
*ceṉṟateṉ kāraṇaṅ ceppuvī reṉṟār.*

## Kālanēmi

As sage Cūtar said this, the sages
Prayed to him: 'You have spoken well.
How was it that god Intiraṉ
Who rules over all worlds
Was sent to suffer exile here?
Do tell us the reason.'

# 9. ஐந்தாவது

# இந்திரன் அரசாட்சிபுரிந்த அத்தியாயம்

தேவேந்திரன் பலவகை அணிகலன்களை அணிந்தவனாய்த், தேவர்களும் முனிவர்களும் புடைசூழ தேவசபையில் வீற்றிருந்தான். அரம்பை, ஊர்வசி முதலாகிய தேவகன்னியர்களின் நடனத்தையும், பலவகை இசைக்கருவிகளின் இசையையும் கண்டும் கேட்டும் மகிழ்ந்திருந்தான். அவனுடைய இடையில் உடைவாளும், கையில் வச்சிராயுதமும் விளங்கின. ஆயிரங் கண்மலர்கள் உடலை மூடியிருந்தன. மாலையணிந்த அவனுடைய முடியில் செம்பஞ்சு ஊட்டிய இந்திராணியின் பாதச் சுவடுகள் காணப்பட்டன. தேவர்கள் துதித்துக் கொண்டிருக்கிறார்கள்; முனிவர்கள் வாழ்த்திக்கொண்டிருக்கிறார்கள்; இந்திராணி புன்முறுவலோடு அருகில் வீற்றிருக்கிறாள். தேவர்கள் வணங்க அவர்கள் முடிகள் ஒன்றோடொன்று தாக்கி நெரிந்தன.

பரமசிவனைத் தொழுதற்குரிய காலம் வந்தது. உடனே இந்திராணியும் தேவர்களும் சூழ, இசைக்கருவிகள் முழங்கக் கயிலாயத்தை நோக்கிப் புறப்பட்டான். சிவபெருமான் வேடுவன் வடிவத்தில், வில்லை ஏந்தியவராய், வேடுவர் கூட்டம் சூழ்ந்துவர எதிரில் வந்தார். மதியாமலும் ஒதுங்கிச் செல்லாமலும் எதிரில் வருகின்ற வேடுவர்கூட்டத்தைக் கண்ட இந்திரன் சினம் கொண்டவனாய் அவர்களை நோக்கி, நான் பரமசிவனைக்கண்டு துதிக்கச் செல்லுகின்றபோது அற்ப வேடர்களாகிய நீங்கள் சிறிதும் அச்சமின்றி எதிரிலே வருகிறீர்கள். உங்களைச் சின்னாபின்னமாக்கி அழித்துவிடுவேன். அதற்குமுன் உயிர்பிழைத்து ஓடிவிடுங்கள்' என்று கடிந்து கூறினான். உடனே இறைவனாகிய வேடன் தன் கையிலி ருந்த வாளினால் ஓங்கி அடித்தான். இந்திரன் மூர்ச்சித்துவிழ, தேவர்கள் துன்பமுற்றார்கள். மூர்ச்சை தெளிந்த இந்திரன் தனக்கு நேர்ந்த துன்பத்திற்குக் காரணம் என்ன என்று எண்ணியவனாய், அச் சிவபெருமானைத் தியானித்து நோக்கத் தன் எதிரிலே நிற்கும் வேடன் சிவபெருமானே என்று உணர்ந்தான். தேவர்கள் பலரும் அறியத் தன்னை இழிவுபடுத்தினார் என்று வருந்த, சிவபெருமான் இந்திரனைச் சோதிக்க இவ்வாறு செய்ததாகக்கூறி ஆற்றுவித்தார். சிவபெருமான் வேட்டையாடி வந்த மிருகங்களை எல்லாம், இந்திரன் கர்ச்சித்து மிரண்டு ஓடச்செய்துவிட்ட காரணத்தால் அவ்வாறு செய்ததாகவும் குறிப்பிட்டார். இருப்பினும் கோபந்தணியாத இந்திரன், அதர்மச் செயலைச் செய்த உம்மை எனது வச்சிராயுதத்தினாலே அடித்துக் கபாலமானது திறக்கும்படியாகச் செய்கிறேன் என்றான். அதற்குச் சிவபெருமான்,

தேவராசனே! துவாபரயுகத்திலே திருமால் தேவகி மைந்தனாகத் தோன்றுவார். அப்போது நீ பாண்டவரில் ஒருவனாக - அருச்சுனனாகத் தோன்றுவாய். பாசுபதத்தை விரும்பி எம்மை நோக்கித் தவம் செய்வாய். நான் இதே வடிவத்தில் தோன்றுவேன். அப்போது உன்கைவில்லால் எனது மண்டையில் அடித்துப் பாசுபதமும் பெறுவாயாக என்று கூறினார். மனத்துன்பம் நீங்கிய இந்திரன் தன் உலகு அடைந்தான்.

இந்திரன் கூறிய வார்த்தைகளை எண்ணி எண்ணி மனம் புழுங்கிய பரமசிவனின் உடல் வியர்த்துக்கொட்டியது. அதனின்றும் அரக்கன் ஒருவன் தோன்றினான். அவன் குகைபோன்ற வாயினையும், கோரதந்தங்களையும், தீ எரிவதுபோல ஒளிவீசும் கண்களையும், பிரசண்டமாருதம் வீசுவது போன்ற பெருமூச்சினையும், மேருபோன்ற புயங்களையும், காடுபோன்ற உரோமங்களையும் உடையவனாய் நீலகிரி மலையைப் போன்று சிவபெருமான் முன்பு தோன்றினான். இறைவனை வணங்கிய அவன் தன்னைத் தோற்றுவித்ததன் காரணத்தைக் கேட்டான். சிவபெருமான் அவனைநோக்கி, அசுரேந்திரனே! நீ மனோவதி நகரம் அடைந்து, பிரமாவை நோக்கித் தவம் செய்து, பிரமாவிடம் வரத்தைப்பெற்று, அதனால் இந்திரனை வென்று, இந்திரலோகத்தை அரசு புரிவாயாக என்று கூறிக் கயிலாயம் அடைந்தார்.

அசுரேந்திரன் சிவபெருமானின் கட்டளைப்படியே சத்தியலோகம் அடைந்து, பிரமனைக்குறித்துக் கடுந்தவம் புரிந்தான். அதனை அறிந்த இந்திரன் தேவகன்னியரை அழைத்து அத்தவத்திற்கு இடையூறு செய்யுமாறு ஏவினான். அவர்கள் செய்த பலவகை லீலைகளினாலும் மனம் மாறுபடாத அசுரேந்திரன் சூரியனைப்போல விளங்கினான். தங்கள் செயலில் தோல்வியுற்ற தேவகன்னியர் இந்திரனிடம் வந்து, அந்த அசுரன் தவத்தினால் நாங்கள் எரிந்துபோகாமல் உயிருடன் திரும்பி வந்ததே தங்கள் கருணையாகும் என்று முறையிட்டார்கள். உடனே இந்திரன் பிரமதேவனிடம் சென்று தேவர்களுக்கு ஏற்படவிருக்கும் துன்பத்தினைக் குறித்து முறையிட்டான். தவம் செய்கின்ற அசுரன்முன் தோன்றிய பிரமதேவன் 'உனக்கு என்னவரம் வேண்டும்' என்று கேட்டான்.

அசுரனானவன் பிரமதேவனைத்தொழுது, 'எனக்கு என்றும் யாராலும் இறப்பு ஏற்படக்கூடாது; நான் இந்திர பதவியை அடையவேண்டும்' இந்த வரங்களைத் தந்து உதவவேண்டும் என்று வேண்டினான். அவன் விருப்பப்படியே பிரமதேவன் வரம் அருளி, 'காலநேமி' என்ற பெயரையும் அவனுக்குச் சூட்டினார். அவனது தவவலியால் சந்திர சூரியர் கதி மாறினர்; வாயு மறைந்தான்; எங்கும் இருள் சூழ்ந்தது; உடுக்கள் உதிர்ந்தன. வரம் அளித்த பிரமதேவன் இனியேனும் தவத்தைவிட்டு நீங்குக என்று கூறித் தன் மனோவதிநகரை அடைந்தார். மிகுந்த வலிமை பெற்ற காலநேமி, படைகளுடன் வந்து தேவேந்திரனுடன் போரிட்டான். இந்திரன் அசுரனுடைய படைகளைக் கொன்று குவிக்க, காலநேமி இரதத்தைவிட்டு இறங்கி, தேவர்களைக் கலக்கினான். பிரமதேவனின் வரத்தினால் அசுரன் பெற்றுள்ள பலத்திற்குத் தோல்வியுற்ற இந்திரன், தேவர்கள் புடைசூழப் பொன்னுலகை விட்டு நீங்கி இப்பூ வுலகில் வந்து தங்கினான்.

**(இந்திரன் வீற்றிருத்தல்)**

149. **ஆதியி னிந்திர னமர ரோடுதன்**
**சோதிமா மகுடமுந் துலங்க மேனகை**
**மாதொடு முருப்பசி வளமி குந்திடு**
**நாதமு நாட்டிய நயந்து காணவே.**

எ-து. பூர்வ காலத்தில் இந்திர மகாராசனானவன் முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் இருடியர் கூட்டங்கள், அட்டவசுக்கள், சத்தமருத்துக்கள் சூழத்தக்கதாய், மவுலி, மகரகுண்டலம், புயகிரதி, அஸ்தகடகம், பதக்கம், முத்துமாலை, மோகனமாலை, இரத்தினமாலை முதலாகிய ஆபரணவகை பிரகாசிக்கத் தேவசபையிலே வீற்றருக்கும்போது அரம்பை, உருப்பசி, திலோத்தமை முதலாகிய தேவகன்னியர்கள் நடனஞ் செய்யவும், தும்புரு நாரதர் வீணைகள் வாசிக்கவும், முனிவர்கள் ஆசீர்வதிக்கவும், அட்ட லட்சுமி மனோகரனாய் வீற்றிருந்தா னென்றவாறு. (1)

மேனகை - தேவகன்னியருள் ஒருத்தி; அவர்கள் - அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை போன்றோர். உருப்பசி - ஊர்வசி. அட்டவசுக்கள் - அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் என்னும் எண்மர். சத்த - மருத்துகள் - கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல், பலயோனி உயிர் ஆகியவை

### Intiran virriruttal

*ātiyi nintira namara rōtutan*
*cōtimā makutamun tulaṅka mēnakai*
*mātotu muruppaci valami kuntitu*
*nātamu nāttiya nayantu kāṇavē.*

## IX. Intiran's Reign

### Intiran in his Court

In days of yore Intiran
Along with gods, his crown a-gleam,
Sat in his court watching
The divine damsels Mēnaka
And Ūrvaci sing and dance.

(ஆடல் பாடல்கள்)

150. விண்ணவரு முருப்பசியு மேனகையும்
பலபலவாய் வினோதங் கொண்டு
தண்ணுமையுங் கீதமொடு நாதவிசைத்
தாளமொடு சதங்கை மேவ
வண்ணல்முனே வீணைதொனித் தேனருவி
பொழியவரு வரிய ராகம்
பண்ணதரு நிழலுதிரும் பனிமலரு
மினியநறைப் பகரும் வேலை.

எ-து. சகலமான தேவர்கூட்டங்களும், அரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலாகிய அழகினால் நிறைந்த கன்னியர்களும் பலபல சங்கீத வினோதமாகிய பரத நாட்டியங்கள் செய்ய, அந்த வாத்தியத் தொனிகளானவை திக்குத்திகாந்தங்களெல்லாம் பிரம்மிக்கவும், சங்கீத சாம்பிராச்சிய, சாயுச்சியமானது தேனருவி போலக் [1]கானாமிருதமாயிருக்கவும், இப்படியாகிய அரம்பா ஸ்ரீகளுடைய பிரதாபங்களைக் கண்டு களிகூர்ந்த [2]இந்திர மகாராசனானவன், கற்பக விருட்ச மலர்களானவை இதழ்கள் விரிந்து தேன் தாரைகளைத் துளிக்க அதனுடைய நிழலிலே வீற்றிருந்து, சகல சாம்பிராச்சிய சுந்தர வைபவத்தோடுங் கூடி [3]மனோகர ரஞ்சிதமாய் வீற்றிருந்தான் இந்திர மகாராச னென்றவாறு. (2)

வினோதம் - அழகு, மேன்மை. தண்ணுமை - உடுக்கை, பேரிகை, உறுமி போன்ற மேளங்கள்.

உரை - சாயுச்சியம் - ஒன்றிப்பு -சங்கீதத்தின் சிறப்பெல்லாம் ஒன்று சேர்ந்தது கானாமிருதம் - இசையமுதம. கர்ணாமிருதம் - காதுக்கு அமுதம், காதுக்கு இனிமை எனவும் கொள்ளலாம்.

பா.வே. - 1 காணாமிர்தமாய் 2. விநதிரமகாராச. 3 மனோகராஞசிதமாய்.

## Āṭal pāṭalkaḷ

*viṉṉavaru muruppaciyu mēṉakaiyum*
*palapalavāy viṉōtaṅ koṇṭu*
*taṇṇumaiyuṅ kītamoṭu nāṭavicait*
*tāḷamoṭu cataṅkai mēva*
*vaṇṇalmuṉē viṉaitoṉit tēṉaruvi*
*poḻiyavaru variya rākam*
*paṇṇataru niḻalutirum paṉimalaru*
*miṉiyanaṟaip pakarum vēlai.*

## Dance, Music

The Gods, Ūrvaci and Mēṉaka
Engaged themselves in exotic arts
With anklets keeping in step
To music and the rhythm of the drums.
In the presence of the King
The lute showered a honey-fall
In unusual tones while
The blossoms in the *Kalpataru* tree
Also poured honey from its flowers.

(இந்திராணியுடன் இந்திரன்)

151. இருமருங்குங் குற்றுடைவா ளிலங்கபணி
யிலங்கதுங்க விவுளி காட்டப்
பொருங்குலிசப் படைமுகிலி னிடைவிளங்கு
மின்னலெனப் பொலிவு காட்டத்
தரும்பிரச மலர்களெனத் தாமரைக்கண்
ணுடலெங்குந் தழைத்துக் காட்டச்
சுரும்பிமிருந் தொடைமுடியிற் புலோமிசைச்செம்
பஞ்சடிமென் சுவடு காட்ட.

எ-து இப்படி அனேக சம்பிரமத்துடனே கொலுவிருக்கின்ற இந்திர மகாராசனுடைய பெரிய இடைகளிலே கோடி சூரியப்பிரகாசமாகிய உடைவாளாயுதமானது பிரகாசிக்கவும், சர்வாபரண பூசித அலங்கார சொரூபனாய்த் தனது கராம்புயத்திலே விளங்கா நின்ற வச்சிராயுதமான திந்திர மேகத்தின் நடுப்பிரதேசத்திலே வுண்டாகிய மின்னலைப்போல தவளிக்கவும், நீலகிரியைச் செந்தாமரைக் கமலம் மூடிக்கொண்டதுபோல, அவனுடைய தேகங்களெல்லாம் ஆயிரங் கண் மலர்களானவை பிரபலிக்கவும், வண்டுகளானவை தேன்களை யுண்டு [1]தெகிட்டி இசைகளை மிழற்றாநின்ற திவ்விய பரிமளங்களைத் திக்குத்திகாந்தங்களெல்லாம் வீசாநின்ற, கற்பகம், மந்தாரம், பாரிசாதம், அரிசந்தனம் முதலாகிய புட்பமாலையைத் தரித்த திருமுடியிலே இந்திராணியினுடைய பாததாமரையிலூட்டிய செம்பஞ்சானது பிரகாசிக்க வீற்றிருந்தான் என்றவாறு. (3)

குற்றுடைவாள் - குறுகிய உடைவாள். பணி - அணிகலன், நகை. துங்கம - வெற்றி. இவுளி - குதிரை. குலிசப்படை - வச்சிராயுதம. பிரசமலா - தேன்நிறைந்த மலர், வண்டுமொய்க்கும் மலர். பிரசம் - தேன் சுரும்பு - வண்டு இமிர்தல் - ஒலித்தல. தொடை - மாலை புலோமிசை - புலோமசை - புலோமன் மகள் - இந்திராணி.

உரை - சம்பிரமத்துடன் - மகிழ்ச்சியுடன் ஆபரணபூசிதன் - அணிகளை அணிந்த கனவான்; பூசிதன்- செல்வந்தன். தவளிக்க - ஒளிவீச; வெண்மை ஒளி பிரபலிக்க - முக்கியத்துவம் பெற்று விளங்க மிழற்றுதல் - மென்மையாக இசைததல திக்குத்திகாந்தம் - திக்கு - திசை; திகாநதம் - ஆகாயம்.

பா.வே. 1. தெக்கிட்டிசைகளை (தெவிட்டி)

## Intirāṇiyuṭaṉ intiraṉ

*irumaruṅkuṅ kuṟṟuṭaivā ḷilaṅkapaṇi*
*yilaṅkatuṅka vivuḷi kāṭṭap*
*poruṅkulicap paṭaimukili ṉiṭaiviḷaṅku*
*miṉṉaleṉap polivu kāṭṭat*

*tarumpiraca malarkaḷeṉat tāmaraikkaṇ*
*nuṭaleṅkun taḻaittuk kāṭṭac*
*curumpimirun toṭaimuṭiyiṟ pulōmicaiccem*
*pañcaṭimeṉ cuvaṭu kāṭṭa.*

## Intirāṇi and Intiraṉ

Daggers glowed on his sides;
Ornaments shone bright on his body.
His horse was the image of victory.
His thunderbolt shone lustrous
Like lightning mid clouds.
All over his body lotus-like eyes
Shimmered as honey - rich blossoms.
Intiraṉ was seated with his crown
Encircled by garlands of flowers
And stained by the red lacquer
On Pulōmicai's[1] feet.

(குழாங்களுடன் இந்திரன்)

152. கின்னரர்கிம் புருடர்விஞ்சை கருட[1]காந்
தருவர்சித்த குழாங்கள் சூழப்
பன்னகரும் வருதிக்குப் பாலகரஞ்
சலிசெய்து பார்வை நோக்க
முன்னருறு முனிக்கணங்க ளாசிபல
மொழிந்துமிகு வினையங் கூறத்
தன்னிகரி லிந்திராணி தரளகுறு
நகைவிழியின் சாயல் காட்ட.

எ-து. கின்னரர்கள், கிம்புருடர்கள், விஞ்சையர்கள், வித்தியாதரர்கள், கருட, [1]காந்தருவர் முதலாகிய தேவர்கூட்டங்கள் சூழ்ந்து துதிக்கவும், தன்னையொழிந்த திக்குப் பாலகரானவர்கள் தண்டன் சமர்ப்பித்துத் தன்னருகிற் சூழ்ந்திருக்கவும், மகா இருடியர் கூட்டங்க ளாசீர்வதித்து

1. Pulōmicai : daughter of Pulōman, one of the names of Intirāṇi.

இனிமை மொழிகளைக் கர்ணாமிர்தமாய்க் கூறவும், இந்திராணியினுடைய செவ்வாம்பல் விரிந்தாலொத்த வாயினிடத்திற் பிரகாசிக்காநின்ற தாவள்ளியமாகிய வாணி முத்தினையொத்த தந்த பந்திகளானவை சசி தேவியினுடைய கண் சாய்கையை யெல்லாங் காட்டித் தென்றவாறு. (4)

கின்னரர், கிம்புருடர், விஞ்சையர், வித்தியாதரர், கருட காந்தருவர், சித்தகுழாம் இவர்கள பதினெண்கணத்தைச் சார்ந்தவர். பதினெண்கணம்: அசுரர், அந்தரா, அமரர், ஆகாயவாசிகள், இயக்கர், கருடர், கந்தருவர், கிம்புருடர், கின்னரர், சித்தர், நிருதர், பூதர், பைசாசர், போகபூமியர், முனிவர், விஞ்சையர், வித்தியாதரர் ஆகியோராவர். பன்னகர் ~ நாகர் (பன்னகம் - பாம்பு) திக்குப்பாலகர் - அட்டதிக்குப்பாலகர்: அக்கினி, இந்திரன், ஈசானன், குபேரன், நிருதி, யமன், வருணன், வாயு ஆகியோர். தாளகுறுநகை ~ முத்துபோன்ற புன்னகை; தாளம் - முத்து; குறுநகை - புன்சிரிப்பு.

உரை - தாவள்ளியம் - வெண்மைத்தன்மை. (தவளம் - வெண்மை) ஆணிமுத்து - வயிரமுத்து; உயர்ந்தமுத்து.

பா.வே. - 1. காந்திருவர்.

## Kuḷāṅkaḷuṭaṉ intiraṉ

*kiṉṉararkim puruṭarviñcai karuṭakān*
*taruvarcitta kuḷāṅkaḷ cūḻap*
*paṉṉakarum varutikkup pālakarañ*
*caliceytu pārvai nōkka*
*muṉṉaruṟu muṉikkaṇaṅka ḷācipala*
*moḻintumiku viṉaiyaṅ kūṟat*
*taṉṉikari lintirāṇi taraḷakuṟu*
*nakaiviḻiyiṉ cāyal kāṭṭa.*

## Intiraṉ and his Courtiers

Kiṉṉarās, Kimpuruṭas, Vittiyātaras,
Karuṭas, Kāntaruvas and [2]Cittar groups
Surrounded him; the Nākās
And the guardians of the directions
Saluted and gazed upon him;

2. These groups are eighteen in number: Acuras, Antaras, Immortals, denizens of the sky, Yakshas, Garudas, Gandharvas, Kimpurushas, Kiṉṉaras, Siddhas, Nirutas, Bhutas, Paisachas, denizens of Bhoga Bhumi, sages, experts in illusion and Vidhyadharas.

Concourses of great sages blessed him
And expressed themselves sweetly.
Intirāṇi who has none to equal her
Smiled through her pearly teeth.

(அமரர் சூழ்ந்திருத்தல்)

153. விரிந்தபுய மிரண்டினொடும் படர்ந்தவிசை
யத்திருவும் விளங்கிக் காட்டப்
புரிந்தருளும் விழியினொடு சிவந்தபவ
ளக்கனிவாய் பொலிந்து காட்டச்
சரிந்தடைகாய் குறுந்தொழுவர் தாங்கிமுன்னே
கைநீட்டத் தாம ரைத்தா
ணெரிந்தமுடி யமரர்களும் பெருந்துதிகள்
பரவவவ ணிகழ்ந்த வேலை.

எ-து. மகமேருவுக்குச் சமதையாகிய இரண்டு விரிந்த புயங்களிலும் விசய லட்சுமியானவள் மிகுந்த கிருபையோடும் பிரகாசிக்கவும், நீலோற்பலம் போன்ற இரண்டு நேத்திரங்களுடனே செம்பவளம் போன்ற திருவாய் மலரானது பிரகாசிக்கவும், [1]அடைகாயோடுங்கூடிய பரிமள திரவியம் முதலாகியதை அடைப்பக்காரர் தாங்கி முன்னே கை நீட்டிக்கொடுக்க வாங்கி வாய்மடுத்தும், தாமரைக் கமலத்தினை யொத்த பாத பங்கயங்களிலே [2]கிரீடங்களோடு கிரீடங்கள் தாக்கி நெரியத்தக்கதாய்த் தேவாதிகள் தண்டன் சமர்ப்பிக்கத் தக்கதாக வீற்றிருந்தான் இந்திர மகாராச னென்றவாறு. (5)

விசயத்திரு - விசயலட்சுமி, அட்டலட்சுமியருள் ஒருத்தி அட்டலட்சுமியர் - இராசசியலட்சுமி, கீர்த்திலடசுமி, சௌரியலட்சுமி, தனலட்சுமி, தானியலட்சுமி, தைரியலட்சுமி, விசயலட்சுமி, வித்தியாலட்சுமி ஆகியோர் அடைகாய் - வெற்றிலைப்பாக்கு குறுந்தொழுவர் - ஏவல் செய்யும் இளையோர். அவண் - அவ்விடம்

**உரை** - சமதை - சமம் அடைப்பைக்காரர் - வெற்றிலைச்சுருள் எடுத்துக் கொடுப்போர் கிரீடம் - முடி.

**பா.வே.** - 1. மடககாய் வெத்திலை வாசனையோடுங்கூடிய வேல வலங்க முதலாகியதை

2 கிறீகிடஙகள்.

## Amarar cūḻntiruttal

*virintapuya miraṉṭiṉoṭum paṭarntavicai*
*yattiruvum viḷaṅkik kāṭṭap*
*purintaruḷum viḻiyiṉoṭu civantapava*
*ḷakkaṉivāy polintu kāṭṭac*
*carintaṭaikāy kuruntoḻuvar tāṅkimuṉṉē*
*kainīṭṭat tāma raittā*
*ṇerintamuṭi yamararkaḷum peruntutikaḷ*
*paravavava ṉikaḻnta vēlai.*

## The Immortals

His vast shoulders glowed
With the presence of victory-goddess;
The two eyes were grace-laden, as the lips
Like red coral shined brilliantly.
Youthful servers held towards him
Plates of scented betel nuts.
His lotus feet were crowded
By the crowns of the immortals
Who were singing worshipfully.

(இந்திரன் கயிலையை நோக்கி)

154. **கங்கைமுடி வைத்தசடை சங்கரனைத் தொழற்குரிய கால மென்னத்**
**தங்கமரர் சங்கமொடு விங்கிதமாங் கயிலாயத் தடத்தை நோக்கி**
**மங்கலமாய் வெங்கயமேல் மங்கைசசி யிந்திரன்மா தவர்கள் சூழப்**
**பொங்குகடல் தங்குநடு வங்கமிசைத் திங்களெனப் பொலிவ தானான்.**

எ–து. கங்கையைச் சடாமகுடத்திலே தரிக்காநின்ற சங்கரனாகிய பரமசிவனைத் தொழுதற்குரிய மிகுந்த புண்ணிய காலமாகிய பிரதோஷகாலம் வந்த படியினாலே இந்திர மகாராசனானவன், சகல தேவர்களும் முனிவர் கூட்டங்களும் சூழ்ந்துவர, இந்திராணி சமேதனாய் அயிராவதத்தின் மேலாரோகணிதமாய், மங்கல வாத்தியமாகிய பேரிகை, குடமுழா, சல்லரி, மல்லரி, தேவதுந்துமி, பணகவாத்தியம், கோமுக வாத்தியம், மண்டூக வாத்தியம், பம்பை, மத்தளம் முதலாகிய வாத்தியங்கள் முழங்கத்தக்கதாய், அலைகளினாலே பொங்கிப் பிரகாசிக்கப்பட்ட சமுத்திர நடுப்பிரதேசத்திலே மிதக்காநின்ற கப்பலிலே பூரணச்சந்திர னேறிநடத்தினா லெப்படியோ அத்தன்மை யாய்க் கயிலை வரையைக்குறித் தெழுந்தருளினான் இந்திர மகாராசன் என்றவாறு. (6)

தடம் - வழி அமரர்சங்கம் - தேவர்கூட்டம். இங்கிதம் - இனிமை. வெங்கயம் - விரைவு உடையயானை, ஐராவதம. சசி - இந்திராணி. வங்கம் - மரக்கலம்.

உரை - பிரதோஷகாலம் - சூரியன் மறைவிற்கு முன்னும பின்னும் மூன்றே முக்கால் நாழிகை நேரம். ($3\frac{3}{4}$ நாழிகை -$1\frac{1}{2}$ மணி). இரவின் முதல் சாமநேரம். திரயோதசித திதியில் இக்காலம் சிறப்புடையது.

## Intiraṉ kayilaiyai nōkki

*kaṅkaimuṭi vaittacaṭai caṅkaraṉait toḻaṟkuriya kāla meṉṉat*
*taṅkamarar caṅkamoṭu viṅkitamāṅ kayilāyat taṭattai nōkki*
*maṅkalamāy veṅkayamēl maṅkaicaci yintiraṉmā tavarkaḷ cūḻap*
*poṅkukaṭal taṅkunaṭu vaṅkamicait tiṅkaḷeṉap poliva tāṉāṉ.*

## Intiraṉ to Kailas

As it was time to worship Civaṉ
Who sports Kaṅka on his matted hair,
Intiraṉ moved towards Kailas
With his company of immortals
Riding the elephant along with [3]Caci
And accompanied by great sages.
He was like a full moon
Glowing on a ship in mid-sea.

(எதிரில் வேடர் கூட்டம்)

155. இவ்வண்ண மிவனேக விலங்குகயி லைக்கிரிவீற்
றிருக்குந் தேவன்
மைவண்ணக் கிராதகனாய் வருபூத கணங்களொடு
வேட மாறிக்
கைவண்ணச் சிலையோடு கடல்திரண்டா லெனவழியிற்
காண வந்தான்
செய்வண்ண மொன்றறியான் தேவர்கோன் ஈதென்ன
செயலென் றெண்ணி.

3. Another name for Intirāṇi.

எ-து. இந்தப் பிரகாரஞ் சர்வ மங்கலங்களுடனே கூடிய தேவராசனானவன் கயிலாய மார்கத்தைக் குறித்துப் போகும்போது அந்தக் கயிலாய பதியாகிய சிவனானவர் நீலகிரியைப் போன்ற கரிய திருமேனியையுடைய வேடரூபமாய் வடிவெடுத்துக் கையிலே தாங்கிய காண்டீபமும், அதிற் பூட்டுகின்ற பாண சந்தானங்களும், கடலைப்போல சூழ்ந்து வராநின்ற வேடர் கூட்டங்களும் வரும்படியாகிய காரணத்தைக் கண்டு, ஈதென்ன ஆச்சரியமாயிருக்கிறது? நாம் சிவனைச் சேவிக்க வந்தவர்க ளிந்த வேடர்களைப் பார்க்க, அச்சமில்லாம லெதிரிலே வரப்பட்ட விதமென்ன வென்று நினைத்துக் கோபித்தான் இந்திர மகாராச னென்றவாறு (7)

இலங்கு - விளங்குகின்ற. மைவண்ணக்கிராதகன் - கிராதன் - கரியநிற வேடுவன். சிலை - வில். என - உவமை உருபு.

**உரை** - பாணசந்தானங்கள் - அம்புத்தொடர்கள்

## Etiril vēṭar kūṭṭam

*yivvaṇṇa mivaṉēka vilaṅkukayi laikkirivir̲ r̲irukkun tēvaṉ*
*maivaṇṇak kirātakaṉāy varupūta kaṇaṅkaḷoṭu vēṭa mār̲ik*
*kaivaṇṇac cilaiyōṭu kaṭaltiraṇṭā leṉavaḷiyir̲ kāṇa vantāṉ*
*ceyvaṇṇa moṉr̲ar̲iyāṉ tēvarkōṉ īteṉṉa ceyaleṉ r̲eṇṇi.*

## The Hunters

As he went forth thus, the Lord
Who resides in beautiful Kailas
Changed himself into a dark hunter
And strode forth carrying his bow,
Accompanied by his attendant spirits
Verily like an immense ocean
To meet him; the King of gods
Did not know what to do
And was angered by such impudence.

(இந்திரனை மதியாமல் வந்த கூட்டம்)

156. மதியாது வொதுங்காது வருவேடர் திரட்சிகண்டு மனதிற் கோப
முதிராகச் சினத்தோடு கண்சிவந்து மெய்விதிர்த்து வெருட்ட நோக்கி
யெதிராக வருவேடர்க் கித்தனையோ வெனவுருக்கி யிடியிற் றாக்கு
மதிரான மொழியுரப்பிக் கடிதான வுத்தரமொன் றறைவ தானான்.

எ-து. தேவர்களுக்கெல்லாம் அரசனாகிய இந்திரனானவன் மிகுந்த கோஷ்டத்துடனே வருகிறதைக் கண்ட வேடரானவர்கள் சற்றும் மதியாமல், ஒதுங்காமல், வீரங்களை மதித்துக்கொண்டு வரும்போது, தேவராசனுடைய இரண்டு கண்களும் செவ்வானம் போலச் சிவந்து புயங்களானவை துடிக்க, வாயிலே அக்கினிப் பொறிகள் சிதற ஆக்கிரமித்துக் கர்ச்சித்தான். அந்தச் சத்தமானது கோடைக்காலத்தில் அனேகமாகிய இடிகள் இடித்தது போலத் திரிலோகங்களும் செவிடுபட்டுப்போகப் பின்னையும் மிகுந்த கோபக் குரோதனாக, வந்த வேடரைப் பார்த்து ஆங்காரப்பட்டுச் சிங்கத்தைப்போலச் சீறிப் பயங்கரத்தைச் செய்தலைக்குறித்த இந்திரனானவன், நமக்கு எதிர்த்து வருகின்ற வேடர்கூட்டங்களுக்கு இத்தனைக் கர்வமோவென்று அவமதித்தவனாய்க் கொடூரமாகிய மொழியினாலே உரப்பிக் காடண்ணியமாயந்த வேடரைப் பார்த்தொரு மொழி கூறுகின்றா னென்றவாறு. (8)

திரட்சி - கூட்டம். முதிர் - மிகுதி மெய்விதிர்த்து - உடல்நடுங்கி வெருட்ட - அச்சத்தோடு அதிர் - நடுக்கம். உரப்பி - அதட்டிப்பேசி. உத்தரம் - மொழி.

**உரை** - குரோதன் - பகைவன். காடண்ணியமாய் - காட்டினிடத்தில்.

## Intiraṉai matiyāmal vanta kūṭṭam

*matiyātu votuṅkātu varuvēṭar tiraṭcikaṇṭu maṉatiṟ kōpa*
*mutirākac ciṉattōṭu kaṇcivantu meyvitirttu veruṭṭa nōkki*
*yetirāka varuvēṭark kittaṉaiyō veṉavurukki yiṭiyiṟ rākku*
*matirāṉa moḻiyurappik kaṭitāṉa vuttaramoṉ ṟaṟaiva tāṉāṉ.*

## The Company that Came

The hunters came without a care,
Nor did they turn aside.
Looking on them Intiraṉ grew wrothful.
His eyes glowed red, his body sweated
And he stared spewing anger
At the daring of the hunters.
Shouting thunderously at their pride
He began to speak to them:

**(எதிர் வந்த வேடரைக் கோபித்தல்)**

157. **பாதிமதி கங்கையணி பரமனையாம் பணியவரும் பாதை தன்னி**
**னேதுமிலாக் கிராதகநீ யெதிராக வருவதென்னிக் கணத்தி னும்மைக்**
**காதுமுனே யோடியொளித் திடுமினென வுரைப்பவெதிர் கால காலன்**
**வேதைதர முன்குதித்துக் கைவாளிற் சிரம்புடைப்ப விபுதர் கோமான்.**

எ-து. அர்த்தசந்திரனையும் கங்காபவானியையும் தமது சடாபாரத்திலே தரித்தருளுகின்ற கயிலாய பதியாகிய சிவனை யான் சேவிக்க வருகின்ற மார்க்கத்திலே மிகுந்த இருளையுடைய ஆரண்ணியத்திலேயும் பர்வதத்திலேயும் இருக்கின்ற வேடர்குலத்தாராகிய, குகைகளிலே வாசம் பண்ணுகின்ற விழிஞர் நீங்கள், சற்று மச்சமில்லாமல் நமக்கெதிராக வருகையினால் இந்தத் தற்காலத்திலே சின்னா பின்னமாகக் கண்டித்து விடுவேன். அதற்கு முன்னே ஓடி யொளித்துப் பிராணனைத் தப்புவித்துக் கொள்ளுவீ ரென்றிந்திரன் கூறப், பூர்வ காலத்திலே மார்கண்டேயர்க்காக எதிர்த்து எமனை உதைத் தவரைப் பாதுகாத்தருளிய வேடரானவர் சீறித் தம்முடைய கையிலிருக்கின்ற வாளினாலே ஓங்கியடிக்கத் தேவராச னென்றவாறு. (9)

பாதிமதி - பிறைச்சந்திரன். வருவதென்னிக் கணத்தில் - வருவது என் இக்கணத்தில் - என் - என்ன. காதுமுனே - காதுமுன்னே - காதுதல் - கொல்லுதல் ; கொல்லுமுன். காலகாலன் - சிவபெருமான்; காலனுக்குக்காலன்; காலன் - எமன். வேதை - துன்பம். புடைப்ப - அடிக்க. விபுதர்கோமான் - தேவர்தலைவன்; இந்திரன். அர்த்தம் - அருத்தம் - பாதி. பவானி - பார்வதி; இங்கு கங்கையாகிய தேவி என்க. ஆரண்ணியம் - காடு. பர்வதம் - பருவதம் - மலை. விழிஞர் - இழிஞர் - கொடியவர்; வகரம் உடன்படுமெய்.

## Etir vanta vēṭaraik kōpittal

*pātimati kaṅkaiyaṉi paramaṉaiyām paṇiyavarum pātai taṉṉi*
*ṉētumilāk kirātakaṉī yetirāka varuvateṉṉik kaṇatti ṉummaik*
*kātumuṉē yōṭiyoḷit tiṭumiṉeṉa vuraippavetir kāla kālaṉ*
*vētaitara muṉkuṭittuk kaivāḷiṟ cirampuṭaippa viputar kōmāṉ.*

## Intiraṉ Chides the Hunters

'I am coming this way
To salute the Lord who sports
The crescent moon and Kaṅka.
How dare a despicable hunter like you
Cross my path? Before I kill you
This instant, run and hide yourself.'
When he said this, the subduer of [4]Yama
Leapt causing pain and knocked Intiraṉ
On the head with his sword.

4. An epithet of Civa.

### (வேடர் இந்திரனைத் தாக்குதல்)

158. சோதிமகு டந்தகர்ந்து முடியுடைந்து சோகமுறத் துணையாம் வானோர்
வேதைசமுத் திரமூழ்கி மெய்ம்மறந்தா ருய்வதற்கே வுபாய மெண்ணிப்
பாதிமதி யணிந்தவனைப் பணிந்துமனப் பூசையினாற் பத்தி செய்யப்
போதவவ சந்தவிர்ந்து விழிதிறக்க வெதிரில்புராந் தகனாம் வேடன்.

எ-து. அந்தக் கயிலாயபதியாகிய வேடனானவன் [1]அலகு கொண்டு வோங்கியடித்த மாத்திரத்திலே மிகுந்த காந்தியையுடைய நவரத்தின கசிதமாகிய கிரீடமானது உடைந்து, இந்திரனது சிரமானது பிளந்து, உதிரப் பிரவாக மெடுப்ப மூர்ச்சித்தான். அதைத் தேவர்கள் கண்டதிசயித்துத் துன்ப சாகரத்தினமுந்தினார்கள். அந்தச் சமயத்தில் இந்திர மகாராசனானவன் மூர்ச்சை தெளிந்து கயிலாயபதியைப் பிரதோட காலத்தைக் குறித்துச் சேவிக்கவந்த நமக்கிந்த ஆபத்து வரவேண்டிய காரணமென்னவென் றவரைத் தியானித்துப் பஞ்சேந்திரியங்களை உள்ளடக்கி ஞான ரூபனான வான்மாவை அறிவே சொரூபமாகக் கண்டவனாய், மனோபூசை செய்து பத்தி விசுவாசத்துடனே பார்க்கும்போது, எதிரிலே நின்று தோன்றும்படியான திரிபுராந்தகனென்னுங் கயிலாயபதியானவர் வேடரூபமாய் நிற்கக் கண்டதிசயித்தான் என்றவாறு. (10)

தகர்ந்து - நொறுங்கி அவசம - மயககம். வேதை சமுத்திரம் - துன்பக்கடல். புராந்தகன் - சிவன்; புரம் - முப்புரம்; அந்தகன் - அழித்தவன்

**உரை** - நவரத்தினகசிதமாகிய - நவரததினங்கள் பதிக்கப்பெற்றதாகிய. கசிதம் - பதித்தல். கிரீடம் - முடி பிரவாகம் - பெருக்கு பஞ்சேந்திரியம் - ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி மனோ பூசை - உடபூசை; உள்ளததில் பூசித்தல்.

பா.வே. - 1 அலவு

### Vēṭar intiraṉait tākkutal

*cōtimaku ṭantakarntu muṭiyuṭaintu cōkamuṟat tuṇaiyām vāṉōr*
*vētaicamut tiramūḻki meymmaṟantā ruyvataṟkē vupāya meṇṇip*
*pātimati yaṇintavaṉaip paṇintumaṉap pūcaiyiṉāṟ patti ceyyap*
*pōtavava cantavirntu viḻitiṟakka vetirilpurān takaṉām vēṭaṉ.*

### The Hunters attack Intiraṉ

The brilliant crown broke. Intiraṉ's head
Was broken, and he fell in a swoon.
His companions saw it and drowned
In a sea of sorrow. Seeking a way out

They worshipped within their hearts
Civan, and saluted him with devotion.
Intiran came back to his senses and opened
His eyes. Facing him was Civan the hunter.

(வேடனாகிய சிவன் ஆறுதல் கூறுதல்)

159. மெய்முழுதும் பூசைமலர் அவயவங்க டொறுமொய்த்து
விளங்க நோக்கி
கைவிதிர்த்திந் திரன்கனன்று பலபலவோ சனைநிகழ்த்தக்
கால கால
னையமிலை வெருவேனின் னகமறிவான் புகுந்தனமென்
றறைந்து வன்போ
டுய்யகங்கை நீராட்டி மலர்க்கரத்தால் தழுவிமிக
வினையஞ் சொல்வான்.

எ-து. தேவராசனாகிய இந்திர மகாராசனை யடித்த வேடராசனானவன் மிகுந்த புசபல பராக்கிரமத்துடனே எதிரிலே நிற்கப்பட்டவரை உற்றுப் பார்க்கும்போது, அவருடைய சிரசு முதலாகிய உறுப்புகளில், தான் மானத பூசையாகச் செய்த வெண்டாமரை, செந்தாமரை, செவ்வல், நீலோற்பலம், மந்தாரம், பாரிசாதம் முதலாகிய புட்பங்கள் நிறைந்திருக்கக் கண்டு, இவன் வேடனென்கின்ற வாசங்கை தீர்ந்து, கயிலாயபதியே யிந்த ரூபங்கொண்டு சகல தேவாதிகளும் அறிய அவமதி செய்தாரென்று நினைத்து ஆலகாலவிடத்தைப்போலச் சீறிக் குரோதமாய் இருப்பதனைக் கயிலாய பதியாகிய வேடரானவர் கண்டு, வாராய் தேவராசனே! நீ சந்தேகப்பட வேண்டா; நாம் உனது பத்தி சோதிக்க வந்தோமாகையால் இப்படிச் செய்தோமாகிலும், உனது தேகத்தி னொருவாதனை யில்லாமற் செய்கின்றோமென்று, தமது சடாமகுடத்தின் விளங்கிய கங்கையினாலே யாட்டுவித் தின்பமயமாக்கி [1]இஷ்டமுடைய அஸ்தத்தினாலே அவனது சரீரத்தைத் தடவிக் கொடுத்துப் பின்னும் [2]அருளிச்செய்தா ரென்றவாறு. (11)

கைவிதிர்த்தல் - கைநடுங்குதல கனன்று - கோபித்து. வெருவேனின்னகமறிவான் - வெருவேல் + நின் + அகம் + அறிவான் - வெருவேல் - அஞ்சேல்; நினது உள்ளத்தை அறிய விரும்பி வினையம் - விநயம் - மரியாதை.

**உரை** - மானத பூசை - மனோபூசை. ஆசங்கை - ஐயம் அவமதி - இழிவு. வாதனை - வருத்தம். அஸ்தம் - கை

பா.வே. - 1. தம்கையினாலே. 2. கூறுகின்றா.

### Vēṭaṉākiya civaṉ āṟutal kūṟutal

*meymuḻutum pūcaimalar avayavaṅka ṭoṟumoyttu viḷaṅka nōkki*
*kaivitirttin tiraṉkaṉaṉṟu palapalavō caṉaiṉikaḻttak kāla kāla*
*ṉaiyamilai veruvēṉiṉ ṉakamaṟivāṉ pukuntaṉameṉ ṟaṟaintu vaṉpō*
*ṭuyyakaṅkai nīrāṭṭi malarkkarattāl taḻuvimika viṉaiyañ colvāṉ.*

### Civaṉ comforts Intiraṉ

Looking on Civaṉ, Intiraṉ saw
That the flowers he had used for worship
Were now all over the Lord's body.
His hands a- shiver, Intiraṉ was angry
But on cogitation, he realised
This was indeed Civaṉ. Civaṉ said:
"I came thus to understand your heart".
He bathed Intiraṉ lovingly
With Kaṅka water and stroked him
With his lotus-hands. Then he said:

(சிவன் காரணம் கூறுதல்)

160. வனவேட்டை தனிலெனக்கு வகப்படுங்கான்
மிருகமதை வனத்தி னோட்டுந்
தொனியானீ யுரப்பினதால் கைவாளிற்
சிரம்புடைக்கச் சோக மானாய்
இனியேது மில்லைநிறை செல்வமதிற்
சுகமாக விருப்பா யென்னக்
கனியாது மனதுமிகச் சினமிகுந்தங்
கிந்திரனுங் கனன்று சொல்வான்.

எ-து வாராய் இந்திர மகாராசனே! யான் வனத்திலே வேட்டையாடலாகிய தொழிலைக் கருதி மிகுந்த இச்சையுடனே நமது பூதகணங்களோடு வளைத்துக்கொண்டு அனேக மிருகங்களை வதைத்து வருகின்ற காலத்திலே. நீ எங்களைப் பார்த்துச் சீறிக் கர்ச்சித்ததனாலே மிரண்டு மிருகங்கள் ஆரணியங்களிலும் பர்வதங்களிலும் திக்குத்திகாந்தங்களிலும் தெரியாமல் ஓடிப்போகச் செய்த காரணத்தினாலே உன்னைச சீறி எனது- வாளினாலே நீ

துன்பப்படத்தக்கதாக அடித்தோமாகிலும் அந்தச் [1]சோகத்தை உனது மனத்தின்கண் நினைக்க வேண்டாம். உமது துன்பம் அகல ஒரு நிமிடத்தில் நமது சடையினது சுரநதியினாலே நீக்கினோம். நீ நிறைந்த செல்வ மோங்கிய தேவ பட்டாபிடேகபதியாய் இன்பத்தை அனுபவிக்கக் கட்வையென்றருளிச் செய்ய, இந்திரனானவன் [2]கோபாக்கிரந்தனாகி வெகுண்டு மனம் பொறாமல் ஒரு வார்த்தை கூறுகின்றா னென்றவாறு. (12)

கான்மிருகம் - காட்டுமிருகம். வனத்தினோட்டுந்தொனியானீ - காட்டிற்குள் ஓடச்செய்யும் ஒலிக் குறிப்பால் நீயுரப்பினதால் - உரப்புதல் - வாயால் அதட்டுதல்.

**உரை** - கோபாக்கிரந்தன் - மிகுந்த கோபமுடையவன்; கோபம் + ஆக்கிரந்தன்; ஆக்கிரந்தன் - ஆட்பட்டவன்.

பா.வே. - 1. அபசாரத்தை. 2. கோபாக்கிராந்தனாகி.

## Civaṉ kāraṇam kūṟutal

*vaṉavēṭṭai taṉileṉakku vakappaṭuṅkāṉ*
*mirukamatai vaṉatti ṉōṭṭun*
*toṉiyāṉī yurappiṉatāl kaivāḷiṟ*
*ciramputaikkac cōka māṉāy*
*iṉiyētu millaiṉiṟai celvamatiṟ*
*cukamāka viruppā yeṉṉak*
*kaṉiyātu maṉatumikac ciṉamikuntaṉ*
*kintiraṉuṅ kaṉaṉṟu colvāṉ.*

## Civaṉ Gives a Reason

"When I went for hunting
And was about to catch my prey,
You raised sounds that scared
Them away; hence I knocked on your head
With my dagger. You became sad.
Henceforth you will have no problem.
You will be happy and prosperous."
But Intiraṉ's fury did not diminish
And he spoke wrathfully.

(சிவன் மீது இந்திரன் கோபித்தல்)

161. பிரதோட காலத்தி னுன்சேவைக் காய்ப்புகுந்த போதி னென்னைக்
கரவாக - வனவேட னுருக்கொண்டு தேவர்குழாங் கவலை யெய்தச்
சிரமீது புடைத்துநின்றா யுனையும்வச் சிராயுதத்தால் சிதைத்துப் பின்னென்
புரமீது போவனென நடுநடுங்கப் புராந்தகனும் பேச லுற்றான்.

எ-து. வாரீர் கயிலாய பதியே! பிரதோட [1]காலமென்றும்மைச் சேவிக்க வந்த என்னைக் கொடூரமாக எதிர்த்துவந்து சகல தேவர்களும் நகைபுரியத்தக்கதாய் அடித்துச் சோகப்பட அமைதி செய்தீராகையால், தர்மந்தப்பிச் செய்த இந்தக் காரணத்தைக் குறித்திந்தத் தற்காலத்திலே உம்மை யெனது வச்சிராயுததினாலே கபாலமானது திறக்கும்படியாய் அடித்து, யான தேவலோகத்துக்குப் போவேனென்று கூறக்கேட்டுச் சிவன் மீட்டுந் திருவாய் மலர்ந்தருளுகின்றா ரென்றவாறு (13)

குழாம - கூட்டம். வச்சிராயுதம் - இந்திரனது ஆயுதம். கரவாக - மறைவாக. கபாலம் - தலைஓடு

பா.வே. - 1 பாலமென்று.

## Civaṉ mītu intiraṉ kōpittal

*piratōṭa kālatti ṉuṉcēvaık kāyppukunta pōti ṉeṉṉaik*
*karavāka vaṉavēṭa ṉurukkoṇṭu tēvarkuḻāṅ kavalai yeytac*
*ciramītu puṭaittuniṉṟā yuṉaıyumvac cirāyutattāl citaittup piṉṉeṉ*
*puramītu pōvaṉeṉa naṭunaṭuṅkap purāntakaṉum pēca luṟṟāṉ.*

## Indra's Anger

'I wished to salute you
At the time of [5]Pradosha. But you
Dissembled, appeared as a hunter
And knocked me on the head
When the godess became worried.
I shall knock you with my thunderbolt
And only then shall I return
To my city." Civaṉ now spoke:

5. Pradosha is the evening time when Civa is supposed to dance in the heavens.

(நீ அருச்சுனனாய்ப் பிறப்பாய் என இந்திரனுக்குக் கூறுதல்)

162. துவாபரத்திற் புவிபாரந் தீரநந்த நந்தனனாய்த் தோன்றுந் தேவன்
அவாவுறுமப் பாண்டுமக்க ளைவர்நடு வருச்சுனனா யவத ரித்து
உவாமதிபோற் பாசுபதம் பெறவென்னைத் தவமியற்றி யுன்கை வில்லாற்
றவாசிரமுந் தகர்ந்துகநீ புடைத்திந்தப் பழிதீரச் சார்வா யென்றான்.

எ-து. இந்திர மகாராசன் மிகுந்த கோபாக்கிரந்தனாகி வசனிப்பதைக் கேட்ட கயிலாயபதியானவர் அருளிச்செய்கின்றார்: வாராய் இந்திர மகாராசனே! நீ விருதாவிலே கோபங்கொள்ளாதே. அனேக காலங்கழிந்த பின்பு வரப்பட்ட மூன்றாம் யுகமாகிய துவாபர யுகத்திலே, பூமி தேவியானவள் முறையிட புவி பாரந் தீரத்தக்கதாய்த் துஷ்ட நிக்கிரக சிட்ட பரிபாலனத்தைக் குறித்து ஸ்ரீ விஷ்ணு பகவானானவர் தமது அதிசாமர்த்தத்தால் வாசுதேவர் தேவகி புத்திரனாய்க் கிருஷ்ண பகவானாக அவதாரஞ்செய்து, ஆயர்பாடியிலே நந்தகோபாலன் மனையிலே தேவகி, யசோதை மனங்களிகூரத் தவழ்ந்து விளையாடுங் காலங்களில், சந்திர வங்கிசபதியாகிய பாண்டு மகாராச புத்திரராய் [1]அவதரிக்கும் பஞ்சபாண்டவர்களின் மத்தியில் நீ யருச்சுனனாய் அவதரித்துப் பூரணச் சந்திர பிம்பம்போன்ற விபூதி தூளிதனாகி நம்மைக் குறித்துத் தவஞ்செய்து, பாசுபதம் பெற்றுக்கொள்ளும் படியாகிய காலத்திலே இந்த ரூபத்துடனே உனது தவச்சாலைக் கெழுந்தருளுவோம். அப்போது உன்கை வில்லினாலே யெனது மண்டை கலங்க அடித்து உனது பழியைத் தீர்த்துகொண்டு பாசுபதமும் பெறுவாயென் றனுக்கிரகித்தார் கயிலாயபதி யென்றவாறு. (14)

துவாபரம் - நான்குயுகங்களில் மூன்றாவது யுகம் - நான்கு யுகம் - கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்பன. நந்த நந்தனன் - கண்ணபிரான்; நந்தன் - நந்தகோபன்; கண்ணனை வளர்ந்த தந்தை; நந்தனன் - மகன். உவாமதி - முழுநிலவு; உவா - நிறைவு. பாசுபதம் - பசுபதியின் வில்லம்பு; பசுபதி - சிவபெருமான

**உரை** - விருதா - வீண். துஷ்ட நிக்கிரகம் - தீமையை அழித்தல சிட்டபரிபாலனம - நன்மையைக் காத்தல். சாமர்த்தத்தால் - திறமையினால். வங்கிசம - வங்கிஷம் - வமிசம் விபூதி தூளிதன் - நீறு பூசப்பட்டவன்; தூளி - தூள், பொடி. தூளிதம் - பூசப்பட்ட

பா.வே. - 1. அவதரித்த

## Nī aruccuṉaṉāyp piṟappāy eṉa intiraṉukkuk kūṟutal

*tuvāparattiṟ puvipāran tīrananta nantaṉaṉāyt tōṉṟun tēvaṉ*
*avāvuṟumap pāṇṭumakka ḷaivarnaṭu varuccuṉaṉā yavata rittu*
*uvāmatipōṟ pācupatam peṟaveṉṉait tavamiyaṟṟi yuṉkai villāṟ*
*ṟavāciramun takarntukanī puṭaittintap paḻitīrac cārvā yeṉṟāṉ.*

## Intiraṉ will be Aruccuṉaṉ

'The Lord will be born as the son
Of Nanta in Dwapara Yuga
To lessen the weight on earth.
You will be born as Aruccuṉaṉ,
The middle brother of the Pāṇṭavās,
Perform austerities to gain the Pācupatam
That is bright like the full moon.
You could then knock my head
With your bow and be avenged.'

**(சிவனிடம் அசுரன் தோன்றுதல்)**

163. **பின்னுநய வசனங்கள் இந்திரர்க்குப்**
**பேசியியல் வரங்கொ டுத்துப்**
**பொன்னுலக மடைந்தபின்னைப் புராந்தகனு**
**மனப்புழுக்கம் பொங்கப் பொங்கித்**
**தன்னைசிரம் புடைப்பனென்ற வாசவனைச்**
**சிரம்புடைக்கத் தான வேந்திரன்**
**முன்னுருவி னுதிக்கவெண்ணி நினைந்தளவி**
**னாகாச முட்டு மெய்யன்.**

எ-து. கயிலாயபதியானவர் பின்னும் அனேகமாகிய இனிய ரஞ்சித [1]வசனங்களினாலே பலபல விதமாகிய நயவார்த்தைகள் கூறி வேண்டிய வரங்களை [2]யருளிச் செய்ய, மனது களங்கந் தீர்ந்து இந்திர மகாராசனானவன் சகல தேவர் கூட்டங்களுடனே பொன்னுலகிற் [3]போய்ப் பஞ்ச தாருவின் நிழலில் இன்புறறிருந்தான். அதன் பின்பு [4]திரிபுராந்தகரானவர் தம்முடைய பிரபாவத்தைத் தெரியாமல் வசனித்த இந்திரனைக் குறித்து மனப் புழுக்கத்தினாலே தம்மிட திவ்விய திருமேனிகளிலே வேர்வைகளானவை பெருகிப் பூமியிலே பிரவேசிக்க, அதனின்றும் ஆலகால விஷத்தைப்போலொரு அசுரனானவன் அண்டகடாகங்களெல்லாம் நடுநடுங்கத்தக்கதாக வுற்பவித்து, மகாமேருவைப்போன்ற புயங்கள் விளங்கிட ஆகாயத்தை அளாவ நின்ற சிரசுடனே கூடினவனாய் அகன்ற மார்பினை யுடையவனாகிப் பராக்கிரம சாலியா யுதித்து வந்தா னென்றவாறு. (15)

நயவசனம் - இனியவார்த்தை. புராந்தகன் - புரம் அந்தகன் - முப்புரங்களை அழித்தவன், சிவபெருமான் வாசவன் - இந்திரன் தானவேந்திரன் - சிவபெருமான்.

**உரை** - ரஞ்சிதம் - இரஞ்சிதம் - இனிமை, இன்பம் அண்டகடாகம் - அண்டகோளமுகடு.

பா.வே. - 1 சொல்லினாலே 2 கொடுக்க 3 போய் 4 வேடனாகி வந்த திரிபுராந்த காலகண்டனுக்குத் தன்னெதிரியறியாது இந்திரன் இப்படியாகித துன்மார்க்க வார்த்தையினாலே உமது மண்டையைப் பதிலாக நானுடைக்கிறேன் என்று கூறிய மொழியை யாலோசிக்கும் காலமெல்லாம் தாமதம் பிரவேசிக்க அதனின்றும ஆலகாலம் போலும், பிரளய காலாக்கினி போலும் ஒரு அசுரனானவன்...

## Civaṉiṭam acuraṉ tōṉṟutal

*piṉṉunaya vacaṉaṅkaḷ intirarkkup*
*pēciyiyal varaṅko ṭuttup*
*poṉṉulaka mataintapiṉṉaip purāntakaṉu*
*maṉappuḷukkam poṅkap poṅkit*
*taṉṉaiciram puṭaippaṉeṉṟa vācavaṉaic*
*ciramputaikkat tāṉa vēntiraṉ*
*muṉṉuruvi ṉutikkaveṇṇi niṉaintaḷavi*
*ṉākāca muṭṭu meyyaṉ.*

## An Acuraṉ from Civaṉ

Civaṉ spoke further words of affection
To Intiraṉ and gave the boon.
Intiraṉ returned to his heaven.
Later Civaṉ was deeply disturbed
In his heart since Intiraṉ had wished
To knock him down.
As frustration overflowed him
There appeared from him an immense form
Whose body seemed to knock at the heavens.

(அசுரனின் தோற்றம்)

164. கடல்பருகு குகைபகுவா யிருகடையிற் பிறையெயிறு காண வெங்கட்
புடைவடவை பொழியபுயம் வடகிரியி னொளிர்பெருகு பொங்கு தீரந்
திடமுடைய விருட்பிழம்பு திரண்டதெனக் காலடிகள் செகத்தை யொன்றா
யடியளப்ப தெனமுதுகி னமர்ந்தமயிர் வனங்காட்ட வருகின் வந்தான்.

எ-து. பின்னையும் அந்த வசுரேந்திரனானவன் எப்படித் தோற்றஞ் செய்தானென்றால், சத்த சாகரங்களையும் பானம் பண்ணும்படியான குகைபோன்ற கடைவாய்களிலே அர்த்த சந்திரனைப் பிளந்து இரண்டுபக்கங்களிலும் வைத்ததுபோலும் கோர தந்தங்கள் பிரகாசிக்கவும், இரண்டு நேத்திரங்களும் இரண்டு [1]பர்வதம் எரிவதுபோல அக்கினியைச் சொலிக்கவும், அவனுடைய பெருமூச்சானது பிரசண்ட மாருதங்களை வீசவும், அவனுடைய புயங்களானவை மகாமேருவைப் போல பூரித்திருக்கவும், தேகாந்திரமானது நீலகிரியைப் போலத் தோற்றவும், அவனது காலடிகளானவை உலகத்தையெல்லாம் ஓரடியாக அளக்கவும், முதுகிலே தோன்றும் உரோமங்களானவை இருண்ட ஆரணியங்களைப் போலக் காட்டவும் அந்த கயிலாயபதிமுன் தோன்றி நின்றா னென்றவாறு. (16)

பகுவாய் - பேழவாய், பெருவாய். இருகடை - இரண்டுபக்கம. வெங்கட்புடை - கொடிய கணகளில; கண் + புடை; புடை - ஏழன உருபு. வடவை - ஊழிக்காலத்தீ. வடகிரி - வடமேருமலை.

உரை - அர்த்தசநதிரன் - பிறை நிலவு. பிரசண்டமாருதம் - பெருங்காற்று ; மாருதம - காற்று. தேகாந்திரம - உடலின் அளவு

பா.வே - 1 மலை

## Acuraṉiṉ tōṟṟam

*kaṭalparuku kukaipakuvā yirukaṭaiyiṟ piṟaiyeyiṟu kāṇa veṅkaṭ*
*puṭaivaṭavai poḻiyapuyam vaṭakiriyi ṉoḷirperuku poṅku tiraṉ*
*tiṭamuṭaiya viruṭpiḻampu tiraṇṭateṉak kālaṭikaḷ cekattai yoṉṟā*
*yaṭiyaḷappa teṉamutuki ṉamarntamayir vaṉaṅkāṭṭa varukiṉ vantāṉ.*

## The Acura

In the cave of a mouth
That could drink up oceans, the Acura
Sported teeth that were bent like crescents;
His eyes spewed the fire of deluge;
The shoulders rose like the *Mēru* Mountain;
His form was a mass of darkness.
His feet could measure the earth
With a single step; the hair on his back
Was like forests; he appeared before Civaṉ.

(அசுரன் பிரமனைக் குறித்துத் தவம் செய்தல்)

165. குருசரணந் தொழுதேத்தி யெமதுபணி
யென்னவென விரக்க நீயப்
புரந்தரனா ருலகனைத்தும் புரக்கவர
மளித்தமெனப் புகழ்ந்து போனான்
நிரந்தரமும் பெருவிரலை நிலமூன்றித்
தவநிலையி னின்றான் வேடங்
கரந்துசிவன் பரிவாரத் தொடுங்கயிலைக்
கடிதேகிக் கலந்தா னன்றே.

எ-து. அப்படியாய் அவதரித்த அசுரேந்திரனானவன் அந்தக் கயிலாய பதியினுடைய இரண்டு திவ்விய சரணார விந்தங்களையும் அட்டாங்கம் முதலாகிய தெண்டன் சமர்ப்பித்து அடியேனைச் சிருட்டித்த காரணத்தை எனக்கருளிச் செய்ய வேணுமென்று [1]விண்ணப்பஞ் செய்ய, வாராய் அசுரேந்திரனே! இந்தத் தற்காலத்திலே நீயிவண் நீங்கிச் சத்தியலோகமாகிய மனோவதி நகரிடத்திலே மானத தீர்த்தத்தின் கரையிலே பிரமாவை நோக்கித் தவம் செய்து அவர் வரபாலனத்தினாலே இந்திரனைச் செயித்துப் பொன்னுலகத்தை அரசாட்சி செய்தாளக் கடவாய் என்றனுக்கிரகஞ்செய்து, தமது கணங்களுடனே கயிலாயத்துக் கெழுந்தருளினார். அப்பொழுதந்த அசுரேந்திரனானவன் சத்திய லோகத்துக்குப் போய் பஞ்சாக்கினி மத்தியில் இருந்து அகோரமாகிய தவத்தினை யூபத்தம்பத்தின் உச்சியிலொருகாற் பெருவிரலை யூன்றித் தவஞ்செய்து ஞானேந்திரியம், கன்மேந்திரியங்களைச் சேட்டிக்காமல் இறுத்தி அந்தக்கரணத்தை யறிவிலே யொடுக்கி, யான்ம தியானபரனாய் நிற்சல புத்தியுக்தனாய் அந்த நிர்மல சொரூபனாகிய பிரம்மாவைக் குறித்து அரிதாகிய தவஞ்செய்யத் தொடங்கினான் காலநேமி என்றவாறு. (17)

சரணம் - திருவடி. இரக்க - வேண்ட. புரக்க - காக்க, அரசுபுரிக.

**உரை** - சிருட்டித்தல் - தோற்றுவித்தல் பஞ்சாக்கினி - ஐந்து தீ - நாற்றிசைக்கு நான்கு தீக்குண்டம், மேலே சூரியன்; இராகம், காமம், கோபம், சடம், தீபனம் என்னும் ஐந்துமாகும். அகோரம் - உக்கிரகம், கொடுமை. யூபத்தம்பம் - யக்ஞசாலையில் நடப்படும் ஒருதூண்; யக்ஞத்தில் பலிகொடுத்தற்குரிய பசுவினைக் கட்டி வைத்தற்குப் பயன்படுத்தப்படுவது. ஞானேந்திரியம் - அறியும் கருவிகளாகிய உறுப்புகள். அவை - மெய், வாய், கண், மூக்கு, செவி. கன்மேந்திரியம் - செயலாற்றும் உறுப்புகள் அவை - தொடை (உபத்தம்), கை (பாணி), கால் (பாதம்), குதம் (பாயுரு), சொல் (வாக்கு) என்பன, சேட்டித்தல் - செயற்படுத்துதல், சேட்டியாமல் - செயற்படுத்தாமல், அசைவற்றநிலையில், அந்தக் கரணம் - உட்கரணமாகிய மனம் ; கரணம் - உறுப்பு, செயல். நிற்சலம் - அசைவின்மை. நிர்மலம் - நிருமலம் - மாசற்ற.

பா.வே. - 1. இரந்துகூற.

## Acuraṉ piramaṉaik kuṟittut tavam ceytal

*kurucaraṇan toḻutētti yematupaṇi*
*yeṉṉaveṉa virakka nīyap*
*purantaraṉā rulakaṉaittum purakkavara*
*maḷittameṉap pukaḻntu pōṉāṉ*
*nirantaramum peruviralai nilamūṉṟit*
*tavanilaiyi ṉiṉṟāṉ vēṭaṅ*
*karantucivaṉ parivārat toṭuṅkayilaik*
*kaṭitēkik kalantā ṉaṉṟē.*

### The Acura's Austerities

After saluting the teacher Civaṉ
He asked: 'What is your command?'
'I am giving you the boon
To gain the heavens of Intiraṉ',
Civaṉ said, and withdrew.
For a long time, the Acura dug his thumb
Deep into the earth, and was immersed
In his austerities. Civaṉ
Gave up his hunter's dress and returned
To Kailas speedily with his attendants.

(தவத்தைக் கெடுக்கச் சூழ்ச்சி)

166. தவசிற் சூரன் றழன்மூலத் தணலை மூட்டித் தலமெங்கு
மவச முறப்பொன் னுலகழல வறிந்திந் திரனும் அமரர்குழாம்
நவசுந் தரமே னகைகணிகை மாதர் பலரை நடாத்தியவண்
டிவசம் பலவா யினவிடரைச் செய்துஞ் சலியா திருந்தனனால்.

எ-து. அப்படித்தவஞ் செய்யப்பட்ட அசுர சூடாமணியானவன், பஞ்சாக்கினி மத்தியினின்றும் அரிதாகிய தவங்களைச் செய்ய, அந்தத் தவாக்கினியினாலே திரிபுவனமும் இருள் மூடிக்கொள்ளவும், சூரிய கிரணமும் மறைந்து விட்டு [1]லோகா லோகமெல்லாம் ஊழிக்காலம் இதுதானோவென்று திடுக்கிட்டார்கள். இந்தக் காரணத்தினை இந்திரன் முதலாகிய அமரர் கூட்டங்கள் ஆலோசித்து, இந்தத் தவத்தை விக்கினம் பண்ண அரம்பை,

திலோத்தமை, ஊர்வசி முதலாகிய தேவ கணிகைகளை அனுப்புவித்தனேக மாய்கைகள் செய்ய [2]ஆக்ஞா பித்தார்கள். அவர்கள் உத்தரவின் பிரகாரம் அதிவேகமாய்த் தவச்சாலையில் வந்து, தமது மன்மத லீலைகளையெல்லாம் செய்தும், அவன் மனமானது சலியாமல் யோகக் [3]காட்சியால் நாவினாலே பிரணவத்தைத் தியானம் பண்ணிய பலத்தினாலே மாய்கையாகிய இருளைத் துரத்திச் சூரியனைப் போலப் பிரகாசித்தா னென்றவாறு. (18)

தழல் - தீ. தணல் - தீ. அவசம் - மயக்கம். அழல - எரிய. நவசுந்தரம் - நவம் - புதுமை; சுந்தரம் - அழகு. மேனகை - தேவகணிகையருள் ஒருத்தி. அவண்டிவசம் - அவண் + திவசம் - அவண் - அவ்விடத்தில், திவசம் - நாள், பலநாட்கள் பலவான இடர். சலியாது - அசையாது

**உரை** - ஊழிக்காலம் - யுகமுடிவுகாலம். விக்கினம் - இடையூறு. பிரணவம் - ஓங்காரம்.

**பா.வே.** - 1. லோகமெல்லாம். 2. வாக்கியாபித்தார்கள் 3. காட்சியில்.

## Tavattaik keṭukkac cūḻcci

*tavaciṟ cūraṉ ṟalaṉmūlat taṇalai mūṭṭit talameṅku*
*mavaca muṟappoṉ ṉulakaḷala vaṟintin tiraṉum amararkuḻām*
*navacun taramē ṉakaikaṇikai mātar palarai naṭāttiyavaṇ*
*ṭivacam palavā yiṉaviṭaraic ceytuñ caliya tiruntaṉaṉāl.*

## Attempt to Disturb the Austerities

The hero lighted fires around
And stood mid them performing austerities.
Everywhere there was delusion.
The heavens caught fire. Intiraṉ
And his immortal companions
Sent eternal beauties like Mēṉaka
And others damsels to the Acura
For disturbing his austerities.
This went on for several days
Without taking any effect on the aspirant.

(பிரமன் தவத்துக்கு மகிழ்தல்)

167. அவனங் கறிந்து வமரரொடும்
அயன்றன் னுலகத் தினையடைந்து
இவன்றன் றவத்தி னியற்கையெல்லா
மியம்பி யிணைத்தாண் மலரேத்தச்
சிவன்றந் தையுமங் கவர்க்குவிடை
கொடுத்துத் தவஞ்செய் சிறுமைக்காய்ப்
புவன மிசையச் சூரன்முனந்
தோன்றி யினிமைப் புகலவவன்.

எ-து. அந்த இந்திரனாலே அனுப்பி வைக்காநின்ற அரம்பையர்களுடைய மாய்கையெல்லாம காலநேமி தவத்தாலே யதமாய்ப்போன மாத்திரத்திலே, திடுக்கிட்டுப் பயத்தை அடைந்து இந்திர மகாராசன் சமூகத்திலே நாம் எப்படிப் [1]போகலாகுமென்று வெட்கமாய்த் தேவராசனைப் பார்த்து [2]விண்ணப்பஞ் செய்கின்றார்கள்: அந்த அசுரன் தவாக்கினியினாலே நாங்கள் எரிந்து போகாமல் பிராணனுடனே தப்பி வந்தது தேவரீர் அனுக்கிரகமென்று அவனுடைய தவத்தினைப் புகழ்ந்து கூறினார்கள். அப்போது அரசனானவன் தேவர்கூட்டங்களுடனே பிரம்மலோகத்துக்குப் போய் அவர்க்கறிக்கையிடத் தேவர்களுக்கு வரும் பிழைகளை அறிந்த பிதா மகனானவன், அந்தத் தேவர்களுக்கு விடை கொடுத்தனுப்பிக் கயிலாயபதிக்குப் பிதாவாகிய நான்முகனானவன் அந்த அசுரன் செய்கின்ற தவத்தினுக் கிரங்கினவனாய் அன்னவாகனாரூடராய்க் கலைமகள் மனோகரராய் எழுந்தருளி வந்தந்த அசுரேந்திரன் செய்கின்ற தவநிலையிலே நின்று, உன்தவத்தை அனேகவிதமாய் மெச்சினோம்: உன்னைப்போலக் கலங்காத நிலையினின்று தவஞ்செய்தபேர்க ளிந்த பதினான்குலகத்தினும் யாங்கண்டதில்லை யாகையால் உனக்கு என்னாலென்ன வரம் வேண்டுமென்றான் பிதா மகனென்றவாறு. (19)

அயன் - பிரமன் இணைததாண் மலா் - இரண்டு திருவடிகளாகிய தாமரை, உருவகம்.

**உரை** - பதினானகு உலகு - மேலுலகு ஏழு: பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகலோகம், சத்தியலோகம என்பன கீழுலகு ஏழு: அதலம், விதலம், சுதலம், தலாதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம் என்பன பூதலத்தைக் கீழுலகில் சேர்த்துக்கூறும் முறையும் சில நூல்களுள் காணப்படுகிறது

பா.வே. - 1 போறதென்று. 2. கூறுகின்றார்கள்

## Piramaṉ tavattukku makiḻtal

*avaṉaṅ kaṟintu vamararoṭum*
*ayaṉṟaṉ ṉulakat tiṉaiyaṭaintu*
*ivaṉṟaṉ ṟavatti ṉiyaṟkaiyellā*
*miyampi yiṉaittāṉ malarēttac*
*civaṉṟan taiyumaṅ kavarkkuviṭai*
*koṭuttut tavañcey ciṟumaikkāyp*
*puvaṉa micaiyac cūraṉmuṉan*
*tōṉṟi yiṉimaip pakalavavaṉ.*

## Piramaṉ is Happy

Realising the state of affairs, Intiraṉ
Went to the heavens of Piramaṉ
And told him of the austerities
Of the Acura and saluted him.
Civaṉ's father, Piramaṉ, sent them away.
Touched by the austerities of the Acura
He appeared before him and uttered
Words indicating his pleasure.

(அசுரன் வரம் பெறுதல்)

168. இருதா ளயனைத் தொழுதேத்தி
யெந்தா யுய்ந்தே னினியொருவர்
பொருதா தெந்தப் பொருளாலும்
பொன்றா வண்ணம் புரிந்தருளைத்
தருவா யெற்கு வரமென்னத்
தாழு மசுரன் றனைநோக்கிக்
கருதா வயனவ் வரமீந்துக்
கால மதனைக் கணித்தனனால்.

எ-து. அப்படியாய் எழுந்தருளிய பிதாமகனை யசுரேந்திரனானவன் கண்டு, தெண்டன் சமர்ப்பித்துத் தேவரீர் இங்கெழுந்தருள அடியேன் என்ன பாக்கியம் பெற்றேன்! தேவர்கள் முனிவர்கள் காணப்படாத திவ்விய திருவடிகளைச் சேர்க்கப் பெற்ற எனக்கு மற்றொரு

பொருளை யிச்சிப்பதுண்டோ? ஆகிலுமிந்தப் பதினான்கு லோகாந்திரங்களிலும் இந்திரன் முதலாகிய பேர்களாலும், மகா இருடியர்களாலும், [1]வச்சிராயுத முதலாகிய எப்பேர்ப்பட்ட வஸதிர ஆயுதஙகளாலும் இறப்பில்லாம லென்றும் இந்திர பட்டாபிடேக பதியாய்ப் போகபாக்கியங்களை யனுபவிக்கும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று அவரது திருவடிக் கமலஙகளில் அனேக தெண்டன் சமர்பபித்தான் அப்பொழுது அவர் மகிழ்சிறந்து, நீ கேட்ட வரமெல்லாம் கொடுத்தோம் உனது தவாக்கினியினாலே உலகமெல்லாம் இருணடபடியினால் உனக்குக் கால அளவையினையுங் கொடுத்தோம் என்றார் பிதாமக னென்றவாறு (20)

பொருதாது × பொருது - பொருதல் - போாசெய்தல், ஒப்பாதல் பொன்றாவண்ணம் × பொனறுதல் - அழிதல் பொனறாவணணம் - அழியாதபடி எற்கு - எனக்கு.

உரை - வஸ்திர ஆயுதம் - வ் - உம்படுமெய், அஸதிர ஆயுதம் - அஸதிரம் - அம்பு தவாக்கினி - தவமாகிய தீ

பா.வே. - 1 உருட்டுகின்ற, குத்துகின்ற, வெட்டுகின்ற, பிரயோகம பணணுகின்ற ஆயுதங்களாலே.

## Acuraṉ varam peṟutal

*irutā ḷayaṉait toḻutētti*
*yentā yuyntē ṉiṉiyoruvar*
*porutā tentap poruḷālum*
*poṉṟā vaṇṇam purintaruḷait*
*taruvā yeṟku varameṉṉat*
*tāḻu macuraṉ ṟaṉainōkkik*
*karutā vayaṉav varamīntuk*
*kāla mataṉaik kaṇittaṉaṉāl.*

## Acura gets a Boon

Saluting the twin feet of Piramaṉ
The Acura said. 'My Lord!
I am saved. Grant me the boon
Of indestructibility through men
Or matter in this wide, wide world.'
Looking at the saluting Acura
Piramaṉ granted the boon
And also set a time limit for his life

(அசுரனுக்குக் காலநேமி என்று பெயர் கொடுத்தல்)

169. கதிர்கள் பிறழக் காலொழியக்
ககன மிருளக் கதிர்வான்மீ
னுதிரக் கால முறைபிறழ
உடற்றுந் தவத்தா லுனக்குப்பேர்
முதிருங் கால நேமியென
மொழிந்தா மென்று முகமலர்ந்து
சதுரா னனனு மூர்போகத்
தான வேந்திரன் தவமொழிந்தான்.

எ-து இப்படியாய் வரங்கொடுத்த பிதாமகனானவர் அனுக்கிரகத்தினால் வலியினாலுயர்ந்தவனானான். அவன் தவத்தினாலே சந்திர சூரியர் தங்கள் கதி தப்பிப் போக, வாயுதேவன் மறைந்துபோக, அண்டங்களெல்லாம் இருள் மூடிக்கொள்ள, ஆகாய வீதியிலே பிரகாசிக்கப்பட்ட தாரகாகணங்களெல்லாம் பல பல வென்று உதிரும்படியாய், இரவு பகலென்று தோன்றாமல் செய்த தவசிரேட்டத்தால், அசுரேந்திரனே! உனக்கு நாமகரணங் காலநேமி யென்றியம்பினோம். ஆகையால் இனிமேலாவது உனது தவத்தைவிட்டு நீங்கு வாயென்றியாக்கியாபனம் பணணி, முக மலர்ச்சியடைந்து நான்கு திருமுகங்களையுடைய பிதாமகனானவர் நாமகள், சாவித்திரி, காயத்திரி மனோகரராகி அன்னவாகனத்தில் ஆரோகணிதராய்த் தமதுலகமாகிய மனோவதி நகரினைப்போய்ச சேர்ந்தார் அதன்பின்பு அசுரேந்திரனானவன் தனது வலியானது தனக்குத் தெரியாதவனாகித் தவச்சாலையை விட்டு நீங்கினா னென்றவாறு. (21)

கதிர்கள் - சந்திர, சூரியர். கால - காற்று ககனம - ஆகாயம. உடற்றுதல் - வருத்துதல், சதுரானனன் - பிரமன். சதுர் + ஆனனன் - சதுா - நான்கு; ஆனனம் - ஆநநம - முகம், ஆனனன்- முகங்களை உடையவன். தானவேந்திரன் - தானவர் + இந்திரன் - தானவர் தலைவன்; தானவர் - அசுரர்.

உரை - தாரகாகணம் - தாரகை + கணம் - விண்மீன் கூட்டம். என்றியாக்கியாபனம - என்று + ஆக்கியானம் - ஆக்கியாபனம் - கட்டளை. மனோகரர் - விருப்பத்திற்குரியவர்; மனோகரம் - ஆசை ஆரோகணிதர் - ஏறியமர்ந்தவர். மனோவதி - மனோபதி - பிரமன்நகர்

## Acuraṉukkuk kālaṉēmi eṉṟu peyar koṭuttal

*katirkaḷ piṟaḻak kāloḻiyak*
*kakaṉa miruḷak katirvāṉmī*
*ṉutirak kāla muṟaipiṟaḻa*
*uṭaṟṟun tavattā luṉakkuppēr*

*mutiruṅ kāla nēmiyeṉa*
*moḻintā meṉṟu mukamalarntu*
*caturā ṉaṉaṉu mūrpōkat*
*tāṉa vēntiraṉ tavamoḻintāṉ.*

## Acura is named Kālanēmi

'I name thee as Kālanēmi
Because of your austerities
That upset the rhythm of the sun
And the moon, chased away Wind,
Made the skies dark, caused the stars
To fall, and removed the distinction
Of day and night', said Piramaṉ
And returned to his heavens.
The king of Acura gave up austerities.

(காலநேமி தேவருலகு அடைதல்)

170. கால நேமிப் பெயர்பெற்றக் கடுவல் லரக்கக் கண்டக்னுங்
கோலம் பூண்ட வசுரரர்குழாம் கூடி நிவாத கவசரொடு
மால கால விடம்போலுந் திரண்டங் கமரர் பொன்னுலகின்
மேல தாகிப் போர்விளைக்க விபுதர் குழுவின் மேலானான்.

எ-து இந்தப் பிரகாரமாகப் பிதாமகனாலே கால நேமியென்னுந் திருநாமதேயத்தினைப் பெற்ற புசபல பராக்கிரம சாலியாகிய கண்டகனான அசுரனானவன், அனேக அசுரக் கூட்டஙகளும நிவாதகவச காலகேயர்களுந் தன்னைச் சூழ்ந்துவரத்தக்கதாய் ஆலகால விடம்போலச் சதுரங்கதளத்துடனே வாயவு வேகம் மனோ வேகமாய்ச் சதுர்சாகரஙகளும உடைந்து கரைபுரண்டு வந்ததுபோலப் [1]பொன்னுலகத்தினை வந்து சூழ்ந்து கொண்டு, தேவாகளுடன எதிர்த்து யுத்தஞ்செய்யத் தேவர்கள் துற்பலத்தை யடைந்தவராய்த் தேவ ராசனுககு அறிவித்தார்க ளென்றவாறு (22)

கணடகன - அசுரன், துட்டன் நிவாதகவசர் - தோயமாபுரதது அசுரா் ஆலகாலவிடம் - ஆலகாலம - நஞ்சு, விஷம, கொடியநஞ்சு விபுதர்குழு - வானோர்கூட்டம்.

பா.வே - 1 பொனனுலகமாகிய

## kālanēmi tēvarulaku aṭaital

*kāla nēmip peyarpeṟṟak kaṭuval larakkak kaṇṭakaṉuṅ*
*kōlam pūṇṭa vacurarkuḷām kūṭi nivāta kavacaroṭu*
*māla kāla viṭampōlun tiraṇṭaṅ kamarar poṉṉulakiṉ*
*mēla tākip pōrviḷaikka viputar kuḻuviṉ mēlāṉāṉ.*

## Kālanēmi goes to Heaven

The terrible rāṭcaca, the Acuran
Called Kālanēmi went to the heavens
And laid siege with his armed Acuras,
And the Acuras called Nivātakavacās
All of whom appeared like a mass
Of *ālakāla* poison. The army of gods
Were defeated by him.

(தேவர்கள் அஞ்சியோடுதல்)

171. இந்திரன் சயந்த னமரர்க ளெதிர்ந்தங்
கிளைத்திடா தருஞ்சமர் புரிய
மந்திர கிரிபோல் வானவர் குழுவை
வதைத்தனன் வானினா லசுரன்
சந்திரன் வசுக்கள் மருத்துவர் முனிவர்
சசிமுதற் பொன்னக ரிழந்து
வந்தனர் கடல்போல் வனங்கள்சூழ்ந் திலங்கு
வரைதனிற் குகையிடம் வதிந்தார்.

எ-து.- இரத கெச துரக பதாதிகளுடைய நான்கு வகைச் சேனைகளுடனே காலநேமியானவன் இந்திரபுரியை வளைத்த மாத்திரததிலே, தேவராசனும், அவனுடைய புத்திரனாகிய சயந்த மகாராசனும் திக்குப்பாலகாள் முதலாகிய தேவசயின்னியங்களுட னெதிர்த்து, வச்சிராயுதத்தினாலே [1]அரக்கரையெல்லாம் கண்டித்து, வில்லினாலே புங்கானு புங்கமாய்க் கரவேக சரோ வேகமாய்க் கோடி கோடி குரூரமாகிய [2]பாணசரங்களைச் சொரிந்து அணித்தலைவா, யூகத்தலைவர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் முதலாகிய நான்குவகைச சேனைகளையும் பிணக்குன்றம்படக் [3]குவித்தான் அதைக்கண்ட காலநேமியானவன் பிரளய

காலாக்கினி உருத்திரனைப்போலச் சீறி இரதத்தை விட்டுக்குதித்து, இடசாரி, வலசாரியாய்க் குலாலன் சக்கரம்போலச் சுழன்று, திக்குத்திசை தெரியாமல் பிரம்மிக்கத் தக்கதாய், மந்திரகிரியானது பாற்கடலைக் கடைந்ததுபோ லொருக்ஷண மாத்திரத்தில் தேவர் கூட்டங்களைக் கலக்கி, உதிரவெள்ளம் பெருகத்தக்கதாய் யுத்தம் செய்கின்ற காலநேமியினுடைய பராக்கிரமத்துக்கும், நான்முகனாகிய பிரமதேவனுடைய வரப்பிரசாதத்துக்கும் அஞ்சினவர்களாய் யோசித்துப் [4]பயப் பிராந்திகொண்டவர்களாய் இந்திரன், சயந்தன், சசிதேவி, திக்குப் பாலகாள், அஷ்டவசுக்கள், சப்தமருத்துக்கள், சபதரிஷிகள் முதலாகிய போகளுடனே பொன்னுலகத்தை விட்டு நீங்கிச்சதுர் சாகரஞ் சூழ்ந்த பூமண்டலங்களெல்லாம் அலைந்து, பர்வதங்கள, நதிகள், தடாகங்கள், பன்னக சாலைகள் சமஸ்தமுங கடந்து, பர்வதக் குகைகளிலே வாசம செய்தார்க ளென்றவாறு (23)

சயந்தன் - தேவேந்திரனின் மகன, தாய் சசி. வசுககள் - அட்டவசுக்கள், அனலன, அணிலன், ஆபதசைவன, சோமன், தரன, துருவன், பிரத்தியூஷன், பிரபாசன் ஆகியோர், பிரமனின் புத்திரா என்பா மருத்துவர் - மருத்துககள் - பலயோனி உயிர், அசுவனி தேவதைகள் எனப்படும் தேவா வகையினா

உரை - புங்கானுபுஙகம - புங்கம் - அம்பு. அமபின் பின் அமபாகத தொடர்தல். அனுபுங்கம் - அதன்தொடாசசி; ஆற்றொழுககாகத தொடர்ந்து விடுதல் கரவேக சரோவேகமாய - கரம் - கை; சரம் - அமபு. இரணடும் விரைவுடையதாய் யூகததலைவர் - படைததலைவர் பட்டவர்த்தனர் - பட்டம் தரித்த அரசா மகுடவாததனா - முடிசூடிய மன்னா குலாலன் - குயவன் க்ஷணம் - கணம், காலநுடபம, நானகு நிமிடநேரம், பயப்பிராநதி - அச்ச உணர்வு, அச்சமயககம் சப்தமருத்துக்கள் - கிழககு, தெற்கு, மேற்கு, வடககு, கீழ, மேல், பல யோனி உயிர்கள் என்பன சப்தரிஷிகள் - ஏழு இருடியா அத்திரி, ஆங்கீரசன, கௌதமன, சமதககினி, பரத்துவாசன், வசிட்டன, விசுவாமித்திரன் ஆகியோா, வேறு வகையாகவும கூறுவா. சமஸ்தம - எலலாம். சமஸ்தமும் - எல்லாவற்றையும்.

பா.வே. - 1 அரககரையெலலாம வதைத்தான ஜயந்தமகா ராசனானவன் வில்லினாலே 2. கணைகளைப பொழிய 3 விளைக்காதவனாய 4 பயந்து சநதிரனும் வசுக்களும மருததுவர்களும் முனிவர்களும் சசி முதலாகிய போகளெல்லாம பயநதோடிப பொன்னகரைக் கடநது, கடலைப்போலத் திரண்டு சூழ்ந்துவரத் தேவலோகததை விடடனேகமலைகளாறுகள் வனங்கள நகரங்களெல்லாங் கடந்து குகைகளிலே புகுநதொளிநதாா களென்றவாறு

இந்திரன் அரசாட்சி புரிந்த அத்தியாயம் முற்றிற்று.

## Tēvarkaḷ añciyōṭutal

*intiraṉ cayanta ṉamararka ḷetirntaṅ*
*kiḷaittiṭā taruñcamar puriya*
*mantira kiripōl vāṉavar kuḻuvai*
*vataittaṉaṉ vāḷiṉā lacuraṉ*
*cantiraṉ vacukkaḷ maruttuvar muṉivar*
*cacimutaṟ poṉṉaka riḻantu*
*vantaṉar kaṭalpōl vaṉaṅkaḷcūḻn tilaṅku*
*varaitaṉiṟ kukaiyiṭam vatintār.*

## The Gods Scatter

Intiraṉ, Cayanta and other gods
Fought back valiantly
But the Acura destroyed with his sword
The army of the immortals.
The Moon, the Vacus, the Maruts,
The sages and Caci lost the heavens
And moved away like an ocean
To live in mountain caves
Surrounded by thick forests.

## 10. ஆறாவது
## இந்திரன் வனம்புகு அத்தியாயம்

காலநேமி என்னும் அசுரன் இந்திரனை வென்று, இந்திரபுரியின் தலைவனாய் இந்திரபதவியில் அமர்ந்தான். தனக்குப் பகைவர்களாகிய தேவர்களைக் கொல்லுமாறு தன் அசுர சேனைகளை எல்லாத்திசைகளிலும் நிறுத்தினான். பஞ்சதருக்களின் நிழலில் சந்திரவட்டக்குடை நிழற்ற வீற்றிருந்தான். இந்திரனின் உரிமைப் பொருள்களாகிய சுரபி, சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி போன்றவை அசுரனது ஏவல் கேட்டு நடந்தன. அரம்பை, ஊர்வசி முதலான தேவமாதர்கள் நடனம் செய்து மகிழ்வூட்டினர்.

காலநேமியிடம் தோல்வியுற்று இந்திரன் தன் நாட்டினை அவனிடம் விட்டுவிட்டு, மற்றைய தேவர்களுடன் கூடி நாட்டினின்றும் நீங்கினான். தேவர்கள் தங்கள் வடிவங்களை மறைத்துப் பலவகையான வேற்று வடிவங்களோடு புறப்பட்டனர். அனைவரும் காடுகள், ஆறுகள், மலைகள், பன்னக சாலைகள் போன்ற இடங்களில் சுற்றித்திரிந்தார்கள். இறுதியாக மகாமேருமலையில் வந்து தங்கினார்கள். நாரதமுனிவர் சடைமுடியும் திருமண்ணும், கமண்டலமும் முப்புரி நூலும், துளவமாலையும் விளங்கப் பிரணவ மந்திரத்தை உச்சரித்தவராய் அவ்விடத்திற்கு எழுந்தருளினார். இந்திரன் முதலாகிய தேவர்கள் முனிவரின் எதிர்வந்து, பலவகை உபசாரங்கள் செய்து இருக்கையில் அமர்த்தினார்கள். இந்திரன் அம்மலைககு வந்ததன் காரணத்தை வினவிய நாரதருக்கு, வேடுவன் வடிவில் வந்த சிவபெருமானால் நிகழ்ந்த செய்திகளையும் காலநேமியினால் ஏற்பட்ட துன்பங்களையும் எடுத்துக்கூறிய இந்திரன் அக் காலநேமியை வெல்லும் வழிமுறைகளை அருளுமாறு வேண்டினான்

நாரதர், காலநேமியின் கொடுமைகள் அழியவும், இந்திரன் இழந்த செல்வத்தையடையவும் உள்ளங்கொண்டார். இந்திரனை நோக்கி, நீ இலக்குமி தேவியின் அருட்பார்வையால் அனைத்துச் செல்வங்களையும் பெற்றாய். ஆனால் உடனே செல்வச் செருக்கால் அத்தேவியை மறந்தாய் செய்ந்நன்றி மறந்தவர்கள் இவ் உலகத்தில் நிலைபெறுவதில்லை. அதனாலேயே உனக்கு இந்த நிலை ஏற்பட்டது. எனவே மீண்டும் அந்த லோகநாயகியின் திருவடிகளை அடைவாயாயின் இழந்த செல்வத்தைப் பெறுவாய். அவளுடைய அருட்பார்வையாலே உலகில் முத்தொழிலும் நடைபெறும்; தருமமானது தழைக்கும். அவள் அசைவு இல்லையேல் எதுவும் அசையாது. மேலும் அப்பிராட்டியாரின் நாயகராகிய அரங்கநாயகரே இவ்வுலகின் தலைவராவார். அசரர்கள் மிகுந்து, அவர்களால் தருமம் அழிந்து, கொடுமைகள் மிகுந்த போதெல்லாம் பல அவதாரங்களை எடுத்து உலகத்தைக் காத்தவா அவரே. அவருடைய திருவடிகளைத் துணையாகப் பெறுவாயாயின் அந்தக் காலநேமியின் பகையினை எளிதாய் வெல்லுவாய். மேலும் அவர் உலகப்

பிரளயகாலத்தில், இவ் உலகத்தைத் தன் மணிவயிற்றில் அடக்கிச் சிறு குழந்தையாய் ஆலிலைமேல் பள்ளி கொண்டவர். மீண்டும் அகில உலகத்தையும் தோற்றுவிக்கும் திருவிளையாட்டினை உடையவர். பிறவிக்கடலை நீக்க வல்லவர். அசுரர்களை அழிக்கும் சிஞ்சுமாரச் சக்கரத்தை உடையவர். பிறவித்துன்பத்தைப் போக்க வல்லவர்.

மேலும் பிரம தேவனுக்கு ஆயிரம் சதுர்யுகம் கொண்டது ஒருபகலாகும். அக்காலத்தின் இறுதியில் சிவபெருமான் முதலாகிய தேவர்கள் உலகத்தையடைந்து திருமாலின் மணிவயிற்றில் ஒடுங்குவார்கள். பிரமனுக்கு இரவுகாலம் அடுத்த ஆயிரம் சதுர்யுகமாகும். அக்காலத்தில் உலக உற்பத்தி இராது. நீரும் தீயும் பெருகும். உயிரினங்கள் வருந்தும். இது பிரமனின் ஒருநாள் ஆகும். அந்த நாள் பிரளயத்தில் திருமால் எக்கியவராக அவதாரம் எடுத்துப் பூமியைத் தூக்கிநிறுத்திச் சமன் செய்தார். துயில் நீங்கிய பிரமன் மீண்டும் படைப்புத் தொழிலை மேற்கொண்டார். இவ்வாறு பிரமனின் நூறாவது வயதில் மகாப்பிரளயம் தோன்றும். அப்போது பிரமன் உட்பட அனைத்து உயிர்களும் நாராயணனின் மணிவயிற்றில் ஒடுங்கும். அப்போது நாராயணன் ஆலிலையின் மேல் சிறு குழந்தையாய் அவதரிப்பார். அவரது உந்திக்கமலத்தில் பிரமன் தோன்றி மீண்டும் படைத்தல் தொழிலை மேற்கொள்ளுவார். இந்திரன் முதலாகிய தேவர்களையும் சிவபெருமானையும் மீண்டும் தோற்றுவித்து அவர்களுக்கு உரிய தொழில் முறைகளையும் அளித்தருளுவார். இவ்வாறு அவர்களையெல்லாம் தடுத்தாட்கொள்பவர் திருமாலேயாவார். மேலும் இந்நிலவுலகத்தைப் பாயாய்ச் சுருட்டிக் கொண்டு போய் ஒளித்த இரணியாக்கனை வராகவடிவிற் சென்று அழித்து இவ் உலகினை மீட்டார். அப்போது அவருடைய முகத்தில் வேர்வை பெருகி, பெண்வடிவமாகி அவர் முன் வணங்கி நின்றது. மேலும், அப்பெண் 'அடியேன் தங்கள் திருவடிகளிலே அவதரித்த கங்கையாவேன்; தாங்கள் இவ் அசுரனை மடித்த போது திருமுகத்திலே தோன்றும் நிலைபெற்றேன்; மீண்டும் தங்கள் திருவடிகளைப் பிரியாதிருக்க அருளவேண்டும்' என்று வேண்டிநின்றாள். அந்தக் கங்கையை நோக்கி, 'நாம் இன்னும் சிறிது காலத்தில் எக்கிய வராகமாய்த் தோன்றி, கோலாசல கிரியில் எழுந்தருளுவோம். அப்போது சஞ்சீவிபுரம் எனப்பெறும் கோலாசலத்தில் வந்து தவம் மேற்கொள்ளுவாயானால் உன் எண்ணம் ஈடேறும்' என்று அருள்புரிந்தார்.

அன்றுமுதலே அந்தக் கங்கையானவள் கோலாசலத்திலே தவஞ்செய்து வந்தாள். அவள் தவத்துக்கிரங்கிய நாராயண மூர்த்தியானவர் அங்கு எழுந்தருளினார். அக் கங்கையானவள் அந்த வராகமூர்த்தியின் அருளால் அம்மலையின் உத்தரபாகத்தில், ஆகாய கங்கையினும் பெருவெள்ளமுடையதாக, வராகநதி என்ற பெயரில் தோற்றம் செய்தாள். சூது, கொலை, களவு, பொய், பிறவகையான பாவச் செயலகள் ஆகியவற்றால் பாவம் அடைந்தவர்கள், அந்தவராக நதியில் மூழ்கினால் தூய்மை அடைவார்கள். கங்கையாற்றில் மூழ்கிய பலன்களினும் மேலான பலனை அடைவார்கள்.

முன்பு இந்திரபுரியை ஆண்டுவந்த தேவேந்திரர் பலர் அசுரரால் துன்பமடைந்து, பொன்னுலகை விட்டு நீங்கினார்கள். அவர்கள் எல்லோருமே கோலாசலத்தில் எழுந்தருளிய அரங்கநாயகரை அடைந்து அவரருளால இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றார்கள் என்றால் மேலும் உனக்கு வேறு கூறவேண்டுவதில்லை ஆகவே நீ, தேவர்களுடனே வராக தீர்த்தத்தில் மூழ்கி, அரங்கநாதனின் ஆலயத்தில் விளங்கும் எலுமிச்சையையும், இலக்குமி தேவியையும் வணங்கி அவளருளால் அரங்கநாயகரைச் சரண் அடைவாயாக என்று கூறினார் நாரதமுனிவர். இவ்வாறு நாரதர் கூறினார் என்ற செய்திகளைச் சூத புராணிகர் நைமிசாரணிய முனிவருக்கு உரைத்தார். கேட்டுமகிழ்ந்த முனிவர்கள் மேலும் வராகநதியின் வரலாறு முதலியவற்றையும் கூறுமாறு கேட்டுக்கொண்டார்கள்.

(தேவருலகில் காலநேமி)

172. **சூரன்பின் செங்கோல் பற்றித் திசைகளோ ரெட்டும் வென்று**
**பாரினில் வானிற் றன்பேர் பரப்பினன் அமரர் தம்மை**
**வேரறக் களைக வென்று வீரரைப் போக்கி வானிற்**
**சூரருந் தானு மேலாய்ச் சுகந்துய்த்திட் டிருந்த காலை.**

எ-து அந்தக் காலநேமி யென்னும் சுரேந்திரனானவன் இந்திரன் முதலாகிய பேர்களையெல்லாம் துரததிவிட்டுத் தான் இந்திர பட்டாபிடேகனாய்த் தேவ சிம்மாசனத்திலிருந்து, செங்கோலினால் அரசாட்சி செய்து, இந்திரனொழிந்த மற்றத் திக்குப் பாலகரையெல்லாம் எளிதாக வென்று, திரிபுவனத்தினுந் தனதாக்கியாபன சக்கரம் நடாத்தி அரசு செய்த பின்பு, தனக்கும் தன் மரபுக்கும சத்துருக்களாகிய தேவர்கூட்டங்களைக் [1]கண்ட கண்ட இடங்களிலே சம்மரிக்கததககதாய் அணிததலைவர், யூகத்தலைவர், சேனாதிபதிகள் [2]முதலாகிய பேர்களை அனுப்பித திக்குத்திகாந்தஙகளெல்லாம் தனது சேனைகளைக் காவல் வைத்துத் தேவலோகமாகிய இந்திரன் போக பூமியிலே பஞ்சதாருவின் நிழலிலே சந்திர வட்டககுடை நிழறற, சுரபி, சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி முதலானதுந் தனது ஏவல் கேட்ப [3]அரம்பை, ஊாவசி, திலோத்தமை முதலாகிய ஸ்ரீகணடனஞ் செய்யச் சங்கீத கோலாகலனாய் அனேக அசுர சேனைகளுடனே அரசு புரிந்து கொண்டிருக்குங் காலத்தில் எனறவாறு. (1)

**உரை** - ஆககியாபன சககரம - ஆணைசசக்கரம, அரச ஆணை. சம்மரித்தல் - அழித்தல், கொல்லுதல், சமமாரம் செயதல சுரபி - இந்திர உலகததுப்பசு சிந்தாமணி - தேவமணிகளுள ஒனறு. இந்திரனின் உரிமையுடையது சங்கநிதி - சங்கு வடிவில் கிடககும் செல்வம், எடுக்குந்தோறும் குறைவுபடாத செலவம் பதுமநிதி - தாமரைவடிவில் கிடக்கும் பொன். இவை இரணடும் இந்திரனின் இருவகைச் செல்வஙகளாகும் ஸ்ரீகணடனஞ்செய்ய - ஸ்திரீகள் நடனஞ்செய்ய.

பா.வே. - 1 யெங்கே கணடாலும் அஙகேதானே கொல்லத்தக்கதாகிய 2. பட்டவர்த்தனர் முதலாகிய 3 தனக்கொதத வசுரராகிய சூராதி சூராகளுடனே சுகமனுபவித்துக் கொண்டிருக்குங் காலத்தி னென்றவாறு.

## Tēvarulakil kālanēmi

*cūranpin ceṅkōl paṟṟit ticaikaḷō reṭṭum venṟu*
*pārinil vāṉiṟ ṟanpēr parappiṉaṉ amarar tammai*
*vērarak kaḷaika venṟu vīraraip pōkki vāṉiṟ*
*cūrarun tāṉu mēlāyc cukantuyttiṭ ṭirunta kālai.*

# X. Intiraṉ Goes to the Forest

## Kālanēmi in Heaven

The Acura became the ruler of heaven
Overcoming the eight directions
He made his name famous
In all the worlds above. He sent
His soldiers to root out the gods.
He now enjoyed heavenly comforts
Along with his Acura companions.

(தேவர்கள் சுற்றியலைதல்)

173. இந்திர னிடைந்தவ் வூர்விட் டிமையவர் வேட மாறிக்
கந்தமா வனங்க ளாறு கடற்கரை மணற்குன் றம்பொன்
சந்திர வாவி சோலைச் சாலைநீ ருறுத டங்க
ணொந்தவ ரிருந்த பின்னர் நோக்கிப்பொன் மலைக்க ணுற்றார்.

எ-து. இந்திர மகாராசன் முதலாகிய பேர்களெல்லாம் பொன்னுலகத்தைக் காலநேமியாகிய அசுரனுக் [1]கொப்புவித்து, மானநீங்கி மதிமயங்கிக் குகைகளிலே அனேகநாள் வாசம் செய்தந்த மலைத்துவாரங்களை விட்டு நீங்கித் தேவ ரூபத்தைக் கரந்து, நானா விதமாகிய வேடங்களைத் தாங்கிச் சுகந்த பரிமளங்களைக் கமழ்கின்ற நந்தன வனங்களிலேயும், புண்ணிய மகா நதிகளிலேயும், கழிக்கரைகளிலேயும, மணற் குன்றங்களிலேயும், பொன்மயமாகிய சந்திர காந்த வாவிகளிலேயும், பூஞ்சோலைகளிலேயும், முனீசுவராள் வாசம் பண்ணாநின்ற பன்னக சாலைகளிலேயும், [2]சலசம்ருத்தியாகிய தடாக பந்திகளிலேயும் வருத்தத்தையடைந்து கலங்கித் தியங்கிச் செய்யுங் காரியம், [3]தவிருங் காரியந் தெரியாதவர்களாய் வெகுகாலங் கழித்த பின்பு, தங்களறிவினால் மதித்துப் பொன்மயமாகிய மகமேரு பர்வதத்தை வந்து சேர்ந்தார்க ளென்றவாறு. (2)

இடைந்து - தோலவியடைந்து. கந்தம் - மணம் ஆறு - நதி. வாவி - குளம் சாலை - பன்னசாலை. பன்னம் - இலை, ஓலை, புல். தடம -குளம் நொந்து - வருந்தி

உரை - நந்தனவனங்கள் - பூஞ்சோலைகள், நந்தவனங்கள். கழிக்கரை - கடற்கரை சந்திர காந்தவாவி - சந்திரனின் தோற்றத்தில் நீர் சுரக்கும் குளம். சலசம்ருத்தி - நீர் நிறைந்திருத்தல். சலம் - தண்ணீர் தடாகபந்தி - குளங்களின் வரிசை மிகுதிப்பொருள். தவிர்தல் - நீக்குதல்.

பா.வே - 1. கொப்பித்து 2. சலசமுர்த்தியாகிய 3. தவறுங்காரியந்.

## Tēvarkaḷ cuṟṟiyalaital

*intira ṉiṭaintav vūrviṭ ṭimaiyavar vēṭa māṟik*
*kantamā vaṉaṅka ḷāṟu kaṭaṟkarai maṇaṟkuṉ ṟampoṉ*
*cantira vāvi cōlaic cālainī ruṟuta ṭaṅka*
*ṉontava rirunta piṉṉar nōkkippoṉ malaikka ṉuṟṟār.*

## The Gods Wander

The defeated Intiraṉ left his place
And changed his godly form.
After sadly wandering in thick forests,
Rivers, beaches, sand dunes,
Golden lakes of moonstone and springs,
He and his immortal company
Came to the golden *Mēru* Mountain.

(இந்திரன் மேருவில் மறைந்திருத்தல்)

174. சடைமுடியு மூர்த்துவபுண் டரநுதலுங்
கமண்டலமுங் கவிநூன் மார்பு
முடையபரன் றுளபமா வடமணியு
மோங்காரத் துயர்ந்த நாவு
நடைபயில்வே தத்தியலா ரேகதண்டந்
தாங்கியநன் நளினக் கையுந்
தடைதலிலா மரவுரியுந் தான்றாங்கி
யிந்திரனைச் சார்ந்தா ரன்றே.

எ-து இந்தப் பிரகாரம் பட்டாபிடேக பதியாய்க் காலநேமியாகிய அசுர சூடாமணியானவன் தனது சேனைகள் தற்சூழ அரசாட்சி செய்யுங் காலத்திலே இந்திர மகாராசனானவன் திரிபுவனங்களிலும் உழன்று. தங்கள் ரூபங்களை மறைத்து மகமேருவில்

வந்து [1]ஒளித்த காலத்திலே, முனிவர்க்கெல்லாம் சிரேட்டராகிய நாரதரானவர் சடாபாரந் தாங்கிய திருமுடியினையுடைய பிரதாபமு மூர்த்துவ புண்டரந் தரித்த நெற்றியினது ஞான விலாசமும், கமண்டலந் தாங்கிய கராம்புய மலரும், ஒன்பது கொண்ட முப்புரி நூலாகிய காயத்திரி யணிகின்ற விரிந்த மார்பகத்தினையு முடையவரான பரமன் தரிக்காநின்ற துளப மாலையானது மார்பினிரு புறமும் விளங்கி ஒளிரவும், ஓங்காரமாகிய மந்திர சாலங்களுக்கெல்லாம் உயிராகிய பிரணவத்தை உச்சரிக்காநின்ற நாவும், வேத விதியான் விளங்கிய வேக தண்டத்தைத் தாங்குகின்ற மற்றொரு கராம்புய மலரும், மரவுரியைத் தரிக்காநின்ற திருவரையீறாகிய சின்னங்களை யுடையவராய், வருத்த முற்று வேடமாறி மகமேருவினொளித்திருக்காநின்ற இந்திர மகாராசனுடைய இருக்கையிலே கருணை கூர்ந்தவராய் [2]எழுந்தருளினா ரென்றவாறு. (3)

ஊர்த்துவபுண்டரம் - மேல்நோக்கியிடும் கோபிசந்தனம், நெற்றிக்குறி; நுதல் - நெற்றி. கமண்டலம் - சுரைக்குடுகை; தவத்தோர் பஞ்சமுத்திரையில் ஒன்று - அவை - உருத்திராக்கம், கமண்டலம், காவி உடை, சடை, தண்டு என்பன. வேதத்தியலார் - வேதவிதிகளில் கூறப்படுகின்ற இயல்பையுடையவர். ஏகதண்டம் - தண்டு. நளினக்கை - தாமரை மலர் போன்றகை. தடைதலிலா - தடுத்தலில்லாத. மரவுரி - நார்ச்சீலை, தவ உடை.

உரை - தற்சூழ - தன் + சூழ - தன்னைச் சூழ்ந்து இருக்க.

பா.வே - 1. களித்த 2. வந்தாரென்றவாறு.

## Intiraṉ mēruvil maṟaintiruttal

*caṭaimuṭiyu mūrttuvapuṇ ṭaraṉutaluṅ*
*kamaṇṭalamuṅ kavinūṉ mārpu*
*muṭaiyaparaṉ ṟuḷapamā vaṭamaṇiyu*
*mōṅkārat tuyarnta nāvu*
*naṭaipayilvē tattiyalā rēkataṇṭan*
*tāṅkiyanaṉ naḷiṉak kaiyun*
*taṭaitalilā maravuriyun tāṉṟāṅki*
*yintiraṉaic cārntā raṉṟē.*

## Intiraṉ Hides in Mēru

With matted tresses, the uprising mark
On his forehead, a pot in his hand,
The lovely sacred thread on his chest,
Also garlands of Tuḷaci dear to the Lord,
Nāratar came, his tongue reciting

Sacred verses, a stave in his hand
To indicate his treading the Vēdic path.
Wearing the bark of trees,
He approached Intiraṉ.

வேறு

(இந்திரனிடம் நாரதர் வருதல்)

175. எங்கள் மாதவ மோவன்றிவ் விருநிலத் தோர்கள்
தங்கண் மாதவ மோவன்றித் தனியும்மா தவமோ
திங்கள் போலும்வந் துதையஞ்செய் தீவதென் செயலோ
உங்கள் பேரருட் கிருபையா லெங்களை யுவந்தீர்.

எ-து. நாரத மகாரிஷியானவர் வரக்கண்ட இந்திரன் முதலாகிய தேவர்களெதிர் சென்று யாங்கள் செய்த தவப்டயனோ அல்லது இந்த லோகத்தார் செய்த தவமோ பின்னுமிந்த மகாமுனீசுவராள் செய்த தவமோ ஆகிலும் பூரணசந்திரனானவன் உதித்ததுபோல தேவரீர் எழுந்தருள நாங்கள் என்ன பாக்கியஞ் செய்தோமென்றான் இந்திர மகாராச னென்றவாறு. (4)

## Vēṟu

### Intiraṉiṭam nāratar varutal

*eṅkaḷ mātava mōvaṉṟiv virunilat tōrkaḷ*
*taṅkaṇ mātava mōvaṉṟit taṉiyummā tavamō*
*tiṅkaḷ pōlumvan tutaiyañcey tīvateṉ ceyalō*
*uṅkaḷ pērarut kirupaiyā leṅkaḷai yuvantīr.*

### Nāratar to Intiraṉ

Intiraṉ went forward to welcome him
Saying: 'Is it due to our austerities,
Or due to the austerities of earthlings,
Or due to the austerities of great sages,
You have risen like the full moon?
What was the good deed of our lives?
Indeed due to your own compassion
You have deigned to come to us.'

## (நாரதர் இந்திரனை வினவுதல்)

176. வந்ததோர் முனிவன் றன்னை மலரடி வணங்கி யிந்திர
னெந்தையே யுய்ந்தோ மென்ன ஏதிவ ணடைந்த தென்று
வந்தநா ரதருங் கேட்க வையநீ ரறியார் போல
வெந்தனை யறிய வந்தீ ரென்றன னிமையோர் கோமான்.

எ-து. [1]அப்படியாக எழுந்தருளிய முனிபுங்கவரான நாரத மகா முனிவருடைய திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து அர்க்கிய, பாத்திய, ஆசமன்னியம் முதலாகிய சோடசவுபசாரங்களும் செய்து திவ்வியாசனங்களிலே எழுந்தருளப் பண்ணி, மிகுந்த வினயத்துடனே நிற்கும்படியான இந்திரனைப் பார்த்தருளிச் செய்கின்றார்: வாராய் தேவராசனே! உன்னுடைய போக பாக்கியங்களை யெல்லாமிழந்து வேடரைப் போல இந்தப் பர்வதச் சாரலிலே வாசம் செய்ய வேண்டிய காரண மென்னவென்று திருவாய் மலர்ந்தருள, இந்திரனானவன் விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் மகானுபாவரே! இந்தத் திரிலோகங்களிலும் தேவரீர் அறியாதது வேறொன்றும் இல்லை. சர்வக்கியரான உமக்கடியேன் என்னவென்று கூறுவேன் என்றான் தேவராசன் என்றவாறு. (5)

இவண் - இவ்விடம்.

உரை - புங்கவர் - உயர்ந்தோர் அனந்தம் - அநேகம் சோடச உபசாரங்கள் - சோடசம் - பதினாறு; உபசாரம் - வழிபாடு. அவை: அடைகாய் தருதல், அமுதம் ஏந்தல், ஆசமன நீர் தருதல், ஆடை சாத்தல், கருப்பூர தீபம் ஏந்தல், கால்கழுவநீர் தருதல், கைகழுவ நீர்தருதல், தவிசு அளித்தல், தேய்வைபூசல், நறும்புகை காட்டல், நீராட்டல், மஞ்சளரிசி தூவல், மந்திரமலரால் அருச்சித்தல், மலர்சாத்தல், முப்புரி நூல் தருதல், விளக்கிடுதல் ஆகியவை. சர்வக்கியர் - யாவும் உணர்ந்தவர்; இறைவன். வினயம் - விநயம் - மரியாதை. பர்வதம் - மலை. திரிலோகம் - மூவுலகம் - பூமி, ஆகாயம், சுவர்க்கம் என்பன.

பா.வே. - 1. அந்த மகாமேருச் சாரலிலே யிருந்த தேவேந்திரனானவன் முனிபுங்கவராகிய நாரத முனிவரைக் கண்டின்புற்றெழுந்திருந்து போயவரை வரவழைத்துக் கொண்டு வந்தற்கிய பாத்திய வாசமனீயங் கொடுத் தாசனத்தி னெழுந்தருளப்பண்ணி யவருடைய தாமரை மலரையொத்த விரண்டு திருவடிகளிலே சாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்து என்னையனே! உனது கிருபையினாலே யான் செய்த பாவமானது மலையாயிருந்த தணுவாய்ச் சுருங்கித் தாகையானான் கிருதாந்த னானேனென்று சொல்லவும், ஞாலத்தை விட்டிடர்பட்டிங்கே வந்த வரலாறென்னவென முனிவர் வினவினவளவிலே அரசன் கூறுகின்றான். திரிகாலக் கியானங்களை யெல்லாஞ் சர்வக்கியனைப்போலத் தெரிந்த தேவரீரொன்றும் தெரியாதவரைப்போல வென்னைச் சோதிக்கையாலிந்தப் பதிதனானவன் றெறிந்த வளவினாற் கூறுகின்றே னென்றான் தேவராச னென்றவாறு.

## Nāratar intiraṉai viṉavutal

*vantatōr muṉivaṉ ṟaṉṉai malaraṭi vaṇaṅki yintira*
*ṉentaiyē yuyntō meṉṉa ētiva ṉaṭainta teṉṟu*
*vantanā rataruṅ kēṭka vaiyanī raṟiyār pōla*
*ventaṉai yaṟiya vantī reṉṟaṉa ṉimaiyōr kōmāṉ.*

## Nāratar Questions Intiraṉ

As Intiraṉ saluted the lotus-feet
Of the sage who had come, and said:
'We are saved, my Lord',
The sage asked: 'Why are you here?'
Intiraṉ replied: 'Why have you come
To question my plight as if
You know nothing about the happenings?'

(இந்திரன் நடந்தது கூறுதல்)

177. **நிகழ்ந்த வெல்லா நெடிது விளம்பியே**
**புகழ்ந்து புங்கவன் றன்னைப் புணர்ப்பினான்**
**மகிழ்ந்தெ னக்குய்யு மாறொரு வண்ணநீ**
**திகழ்ந்த நல்லுணர் வாற்செப்ப வென்றனன்.**

எ-து 'வாரீர் மகானுபாவரே! அடியேன் பிரதோட காலமென்ற (காலத்தே) அனேகம் தேவர்களுடனே கயிலைக்குப் போகும்போது சிவன் வேடரூபமாய் அடியேனைக் கபாலந் திறக்க அடித்தா ரதனாலே நான் வெகுண்டு அந்த வேடனை அடிக்க நினைத்தபோது, வேடனானவன் இந்தக் காலநேமியென்னும் அசுரனை உற்பவித்ததனாலே என் வளப்பங்களெல்லாம் இழந்தேன் என்று ஆதியோடந்தமாய் விண்ணப்பம் செய்து, அடியேன் அந்தக் காலநேமியைச் செயித்துப் பொன்னுலகத்தை அனுபவிக்கும் படியாய் தேவரீர் அனுக்கிரகம் செய்ய வேணுமென்று அவர் திருவடியில் வணங்க, அவர் மிகுந்த கிருபையோடுங்கூடினவராய் அருளிச் செய்கின்றா ரென்றவாறு. (6)

புங்கவன் - இறைவன், இங்கு நாரதரைச் சுட்டியது. புணர்ப்பு - இணைப்பு. இணைந்தவனாகிய இந்திரன். உய்யுமாறு - வாழும் வழி

உரை - பிரதோடகாலம் - அத்தமனத்திற்கு முன்னும் பின்னும் மூன்றேமுக்கால் நாழிகைக்காலம். கபாலம் - தலைஓடு. பொன்னுலகு - இந்திரலோகம். அனுக்கிரகம் - அருள்.

பா.வே - 1. நாரத முனிவரைப் பார்த்திந்திரன் கூறுகின்றான் பிரதோட காலத்தைக் குறித்து, கயிலைக்குப் போனேனப்போது சிவன் வந்து வேடனா யடித்தா ரதன்பின்பு நானும் வெகுண்டந்த வேடனையடிக்க நினைத்தே னப்போதந்தப் பழியைத் துவாபர யுகத்திலே நானுனக்குத் தருகிறே னென்று சொன்னார் நான் திரும்பி வந்தபின்பு காலநேமியான வசுரன் வந்து எனது வளத்தை யெல்லாங் கிரகித் தென்னை விரட்டிவிட்டா னானுமனேக காலமா யிடர்பட்டிருக்கின்றே னெங்க ளிடர்தீர வோருபாயத்தைச் சொல்லிக் கடைத்தேற்ற வேணுமென்று மிகவும் புகழ்ந்த விந்திர மகாராச னானவ னொரு யூக புத்தியினா லியான் பிழைக்கத் தக்கதா யனுக்கிரக மொழியினாற் கூறித் தேவலோகத்தை யீடேற்ற வேணுமென்றா னிந்திர னென்றவாறு.

## Intiraṉ naṭantatu kūṟutal

*nikaḻnta veḷḷā neṭitu viḷampiyē*
*pukaḻntu puṅkavaṉ ṟaṉṉaip puṇarppiṉāṉ*
*makiḻnte ṉakkuyyu māṟoru vaṇṇaṉī*
*tikaḻnta nalluṇar vāṟceppa veṉṟaṉaṉ.*

## Intiraṉ Recounts

After describing in detail
All that had happened so far,
Intiraṉ fulsomely praised Nāratar.
'Be pleased to grant me a way
To save me, as you are
Indeed the master of time."[1]

(நாரதர் வருந்துதல்)

178. என்ற போதம் முனிவ னிரங்கிமெய்
யொன்று சிந்தையி னோட நினைந்துமக்
குன்ற வில்லிக் கொடுமையும் வேரற
வென்றி சேரவவ் விண்ணவர்க் கோதுவான்.

எ-து. இப்படியாக இந்திரனானவன் நாரத மகாமுனிவர் சரணார விந்தங்களில் தெண்டன் சமர்ப்பித்து, சிரசிலே கையைக் கூப்பி நிற்கின்ற தேவராசனைப் பார்த்துக் கருணை கூர்ந்த கிருபையினாலே ரக்ஷிக்க வேண்டித் தமது ஞான பூரணமான திருவுளத்தினாலே

---

1 A sage who knows the past, present and the future.

[1]ஆலோசித்தவராய் மகாமேருவை வில்லாகவுடைய கைலாயபதியினுடைய தாமத குணத்தினுதித்த காலநேமியாகிய அசுரேந்திரனுடைய கொடுமைகளானவை வேரோடே பறியும்படியாய்த் தேவேந்திரனானவன் பழையபடி தன் போக பாக்கியத்தையடையத் தமது திருவுள்ளத்தில் நினைந்து அனுக்கிரகம் செய்கிறார் நாரதமுனிவர் என்றவாறு. (7)

குன்றவில்லி - குன்றினைவில்லாக உடையவன் மேருவாகிய வில்லை ஏந்திய சிவபெருமான். வென்றி - வெற்றி

**உரை** - தாமதகுணம் - முக்குணங்களில் ஒன்று; அவை - இராசதம், சாத்துவிகம், தாமதம் என்பன. இராசதம் - ஊக்கம, கலவி, கேள்வி, ஞானம், தருமம், தானம், வீரம் என்னும் ஏழுகுணங்களடங்கியது. சாத்துவிகம் - அருள், ஐமபொறியடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம் (மௌனம்), வாய்மை என்னும் எண்குணமுடையது தாமதம் - ஒழுக்கவழு, காமம், கொலை, கோபம், சோம்பல், நீதிவழு, நெடுந்துயில், பேருண்டி, பொய், மறதி, வஞ்சகம் போன்ற குணங்களையுடையது பறிதல் - களைதல், நீககுதல்

பா.வே - 1. யூகித்தவராய்.

## Nāratar varuntutal

*eṉṟa pōtam muṉiva ṉiraṅkimey*
*yoṉṟu cintaiyi ṉōṭa niṉaintumak*
*kuṉṟa villik koṭumaiyum vēraṟa*
*veṉṟi cēravav viṇṇavark kōtuvāṉ.*

## Nāratar Unhappy

Learning about what had happened
Nāratar was sad. Cogitating on the problem
Of terror unleashed by Civaṉ
Who wields a bow, he spoke to the gods
On how to get rid of the evil Acura.

**(அரங்கனைக் காணச் சொல்லுதல்)**

179. ஆழிகடைந் தமுதெடுத்த வன்றுபிறந்
துனக்குச்செல்வ மளிக்குந் தாயை
ஊழிபல வாயினுந்தான் மறப்பர்களோ
செய்ந்நன்றிக் குதவி யுண்டோ

ஏழுலகு மீன்றளிக்கும் பெருந்திருவை
யறம்வளர்க்கும் இறைவி தன்னைத்
தாழுமவர் பகைதடிந்து வினைகடிந்து
முத்தியினிற் சார்வ ரன்றே.

எ-து. வாராய் தேவராசனே! முற்காலங்களிலே அமுதத்திற் றிருவவதாரஞ் செய்தருளிய ஸ்ரீமகாலக்ஷிமியினுடைய கிருபா நோக்கங்களாலே நீ சகல பாக்கியங்களும் அடைந்து அந்தச் செல்வத்தினது கர்வத்தினாலே அந்தத்தாயை மறந்தபடியினாலே மிகுந்த துன்பங்களை இப்படி அனுபவித்தாய். ஊழிக்கால மானபோதுந் தெரிந்த பெரியோர்கள் செய்ந்நன்றியை மறவார்களாகையினாலே செய்ந்நன்றிக்குத் தகுதியாகிய பிரதியுபகாரஞ் செய்யாது கழித்தவர்கள் இவ்வுலகத்துண்டோ? இந்த ஏழுலகத்தையு மணிவயிற்றின் வைத்து இரட்சிக்கப்பட்ட கிருபா நேத்திரங்களையுடைய அந்த ஸ்ரீமகாலட்சுமியாய், தருமத்தையெல்லாம் வளர்க்காநின்ற லோகநாயகியினுடைய திருவடியை யடைவையாகில் உன்னுடைய சத்துருக்களைச் செயித்துச் சகல மங்கள சாம்ராஜ்ய பட்டாபிடேகபதியாய் இருப்பாயென்று பின்னுங் கூறுகின்றா ரென்றவாறு. (8)

ஊழி - யுகமுடிவு, நெடுங்காலம் திரு - இலக்குமி. தாழுமவா - வணங்குபவர், அடைபவர். தடிதல் - அறுத்தல், நீக்குதல். கடிதல் - அறுத்தல், நீக்கல்.

## Araṅkaṉaik kāṇac collutal

*āḻikaṭain tamuteṭutta vaṉṟupiṟan*
*tuṉakkuccelva maḷikkun tāyai*
*ūḻipala vāyiṉuntāṉ maṟapparkaḷō*
*ceynnaṉṟik kutavi yuṇṭō*
*ēḻulaku mīṉṟaḷikkum peruntiruvai*
*yaṟamvaḷarkkum iṟaivi taṉṉait*
*tāḻumavar pakaitaṭintu viṉaikaṭintu*
*muttiyiṉiṟ cārva raṉṟē.*

## Towards Araṅkaṉ

Even if several aeons pass by,
Can one forget the Mother who gives wealth,
And who was born on the day
The ocean was churned to gain nectar?
Are there any who forget gratitude?

If you worship the great Mother
Who gives birth to the seven worlds,
The goddess who upholds Dharma,
You will overcome your enemies,
Your past sins will be destroyed
And you will gain Realisation.

**(அரங்கநாயகியைக் காணச் சொல்லுதல்)**

180. மூவரவள் விழிக்கடையி னிமையுயர
முத்தொழிலும் இயற்று வாரத்
தேவதையின் அருளகல மூவுலகு
முடனகலுந் திருமா லுக்கும்
ஆவியவள் அருட்பெறிலோ அனைத்துலகும்
வெகுகாலம் ஆண்டு பின்னர்ப்
பாவவினைப் பற்றறுத்து வழியாத
பரமபதம் பயில்வ ரன்றே.

எ-து. ஸ்ரீமகாலட்சுமியினுடைய கிருபையைப் பொழிகின்ற கடைக்கண் அருள் நோக்கப் பார்வையினாலே மும்மூர்த்திகளும் சிருட்டி, திதி, சங்காரங்களாகிய முத்தொழில்களைச் செய்து பிரபல பிரதிட்டையை யடைவார்கள். இந்த உலகங்களில் அவளருளால் தருமமானது முதலுகத்தில் நான்குபாதமும், இரண்டாமுகத்தில் மூன்று பாதமும், மூன்றாமுகத்தில் இரண்டுபாதமும், நான்காமுகத்தில் ஒரு பாதமுமாய் நடக்கும். அவளசைவில்லாமற் போனால் திரிபுவனமும் சித்திரப்பிரதிமைபோல் அசைவில்லாமல் அடங்கும். இப்படி மிகுந்த கிருபாநிதியாகிய அரங்கநாதருடைய திவ்விய திருமார்பினின்றும் திருவிளையாடலாய் நடக்காநின்ற அவருக்கு உயிராய் விளங்கிப் பிரகாசிக்கும்படியாகிய அந்த அரங்கநாயகியினுடைய கிருபையை யாதாமொருவர் பெறுவார்களோ அவர்கள் சகல பாவங்களும தொலைந்து இக பர சவுக்கியங்களை அடைவராதலால் அந்தத் தாயை ஆதரவாயடைந்து நீயும் பொன்னுலகத்துக்குப் பட்டாபிடேகபதியாய் வாழக்கடவாயென்று ஆசீர்வதித்துப் பின்னும் பரமபதத்தை யடைவாயென்று கூறுவார் நாரதமுனிவர் என்றவாறு. (9)

மூவர் - மும்மூர்த்திகள், பிரமன், சிவன், விஷ்ணு ஆகியோர். விழிக்கடை - கடைக்கண் பார்வை, அருள ஆவி - உயிர்

**உரை** - சிருட்டி - படைத்தல். திதி - காத்தல். சங்காரம் - அழித்தல். பிரதிட்டை - நிலைநிறுத்தல் பாதம் - நாலிலொன்று, பங்கு. திரிபுவனம் - மூவுலகு - சுவர்க்க, மத்திய, பாதலம் என்னும் மூவுலகு. பிரதிமை - வடிவம், விக்கிரகம். இகபரம் - இகம் - இம்மை, இப்பிறவி; பரம் - மறுமை, மறுபிறவி.

## Araṅkanāyakiyaik kāṇac collutal

*mūvaravaḷ viḻikkaṭaiyi ṉimaiyuyara*
*muttoḻilum iyaṟṟu vārat*
*tēvataiyiṉ aruḷakala mūvulaku*
*muṭaṉakalun tirumā lukkum*
*āviyavaḷ aruṭpeṟilō aṉaittulakum*
*vekukālam āṇṭu piṉṉaṟp*
*pāvaviṉaip paṟṟaṟuttu vaḻiyāta*
*paramapatam payilva ṉṟē.*

## On Araṅkanāyaki

The Trinity follow the movement
Of her side-glances and proceed
With their [2]three-fold works; by the grace
Of this goddess, the three worlds move;
She is the very life of Nārāyaṇaṉ.
If her grace is obtained
One can rule over all the worlds
For long; later, cutting down
The knots of one's past sins,
Gain a place in eternal heaven.

(அரங்கன் ஆற்றல் கூறுதல்)

181. பொன்னனையு மண்ணனையு மார்பிடந்து
மண்ணைமுனம் புரந்த வண்ணல்
முன்னமறை தனைக்கவரு சோமுகனை
வதைத்துமறை முனிவர்க் கீந்து

---

2. Creation, Guardianship and Destruction.

பொன்னைதிரு டரக்கனையு மிலங்கைமலங்
கத்தடியும் புயல்போல் வண்ணன்
தன்னையிரு தாடொழுதால் தணியாத
பகைதடிந்து தணிவா யென்றான்.

எ-து. அப்படிச் சிலாக்கிய பரிபூரணமாகிய ஸ்ரீமகாலட்சுமி தேவியார்க்கு நாயகனாகிய அரங்கநாயகர் துட்டநிக்கிரக, சிஷ்டபரிபாலன சகத்கர்த்தாவாகிய நியாமகனாகையால், பூர்வகாலத்திலே இந்தப் பூமண்டலங்களிலே யசுரான் மிகுதியாயகங்கரித்து, பிரமசரியன், கிருகஸ்தன், வானப்பிரத்தன், சன்யாசியாகிய ஆசிரமங்களுக்கு உரித்தான வேதமார்க்கங்கள் அவத்தையடைந்து அதர்மங்கள் தலையெடுத்து மிகுதியாய் வளர்ந்த சமையங்களிலே தமது சங்கல்ப மாத்திரத்தால் [1]லீலா விபூதியில் இலட்சுமி நரசிம்மராயும், வராக மூர்த்தியாயும், திருவவதாரங்களைச் செய்து இரணியன், இரணியாக்கனாகிய அசுர சூடாமணிகளான இரண்டு பேரையும் வதை செய்ததும் அல்லாமல், ஆதி காலத்தில் பிரம்மாவுக்கு உபதேசித்தருளிய நான்கு வேதங்களையும் கிரகித்துச் சமுத்திரத்திலொளிதத சோமுகாசூரனை மச்சாவதாரஞ் செய்து அவனைச் [2]சம்மரித்து, மீட்டு மந்த வேதத்தை [3]பிதா மகனுக்கருளிச் செய்தார். அதனால் வேதகிரி என்று காரணப்பெயராச்சுது. பிராட்டியாகிய சீதாதேவியை எடுத்து இலங்கையில் அசோகவனததில் சிறை வைதத இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்து முதலாகிய பேர்களை யதப்படுத்திச் சீதையை மீட்டு அரசாட்சி செய்கின்ற லீலா விபூதியை உடைய அரஙகநாயகருடைய திவ்விய சரணார விந்தங்களை ஆதரவாயடையப் பெறுவையாகின் அடஙகாத புசபல பராக்கிரம சாலியாகிய காலநேமிப் பகையினை எளிதாய் வென்று படடாபிடேக பதியாய் வாழ்வாயென்று பின்னும் [4]அருளிச் செய்கின்றார் நாரத முனிவரென்றவாறு. (10)

பொன்னனை - பொன்னவனை - இரணியனை. அண்ணனை - இரணியனின் அண்ணனாகிய இரணியாக்கதனை மாாபிடந்து - மாாபைப பிளந்து; இடத்தல் - கிழித்தல, பிளத்தல் மறை - வேதம். பொன்னை - பொன் போன்றவளாய சீதையை திருடுஅரககன் - கவர்ந்து சென்ற இராவணன். மலஙகல் - கலஙகுதல் தடிதல் - அழித்தல்

உரை - துட்டநிக்கிரகர் - தீயோரை அழிப்பவர் சிஷ்டபரிபாலனா - நல்லோரைக் காத்தளிப்பவர். சகதகர்ததா - உலகங்களுக்குத் தலைவர். நியாமகன் - ஆணை இடுவோன், செலுத்துபவன். அகஙகரிததல - கர்வம கொள்ளுதல் சங்கல்பமாததிரம் - விருப்பத்தின்படி லீலாவிபூதி - திருவிளையாடற் பணபு விபூதி - உத்தமகுணம

பா வே - 1 லீலாவிபூதியைச் செய்ய வட்ட லஷ்மி நரசிம்மராயு மாதி வராக மூர்த்தியாயுந். 2 வதைததருளி 3 அனன ரூபமாய ஒரு கிரியிலே 4 பின்னுங் கூறுகின்றார்.

## Araṅkaṉ āṟṟal kūṟutal

*poṉṉaṉaiyu maṉṉaṉaiyu mārpiṭantu*
*maṉṉaimuṉam puranta vaṇṇal*
*muṉṉamaṟai taṉaikkavaru cōmukaṉai*
*vataittumaṟai muṉivark kīntu*
*poṉṉaitiru ṭarakkaṉaiyu milaṅkaimalaṅ*
*kaṭṭaṭiyum puyalpōl vaṇṇaṉ*
*taṉṉaiyiru tāṭoḻutāl taṇiyāta*
*pakaitaṭintu taṇivā yeṉṟāṉ.*

## On Araṅkaṉ

He is the Lord who destroyed
Iraṇyāṭca and Iraṇyakacipu
In days of yore to save the earth;
He killed Cōmukaṉ, the Acura
Who had stolen the Vēdas,
And gave them back to Piramaṉ.
The cloud-hued who punished the Acura
Who had stolen the golden Cītā
And imprisoned her in Laṅka;
If you worship his twin feet
You can overcome invulnerable enemies
And regain kingship', he said.

(அரங்கனைக் காணப் பாவம் ஒழியும் எனல்)

182. விண்ணவர்க்கு மண்ணவர்க்கும் வினைகடிந்து
பகைதடிந்து விளங்கு மூழிக்
கண்ணெவர்க்கு மாய்கையினாற் கலந்துசிறு
குழந்தையைப்போல் காணு மூர்த்தி
பண்ணவர்க்கு மறியாத பரம்பொருளை
யுலகனைத்தும் படைக்குந் தேவை
நண்ணவர்க்கும் பவமொழியு நாட்கரையா
தவர்பதத்தை நண்ணு வாரே.

எ-து. வாராய் தேவராசனே! சிவன், பிரம்மா, தேவ இருடிகள், மனு, மாந்தாதா முதலாகிய சேதனா சேதனங்களிலும் உண்டாகிய வான்மாக்களுடைய பூர்வ கர்மங்களை நீக்கி அவர்களுக் கிட்டகாமியங்களைக் கொடுத்து ரக்ஷிக்கப்பட்ட பிரளய காலத்திற் [1]சர்வ சராசரங்களையும் தமது மணிவயிற்றினடக்கிச் சிறு குழந்தையைப் போல ஓராலிலையிலே யோக நித்திரை செய்கின்ற அந்தப் பரம புருடனிட அவதார சரித்திரங்களைக் கியான பூரணராகிய உருத்திர மூர்த்திகளாலும் கூறுதற்கரிய பரவாசுதேவரானவர் காரிய, காரண, உபய, சரீர, விச்சா, விசேஷத்தால் மறுபடியும் சமஸ்தமாகிய பிரம்மா முதல் புல்லு பரியந்தமான பிரபஞ்சங்களைச் சிருட்டி செய்யும்படியாகிய திருவிளையாட்டினால் ஆலோசிக்காநின்ற [2]இரக்ஷகனை ஆதரவாய் அடைந்த பேர்கள் சென்ம சென்மங்கடோறும் செய்த மகா பாபங்களெல்லாம் நீறாய், என்றும் அழியாத [3]பரமபதச் செல்வத்திலே நித்திய சூரியர்களாய்த் தெரிசனஞ் செய்து ஆனந்த வைப சுகுணத்தை அடைவார்களென்று பின்னும் [4]அருளிச் செய்கின்றார் நாரதமுனிவர் என்றவாறு. (11)

ஊழிக்கண - பூமியினிடத்து; நெடிதுகாலம். பண்ணவா - தேவர் முதலிய திண்மை வாய்ந்தவர். நண்ணவா - சேர்ந்தவா பவம - பாவம், பிறப்பு.

உரை - மனு - சுவாயம்பு மனு, சுவாக்கிருஷ மனு முதலிய சக்கரவர்த்திகள். மாந்தாதா - ஓர் அரசன் சேதனம் - அறிவு, உணர்ச்சி. இட்டகாமியம் - விரும்பிய பொருள்கள். கியானபூரணர் - ஞான நிறைவுடையவர்.

பா.வே - 1 சகல ராசாக்களையும் 2 கற்தாவை. 3 பரமபதத்திலே 4. பின்னுங் கூறுவார்.

## Araṅkaṉaik kāṇap pāvam oḻiyum eṉal

*viṇṇavarkku maṇṇavarkkum viṉaikaṭintu*
*pakaitaṭintu viḷaṅku mūḻik*
*kaṇṇevarkku māykaiyiṉāṟ kalantuciṟu*
*kuḻantaiyayppōl kāṇu mūrtti*
*paṇṇavarkku maṟiyāta paramporuḷai*
*yulakaṉaittum paṭaikkun tēvai*
*naṇṇavarkkum pavamoḻiyu nāṭkaraiyā*
*tavarpatattai naṇṇu vārē.*

## Araṅkaṉ Erases Sins

His image is that of a babe
Who caused illusion during the deluge
And kept the worlds within him
After destroying the evil past
Of gods and human beings,

And removing their enemies.
He is the Supreme beyond understanding
Even for gods; he is the creator
Of all the worlds; Those who approach him
Are speedily saved from the sea of birth.

(அரங்கன் அருளால் பேறுபெறுவர்)

183. இடராழி தனக்கோடம் பவவிருளுக் கோரிரவி
யிகலு வோரைத்
தொடராழி மிடிக்குவந்த பெருஞ்செல்வந் தொல்லைவினைக்
கருளும் தெய்வம்
படராழித் தனிக்கரத்தோன் பதமலரை யனுதினமும்
பரவு நல்லோர்
திடராழி வையகத்திற் சேர்முத்தி வித்தாகித்
திகழ்வ ரன்றே.

எ-து. உலகத்தாருடைய பிறவியாகிய துன்ப சாகரத்தை [1]நீக்காநின்ற பெரிய கப்பல் போலவும், அந்தத் துன்பத்துக்கேதுவாகிய சென்ம பாவ இருளை நீக்குவதற்கு அதிகப் பிரகாசத்தினைத் தரும் ஞானசூரியனைப் போலவும், அவருடைய திருவாய் மலர்ந்தருளிய மறைகளுக்கு மூவுலகத்தின் அடங்காநின்ற தர்மங்களுக்கும் விரோதமாய் ஆணவமலத்தாலே அகங்கரிக்கா நின்ற அசுரர் கூட்டங்கள் முதலாகிய பேர்களைத் தொடர்ந்து [2]சம்மரிக்கா நின்ற பெரிய [3]கிஞ்சுமாரச் சக்கரமாய் இம்மை மறுமையினது வறுமையை நீக்கி, இகபர சவுக்கியங்களைக் கொடுக்கும் பெரிய கியான பூரண செல்வமானவர், தேமாந்தளிர் போன்ற விரலையுடைய கராம்புயமான ஒப்பற்ற மலரிலே [4]தரிக்கப்பட்ட சக்கரத்தையுடைய அவரது பாதத்தாமரையை இடைவிடாது உபாசிக்காநின்ற நல்லோரானவர்கள் [5]இந்தச் சமுத்திரஞ் சூழ்ந்த உலகின்கண் சீவன் முத்தர்களாய் [6]இம்மை, மறுமையினாலே பரமபதத்தில் நித்தியர்களாய் வாழ்வார்க ளென்றவாறு. (12)

இடராழி - துன்பக்கடல், பிறவி. ஓடம் - கப்பல். பவம் - பாவம், பிறப்பு. இகலுவோர் - எதிர்ப்போர், பகைப்போர். மிடி - வறுமை. ஆழி - சக்கரம்.

**உரை** - ஆணவமலம் -அறியாமை. மும்மலங்களுள் ஒன்று. அவை - ஆணவம் (அறியாமை), மாயை (மறைப்பு), காமியம் (இச்சை) என்பன கிஞ்சுமாரம் - முதலை. தேமா - இனிப்பு, மாமரம்.

**பா.வே** - 1. கடத்திவைக்காநின்ற. 2. சங்கரிக்காநின்ற. 3. சிஞ்சுமாரச். 4 தரிக்காநின்ற. 5. மேடுகளை உடைய இந்த சமுத்திரஞ் சூழ்ந்த. 6. இம்மையினிருந்து மறுமையிலே பரமபதமாகிய நிலத்தில் விளையாநின்ற விரையாகிய நித்ய சூரியர்களாய்.

## Araṅkaṉ aruḷāl pēṟupeṟuvar

*iṭarāḻi taṉakkōṭam pavaviruḷuk kōriravi*
*yikalu vōrait*
*toṭarāḻi miṭikkuvanta peruñcelvaṉ tollaiviṉaik*
*karuḷum teyvam*
*paṭarāḻit taṉikkarattōṉ patamalarai yaṉutiṉamum*
*paravu nallōr*
*tiṭarāḻi vaiyakattiṟ cērmutti vittākit*
*tikaḻva raṉṟē.*

## Araṅkaṉ's Grace

He is the ship that helps us cross
The sea of sorrows; the sun to combat
The darkness of birth; the discus
That cuts down the enemies of Dharma
The image of prosperity, the god
Who guards us from ancient sins.
He wields a discus in hand.
Those who worship his lotus feet
Gain realisation daily on this earth
Which is surrounded by oceans.

(பிரமனுக்குரிய ஒரு நாள் அளவு)

184. பிரமனுக்கா யிரஞ்சதுரி யுகம்பகலா
மெனவேதம் புகலு கின்ற
திரமதனால் சிவன்முதலோர் மனுப்பதினான்
கிந்திரருஞ் செனித்து மாள்வர்
பரமெனவா யிரஞ்சதுரி யுகமிரவாய்த்
தோன்றவயன் பனக மீதிற்
கரமுகிழ்த்தங் கரியெனவே கண்வளர
மூன்றுலகுங் கனலா மன்றே.

எ-து. வாராய் தேவராசனே! பிதா மகனாகிய பிரமதேவனுக்கு ஆயிரம் சதுரியுகங்கூடியது ஒரு பகலாகுமென்று வேதங்களில் திரமாய்ச் செப்புகின்றது. சிவன் முதலாகிய ஏகாதச ருத்திராள், துவாத சாதித்தாள், அஷ்டவசுக்கள், சப்த மருத்துக்கள், சப்தரிஷிகள், மனுமந்தாதிகள், பதினான்கு இந்திரர்கள் வரன் முறையாகச் செனித்து தேவ பட்டாபிடேகராய் அரசுபுரிந்து உலகத்தினை யடைந்து அவரது மணிவயிற்றில் ஒடுங்குவார்கள். அந்த பிரம்மதேவனுக்கு இராத்திரி காலம் வந்தபோது ஆயிரம் சதுரியுகம் வரைக்கும் சிருட்டியில்லாமல் தாமே பரம்பொருளாகச் சேடசயனத்தில் தமது இரண்டு கராம்புய மலரினையும் கூப்பினவராய் ஸ்ரீ அரி யென்கிற திவ்விய மங்கள விக்கிரக சொரூபம் விளங்கத்தக்கதாய் யோக நித்திரை செய்தருளுவார். அந்தச் சமயத்திலே திரிலோகங்களும் சலப்பிரளயங்களிலே மூழ்கி அக்கினி வருஷம் வருஷிக்கும். ஆதலால் சமஸ்தவாத்தும கோடிகளும் துன்பத்தையடைவார்கள். அது பிரமதேவனுக் கொருதினப் பிரளயமென்று சொல்லுவார்கள் என்றவாறு. (13)

சதுரியுகம் - சதுர் + யுகம் - இகரச்சாரியைபெற்றது. பனகம் - பன்னகம் - பாம்பு.

**உரை** - ஏகாதசருத்திராள் - பதினோரு ருத்திரர்கள் - அவர்கள் - அரசன், ஈசானன், உருத்திரன், கபாலி, சங்கரன், சௌமியன், நீலலோகிதன், பவோற்பவன், மாதேவன், விசயன், வீமதேவன் ஆகியோர். துவாதசாதித்தாள் - துவம்+தசம்+ஆதித்தாள் - பன்னிரு சூரியர் - அவர்கள்: தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டா எனப்படுவோர். இவர்கள் முறையே சித்திரை மாதத்தை முதலாக உடைய மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனு, மகரம், கும்பம், மீனம் ஆகிய பன்னிரண்டு இராசிகளில் அடையும் சூரியனுக்குச் செல்லுவர் என்பர். பதினான்கு இந்திரர் - அரி, விபசித்து, சுசாந்தி, சிவி, விபு, மனோசவன், புரந்தரன், மாவலி, அற்புதன், சாந்தி, விருடன், இருததாமன், திவற்பதி, சுசி என்போர். சலப்பிரளயம் - உலகம் முழுவதையும் கடல் மூடிக்கொள்வது. அக்கினிவருஷம் - நெருப்பு மழைபொழிதல் - வர்ஷம் - வர்ஷித்தல் - பொழிதல்.

## Piramaṉukkuriya oru nāḷ aḷavu

*piramaṉukkā yirañcaturi yukampakalā*
*meṉavētam pukalu kiṉra*
*tiramataṉāl civaṉmutalōr maṉūppatiṉāṉ*
*kintirarūñ ceṉittu māḷvar*
*parameṉavā yirañcaturi yukamiravāyt*
*tōṉravayaṉ paṉaka mītir*
*karamukiḻttañ kariyeṉavē kaṇvaḷara*
*mūṉrulakuñ kaṉalā maṉrē.*

## One Day of Piramaṉ

The Vēdas say that one day
Of Piramaṉ equals four yugas.
Hence Civaṉ and other gods,
The Manus and fourteen Intiraṉs
Take birth and die several times
In between. When Piramaṉ's night comes
As a thousand quadruple yugas
He rests on the snake-bed
With hands held in salutation
As Ari. At that time
The three worlds are in a great blaze.

(பிரமனின் நூறு வயது)

185. வேதனுக்கோர் தினமாகி லெக்கியமாம்
வராகமென விளங்கி நின்று
பூதலத்தைக் கூர்ங்கோட்டி னுண்டுகள்போற்
கொண்டளித்த புகழா லன்றச்
சீதமுனி வரர்சிவனார் செகமனைத்துந்
தேவர்களுஞ் சிறந்தார் முன்போற்
போதமுறு மயன்றனக்கும் பூரணவா
யுச்சதமாய்ப் புகல்வ ரன்றே.

எ-து. அப்படி யோக நித்திரை செய்தருளிய பிரம தேவனுக்கு ஆயிரம் சதுரியுகம் இராத்திரி காலம் சென்றாலொரு தினமாம். அந்தத் தினப் பிரளயத்தினின்று ஸ்ரீமன் நாராயணனானவர் இந்த லீலா விபூதியைச் சிருட்டி செய்ய நினைத்து, அவரது கிருபா பரிபூரண விசேடத்தா லெக்கியவராக மென்கின்ற திருவவதாரம் செய்தருளி எண்ணுகைக் கசக்கியமாகிய தமது கூர்மை பொருந்திய கொம்பினாலே னுண்டுகளாகிய பரமாணுவைப் போல பூமியினைத் தூக்கி, முன்போல விளங்கத் தக்கதாய் நிறுத்திக் கோட்டினாலே சமனாகச் செய்தருளிய பெரும் புகழினால் பிரம்ம தேவனானவன் நித்திரை நீங்கினவனாய் ஸ்ரீ அரியினுடைய அனுக்கிரக விசேடத்தால் சாத்துவீக ஞானபரிபூரணமாகிய மகாரிஷிகள், சீவன முதலாகிய இந்திராதி தேவர்கள், அகிலமாகிய லோகா லோகங்களெல்லாம் சிருட்டி செய்து முன்போலச் சிறந்து விளங்கத் தக்கதாய்ச் செய்தருளினார். அப்படிச் செய்தருளிய

பிதா மகனுக்குத் தினபரிபூரணமான நூறு வயதின் முடிவில் அண்டத்துடனே லயத்தை யடைகுவரென்றவாறு. (14)

எக்கியவராகம் - யக்கியவராகம் - வராகஅவதாரம். யக்கியம் - யாகம், அக்கினி காரியம். நுண்டுகள் - நுண் + துகள் - புழுதி. கூர்ங்கோடு - கூரிய கொம்பு.

**உரை** - அசக்கியம் - செய்யத்தகாதது. பரமாணு - மிக நுண்ணிய அணு. பிதாமகன் - பிரமன். லயன் - ஒடுக்கம்.

## Piramaṉiṉ nūṟu vayatu

*vētaṉukkōr tiṉamāki lekkiyamām*
*varākameṉa viḷaṅki niṉṟu*
*pūtalattaik kūrṅkōṭṭi nuṇṭukaḷpōṟ*
*koṇṭaḷitta pukaḻā laṉṟac*
*cītamuṉi vararcivaṉār cekamaṉaittuṉ*
*tēvarkaḷuñ ciṟantār muṉpōṟ*
*pōtamuṟu mayaṉṟaṉakkum pūraṇavā*
*yuccatamāyp pukaḻva raṉṟē.*

## Piramaṉ's Hundred Years

After such a night of Piramaṉ
Came to a close, the Lord appeared
As a boar and raised the earth
With his sharp tusk as if lifting an atom,
And became famous. The sages,
Civaṉ, the beings of the earth,
Gods and noble ones were created
Again as before and Piramaṉ too
Was granted full life and the promise
Of merging with the One finally.

(யுகப்பிரளய காலம்)

186. ஆதலினா லயன்முதலோ ரடங்கிடுவ
ருந்தியினி னகில லோகம்
போதமுறுஞ் சலமாகிப் பிரளயமாம்
நெடுங்காலம் போந்த பின்பங்

கோதவரி தாகியவா லொளிரிலைமேல்
மணிவண்ண னொருவன் சாரச்
சீதரனா ருந்தியினிற் செனித்துலகை
யளித்திடுவன் தேவ தேவன்.

எ-து. அப்படிச் சதுர்முகனுக்குத் தினப்பரிபூரணமான நூறுவயதில் மகாப்பிரளயம் சம்பவிக்கையால், இந்தப் பிரம்மதேவனும் மற்ற தேவர்களும் முனீசுவரர்களும் சேதனாசேதனமான அகிலமாகிய லோகங்களும், ஸ்ரீமன் நாராயணர் மணிவயற்றினொடுங்கும். அந்தச் சமயத்தில் சப்த சாகரங்களும் பொங்கி ஆயிரத்தெட்டு கோடி அண்டங்களுக்கு மேலாய்ச் சலசமூர்த்தியாய் மகாப்பிரளயமாகுமப்படி நெடுங்காலம் சென்ற பின்பு ஸ்ரீ அரியினுடைய கிருபா விசேடத்தால் சொல்வதற்கரிதாகிய வடவால விருக்ஷமாய் அந்தச் சலத்துக்கு மேலாய்த் தோன்றிப் பிரகாசிக்கும். அதனுடைய துளிராகிய ஆலிலையின், மேல் மணிவண்ணனான ஸ்ரீமன் நாராயணர் சிறு குழந்தையாகிய திவ்விய மங்கள விக்கிரக சொரூபம் விளங்கத்தக்கதாய்க் கவுத்துவாபரண பீதாம்பரதாரியாய்த் திருஅவதாரம் செய்தருளுவர் அவரது உந்திக்கமலத்தில் சதுர்முகனானவன் உற்பவித்து மறுபடியும் செகத்தின் ஆத்தும கோடிகளைச் சிருட்டி செய்தருளுவார் தேவ தேவனாகிய பிதாமக னென்றவாறு (15)

உந்தி - கொப்பூழ் ஆலொளிரிலை - ஆல் + ஒளிர் + இலை - ஆலிலை: ஒளிபொருந்திய ஆலிலை

**உரை** - சேதனம் - அறிவு, உணர்வு சப்தசாகரம் - ஏழுகடல் கவுதுதுவம் - கௌஸ்துபம் - துளசிமணி. பீதாம்பாம் - பொன்னாடை. தாரி - தரித்தவன.

## Yukappiraḷaya kālam

*ātalinā layaṉmutalō raṭaṅkiṭuva*
*runtiyiṉi ṉakila lōkam*
*pōtamuruñ calamākip piraḷayamām*
*neṭuṅkālam pōnta piṉpaṅ*
*kōtavari tākiyavā loḷirilaimēl*
*maṇivaṇṇa ṉoruvaṉ cārac*
*cītaraṉā runtiyiṉiṟ ceṉittulakai*
*yaḷittiṭuvaṉ tēva tēvaṉ.*

## The Deluge

Hence Piramaṉ and others merge
In the eternal; the entire earth

Is flooded as a deluge strikes it.
After the passing of a long time,
On the seas, in a wondrous gleaming
Banyan leaf, the gem-hued Lord
Will be found glowing. Nārāyaṇaṉ
The Supreme, will be born
In a womb and re-create the world.

(அரங்கனின் சுபகுணம்)

187. உந்திமலர்ப் பிரமனையும் அகிலவுல
கங்களையு முகந்த பின்னர்
அந்தவய னாற்சிவனும் அமரரையும்
படைத்துமவர் சிரத்தி னாழித்
தந்துகுறி யிட்டேவற் புரிந்தருளி
மறைவழியிற் றடுத்தாட் கொண்ட
வெந்தைதனை யடைந்தவனா யிடராழி
கடந்துமுத்தி யேறு வாரே.

எ-து. [1]அந்த ஸ்ரீஅரங்கநாயகரிட அனந்த கலியாண சுபகுண விபூதிகள் எப்படியென்றால், அவரது உந்திக் கமலத்தினுதித்த பிரம்ம தேவரானவர் சிவன், இந்திரன், தேவர்கள் முதலாகிய சராசரங்களையெல்லாம் சிருட்டி செய்து அவரது சிரங்களிலே தமது சங்கு சக்கர முத்திரைகளைத் தரித்து, அவருக்குச் சிருட்டி, திதி சம்மாரங்களாகிய கர்த்தவ்வியங்களை அருளிச்செய்து, அவர் தேவர் பணிவிடையை விருப்பமாக உகந்தருளி வேதவிதிப்படி தடுத்தாட்கொண்ட கிருபா நிதியாகிய அரங்கநாயகனைச் சரணாகதியடைந்த பேர்கள், செனனமாகிய துன்ப சாகரத்தினைக் கடந்து நித்திய சூரியர்கள் வாசஞ்செய்கின்ற அதிசிலாக்கிய பரமபதச் செல்வத்தையடைவார்களென்று பின்னும் அருளிச் செய்கின்றார் மகாரிஷியாகிய நாரத மகாமுனிவ ரென்றவாறு. (16)

ஆழி - சக்கரம். ஏவல் - கட்டளை. இடராழி - பிறவியாகிய துன்பக்கடல்.

உரை - கர்த்தவ்வியம் - கர்த்தவியம் - செய்யத்தக்க செயல்.

பா.வே - 1. அந்த அரங்க நாயகரிட திவ்விய குணானுபவங்களெப்படி யென்றா லாதி காலத்திலே தமதுந்திக் கமலத்தில் பிரமதேவரானவர் உற்பவிக்க வவராலே சகல லோகா லோகங்களையும் சிருஷ்டித்து, சிவன் முதலாகிய தேவாதிகளையு முனிவர் கூட்டங்களையுஞ் சிருஷ்டித்து மவரது சிரங்களிலே தமது சக்கர முத்திரை தரித்தவர்களுக்குத் தகுதியாகிய தொழில்களையு மருளிச் செய்தவரது ஏவற் பணிவிடையை விருப்பமா யுகந்தருளி வேத விதிப்படியவர்களையெல்லாந் தடுத்தாட்

கொண்டருளிய கிருபா நிதியா யெந்தந்தையாகிய வரங்க நாயகரைச் சரணாகதியா யடைந்த பேர்களைச் செனன மரணமாகிய துன்ப சாகரத்தைக் கடந்து பரமபதச் செல்வ வைபவ சுக சொரூப வனந்த கல்யாண குணத்தினையுடைய நித்ய சூரியர்களா யிருப்பார்களென்று பின்னுங் கூறுவார் நாரத முனிவ ரென்றவாறு.

## Araṅkaṉiṉ cupakuṇam

*untimalarp piramaṉaiyum akilavula*
*kaṅkaḷaiyu mukanta piṉṉar*
*antavaya ṉāṟcivaṉum amararaiyum*
*paṭaittumavar ciratti ṉāḻit*
*tantukuṟi yiṭṭēvaṟ purintaruḷi*
*maṟaivaḻiyiṟ raṭuttāṭ koṇṭa*
*ventaitaṉai yaṭaintavaṉā yiṭarāḻi*
*kaṭantumutti yēṟu vārē.*

## Araṅkaṉ's Auspicious Qualities

After the creation of Piramaṉ in the lotus
And all the worlds, Piramaṉ creates
Civaṉ and the gods and stamps
Their heads with the discus, and allocates
Duties to them. Such is my Lord
Who follows the Vēdic path of guardianship.
Those who approach him are saved
From the sorrowing sea of birth
And gain realisation.

(அரங்கனை அடைக எனல்)

188. ஆரணனை யகிலபுவ னங்களையு மன்றுதவும்
அமலன் றன்னை
நாரணனை நான்மறைக ளோதவயற் குவந்தருளு
நாதன் றன்னைப்
பாரணனை மண்ணேழும் விண்ணேழும் பரிந்தளிக்கும்
பரனை முத்திக்
காரணனைக் கைதொழுவா ரிழந்தபதம் பகைதடிந்து
கலப்ப ரன்றே.

எ-து. வாரீர் தேவராசனே! ஆதிபரப் பிரம்ம சொரூபராகிய அந்த அரங்கநாயகரானவர் சகல அண்டரண்டங்களையும் தமது குட்சியின் அடக்கி இரட்சித்ததுமன்றி, பிரம்மாவுக்குக் கிருபையோடு கொடுத்தருளிய வேதத்துக் குரித்தான பரம்பொருளாகிய ஆதி மூர்த்தியை, பதினான் குலகினையும் தந்து இரட்சிக்கும்படியான நாராயண ரென்கின்ற நாமதேயத்தினையுடைய அவரது காணப்படாத உபய சரணார விந்தங்களைத் தியானஞ் செய்கின்ற பெரியோர்கள் சகல பாபங்களினின்றும் விடுபட்டு என்றும் அழிவில்லாத நித்தியானந்தமாகிய பரமபதச் செல்வ சாம்பிராச்சிய சுகுணத்தையடைவார்கள். ஆகையால், [1]இனியும் சகல சந்தேகங்களும் நீங்கி அரங்கநாயகரை ஆதரவாய் அடைந்தால் [2]உன் இந்திர பதவியைப் பெற்றுப் பட்டாபிடேக பதியாய் நீடூழி காலம் வாழ்வாயென்றருளிச் செய்தார் நாரதமுனிவர் என்றவாறு. (17)

ஆரணன் - திருமால். அமலன் - குற்றமற்றவன்; திருமால். பாரணன் - முகில் வண்ணன். திருமால்.

உரை : குட்சி - குக்ஷி - வயிறு. சாம்பிராச்சியம் - செல்வம், பாக்கியம். சுகுணம் - நற்குணம். நன்மை.

பா.வே. - 1. நீயும். 2. உனது பதவியைப்.

## Araṅkaṉai aṭaika eṉal

*āraṇaṉai yakilapuva ṉaṅkaḷaiyu maṉṟutavum*
*amalaṉ ṟaṉṉai*
*nāraṇaṉai nāṉmaṟaika ḷōtavayaṟ kuvantaruḷu*
*nātaṉ ṟaṉṉaip*
*pāraṇaṉai maṇṇēḻum viṇṇeḻum parintaḷikkum*
*paraṉai muttik*
*kāraṇaṉaik kaitoḻuvā riḷantapatam pakaitaṭintu*
*kalappa raṉṟē.*

## Go to Araṅkaṉ

He is the Veda; the Pure One
Who guards all the worlds.
Those who worship Nārāyaṇaṉ
That grants Piramaṉ the four Vēdas,
The cloud-complexioned Supreme
Who creates the fourteen worlds,
The Cause of Realisation,
Will gain back what they lost,
Their enemies will be felled
And they will rejoin their kin.

### (வராக அவதாரம்)

189. ஆதியினிற் பூமிதனைப் பாயாகச் சுருட்டியொளி
ரிரணி யாக்கன்
தீதகல மார்பிடந்து பேருலகை நிலைநிறுத்துந்
தெய்வப் பன்றிச்
சோதிமுகத் தெழுந்தரும்பிக் கங்கையொரு பெண்ணுருவாய்த்
தோன்றி முன்னம்
பாதமல ரினைவணங்கித் தெய்வவரா கத்தின்முகம்
பார்த்து நின்றான்.

எ-து. வாராய் தேவராசனே! ஆதி காலத்திலே இரணியாக்கனென்கின்ற அசுர சூடாமணியானவன் [1]தன் பவவலியினாலே, வேத, சாத்திர, யாக, எக்கிய, செப, தப முதலாகியதைத் தன் பேராலே விளங்கச் செய்து, பின்னுமிந்தக் குவலயத்தைப் பாயாய்ச் சுருட்டிக்கொண்டு போய்ப் பாதாளத்திலே ஒளித்து வந்தான். அந்த அசுரனை லோக துன்பம் நீக்கிக் கருணைபுரியக் கருதி நேத்திரம் முதலாகிய ஞானேந்திரியங்களுக்கும், வாக்கு முதலாகிய கன்மேந்திரியங்களுக்கும், [2]தனவிடையங்களுக்கும் எட்டாத அரங்க நாயகரானவர், தமது இச்சாமாத்திரத்தால் ஆதி வராக ரூபமாய்த் திருவவதாரஞ் செய்தருளித் தமது [3]கோரத் தந்தங்களினால் அவனுடலைப் பிளந்தந்தக் குவலையமாகிய பூமிப் பரப்பையெல்லாம் அந்த வராகத்தினது தந்தப் பந்தியிலே [4]நண்டுகள்போலத் தோன்றத்தக்கதாய் எடுத்து வந்து பெரியவுலகத்தைப் பழையபடி தாபித்தார். அந்த ஆதிவராக மூர்த்தியினுடைய பிரகாச தேசோமயமாகிய திவ்விய திருமுகமண்டலத்தில் வேர்வைகளானவை பெருகி, மிகுந்த [5]சவுந்தரியத்தோடுங்கூடிய ஸ்திரீ ரூபமாய் எதிரிலே நின்று அவருடைய சரணார விந்தங்களிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து அவரது கிருபா நோக்கத்தைக் குறிப்பாய்க் குறித்திருந்தாள் கங்கையாகிய புனிதவதி யென்றவாறு. (18)

மார்பிடந்து - மார்பு + இடந்து - மார்பினைப்பிளந்து தெய்வப்பன்றி - வராக மூர்த்தி.

**உரை** - பவவலி - பிறவிவல்லமை தனவிடயம் - உலகப்பொருள் தேசோமயம் - ஒளி. சரணார விநதம் - சரணம + அரவிந்தம் - திருவடிகளாகிய தாமரை.

பா.வே. - 1 தனது வலியினாலே. 2. தன்விடையங்களுக்கு. 3. கோரப்பல்லினால். 4 துணடுகள் (நுணடுகள எனபது பொருந்தும்). 5. திவ்விய.

## Varāka avatāram

*ātiyiṉiṟ pūmitaṉaip pāyākac curuṭṭiyoḷi*
*riraṇi yākkaṉ*
*tītakala mārpiṭantu pērulakai nilainiṟuttun*
*teyvap paṉṟic*
*cōtimukat teḻuntarumpik kaṅkaiyoru peṇṇuruvāyt*
*tōṉṟi muṉṉam*
*pātamala riṉaivaṇaṅkit teyvavarā kattiṉmukam*
*pārttu niṉṟāṉ.*

## The Boar Incarnation

In days of yore Iraṇyāṭca
Folded up the earth as a mat.
The Lord incarnated as the divine Boar
And shattered his chest and replaced
The vast earth in its original position.
From the Boar's brilliant visage
Flowed the Kaṅka. She came as a woman,
Saluted the Boar's twin feet
And stood by, looking upon him.

(கங்கையின் வேண்டுகோள்)

190. பார்த்திருந்த மடக்கொடியை யிருவிழியிற் கருணையுடன்
பரிந்து நோக்கி
வார்த்தையொன்றா லாரென்று முகமலர்ந்த விறைவனடி
வணங்கி யேத்திச்
சேர்ந்திருகை பணிந்தவளுங் கங்கையென்பேர் நின்முகத்திற்
செனித்த வட்கோ
ரார்த்தியுள நின்னடியி லின்னொருக்கால் பெருகவர
மருள்க வென்றாள்.

எ-து. அப்படியாகத் தம்முடைய முகாரவிந்தத்தை நோக்கி நின்ற வல்லிசாதகக் கொடிபோன்ற இடையினையுடைய மிகுந்த சவுரியத்தோடுங்கூடி விளங்காநின்ற அந்தக்

கங்கா தேவியைக் கிருபா நோக்கத்தினாற் பார்த்தருள்கூர்ந்தவராய் அருளிச் செய்கின்றார். வாராய் பெண்ணே! இப்போது நீ இங்கே வரவேண்டிய காரண மென்ன அதைத்தெரிவிக்கக் கடவாயென் றாக்ஞாபனம் செய்தார் அப்போது அந்த வராக மூர்த்தியைப் பார்த்து அவர் திருவடிகளிலே வணங்கி [1]விண்ணப்பம் செய்கின்றாள். அது எப்படி யென்றால், அடியேனானவள் உமது திவ்விய [2]திருவடிகளிலே பூர்வம் அவதரித்த கங்கையாகிய [3]நான், அசுரனைச் சங்கரித்த அவசரத்தினாலே திருமுக மண்டலத்திலே அவதரிக்க அவனுக்கு [4]அனுக்கிரகித்தீர் ஆகையாலும்மை என்றும் பிரியாமல் தேவரீர் திருவடிகளிலே [5]அவதரிக்கத் தக்கதாய் அருளிச்செய்ய வேணுமென்று கூறினள் தேவகங்கை யென்றவாறு. (19)

மடக்கொடி - பெண் பரிதல - அன்பு செனித்தவட்கோரார்த்தியுள - செனித்தவள் + கு + ஓர் + ஆாத்தியுள - தோன்றியவளாகிய எனக்கு - ஆர்த்தி - விருப்பம்

உரை - முகாரவிநதம் - முகம் + அரவிந்தம் அரவிந்தம் - தாமரை வலலிசாதகம் - கற்பக தருவில் படரும கொடி சவுரியம் - அழகு, வீரம் ஆக்ஞாபனம் - கட்டளை.

பா.வே. - 1 சிரததிலே கைகூபபிக கூறுகினறாள் 2. சரணார விந்தத்திற். 3. என்னை 4 அருள சுரந்தனை 5 அவதரிததிநதத தலத்திலே இருக்கததக்கதா அருள் செய்ய வேணுமென்றிரந்து கூறினா டேவ கஙகை யென்றவாறு

## Kaṅkaiyiṉ vēṇṭukōḷ

*pārttırunta maṭakkoṭiyai yiruviḻiyiṟ karuṇaiyuṭaṉ*
*parintu nōkki*
*vārttaıyoṉṟā lāreṉṟu mukamalarnta viṟaivaṉaṭi*
*vaṇaṅki yēttic*
*cērntirukai paṇıntavaḷuṅ kaṅkaiyeṉpēr niṉmukattiṟ*
*ceṉitta vaṭkō*
*rārttiyuḷa niṉṉaṭiyi liṉṉorukkāl perukavara*
*maruḷka veṉṟāḷ.*

## Kaṅkā's Prayer

Looking with his kindly eyes
At the damsel who faced him,
He asked: 'Who are you?'
With a glowing face she saluted
The Lord's feet by joining her hands;

'My name is Kanka. I am born
Of your face. I have a desire.
Give me the boon to stream forth
From your divine feet.'

### (கோலமலையில் தவம் செய்க எனல்)

191. என்றளவிற் பெருங்கருணை விழியருளிற் கடைக்கணித்து
இன்னுஞ் சின்னாள்
பொன்றபின்பு யானுமொரு காரணத்தால் வாராகமதாய்ப்
போந்திப் பூமி
சென்றுசிங்க புரத்துறைகோ லாசலத்தின் வருவனவண்
சென்று நீயக்
குன்றமிசை தவமியற்று கென்றளவிற் குரைகழலைக்
குறித்துப் போனாள்.

எ-து. இப்படி உற்பவித்த கங்கையானவள் விண்ணப்பஞ் செய்ய ஆதிவராகமூர்த்தியானவர், பெரிதாகிய கடலானது மடை திறந்தொழுகினால் எத்தன்மைத்தோ அத்தன்மையதாய்ப் பெருங் கருணையானது [1]நேத்திரத்தினின்றும் உவட்டெடுத்தோடக் கடைக்கண்ணருணோக்கால், கிருபையினாலே, கடாட்சித்தருளித் திருவாய் மலர்ந்தருளுகின்றார். இன்னம் சிலநாள் கழிந்த பின்பு நாம் ஒரு காரணம் நிமித்தமாக, யெக்கிய வராகமாய் அவதரித்திந்தப் பூமண்டலத்திலே மிகுந்த சிலாக்கியமாகிய கோலாசல கிரியிலெழுந்தருள வேண்டிய காரணமிருக்கையால், அந்தச் [2]சஞ்சீவிபுரமாகிய கோலாசலத்தினின்றும் நீ தவம் புரிகுவையாயின் நீ நினைத்த காரணமானது ஈடேறுமென்று திருவுளம்பற்ற, அப்படியே அவருடைய [3]திவ்விய திருவடிகளைச் சேவித்து விடை பெற்றவளாய் நடந்தாள் [4]கங்கை யென்றவாறு.

கடைக்கணித்தல் - அருள்புரிதல் சின்னாள் - சில்+நாள், சிலநாட்கள் பொன்றபின் - கழிந்தபின போந்து - எழுந்தருளி அவண் - அவ்விடத்தில் கோலாசலத்தில் குரைகழல் - ஒலிக்கின்ற கழலணிந்த திருவடி.

**உரை** - உவட்டெடுத்து - பெருக்கெடுத்து நிமித்தியம் - நிமித்தம் - பொருட்டு திருவுளம்பற்ற -அருளபுரிய

**பா.வே** - 1. விழியினின்று 2. சஞ்சீவி புரமென்றும் சிங்கபுரமென்றும் கூறுகின்ற தலத்தினது மலையாகிய கோலாசலத்தினின்றும் . . . . . 3 சரணார விந்தங்களைச் 4 கங்காதேவி

## Kōlamalaiyil tavam ceyka eṉal

*eṉṟaḷaviṟ peruṅkaruṇai viḻiyaruḷiṟ kaṭaikkaṇittu*
*iṉṉuñ ciṉṉāḷ*
*poṉṟapiṉpu yāṉumoru kāraṇattāl vārākamatāyp*
*pōntip pūmi*
*ceṉṟuciṅka puratturaikō lācalattiṉ varuvaṉavaṉ*
*ceṉṟu nīyak*
*kuṉṟamicai tavamiyaṟṟu keṉṟaḷaviṟ kuraikaḻalaik*
*kuṟittup pōṉāḷ*

## The Lord's Command

With immense compassion streaming
From his eyes, the Lord said:
'After the passage of some time,
To fulfil a promise, I will
Come to the earth as a Boar
To live in the Kōlācala Hill
At Ciṅkapuram on the earth.
You proceed to that hill
And perform austerities.' Immediately
She saluted his feet and went away.

(கங்கை வராக நதியாதல்)

192. [1]அன்னாடொட் டத்தேவன் வருமளவுந் தவமியற்றி யந்தக் கங்கை
மின்னாளு மவரடியின் வரநதியிற் பெருக்கெடுத்து விளங்குந் தெய்வப்
பொன்னாடும் புகழ்ந்தேத்தும் வராகநதி யெனப்பெரும்பேர் பெற்றிப் பூமி
அன்னோரைக் கடத்தேற்றி யம்மலையி னுத்தரத்தில் அமர்ந்தா ளன்றே.

எ-து. வாராய் தேவராசனே[1] அப்படி வராக மூர்த்தியினுடைய அனுக்கிரகத்தால் பெருக்கெடுத்து வந்த கங்கையானவள், இந்த யெக்கிய வராக மூர்த்தியானவர் வருகிற பரியந்தம் அந்தக் கோலாசலமென்னும் திருமலையிலே தவஞ்செய்து கொண்டிருந்தாள். அப்போது நாராயண மூர்த்தியானவர் அவள் தவத்துக்கு [2]இரங்கினவராய் அந்தக் கிரியிலே [3]வந்தெழுந்தருளினார் அந்த யெக்கிய வராக மூர்த்தியினுடைய பாத தாமரையினின்றும்,

அவர் அனுக்கிரகத்தினாலே [4]மிகுந்த சிலாக்கியமாகிய ஆகாய கங்கையைப்போலப் பிரவாகமாய் விளங்கிப் பிரபலமான தேவர்களெல்லாம் புகழ்ந்து துதிக்கும்படியாய் வராகநதி என்கின்ற பெரிதாகிய நாமதேயத்தை அடைந்து, உலகத்தாரையெல்லாம் கடைத்தேறச் செய்து அந்தத் திருமலையினுத்தர பாகத்திற் பெருகா நின்றாள் மிகுந்த [5]பரம பவுத்திரமாகிய கங்கையென்று பின்னும் அருளிச் செய்கின்றார் நாரதமுனிவ ரென்றவாறு. (21)

அன்னாடொட்டு - அந்நாள் + தொட்டு - அந்தநாள் முதலாக. எதுகை நோக்கி றன்னகரமாயிற்று. அன்னோர் - உலகமக்கள். உத்தரம் - வடக்கு.

**உரை** - பரியந்தம் - அதுவரை. பிரவாகம் - பெருக்கு. பெருகாநின்றாள் - பெருகினாள், பாய்ந்தோடினாள் பவுத்திரம் - தூய்மை, சுத்தம்.

**பா.வே.** - 1. அந்நாள். 2. இரங்கியுருகினவராய். 3 மீட்டும் வந்தெழுந்தருளி. 4. பரிசுத்தமான ஆகாச. . . 5. பவுத்திரமாகிய.

## Kaṅkai varāka natiyātal

*an̲n̲āṭoṭ ṭattēvan̲ varumaḷavun tavamiyar̲r̲i yantak kaṅkai*
*min̲n̲āḷu mavaraṭiyin̲ varanatiyir̲ perukkeṭuttu vilaṅkun teyvap*
*pon̲n̲āṭum pukaḻntēttum varākanati yen̲apperumpēr per̲r̲ip pūmi*
*an̲n̲ōraik kaṭattēr̲r̲i yammalaiyi n̲uttarattil amarntā ḷan̲r̲ē.*

## Kaṅka as Varāka River

From that day till the moment
When the Lord would manifest there,
Kaṅka performed austerities.
From his feet she streamed forth
And came to be known as the Varāka river
Praised by even the denizens of heaven
Granting boons to earthings
She remained in the north of the hill.

(வராகநதியின் பயன்)

193. வஞ்சகஞ் சூது கொலைகளவு வரும்பொய் காம மதுவுண்பா
ரஞ்சு மத்தி செய்பவரும் [1]அடைந்தந் நதியின் மூழ்கவவர்
விஞ்சு பவங்க டொலைந்துலகின் மேலாங் கங்கை யினுமதிகப்
பஞ்சக் கிருச்சப் பலனடைவ ரென்னப் படுமப் பகர்மறையே.

எ-து வஞ்சனையாகிய சூதும், உயிர்களைச் சரீரத்தினின்றும் பிரித்தலாகிய கொலையும், பிறர் பொருளை வஞ்சித்துக் கவர்தலாகிய களவும், பொய்ம்மையும் கூறி உடலை வளர்க்காநின்ற [2]பாவியர்களின் . . பாவமும், பசுவின் முலையை அறுத்தலும், அந்தணரை வதைத்தலும், குருத்துரோகம் செய்தலும், தாயைப் புணர்தலும், தந்தையைக் கோறலும் முதலாகிய பாவங்களும் அந்த வராக நதியிலே தீர்த்தமாடினால் அப்பொழுதே பஞ்சு மலையிலிட்ட தீப்பொறியைப்போலத் தகனப்பட்டுப் புனிதபாவனமடைந்து உலகிலுள்ள புண்ணிய மகாநதிகளுக்கெல்லாம் மேலதாய் உயர்ந்த கங்கா [3]தீரத்தில் மூழ்கிய பலத்தினு மதிகமாகிய பஞ்சக் கிரிச்சங்களைச் செய்ததான பலன்களை அடைவார்களென்று கூறும் வேதாகம தர்ம சாத்திர புராணங்கள் முதலானவை யென்றவாறு. (22)

அஞ்சுமத்தி - அஞுசும் + அத்தி - அஞ்சத்தக்க பாவம் பஞ்சக்கிருச்சம் - பஞ்சகிருத்தியம் - உலகதொழில் ஐந்து - அவை - சிருட்டி (படைத்தல்), திதி (காத்தல்), அனுக்கிரகம் (அருளல்), திரோபவம் (மயக்குதல), சஙகாரம (அழிததல்) என்பன

பா.வே - 1 அந்த நதியில் 2 அபராத வாழ்வாகிய பொய்மையும், பிறர்தாரத்தை மோகித்த துன்பத்தை யின்பமாயக் கொண்டு, மதுவுணடு கருததழிதலாகிய காமமுமாகிய பஞசமா பாதகமுஞ் செய்கின்ற பாவியர்களுமததி செய்தலாகியது அதிபஞ்சமா பாதகமாகிய பசுவின் . 3 தீர்த்தத்தின் மூழ்கி.

## Varāka natiyiṉ payaṉ

*vañcañ cūtu kolaikaḷavu varumpoy kāma matuvuṇpā*
*rañcu matti ceypavarum aṭaintan natiyiṉ mūḻkavavar*
*viñcu pavaṅka ṭolaintulakiṉ mēlāṅ kaṅkai yiṉumatikap*
*pañcak kiruccap palaṉaṭaiva reṉṉap paṭumap pakarmaṟaiyē.*

## The Gifts of Varāka River

Those who have committed sins like
Deception, gambling, murder, stealing,
Lying, lustful acts and drinking
And perform acts that cause terror,
If they draw to the river and bathe there
They would be cleansed of all sins
And gain the results of the [3]five great acts
And gifts greater than gained by bathing
In the Kaṅka. So the scriptures assert.

3. Creation, guardianship, giving boons, illusion and destruction.

(முன் வினை தீரும் எனல்)

194. பூரு வத்திற் புரந்தரன் சென்றுயர்
பேருந் தீர்த்தமும் புண்ணிய சன்னிதிச்
சீருந் தேவர்ச் சிறந்திடச் செய்கையாற்
றீரு முன்வினைச் செப்பிட வேண்டுமோ.

எ-து வாராய் தேவராசனே! பூருவ காலத்திலே உம்மைப்போலத் தேவ பட்டாபிஷேகராய் இருந்த இந்திரர்கள், அசுரராலே அவிர்ப்பாகங்களை இழந்து, பொன்னுலகை விட்டு நீங்கி அதிசிலாக்கியமாகிய கோலாசலத்தினைச் சேர்ந்து அங்கு யோகநித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்க நாயகரைச் சரணாகதி அடைந்து அவரது கிருபா விசேடத்தாற் தமது துன்பம் நீங்கப் பெற்றார்கள். ஆகையால் நீயும் உன் துன்பம் நீங்குதற்கு யான் கூறவேண்டுவதுண்டோ வென்றார் நாரதமுனிவ ரென்றவாறு (23)

பூருவம் - ஆதிகாலம். புரந்தரன் - இந்திரன்.

உரை - அவிர்ப்பாகம் - அவிப்பாகம் - தேவருணவு. பொன்னுலகு - தேவலோகம்

## Muṉ viṉai tīrum eṉal

*pūru vattiṟ purantaraṉ ceṉṟuyar*
*pērun tīrttamum puṇṇiya caṉṉitic*
*cīrun tēvarc ciṟantiṭac ceykaiyāṟ*
*ṟīru muṉviṉaic ceppiṭa vēṇṭumō.*

## Cleansing of Past Sins

The Intiraṉ of ancient times gained
Great fame by coming to this holy stream,
The divine residence where Nārāyaṇaṉ
Is worshipped. Where is then a doubt
About the destruction of one's past sins?

(இந்திரனை அந் நதியில் மூழ்கச் சொல்லுதல்)

195. முன்னம் போயந் நதியினின் மூழ்கிப்பின்
சன்ன திக்குமுன் சம்பிரத் தைத்தொழு
தன்னை யாவே வரங்கன் மனைவிசேர்
பொன்னைப் போற்றிப் புனிதனைப் போற்றுவாய்.

எ-து. ஆதலால் நீ தேவர்கூட்டங்களுடனே எழுந்தருளி இவ்வுலகத்தின் கண் முதன்மையாய் விளங்குகின்ற வராக தீர்த்தத்திலே வேதாகமப்படி தீர்த்தமாடி, அந்தக் கோலாசலத்தினை வலமாக வந்து, திருமால் வதிகின்ற சன்னிதியில் அதிசிரேட்டமாய் நித்தியமாக விளங்குகின்ற சம்பீர விருட்சத்தினைச் சேவித்து, அந்த அகில லோக நாயகியாகிய மகா லட்சுமி தேவியைப் பணிந்து அவளிடக் கடைக்கண்ணருள் நோக்கத்தால் அந்த லட்சுமிபதியாகிய ஸ்ரீ அரங்க நாயகரைச் சரணமடைந்து துதி செய்யக்கடவா யென்றருளிச் செய்தார் நாரதமுனிவ ரென்றவாறு. (24)

சம்பிரம் - சம்பீரம் - எலுமிச்சை.

**உரை** - நித்தியம் - நிலையானது, அழியாமை.

## Intiraṉai annatiyil mūḻkac collutal

*muṉṉam pōyaṉ natiyiṉiṉ mūḻkippiṉ*
*caṉṉa tikkumuṉ campirat taittoḻu*
*taṉṉai yāvē varaṅkaṉ maṉaivicēr*
*poṉṉaip pōṟṟip puṉitaṉaip pōṟṟuvāy.*

## Intiraṉ asked to Bathe

First you go to the river
And immerse yourself; then go to
Worship the lemon tree in the front
Of the temple as the Divine Mother,
The consort of Araṅkaṉ,
And worship the Lord thereafter.

(மேலும் இந்திரன் வினவுதல்)

196. இன்னனவாய்ப் பலமொழிக ளியம்பியநா
ரதனிருதா ளிறைஞ்சி யேத்திப்
பின்னுமந்த விந்திரனும் பிரமனையு
முந்தியினிற் பெற்ற தாதை
தன்னுடைய லீலையெலாந் தந்துரைத்தீர்
[1]கேட்டேற்குந் தனந்தத் துள்ள
முன்னநதி மலைவரவு மெம்பெருமான்
வரவுமினி மொழிக வென்றான்.

எ-து. இந்தப் பிரகாரம் மகமேருவினுடைய சாரலிலே இந்திர மகாராசனுக்கு நாரத மகா முனிவரருளிச் செய்தா ரென்று.சூத புராணிகரானவர் நைமிசாரணீய முனிவர்க்குரைக்க, ஆனந்தப்பரவசராகிய அந்தச் சூத முனிவரை வணங்கி [2]விண்ணப்பஞ் செய்து, வாரீர் மகானுபாவரே! சதுர் முகனுக்குப் பிதாவாகிய நாராயண மூர்த்தியினுடைய லீலா விபூதிகளை விசிதமாகக் கேட்டுக் கிருதார ரானோமாகிலும் அந்த அதிசிரேட்டமாகிய வராக நதியினது வரலாற்று முறைமையினையுங் கோலாசலத்தினுடைய உற்பத்தியையும் அதிலே அனந்த விமான சேகரரா் யோக நித்திரை செய்கின்ற அரங்க நாயகர் திருவவதாரம் செய்தருளிய அகண்ட பெரும் புகழினையும் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்றான் இந்திர மகாராச னென்றவாறு. (25)

தாதை - தந்தை.

**உரை** - கிருதாரர் - கிருதார்த்தர் - பேறுபெற்றவர்.

பா.வே. - 1. கேட்டவெற்குந் தணிந்த. 2. உபாசித்து தோத்திரஞ் செய்து சதுர்முகனுக்கு . . .

**இந்திரன் வனம்புகு அத்தியாயம் முற்றிற்று.**

## Mēlum intiraṉ viṉavutal

*iṉṉaṉavāyp palamoḻika ḷiyampiyanā*
*rataṉirutā ḷiraiñci yēttip*
*piṉṉumanta vintiraṉum piramaṉaiyu*
*muntiyiṉiṟ peṟṟa tātai*
*taṉṉuṭaiya līlaiyelāṉ tanturaittīr*
*kēṭṭēṟkun taṉantat tuḷḷa*
*muṉṉaṉati malaivaravu memperumāṉ*
*varavumiṉi moḻika veṉṟāṉ.*

## Intiraṉ's Question

Saluting the twin feet of Nāratar
Who spoke thus in detail, Intiraṉ said;
'You have spoken of the divine doings
Of Piramaṉ's father. I have heard.
Now do relate the Varāka river's history
And how it was that my Lord
Came to reside in this Kōlācala Hill.

# 11. ஏழாவது

## [1]சோமுகன் உற்பத்தி அத்தியாயம்

பிரமதேவனின் உள்ளத்தில் மரீசிமுனிவர் தோன்றினார். அம மரீசியின் புதல்வன் காசிபமுனிவன். காசிபனின் மக்கள் இருவர். ஒருவன் குலீசன். மற்றவன் சம்பரன். இருவரும் இந்திரன் முதலாகிய தேவர்களை வதைத்தனர். இந்திரன் வெகுண்டு சம்பராசூரனையும் அவனுடைய நால்வகைப் படைகளையும் தனது வச்சிராயுதத்தினாலே வீழ்த்தினான். மரண மூர்ச்சையடைந்த சம்பராசுரன், தன் தபோபலத்தினாலே, நாராயணமூர்த்தியை நினைத்துத் தியானித்தான். திருமால் அவன்முன் தோன்றி இலக்குமிதீர்த்தக் கரையில் வந்து தவம் செய்வாயாக என்று கூறி மறைந்தருளினார். அதன்படியே சம்பராசுரன் அன்னவடிவம் தாங்கியவனாய்க் கோலாசல கிரியை வலம் வந்து, இலக்குமியார் தீர்த்தக்கரையில் தவம்புரியத் தொடங்கினான்.

இந்திரனால் மடிந்து அன்னவடிவமான தன் தம்பிக்காக இரங்கிய குலீசன் இந்திரனைப் பழிவாங்க வேண்டும் என்று கருதினான். தன் படைத்தலைவர்களை அழைத்து அவர்களுககுக் கட்டளையிடுகிறான். 'நான் சத்தியலோகம் சென்று பிரமனைநோக்கி அரியதவம் செய்வேன். அவனது அருளால் பூமியில் அரசனாய்ப் பிறந்து அந்தணர் செயகின்ற வேள்விகளைத் தடுத்து அவிர்ப்பாகங்களைக் கொடாமல் செய்வேன். அப்போது நீங்கள் தேவர்களை அழித்து வெற்றி பெறுவீர்களாக' என்று கட்டளையிட்டான். படைவீரர்கள் மகிழ்ந்து ஆரவாரம் செய்தார்கள்.

குலீசன் பிரமபுரியை அடைந்து, மானதநதிக்கரையில் ஒரு பன்னக சாலையை அமைத்தான் அதனிடையில் ஒரு அக்கினிக்குண்டத்தை உண்டாக்கினான். சன்னியாசி வடிவங்கொண்ட குலீசன், அக்குண்டத்தின் இடையிலே ஒளிவிட்டுநின்ற யூபஸ்தம்பத்தில் ஒருகால பெருவிரலை ஊன்றி நின்று நெடுந்தவம் புரிந்தான.

தவத்திற்கு இரங்கிய பிரமன் குலீசன் முன் தோன்றினான். குலீசன் விரும்பியபடியே மகததேச மன்னன் மகனாய்த் தோன்றி எண்ணிய எண்ணத்தை யெல்லாம் ஒருங்கே நிறைவேற்றிக் கொள்ள, வேண்டியவரங்களைக் கொடுத்து மறைந்தான். அவ்வரத்தின்படி குலீசன் மகததேச மன்னன் நீலன் என்பானுக்கு மகனாய்த்தோன்றி சோமுகனென்னும் பெயரைப் பெற்றான்.

வளர்ந்து அந்நாட்டு மனனவனாகவும் ஆன சோமுகன், அந்தணர், முனிவர் முதலானோர் செய்யும் செபதபங்கள், வேள்விகள் முதலானவற்றையெல்லாம் தடுத்து அவர்களையும் வதைத்து அழித்து வந்தான். அதனால் தேவர்கள் அவிர்ப்பாகங்களைப் பெறாமல வலியிழந்து வந்தார்கள். அந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்ட அசுரர்கள் இந்திரன முதலாகிய தேவர்களை எதிர்த்துத் துன்புறுத்தத் தொடங்கினார்கள். பிரமனை

நோக்கிச் செய்த தவவலிமையாலே இந்திரன் முதலாகிய தேவர்களும், ஐம்பத்தாறு தேசத்தரசர்களும் கலங்கி நடுங்கும்படியாக அரசு செலுத்திவந்தான் சோமுகன். அவனது ஆட்சியில் அசுரர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். அந்தணர், முனிவர்கள் போன்றவர்கள் பரிதாப நிலையை அடைந்து வருந்தினார்கள்.

அசுரர்களால் துன்புறுத்தப்பட்ட தேவர்கள் இந்திரனிடம் முறையிட்டார்கள். இந்திரன் தன் சுகபோகங்களைத் துறந்து தேவர்களுடன் கூடிப் பிரமனிடம் வந்து தங்கள் குறைகளைக் கூறி சோமுகன் என்பவனுடைய வரத்தை மாற்றுமாறு வேண்டிநின்றான். குறைகளைக் கேட்டு இரக்கம் கொண்ட பிரமன் அன்னவாகனத்திலேறித் தேவர்கள் சூழச் சென்று திருப்பாற்கடலை அடைந்தான். அனைவருமாகத் திருமாலைக் கண்டு வணங்கினார்கள்.

மிகப்பரந்தது திருப்பாற்கடல். அதன் இடையிலே விளங்கியது மணிமண்டபம். அது மிகப்பரந்து உயர்ந்த மதிலையுடையது. அதன் நடுவிலே ஆயிரம் படங்களோடு கூடிய ஆதிசேடனாகிய படுக்கை விளங்கியது. உள்மண்டபம் ஒன்று நீலமணியால் அமைந்திருந்தது. அங்கே மாணிக்கம், குருவிந்தம் ஆகிய மணிகளால் ஆன உட்கோயிலில் மரகத மலைபோல அனந்த சயனத்தில் வீற்றிருந்தான் நாராயணமூர்த்தி. வலதுகையில் சக்கராயுதமும், இடதுகையில் பாஞ்சசன்னியமும் ஏந்தியவனாய்த், திருமுடியும் நவரத்தினமாலைகளும் ஒளிவீச, கவுத்துவாபரணமும் இலக்குமியும் மார்பகத்தில் நிலவ, முப்புரிநூலும் கனக உடையும், பீதாம்பரமும் விளங்க வீற்றிருந்தான். நித்திய சூரியர்கள் துதிசெய்கிறார்கள். சீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகியோர் திருவடிகளை வருடி நிற்கிறார்கள். அத்தகு அரங்கநாதனின் திருவடிகளிலே வணங்கிய பிரமதேவன் தனது வரபலத்தினாலே தேவர்களுக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை எடுத்துக்கூறித் துதித்தான். தேவர்களும் தோத்தரித்தார்கள்.

அந்தச் சோமுகனை அழிக்கிறோம்; நீங்கள் உங்கள் உலகத்துக்குச் செல்லுங்கள் என்று அரங்கநாயகன் அசரீரியாய்க் கூறியருளினான். அனைத்துத் தேவர்களும் மகிழ்ச்சியடைந்தவர்களாய்ப் புறப்பட்டுச் சென்றார்கள்.

பா.வே. - 1. எல்லா இடங்களிலும் 'சோமகன்' என்றே உள்ளது.

(குலீசன், சம்பரன் வரலாறு)

197. முன்னமொரு [1]ராதந்திர கற்பமதில் காசிபனன்
முதன்மையிரு புத்தி ரர்களாய்த்
தன்னிகரி லாதவசு ரேசர்க ளுதித்துமகிழ்
தானவர் நடுங்க திசையோர்
பொன்னகர் கலங்கபெரு சேனையொடு சென்றுசமர்
நின்றுபுரி போதில் புகழ்சேர்
மன்னவன் வெகுண்டுமகிழ் சம்பரன் முதற்படை
வகுந்தவயி ரப்ப டையினால்.

எ-து. [2]முற்காலத்தில் ராதந்திர கற்பத்திலே [3]பிரம்மபுத்திரராகிய மரீசிமுனிவர் புத்திரரான காசிப முனிவரது நன்மையனவாகிய முதன்மையைப் பெறுகின்ற புத்திரர்களாய்ச் [4]செனித்து, தாஷ்டிகராய்க் குலீச னென்றும், சம்பரனென்றும் நாமதேயத்தையுடையவர்களாய், யாவரும் எதிரில்லாமல் இந்திரன் முதலாகிய தேவர்கள் கண்டு கலங்கத் தக்கதாய் அனேக இரத, கெச, துரக, பதாதிகளுடனே, எதிர்த்துப் பொன்னுலகங் கலங்கத் தக்கதாய் யுத்தம் செய்கின்ற காலங்களில் ஒருநாள், இந்திரனானவன் வெகுண்டு கோபக்குரோதத்துடனே கூடினவனாய்ச் சம்பராசூரன் முதலாகிய நான்கு வகைப்பட்ட சேனைகளை வச்சிராயுதத்தினாலே மடியத்தக்கதாக வருத்துவித்து, அரக்கர் கூட்டத்தையெல்லாம் தகனப்படுத்திப் பலாசனமாய்க் [5]கண்டித்தா னென்றவாறு. (1)

ராதந்திர கற்பம் - ராதந்திரம், அரதந்திரம், ராசேந்திரகற்பம எனப்பலவகையாக அமையும் இத்தொடர் பொருந்தவில்லை

**உரை** - தகனம் - எரித்தல், பலாசனம் - அரக்கத்தனம்.

பா.வே - 1 ராசேந்தர 2 முறகாலத்தி னொப்பற்ற வரசர்களைப் புகழகின்ற ராசேந்திர கற்பத்தின், 3 பிரம்புகதிராகிய மரீய முனிவர். 4 செனித்தவர்கணாமதேய மியாதென்றால் தங்களுக் கொப்பாகிய புயவலியினையுடைய வரக்கராகிய குலிசன், சம்பர னென்கிறவர்க ளிப்படியாகிய இருவர்களு முதித்த ஞான்றே யிதற்கு முன்பு பிரதாபசாலிகளாயிரா நின்ற தானவர்களெல்லாந் தங்கடங்க டலைமை நீங்கியிவர்களைக் குறித்துத் தேவர்பணிவிடைகளை நடுங்கிச செய்யவுந் திசையோராகிய இந்திரன் முதலாகிய திக்குப பாலகர்களும், பொன்னுலகிலுள்ள மற்றத் தேவர்களுங் கலங்கத்தக்கதாயும் ரத, கெச, துரக, பதாதிகளாகிய சேனாசமுத்திரமானது தங்களை வளைத்து வரத் தேவலோகத்தை வளைத்துக் கொண்டுத்த சன்னாகம் புரியுமளவிலே மன்னவனாகிய விந்திய மகாராசனானவன் கோபககுரோதத்துடனே 5 வெளியாக்கினா னென்றவாறு.

## Kulīcan̲, Camparan̲ varalāṟu

*mun̲n̲amoru rātantira kaṟpamatil kācipan̲an̲*
*mutan̲maiyiru putti rarkaḷāyt*
*tan̲n̲ikari lātavacu rēcarka ḷutittumakiḻ*
*tān̲avar naṭuṅka ticaiyōr*
*pon̲n̲akar kalaṅkaperu cēn̲aiyoṭu cen̲ṟucamar*
*nin̲ṟupuri pōtil pukaḻcēr*
*man̲n̲avan̲ vekuṇṭumakiḻ camparan̲ mutaṟpaṭai*
*vakuntavayi rappa ṭaiyin̲āl,*

## XI. The Advent of Cōmukan̲ Kulican̲, Camparan̲

During the Kalpa of Gem in ancient days
Kācipan̲ became the father
Of two matchless sons.
As the Acurās became happy,
The directions shuddered.
The heavens were disturbed
When they went with a large army
To give battle; incensed Intiran̲
Destroyed with his thunderbolt
The army of Camparan̲ and the rest.

**(இலட்சுமி தீர்த்தக் கரையில் சம்பரன் தவம்)**

198. **வாசவன் மடித்திட களைத்தபுகழ் வீரன்மதி**
**விண்டுமறை யோது முதலா**
**மீசனை நினைத்திட வெழுந்தவ னுறைந்தன**
**[1]ரிழுந்தசடம் விட்ட வெழில்சேர்**
**பேசரிய வன்னவுரு வங்கொடு பெயர்ந்தெமது**
**[2]பேற்றினை நினைந்து தவமாய்**
**வாசமது செய்யென வுரைத்திடநல் கோலவரை**
**வந்துமகிழ் கின்ற னனரோ.**

எ-து. இந்தப் பிரகாரம் இந்திர மகாராசனானவன் வச்சிராயுதத்தினாலே சம்பரன் முதலாகிய நான்கு வகை தளத்தினையும் வதை புரிய அதனாலே களைத்து மரண மூர்ச்சை அடைந்து வீழ்கின்ற புகழ்ச்சியினையுடைய சம்பராசுரன். [3]மனமானது கலங்கி முன் சென்மத்தில் செய்த தபோபலத்தினாலே மறை முதல்வனாகிய ஈசுவரனான நாராயண மூர்த்தியானவரை நினைக்க. அப்பொழுது கருடவாகனருடராய்ப் பஞ்சாயுதமேந்திய சதுர்ப்புயங்களுடன். மவுலி மகர குண்டல ஸ்ரீ மகாலட்சுமி தேவி. கவுத்துவாபரணம். பீதாம்பரம் முதலானவை பிரகாசிக்க அவனது [4]சரமதிசையிலே வந்து. இலக்குமியார் தீர்த்தக் கரையில் தவம் செய்து வாசம் செய்யக்கடவாயென்று அனுக்கிரகம் செய்து தமது பரம பதத்தினெழுந்தருளினார். அதன்பின்பு அந்த சம்பரனானவன் பொன்னஞ்சிறகினையும்.

செங்காலினையும், தோலடியினையும், பவளத்துண்டம் போன்ற மூக்கலகினையும் உடைய வெண்மையான பரம பவுத்திரமாகிய அன்னவுருவத்தைக் கொண்டந்த இந்திரபுரியை விட்டு நீங்கிப் பரவாசு தேவன் திருவாய் மலர்ந்தருளிய வண்ணமாய்க் கோலாசல கிரியை வலம்வந்து, இலக்குமியார் தீர்த்தக் கரையிலே யோகங்களைச் செய்து அட்டாக்ஷரத்தை உபாசித்துத் தவம் புரிந்திருந்தான் அன்னவடிவா யென்றவாறு. (2)

வாசவன் - இந்திரன். மதிவிண்டு - அறிவு கலங்கி; விள்ளுதல் - கலங்குதல்

**உரை** - கருடவாகனரூடர் - செம்பருந்தாகிய வாகனத்தில் ஏறியவர்; கருடவாகனாரூடர். வாகனம் + ஆரூடர்; ஆரூடர் - ஏறியவர் சரமதிசை - மேறகுத்திசை. பஞ்சாயுதம் - திருமாலின் ஐந்து ஆயுதங்கள்; அவை - சக்கரம, சங்கு, தண்டு, தனு, வாள் என்பன மவுலி - மௌலி - முடி மகரகுண்டலம் - ஒருவகைக காதணி. மகரம் - மீன் அட்டாடசரம் - விஷ்ணுமந்திரம். அது ஓம் நமோநாராயணாய என்பது ஓம் - இதி ஏகாட்சரம் , நம - இதிதவே அட்சரே, நாராயணாய - இதிபஞ்ச அட்சராணி - என்பது உபநிஷதம்

**பா.வே.** - 1 னிழிந்தசடநீங்கி 2 பேரினை 3. மனம, புத்தி, யாங்கார சித்தமாகிய வந்தக்கரண சதுஷ்டயங்களும கலங்கி . 4 சரமதசையிலே வந்து தெரிசனங் கொடுத்தருட்கண் பார்த்தருளினாரப்போதே . அந்த மாயா பாசக்கருவியாகிய வசுர யோனியாலாகிய சடத்தை விட்டவரனுக்கிரகத்தினாலே வதிதீவிர பக்குவமதினுட்ப மமைந்த வன்னத்தினது ரூபத்தினைப் பெற்றிந்த விடமவிட்டுப் பறந்தெமது சஞ்சீவிபுரியிலே போய்ச் சேர்ந்து பரமபத வாஞ்சையை மனதிலெண்ணித்தவம்புரியக கடவாயென்று திருவாய் மலர்ந்தருளித் தமது பரமபத . . . .

## Ilaṭcumi tīrttak karaiyil Camparaṉ tavam

*vācavaṉ maṭittiṭa kaḻaittapukaḻ vīraṉmati*
*viṇṭumaṟai yōtu mutalā*
*mīcaṉai niṉaittiṭa veḻuntava ṉuṟaintaṉa*
*riḻantacaṭam viṭṭa veḻilcēr*
*pēcariya vaṉṉavuru vaṅkoṭu peyarntematu*
*pēṟṟiṉai niṉaintu tavamāy*
*vācamatu ceyyeṉa vuraittiṭanal kōlavarai*
*vantumakiḻ kiṉṟa ṉaṉarō.*

## Camparaṉ's Austerities at Lakṣmi Spring

Struck by Intiraṉ, the distressed hero
Was falling in a swoon when he thought
Of the Primal Lord who appeared.
The Lord commanded him to move

To the beautiful Lakṣmi spring
In the wondrous form of a swan
After giving up the present body.
The Acura was to perform austerities
Meditating on the Lord's grace.
Thus Camparaṉ came to Kōlācalam hill
To live there in happiness.

**(குலீசன் தவம்)**

199. **முந்திய குலீசனும் வெகுண்டுநல் சகோதரனைக்**
**கொன்றபழி முந்தி யவரைத்**
**தந்திர மெடுத்தவர் கடாரணி தராதிபர்**
**[1]தழைத்துப்பழ வேள்வி யதனை**
**யெந்தையுல கெய்திபுரி கின்றவர பாலன**
**மதாலரச னாயு லகினில்**
**வந்துமறை யோரைவதை கின்றதிறல் கண்டமரர்**
**தங்களை மடித்து வருவீர்.**

எ-து. இந்திரனால் மடிந்து அன்ன ரூபத்தை அடைந்த தனது சகோதரனாகிய சம்பரா சுரனுக்கிரங்கி [2]விசனப்பட்ட குலீசனானவன், அந்தப்பழிக்குப் பிரதி பழிவாங்கும் பொருட்டாய்த் தனது அசுர சேனாதிபதிகளை நோக்கிக் கூறுகின்றான். இனி யான் சத்திய லோகத்துக்குப் போய், பிரம தேவரை நோக்கி அரிதாகிய தவங்களைச் செய்து அவருடைய அனுக்கிரகத்தினாலே பூமண்டலங்களிலே அரசனாய் உற்பவித்து வேதியர் செய்கின்ற வேள்விகளைத் தடுத்து அவிர்ப்பாகங்கள் கொடாமல் செய்கின்ற சமயங்களிலே நீங்கள் தேவர்களை மடித்துச் செயங்கொள்ளக் கடவீர்களென்று ஆக்கியாபனஞ் செய்ய அவர்களும் [3]மகிழ்ந்தார்க ளென்றவாறு. (3)

தந்திரம் - படை, உபாயம் எனவுமாம். அவர்கடாரணிதராதிபர் - அவர்கள்+தாரணி, தராதிபர். தாரணி - தரணி, பூமி. தராதிபர் - மன்னர்கள்.

**பா.வே.** - 1. தழைத்தபுகழ். 2. துக்கித்த. 3. மகிழ்சிறந்தார்க ளென்றவாறு.

## Kulīcaṉ tavam

*muntiya kulīcaṉum vekuṇṭunal cakōtaraṉaik*
*koṉṟapaḻi munti yavarait*
*tantira meṭuttavar kaṭāraṇi tarātipar*
*taḻaittuppaḻa vēḷvi yataṉai*

*yentaiyula keytipuri kiṉṟavara pālaṉa*
*matālaraca ṉāyu lakiṉil*
*vantumaṟai yōraivatai kiṉṟatiṟal kaṉṭamarar*
*taṅkaḷai maṭittu varuvīr.*

## Kulīcaṉ's Austerities

His brother was incensed
At the killing of his dear sibling.
He commanded his attendants:
'I shall forumlate a plan.
I shall go to the world of Piramaṉ,
Perform sacrifices and gain boons,
To be born as a king on the earth.
Then I shall trouble the priests
Who perform sacrifices for gods.
Watching me do all this
You should destroy the immortals.

(பிரமபுரியில் குலீசன்)

200. கண்டக னுரைத்திட கதித்தமுடி சூரர்கள்
களித்தனர் நடித்த னர்களாய்க்
கொண்டலெனச் சீறினர் குலீசனு மனோவதி
யடைந்துபுகழ் கொண்ட நதியிற்
தண்டமது கொண்டுதவ சாலையினி னின்றுதழல்
பொங்கதல மெங்கு மரிதாய்
நின்றமுத லாமயனை யன்றுதுதி கொண்டுநெடு
நாள்மிகு தவம்பு ரியவே.

எ-து இந்தப் பிரகாரங் கண்டகனாகிய குலீசனானவன் ஆக்கியாபனஞ் செய்த மாத்திரத்திலே அசுரசேனாதிபதிகள களிகூர்ந்து நடிததவர்களாகி, மேகசாலத்தைப் போல முழங்கிச் சீறி ஆர்பரித்தார்கள் அப்போது குலீசனானவன் மனோவதியாகிய பிரமபுரியை யடைநது, புகழ்ச்சியினைப் புனித பவுத்திரமாய் அடைகின்ற மானத நதிக்கரையில் ஒருதவச்சாலையாகிய பன்னகசாலை செய்தமைத்து, அதன் நடுப்பிரதேசத்தில் ஒரு அக்கினிக்

குண்டம் சமைத்து அந்தக் குண்டத்திலே தண்டு கமண்டலங்கள் ஏந்திய தவசன்னியாசி உருவங்கொண்டு அவ்வக்கினி செய்கையானது ஒளிவிடாநின்ற யூபத்தம்பத்திலொரு கால் பெருவிரலை ஊன்றி, அரிதாகிய தவ நிலையிலே நின்று தவத்தினைப் புரிந்து முதல்வனாகிய பிதா மகனை [1]மனதினுபாசித்துக் கொண்டு நெடுநாளாய்த் தவம் புரிந்தா னென்றவாறு (4)

கண்டகன் - அன்பில்லாதவன்; அசுரன். கொண்டல் - மேகம் மனோவதி - பிரமன நகரம்; மனோபதி. தண்டம் - தணடாகிய ஆயுதம்

**உரை** - ஆக்கியாபனம் - ஆணை, கட்டளை மேகசாலம் - மேகக்கூட்டம் தணடுகமண்டலம் - தவசியர்தாங்கும் கைத்தண்டும் கெண்டிகையும்

பா.வே. - 1 யன்றுமுதலாகி யென்றைக்கு மனதினுபாசித்துக்.

## Piramapuriyil kulīcaṉ

*kaṇṭaka ṉuraittiṭa katittamuṭi cūrarkaḷ*
*kaḷittaṉar naṭitta ṉarkaḷāyk*
*koṇṭaleṉac ciṟiṉar kulīcaṉu maṉōvati*
*yaṭaintupukaḷ koṇṭa natiyiṟ*
*taṇṭamatu koṇṭutava cālaiyiṉi niṉṟutaḷal*
*poṅkatala meṅku maritāy*
*niṉṟamuta lāmayaṉai yaṉṟututi koṇṭuneṭu*
*nāḷmiku tavampu riyavē.*

## Kulīcaṉ in Piramaṉ's World

As the hero spoke thus, the Acura chieftains
Became very happy and jumped up;
They hissed like clouds. Kulīcaṉ
Reached Maṉōvati, built himself
A retreat on the banks of the river,
Lit a fire and stood in it.
Holding on to a stick he performed
An austerity rare in all the worlds
Meditating on the Primal Piramaṉ
For a long, long time.

(குலீசன் மகத தேசத்தில் சோமுகனாய்ப் பிறத்தல்)

201. ஆதிமறை யோனுமிகு வன்புட னெழுந்துனது
அருந்தவ நிறைந்த ததனால்
நீதிபுகழ் பூமியி னுதித்தரச னாயுனது
நிச்சய நடத்தி மகிழ்வா
யோதியுல கெய்தவசு ரேசனு மகிழ்ந்துயர
மாமகத தேச வரசன்
சோதிபுகழ் நீலநிட புத்திர னெனப்பெருகு
[1]சோமுக னெனத்தி கழவே.

எ-து. ஆதி சிருட்டி கர்த்தாவாகிய நான்முகனானவர் அன்னவாகனாரூடராய், நாமகள் மனோரஞ்சிதராய், கமண்டல வட்ச மாலிகையையுடையவராய் அவன் தவத்துக்கிரங்கி எழுந்தருளி, அவனைப் பார்த்துக் குலீசனே! நீ செய்த தவமானது நிறைவெய்தி முடிந்தபடியினாலே, உனக்கென்ன வரம் வேண்டுமென்று திருவாய் மலர்ந்தருளக் கேட்ட குலீசனானவன் [2]விண்ணப்பம் செய்கின்றான். தேவரீர் வர பாலனத்தினாலே மகததேசாதிபதி புத்திரனாய் உதித்து எண்ணிய எண்ணமெல்லாம் ஒருங்கு எய்தச் செய்தருள வேண்டுமென்று கேட்டான். அப்படியே யாகக் கடவதென்றருள் கூர்ந்து வரபாலனங் கொடுத்துப் பிரம்மாவானவர் மனோவதியிற் போய்ச் சேர்ந்தார். அப்பொழுது அசுர சூடாமணியானவனும் மகிழ்சிறந்த அந்த மானத நதியை விட்டுப் பெயர்ந்து, உயர்ந்த வளங்களையுடைய மகத தேசாதிபதியான மிகுந்த புகழினையடைந்த நீலனென்கின்ற அரசனுக்குப் புத்திரனாய்ச் செனித்தான். அப்போது அரசன் மகிழ்ந்து சோடச மகா தானங்களும் செய்து, [1]சோமுகனென்று நாமகரணம் பண்ணிவைத்தா னென்றவாறு. (5)

மறையோன் - பிரமன் எழுந்து - தோன்றி. நீலநிடபுத்திரன் - நீலனிடபுத்திரன் - நீலன் என்பவனின் மகன்

உரை - மனோரஞ்சிதர் - உள்ளன்புக்குரியவர். அட்சமாலிகை - உருத்திராட்சமணிமாலை. வரபாலனம் - வரத்தின் பயன்.

பா.வே. - 1. சோமகன். 2. கூறுகின்றான்.

## Kulīcaṉ makata tēcattil Cōmukaṉāyp piṟattal

*ātimaṟai yōṉumiku vaṉpuṭa ṉeḻuntuṉatu*
*aruntava niṟainta tataṉāl*
*nītipukaḻ pūmiyi ṉutittaraca ṉāyuṉatu*
*niccaya naṭatti makiḻvā*

*yōtiyula keytavacu rēcanu makilntuyara*
*māmakata tēca varacan*
*cōtipukal nīlanita puttira nenapperuku*
*cōmuka nenatti kalavē.*

## Kulīcan is born in Makata

The Lord of Vēdas came to this place
With joy when the austerities
Came to a close. 'You will be born
As a king on the earth
Famed for Dharma. You would find
Fulfilment for all your desires.'
Piraman returned to his residence.
The overjoyed Acura was born
As son of the far-famed
Makata king, Nīlan.
He was named Cōmukan.

### (சோமுகனின் தீச்செயல்)

202. வந்தபுகழ் 'சோமுகன் வளர்ந்திரவி போல்திகழ
வானவர் நடுங்க மதிசூழ்
சந்திசெப யோகதவ யாகமவி யேமுதல
தடுத்துட னழித்து லகெலா
மந்திர மிகுந்ததிசை யோதுமறை வேதியரை
மால்வரையி னோத்தி மடியத்
தந்திர மெடுத்தசுர ரிந்திரன் வதிந்தநகர்
சென்றுசமர் கொண்டு தனியார்.

எ-து அப்படி மகததேசாதிபதியாகிய நீல மகாராசனுடைய தவபுத்திரனான சோமுகனானவன் [2]உதித்து, தாஷ்டிகனாய் வளர்ந்து சாகரம் சூழ்ந்த பூமண்டலங்களுக் கெல்லாம் அரசனாய், யாவரும் எதிரில்லாமல் சூரியபகவானைப் போல தேசோமயகாந்தி பிரகாசிக்கத் தக்கதாய், இந்திரன் முதலாகிய தேவர் கண்டு நடுங்கும்படியாய்த் தமது அறிவினால், மதிக்கப்பட்ட சந்தியாவந்தனைகள், செப தபங்கள், யக்கியங்கள், யாகங்கள் முதலாகிய பரம வைதீகங்களெல்லாம் லயத்தையடையும்படியாய் நினைத்து, பிராமணாள், மகாரிஷிகள் முதலாகிய பேர்களைக் கண்ட கண்ட இடஙகளிலே வதை புரிந்து, மேக மண்டலததை யளாவியிருக்கும்படியாகிய பர்வதத்தில் ஏற்றி அவர்கள் மடியத்தக்கதாய் அடிதது அவர்கள் உலகங்களையெல்லாம் அழித்து வருகையால் அதனாலே பரமவைதீகமான பிரமசரியங்களெல்லாம் லயத்தை அடைந்து அதர்ம மிகுதியாய் வளர்ந்து வருகையால், தேவர்களுக்கு அவிர்ப்பாகங்கள் இல்லாமல் துாபலத்தை அடைந்தார்கள். அந்தச் சமயததிலே அசுராதிகள் மிகுந்த அனேக அசுர சேனைகளுடனே, தேவர்களுடன் எதிர்தது யுததம் செய்து, தணியாத கோபததுடனே தேவர்கள கலஙகத் தக்கதாகச் சமா புரிந்தார்கள் அசுராதிக ளென்றவாறு (6)

இரவி - சூரியன் சநதி - சநதியாவந்தனம - காலை, மாலை நேரஙகளில் செய்யும் நியமநிட்டைகள, முககாலககருமம அவி - அவியுணவு, தேவருணவு

**உரை** - தாஷடிகன - தாடடிகன் - பலமுள்ளவன காந்தி - ஒளி தேசோமய காந்தி - பேரொளி லயம - அழிவு

பா.வே. - 1 சோமகன 2 வளாகினற காலையில இரவிலே இருளையெல்லாம் ஒதுக்கிப் பிரகாசிப்பத் தேவாகளெலலாம நடுநடுஙகிப புததிவான்களால மதிக்கப்பட்ட சநதிவந்தனைகள் செபங்கள, யோகஙகள, தவஙகள, யாகஙகளில கொடுககாநினற வவிற்பாக முதலியவற்றையெல்லாம தடுத்தானது யாதினாலேயெனறால திசைகளெலலாம புகழகினற மறைவேதியரை மலையுச்சியினேத்திவித்துத் தாஙகள மடியாத தநதிரயுததியைச் செயது அசுரக கூடடஙகளுடனே கூடினவ்னாயிந்திர நகரிலே சென்று உததஙகளைச செயது தணியாத கோபததுடனே கூடினவர்களா யென்றவர்று

## Cōmukaṉiṉ ticceyal

*vantapukaḷ cōmukaṉ vaḷarntiravı pōltikaḷa*
*vāṉavar naṭuṅka maticūḷ -*
*canticepa yōkatava yākamavi yēmutala*
*taṭuttuṭa naḷittu lakelā*
*mantıra mıkuntaticai yōtumaṟai vētiyarai*
*mālvaraıyı ṉētti maṭiyat*
*tantıra meṭuttacura rintiraṉ vatintanakar*
*ceṉṟucamar koṇṭu taṇiyār.*

## Cōmukan̲'s evil deeds

Born thus, Cōmukan̲ shone brilliant
As the sun, making the heavenly denizens
Shudder. He put to an end meditation,
Yōga, austerities, sacrifices, offerings
And the rest, destroyed all speedily.
He pulled up to the mountain tops
Vedic scholars who recite incantations
That resound in all directions
And then beat them to death.
At the same time the Acura attacked
The heavens and went to war with gods.

(சோமுகன் அரசு)

203. நான்முக னளித்தவர பாலன மிகுந்தரச
னாடியுல கெங்கு மகிழ்சேர்
வானவர் நடுங்கதிசை வீரர்கள் வணங்கமுடி
மன்னவர் கலங்க வருமோர்
தானவ ரொடுங்கதவ மாமுனிவர் வேதியர்
தயங்கவுல கெங்கு மழிய
வீனமுறு வோர்கள்களி யெய்திட மகிழ்ந்தவ
ணிருந்தரசு செய்த னனரோ.

எ-து நான்முகனாகிய பிரம்மாவானவர் கொடுத்த வரபாலனத்தினாலே மிகுந்த அரசர் கூட்டங்களெல்லாம் சேவிக்க, மகிழ்ச்சியை அடைந்தவனாகி அவனது புயவலியினாலே தேவாதிகளெல்லாம் நடுங்கவும், [1]அட்டதிக்குப் பாலகராகிய வீராதி [2]விராள, இந்திரன், அக்கினி முதலான பேர்களெல்லாம் [3]கலங்கவும், மகுடத்தினையுடைய மன்னவர்களாகிய ஐம்பத்தாறு தேசத்தரசாகளும் கலங்கவும் வந்து தனக்கு முன்னே பிரதாப சாலிகளாயிருந்த அசுரர் கூட்டங்களெல்லாம கலங்கவும், தவத்தையுடைய திரிதண்ட சன்யாசியர்கள் ஏகதண்ட சன்யாசியர்கள், வேத பிராமணாள் முதலாகிய பேர்களெல்லாம் தயங்கிப் பரிதவிக்கவும, உலகெங்கணும் அழியவும், [4]பாவியர்களான அசுரர்களெல்லாம் தலையெடுத்துக களிகூர்நதிருக்கவும், அரசு செய்து செங்கோல் நடாத்திச் சக்கரமுருட்டிய தலைவனாயிருந்தான் சோமுகராச னென்றவாறு. (7)

திசைவீரர் - அட்டதிக்குப் பாலகர். அவர் முறையே கிழக்கு - இந்திரன்; தென்கிழக்கு - அக்கினி; தெற்கு - இயமன்; தென்மேற்கு - நிருதி; மேற்கு - வருணன்; வடமேற்கு - வாயு; வடக்கு - குபேரன்; வடகிழக்கு - ஈசானன் என்போர். தானவர் - அசுரர். ஈனமுறுவோர் - கேடுசெய்து பாவியர்களான அசுரர்.

**உரை** - ஏகதண்டசந்நியாசி - ஒற்றைத்தண்டு தாங்கியவன்; சந்நியாசி - முற்றுந்துறந்தவன். திரிதண்டசந்நியாசி - முக்கோல் தரித்தவன். சக்கரம் உருட்டிய - ஆணைசெலுத்திய, ஆட்சி செய்த.

பா.வே. - 1. மற்ற. 2. வீரரான. 3. நடுங்கவும். 4. அழியவு மீனவான்களாகிய பாவியர்களெல்லாம்.

## Cōmukaṉ aracu

*nāṉmuka ṉaḷittavara pālaṉa mikuntaraca*
*nāṭiyula keṅku makiḻcēr*
*vāṉavar naṭuṅkaticai vīrarkaḷ vaṇaṅkamuṭi*
*maṉṉavar kalaṅka varumōr*
*tāṉava roṭuṅkatava māmuṉivar vētiyar*
*tayaṅkavula keṅku maḻiya*
*vīṉamuṟu vōrkaḷkaḷi yeytiṭa makiḻntava*
*ṇiruntaracu ceyta ṉaṉarō.*

## Cōmukaṉ's Rule

Due to the boon gifted by Piramaṉ,
He became happy and had countless Acuras
Saluting him, the heavenly denizens
A-shudder, the guardians of the directions
Worshipping him, emperors in a state of fear,
Inimical danavas trembling before him,
Great sages and scholars locked in worry,
The world getting destroyed everywhere,
And evil Acuras in a state of joy;
Thus he ruled the land.

(தேவர் சோமுகனுக்கு அஞ்சியோடுதல்)

204. யாகமவி யேமுதலி ழந்துபுகழ் தேவர்க
ளிளைத்திட வடித்த அசுரர்

**வேகமது கொண்டுகடல் வெம்பியிட கொண்டசமர்**
**கண்டுவெகு துன்ப முளராய்ப்**
**போகமிகு [1]வானவர்கள் பொன்னுல கிழந்துபுகழ்**
**கொண்டரச னோடு புகல**
**மேகமென வேயமரர் சூழதிரு மால்மகனை**
**மேவிதுதி கொண்டு மொழிவார்.**

எ-து. [2]இந்தச் சோமுகனானவன் யாகாதி கிரதுக்களை அழித்துத் தேவர்களுக்கு அவிர்ப்பாகங்களில்லாமல் தடுத்தபடியினாலே தேவர்கள் இளைத்துத் துர்பலத்தையடைந்தது கண்டு, அசுர சேனைகள் மிகுந்த பராக்கிரமத்துடனே வடவாக்கினி போலப் பொங்கிச் சாகரங் கரைபுரண்டதுபோல நான்கு திசைகளிலும் சூழ்ந்து யுத்தசன்னுத்தராய்ச் சமர் புரியும் போது [3]மிகுந்த போகங்களையுடையவர் கூட்டங்களெல்லாம் தளர்ந்து துன்பத்தை அடைந்து பொன்னுலகத்தை நீங்கி, தேவராசனுடனே முறையிட ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலாகிய சகல சாம்பிராச்சியங்களையும் இழந்தவர்களாய்த் தேவர்கூட்டங்களுடனே மேக சாலங்களைப் போலச் சூழ்ந்துவர, திருமால் மகனாகிய பிரம்மாவைச் சேர்ந்து அவர் திருவடிகளிலே அனந்தமான தண்டன் சமர்ப்பித்து விண்ணப்பம் செய்கின்றார்க ளென்றவாறு. (8)

வெம்புதல் - பொங்கியெழுதல். மால்மகன் - பிரமன்.

**உரை** - யாகாதிகிரதுக்கள் - யாகம் முதலாய யக்ஞங்களில் இடப்படும் காணிக்கைகள்; பலிகள். வடவாக்கினி - ஊழித்தீ, யுகமுடிவுகாலத்துத்தீ. சாகரம் - கடல். யுத்த சன்னுத்தர் - யுத்தசன்னத்தர் - சம் + நத்தர் - சம் - முழுமை; சன்னத்தர் - தயார்நிலையில் இருப்பவர்.

**பா.வே.** - 1. தானவர்கள். 2. இந்தச் சோமுகன் செய்கின்ற கொடூரத்தினாலே . அவிற்பாகங்களில்லாமலிளைத்தார்கள். 3. மிகுந்த போக பூமியிலே யரம்பையர்களுடைய சரசசல்லாபத்தை . . இழந்து பொன்னுலகை நீங்கி.

## Tēvar Cōmukaṉukku añciyōṭutal

*yākamavi yēmutali ḻantupukaḻ tēvarka*
*ḷiḷaittiṭa vaṭitta acurar*
*vēkamatu koṇṭukaṭal vempiyiṭa koṇṭacamar*
*kaṇṭuveku tuṉpa muḷarāyp*
*pōkamiku vāṉavarkaḷ poṉṉula kiḻantupukaḻ*
*koṇṭaraca ṉōṭu pukala*
*mēkameṉa vēyamarar cūḻatiru mālmakaṉai*
*mēvituti koṇṭu moḻivār*

## The Gods Run Away

The gods ran away having lost
Their sacrifices and offerings, as the Acuras
Punished them sorely with powerful strokes
Like a sea in commotion. With great sorrow,
The gods who lived in luxury
Left their heavens for refuge elsewhere.
And with them accompanying like clouds
Went their famous king, Intiraṉ
To the son of Nārāyaṇaṉ,
Saluted him and spoke thus:

(தேவர் பிரமனிடம் முறையீடு)

205. ஓதிய மறைப்படி வுரைத்தபுகழ் வேள்வியவி
யேமுதல் விளங்கு முலகின்
வேதியர் தமக்கருள் விதித்தபடி யேயலது
வேறுமுள தோவ றிகிலோ
மாதிமுனி யோர்கள்திரி காலதவ யோகமத
கற்றிட மடித்த வரசன்
நீதிபுகழ் மேதினியி னீரருள் புரிந்தபடி
நீலனருள் புத்திர னெனவே.

எ-து தாமார்தத காமமோக்ஷங்களைக் கூறுகின்ற வேத விதிப்படி செய்யப்பட்ட புகழ்ச்சியினையுடைய வேளவியில செயகின்ற அவிர் பாக முதலாகிய சற்கருமஙகளெல்லாம் செயயத தக்கதாகப் பிரமமகுலததிற்கு நீ அனுககிரகம பண்ணியதே யல்லது வேறொருவா கூற யாம கண்டிலோம ஆகையால, ஆதியாகிய முனிவர்கூட்டங்கள் செயகின்ற திரிகால சநதிவந்தனைகளும் தவஙகளும் யோகஙகளும் தவறுபட்டொழிந்திட, மடிதலைச்செய்த சோமுகனானவன் நீதியாகிய தர்ம சாததிரம் புகழ்கின்ற இவ்வுலகததில் எமது கர்த்தாவாகிய பிதாமகனே! உம்மைக குறிததுத தவம செய்கினற காரணத்தினாலே கொடுத்த வரததினால் அல்லவோ நீலனிட புததிரனானவன் இந்த வளஙகளையெல்லாம் மாற்றினான். அவன் வரத்தை மாறறினால் அல்லது வேறில்லை யென்று பிரம்மாவினிட பாதத்தாமரையைத் தெணடன சமாபபித்துத் தஙகள் குறைகளை யெல்லாம சொல்லித் தொழுதாாகள் தேவர்கூடடங்களானவர்கள் மனோவதிநகரி னென்றவாறு. (9)

உரை - தர்மாாதத காமமோடசஙகள - தாமம, அாததம, காமம், மோட்சம என்பன

## Tēvar Piramaṉiṭam muṟaiyīṭu

*ōtiya maṟaippaṭi vuraittapukaḷ vēḷviyavi*
*yemutal viḷaṅku mulakiṉ*
*vētiyar tamakkaruḷ vitittapaṭi yēyalatu*
*vēṟumuḷa tōva ṟikilō*
*mātimuṉi yōrkaḷtiri kālatava yōkamata*
*kaṟṟiṭa maṭitta varacaṉ*
*nītipukaḷ mētiṉiyi ṉīraruḷ purintapaṭi*
*nīlaṉaruḷ puttira ṉeṉavē.*

## The Gods Appeal to Piramaṉ

'We do not know of other commands
Except the one of yours which says
The priests alone are entitled to worship
Through the Vēdic hymns and perform
Sacrifices and proffer offerings.
But due to your boon, Nīla's son
Has completely destroyed
All yōgas and austerities
Performed thrice daily
By our great sages on the earth.'

(பிரமனும் தேவர்களும் அரங்கனிடம் முறையிடுதல்)

206. அன்றுவய னோடமரர் கண்டுமுறை யோதமிகு
வன்புட னெழுந்து வருளாற்
சென்றுதிருப் 'பாற்கடல் சிறந்தசய னத்திடை
திகழ்ந்தவர் புகழ்ந்து ருகியே
கண்டுகளி கொண்டுமிகு வின்பமொடு சென்றுவய
னின்றுகர மெளசி ரமிசைக்
கொண்டுதுதிக் கின்றமுறை யெண்டிசை யகன்றபுகழ்
கொண்டுமுறை கின்ற னர்களால்.

எ-து இந்தப் பிரகாரம் தேவேந்திரன் முதலாகிய பேர்களும், முனிவர் கூட்டங்களும் பிதாமகனிட சன்னிதானத்தில் தங்களுக்கு உதவியாகிய வேத வேள்வி யவ்விய கவ்வியம் முதலாகிய வைதீகசற்கருமங்களைச் சோமுகனால் விலக்கப்பட்ட காரணங்களை [2]விண்ணப்பம் செய்திரங்காநின்ற இந்திரன் முதலாகிய தேவர்களிட வருத்தங்களைக் கண்டு சகியாதவராய், மிகுந்த கிருபையினாலே தமது அன்னவாகனத்திலெழுந்தருளித் தேவர்கள், மகாரிஷிகள் தம்மைச் சூழ்ந்து வரத்தக்கதாய்ப் பிதாவாகிய திருமாலானவர், சேடசயன விமான சேகரராய்ச் சிறந்திரா நின்ற திருப்பாற்கடலைக் கண்ணுற்று அவரது கீர்த்திகளைப் பிதாமகன் முதலாகிய தேவர்கள் தமது மணி நாவினாலே புகழ்ந்து உருகினவர்களாய் வந்து, திவ்விய அனந்த கலியாண குண வைபவ இன்பத்தைக் கண்டு மிகுந்தவ பேட்சையுடனே, இரண்டு அஸ்தங்களையும் மெல்லிய சிரமேற்கொண்டு கூப்பித் தொழுது சமுத்திர கோஷ்டம்போல முறை செய்தார்க ளென்றவாறு. (10)

அவ்விய கவ்வியம் - அவ்வியம் - தேவர்க்கிடும் உணவு. கவ்வியம் - கௌவியம் - பசுவின் பொருள்கள - அவை - பால, தயிர், நெய், கோசலம், கோமலம் ஆகியவை.

பா,வே. - 1 மால்செறி. 2 சொல்லி இரங்க நின்றவர்களெல்லாந் தன்னைச் சூழ்ந்துவர . . . த்தன் பிதாவாகிய திருமாலானவர் .

## Piramaṉum Tēvarkaḷum Araṅkaṉiṭam muṟaiyiṭutal

*aṉṟuvaya ṉōṭamarar kaṇṭumuṟai yōtamiku*
*vaṉpuṭa ṉeḻuntu varuḷāṟ*
*ceṉṟutirup pāṟkaṭal ciṟantacaya ṉattiṭai*
*tikaḻntavar pukaḻntu rukiyē*
*kaṇṭukaḷi koṇṭumiku viṉpamoṭu ceṉṟuvaya*
*ṉiṉṟukara meṉaci ramicaik*
*koṇṭututik kiṉṟamuṟai yeṇṭicai yakaṉṟapukaḻ*
*koṇṭumuṟai kiṉṟa ṉarkaḷāl.*

## Piramaṉ and the Gods Appeal to Araṅkaṉ

Hearing the gods complain in this wise,
Piramaṉ got up with loving compassion
And went with all of them
To the milky sea; gazing at the Lord
Resting in that wondrous seat,
They praised him with melting hearts,

Standing close to him with hands
Raised above their heads in salute.
So they praised the Lord's fame
That is spread all over the eight directions.

வேறு

(அரங்கன் கோயில்)

207. பாற்கடலோ முப்பத்தி ரண்டிலக்கம் பரவியதின்
விளங்குகின்ற பரமன் கோயில்
மாற்கவிழ்சூழ் மாமணியின் மண்டபத்தின் மதில்கதிர்போல்
பத்திலக்கம் வானம் சூழுந்
தீர்க்கமொரு வேழாகும் பணியென்றாற் றிகழுமதி
னிளம்பிறைபோல் மூன்ற தாகும்
மேற்கவிழ்மா ணிக்கமுடி யொன்றரைக்குள் விளங்குகின்ற
விமலனிரண் டரையா மன்றே.

எ-து. அந்தத் திருமாலாகிய பகவான் யோக நித்திரை செய்கின்ற திருப்பாற் கடலின் அளவை முப்பத்திரண்டிலக்க யோசனைப் பரப்பின் நடுப்பிரதேசத்திலே விளங்கா நின்ற பரந்தாமனாகிய பரமனிட மேகம் தவழ்கின்ற சிகரங்களையுடைய திருமாமணி மண்டபத்தின் மதிலின் பரப்பானது, பத்திலக்க யோசனையாம். உயரமானது ஏழிலக்கமாம் ஆதிசேட விமான சேகரமானது மூன்றிலக்கமாம். அவரதாயிரம் சீவரத்தினங்களையுடைய படப் பரப்பானது ஒன்றரை லட்ச இலக்கமாம். அவ்விமான சேகர நடுப்பிரதேசத்தில் விளங்குகின்ற விமலனாகிய புருடோத்தமசார்வ பூமனது சயனசேவையானது இரண்டரை இலக்க [1]யோசனையாக விளங்கிப் பிரகாசித்த தென்றவாறு (11)

இலக்கம் - இலட்சம். மால் - மேகம். வானம் சூழுந்தீர்க்கம் - மேல் நோக்கிய அளவு, உயரம். பணி - படம்.

**உரை** - யோசனை - ஓரளவு - அதாவது நான்கு கூப்பிடு தூர அளவு. கூப்பிடுதூரம் - ஒருவன் கூப்பிட்டால் கேட்கும் தூர அளவு.

**பா.வே.** - 1. யோசனையா மென்றவாறு.

## vēṟu

### Araṅkaṉ kōyil

*pāṟkaṭalō muppatti raṇṭilakkam paraviyatiṉ*
*viḷaṅkukiṉṟa paramaṉ kōyil*
*māṟkaviḻcūḻ māmaṇiyiṉ maṇṭapattiṉ matilkatirpōl*
*pattilakkam vāṉam cūḻun*
*tīrkkamoru vēḻākum paṇiyeṉṟāṟ ṟikaḻumati*
*niḷampiṟaipōl mūṉṟa ṭākum*
*mēṟkaviḻmā ṇikkamuṭi yoṉṟaraikkuḷ viḷaṅkukiṉṟa*
*vimalaṉiraṇ ṭaraiyā maṉṟē.*

### Araṅkaṉ's Residence

The milky sea was stretched
For thirty-two lakhs of yojanas.
In this residence canopied by clouds,
The fort of the gem-encrusted hall
Stretched to a length of ten lakh yojanas;
The height was seven lakh yojanas.
The serpent Āticēṭaṉ gleaming like
The moon, stretched for three lakh yojanas;
His hood brilliant with gems
Spread for one-and-a-half lakh yojanas.
The bed-spread of the Lord
Was two-and-a-half lakh in breadth.

(அரவணைமேல் அரங்கன்)

208 சந்திரகாந் தம்மணியைத் தலத்தழுத்தித் தழைத்தொளிரும்
இந்திரநீ லம்மணியி னியற்றியவுள் மண்டபத்தின்
சுந்தரமா மிரத்தினத்தின் சோதிமிகு கோயிலுள்ளே
எந்தைதனை யரவணைமே லெழுந்தமர கதமலைபோல்.

எ-து சநதிர காநத மணியினால அவனுடைய கோயிலின் தலங்களைச் செய்து பிரகாசியா நின்ற இந்திரநீலமணியால் உள்மண்டபம் அமைத்துச் சுந்தரமாகிய பத்துவித

இலக்கணங்களையுடைய சாதுரங்கமாகிய மாணிக்கமும், எட்டு நிற இலக்கணம் அமைந்த குருவிந்தமும், ஆறு நிறமாகிய சவுகந்த மணியினாலும், நான்கு நிறமான [1]கோவாங்கத்தினாலும் செய்தமைத்த வுட்கோயிலினுள்ளே எழுந்தருளிய எந்தையான நாராயண மூர்த்தியானவர் மரகத மலை போல அனந்த சயனத்தின் வீற்றிருந்தருளினா ரென்றவாறு. (12)

சந்திரகாநதம் - சந்திரகிரணத்தால நீர் வடிவது இந்திரநீலம் - நவ இரத்தினங்களில ஒன்று: நீலமணி. *அரவணை* - அநந்தன்; ஆதிசேடன் எனனும் பாம்பாகிய படுக்கை

**உரை** - சாதுரங்கமாகிய மாணிக்கம் - பத்துவகை இலக்கணங்களையுடைய மாணிக்கம அவை தாமரை, செங்கழுநீர், சாதகப்புட்கண், இந்திரகோபம, மின்மினி, சூரியன், விளக்கு, மாதுளமபூ, மாதுளவிதை, நெருப்பு ஆகியவற்றின் நிறம குருவிந்தம் - எட்டுவகை நிறங்களையுடைய மாணிக்கம் - அந்நிறங்கள் - மஞ்சாடி, உலோத்திரம், செம்பருத்திப்பூ, முறுககம்பூ, குன்றிமணி முயல் இரத்தம, சாதிலிங்கம், குக்கில்கண் ஆகியவை. சவுகந்தம - சௌகநதம் - எடடுவகையுள் ஆறுநிறம் பெற்றது கோவாங்கம் - செம்மணி - நிறவகை நானகு - அவை செங்கல், *குராமலா*, கோவை, மஞசள் ஆகியவை

பா.வே. - 1. கோலிங்கத்தினாலும்

## Aravaṇaimēl Araṅkaṉ

*cantirakāṉ tammaṇiyait talattaḻuttit taḻaittoḷirum*
*intiranī lammaṇiyi ṉiyaṟṟiyavuḷ maṇṭapattıṉ*
*cuntaramā mirattiṉattiṉ cōtimıku kōyiluḷḷē*
*entaitaṉai yaravaṇaimē leḻuntamara katamalaipōl.*

## Araṅkaṉ on the Serpent Bed

With moonstones impressed on the floor,
And brilliant blue gems on the inner hall
Within this lovely, glowing temple
Rested my Lord on the snake,
Verily like a mountain of emerald.

(திருமாலின் மண்டபம்)

209. ஆயிரங்கோ டிக்கதிரின் அடலாழி யொளிர்சங்கம்
ஆயிரங்கோ டிக்கதிரின் அலர்ந்ததிங்க ளெனமிளிர
ஆயிரங்கோ டிக்கிரண மணிமுடியும் அவிர்ந்துமிக
ஆயிரங்கோ டிப்பணிகள் அலர்ந்தெங்கும் பரந்தொளிர.

எ-து. அப்படியாக மிகுந்த பெருமையாகிய பாற்கடலிலே விளங்குகின்ற ஆதி சேடசயனத்தில் எழுந்தருளிய, மரகதமலை போன்ற திவ்விய திருமேனிகளின் அழகு தங்கிய, வலக்கரத்தில் வெற்றி பொருந்திய சக்கராயுதமானது ஆயிரங்கோடி சூரியர்கள் ஒன்றாயுதித்துப் பிரகாசிக்காநின்றது போலவும், இடக்கரத்தில் விளங்கிப் பிரகாசிக்காநின்ற பாஞ்சசன்னியமானது ஆயிரம் கோடி அமுதகிரண சமூகங்களையுடைய சந்திர விம்பம்போலப் பிரகாசிக்கவும், திருமுடியில் அணிகின்ற அழகுதங்கிய மவுலியானது ஆயிரம் கோடி கிரண பூரணங்களால் விரிந்து பிரகாசத்தைச் சுவலிக்காநின்ற நவரத்னத்தின் மயமாகிய மகாமேருவைப் போலவும், ஆயிரம் கோடிப் பணிகளாகிய முத்துமாலை, மோகனமாலை, மாணிக்கமாலை, பதக்கங்கள் முதலாகிய ஆபரணங்களானவை அகன்ற மார்பகத்தில் சுந்தர விலாசமாய்ப் பிரகாசிக்கச் சர்வாபரண பூசித அலங்கார திவ்விய ரூபங்களாலந்த திருமா மணிமண்டபமெங்கணும் பரந்தொளிர்கின்ற தென்றவாறு (13)

கதிர் - சூரிய ஒளி. ஆழி - சக்கரம் - சக்கராயுதம். சங்கம் - சங்கு. பாஞ்சசன்னியம் என்னும் சங்கு.

## Tirumāliṉ maṇṭapam

*āyiraṅkō ṭikkatiriṉ aṭalāḻi yoḷircaṅkam*
*āyiraṅkō ṭikkatiriṉ alarntatiṅka ḷeṉamiḷira*
*āyiraṅkō ṭikkiraṇa maṇimuṭiyum avirntumika*
*āyiraṅkō ṭippaṇikaḷ alarnteṅkum parantoḷira.*

## The Hall of Nārāyaṇaṉ

The fiery discus that glows
Like crores of suns; the conch gleamed
Like the moon with crores of rays;
The crown was brilliant with crores of rays;
Crores of necklaces spread light all over.

(அரங்கனின் கோலம்)

210. மலர்ந்ததா மரைகளென அவயவங்கள்
திகழ்ந்தொளிர மணிமார் பெங்கும்
அலர்ந்தொளிருந் திருவினொடும் அசையுடைமுப்
புரிநூலு மவிர மீது

புலர்ந்தொளிரும் பொன்னாடை யிடைமலிய
மின்னாணும் பொலிந்து தோன்றக்
கலந்தவரை வடமுடனுங் கவின்செய்தொடை
கற்பகம்போல் கறங்கு வானை.

எ-து. அந்தத்திருப்பாற் கடலினில் யோக நித்திரை செய்யா நின்ற அரங்க நாயகருடைய திவ்விய திருமேனிகளில், மரகத மலை போன்ற சுந்தர விலாசம் பொருந்திய அவயவங்களானவை ஒளிரா நின்றன. செந்தாமரை புட்பித்தது போன்ற வடிவழகினையுடைய அகன்ற திருமார்பகத்திலே கோடி சூரியப்பிரகாசமாய் விளங்குகின்ற கவுத்துவாபரணமும், ஸ்ரீமகாலட்சுமி தேவியும் வீற்றிருக்கத் திருத்தோள்களிலே அசையா நின்ற முப்புரி நூலும், இடையிலே தரித்தருளிய கனகவுடையும் ஆயிரத்தெட்டு மாற்று சொர்ண பீதாம் பரத்தினுடைய பிரகாசம் விளங்க மின்னற் கொடிபோலொத்த வரை வடமுதலாகிய திவ்வியாபரண பூசித அலங்கார வடிவழகும், தேவகற்பத் தருக்கள் போன்ற அழகு தங்கிய திருத்தொடைகளும் பிரகாசித்தருளிய ஸ்ரீமகாலட்சுமிபதியான அரங்க நாயகரானவர் வீற்றிருந்தாரென்றவாறு (14)

திரு - இலக்குமி. மின் - மின்னல. நாண் - கயிறு

**உரை** - கவுத்துவம் - திருப்பாற்கடலில் தோன்றிய ஓரற்புதமணி. கனகம் - பொன்.

## Araṅkaṉiṉ kōlam

*malarntatā maraikaḷeṉa avayavaṅkaḷ*
*tikaḻntoḷira maṇimār peṅkum*
*alarntoḷirun tiruviṉoṭum acaiyuṭaimup*
*purinūlu mavira mītu*
*pularntoḷirum poṉṉāṭai yiṭaimaliya*
*miṉṉāṇum polintu tōṉṟak*
*kalantavarai vaṭamuṭaṉuṅ kaviṉceytoṭai*
*kaṟpakampōl kaṟaṅku vāṉai.*

## Araṅkaṉ's Loveliness

The limbs gleamed like lotuses
That had just then blossomed;
The Goddess of Wealth spread light
All over the chest; the sacred thread
Swayed gently; the golden garment

Enclosed his waist revealing
The lightning brilliance of the band.
Necklaces ornamented him and his thighs
Were like the Wish-yielding Tree.

(திருமாலின் யோக நித்திரை)

211. பாற்கடலிற் கார்க்கடல்போற் பருமணிச்சூட்
டாயிரவாய்ப் பாம்பின் மீது
நாற்கடலி னொலியவென நான்மறைக
ளோதவய னளினத் தூவி
மேற்புறமும் புட்காப்ப வேத்திரக்கைச்
சேனையர்விண் ணப்பங் கேட்கக்
காற்புறமு மூவரிரு தாள்வருடக்
கண்டுயிலும் கரிய மாலை.

எ-து. சோடசக் கலைகளால் அமிழ்த தாரைகளைப பொழிகின்ற பூரண சந்திர விம்பம் போன்ற வெண்மையினவாகிய திருப்பாற்கடலின் நடுப்பிரதேசத்தில், கருங்கடலானது வீற்றிருந்தால் எத்தன்மைத்தோ அத்தன்மையினவாகிய திருமேனியின் காந்திகளானவை பிரகாசிக்க, அனந்த சயனமானது ஆயிரம் பணாமுடிகளிலும் ஆயிரம் சிரோரத்தினங்கள் ஆயிரங்கோடி சூரியர் [1]பிரகாசிக்கப்பட்ட அனந்த சயனத்தினில் யோக நித்திரை செய்யாநின்ற அரங்கநாயகர் சன்னதியில், எழுகடலுங்கூடித் தொனித்தது போல வேதகோஷ்ட முழங்க, இருபக்கங்களினும் அனந்த கருட விசுவ சேனர், சனகர், சனத்குமாரன், [1]சனந்தரன், [2]சனாதரன் முதலாகிய நித்திய சூரியர்களால் இடைவிடாது துதி செய்ய, உபய செந்தாமரைக் கமலம் போன்ற திருவடிகளைச் சீதேவி, பூதேவி, நீளாதேவியாகிய மூவர்களும் பாதங்களை வருடி உபசாரம் செய்ய வீற்றிருந்தருளினார் அரங்கநாயகர் என்றவாறு. (15)

கார்க்கடல் - கருங்கடல மணிச்சூட்டு - மாணிககதததை உடைய உச்சி. ஆயிரவாய்ப் பாம்பு - 1000 தலைகளையுடைய ஆதிசேடன அயன் - பிரமன். நளினம - தாமரை.

**உரை** - சோடசக்கலை - பதினாறுகலைகள்; பூரணச்சந்திரன். அனந்தசயனம் - பாம்பாகிய படுக்கை. பணாமுடி - பணம் - படம்; பாம்புப்படங்களின் உச்சி. சிரோரத்தினம் - நாகரத்தினம். உபயம் - இரண்டு

**பா.வே.** - 1 சனந்தனன் 2 சனாதனன்

## Tirumāliṉ yōka nittirai

*pāṟkaṭaliṟ kārkkaṭalpōṟ parumaṇiccūṭ*
*tāyiravāyp pāmpiṉ mītu*
*nāṟkaṭali ṉoliyaveṉa nāṉmaṟaika*
*ḷōtavaya ṉaḷiṉat tūvi*
*mēṟpuṟamum puṭkāppa vēttirakkaic*
*cēṉaiyarviṉ ṇappaṅ kēṭkak*
*kāṟpuṟamu mūvariru tāḷvaruṭak*
*kaṇṭuyilum kariya mālai.*

## Araṅkaṉ's Yogic Sleep

As the four Vēdas were recited
Rivalling the sounds of the ocean,
Piramaṉ on the lotus saluted,
The Commander with stick in hand
Remained alert to take orders,
And as the three consorts[1]
Stroked his feet, Nārāyaṇaṉ
Remained in yogic sleep,
On the thousand-hooded snake
Gleaming with gems
Like a dark ocean within the milky sea.

(திருமாலின் திறம்)

212. உலகமெலா மளித்தருளும் உந்திக்கம
லத்தோனை உவந்து பின்னர்
அலகிலா விளையாட்டா [1]னளித்தழிக்கும்
பரம்பொருளை யமலன் றன்னை

---

1. Sridevi, Bhudevi and Niladevi.

இலகுபுவி யந்தரமு மினிதுறையும்
பரம்பொருளை யிமையோர் கோவைத்
திலகமென மூவருக்குண் முதலாகி
நின்றானைத் திருமா றன்னை.

எ-து. உலகங்களை யெல்லாம் உண்டாக்கி இரட்சிக்கும்படியான உந்திக் கமலத்திலே வீற்றிருக்கா நின்ற பிரம்மாவை யளித்தருளிய கிருபையினாலே அகிலமான உலகங்களையெல்லாம் இரட்சித்தும் அழித்தலாகிய லீலா விபூதியில் விளையாடுகின்ற பரம புருடனை, மலரகிதமான பரிசுத்தராகிய, சிதானந்த சொரூபராய்ப் பிரகாசியாநின்றவனை, பூமியந்தரங்களின் இன்பமாய் வசியாநின்ற பரம்பொருளான அத்தேவ நாயகனை, மும்மூர்த்திகளுக்குள்ளே முதன்மையாய்த் திலகம் போல விளங்குகின்ற திருமாலினை யென்றவாறு. (16)

உந்திக்கமலத்தோன - பிரமன். அமலன் - தூயவன், திருமால்.

உரை - மலரகிதம் - மலங்களை விலக்குதல். சிதானந்தம் - ஞானானந்தம், பேரின்பம். அந்தரம் - ஆகாயம்.

பா.வே. - 1 னழிததளிக்கும்

## Tirumāliṉ tiṟam

*ulakamelā maḷittaruḷum untikkama*
*lattōṉai uvantu piṉṉar*
*alakilā viḷaiyāṭṭā ṉaḷittaḷikkum*
*paramporuḷai yamalaṉ ṟaṉṉai*
*ilakupuvi yantaramu miṉituṟaiyum*
*paramporuḷai yimaiyōr kōvait*
*tilakameṉa mūvarukkuṇ mutalāki*
*niṉṟāṉait tirumā ṟaṉṉai.*

## Nārāyaṇaṉ's Glory

He brought to being Piramaṉ
Who creates all the worlds;
The Supreme whose Play of creation
And destruction is endless;
He is the Pure One, the Indwelling Universal
In all creation; the Lord of Gods;
The crown of the Trinity; he is Nārāyaṇaṉ.

### (தேவர் அரங்கனைக் காணுதல்)

213. அரனயனைப் புரந்துறையு மரியகே
சவன்தன்னை அகன்று நீண்ட
பெரியதோர் அருள்விழியிற் கடைக்கணித்த
முத்தர்கடல் பிறங்கு வானை
உரியபொருள் அனைத்தினையு மாயையால்
அசைத்தாட்டு மொருவன் றன்னைக்
கரியதிரு மேனியனைத் திருவடியிற்
தொழுதேத்திக் கண்ணிற் கண்டார்.

எ-து. உருத்திர மூர்த்தியையும் பிதா மகனையும் தமதிரண்டு விலாப்பக்கங்களிலேயும் உடைய கேசவனென்னும் திருநாம தேயத்தையுடையவன், கருணாசமுததிரம் போன்ற விசாலம் பொருந்திய செவ்வரிபரந்த அழகிய [1]திவ்விய நேத்திரத்தின் கிருபா நோக்கத்தாலே கடாட்சித்தருளிய நித்திய சூரியர்களும், முமுச்சுக்களாகிய பக்தர்களும் பெரும்புறக் கடல் போலத் தம்மைச் சூழ்ந்திருக்கின்ற அனந்த விமானத்தில் எழுந்தருளிய அரங்கநாயகனை இந்தத் திரிபுவனத்தில் உண்டாகிய சராசரங்களை யெல்லாம் தமது [2]மாய்கையாகிய விபூதியால் சீவான்மா, பரமான்மாவாய் அசைத்து ஆட்டாநின்ற ஏகநாயகனை, நீருண்ட மேகம்போன்ற கரிய திருமேனியின் திருவழகினையுடைய எம்பெருமானது திவ்விய சரணார விந்தங்களைக் கண்டு துதி செய்தார்கள் பிரம்மா முதலாகிய தேவாதிக ளென்றவாறு. (17)

புரத்தல் - காத்தல் கேசவன் - திருமால் முத்தர் - முத்திக்குரிய அன்பர் கடல் பிறங்குவான் - அன்பர்களாகிய கடலால் சூழப்பட்டு விளங்குபவன

**உரை** - பிதாமகன் - பிரமன் முமுட்சுகள் - முற்றத்துறந்தவர்கள். வீடுஅடைய விரும்புவோர் அனந்தவிமானம் - அனந்தனாகிய இருக்கை; ஆதிசேடன்.

**பா.வே.** - 1. கருணாநேத்திரத்தின். 2 மாய்கையாகிய வனைதகல்யாண விபூதியால்.

### Tēvar Araṅkaṉaik kāṇutal

*araṉayaṉaip puranturaiyu mariyakē*
*cavaṉtaṉṉai akaṉṟu nīṇṭa*
*periyatōr aruḷviḻiyiṟ kaṭaikkaṇitta*
*muttarkaṭal piṟaṅku vāṉai*
*uriyaporuḷ aṉaittiṉaiyu māyaiyāl*
*acaittāṭṭu moruvaṉ ṟaṉṉaik*
*kariyatiru mēṉiyaṉait tiruvaṭiyiṟ*
*toḻutēttik kaṇṇiṟ kaṇṭār.*

## The Gods see Araṅkaṉ

He is Kēcava who has beside him
Civaṉ and Piramaṉ; he glances
With his long and wide eyes of grace
At the Realised Souls who encircle him
Verily as an ocean. He is the Peerless
Who moves all the created beings
By his illusory play; the dark-hued Lord.
Piramaṉ and others saw this Supreme
And worshipped his blessed feet.

(பிரமன் திருமாலிடம் விண்ணப்பித்தல்)

214. கண்டரங்கர் கமலபதம் படிந்தார் நீலக்
கார்போன்ற திருவடியைக் கருதி யன்பர்
நிண்டபிதா மகன்கூறுஞ் சோமு கன்செய்
நெடுந்தவத்தான் மிகுந்தவர மீய்ந்தோமிந்த
மண்டலஞ்சூழ் புவிகளெலா மறைக ளோது
மாமுனிவோர் மகம்வேள்வி மறுத்த லாலே
பிண்டமவிர்ப் பாகங்கள் தவிர்ந்தா ரிந்தப்
பெருமைதிகழ் அமரரெனப் புகல்வ தானான்.

எ-து. அப்படி அதிசிலாக்கியமாகிய திருப்பாற் கடலிலே யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்கநாதரிட திவ்விய திருவடிக் கமலங்களைக் கண்டு, அனந்தமான தொண்டன் சமாபபிதது அவரது பெரும் புறக்கடல் போன்ற கரிய திருமேனியினிட வடிவழகிலே ஈடுபட்டவர்களாய், இன்பசாகரததின் மூழ்கிய பிதாமகனானவன் விண்ணப்பம் செயகினறான் வாரீர் மானுபாவரே! தேவரீருடைய திவ்விய மங்கள விக்கிரக விசேட சேவையானது, எணணுகைக்கு அசக்கியமாகியது. அடியேன் உமது திவ்விய ரூபங்களைக் கண்டு தரிசிக்கப் பெற்றேன் சோமுகன் செய்த அரிதாகிய தபோபலத்தினாலே அவனுக்கு வேண்டிய வரபாலனங்களைக் கொடுத்ததால் அவன் சதுர்சாகரம் சூழ்ந்த பூமண்டலங்களிலே உள்ள வேத விதிப்படி செய்கின்ற முனிவர்கள், ரிஷீசுவரர்கள, பிராமணர்கள ஆகியோர் செய்கின்ற நித்திய கர்ம அனுஷ்டானம் முதலாகிய யாகாதி கிரதுக்களையெல்லாம் அழிக்கின்றான். தேவர்களுக்கு அவிாபபாகமில்லாமல் துர்பலத்தை அடையத்தக்கதாய்ச் செய்த அந்தச் சோமுகனாலே அசுராள் மிகுநது. தேவாகளை அடித்துப் பொன்னுலகையழித்துக் கொடுமை

செய்கிறபடியால், இந்திரன் முதலாகிய அமரர்கள் தங்கள் தங்கள் போக பாக்கியங்களை யெல்லாம் இழந்து மிகுந்த துன்பத்தை யடைந்தார்களென்று விண்ணப்பம் செய்கின்றான் பிதாமக னென்றவாறு. (18)

நிண்டவன் - சாதுரியமானவன், திறமையுடையவன்.

**உரை** - அசக்கியம் - இயலாதது. கிரது - காணிக்கை, பலி.

## Pirammaṉ tirumāliṭam viṇṇappittal

*kaṇṭaraṅkar kamalapatam paṭintār nīlak*
*kārpōṉṟa tiruvaṭiyaik karuti yaṉpar*
*niṇṭapitā makaṉkūṟuñ cōmu kaṉcey*
*neṭuntavattāṉ mikuntavara mīntōminta*
*maṇṭalañcūḻ puvikaḷelā maṟaika ḷōtu*
*māmuṉivōr makamvēḷvi maṟutta lālē*
*piṇṭamavirp pākaṅkaḷ tavirntā rintap*
*perumaitikaḷ amararenap pukalva tāṉāṉ.*

## Piramaṉ Appeals to Nārāyaṇaṉ

Piramaṉ saluted the feet of Araṅkaṉ.
Looking at the feet that resembled
A rain-bearing cloud, the happy Piramaṉ
Spoke: I gave a boon to Cōmukaṉ
Pleased by his rigorous austerities.
Since he is destroying the Vedic sacrifices
Of great sages who recite the scriptures
In this vast, vast earth,
The gods are denied their offerings.

(திருமாலை விளித்தல்)

215. சீதர னேபரி பூரண னேநம் தேவரு நான்மறையோர்
ஆதர னேயவ னீதல மோதரு அற்புத னேயிமையாள்
சோதர னேபெறு தாயுறு தந்தையுஞ் சுத்தமு மானவப
யோதர னேகுரு தெய்வமு மானவ வொப்பறு நற்பொருளே.

எ-து. ஸ்ரீமகாலட்சுமிதேவியைத் திருமார்பிலே தரித்தருளிய தேவரீர்! [1]எங்கும் பரிபூரணராய்ச் சேதனா சேதனங்களில் உள்ளும் புறமும் வியாபித்தருளிய பரம புருடோத்தமனே! தேவர்களுக்கும், மகா இருடியருக்கும், வேதங்களுக்கும் ஆதாரமாகிய தேவ தேவோத்தமனே! உமது திவ்விய அனந்த கல்யாண மங்கள குண விபூதிகளைச் சொல்லுவதற்கு அரிதாகிய பரம்பொருளே! பர்வதராசனுடைய புத்திரியான பர்வதா தேவிக்குச் சகோதரனே! ஈசப்பிரதாபரான [2]நான், பிதாவும் மாதாவும் குருவும் தெய்வமும் நீரல்லது வேறுண்டோ என்று பிரம்மா முதலாகிய தேவர்கள் பாத பங்கயங்களிலே [3]சரணமாக அடைந்து உருகினார்க ளென்றவாறு. (19)

சீதரன் - திருமகளை மார்பில் தாங்கியவன், திருமால். அவனிதலம் - பூமி. இமையாள் - பார்வதி சோதரன் - சகோதரன், அபயோதரன் அபயம் + உதரன் - உலகத்தை வயிற்றுளக்கியவன்; அடைக்கலந்தந்து காத்தவன்.

**உரை** - சேதனம் - உயிர், ஆத்துமா.

**பா.வே.** - 1 ஸ்ரீ மகாலடசுமி தேவியைத் திருமார்பிலே தரித்தருளிய தேவரீ ரெள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்த பரிபூரணரே! யும்மை வந்திக்கின்றோம். தேவ விருடியர் முதலிய வேதங்களுக்கு மாதாரமாகிய தேவ . ... 2. நான் - இடம்பெறவில்லை. 3 தெண்டன் சமர்ப்பிக்கின்றோமென்றார்கள் தேவகூட்டங்க ளென்றவாறு

## Tirumālai viḷittal

*cītara ṉēpari pūraṇa ṉēnam tēvaru nāṉmaṟaiyōr*
*ātara ṉēyava ṉītala mōtaru aṟputa ṉēyimaiyāḷ*
*cōtara ṉēpeṟu tāyuṟu tantaiyuñ cuttamu māṉavapa*
*yōtara ṉēkuru teyvamu māṉava voppaṟu naṟporuḷē.*

## Appeal to Nārāyaṇaṉ

"Srītara! The One Indivisible!
Guardian of gods and Vēdic scholars!
Wondrous Lord whose auspicious qualities
Are beyond description! Brother of Pārvati!
You are mother, father and kin!
One who holds the worlds within!
O Teacher! Incomparable Truth-Being!"

(அரங்கன் திருவுளமறிதல்)

216. இன்னன வாய்ப்பல விதங்க டுதித்து
யிறைஞ்சிடு வானவர்தஞ்
சென்னி முகிழ்த்த கரத்தினா ரன்பொடு
சீதர னைப்பணிய
உன்னி மனத்தினில் பேரருள் கொண்டொரு
வாசக மீமிசையிற்
பன்னி யுரைத்த சரீரியு மாயொரு
பாவனை செய்தனனே.

எ-து. இவ்விதமாய்ப் பலவிதங்களாகிய வேதச் சுருதியினுடைய வாக்கியத்துதிகளாலே துதிசெய்து, தெண்டன் சமர்ப்பித்துக் கராம்புயமலரை உச்சியிற் கூப்பித் தொழுது, அன்பினால் சீதரனை உபாசித்தார்கள். அதைத் [1]தமது திருவுள்ளத்தினால் யோசித்துப் பேரருளாய்க் கருணை கூர்ந்து அசரீரி முகாந்தரமாய் அறிவிக்க நினைந்தருளினார் கருணைக்கடலாகிய அரங்கநாயக ரென்றவாறு. (20)

பலவிதங்கடுதித்து - பலவிதங்கள் + துதித்து. சென்னி - தலை. முகிழ்த்த - குவித்த. மீமிசை - மேலே. மீ - மேலே, மிசை - மேலே. ஒருபொருட்பன்மொழி - சிறப்புபற்றி வந்தது. பன்னி உரைத்தல் - பன்னுதல் - சொல்லுதல். தேர்ந்து உரைத்தல் அசரீரி - ஆகாயவாணி, உருவமற்ற நிலை.

**உரை** - கராம்புயமலர் - கரம் + அம்புயம் + மலர் - அம்புயம் - தாமரை உருவகம். உபாசித்தல் - வழிபடுதல். முகாந்தரம் - மூலமாக. அசரீரிவடிவில்.

**பா.வே.** - 1. தமது யூகபுத்தியினாலாலோசித்துப் பேரருளாய்க் . . .

## Araṅkaṉ tiruvuḷamaṟital

*iṉṉaṉa vāyppala vitaṅka ṭutittu*
*yiṟaiñciṭu vāṉavartañ*
*ceṉṉi mukiḻtta karattiṉā raṉpoṭu*
*cītara ṉaippaṇiya*
*uṉṉi maṉattiṉil pēraruḷ koṇṭoru*
*vācaka mīmicaiyiṟ*
*paṉṉi yuraitta carīriyu māyoru*
*pāvaṉai ceytaṉaṉē.*

## Araṅkaṉ's Thoughts

Having thus worshipped severally,
The gods appealed with hands held

Above their heads, saluting Srītara.
Taking it all in his heart,
And overflowing with immense grace
The Lord decided to reply to them
As words spoken by a disembodied voice.

**(அரங்கன் தேவர்களுக்கு அருள் புரிதல்)**

217. **இக்கண மேயுமை செய்த கொடும்பழி**
**யேந்திய சோமுகனை**
**முக்கணன் வந்து தடுத்திடு மாயினு**
**மாய்ப்பனீர் மூவுலகுங்**
**கைக்கொள வென்றவ ரைத்தனி யேகவோர்**
**கடிகையின் விடையீந்து**
**செய்க்கம லத்திறை யுந்துதி செய்யவோர்**
**சீரரி யாயினனே.**

எ-து [1]வாரீர் தேவர்களே! நீங்கள் பயப்பிராந்தியடைய வேண்டாம். உங்களை நெருக்கம் செய்கின்ற கொடும்பழியாளனாகிய சோமுகனுக்கு உதவியாய் அந்தத் திரிநேத்திர தாரியாகிய, பிரளயகாலருத்திரன் வந்தெதிர்த்தபோதிலும், அவரையும் விசையம் செய்தொரு கணப்பொழுதிலே அவனைச் சம்மரித்து விடுகிறோம். நீங்கள் உங்கள் உலகத்துக்குப் போய்த் திரிலோகங்களையும் அரசு புரிந்து, பரம வைதீகமான தர்மார்த்தங்களை விருத்தி செய்யக் கடவீர்களென்று அனுக்கிரகம் செய்தருளினார் அப்போது பிரமதேவர் முதலான தேவர்கள ஆனந்த பரவசராய்த் துதி செய்கின்ற காலையில் அதிசாமர்த்தியத்தால் அதிசிலாக்கியமாகிய [2]எக்கிய வராகத் திருவவதாரம் செய்தருளினர் ஸ்ரீலட்சுமிபதியாகிய அரங்கநாயகரென்றவாறு (21)

மாய்ப்பனீர் - மாய்ப்பன் + நீர் - மாய்ப்பேன என்னும தன்மை ஒருமை எதிர்கால முற்று. நீர் - நீவிர், நீங்கள் கடிகை - கணநேரம் நாழிகை. செய்க்கமலத்திறை - செய் - செய்ய, சிறந்த; கமலத்திறை - பிரமதேவன் சீரரி - சீர் - சீர்மை, உயர்வு. அரி - வராகம், பன்றி

**உரை** - நெருக்கம - ஒடுககுதல்.

**பா.வே** - 1 பின்னுமந்தச் சதுர்முகன முதலாகிய தேவாகளை நோக்கி யரங்கநாயகர் தமது திருவாய் மலர்நதருளுகின்றார் உங்கள் யாக மவ்விய கவ்விய முதலாகிய வைதிகத்தை யெல்லாம் விலக்காநின்ற வந்தச சோமுகனை வதைத்துங்கள வைதிகத்தை நிறுத்துகின்றே னவனுக் குதவியாய் காளகண்ட திரிநேததிரதாரியாகிய . 2 வெக்கிய வராகத்திருவவதாரஞ் செய்தருளினா ரென்றவாறு.

## Araṅkaṉ tēvarkaḷukku aruḷ purital

*ikkaṇa mēyumai ceyta koṭumpaḷi*
*yēntiya cōmukaṉai*
*mukkaṇaṉ vantu taṭuttiṭu māyiṉu*
*māyppaṉīr mūvulakuṅ*
*kaikkoḷa veṉṟava raittaṉi yēkavōr*
*kaṭikaiyiṉ viṭaiyīntu*
*ceykkama lattiṟai yuntuti ceyyavōr*
*cīrari yāyiṉaṉē.*

## Araṅkaṉ's Promise

"This very moment shall I destroy
Cōmukaṉ who has caused you evil,
Even if the triple-eyed Civaṉ
Comes to prevent me; you may return
To your three worlds and continue
To rule." He gave them leave to go.
Even as the lotus-eyed Piramaṉ
And others praised him worshipfully
He manifested as a Boar.

(தேவர் மகிழ்ந்து செல்லுதல்)

218. ஆனந்த பரவசரா யகங்குழைந்து
மெய்சோர்ந்து வறிவ கன்று
தேனுந்து மலர்களெனச் சொரியருவி
கண்ணினராய்த் தேம்பித் தேம்பிக்
கூனந்தே ரைம்படையுந் திருமேனி
முற்றுமனக் கோவில் வைத்துத்
தானுந்த வாவயனு மமரரொடு
பின்புகழ்ந்து சார்ந்தா ரன்றே.

எ-து. அந்தத் தேவர்கூட்டங்கணிர்த்திசைய பரிபூரண ஆனந்த வைபவத்தில் அழுந்தினவர்களாய் மனமுருகி, சரீர தத்துவ நிலை தெரியாதவர்களாய் அறிவே சொரூபமாய்த் தேனைத்துளிக்கின்ற நல்ல சுகந்தங்களை உடைய நானாவிதமாகிய மலர்களைப் போல், ஆனந்தக் கண்ணீர் சொரிகின்ற கண்தாமரைகளையுடைத்தானவர்களாய், அவ்வானந்தத்தாற்றேக்கங் கொண்டு, கூனிய வடிவினை யுடைய சங்கம் முதலாகிய பஞ்சாயுதங்களையும் ஏந்திய திருமேனியினது தேசோமயகாந்தியை இருதய கமலத்திலிருத்தித் தானும், தவறு படாத பிரம்மாவும் தேவர்கூட்டங்களுடனே பின்னே புகழ்ந்தவர்களாய் எழுந்தருளினார்க ளென்றவாறு. (22)

உந்துதல் - சொரிதல் கூனந்தேரைம்படை - கூன்வடிவமான 'ஐவகைப்படை'; அவை - சங்கு, சக்கரம், தண்டு, வில, வாள் என்பன.

**சோமுகன் உற்பத்தி அத்தியாயம் முற்றிற்று.**

## Tēvar makiḻntu cellutal

*āṉanta paravacarā yakaṅkuḻaintu*
*meycōrntu vaṟiva kaṉṟu*
*tēṉuntu malarkaḷeṉac coriyaruvi*
*kaṇṇiṉarāyt tēmpit tēmpik*
*kūṉantē raimpaṭaiyun tirumēṉi*
*muṟṟumaṉak kōvil vaittut*
*tāṉunta vāvayaṉu mamararoṭu*
*piṉpukaḻntu cārntā raṉṟē.*

## The Gods Withdraw

Overflowing with happiness, their hearts
Melting, still in a self-lost mood,
Their eyes showering tears
Like flowers that rain honey, repeatedly
Crying, they placed in their hearts
The image that holds the five weapons.[2]
The gods along with Piramaṉ praised Him
And returned homewards.

---

2. Conch, discus, mace, bow and sword.

# 12. [1]எட்டாவது
# எக்கியவராகத் திருஅவதார அத்தியாயம்

தேவர்களுக்கு அருள்புரிந்த அரங்கநாயகன் வராகமூர்த்தியாகத் திருவவதாரம் செய்தருளினார். அந்த அவதாரத்தில் யூபத்தம்பமே திருமுகமாகவும், யாகாதிக் கிருத்துகளே மூக்காகவும், இராசசூயம், அசுவமேதம் ஆகிய இரண்டு யாகங்களுமே இருகண்களாகவும், ஆகவனீயம், காருகபத்தியம், தெக்கணாக்கினி என்னும் முத்தீயுமே நாக்காகவும் வசோத்தாரை, வாயபேயம் என்னும் இரண்டுமே இருதொடைகளாகவும் வாலாகவும் வடிவமெடுத்தன. சோமம், அதிராத்திரம் என்னும் இரண்டும் இணைந்து வராகத்தின் பருத்த இடையாயின. இந்த உறுப்புகளோடு கூடிய வராகமானது பவுண்டரீகம் என்னும் வடிவைப் பெற்று விளங்கியது. விசுவசித்து, கோமேதம் என்னும் இருவகை வேள்விகளும் வராகத்தின் கைகளாயின. (யாகங்களின் விளக்கங்கள் பாடல்களின் அடியில் இடம்பெறுகின்றன).

நான்கு வேதங்களும் திருவடிகளாயின. புருடமேதயாகமானது வராகத்தின் எலும்புகளாயிற்று. சத்திரயாகம் அடிவயிறாயிற்று. அத்துவரம், கெசமேதம், சத்தியோதீக்கை, புத்திரியாமம் ஆகிய நான்கும் முழங்காலாயின. மாயேசுரம், நித்தியதீக்கை, அக்கினிட்டோமம் ஆகிய மூன்றும் கண்டமாக உருவெடுத்தன. இத்தகு உறுப்புகளோடு எக்கியவராகத் திருவவதாரம் செய்தருளினார் அரங்கநாயகன். மேலும், இலக்குமியும் கவுத்துவாபரணமும் மார்பகத்தேவிளங்க, ஸ்மிருதிகள், சாத்திரங்கள், தாரகைகள், நட்சத்திரங்கள், சூரிய சந்திரர் போன்றவை திருவாபரணமாக விளங்கின. தேவர்கள் துதிக்க அரங்கநாயகரானவர் திருப்பாற் கடலைவிட்டு எழுந்தருளினார். அப்போது இலக்குமியின் முகத்தைப்போல, சந்திரனானவன் கிழக்கிலே உதயமானான். அவனது தோற்றம் நடுக்கடலில் எழுந்த நீர்க்குமிழினைப் போன்று விளங்கியது. சந்திரனது திருமணத்திலே தேவர்கள் சொரிந்த பொரியினைப்போல உடுக்கணங்கள் சந்திரனைச் சூழ்ந்து விளங்கின. அல்லி மலர்கள் மலர்ந்தன. தாமரை மலர்கள் குவிந்தன. வண்டுகள் தூதுவரைப் போல இசைமுழக்கின. பாற்கடலைப்போன்று அகன்றவாயினையும், மூன்றாம் பிறையைப் போன்ற பற்களையும், நான்கு திருவடிகளையும் உடையவராய்ப் புறப்பட்டார் வராகமூர்த்தி. தேவர்கள் மலர்மாரி பொழிந்து வழிபட, சந்திரனின் ஒளியினாலே மருதத்திணைகளைக் கடந்து மகததேசத்தைக் கண்ணுற்றார்.

அந்நாட்டின் மதிலில் கொடிகள் ஆடின. மாளிகைகள் மகமேருவைப் போல ஓங்கி ஒளிவீசின. மங்கையர் தேவமகளிரைப் போல யாழினை மீட்டியிசைத்தனர். அவ்இசையைக் கேட்ட தேவமங்கையர் உள்ளம் உருகினர். இந்திரனது பஞ்சதாருவினைப்போன்று வளமுடைய, சுரபுன்னை, வன்னி முதலான தருக்கள் நிறைந்த வனமானது தேவர்கள்

---

**பா.வே.** - 1. எட்டாவ தெக்கிய வராகத் . . . .

உள்ளத்தைக் கவர்ந்தது. தளிர்க்கும் இலை, பழுப்பு ஆகியவை இந்திரவில்லை ஒத்திருந்தன. பெருமல்லிகை மலர்கள் ஆலங்கட்டி சிதறுவதைப் போன்று காணப்பட்டன. மலர்களிலிருந்து சொரியும் தேன்தாரைகள் மழைத்தாரைகளை நிகர்த்தன. இவற்றால் அந்த வசந்தகாலத்தை மாரிக்காலம் என்று எண்ணி மயில்கள் தோகைவிரித்து ஆடத்தொடங்கின. வேனிற்காலமாதலின் செடி, கொடி, மரங்களாகிய அனைத்தும் தழைத்து விளங்கின. மலர்கள் மலர்ந்து மணம்பரப்பின. அன்னக்கூட்டங்கள் தடாகங்களில் மகிழ்ந்து விளையாடின.

சோமுகனானவன் தன் தேவியருடன் அந்தச் சோலையின்கண் வந்து தோன்றினான். அதேபோல மற்ற செல்வந்தர்களும் கன்னியரும் வந்து நிறைந்தனர். மகிழம், பாலை, பாதிரி, முல்லை, புன்னை, குரா, பிண்டி, பவழமல்லிகை, மா போன்றவை மலரைக் குவித்து அவர்களை மகிழ்வித்தன.

இவ்வாறு மகிழ்ந்திருந்த கன்னியர்கள் அங்கிருந்த தடாகத்தில் புனல் விளையாட்டயரத் தொடங்கினார்கள். அவர்களுள் பஞ்சவர்ணக்கிளிபோன்று விளங்கிய ஒருத்தி நீரில் முழுகி எழுந்து தாமரையில் வீற்றிருந்த திருமகளைப்போல காட்சிதந்து விளங்கினாள். வெள்ளை ஆடையோடு இருந்த மயிலினைப்போன்ற ஒரு கன்னியானவள் நீராடி கலைவாணியைப் போன்று காட்சி தந்தாள். பல மகளிரும் நீரினிடையே பாய்ந்து நீந்தியபோது அந்தத் தடாகமானது, பாற்கடலினைக் கடைந்த காலத்து ஏற்பட்ட அக்கடலில் நீரின் தன்மையைப் போலச் சுழன்று விளங்கியது. அப்புனல் விளையாட்டினால் கண்கள் செவ்வாம்பல்போலச் சிவந்தன. இதழ்கள் வெண்டாமரையினை ஒத்தன. கூந்தலானது மழை பொழியும் மேகத்தை நிகர்த்து விளங்கியது

புனலாடிய கன்னியர்களைத் தோழிமார் அலங்கரிக்க, அந்த அரச கன்னியர்கள் முத்து, மாணிக்கம், பூ போன்றவற்றால் அமைந்த பந்தல்களிலே வந்து அமர்ந்து, தங்கள் தங்கள் தலைவர்களால் கொடுக்கப்பெற்ற தேனினைப் பருகி மயங்கினார்கள்.

ஒரு தலைவன் தன் தலைவியைப் பார்த்து, எனது ஆவியே! உன்னை இம்மையிலே பிரிந்தால் எனக்கு ஒரு காரியமும் கை கூடாது என்றான். உடனே மறுமையில் என்னைப் பிரிந்தால் நீர் எண்ணிய எலலாம் ஒருங்கே எய்தப்பெறுவீரல்லவா? என்று கூறிச் சினந்தாள் தலைவி.

மகிழ்ச்சியால் திளைத்த ஒரு தலைவி. உமது திருமேனி முழுவதும் வீசும் வாசனையானது யாது என்று வினவினாள். அதற்குத்தலைவன் உன்னையும் அணைத்து, சணபகமரத்தின் மலரினைப் பறித்தபோது அதனின்று சிதறியதாதுக்களின் மணம் என்றான். உன்னையும் என்றதால் இன்னொருத்தியையும் அணைத்தனையோ என்று சீறினாள்.

தேனுண்டு மயங்கிய ஒருத்தி, தன் கையிலிருந்த கிண்ணத்தில் தன்சாயலினைக் கண்டு மயக்கமுற்று, நான் ஆடினால் நீ ஆடுவதும் நான் அசைந்தால் நீ அசைவதுமாக என் செயல்களையே மாறிச் செய்யும் பெண்ணே! நீ இக்கிண்ணத்தின்கண் ஒளிந்திருக்கின்றாய். என் முன்னே வா என்று பிதற்றத் தொடங்கினாள்.

அனிச்சமலரின் காம்பினை நீக்காது தன் தலைவியின் தலையிலே சூடுகிறான் ஒரு தலைவன். கொங்கையின் பாரத்தினால் துவண்டு உள்ள அவளது இடை, மேலும் அம்மலரின் சுமை சேர்ந்து ஒடிந்துபோகுமே என்று தோழியர் வருந்துகிறார்கள்.

இதே நிலையில் மல்லிகை மாலையைக் கூந்தலில் சூட்டுகிறான் ஒரு தலைவன். மயிற்பீலி மெல்லியதே ஆயினும் மிகுதியாக ஏற்றினால் வண்டியின் அச்சு சிதையும். அது போன்று இவளது இடையும் சிதையக்கூடும் என்கிறார்கள் தோழிமார். இவ்வாறு மகிழ்ச்சியடைந்த அனைவரும் சோமுகனை வாழ்த்தி நகரை அடைந்தார்கள்.

அப்போது இந்திரன், பிரமன் முதலாகிய தேவர்கள் சூழ அங்கு தோன்றிய வராக மூர்த்தியானவர் மகத நாட்டு மதிலும் மணிமேடைகளும் சக்கரவாள கிரியைப்போலத் தோன்றுவதைக்கண்டு, தன்திருவடிகளால் மதிலை உதைத்து அழித்து நாட்டின் அச்சோலையிலே வந்து தங்கினார். தெங்கு, கரும்பு, அசோகு, தேக்கு, இலவு போன்ற பல்வகைத் தருக்கள் நிறைந்த அச்சோலையிலிருந்து பெருகிவரும் தேனாறானது நீர்நிலைகளை எல்லாம் நிரப்பியது. தென்றல் உலாவும் அச்சோலையைக் கண்ணுற்ற வராக மூர்த்தியானவர் மேகத்தைப் போலக் கர்ச்சித்து அம்மரங்களை எல்லாம் அழித்தார். அங்கு வாழ்ந்த பறவைகள் எல்லாம் பறந்து ஓடின. அதனால் சூரிய ஒளி மறைந்து இருள் சூழ்ந்தது. அன்னம், குயில் போன்றவை மிகுதியான சத்தத்தோடு ஒலிக்கத்தொடங்கின. காவலாளர்கள் திகைத்து வராகமூர்த்தியைக்கண்டு வாளாலும் வில்லாலும் தாக்கத்தொடங்கினார்கள். வராகமூர்த்தி தன் உடலைச் சிலிர்க்க அவ் ஆயுதங்கள் எல்லாம் சிதறித்தூளாயின. அது கண்டு அஞ்சிய காவலர் சோமுகனாகிய தம் அரசனிடத்திலே சென்று வராகத்தின் அட்டூழியச் செயலை எல்லாம் எடுத்துக்கூறினார்கள். அது கேட்டுச் சினந்து சிரித்த சோமுகனாகிய மன்னன் தன் படைகளை ஏவி அப்பன்றியைக் கொன்று வருமாறு கட்டளையிட்டான்.

(எக்கியவராகத் தோற்றம்)

219. திருமுகமண் டலம்யூகத் தம்ப மாகுந்
திருநாசிக் கிருதுகளாய்த் திகழா நிற்கு
மருராச சூயமச்வ மேதங் கண்ணாம்
வருமூன்றென் னக்கினியும் வளர்நா வாகுந்
தருமவசோத் தாரைவாய பேய மிரண்டுந்
[1]தணிந்ததொடை வாலாகத் தரியா நிற்கும்
பருமிடுப்புச் சோமமதி ராத்திர மாகும்
பவுண்டரீக மெனுமியாகம் வடிவப் பண்பாம்.

எ-து. அப்படிப் பிதாமகன் முதலாகிய தேவர்கூட்டங்களுக்கு அனுக்கிரகித்த நாராயண மூர்த்தியானவர், திருப்பாற் கடலின் அனந்த சயனத்தை நீங்கினவராய், எக்கிய வராகத் திருவவதாரத் தோற்றமெப்படி எடுத்தாரென்றால், திருமுகமண்டலமானது சமஸ்தயாக நடுப்பிரதேசத்தில் விளங்கா நின்ற யூகத்தம்பமாகவும், பெருமை பொருந்திய நாசியானது யாகாதிக் கிருத்துக்கள் பதினெட்டாகவும், இவ்வுலகத்தின்கண் மருவியிரா நின்ற ராசசூயம், அசுவமேதம் ஆகிய இரண்டும் திருக்கண்களாகவும், ஆகவனீயம், காருகபத்தியம், தெக்கணாக்கினி என்கின்ற முத்தழலும் நாவாகவும், தருமத்தினையுடைய வசோத்தாரை வாயபேயம் இரண்டும் இரண்டு தொடைகளும் வாலுமாகிப் பிரகாசிக்கவும், பருத்த இடையானது சோம, மதிராத்திரமாகிய இரண்டுமாய்த் தோன்றவும், பவுண்டரீகமானது ரூபத்தினது திருவழகாய்த் தோன்றி விளங்கிற்று அந்த எக்கிய வராகமான தென்றவாறு. (1)

பா.வே. - 1 தணிந்ததுடை.

## Ekkiyavarākat tōr̲r̲am

*tirumukamaṇ ṭalamyūkat tampa mākun*
*tirunācik kirutukaḷāyt tikaḷa nir̲ku*
*maruráca cūyamacva mētañ kaṇṇām*
*varumūn̲ren̲ n̲akkin̲iyum vaḷarnā vākun*
*tarumavacōt táraivāya pēya miranṭun*
*tan̲intatoṭai vālākat tariyā nir̲kum*
*parumiṭuppuc cōmamati rāttira mākum*
*pavuṇṭarīka men̲umiyākam vaṭivap paṇpām.*

## XII. Manifestation as the Sacrificial Boar

### The Sacrificial Boar

His visage was the sacrificial pillar;
His nostrils were the sacrificial ghee;
His eyes were *Rācacūyam* and *Acuvamētam*;
His tongues were the three fires;[1]
His thighs and tail were *Acōttārai* and *Vāyapēyam*;
His immense waist was *Cōmam* and *Atirāttiram*
Sacrifices; the image of this Boar
Is known as the *Pavuṇṭarīkam.*

---

1. Ahavaniya, Garhapatya and Dakshinagni

(வராக உறுப்புகள்)

220. விசுவசித்துக் கோமேத மத்த மாகும்
விளங்கியநான் மறைகள்திரு வடிக ளாகும்
மத்திமுத னரமேதஞ் சத்திர யாகம்
[1]அடிவயிற்றி னுதரமுத லாகத் தோன்றும்
அத்துவரங் கெசமேதஞ் சத்தியோ தீக்கை
புத்திரியா மம்முழங்கா லாக நிற்கும்
சத்துவமா யேசுரமோர் நித்திய தீக்கை
சனித்திடுமக் கினிட்டோமங் கண்ட மாகும்.

எ-து. விசுவசித்து, கோமேதமாகிய இரண்டும் கரங்களாகவும், தர்மார்த்த காமமோட்சங்களைக் கூறுகின்ற நான்கு வேதங்களும் திருவடிகளாகவும், என்பு முதலாகிய தெல்லாம் புருடமேதமாகவும், சத்திர யாகமானது [2]அடிவயிற்றினுருவமாய்த் தோன்றவும், அத்துவரமுங் கெசமேதமும் சத்தியோ தீக்கையும் [3]புத்திரியாமமுமாகிய இந்நான்கும் மணிமுழங்காலாகத் தோன்றவும், சாந்த தத்துவத்தையுடைய மாயேசுரமும் நித்தியதீக்கையும் அக்கினிட்டோமமுமாகிய இம் மூன்றும் கண்டமாய்ப் பிரகாசிக்கத் தககதாக எக்கியவராகத திருவவதாரம் செய்தருளினா ரென்றவாறு. (2)

(219, 220) எக்கியவராகம் - யக்ஞவராகம் : யாகங்களாகிய உறுப்புகளைப பெறறு வடிவெடுத்த வராகம்.

**உரை** - யாகாதிக்கிரதுக்கள் பதினெட்டு.

1 அக்கினிஷ்டோமம் - அக்கினி + ஸ்தோம - ஸ்தோம - இருக்குவேத மந்திரம இது வசந்தகாலத்தில ஐந்து நாட்களில் செய்துமுடிப்பது

2 அசுவமேதம் - குதிரையைக் கொண்டு செய்யப்படும் யாகம. அக்குதிரைக்கு முதலில் பட்டம கட்டுதல் முதலிய சிறப்புகளைச் செய்து திக்குவிசயம் செய்யவிடுவர் வென்று வந்த பிறகே அது யாகத்திற்கு உரியதாகிறது இது அரசர் மட்டுமே செய்யக்கூடிய யாகம்

3. அதிராத்திரம் - சோமரசம் வைக்கும் பாத்திரத்துள் ஒன்று அதிராத்திரம் எனப்படும இதில் பெய்த ரசத்தை முதலில் எடுத்துப் பயன்படுத்தி இப்பாத்திரத்திற்கு முதன்மை கொடுப்பதால் இப்பெயர் பெறுகிறது.

4. இராசசூயம் - சூயம் - பிழிதல், சாறுபிழிதல், சோமரசம் பிழிந்து அதைக்கொண்டு செய்யப்படுவது. அரசு முடிபெற்ற பிறகு தனி ஒரு சக்கரவர்த்தியாகத் திகழ விரும்பிச் செய்யப்படும் யாகம். அரசன் மட்டுமே செய்வது.

5 கெசமேதம் - அசுவமேதம போன்றதே. யானையைக் கொண்டு செய்யப்படுவது.

6. கோமேதம் - கோ - பசு. மேதம் - யாகம், பசுவைக் கொண்டு செய்யப்படுவது, அசுவமேதம், கெசமேதம் போன்றது.

7 சத்தியோகதீட்சை - சத்தியோதீட்சை - சத்தியக - உடனே: தீடசை - ஒழுங்கு - காப்புகட்டிக் கட்டுப்பாட்டினைக் கடைபிடித்தல். செய்யாதன செய்தல் கூடாது என கட்டுப்பாடு கொள்ளுதல். யாகம தொடங்குமுன் செய்யப்படும் ஒரு சடங்கு. இது யாகத்தின் ஒரு பகுதி

8 சத்திரயாகம் - அரசன் செய்வது போல அல்லாமல் - எல்லோருமே சேர்ந்து செய்வது எல்லோரும் இதற்கு எஜமானர் ஆவா. யாருக்கும் பணம் கொடுப்பது இல்லை. எல்லோருக்கும் யாகத்தின் பயன் கிடைக்கும் ஆண்டுக்கணக்காகச் செய்யப்படுவது.

9 சோமயாகம் - சோமம் ஒருவகைச் கொடி இலை இல்லாதது. கருமை நிறமுடையது சோமலதா என்பது அதன்பெயர். இது இமயமலையிலிருப்பதாகக் காளிதாசர் கூறுவார். சிந்துதேசத்தில் கிடைப்பதாகவும் கூறுவர். இப்போது கிடைக்காததால் சீந்தில் கொடியைப் பயன்படுத்துகின்றனர். சீந்தில் கொடியைப பயன்படுத்தலாம் என்பது யசுர் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. சீந்திலின் பெயர் பூதிகை என்பது. சுவர்க்கம் விரும்பியும், பலவகைச் சக்திகளைப் பெற விரும்பியும் செய்யப்படுவது சோமயாகம்.

10 நரமேதம் - அசுவமேதம், கெசமேதம போன்று மனிதனை முன்னிலைப்படுத்திச் செய்யப்படும் யாகம திகவிசயம் செயது வெற்றிபெறற மனிதனைக் கொண்டு செய்யப்படுவது.

11 நித்தியதீக்கை - அன்றாட ஒழுககங்கள் - நல்லொழுக்கங்களாக மேற்கொள்ளும் யாகமுறை.

12 பவுண்டரீகம் - புண்டரீகம - சோமயாகப்பிரிவில் ஒன்று தாமரையை முதன்மையாகக் கொண்டு செயயபபடுவது

13 புத்திரியாமம - புத்திரயாமம் - புத்திரகாமேஷ்டியாகம் - இஷ்டி - யாகத்தில் ஒருவகை. சிறிய அளவினது பெரிய அளவினை உடையது யாகம் புத்திரப்பேறு விரும்பி செய்யப்படும் யாகம்

14 மவுததிரபேதம - சோமயாகவகைகளுள் ஒன்று முத்தினை முதன்மையாக்கிச் செய்வது.

15 மாயேசுரம - மாகேஸ்வரம் - மகேசுவரரின் அருளும் வரமும் வேண்டி செய்யப்படும் யாகம். சத்துவமாயேசுரம எனவும் கூறுவர் சத்துவத் தன்மையுடைய யாகம்.

16 வசோத்தாரை - வசு - செல்வம். பலவகைச் செல்வங்களையும் பெறுவதற்காகப் பசுநெய்யினை ஆறறொழுக்காக (தாரையாக)ச் சொரிந்து செயயப்படும் யாகம. ஒவ்வொரு யாகத்தின் முடிவிலும் செய்யப்படும் முடிவுச சடங்காகிய யாகம்.

17. வாயபேயம் - வாஜபேயம் - வாஜம் - கள் கள்ளைப்பெய்து செய்யப்படும் யாகம். இப்போது பால் பயன்படுத்தப்பெறுகிறது இதுவும் சுவாக்கத்தை விரும்பிச் செய்யப்படுவது

18 விசுவசிதது - விசுவம - எல்லாப்பொருளும் - சித்து - ஜித்து - ஜெயித்தல், வெற்றிபெறுதல். எலலாவற்றிறகும் ஈற்றில் அரசன் தன் உடைமை முழுவதையும் தானமாகக் கொடுத்துச செய்யப்படும் யாகம் இந்த யாகத்தை இரகு என்னும் அரசன் செய்ததாக இரகுவம்சம் கூறுகிறது.

மூன்றென்னக்கினி - மூன்றுவகையான தீ, அவை: ஆகவனீயம், காருகபத்தியம், தெக்கணாக்கினி என்பன. யாகத்திற்கு அடிப்படையான ஓம வகைகள். திருமணமாகி ஒரு புதல்வனைப் பெற்றவர் செய்யக்கூடிய ஓமவகை. மூன்றையும் பெற்றவர்கள் யாகங்களைச் செய்ய முடியும். இவை ஆதானம் என்னும் சடங்கால் பெறப்படுபவை. மூவருணத்தாருக்கும் உரியவை

**யாகங்கள்** - 5 வகை : 1 வேதம் ஓதுதல் **பிரமயாகம்** 2. ஓமம் வளர்த்தல் **தெய்வயாகம்** 3. பலியீதல் **பூதயாகம்** 4. தர்ப்பணம் செய்தல் **பிதுர்யாகம்** 5. இரப்போர்க்களித்தல் **மனுஷயாகம்** இவை அனைத்தும் அக்கினிகாரியங்களாகும்.

**பா.வே.** - 1. அடிவயத்தினுதர. 2. அபுத்திரியாய்த்தோன்றவும். 3 அபுத்திரியாமமு.

## Varāka uṟuppukaḷ

*vicuvacittuk kōmēta matta mākum*
*viḷaṅkiyanāṉ maṟaikaḷtiru vaṭika ḷākum*
*mattimuta ṉaramētañ cattira yākam*
*aṭivayiṟṟi ṉutaramuta lākat tōṉṟum*
*attuvaraṅ kecamētañ cattiyō tīkkai*
*puttiriyā mammuḷaṅkā lāka niṟkum*
*cattuvamā yēcuramōr nittiya tīkkai*
*caṉittiṭumak kiṉiṭṭōmaṅ kaṇṭa mākum.*

## The Limbs of the Boar

The two hands were Vicuvacittu and Kōmētakam;
The feet were the famous Vēdas four;
The bones were Puruṣamēta;
The lower trunk was Cattira sacrifice;
The legs beneath the knees were
Attuvaram, Kecamētam, Cattiyōtīkkai and Puttiriyāmam
The throat was the Cattuva māyēcura,
Nittiyatīkkai and Akkiṉiṭṭōma.

**(வராகமூர்த்தி எழுந்தருளுதல்)**

**221.** **நித்தியமுறு [1]பூரணாங் கிசைவி ளங்க**
**நிமலைதிருக் கவுத்துமா மணிது லங்க**
**முத்திபுகழ் மிருதிகள்மா சடங்கந் தாரை**
**முன்னிரவி மதிதிருவா பரண மாக**

எத்திசையு மகன்றதிரு வுருவ மாக
வெக்கிய வராகதிரு நாம மாகப்
பத்திமல ரடிபணிந்தங் கமரர் போற்றப்
பரமனெழுந் தருளினன்பாற் கடல்விட் டன்றே.

எ-து [2]இப்படி யெண்ணுகைக்கு அசக்கியமாகிய அனந்த கலியாண குணங்களையுடைய நித்தியமாய பரிபூரணாங்கிசை விளங்கத்தக்கதாகிய வராகமூர்த்தியானவர், நிமலையாகிய ஸ்ரீமகாலட்சுமி தேவியும், பிரகாசத்தினையுடைய கவுத்துவாபரணமும் கோடி சூரியனது கிரணசமூகம் போல் பிரகாசிக்கவும், முத்தியாகிய காரணங்களையெல்லாம் விளக்கிக் கூறுகின்ற மிருதிகளும், சடங்கமாகிய தர்க்க, வியாகரண, சோதிட, நிருத்த, சந்தோபிசித, நிகண்டு முதலாகிய ஆறு சாத்திரங்களும், தாரகா கணங்களாகிய நட்சத்திரங்களும், சூரிய சந்திராதிகளும் திருவாபரணமாகவும், திக்குத் திகாந்தங்களெல்லாம் அகன்ற பரிபூரண சொரூபமாய் அந்தரியாமியாய், எள்ளுக்குள் எண்ணெயைப்போல எங்கும் நிறைநதவராகிய எக்கியவராகத்திருநாமதேயத்தைக் கொண்டு பக்தியினாலே மந்தார, பாரிசாதங்களைப் பாதத்தாமரையிற் சொரிந்து, தேவாதிகளானவர்கள் போற்றி வழிபடப் பரமனானவர் பாற்கடலைவிட்டு எழுந்தருளினா ரென்றவாறு. (3)

நித்தியமுறும - என்றும் நிலைபெற்றுள்ள பூரணாங்கிசை - பூரணாம்சம் - பூரண+அம்சம் - குறைவிலலாத தன்மை நிமலை - நிமலா - குறறமறறவள். இலக்குமி. மிருதி - ஸ்மிருதி -மனுஸ்மிருதி போன்ற நூல்கள. அறம். அறமலலாதனவற்றை விளக்கும் நூல்கள். சடங்கம் - சட்+அஙகம் (ஷட+அங்கம்) ஆறு அங்கங்கள அவை சநதோபிசிதம் சிட்சா சோதிடம், நிகண்டு, நிருத்தம், வியாகரணம் என்பன. தாரை - விணமீன் தாரகை - தாரகா. இரவிமதி - இரவி - சூரியன், மதி - சந்திரன்

**உரை** - அசககியம - சக்கியம் - முடியும்; அசக்கியம் - முடியாது. நினைத்துப்பார்க்கவும் முடியாதது. தாககம் - இது ஆறுவகை சாத்திரங்களில் ஒன்று ஆறு அங்கங்களிலே ஒன்று ஆகாது. ஆறு சாத்திரங்கள சாங்கியம், தாக்கம், மீமாம்சம, யோகம், வியாகரணம, வேதாந்தம் என்பனவாகும் **ஆறு அங்கங்கள்** . 1 சந்தோபிசிதம - சந்தோவிசிதி - சந்தஸ் - யாப்பிலக்கணம். பிங்களமுனிவரால் இயற்றப்பட்டது. 2 சிட்சா - வேதஉச்சாடணம, மாத்திரைபேதம் ஆகியவற்றை விளக்குவது. பாணினியால் செய்யப்பட்டது 3 சோதிடம் - சோதிஸ் - பிரகாசம் - நட்சத்திரங்கள், நாள், மாதம், ருது, ஆண்டு இவற்றைப்பற்றிய பகுப்பு முறைகளைக கூறும் நூல. வராகமிகிரர் செய்த நூல. 4 நிகண்டு - அகராதி ஆஸவலாயனர் முதலான ரிஷிகள் செய்தது 5 நிருத்தம் - நிருக்தம் - மூலகாரணத்தோடு கூடிய விளககங்களைக் கூறும் நூல (பங்கஜம் - பஙகம - சேறு, ஜ-தோன்றுதல்) யாங்கமுனிவர் இயற்றிய நூல். 6 வியாகரணம - இலக்கணம பாணினி செய்தது. அந்தரியாமி - உள் உறைபவன்.

பா.வே. - 1 பூரணாம்சம 2. இப்படி தனதிச்சையால் தேவர்களிடுக்கண் களையத் திருப்பாற்கடலிலே திருவவதாரஞ் செயதருளிதா யெண்ணுகைக் கசக்கியமாகிய . . .

## Varākamūrtti eḻuntaruḷutal

*nittiyamuṟu pūraṇāṉ kicaivi ḷaṅka*
*nimalaitiruk kavuttumā maṇitu laṅka*
*muttipukaḻ mirutikaḷmā caṭaṅkan tārai*
*muṉṉiravi matitiruvā paraṇa māka*
*etticaiyu makaṉṟatiru vuruva māka*
*vekkiya varākatiru nāma mākap*
*pattimala raṭipaṇintaṅ kamarar pōṟṟap*
*paramaṉeḻun taruḷiṉaṉpāṟ kaṭalviṭ ṭaṉṟē.*

## The Boar's Advance

Showering an eternal brilliance,
Ornamented with the pure Lakṣmi
And Kavuttuvā gem, the Smritis
That speak of ways to Realisation,
[2]The six-fold science of the ancients
The stars, the sun and the moon,
The Lord left the Milky Ocean
As an image that waxed through the space.
The gods worshipped him with devotion.

(சந்திரோதயம்)

222. கடல்க டைந்திடு காலையி னிலக்குமி தோன்ற
வடல்ப யின்றொளிர் முனமென வார்திரை வருணன்
படருந் தேவியோ டாடுபூப் பந்தென வமுதக்
குடம தாமெனக் குணதிசைக் குமுதன்வந் துதித்தான்.

எ–து. திருப்பாற் கடலினை நாராயண மூர்த்தியானவர் மந்தரகிரி யென்னும் மத்தினாலே கடைந்த ஞான்று, வலியினது பிரகாசமானது ஒளிராநின்ற இலக்குமியார் திருவவதாரம் செய்ய, அவள் திருமுகமண்டலம் பிறையைப் போலவும், நீண்ட திரையினையுடைய வருணராசனானவன் தன்னைப்பற்றி வருகின்ற தேவியாருடனே சரச

2. Chandas, Siksha, Jyotisha, Nighantu, Nirukta and Vyakarana.

சல்லாபக் கிரீடை விளையாட்டாடும் போது, ஒருவருக்கொருவர் எறிகின்ற புட்பப் பந்தினைப் போலவும், அமுத கும்பம் போலவும், குமுதத்துக்கு நாயகனாகிய பூரணச் சந்திரனானவன் அமுதத்தைப் பொழிகின்ற கிரணங்களை விரித்துக் கிழக்குத்திசைக் கடன் முகட்டில் உதயம் செய்தா னென்றவாறு. (4)

'திருப்பாறகடலை நாராயணன் கடைந்தார்' என்பதும், 'திருமுக மண்டலம் பிறையைப் போலவும்' என்பதும் பொருந்தா உரைகள்.

அடல - போர், வெற்றி. திரை - அலை. அமுதக்குடம் - தேவாமிழ்தம் உள்ளகுடம். குமுதன் - குமுதநாயகன், சந்திரன். குமுதம் - ஆம்பல்மலர்; சந்திரனைக் கண்டால் மலர்வது.

உரை - ஞான்று - பொழுது பிறை - பிறைச்சந்திரன்.

## Cantirōtayam

*kaṭalka ṭaintiṭu kālaiyi ṉilakkumi tōṉra*
*vaṭalpa yiṉroḷir muṉameṉa vārtirai varuṇaṉ*
*pataruṉ tēviyō ṭātupūp panteṉa vamutak*
*kuṭama tāmeṉak kuṇaticaik kumutaṉvan tutittāṉ.*

## The Moonrise

Like the glowing face of Lakṣmi
Who appeared when the sea was churned,
Like the ball of flowers used by Varuṇa
And his consort when at play,
The moon appeared above the eastern sea
Verily like a pitcher of nectar.

### (சந்திரனின் தோற்றம்)

223. மகர வேலையின் முகட்டினின் மறுவில்வெண் கும்பச்
சிகர மீதினிற் கமுகிளம் பாளைகள் சிறந்து
சுகம தாயலர்ந் தாரெனக் களங்கம் துடரப்
புகரி லாக்க'_ற் பொங்குபுற் புதமெனுந் திங்கள்.

எ-து மகர மீன்களை அலைகளினாற் சுருட்டி எறிகின்ற கிழக்குத்திசைக் கடலமுகட்டிலே குற்றமற்ற வெணகும்பச் சிகரமாகிய வாயினிடத்திலே, அதிக சுகத்தைத் தருகின்ற கமுகமரம தனது பாளைகளை விரித்தொளிரும் தன்மையினைப் போல களஙகமானது தொடாந்து விரியவும், குற்றமற்ற கடலானது தத்தமெல்லையினைக் கடந்து

மகாசலப் பிரளயமாய், வடமேரு கிரியும் இறுதலையுடைய ஞான்று அக்கடலினது நடுப்பிரதேசத்தில் எழுந்த நீர்க்குமிழியைப் போன்று விளங்கியது திங்களாகிய பூரணச்சந்திர னென்றவாறு. (5)

மகரவேலை - மகரமீனகளை உடைய கடல் முகடு - உச்சி. மறு - குற்றம். துடர - தொடர புகர் - குற்றம். புற்புதம் - நீர்க்குமிழி

## Cantiranin tōrram

*makara vēlaiyin mukattinin maruvilven kumpac*
*cikara mītinir kamukilam pālaikaḷ cirantu*
*cukama tāyalam tārenak kaḷaṅkam tuṭarap*
*pukari lākkatar poṅkupur putamenun tiṅkaḷ.*

## The Moon

At the edge of the fish-rich sea,
At the mouth of the top, a white pitcher,
Like the betel-trees flush with spathes,
The stain following it, the moon arose
Making the sea waves rise as well.

(நட்சத்திரக் கூட்டம்)

224. அலர்தி ரைக்கடன் முகட்டினி னார்ந்தொளிர் திங்கள்
பலவு டுக்கணாற் றிசையினும் பரவியே யமர்தல்
நிலவு மாமகிழ் பூத்தல்போல் ஒளியினை நிறுவக்
குலவு மாமணப் பொரியெனக் குறுகிய தன்றே.

எ-து. அலர்ந்த வெண்டிரையினையுடைய கிழக்குத்திசைக் கடல் முகட்டிலே அமுத சமூகங்கள் நிறைந்தொளிராநின்ற சந்திரனைப் பலவுடுக்களாகிய தாரகா கணங்கள் நாற்றிசையிடத்தும் பரவிச் சூழந்து விளங்குதல் எத்தன்மைத்தெனின், மகிழ விருட்சம் நான்கு திக்கினும் நின்று புட்பங்களை அலரும் தன்மையினைப் போல ஒளிகளைப் பரப்பவும், சந்திர பகவானது மணத்திலே தேவாதிகள் சொரிகின்ற பொரியினைப் போலவும் ஆகாயத்தில் பிரகாசித் தொளிர்ந்தன வென்றவாறு. (6)

உடுக்கணாற்றிசையினும் - உடுக்கள் + நாறறிசையினும் ; உடு - நட்சததிரம் மாமகிழ் - சிறந்த மகிழமரம். மணப்பொரி - திருமணததில் சொரிகின்ற நெற்பொரி.

**உரை** - வெண்டிரை - நுரைமிகுதலால் வெண்ணிறமான அலை. தாரகாகணம் - தாரகைக்கூட்டம்; தாரகை - நட்சத்திரம்.

## Naṭcattirak kūṭṭam

*alarti raikkataṉ mukaṭṭiṉi ṉārntoḷir tiṅkaḷ*
*palavu ṭukkaṇāṟ ṟicaiyiṉum paraviyē yamartal*
*nilavu māmakiḻ pūttalpōl oḷiyiṉai niṟuvak*
*kulavu māmaṇap poriyeṉak kuṟukiya taṉṟē.*

## The Stars

At the edge of the white-waved sea,
The moon was surrounded by stars
That spread all over the sky, verily
Like the *makiḻa* tree in blossom.
Light was everywhere as if the gods
Were pouring puffed rice
To celebrate the moon's wedding.

**(இயற்கைத் தோற்றம்)**

225. **குமுத மாமல ரலர்ந்தன குவிந்தன கஞ்சம்**
**அமுத மாமெனத் தேறலை அருந்திய தளிகள்**
**சுமுக காமர மிசைக்குத னின்றுணைத் தூதாய்ச்**
**சமுக மாவர லாற்றினைச் சாற்றல்போல் தழைக்கும்.**

எ-து. இத்தன்மையனவாய கடல் முகட்டிலே பூரணச்சந்திரோதயமான மாத்திரத்தில் செவ்வல்லி மலர்களானவை மடுக்களினும் [1]ஓடைகளினும் தடாக பந்திகளிலும் மலர்ந்தன. தாமரைக் கமல சமூகங்களெல்லாம் முகுளிதமாய்க் குவிந்தன குமுதத்தின் கண்ணமுதத்தைப் போல தேன்களை உண்டு களிக்காநின்ற வண்டினங்கள் திவ்வியமாகிய காமர இசைப்பாட்டினைப் பாடுதல் எத்தன்மைத்தெனின், நின் கணவனுக்கியான்றூதன்; அவருன்னைப் பிரிந்த பிரிவாற்றாதவராய்க் கடல் முகட்டில் தோன்றினார் ; அவர் சமூக வரலாற்றினை உனக்கறிவிக்க வந்தேனென்பதுபோல் அந்த மலரின்கட் டழைத்திருக்கு மென்றவாறு (7)

கஞ்சம் - தாமரை தேறல் - தேன். அளிகள் - வண்டுகள். சுமுகம் - நல்ல, இனிய. காமரம்- இசை துணை - துணைவன, கணவன் தழைத்தல - வாழ்ந்திருத்தல

**உரை** - முகுளிதம் - சுருங்கியது, மொட்டு அவிழாதது. முகுளம் - மொட்டு.

பா.வே. - 1. மேடைகளிலும்.

## Iyaṟkait tōṟṟam

*kumuta māmala ralarntaṉa kuvintaṉa kañcam*
*amuta māmeṉat tēṟalai aruntiya taḷikaḷ*
*cumuka kāmara micaikkuta ṉiṉṟuṉait tūtāyc*
*camuka māvara lāṟṟiṉaic cāṟṟalpōl taḻaikkum.*

## Nature

The evening lilies blossomed;
The lotuses folded up. The bees
That drank nectarean honey
Buzzed Kāmara tunes. They seemed to say:
"We are ambassadors come to inform
That your husband has risen on the sea."

(வராகமூர்த்தி கடலைவிட்டு நீங்குதல்)

226. வானுற நிமிர்ந்தமக மேருவென நின்றுதிரு
மாமுடி விளங்க மறைபோற்
பானுவினு தித்தகதிர் போலொளி விளங்கபுகழ்
பாற்கட லெனப்பெரு கும்வாய்
சேணினில் விளங்குபிறை போலொளி மிகுந்தசெயல்
கோடுசெறி வெண்ப தமுறுங்
கோனினடி யிற்பெருகு வானதியெ னப்புகழு
கோலகடல் விட்ட னனரோ.

எ-து அப்படித் திருவவதாரம் செய்தருளிய எக்கியவராகமூர்த்தியானவர் ஆகாயமளவும் உயர்ந்த மகமேருவினைப் போன்ற [1]ஒப்பற்ற திருமேனிபிரகாசிக்க, அவருடைய திருமுடிகளிலே இரத்தினக் கிரீடமானது, நான்கு வேதங்களைப் போலப் பிரகாசிக்கச், சூரியனிடத்து விரியாநின்ற கிரணசமூகங்களைப் போலச் சரீரப் பிரகாசம், திக்குதிகாந்தங்களெல்லாம் பிரதிபலிக்கத் திருப்பாற் கடலைப் போன்று அகன்றிராநின்ற திருவாயினையும், அந்த வாயினிடத்தில் பொருந்திய வக்கிர தந்தங்களானவை ஆகாயக்

கிழக்கு முகட்டி னுதிக்காநின்ற மூன்றாம் பிறையைப் போலப் [2]பிரதிபலிக்க, வெண்மையனவாகிய குளப்படியினையும், நான்கு பாதாரவிந்தத்தினையுமுடைய அந்த வராகமூர்த்தியார் [3]திருவடியில் உற்பவித்துப் பெருகாநின்ற தேவகங்கையினைப் போலப் பவித்திரமாகிய [4]க்ஷீராப்தியை விட்டு நீங்கினார் வராகமூர்த்தி என்றவாறு. (8)

மறை - வேதம். பானு - சூரியன். சேண் - ஆகாயம். கோடு - விலங்கின் தந்தம். கோன் - அரசன், வராகமூர்த்தி. வானதி - வான் + நதி - ஆகாயகங்கை. கோலகடல் - வீற்றிருந்த கடல், திருப்பாற்கடல.

**உரை** - வக்கிரநந்தம் - வளைந்தபல், சிங்கப்பல், குளப்படி - குளம்பு. பாதாரவிந்தம் - பாதம் + அரவிந்தம் அரவிந்தம் - தாமரை. க்ஷீராத்திரி - இது சுவடியில் உள்ள தொடர் க்ஷீரம் - பால் அத்திரி - மலை. பால் மலை என்பது பொருந்தாது. பாற்கடல என்பதே பொருந்தும் அப்தி - அப்பதி - கடல்.

**பா.வே.** - 1 பெரியவாக்கையினையுடைய அந்தவரத வராகமூர்த்தியானவர் அந்தப் பாறகடலினைவிட்டு நின்று நவரத்தின வபரஞ்சிப் பொன்மயமாயமைந்த திருமாமகுடமானது. 2 பிரவேசிக்க. 3 பாதத்திற் பிறந்து 4 திருப்பாற் கடலைவிட்டு நீங்கினா ரென்றவாறு

**சு.சொல்** - 4 க்ஷீராத்திரி

## Varākamūrtti kaṭalaiviṭṭu nīṅkutal

*van̲uṟa nimirntamaka mēruven̲a nin̲ṟutiru*
*māmuṭi viḷaṅka maṟaipōṟ*
*pān̲uvin̲u tittakatir pōloḷi viḷaṅkapukaḻ*
*pāṟkaṭa len̲apperu kumvāy*
*cēṇin̲il viḷaṅkupiṟai pōloḷi mikuntaceyal*
*kōṭuceṟi veṇpa tamuruṅ*
*kōn̲in̲aṭi yiṟperuku vān̲atiye n̲appukaḻu*
*kōlakaṭal viṭṭa n̲an̲arō.*

## Varaha Leaves the Sea

Rising up like the *Mēru* Mountain
Reaching the skies, the crown a-glow
Like the Vēdas, his image spreading light
Everywhere like the rays of the sun,
The mouth vast like the milky sea,

The teeth brilliant like the moon
High above in the sky, with white feet,
The sacrificial Boar left the milky sea
Which was like kanka flowing from his feet.

(வராகமூர்த்தி மகதம் அடைதல்)

227. அந்தர மதிர்ந்தபுகழ் துந்துபி முழங்கமல
ரன்புட னிறைத்து வழகாஞ்
சுந்தர வராகமதைக் கண்டுபனி நீர்சுரர்
துளிக்கசுரு தித்தொ டரவே
சந்திர குளிர்ந்தகிர ணந்தனின் விளங்கவழி
கொண்டுவெதிர் சார்ந்து பரவ
வந்துமரு தத்திணைகள் தந்தனர்பி னாயிர
மெயிற்றிகழு மாந கரின்வாய்.

எ-து. அந்தரமாகிய ஆகாய மார்க்கத்திலே தேவதுந்துபி ஆயிரமாயிரம் முழங்க, மந்தார, பாரிசாத, கற்பகவிருட்சம் முதலாகிய பஞ்சதாருவின் அலர்ந்து மணங்கமழாநின்ற புட்பங்களைத் தூவி, தேவாதிகள் வழிபட்டுச் சுந்தர ரூபமாகிய வராகத்தை அணித்தாய்க் கண்டு, பனிநீர்களைத் துளித்தார்கள் நான்கு வேதங்களும் தொடர்ந்துவரச் சந்திரனின் குளிர்ந்த கிரணத்தினுடைய விளக்கத்தினாலே வழிகளைக் காட்ட, அந்த வழிகளையெல்லாம் கடந்து வநது அம்மலையினைச் சூழ்ந்த மருதத்திணைகளைக் கடந்து, வராகமூர்ததியானவர் [1]ஆயிரமாயிரம் பிரகாரமாய்ச் சூழ்ந்திராநின்ற சொர்ண மதிறபுறமானது விளங்கிய [2]மகததேசாதிபதி வதிகின்ற நகரத்தைக கண்ணுற்றா ரெனறவாறு (9)

அந்தரம் - ஆகாயம துந்துபி - துந்துமி - பேரிகை சுருதி - வேதம எயில் - மதில

உரை - பஞ்சதாரு - தேவலோக தருக்கள ஐந்து அவை - சந்தனம. தேவதாரம. கறபகம். மந்தாரம பாரிசாதம என்பன அணித்தாய் - அருகில சொர்ணமதில் - பொனமதில

பா.வே. - 1 ஆயிரம் பிரகாசமாய். 2 மகாதேசாதிபதி

## Varākamūrtti makatam aṭaital

*antara matırntapukal̲ tuntupı mul̲aṅkamala*
*ran̲puṭa n̲ir̲aittu val̲akāñ*
*cuntara varākamataik kaṇṭupan̲i nīrcurar*
*tuḷikkacuru tıtto ṭaravē*

*cantira kuḷirntakira ṇantaṉiṉ viḷaṅkavaḷi*
*koṇṭuvetir cārntu parava*
*vantumaru tattiṇaikaḷ tantaṉarpi ṉāyira*
*meyiṟṟikaḻu māna kariṉvāy.*

## Varāka Reaches Makata

As the drums resounded in the skies,
The gods lovingly showered flowers
Upon the handsome Varāka and sprinkled dew.
Followed by the Vēdas, the path illumed
By the cool rays of the moon,
He passed through the *marutam* land
And reached the Makata city
Encircled by a thousand forts.

(மகத நாடு)

228. பொன்னக ரெனத்திகழு மன்னுமதில் பொற்கொடி
பொருந்தியசை கின்ற புகழ்சேர்
மன்னவர் வதிந்தநவ ரத்தினமணி மேடைமக
மேருவென வேதி கழுமால்
வன்னமுலை சொர்ணஇள நீரென வதிந்தவர்கள்
யாழினை மிழற்ற மகிழா
அன்னநடை மேனகை யரம்பையர்க ளாரமுத
மென்னவக மாம கிழ்வரால்.

எ-து பொன்னகராகிய இந்திரபுரியைப் போலே ஒத்த எழிலினையுடைய நிலை பெற்ற மதிலிடத்தில், கட்டிய துசபடங்களாகிய பொற்கொடிகளானவை அசைந்தாடாநின்ற புகழ்ச்சியினை உடைய மகததேசத்தில் வாழ்கின்ற இராசாக்கள் வாசம் பண்ணப்பட்ட நவரத்தின மணிமாளிகைகளானவை, மகமேரு கிரியைப்போல வளர்ந்தோங்கிப் பிரகாசித்தன. வெவ்வண்ணமாகிய தனபாரங்களானவை செவ்விள நீரினையொத்து விளங்கியவர்களும், இரதிதேவி, இந்திராணி, செகன்மோகினி ஆகியோரைப் போல திவ்விய காந்தியாகிய அழகினை யுடையவர்களுமாகிய மங்கையர்களானவர்கள், அரமியங்களில் பிரதமயாழினை மீட்டிப் பாட, அவ்விசையினைக் கேட்டுருகிய, அன்னநடையினையுடைய மேனகை, அரம்பை முதலாகிய தேவபரத்தையர்கள், அமுதத்தின் சுவையே ஈதென்று வந்து அகமலர்ந்து முகமலர்ந்து அற்புதம் பெருகி இசைமயமாய் உருகிக் கரைந்தார்க ளென்றவாறு. (10)

வதிந்த - வசித்த. சொர்ணம் - பொன். மிழற்றுதல் - மீட்டுதல், இசைத்தல்.

**உரை** - துசபடம் - துவசபடம் - கொடிச்சீலை. மகதம் - தேசம் 56 இன் ஒன்று. வங்கதேசத்தின் மேற்கிலுள்ளது. காந்தி - ஒளி. அரமியம் - அரண்மனை, நிலாமுற்றம்.

**Makata nāṭu**

*poṉṉaka reṉattikaḻu maṉṉumatil poṟkoṭi*
*poruntiyacai kiṉṟa pukaḻcēr*
*maṉṉavar vatintanava rattiṉamaṇi mēṭaimaka*
*mēruveṉa vēti kaḻumāl*
*vaṉṉamulai corṇaiḷa nīreṉa vatintavarkaḷ*
*yāḻiṉai miḻaṟṟa makiḻā*
*aṉṉanaṭai mēṉakai yarampaiyarka ḷāramuta*
*meṉṉavaka māma kiḻvarāl.*

**Makata**

It was like the heavens above.
A handsome fort, golden flags waving,
The residence of famed kings
Which had gem-encrusted residences
Verily like the *Mēru* Mountain.
With lovely breasts like golden coconuts,
Women with swan-like gait
Played the lute; heavenly damsels
Like Mēṉaka and Rampa came here
Enjoying it all as nectar.

(மகதநாட்டுச் சோலை)

229. யோசனை மிகுந்தபதி னாயிர மெனத்தவழும்
ஓர்வனம் அகன்ற கடல்போல்
வாசவன் வனத்தினு மிகுந்ததுரு வாசனிட
வண்மைபெறு சோலை யதினும்
பேசரிய கற்பக மலர்ந்ததென வேபெருகு
புன்னையொடு வன்னி புகழ்சேர்
வாசமது வீசிட மகிழ்ந்தரச ரோடிரதி
யென்னமரு வன்ன நடையார்.

எ-து. பதினாயிர யோசனை பரியந்தம் பரப்பினையுடைய ஒரு வனமானது கடலினைப் போல அகன்றதாய் ரமணீயமாகிய சிங்கார வளப்பத்தினையுடையது. அது வாசவனாகிய இந்திர மகாராசனுடைய பஞ்ச தாருவின் வளத்தினைப் போன்றது. தூருவாசனிட வண்மையைப் பெறுகின்ற சோலையைப் போல் யாவரும் சஞ்சரித்த லரிதாக இருக்கப்பட்ட அந்த வனத்திலிருக்கின்ற சுரபுன்னை விருட்சம், வன்னி விருட்சம் முதலானவையெல்லாம் சுகந்தங்களையுடைய மலரானது இதழ் அவிழ்ந்து பிரகாசித்தல் பேசுதற் கரியதாகிய கற்பக விருட்சமானது மலர்களை மலர்ந்தால் எத்தன்மையோ அத்தன்மையனவாகியது அந்த வனத்தினது பரிமள சுகந்தத்துக்காக அந்நகரிலுள்ள அரசர் கூட்டங்களும், இரதிதேவியினை யொத்த இராச கன்னியர்களும், சிங்கத்தைப் போலும் அன்னத்தைப் போலும் சஞ்சரித்து உலாவி அவ்வளங்கண்டு இறும்பூதுற்று . . . [1]மகிழ்ச்சி அடைந்தார்க ளென்றவாறு. (11)

யோசனை - ஒரு எல்லை அளவு வாசவன் - இந்திரன்.

**உரை** - ரமணியம் - இரமமியம் - மகிழ்ச்சி. பரிமளம் - மிகுந்தமணம். சுகந்தம - நறுமணம். இறும்பூது - பெருமிதம்

பா.வே. - 1 அவவனததினையெல்லாம் பார்ப்பார்க ளென்றவாறு

## Makatanāṭṭuc cōlai

*yōcaṉai mikuntapati ṉāyira meṉattavaḷum*
*ōrvaṉam akaṉṟa kaṭalpōl*
*vācavaṉ vaṉattiṉu mikuntaturu vācaṉiṭa*
*vaṇmaipeṟu cōlai yatiṉum*
*pēcariya kaṟpaka malarntateṉa vēperuku*
*puṉṉaiyoṭu vaṉṉi pukaḻcēr*
*vācamatu vīciṭa makiḻntaraca rōṭirati*
*yeṉṉamaru vaṉṉa naṭaiyār.*

## Makatan Groves

The grove here had a spread
Of ten thousand yojanas
Like a vast expanse of ocean.
It was like a grove of Intiraṉ
That received its riches from Tūrvācaṉ.
Like the wish-yielding tree in bloom,
Here sweet scents swirled around

From trees like gamboge and the *vanni*,
And drew to it pleasure-loving kings
And damsels as beautiful as [3]Rati.

(வசந்த காலத்தில் சோலை)

230. தளிரிலை முறிகள் சோலை யிந்திர சாப மாக
வளிதிகழ் மவ்வற் போது கனபல மாட்சி யாகத்
துளிமதுத் தாரை மேகஞ் சொரிந்திடு துளிக ளாகக்
களிமயில் நடிக்கு மாரிக் காலம்போல் வசந்த காலம்.

எ-து. மாரிக்காலத்தினது குணமாவது என்னவென்றால், இந்திர தனுசு ஆகிய வில்லை ஆகாயத்தின்கண் தோற்றுவித்தலும், ஆலங்கட்டியாகிய பெருந்துளிகளைச் சிதறுதலும், சலதாரைகளைப் பொழிதலும் மயில் நடித்தலுமாகிய தருமத்தையுடைய வசந்த காலத்தை, மாரிக்காலம்போலச் சிலேடையால் கூறிய காரணத்தைக் குறித்து விரித்துப் பொருள கூறுகின்றோம். அந்தச் சோலையின்கண் தளிர்களும் இலைகளும் பழுப்புகளும் விளங்கித் தழைத்துத் தோன்றுதல் இந்திர தனுசினைப் போல நானாவித நிறங்களைப் பிரதிவிம்பிக்கவும், வண்டினங்கள் இசைப்பாட்டினைப் பாடுகின்ற பெருமல்லிகைப் புட்பமானவை ஆலங்கட்டியினைச் சிதறும் தன்மையைப் போலவும், அவ்வனத்தில் அலர்ந்த மலர்களில் வார்ந்தொழுகா நின்ற தேன்தாரைகள் மேகம் சொரிகின்ற நீர்த்தாரையினைப் போலவும் இருத்தலால் மயிலினங்களானவை இது மாரிக்காலமென்றெண்ணிக் கலாபியை விரித்து நடிக்கின்றமையால், மாரிக்காலத்தை யொத்தது வசந்த காலம் என்றவாறு. (12)

முறி - இலைபழுப்பு இந்திரசாபம் - வானவில். அளி - தேன், வண்டு. மவ்வல - மௌவல - முல்லை வனமல்லிகை. போது - மலர். மதுத்தாரை - தேன் துளிகளின் ஒழுங்கு வசந்தகாலம் - சித்திரை, வைகாசியின் பருவகாலம்.

**உரை** - தனுசு - வில் பிரதிவிம்பம் - போலியுருவம்: கண்ணாடியில் தோன்றும உருவம் கலாபி - காலபம் - மயில் தோகை.

## Vacanta kālattil cōlai

*taḷirilai muṟikaḷ cōlai yintira cāpa māka*
*vaḷitikaḻ mavvaṟ pōtu kaṉapala māṭci yākat*
*tuḷimatut tārai mēkañ corintiṭu tuḷika ḷākak*
*kaḷimayil naṭikku mārik kālampōl vacanta kālam.*

3. Wife of Kama, the Indian Cupid.

## The Grove in Spring

Leaves tender and grey imaged
The rainbow; the honey-dripping
Jasmines were like hailstones;
Honey from the flowers in bloom
Appeared like rains; hence peacocks
Came here to dance taking the spring
To be the rainy season.

(சோலையில் மரங்கள்)

231. சண்பகம் பலாச முல்லைத்
தழைத்திடும் வகுளம் புன்னை
வண்பயில் கதம்பம் பாதி
ரிப்பெயர் வருக்கை வாழை
மண்பயில் சந்த னப்பேர்
மாதுளை மாழை யாவு
முண்மல ரலர்ந்து தேன்க
ளுகுத்தன வுயர்ந்த சோலை.

எ-து இத்தன்மையனவாய் வேனிற்காலம் வந்து பிரவேசித்த மாத்திரத்தில் சண்பக விருட்சங்களும், முருக்கு, முல்லைக் கொடிகளும் தழைத்திராநின்ற வகுளங்களும், புன்னாகங்களும், உயர்ந்த கதம்பங்களும் பாதிரிகளும் பலாவருக்கங்களும், வாழைக்கானங்களும் சந்தனஅடவிகளும் குருக்கத்திமரங்களும மாவிருட்சங்களும் முதலாகிய சோலை யாவும் புட்பங்களுள் இதழவிழ்ந்து தேன்களைச் சொரியாநின்றன உயர்ந்த சோலைகளாகிய உத்தியானவனங்க ளென்றவாறு. (13)

பலாசம - புனமுருக்கு வகுளம் - மகிழமரம் கதம்பம் - கடம்பமரம். வருக்கை - பலா. மாழை - பொன்மாமரம.

உரை - வேனிறகாலம - கோடைகாலம் புன்னாகம் - புன்னை. அடவி - காடு. அவிழ்தல் - மலர்தல். உத்தியானவனம் - பூந்தோட்டம்.

## Cōlaiyil maraṅkaḷ

*caṇpakam palāca mullait*
*taḻaittiṭum vakuḷam puṉṉai*
*vaṇpayil katampam pāti*
*rippeyar varukkai vāḻai*

*maṉpayil canta ṉappēr*
*mātuḷai māḻai yāvu*
*muṉmala ralarntu tēṉka*
*ḷukuttaṉa vuyarnta cōlai.*

### Trees in the Grove

The caṇpakam, the palāca, rich vakuḷa
Entwined by jasmine creeper, mastwood,
Tall kaṭampa, pātiri, jackfruit,
Plantains, scented sandal, pomegranates,
Mangoes : all these trees
Put forth flowers that streamed honey.
Such was this wonderful grove.

(இயற்கையழகு)

232. கயங்களில் மடுக்க டன்னிற் கசிந்திடு தடாகப் பந்தி
வியன்பணை மருத வேலி விளங்கிய பதுமம் பூப்ப
நயமிகு தேவ லோக நளினப்பள் ளியினை நீங்கிப்
பயன்பெறு மன்னஞ் சங்கம் பரந்தன வவையின் மாதோ.

எ-து கயங்களிலேயும், மடுக்களிலேயும், சலங்களைக் கசியா நின்ற தடாகப் பந்திகளிலேயும் பெருமை தங்கிய வயல்களால் சூழ்ந்த மருதவேலிகளிலேயும் விளங்குகின்ற செந்தாமரை, வெண்டாமரைக் கமலங்களானவை அலர்ந்து பிரகாசிக்கப் பிரபலமாகிய நயமானது மிகுக்காநின்ற தேவலோகமாகிய சிருட்டிக்கர்த்தாவினது மனோவதியின்கண வசியாநின்ற மானநதி தீரத்தினும், பரமபதத்தி னிலகாநின்ற விரசைமா நதியினும், கயிலைக்கண்ணமராநின்ற சிவமூர்த்த நதியினும், மனோகரமா யலராநின்ற தாமரைக் கோயிலின்கண் வதிந்திராநின்ற அன்னக்கூட்டங்களானவை அந்த வாதனத்தைவிட்டுப் பறந்து வந்திந்தச் சோலையின் நடுப்பிரதேசத்தின்கண் அமர்கின்ற தாமரை மண்டபத்தினிடத்தில் வலம்புரிச் சங்கக் கூட்டங்களுடனே மனோகரமாய் வீற்றிருக்குமென்றவாறு. (14)

மடுக்கடன்னில் - மடுக்கள் + தன்னில். தடாகம் - குளம். பந்தி - கூட்டம். பணை - வயல். பதுமம் - தாமரை. நளினம் - தாமரை

உரை - நயம் - இன்பம், இனிமை. மனோவதி - பிரமன் நகரம். ஆதனம் - ஆசனம், இருக்கை.

## Iyarkaiyalaku

*kayaṅkaḷil maṭukka taṉṉir kacintiṭu taṭākap panti*
*viyaṉpaṇai maruta vēli viḷaṅkiya patumam pūppa*
*nayamiku tēva lōka naḷiṉappaḷ ḷiyiṉai niṅkip*
*payaṉpeṟu maṉṉañ caṅkam parantaṉa vavaiyiṉ mātō.*

## Nature's Loveliness

In the ponds, tarns, in lakes,
In enclosures of agricultural land,
Surrounded by fields, lotuses bloomed;
Here came to reside flights of swans
That had flown down from the lotus ponds
In the beautiful heavens above.

(சோலையில் சோமுகன்)

233. தோன்றலும் வேனில் ராசன் சரங்களை வில்லிற் றூவித்
தேன்சரந் தாக்க லாற்றா தாகிசோ முகனுந் தேவி
மாண்டகு போகம் வேட்டு வளந்திகழ் பொதும்பர் நண்ண
வாண்டகை யாருந் தேவி மார்களு மடைந்தா ரங்ஙன்.

எ-து. இத்தன்மையனவாகிய சோலைகளும், தடாகப் பந்திகளும் ரமணியமாகத் தோன்றின மாத்திரத்திலே, வேனில் அரசனாகிய மன்மதராசனான புவனச்சக்கிரேசுவரனானவன், பைங்கிளி நடாத்தாநின்ற தென்றல் தேரினையுடையவன், தனது கரும்புவில்லை வணங்கி நாணேறிட்டு, குணத்தொளி செய்து அனேக சரங்களைக் கரோவேக, சரோவேகமாய்த் தொடுத்தான். அந்தத் தேனைச் சொரிகின்ற புட்பபாணமானது மார்பிலே தாக்கின அளவிலே மெலிந்து ஆற்றாதவனாகிய, இராசசேகரனாகிய சோமுகனானவன் தன்னுடைய தேவிமார்களுடனே சரசசல்லாப சுகம் துய்க்க நினைத்து, இரதாரூடனாய உத்தியான வனத்தினகண் மலர்கொய்யும பொருட்டால் வந்தருளினான அந்தச் சமயத்து அந்த நகரின்கண் மருவிய [1]ஸ்ரீபூமான்களெல்லாமடைந்து வீற்றிருந்தார்களென்றவாறு (15)

வேனில்ராசன் - வேனிற்காலத்துக்கு உரியவனாகிய மன்மதன். வேனில்காலம் - இளவேனில் - சித்திரை, வைகாசி, முதுவேனில் - ஆனி, ஆடி. தேனசரம் - தேன்சொரியும் மலர்களாலான அமபு. வேட்டு - விரும்பி பொதும்பா - சோலை

உரை - இரதாரூடன் - தேர்ஊர்ந்து வருபவன் (இரதம்+ஆரூடன் - ஏறியவன்) சக்கரேசுவரன் - ஏகாதிபதி, தனியாட்சி செய்பவன். குணத்தொனி - நாணில் வரும் சத்தம். பூமான்கள் - அரசர்கள், ஆடவர்கள்

பா.வே. - 1 ஸ்ரீபுமான்.

## Cōlaiyil Cōmukaṉ

*tōṉṟalum vēṉil rācaṉ caraṅkaḷai villiṟ ṟūvit*
*tēṉcaran tākka lāṟṟā tākicō mukaṉun tēvi*
*māṇṭaku pōkam vēṭṭu vaḷantikaḷ potumpar naṇṇa*
*vāṇṭakai yārun tēvi mārkaḷu maṭaintā raṉṉaṉ.*

## Cōmukaṉ in the Grove

In this grove, Kāma the Lord of spring
Placed arrows in his bow and aimed.
Struck by them Cōmukaṉ desired
To spend a pleasurable season
With his queens; hence he reached
The lovely grove; here came
Other noblemen with their wives.

(சோலையில் மக்கள்)

234. அலர்ந்திடு மகிழைப் பார்த்தங் காயிழை மாதர் சில்லோர்
பலந்தரு மிதழ்சு வைக்கப் படர்ந்தன பலவாம் போது
மலர்ந்தமா லிகையர் கூடி நட்பினைக் கொள்ள மாண்பாய்க்
கலந்தபா லைகளின் போதுக் கணிப்பில கலந்த நன்றே.

எ-து. இவ்விதமாகிய அந்த நந்தவனத்தில் வந்து நிறைந்த [1]பூமான்களும், கன்னியர்களும், இரதி, மோகினி, இந்திராணி, இலக்குமி ஆகியோரை யொத்த அழகு வாய்ந்தவர்கள் அந்த நந்தவனத்தில் மலர்களைக் கொய்யும் பொருட்டாய்ப் பிரவேசித்தார்கள். இதழினை விரித்தலராநின்ற மகிழ விருட்சங்களைப் பார்த்து இதழினைச் சுவைக்குமளவையில் அம்மகிழானது அலர்ந்து சொரிந்த புட்பங்களாயவை அவரிடத்தில் பலவாய்க் குவிந்தன. மலர்கின்ற மாலையினை அளகத்தில் அணிந்த மடந்தையர்கள் பல பேர்கள் நட்புக்கொள்ளும் அளவில் பெருமைதங்கிய பாலை விருட்சங்களில் பூத்தலர்ந்து கலக்காநின்ற புட்பங்களாயவை அளவிறந்தவை அவரிடத்தில் சொரியக் குவிந்தன என்றவாறு. (16)

மகிழ் - மகிழமரம் படர்ந்தன - அலர்ந்தன பூத்தன. மாலிகையர் - மாலையை அணிந்த மகளிர்; மாலிகை - மாலை. பாலை - பாலைப்பூ போது - மலர். கணிப்பில - அளவற்றவை.

**உரை** - அளகம் - கூந்தல.

பா.வே. - 1 புமான்

## Cōlaiyil makkaḷ

*alarntiṭu makiḻaip pārttaṅ kāyiḻai mātar cillōr*
*palantaru mitaḻcu vaikkap paṭarntaṉa palavām pōtu*
*malarntamā likaiyar kūṭi naṭpiṉaik koḷḷa māṇpāyk*
*kalantapā laikaḷiṉ pōtuk kaṇippila kalanta taṉṟē.*

## People in the Grove

Watching the makiḻa tree in blossom
Ladies wearing lovely ornaments
Desired the flowers; their glances
Brought forth a shower of flowers.
Ladies wearing jasmine blossoms
Were friendly towards the trees.
The trees in turn gifted them
Flowers innumerable.

(மலர்கள் குவிதல்)

235. பாடல மதனைப் பல்லோர் பழிச்சிடச் சொரிந்த பல்பூத்
தேடரு முல்லைப் போது நகைத்திடச் சொரிந்த தாங்கே
நாடரு நாக மாட நாண்மலர் சொரிந்த தங்க
ணேடவிழ் குராவ ணைப்ப வெழில்மலர்ச் சொரிந்த தன்றே.

எ-து. பாதிரி மரத்தினைப் பல கன்னியர்கள கூடி வையுமளவையில், பல மலரினங்கள் அலர்ந்து சொரியக் குவிந்தன. தேடுதற்கரிய முல்லைக் கொடியினைப் பார்த்து நகைக்குமளவையில அளவில்லாதலர்ந்து அவரிடத்தில் பிரகாசித்துக் குவிந்தன. பார்த்தலுக் கருமையனவாகிய புன்னைகளின் நிழலிலிருந்து பல மங்கையர்கள் நடிக்க அலர்ந்து சொரிந்து குவிந்தன அவரிடத்தில் இதழினை விரிக்காநின்ற குராவிருட்சங்களைப் பல போர்கள் அணைத்த மாத்திரத்தில் பல மலரவிழ்ந்து அழகினையுடைய மலரினைப் பூத்துச் சொரிந்து குவிந்தன அவரிடத்தில என்றவாறு (17)

பாடலம - பாதிரிமரம். பழிச்சுதல் - துதித்தல் (உரையில் வைதல் என்றுள்ளது) நகைததல் - மலர்தல். நாகம் - புன்னைமரம் குரா - குரவுமரம் குராமலர் மலையிலுள்ள ஒரு வகை மலர்.

## Malarkaḷ Kuvital

*pāṭala mataṉaip pallōr paḻiccitac corinta palpūt*
*tēṭaru mullaip pōtu nakaittiṭac corinta tāṅkē*
*nāṭaru nāka māṭa nāṇmalar corinta taṅka*
*ṇēṭavil kurāva ṇaippa veḷilmalarc corinta taṉṟē.*

## An Array of Flowers

As women spoke sharp words
To the *pātiri* tree, the flowers
Showered plentifully; their smiles
Brought forth a rain of jasmines
From the rare creeper. As they acted
Dramatically beneath the mastwood,
That tree rained flowers aplenty;
When several women sought to kiss
The bottle-flower tree, immediately
It brought forth lovely blossoms.

(தேவியர் மலர் கொய்தல்)

236. பிண்டியை உதைப்பப் பூத்துப்
பெருந்திரள் மலர்கள் தூவிக்
கண்டவர் மகிழா சந்திப்
பாடிடப் பலவாம் போது
தண்டலில் தூவ மாழைப்
பார்த்திட வலர்ந்த தாங்கே
விண்டதிவ் விதமாய்ப் போது
கொய்தனர் விளங்க மாதோ.

எ-து. பிண்டியாகிய அசோகினைப் பல கன்னியர்கள் உதைத்த மாத்திரத்தில், அனேக புட்பங்கள் விண்டலர்ந்து பெரிய திரளாகிய மலர்களைச் சொரிந்து குவிந்தன. கண்டவர்களெல்லாம் மகிழ்ச்சியை யடைகின்ற பவழ மல்லிகையாயது அம்மங்கைமார்கள்

செவ்வாய் அலர்த்தி ஆத்திக கீதங்களைப் பாட, அலர்ந்து பலவாகிய புட்பங்களைத் தடைபடாமல் சொரிந்து குவித்தன. மாவிருக்கமானவை பல பேர்கள் பார்த்து அதிசயிக்கத்தக்க அளவில் பல புட்பங்களை அலர்ந்து சொரிந்து குவிததன. இவ்விதமாய் அலர்கின்ற புட்பங்களைப் பறித்து அளவிறந்த மகிழ்ச்சியினை யடைந்தார்கள் அரச தேவியர்கள் முதலாகிய இராச கன்னியர்கள் என்றவாறு. சுவைக்க, நட்புக்கொள்ள, நிந்திக்க, நகைக்க, ஆட, அணைக்க, உதைத்திட, பாட, பார்க்க, அலர்ந்து சொரிந்திடுமென்கின்ற இலக்கண சம்பிரதாயத்தா லித்தன்மையனவாகிய சிங்கார வளங்களைக் கூறியது. (18)

பிண்டி - அசோகு. ஆசந்தி - ஆத்திகப்பாடல்கள், சமயச் சடங்குப்பாடல்கள தண்டல் - தடை, கெடுதல் மாழை - மாமரம் விண்டது - அலர்ந்தது

உரை - மாவிருக்கம் - மாமரம். விருககம - விருட்சம்.

போது கொய்தல் முற்றும்.

## Tēviyar malar koytal

*pin̲ṭiyai utaippap pūttup*
*peruntiraḷ malarkaḷ tūvik*
*kan̲ṭavar makiḻā cantip*
*pāṭitap palavām pōtu*
*tan̲talil tūva māḻaip*
*pārttiṭa valarnta tāṅkē*
*vin̲ṭativ vitamāyp pōtu*
*koytan̲ar viḷaṅka mātō.*

## Women Gather Flowers

When kicked, the tree rained
Bushelfuls of blossoms;
As they began to sing, the pavaḻamalli
That makes everyone happy
Showered blossoms without hindrance;
The ladies plucked several blossoms
Happily, even as they looked on
At the flowering mango trees.

(புனல் விளையாடல்)

237. நந்தன வனத்தை விட்டு நளினமங் கையினைப் போன்ற
சுந்தர மடந்தை மார்க டுலங்கிய தடாகப் பந்தி
விந்தையை நோக்கி நன்னீ ராட்டிட வியப்ப மெய்தி
வந்தனர் படிந்து மூழ்கி வளமையோ டிருந்தா ரன்றே.

எ-து. இத்தன்மைத்தாய்ப் புட்பங்களைக் கொய்து அகமகிழ்ச்சியடைந்த அந்த நந்தவனத்தைவிட்டு நீங்கிய இலக்குமி தேவியாரினைப போன்ற சுந்தரமான சுக சொரூபத்தினையுடைய மடந்தைமாராகிய அந்த இராச கன்னியர்களானவர்கள் பிரபலத்தாலுயர்ந்த தடாகப் பந்தியினது விந்தையினை நோக்கி, நலனாகிய தீர்த்தத்தில் சலக்கிரீடை பண்ணத்தக்கதாகிய சந்தோடத்தை அடைந்தவர்களாய், அந்நீரில் படிந்து மூழ்கினவர்களாய், வளப்பத்தோடுங் கூடினவர்களாக இருந்தார்க ளென்றவாறு. (19)

நளினமங்கை - தாமரையில் எழுந்தருளியவள், திருமகள் சுந்தரம - அழகு. வியப்பம - விருப்பம், மகிழ்ச்சி. படிதல் - அமர்தல்.

உரை - சலகிரீடை - நீர்விளையாட்டு.

## Puṉal viḷaiyāṭal

*nantaṉa vaṉattai viṭṭu naḷiṉamaṅ kaiyiṉaip pōṉṟa*
*cuntara maṭantai mārka ṭulaṅkiya taṭākap panti*
*vintaiyai nōkki naṉṉī rāṭṭiṭa viyappa meyti*
*vantaṉar paṭintu mūḻki vaḷamaiyō ṭiruntā raṉṟē.*

## Bathing in the Spring

Leaving the grove, the lovely ladies
Who were like the Goddess of Wealth
Wondered at the several lakes so famous,
Approached them, immersed themselves within
And felt immesurably healthy.

(நீராடும் மகள்)

238. பீதக வுடையோ டுற்றப் பெருங்கிளிப் பிரச நீரிற்
சாதக மாக மூழ்கித் தயங்குத றழைத்த செய்யப்
போதலர் கமலம் பூப்பப் பெருந்திரு விளங்கித் தோன்று
மாதரம் போலத் தோன்றி யழகினாற் சிறந்தா ரன்றே.

எ-து. பீதகமாகிய பீதாம்பரத்தை யுடுத்திராநின்ற பெருத்த பஞ்சவர்ணக்கிளியைப் போன்றதோர் கன்னியானவள், சாதகப்பட்சியைப்போல் மூழ்கிப் பிரகாசித்தல் எத்தன்மைத்தெனில், தழைக்காநின்ற ஆயிரத்தெட்டு இதழினையுடைய செந்தாமரைக் கமலமானது அலர அதனது நடுப்பிரதேசக் கர்ணிகையினது பீடத்தின்கண் பெரிய திருமகளானவள் விளங்கிப் பிரகாசிக்காநின்ற ஆதரம்போலத் தோன்றி அழகினால் சிறந்திருந்தா ளென்றவாறு (20)

பீதகம - பொன்னாடை பெருங்கிளி - கிளி போன்றவளாகிய ஒரு பெண் - உவமை ஆகுபெயர். பிரசநீர் - தேன், கள் சாதகம் - சாதகப்புள் - மழைத் துளியை உண்டு வாழும் பறவை பெருந்திரு - இலகதுமி. ஆதரம் - அன்பு, அழகு

உரை - கர்ணிகை - தாமரைக்கொடடை

## Nīrāṭum makaḷ

*pītaka vuṭaiyō ṭur̲r̲ap peruṅkiḷip piraca nīrir̲*
*cātaka māka mūḻkit tayaṅkuta ṟaḷaitta ceyyap*
*pōtalar kamalam pūppap peruntiru viḷaṅkit tōn̲r̲u*
*mātaram pōlat tōn̲r̲i yaḻakin̲ār̲ cir̲antā ḷan̲r̲ē.*

## The Bathing Beauty

A parrot-like damsel dressed
In yellow garments who was immersed
In the spring like a chatak bird
Appeared as if she were Lakṣmi
So beautiful, appearing on the pericarp
Of a lotus rich with petals.

(கலைமகள் போலும் பெண்)

239. நுட்பவெண் கலைய ணிந்த
நுடங்கிடை மஞ்ஞை யன்னாள்
திட்பமார் நீரின் மூழ்கிச்
சிறந்திடல் திகழ்வெண் கஞ்ச
முட்படக் கலைநூன் வாணி
யாவரும் வழுத்த மூழ்கிக்
கட்படு தடாகந் தோன்றல்
கடுத்திடல் கலந்த தன்றே.

எ-து. அதிக நுண்மையனவாகிய நுட்பமான வெண்துகிலாகிய வெள்ளை வத்திரப்பட்டினை யுடுத்தணிந்த, துவளுகின்ற இடையினையுடைய, மயிலினைப் போன்றவள் சிரேட்டத்தால் நிறைந்த நீரில் மூழ்கிப் பிரகாசிப்பத் தோன்றுதலெத்தன்மைத் தென்றால், இதழ் அவிழ்ந்தொளிராநின்ற வெண்டாமரைக் கமலத்தின்கண் உள்ளேயிருக்கப்பெற்ற, சகல கலையினும் விளங்குகின்ற வாணியாகிய நாவின்மகளானவள், புட்பங்கள் தேன்களைச் சிந்தாநின்ற தடாகத்தினில் யாவர்களும் தன்னடி வந்தித்து வழுத்தத்தக்கதாக வெள்ளிய வெண்டாமரையின்கண் தோன்றியதை யொத்துக் கலந்திருந்தாள் என்றவாறு. (21)

கலை - ஆடை. நுடங்கிடை - துவளுகின்ற இடை, மெல்லிடை. மஞ்ஞை - மயில் வெண கஞ்சம் - வெண்டாமரை. உட்படல் - உள்ளேயிருத்தல். வழுத்துதல் - துதித்தல். கடபடுதடாகம் - கள் + படு + தடாகம் - தேன்நிறைந்த குளம் கடுத்திடல் - ஒத்திருத்தல்

**உரை** - துகில் - ஆடை.

## Kalaimakaḷ pōlum peṇ

*nuṭpaveṇ kalaiya ṇinta*
*nuṭaṅkiṭai maññai yaṉṉāḷ*
*tiṭpamār nīriṉ mūḻkic*
*ciṟantiṭal tikaḻveṇ kañca*
*muṭpaṭak kalainūṉ vāṇi*
*yāvarum vaḻutta mūḻkik*
*kaṭpaṭu taṭākan tōṉṟal*
*kaṭuttiṭal kalanta taṉṟē.*

## A Girl Like Sarasvati

A peacock-like girl with a thin waist
Enrobed in a thin, white garment
Was found immersed in water.
She resembled the Goddess Sarasvati
Residing in the white lotus
Saluted by devotees in that pond
Full of honeyed waters.

(நீராடிய நிலை)

240. குயில்கிளி மஞ்ஞை யன்னார்
குறைவிற்பொற் குடங்க ளொத்துப்
பயில்தரு கொங்கை தன்னாற்
பரந்தநீர் பாய்ந்து நீந்தக்

**கயிலையயி னொளிருங் கீரக்**
**கடலினைக் கடைந்த ஞான்று**
**உயிரெலா முவப்ப வந்நீர்**
**சுலாவுத லொத்த தன்றே.**

எ-து. குயிலினைப் போலவும், கிளியினைக் கடுப்பவும், மஞ்ஞையைப் போலும் உருவமாகிய மாதர்கள் பொற்குடத்துக்குச் சமதையாகிய இரண்டு கொங்கையினையும் கொண்டு பரப்பினையுடைய நீரிடையிலே பாய்ந்து நீந்த, அந்நீராயது கயிலையங்கிரிக் கொப்பாகிய மந்திர கிரியினாலே நாராயணமூர்த்தியானவர் பாற்கடலினைக் கடைந்த காலையில் உயிரெலாம் சந்தோஷிக்கத் தக்கதாக அந்தப் பாற்கடலினது நீரானது சுழலும் தன்மையினை யொதத்து என்றவாறு. (22)

கீரக்கடல் - க்ஷீரககடல - க்ஷீரம் - பால் சுலாவுதல் - சுழலுதல்.

## Nīrāṭiya nilai

*kuyilkiḻi maññai yaṉṉār*
*kuṟaiviṟpoṟ kuṭaṅka ḻottup*
*payiltaru koṅkai taṉṉār*
*parantanīr pāyntu nīntak*
*kayilaıyi ṉoḷiruṅ kīrak*
*kaṭaliṉaik kaṭaınta ñāṉṟu*
*uyirelā muvappa vannīr*
*culāvuta lotta taṉṟē.*

## The Spring Waters

As the damsels who resembled
The nightingale, parrot and peacock
Swam in the spread of waters
With their two lovely breasts
That resembled golden pitchers,
The waters resembled the milky sea
That swirled giving joy to living beings
When it was churned by *Mantara* Hill
That was like the *Kailāsa* Mountain.

(நீராடிய மகளிர் நிறம்)

241. அலர்ந்தசெவ் வாம்பல் போன்ற
அதரத்தை விழிகள் காட்டப்
பலந்தரு மிதழ்கள் வெண்டா
மரைபயி னிறங்கள் காட்டச்
சலம்பயில் மேகக் கூந்தல்
தவழ்ந்தளி சாய்ந்தங் கோடக்
குலம்பயில் மடவார் நன்னீர்
குளித்தனர் கரைக்கண் உற்றார்.

எ-து. இதழினை விரித்தலராநின்ற செவ்வாம்பலினையொத்த அதரமாகிய இதழினது சிவந்த நிறத்தைக் கண்களானவை நீர் குடையுந்தன்மையால் காட்டவும், சரச சல்லாப லீலையில் இதழ் சுவைத்து அதர பானமாகிய அமுதபானங்களை உதவுகின்ற இதழ்களானவை வெண்டாமரை யினிடத்திற் பயிலுந் தன்மையாகிய நிறத்தினைக் காட்டவும், கடலினது நீரைப் பருகிய [1]மேகத்தினது நிறத்தினை அளக பந்திகள் நீரினைத் துளித்துக் காட்டவும், நல்ல குலத்தில் பிறந்த இராசகன்னியர்கள் நீரில் குடைந்தாடிக் கரையிடத்தடைந்தார் என்றவாறு. (23)

அதரம் - இதழ், உதடு. சலம் - நீா அளி - வண்டு

பா.வே. - 1. மேகமானது

புனல் விளையாடல் முற்றும்.

## Nīrāṭiya makaḷir niṟam

*alarntacev vāmpal pōṉṟa*
*atarattai viḻikaḷ kāṭṭap*
*palantaru mitaḻkaḷ veṇṭā*
*maraipayi ṉiṟaṅkaḷ kāṭṭac*
*calampayil mēkak kūntal*
*tavaḻntaḷi cāyntaṅ kōṭak*
*kulampayil maṭavār naṉṉīr*
*kuḷittaṉar karaikkaṇ uṟṟār.*

## The Complexion of the Damsels

The eyes pointed to the lips
That were like red lotuses in bloom;
The lips that had surfeit of enjoyment
Revealed the colour of the white lotus;
The tresses that were wet
Revealed the colour of the rain-clouds;
The nobly-born princesses
Bathed in the waters and went up the banks.

### உண்டாட்டு

(மகளிர் அலங்காரம்)

242. சேடியர் பலர்கள் கூடித் துகிலினாற் றெரிவை மாரை
நாடுநன் மேனி யெல்லாந் துவட்டிப்பின் னலன தாயப்
பீடுறு நுதலின் மீது திலதப்பொட் டணிந்து பெட்பி
னேடவிழ் மலர்கள் சாந்தந் துகிலணி யெழிலாய்ச் சேர்த்தார்.

எ-து இவ்விதமாய்த் தீர்த்தமாடிக் கரையின்கண் ஏறிய இராச கன்னியர்களுக்கு ஆதரவாகிய பாங்கிமார்கள் முதலான பேர்கள் எல்லாம் பல பேர்கள் கூடி, நன்மையனவாகிய நுட்ப ரவை சல்லாக்களினாலே துவட்டி உலர்த்திய பின்பு, எழிலமைந்த நுதலாகிய நெறறியினது நடுப்பிரதேசத்திலே திலதமாகிய பொட்டினை அணிந்தபின்பு, அழகிய இதழ்கள் அவிழ்ந்த மலர்களாலும், சாந்தங்களாலும் பட்டுகளாலும், ஆபரண வகைகளினாலும் அலங்கரித்தார்க ளென்றவாறு (24)

சேடியர் - தோழிகள். பலர்கள் - பகுதிப்பொருள் விகுதி பெற்றது தெரிவைமார் - மகளிர். பீடு - பெருமை, அழகு திலதப்பொட்டு - திலகம், பொட்டு - நெற்றிப்பொட்டு பெட்பு - அன்பு

உரை - நுட்ப ரவைசல்லாக்கள் - மென்மையான துணிகள். உண்டாட்டு - மது முதலியன உண்டுகளித்தல்.

## Uṇṭāṭṭu

### Makaḷir alaṅkāram

*cēṭiyar palarkaḷ kūṭit tukiliṉāṟ ṟerivai mārai*
*nāṭunaṉ mēṉi yellāṉ tuvaṭṭippiṉ ṉalaṉa tāyap*
*pīṭuṟu nutaliṉ mītu tilatappoṭ ṭaṇintu peṭpi*
*ṉēṭaviḻ malarkaḷ cāntan tukilaṇi yeḻilāyc cērttār.*

## Dressing Up

Several maids gathered around with towels
And dried the gentle bodies of the ladies,
Placed the auspicious sign with love
On their lovely foreheads, and proceeded
To decorate them with flowers in blossoms,
Sandalpaste and lovely garments.

(பந்தலின் கீழ் அமர்தல்)

243. அணியிழை மடவார் பல்லோர்
அலங்கரித் ததன்பின் வந்து
மணிகதி ரெரிக்கு முத்தப்
பந்தரு மாணிக் கத்தாற்
றணிவில்பே ரொளிவி ரிக்கும்
பந்தருந் தாழ்வி லாதக்
குணனுடைப் பூவின் பந்தர்
நிழலினுங் குறுகி னாரால்.

எ-து. ஆபரணங்களாற் குறைவிலாத பாங்கிமார்கள் பலபேர்கள் கூடித் தங்கடங்கள் தலைவிகளை அலங்காரம் செய்ததன் பின்பு, அந்த இராச கன்னியர்களானவர்கள் அழகிய கிரண சமூகங்களால் தண்ணொளியினை விரிக்காநின்ற முத்தப் பந்தரிலே வந்து வீற்றிருக்கின்றவர்களும், மாணிக்கத்தால் செய்வினை நிரம்பிய பந்தரில் வந்து வீற்றிருக்கின்றவர்களும், தாழ்விலாத நல்ல குணங்களையுடைய பூவின் பந்தரினது நிழலினுந் திருவினைப் போலவும், இரதியைப் போலவும் இந்திராணியைப் போலவும் செகன்மோகினியைப் போலவும் [1]இருந்தார்களென்றவாறு (25)

அணியிழை மடவார் - அழகிய அணிகளை அணிந்த மகளிர் கதிர் எரிக்கும் - ஒளி வீசும் முத்தம் - முத்து. தணிவு - குறைவு.

**உரை** - தங்கடங்கள் - தங்கள + தங்கள்

பா.வே. - 1. ரஞ்சிதமாயிருந்தார்க ளென்றவாறு

## Pantalin̲ kīl̲ amartal

*aṇiyil̲ai maṭavār pallōr*
*alaṅkarit tatan̲pin̲ vantu*
*maṇikati rerikku muttap*
*pantaru māṇik kattār̲*

*ṟaṇivilpē roḷivi rikkum*
*pantarun tāḻvi lātak*
*kuṇaṉuṭaip pūviṉ pantar*
*niḻaliṉuṅ kuṟuki ṉāṟāl.*

## Resting Under the *Pantal*

After the maids had dressed up
The bejewelled ladies, those noble damsels
Came to rest under the *pantal*
Which was made of gleaming pearls,
Gems spreading brilliant sheen,
And choice flowers that are healthy.

(தேன் பருகுதல்)

244. பளிக்குவள் ளத்தின் வார்த்த
நறவினைக் கொழுநர் பாங்கர்
அளித்ததும் நுகர்ந்து மைய
லாகிய வமையந் தன்னிற்
குளித்திடு குழலீர் நும்மை
யிம்மையிற் பிரியக் கூடா
தளித்தியா லெம்மை யென்ன
வாரழல் போல நக்காள்.

எ-து இத்தன்மையனவாகிய சுந்தர ரஞ்சித விபவத்தையுடைய நானாவிதமாகிய பந்தரின்கண் ஆசனததின் வீற்றிருந்தருளிய இராச கன்னியர்கள் தங்கடங்கள் 'பூமான்களுடனே சேடியர்களாலே பளிங்குக் கிண்ணங்களிலே வார்க்காநின்ற தேன்களை நாயகர் பக்கங்களிலே வைக்க, அதை யந்த நாயகிகளுக்கருத்துவித்து அதன்பின்பு தாமும் நுகர்ந்து மயக்கத்தை யடையா நினற சமயத்தில், குளிர்ந்த குழலினையுடைய வெமதாவியே! உமமை இமமையிலே பிரிந்தால் எனக்கொருகாரியமுங் கைகூடாதாகையால் எம்மைப் பாதுகாபபீர் என்றளவில், மறுமையின்கண் எம்மை நீர் பிரிவீராகில் நீரெண்ணிய எண்ணமெல்லா மொருங்கெய்தப் பெறுவீரன்றோ என்று அக்கினியைப் போலக் கொதித்துச் சீறிப் பொங்கி றாடினா ளென்றவாறு (26)

பளிகருவள்ளம் - பளிங்குக்கிண்ணம். நறவு - தேன். கொழுநர்பாங்கர் -கணவர்மாரிடம். அமையம் - சமயம். இம்மை - இப்பிறவி. அளித்தி - காப்பாயாக அழல - தீ நகுதல் - சிரிததல்: (இகழ்ச்சிச் சிரிப்பு)

உரை - ரஞ்சிதம் - இன்பம் விபவம - பெருமை இறாடுதல் - முரண்டுதல

பா.வே. - 1. புமான்களுடனே.

## Tēṉ parukutal

*paḷikkuvaḷ ḷattiṉ vārtta*
*naṟaviṉaik koḻunar pāṅkar*
*aḷittatum nukarntu maiya*
*lākiya vamaiyan taṉṉiṟ*
*kuḷittiṭu kuḻalīr nummai*
*yimmaiyiṟ piriyak kūṭā*
*taḷittiyā lemmai yeṉṉa*
*vāraḻal pōla nakkāḷ.*

## Drinking Honey

As their husbands presented them honey
Filled in cups of marble,
They drank and were drawn
Into a daze of love; just then
As men said, 'Darling with tresses cool!
We should not be separated
In this birth', a damsel laughed
Spitting fire: 'Would you then
Give us up in the next birth?'

(மகளிர் ஊடல்)

245. வயிரபாத் திரத்திற் பெய்த
மாமது நுகர்ந்தோர் மஞ்ஞை
பயில்தரு தலைவ னுண்டு
பருகிடத் தந்த பின்னர்

குயின்மொழி யதனாற் கந்த
மென்னென வுனையுங் கொண்டு
புயல்செறி சண்ப கத்தைப்
பறித்ததா தென்றான் பொங்க.

எ-து. நவரத்தினங்களுக்கெல்லாம் முதன்மையாகிய வச்சிரப் பாத்திரத்திலே பாங்கிகளாலே வார்க்கப்பட்ட பெருமை தங்கிய தேனினை உண்டொரு மயிலினை யொப்பவள் தன்னருகில் வீற்றிருக்காநின்ற தலைவனானவன் அதன் சுவையினை யோர்ந்த பின், தனது கிழத்தியானவள் உண்ணத்தக்கதாகத் தந்த பின்பு குயிலினைப் போன்ற மொழியினையுடைய தலைவியானவள் ஒரு [1]ஆசங்கையை நினைந்து தனது தலைவனைப் பார்த்து வினாவுகின்றாள். உமது திருமேனி முழுவதும் வாசிக்க நின்றமை யாதென்று வினவ விடை கூறுகின்றான் உனையுங் கொண்டு மேக மண்டலம் அளாவிய சண்பகவிருக்கத்தினது புட்பத்தைப் பறித்த ஞான்று அந்தப் புட்பஞ்சிதறாநின்ற தாதுப்பொடியினது வாசனை என்று கூறினான் அப்போது தலைவியானவள் உனையுமென்றமையால் இன்னொருத்தியையுங் கொண்டணைந்தனையோ என்று பொங்கிக் கொதித்தா ளென்றவாறு. (27)

மது - தேன் மஞ்ஞை - மயில் பெண்ணுக்கு ஆகி வநதது குயின்மொழி - தலைவிக்கு ஆகி வநதது. கந்தம - மணம், வாசனை. புயல் - மேகம், (ஆகாயம்). தாது - மகரந்தம்.

**உரை** - ஆசஙகை - ஐயம, சந்தேகம். வாசிக்க நின்றமை - மணம் வீசுவது.

பா.வே. - 1 சங்கையை

## Makaḷir ūṭal

*vayirapāt tirattiṟ peyta*
*māmatu nukarntōr maññai*
*payiltaru talaiva ṉuṇṭu*
*parukiṭat tanta piṉṉar*
*kuyiṉmoḻi yataṉaṟ kanta*
*meṉṉeṉa vuṉaiyuṅ koṇṭu*
*puyalceṟi caṇpa kattaip*
*paṟittatā teṉṟāṉ poṅka.*

## The Ladies Get Angry

As a peacock-like lady
Drank the wine poured
Into a cup of diamond, and her husband

Also tasted it, the koel-voiced lady
Had a doubt and questioned him:
'What is this scent coming from you?'
'That is the pollen that scattered
When I went with you to gather
The blossoms from the sky-teasing
Champak tree'. This made her angry.

(மகளிர் மயங்கிக் கூறுதல்)

246. தண்டுளி நறவ மாந்துந்
தையறன் வள்ளந் தன்னின்
வண்டுபாட் டயருங் கூந்தல்
வதுவையாஞ் சாய றன்னைக்
கண்டுவ கையினைப் பூத்தேன்
கனதொழி லினையுங் காட்டி
வெண்டொடி வொளித்தி கொல்லோ
வுரைத்திலா யெம்மு னென்றாள்.

எ-து. குளிர்ந்து துளிக்காநின்ற தேன்களை உண்ணப்பட்ட ஒரு பொற்கொடியானவள் [1]மயக்கத்தினது குணத்தினாலே தனது கிண்ணத்தில் வண்டுகளானவை இசைப்பாட்டுகளைப் பாடாநின்ற கூந்தலினையுடைய பெண்கொடியாகிய தனது சாய்கையினைக் கண்டுவகை எய்தினவளாய், என் கனதையாகிய தொழிலாகி யான் அசைந்தால் நீ அசைதலும், நான் சந்தோடித்தால் நீ சந்தோடித்தலும், நான் ஆடினால் நீ ஆடலுமாகிய தொழிலைக் காட்டாநின்ற வெள்ளிய சொர்ண வளையலை அணிந்தவளே! நீ இந்த வள்ளத்தின்கண் ணொளித்திருந்தனையோ? திருவாய் அலர்ந்தொரு வார்த்தையினைச் சொலத்தக்கதாக இந்த வள்ளத்தினைவிட்டு வரக்கடவாய் எனது முன்னிலையின் என்றா ளென்றவாறு (28)

தண்டுளி - தண + துளி - குளிர்ச்சிபொருந்திய துளி நறவம - நறவு - தேன் மாந்து - உண்டு தையறன் - தையல் + தன் வள்ளம் - கிண்ணம் வதுவை - பெண் சாயல - வடிவம. கண்டுவகை - கண்டு + உவகை

**உரை** - கனதை - பெருமை.

பா.வே. - 1. லாகிரியினது.

## Makaḷir mayaṅkik kūṟutal

*taṇṭuḷi naṟava māntun*
*taiyaṟaṉ vaḷḷan taṉṉiṉ*
*vaṇṭupāṭ ṭayaruṅ kūntal*
*vatuvaiyāñ cāya ṟaṉṉaik*
*kaṇṭuva kaiyiṉaip pūttēṉ*
*kaṉatoḻi liṉaiyuṅ kāṭṭi*
*veṇṭoṭi voḷitti kollō*
*vuraittilā yemmu ṉeṉṟāḷ.*

## The Ladies in a Daze

A damsel who had drunk wine
With beaded bubbles saw the reflection
Of her own bee-surrounded tresses
In her cup and became ecstatic.
'O bejewelled girl who imitates me,
Were you hidden in this cup?
Come out and reply!'

(அனிச்சமலர் சூடுதல்)

247. அனிச்சப்பூக் காம்பு கொய்யா
தணிந்தபின் னறவை யுண்ணத்
தனித்தசே டியரெம் மாவி
யாகிய தலைவிக் கொங்கை
யினத்தினால் துவளு கின்ற
இடையிறு மிறுமென் றேங்கி
மனத்துயர் கொண்டோ மென்றார்
மாதுய ருறுவ தானான்.

எ-து ஒரு தலைவனானவன் ஒரு தலைவியினது அளகபாரத்தின்கண் அனிச்சப்பூவினைக் காமபினைக் கிள்ளாதவனாய் அணிந்தான். அதன்பின்பு வள்ளத்தின் கணணார்ந்த நறவினை யுண்ணத் தனித்த சேடியர்களானவர்கள் அந்தத் தலைவனைப் பார்த்துக் கூறுகின்றார்கள் எமது உயிராகிய தலைவியின் கொங்கையினது பாரத்தினாலே

இடையானது துவளுகின்றது. அனிச்சப்பூவும் அதனது காம்பினது பாரமும் கூந்தலின்கண் ஏறுதலால், அவளிடையானது [1]இற்றுப்போகுமென்றெண்ணி, மனத்தின்கண் துயரத்தினைக் கொண்டோமென்று பாங்கியர் கூறக்கேட்ட தலைவனானவன் காகதாலிய ஞாயம் போலாச்சுதென்று மிகுந்த துயரினைக் கொண்டான் என்றவாறு. (29)

இறுதல் - ஒடிதல். உறுதல் - அடைதல்.

**உரை** - அளகபாரம் - கூந்தல்சுமை. காகதாளீய ஞாயம் - காக்கை உட்காரப்பனம்பழம் விழுந்தது என்பது போன்ற நியாயநெறி. ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாத இரு நிகழ்ச்சிகள் சம்பந்தம் உடையவைபோலத் தோன்றும் நிகழ்ச்சி நெறி.

பா.வே. - 1. இத்துப்போகு.

## Aṉiccamalar cūṭutal

*aṉiccappūk kāmpu koyyā*
*taṉintapiṉ ṉaṟavai yuṇṇat*
*taṉittacē ṭiyarem māvi*
*yākiya talaivik koṅkai*
*yiṉattiṉāl tuvaḷu kiṉṟa*
*iṭaiyiṟu miṟumeṉ ṟeṅki*
*maṉattuyar koṇṭō meṉṟār*
*mātuya ruṟuva tāṉāṉ.*

## Wearing Aṉicca Flowers

A husband stuck an *aṉicca* flower
With its stem on his wife's tresses
And drank wine. The servant maids
Said: 'Our lady's hips are already
Wilting under the weight of breasts.
So we are feeling unhappy.'
The husband then felt sad.

(மல்லிகை சூடுதல்)

248. மல்லிகை மாலை வேய்ந்து
மதுநுகர்ந் திருந்த போது
பல்லியற் பாங்கி மாதர்
பகருவார் மயிலின் பீலி

**வெல்லையி னுட்ப மாகி**
**யிருக்கினு மிகுக்கு மாகிற்**
**செல்லுறு பண்டி யச்சு**
**சிதைதல்போ லிடைதான் சிந்தும்.**

எ-து. ஒரு தலைவனானவன் ஒரு தலைவியினது கூந்தலின்கண் மல்லிகை மாலையினைச் சூட்டி வள்ளத்தின்கண் ணமர்கின்ற தேனை உண்டுகளித்திருந்த காலையில் பல இயல்பினையுடைய பாங்கிமார்களானவர்கள் கூறுகின்றார்கள் தலைவனாகிய [1]பூமானே! ஒரு வார்த்தை கூறுகின்றோம்; அதாவது மயிலினது பீலியாகிய இறகானது அதிக நுட்ப வடிவாயிருக்கினும் அந்த இறகானது வண்டியின்கண் அதிக பாரமாய் மிகுக்குமானால், பூமியின்கண் ணோடாநின்ற வண்டியினது அச்சு சிதைந்து பங்கப்படுமாறுபோல எங்கள் தலைவியினது இடையானது . . . . கொங்கை பாரத்தினால் துவளுகின்றது. இந்த மல்லி கையினது மாலையைப் [1]பூமானே நீ புனைதலால் அதிக பாரத்தினாலே இடையானது சிதைந்து போகும் என்றார்க ளென்றவாறு (30)

எல்லையில் நுட்பம் - மிகுந்த மென்மைவாய்ந்தது, மிகமெல்லியது மிகுக்கும் ஆயின் - அதுவும் அளவுக்கு மீறி வண்டியில ஏற்றப்படுமாயின். பண்டி - வண்டி. இடைசிந்தும் - இடைமுறியும்.

பா.வே. - 1 புமானே

## Mallikai cūṭutal

*mallikai mālai vēyntu*
*matunukarn tirunta pōtu*
*palliyaṟ pāṅki mātar*
*pakaruvār mayiliṉ pīli*
*vellaiyi ṉutpa māki*
*yirukkiṉu mikukku mākiṟ*
*celluṟu panṭı yaccu*
*citaitalpō liṭaitāṉ cintum.*

## Wearing Jasmines

A husband decorated his wife's crown
With jasmine garlands and drank wine.
The maids with varied interests
Said: 'Though the peacock feather
Is light, if it is placed in excess
The axle of the moving cart
Will break. Such is her hip!'

(சோமுகனை வாழ்த்துதல்)

249. சுந்தரக் காவி னின்பந்
துய்த்தபின் குளிர்நீ ராடி
இந்திர னுகரும் வெண்மைச்
சுதைகளி னினிய தேறல்
வந்தவ ரெல்லா முண்டு
மனமகிழ்ந் தரசை வாழ்த்தி
நந்தன வனத்தை விட்டு
நகரத்திற் சார்ந்து ளாரால்.

எ-து. அனந்த கல்யாண சுந்தர வைபவத்தையுடைய உத்தியான வனத்தின்கண் அனேக இன்பங்களையெல்லாம் ஸ்ரீபூமான்களெல்லாம் அனுபவித்ததன் பின்பு, குளிர்ந்த தடாக நீரின்கண் குடைந்திந்திரமகாராசனானவன் உண்கின்ற வெண்மையாகிய அமுதம் போன்ற இனிய தேனையுண்டு தமது அரசனாகிய சோமுகனை வாழ்த்தி அந்த நந்தன வனத்தைவிட்டு அரசனுடனே நகரியின்கண் யாவர்களும் சார்ந்தார்கள் என்றவாறு. (31)

கா - சோலை இந்திரனுகரும் - இந்திரன் + நுகரும். சுதை - வெண்மை. தேறல் - தேன் நகரி - தலைநகரம், பட்டணம்.

உண்டாட்டு முற்றிற்று.

## Cōmukaṉai vāḻttutal

*cuntarak kāvi ṉiṉpan*
*tuyttapiṉ kuḷirnī rāṭi*
*intira ṉukarum veṇmaic*
*cutaikaḷi ṉiṉiya tēṟal*
*vantava rellā muṇṭu*
*maṉamakiḻn taracai vāḻtti*
*nantaṉa vaṉattai viṭṭu*
*nakarattiṟ cārntu ḷārāl.*

## Hailing Cōmukaṉ

After the pleasurable pastimes
In the lovely grove, and a cool bath,
All those who had come there

Drank the sweet white wine
That is the favourite of Intiraṉ
And hailed their king with joy;
Then they left the grove
And went back to the city.

(வராகமூர்த்தி எழுந்தருளுதல்)

250. அன்றுநெடு மாலதிச யித்தருள் புரிந்திட
அரன்பதும பீடி கையினான்
சென்றடி பணிந்துபுகழ் செப்பமுனி வோரமரர்
செய்யமறை யோத மகிழ்வாய்
நின்றமணி மேடைகள் நிவந்தநவ ரத்னமதில்
நிகழ்வரையெ னத்தி கழவே
கொண்டடி பிளந்துமதில் சென்றுநகை கொண்டுபுகழ்
கொண்டவண் நின்ற னனரோ.

எ-து அபபோதந்த வராகமூர்த்தியானவா ஆரணியத்தில் வந்தமாத்திரத்தில் இந்திரன், சிவன், பதுமமாகிய தாமரைச் சிங்காதனத்தினை உடைய பிரம்மா முதலாகிய பேர்கள் தொடாந்து திருவடியிலே தெண்டன் சமர்ப்பித்து அவருடைய புகழினைக் கூறிப் பின்தொடர, முனிவர் கூட்டங்களும் தேவாதிகளும் வேதாத்தியயனம் செய்ய மகிழ்ச்சியை அடைந்தங்ஙன் நின்ற மணிமேடைகளும், நவரத்தின மயமாகிய மதிலும், சக்கரவாள கிரியைப் போலத் தோன்றுதலைக கண்ட வராகமூர்த்தியானவா தனது பாதத்தைக் கொண்டு மதிலையெல்லாம் உதைத்துருட்டிப் பிளந்த பின்பு, அதிலே பிரவேசித்து மகிழ் சிறந்தவ் வனத்தில் வீற்றிருநதிருந்தருளினார் என்றவாறு. (32)

பதுமபீடிகை - தாமரை ஆசனம (இருககை), நிவத்தல் - உயர்தல், வரை - மலை.

உரை - வேதாத்தியயனம் - வேதம் ஓதுதல

## Varākamūrtti eḻuntaruḷutal

*aṉṟuneṭu mālatica yittaruḷ purintiṭa*
*araṉpatuma pīṭi kaiyiṉāṉ*
*ceṉṟaṭi paṇintupukaḻ ceppamuṉi vōramarar*
*ceyyamaṟai yōta makiḻvāy*

*ninramaṇi mēṭaikaḷ nivantanava ratnamatil*
*nikaḻvaraiye natti kaḻavē*
*koṇṭaṭi piḷantumatil cenrunakai koṇṭupukaḻ*
*koṇṭavaṉ ninra naṉarō.*

## The Coming of Varāka

As Nārāyaṇaṉ showered grace,
Civaṉ and Piramaṉ approached him,
Saluted him and sang his praise.
Sages and gods recited the Vēdas.
Finding the gem-studded houses
And the high-rise fortwall
Ornamented with nine kinds of gems
Resembling a mountain, the famous Lord
Kicked the fort to smithreens
And stood there smiling.

(வனத்தின் சிறப்பு)

251. தென்னவிள நீர்பெரிய கன்னல்வள ரசோகுதிகழ்
தேக்கிலவு மாவ ரசுசூழ்
நன்னய மிகுந்தகொடி நாகைகரு நெல்லிமரு
மல்லியெலு மிச்சை நலதேன்
பொன்னருவி போல்பெரு வரம்பைவளர் காடதில்
புகுந்தலைக ளோடு பெயரா
மன்னவன் வனஞ்செறியு மோடை கடடாகநதி
வாரிதி யெனப்பெ ருகவே.

எ-து. செவ்விள நீரினையுடைய தெங்கும், பெருத்திராநின்ற கரும்பும், அசோக விருட்சங்களும், தேக்கு விருட்சமும், இலவு, மாமரங்களும, அரச மரங்களும், நல்ல நயத்தினை மிகுந்திலகாநின்ற கொடி நாகை விருட்சமும், கருநெல்லி, மருமல்லிக்கொடிகளும், எலுமிச்சை விருட்சம் முதலானதும் ஆகாயம் அளாவிய சோலைகளிலே நின்றும் பெருகாநின்ற தேனானது, பொன்னருவி பிரகாசிககின்றதுபோலப் பெருகிக் கதலி வனத்தில் பிரவேசித்து அனேகமாகிய அலைகளுடனே கூடினதாய் அந்த வனங்களெல்லாம் நிரப்பி

அந்த இராசனுடைய சிங்கார வனத்திடை யிடைகளில் இராநின்ற ஓடைகள், தடாகங்கள், நதி தீரங்களையெல்லாம் நிரப்பித் திருப்பாற் கடலைப்போல வளைந்தது என்றவாறு. (33)

தென்னவிளநீர் - தென்னையின் இளநீர். கன்னல் - கரும்பு கொடிநாகை - நாகைக்கொடி - நாகை - வெற்றிலை. அரம்பை - வாழை. அரம்பைவளர்காடு - வாழைத்தோட்டம் ஓடைகடடாகநதி - ஓடைகள் + தடாகம் + நதி. வாரிதி - கடல்.

## Vaṉattiṉ ciṟappu

*teṉṉaviḷa nīrperiya kaṉṉalvaḷa racōkutikaḷ*
*tēkkilavu māva racucūl*
*naṉṉaya mikuntakoṭi nākaikaru nellimaru*
*malliyelu miccai nalatēṉ*
*poṉṉaruvi pōlperu varampaivaḷar kāṭatil*
*pukuntalaika ḷōṭu peyarā*
*maṉṉavaṉ vaṉañceṟiyu mōṭai kaṭaṭākanati*
*vāriti yeṉappe rukavē.*

## The Glory of the Grove

Coconut palms with water-rich nuts;
Sweet sugarcane; *Acōka* trees;
Teakwood, silk-cotton, mango, peepul,
The mast-wood; *karunelli, marumalli,*
Lemon; from them all flowed honey
Like a golden spring reaching
The grove of plantains and streamed forth
In waves. The rivulets, lakes
And rivers flowed as if they were oceans.

(வராகமூர்த்தி வனத்தை அழித்தல்)

252. சோலைக டிகழ்ந்தகமு குப்பனை கடுக்கைமணி
செண்பக மலர்ந்த பவளச்
சாலைகள் மிகுந்தஅகில் சந்தன மருத்துமதி
சாருமிகு சோலைக ளொலாங்

கோலமது கண்டுகளி கொண்டுமிகு தென்றல்கமழ்
கொண்டலெனச் சீறி வரைபோல்
தாள்கொடு துவைத்துகதிர் போரடி யடித்துகமழ்
தாருவை மடித்த னனரோ.

எ-து. அந்தச் சோலைகளிலே பிரகாசிக்காநின்ற திவ்விய பரிமளங்களையுடைய கமுகு, கூந்தற்பனை, கொன்றை, அழகிய செண்பகம், பவளச்சாலைகள் மிகுந்த சுகந்தத்தினையுடைய அகில்கள், சந்தன முதலாகிய நந்தன வனத்தில் தென்றலானது சஞ்சரித்து உலாவும, சந்திரன் தவழாநின்ற அந்தச்சோலையினுடைய வளத்தினையெல்லாம் கண்ணுற்ற வராக மூர்த்தியானவர் களிப்பையடைந்து மேகத்தைப்போலக் கர்ச்சித்து மலைபோன்ற திவ்விய திருவடிகளைக் கொண்டந்த விருட்சஙகளை எல்லாமுதைத்துச் சாய்த்து, உழவர்கள் கதிரினை யுடைய போரினை அடித்ததுபோல வனத்தினையெல்லாம் அழித்தா ரென்றவாறு. (34)

கடுக்கை - கொன்றை மணிசெண்பகம் - அழகிய செண்பக மரம் மருந்து - காற்று, தென்றல் கோலம் - அழகு. கொண்டல் - மேகம். வரை - மலை. தாள் - திருவடி, பாதம் தாரு - மரம்; வனம

## Varākamūrtti vanattai alittal

*cōlaika tikalntakamu kuppanai katukkaimani*
*cenpaka malarnta pavalac*
*cālaikal mikuntaakil cantana maruttumati*
*cārumiku cōlaika lelāṅ*
*kōlamatu kantukali kontumiku tenralkamal*
*kontalenac ciri varaipōl*
*tālkotu tuvaittukatir pōrati yatittukamal*
*tāruvai matitta nanarō.*

## Varāka Destroys the Grove

The Lord watched the grove
Rich in betel, palms, gallnut,
Champak where the breeze blew
Carrying the scent of eaglewood
And sandal; excited, he grew angry,
Shouted thunderously and kicked them

With his mountainous feet
And destroyed the grove like farmers
When they cut down paddy stalks.

(ஊழிக்காலம் போன்ற காட்சி)

253. மதித்திடு வராகமது தாள்கொடு துவைத்துவளர்
சோலைக ளழித்த திறலால்
வதித்திடு முயிர்த்தொகைகள் வானமதி னெய்தவரு
வோதைபெரு வூழி யெனவே
கொதித்திடு கதிர்ச்சுழலு மண்டல மெலாமறைய
கோகிலம தன்ன முதலாங்
கதித்திடு மிகுந்தபற வைத்திரள்க ளோலமிட
கண்டவன பாலர்க ளெலாம்.

எ-து. யாவராலுந் துதித்துக் கூறுதற்கரிதாகிய வராகமூர்த்தியானவர், எண்ணுதற்கு அசக்கியமாகிய விருட்சங்களையெல்லாம் தமது திருவடிகளைக் கொண்டந்த விருட்சங்களை யெல்லாம் உதைத்து, முறித்துப் பூமியிலே தள்ளுகின்ற வலிமையால், அந்த வனங்களில் வாசம் செய்கின்ற உயிர்த்தொகையாகிய சகல பட்சிசாலங்களும் பயந்து அங்ஙனம்விட்டு ஆகாயத்திலடைந்து, இதெனன ஊழிக்காலமென்றிரங்கித் திக்குத் திகாந்தங்களெல்லாம் சூழ்ந்து சூரியப் பிரபை தெரியாமல் இருள் மூடிக்கொள்ளப் பின்னையும் குயில் கூட்டங்கள், அன்னங்கள் முதலாகிய பறவைகளெல்லாம் மிகுந்த கோட்டத்தினாலே தொனிக்கா நின்ற காரணங்களைக் கண்டார்கள் வன பாலகர்க ளென்றவாறு. (35)

துவைத்தல - அழித்தல். வதித்தல் - வதிதல் - வசித்தல், தங்குதல். ஓதை - ஓசை கதிர் - சூரியன். கோகிலம் - குயில். கதித்தல - ஒலித்தல ஓலம் - அபயக்குரல். வனபாலர் - சோலையிலுள்ள காவலர்கள்.

உரை - அசக்கியம் - முடியாதது. பட்சிசாலம் - பறவைக்கூட்டம். கோட்டம் - கோஷ்டம் - ஆரவாரம், பேரொலி

## Ūḻikkālam pōṉṟa kāṭci

*matittiṭu varākamatu tāḷkoṭu tuvaittuvaḷar*
*cōlaika ḷaḻitta tiṟalāl*
*vatittiṭu muyirttokaikaḷ vāṉamati ṉeytavaru*
*vōtaiperu vūḻi yeṉavē*

*koṭittiṭu katircculalu manṭala melāmaraiya*
*kōkilama tanna mutalāṅ*
*katittiṭu mikuntapara vaittiraḷka ḷōlamiṭa*
*kanṭavana pālarka ḷelām.*

## As a Deluge

The way in which the great Varāka
Stamped the grove to destruction,
Chased away the living beings there
To the skies, was like a deluge.
The scorching sun and the manṭala
Of planets became invisible;
The guardians of the woods
Heard the nightingales and swans
Cry out for help.

(சோமுகன் செய்தியறிதல்)

254. நின்றபுகழ் கோலமதைக் கண்டவன காவலர்க
ணீள்சம னெனச்சி னவிவாள்
கொண்டெறிய சண்டமென வெண்டிசை யகன்றபடை
கோலமுத றிச்சி தறவே
சென்றரச னோடுமது சேனைமது ரம்பெருகு
திகழ்வன மெலாம்வ ரையின்வாழ்
பன்றிமதில் விண்டிட விடித்துட னழித்ததென
பண்பொடு நகைத்து மொழிவான்.

எ-து. அப்படி நரசிங்கம் போன்று நின்ற புகழினையுடைய வராகமூர்த்தியைக் கண்ட, வனத்தினைக் காக்கின்ற காவலாளர்களானவர்கள், நீண்ட எமனைப்போலக் கோபித்து வாளினைப் பிரையோகம் செய்தார்கள். வீராதிவீரர்கள் காண்டீபங்களில் தொடுக்காநின்ற கணை மாரிகளானவை, சண்டமாருதம் போல முழங்கிக்கொண்டுவந்து தாக்க, வராகமூர்த்தியானவர் [1]உரோமங்களைச் சிலிர்த்தமாத்திரத்தில் அந்தக் கணைமாரிகளெல்லாம் தூளாய்ச் சிதறப்பட்டுப் பொடிப்பொடியாய் நொறுங்கி வீழ்ந்ததைக் கண்ட தூதரானவர்கள்,

வாயுவேகம் மனோவேகமாய்ச் சென்று, அரசனைக்கண்டு, தெண்டன் சமர்ப்பித்துச் சுவாமி! உமது வனங்காப்பாளர்களானவர்கள் சிதறிய கணைகளையுமிபோ லுதிர்த்துத் தேன்களையுடைய கனிவர்க்கங்களும், புட்பவர்க்கங்களும் பொழியாநின்ற வனங்களை யெல்லாம பர்வதங்களிலே வாசம் செய்கின்ற ஒரு வராகமானது, காவினங்களைச் சூழ்ந்திராநின்ற மதிலினை இடித்துப் பொடிப்பொடியாக்கிக் காவலரை யெல்லாம் நீறாக்கிச் சிங்கம் போலக் கர்ச்சித்துச் சாரிகை திரிந்து, வெகுவாகிய துன்பம் செய்கின்றது என்கிற வார்த்தையைச் சோமுகனானவன் கேட்டபொழுதே கோபத்தால் நகைத்துக் கூறுகின்றா னென்றவாறு (36)

கோலம் - பன்றி. சமன் - யமன. சண்டம் - சண்டமாருதம் - பெருங்காற்று, ஊழிக்காற்று. உதறுதல் - சிதறிஅசைத்தல். சேனை - வனக்காவலர். மதுரம் - இனிமை. விண்டிடல் - இடிதல்.

உரை - நீறு - பொடி. சாரிகை - சுற்றி ஓடுதல்.

பா.வே. - 1 மயிரினைச்

## Cōmukaṉ ceytiyaṟital

*niṉṟapukaḻ kōlamataik kaṇṭavaṉa kāvalarka*
*nīḻcama ṉeṉacci ṉavivāḷ*
*koṇṭeriya caṇṭameṉa veṇṭicai yakaṉṟapaṭai*
*kōlamuta ṟicci taṟavē*
*ceṉṟaraca ṉōṭumatu cēṉaimatu ramperuku*
*tikaḻvaṉa melāmva raiyiṉvāḷ*
*paṉṟimatil viṇṭiṭa viṭittuṭa ṉaḻittateṉa*
*paṉpoṭu nakaittu moḻivāṉ.*

## Cōmukaṉ is Informed

The guardians of the woods perceived
The famous figure of Varāka;
Like Yamas they lunged at him
With swords; but even the arrows
That were aimed like cyclones at him
Splintered helplessly; the guardians
Went to the King and informed him

That the lovely grove with honey-streams
Was destroyed by a wild boar.
The king laughed angrily and said:

**(சோமுகன் வராகத்தை அழிக்கத் தன் படையை ஏவுதல்)**

255. **தேவரறி யாதுமுனி வோர்கள்நினை யாதுகமழ்**
**சோலைமதில் தென்றி சைமுதல்**
**காவலர் மறிந்துமக மேருவென நின்றகன**
**மாளிகை யழித்த தெனலால்**
**மூவர்முத லோர்கடிசை யோர்கள்கண நாதரொடு**
**முந்தியவல் வீர ரவரில்**
**யாவரெதிர் சென்றிடினு மின்றுவதை செய்தவரைக்**
**[1]கொண்டுவர வென்றுரை செய்தான்.**

எ-து. அப்போது இராச சூடாமணியாகிய சோமுகனானவன் யூகத்தலைவர், படைத்தலைவர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், அதிரதர், மகாரதர், அர்த்தரதர் முதலாகிய பேர்களைப் பார்த்துக் கூறுகின்றான். நமது உத்தியானவனத்தைத் தேவர்கூட்டங்கள் இது பரியந்தம் புகுந்து சஞ்சரித்தறியார்கள்; முனிவர்கூட்டங்கள் நினைந்தறியார்கள். அப்படியாகிய திவ்விய மணங்களை வீசாநின்ற சோலையினையும், அதை வளைந்த மதிட்காவலினையும் ஒரு பன்றியானது பிரவேசித்து சண்டமாருதம்போலக் கலக்கிக் காவலாளர்களாகிய வீராதிவீரர்கள் அனேகம்பேரைப் பிணக்குன்றம்பட மகமேருவைப் போலக் குவித்து, ஒரு கணத்தில் அழித்ததென்று தூதர்கள் கூறுந் தன்மையினாலே, மூவராகிய முதல்வர்களான பிரம்மா, விஷ்ணு, உருததிரர் ஆனாலும், திக்குக்காவலர்களும் கண நாதர்களும் முதன்மையாகிய வீராதி வீரர்களில் எவர்கள் வந்தெதிர்த்தாலும் அவர்களை யெல்லாம் இப்பொழுதே செயங்கொண்டு மீளக் கடவீரென்று இரத, கெச, துரக, பதாதிகளுக்கு ஆக்கியாபனம் செய்தான் இராச கண்டீரவனாகிய சோமுக னென்றவாறு. (37)

மறிந்து - அழிந்து. மூவர்முதலோர்கடிசையோர்கள் - மூவாமுதலோர்கள், திசையோர்கள்.

**உரை** - அதிரதர் - தலைமைதேரினை உடையோர் மகாரதர் - பதினோராயிரம் தேருக்குத் தலைவர் அர்த்தரதர் - தேர்ப்படைத்துணைவர்

**பா.வே.** - 1. மீள்திரென யாரையும்விட.

**எக்கியவராகத் திருஅவதார அத்தியாயம் முற்றிற்று.**

## Cōmukaṉ varākattai aḻikkat taṉ paṭaiyai ēvutal

*tēvaraṟi yātumuṉi vōrkaḷniṉai yātukamaḻ*
*cōlaimatil teṉṟi caimutal*
*kāvalar maṟintumaka mēruveṉa niṉṟakaṉa*
*māḷikai yaḻitta teṉalāl*
*mūvarmuta lōrkaṭicai yōrkaḷkaṉa nātaroṭu*
*muntiyaval vīra ravaril*
*yāvaretir ceṉṟiṭiṉu miṉṟuvatai ceytavaraik*
*koṉṭuvara veṉṟurai ceytāṉ.*

## Cōmukaṉ Sends His Army

'Our groves were unknown to gods;
The sages had not thought of it.
Since you say that this grove
With sweet scents blowing
And its fort that was like the *Mēru*
Was destroyed by the boar
Killing the guardians, take the army
And kill whoever dares to oppose,
Be it the Trinity, or the guardians
Of the directions, or the commanders
Of the divine army, or any other
Heroic opponent.

# 13. ஒன்பதாவது
# சேனாதிபதிகள் யுத்தம் உரைத்த அத்தியாயம்

பன்றியைக் கொன்றுவருமாறு கூறிய சோமுகனது கட்டளையை ஏற்றுக் கொண்ட சேனைவீரர்கள், உலகத்தை இருள் மூடியது போலவும், சத்த மேகங்களும் சூழ்ந்து மின்னி இடிமுழக்கத்தைச் செய்தது போலவும் வந்து வராகமூர்த்தியைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆயிரக்கணக்கான அம்புமழைகளைப் பொழிந்தார்கள். வராகமூர்த்தியானவர் அவற்றையெல்லாம் விழுங்கிக் கர்ச்சித்தார். மீண்டும் சேனைவீரர்கள் வடவாமுகாக்கினி யாகிய கணைகளைப் பொழிய அவற்றையும் விழுங்கி மகிழ்ச்சியோடு விளங்கினார். மீண்டும் சரக்கூடங்களைக் கட்டி அழல், விடம், சண்டமாருதம் ஆகியவற்றை உண்டாக்கும் பிரமாஸ்திரம் முதலான தேவ அஸ்திரங்களை விட்டார்கள். அச்செயலால் எட்டுத்திக்கும் கலங்கின; அயிராவதம் முதலான யானைகள் வீறிட்டன; கடல்கள் வற்றின; வடவைக்கனல் குளிர்ந்துபோயிற்று. இவற்றைக் கண்ட வராகமூர்த்தி அவற்றையும் விழுங்கினார். பலமுறை இவ்வாறு செய்து தோல்வியைக் கண்ட சோமுகனின் வீரர்கள் பர்வதாஸ்திரத்தைவிட்டு மலையினாலே அணைகட்டினார்கள். அதனால் வராகமானது இடையிலே அகப்பட்டு மயங்கிவிடும்; அதனைக் கண்டதுண்டமாக்கிவிடலாம் என்று கருதி வளைத்து நின்றார்கள். அம்மலையாகிய அணையைத் தமது திருவடிகளாலேயே உதைத்து அழித்துத் தமது உரோமத்தைச் சிலிர்த்து உதறினார் வராகமூர்த்தி.

மேலும் வீரர்கள் தண்டு, வாள், கோடரி, வேல், சூலம் போன்ற ஆயுதங்களை வீசி ஆரவாரம் செய்தனர். அவற்றால் பூமி நடுங்கித் தீயினைக் கக்கக் கடல்கள் வற்றின. ஆனால் வராகமூர்த்தி அவ்வீரர்களைக் கொன்று குவிக்க, அதனால் ஏற்பட்ட இரத்த வெள்ளமானது வற்றிய கடல்களை நிரப்பியது. இவ்வாறு நால்வகைப் படைகளும் அழிந்தன. பிணங்களை உண்டு களித்த பேய்கள், கழுகுகள் போன்றவை வராகமூர்த்தியைப் புகழ்ந்து பிணக்குவியலின் மீது ஏறி விளையாடின.

இச்செய்தியறிந்த சோமுகன் மேலுலகங்களிலுள்ள அசுரர் கூட்டங்களை யெல்லாம் நால்வகைப் படையுடன் அழைத்து வருமாறு சாரணரை ஏவினான். அவ்வாறே அசுரர் படைகள் பலவகை ஆயுதங்களோடும் படைத்தலைவர்களோடும் வந்து குவிந்தனர். அவர்களைக் கண்டு மகிழ்ந்த சோமுகன் தானும் போர்க்கோலம் பூண்டு, தும்பை மாலையணிந்து இரதத்தின் மீதேறினான். கொடிகள் ஆட பதினாயிரம் குதிரைகள், யானைகள், சிம்மங்கள், பூதங்கள் ஆகியவை பூட்டப்பட்ட அத்தேரானது பொன், வெள்ளி, நவரத்தினம் ஆகியவற்றால் அமைந்து கண்டநாதத்தால் எட்டுத்திக்கும் செவிடுபடச் செய்தது. அவ்வாறு படைகளோடு வந்த சோமுகனைக்கண்டு தேவர்கள் நடுங்கி ஓடினர். சராசரங்களும் அதிர்ந்தன; எட்டுத்திக்குகளும் நிலைகலங்கின; திக்கு யானைகளும் உதிரம் கக்கின;

அட்டநாகங்களும் செவிடுபட்டன; சூரியனது தேரில் பூட்டப்பட்ட குதிரை அசைவற்று நின்றது; எழுகடலும் கலங்கிச் சேறாயின. இந்த நிலையை உண்டாக்கிய சோமுகனின் நால்வகைச் சேனைகளும் ஆயிரங்கோடி அக்குரோணி அளவினைப் பெற்றிருந்தன.

**(வராகமூர்த்தி சோமுகன் படையை அழித்தல்)**

256. **தேர்கரிப தாதியொடு சென்றதைப் பிணிக்கவென**
**சேனைகள் மிகுந்த கடல்போற்**
**பாரதனி னடுங்ககொடு வாள்கதைக ளம்புகள்**
**படைத்தலைவர் வீரர்க ளெலாங்**
**காருலக மென்னகவி மேகமொடு மின்னிடி**
**கவிழ்ந்ததென கோல வரைமேற்**
**சாரசர தாரைதழல் பொங்குவது நுங்கிய**
**தனிப்பெருமை கண்டு புகழ்வார்.**

எ-து. இந்தப் பிரகாரம் இராசசேகரனானவன் நான்குவகைச் சேனைகளையும் அனுப்புவித்து அந்தப் பன்றியைச் [1]சம்மரியுங்களென்று ஆக்கியாபனம் பண்ண மாத்திரத்தில், அந்தச்சேனைக் கடலாகிய இரத, கச, துரக, பதாதிகளானவர்கள், இடிகளைப் போலக் கோஷ்டித்துப் பிரவேசித்த மாத்திரத்தில் பூமிகளெல்லாம் நடுநடுங்கத்தக்கதாய், ஆயுதங்கள், கதைகள், கணைக்கூட்டங்கள் முதலானவைகளைத் தாங்கிய படைத்தலைவர்கள், யூகத்தலைவர் முதலாகிய வீராதி வீரர்கள் பிரவேசித்ததெப்படி யிருந்ததென்றால், இருளானது உலகத்திலே பரந்துவந்து மூடிக் கவித்தது போலவும் ஆகாயத்தைச் சூழ்ந்த சத்த மேகங்களானவை மின்னலையும் இடிகளையும் ஒரேகாலத்திலே மின்னி, இடித்தது போலவும் பேரிகை, குடமுழா, சல்லரி, மல்லரி முதலாகியவை முழங்க வந்து வளைந்து கொண்டந்த வராகமூர்த்தியைக் கண்டு அளவிறந்த சீற்றங்கொண்டவர்களாய், வில்லை வளைத்து நாணேறிட்டுக் குணத்தொனிபண்ணி, ஒரு தொடைக்கு ஆயிரங் கோடியம்புகளைப் புங்காநு புங்கமாய் மேகமானது பொழிகின்ற மழையைப் போலத் தொடுத்தார்கள். அப்பொழுது பிரளய கால உருத்திரனைப் போலச் சீறி, அந்த வராகமூர்த்தியானவர் விழுங்கிக் கர்ச்சித்து, வீறிட்டார் அவரது ஒப்பற்ற புகழினைத் தேவர் கூட்டம், முனிவரீட்டங்கள் முதலாகிய பேர்களெல்லாம் புகழ்ந்து ஆச்சரியம் அடைந்து அற்புதம் பெருகினார்க ளென்றவாறு. (1)

கொடுவாள் - வளைந்தவாள் கதை - கதாயுதம், தண்டாயுதம், சரதாரை - அம்புமழை; சரம் - அம்பு நுங்குதல் - விழுங்குதல்

பா.வே. - 1 கொல்லவென்று.

## Varākamūrtti Cōmukaṉ paṭaiyai aḻittal

*tērkaripa tātiyoṭu ceṉrataip piṉikkaveṉa*
*cēṉaikaḷ mikunta kaṭalpōṟ*
*pāratani naṭuṅkakoṭu vāḷkataika ḷampukaḷ*
*paṭaittalaivar vīrarka ḷelāṅ*
*kārulaka meṉṉakavi mēkamoṭu miṉṉiṭi*
*kaviḻntateṉa kōla varaimēṟ*
*cāracara tāraitaḻal poṅkuvatu nuṅkiya*
*taṉipperumai kaṇṭu pukaḻvār.*

## XIII. The Commanders Battle

### Varāka Destroys Cōmukaṉ's Army

To kill the boar the army proceeded
Verily like an ocean with chariots, elephants
And infantry, making the earth shudder;
The heroic commanders of the divisions
Carried swords, maces and arrows.
It seemed as if darkness enveloped
The earth with clouds, lightning
And thunder; they aimed a shower
Of arrows on the boar like rains;
As the boar devoured it all,
Sages praised this unique wonder.

(போர் நிகழ்ச்சி)

257. வந்திடுவ ராகம்வட வைக்கனலை நுங்கிமகிழ்
கொண்டுவதி கின்ற விதனைத்
தந்திரமொ டுற்றுசர கூடமது கட்டியழல்
தங்கியிட பொங்கு புகழ்சேர்
எந்தைபடை யோடுமிகு தந்தபடை யாவும்விட
வெண்டிசை கலங்கி யெழில்சேர்
மந்திரரைக் கண்டுமிகு சுந்தர வராகமது
சீறிட மதித்த னர்களால்.

எ-து. அப்படியாய் வீரத்தன்மையினையுடைய வராகமானது மீட்டுமவர்கள் பொழிகின்ற வடவா முகாக்கினியினது கணைகளையெல்லாம் விழுங்கி மகிழ்ச்சியாய் விர்த்தித் திருக்காநின்ற செயலைக் கண்ட தள தந்திரங்களானவர்கள் வளைந்து கொண்டு சரக்கூடங்களைக் கட்டி அழலையும் விடத்தினையும், பிரசண்ட மாருதத்தையும் உண்டாக்காநின்ற பிதாமகன் படையாகிய பிரம்மாஸ்திரம் முதலான பிரபலமாகிய தேவாதிகளுடைய அஸ்திரங்களையெல்லாம் படைத்தலைவர்கள் விட்டார்கள். அதனாலே எட்டுத்திக்குங் கலங்கிட, அயிராவதம் முதலாகிய யானைகள் வீறிடக் கடல்களெல்லாம் வற்றிப் போக, வடவாவனலமானது குளிர்ந்து போகத்தக்கதாகப் பிரவேசித்து வரும் போதப்படிப் பிரயோகம் பண்ணிய மந்திரியர்கள் முதலாகிய பேர்களைக் கண்டு சுந்தரத்தோடுங் கூடிய அந்த எக்கிய வராகமூர்த்தியானவர் அவர்களைச் சீறிடத் தக்கதாய் [1]யூகித்து நின்றருளினா ரென்றவாறு. (2)

வடவைக்கனல் - ஊழித்தீ. தந்திரம் - தந்திரர் - தந்திரக்காரா, படைத்தலைவர். எந்தைபடை - பிதாமகனாகிய பிரமனது படை, பிரமாஸ்திரம

பா.வே. - 1 யூகித்து மதித்தருளினா ரென்றவாறு

## Pōr nikaḻcci

*vantiṭuva rākamvaṭa vaikkaṉalai nuṅkimakiḻ*
*konṭuvati kiṉra vitaṉait*
*tantiramo ṭuṟṟucara kūṭamatu kaṭṭiyaḻal*
*taṅkiyiṭa poṅku pukaḻcēr*
*entaipaṭai yōṭumiku tantapaṭai yāvumviṭa*
*veṇṭicai kalaṅki yeḻilcēr*
*mantiraraik kaṇṭumiku cuntara varākamatu*
*cīṟiṭa matitta ṉarkaḷāl.*

## The Battle

Watching the heroic boar devour further
The missiles that resembled the deluge - fire,
The commanders encircled it
Caging it with arrows
And directing fire, the Piramaṉ missile,
And the missiles of other gods at it.
The eight directions shuddered.

Looking upon these ministers of war
The handsome boar stood, poised
For the forthcoming attach.

(வராகம் சோமுகன் படையை மிதித்தல்)

258. கண்டனர் கனன்றனர் கலங்கினர் கடுஞ்சம
ரகன்றகளை விடுத்தி றலினால்
அண்டமுக டெண்டிசை யகன்றவரை சூழ்ந்திட
வழுந்திய வராக மதனைத்
துண்டமிடு வோமென நெருங்கினர் மிகுந்தபுகழ்
சேனைக ளெலாங்க டலதாய்
நின்றனர் வராகமது தாள்கொடு துவைத்துவரை
நீள்கணை யெலாஞ்சி தறவே.

எ-து. அந்த மந்திரியர் முதலாகிய பேர்கள் பிரயோகித்த பிரம்மாஸ்திரம் முதலானதெல்லாம், கோரரூபமாய் வருகிறதைக் கண்ட எக்கிய வராகமூர்த்தியானவர் கோபித்து அந்தக் கணைகளையெல்லாம் விழுங்கிக் கர்ச்சித்தார் அதைக் கண்ட வீராதி வீரர்களானவர்கள் மறுபடியும் அக்கினிக் கணைகளைவிட்ட திறத்தினாலே வெற்றியாகு மென்றெண்ணினார்கள். அதையும் விழுங்கக் கண்டு யூக புத்தியினால் ஆலோசித்து மீட்டும் பர்வதாஸ்திரத்தை விட்டு அவரைச் சூழ மலையினாலே அணை கட்டினார்கள் அதன் பின்பு நடுப்பிரதேசத்தில் அகப்பட்ட வராகமானது கலங்கி மயங்கிற்று என்று கருதினவர்களாய் அதைக் கண்டதுண்டப்படுத்துவோ மென்று நெருங்கி, மிகுந்த புகழினையுடைய சேனைகளெல்லாம் கடல் போல வளைந்து நின்றார்கள். அப்பொழுதந்த வராகமானது பாதத்தைக் கொண்டு பர்வதக்காவலை இடித்துத் தூளாக்கி நீண்ட பாணங்களை யெல்லாம் சிதறச்செய்ததென்றவாறு. (3)

கனன்றல் - கோபித்தல். முகடு - உச்சி. துவைத்தல் - நாசமாக்குதல்.

## Varākam Cōmukan̲ paṭaiyai mitittal

*kaṇṭan̲ar kan̲an̲ran̲ar kalaṅkin̲ar kaṭuñcama*
*rakan̲rakaḷai viṭutti ṟalin̲āl*
*aṇṭamuka ṭeṇṭicai yakan̲ravarai cūḻntiṭa*
*vaḻuntiya varāka matan̲ait*
*tuṇṭamiṭu vōmen̲a neruṅkin̲ar mikuntapukaḻ*
*cēn̲aika ḷelāṅka ṭalatāy*
*nin̲ran̲ar varākamatu tāḷkoṭu tuvaittuvarai*
*nīḷkaṇai yelāñci taṟavē.*

## Varāka Tramples Cōmukaṉ's Army

Watching them the Lord was incensed
And devoured all the missiles
Directed at him. They bound him
With the encircling mountains
And drew close to the Varāka
Making a vow to cut him to pieces.
The famous ranks of the army
Stood in serried formation
Like the ocean. But the Varāka
Stamped them to nought with its feet.

(பிணமலை)

259. கொண்டலெனச் சீறிமழு தண்டமொடு வாள்கதை
செறிந்தவயில் சூல முடனே
அண்டமு நடுங்கவழல் கொண்டுகடல் வெம்பியிட
வட்டகெசம் வீற வழிசூழ்
கின்றரத யானைபரி சேனைகளை வாரிபுவி
சிந்திட இறைத்து ரணபோர்
கன்றிட குவித்துமகிழ் கொண்டடி துவைத்துகடல்
சென்றிட வுதித்த வுதிரம்.

எ-து இப்படி எக்கிய வராகமூர்த்தியானவர் பர்வதத்தினாலே கட்டிய அணைகளையெல்லாம் இடித்து உரோமத்தைச் சிலிர்த்து உதறின மாத்திரத்திலே, சேனைகளெல்லாம மேகததைப் போலக் கர்ச்சித்துச் சீறி, கண்டகோடரி, தண்டு, வாள்கள், வச்சிராயுதம், வேலாயுதம், திரிசூலங்களைவிட்டு ஆர்ப்பரித்தார்கள். அதனாலே அண்ட கடாகங்களெல்லாம் நடுங்கி அக்கினியைச் சுவாலித்ததனாலே கடல்களெல்லாம் வெம்பிக் கரகரவென்று கலங்கிச சுழன்றிட வந்து தாக்கிப் பொடியாச்சுது. அந்த வராகத்தைச் சூழ்ந்த வனிகங்களாகியதை வாரி நான்கு திக்கினும் வீசியெறிந்து, ரணப்போர்களிலே யாவரும் குன்றிப்போகத் தக்கதாகக் குவித்துப் பல பேர்களை உதைத்துருட்டும்போது இறந்து குவிந்த பிணமலைகளில் தோன்றிய உதிரவெள்ளமானது கடலினை நிறைத்த தென்றவாறு. (4)

உரை - அனிகம - அனீகம் - படை.

## Piṇamalai

*koṇṭaleṉac ciṟimaḻu taṇṭamoṭu vāḷkatai*
*ceṟintavayil cūla muṭaṉē*
*aṇṭamu naṭuṅkavaḻal koṇṭukaṭal vempiyiṭa*
*vaṭṭakecam viṟa vaḻicūḻ*
*kiṉṟarata yāṉaipari cēṉaikaḷai vāripuvi*
*cintiṭa iṟaittu raṇapōr*
*kaṉṟiṭa kuvittumakiḻ koṇṭaṭi tuvaittukaṭal*
*ceṉṟiṭa vutitta vutiram.*

## A Mountain of Corpses

The army rose up like clouds
Holding axes, maces, sticks and swords,
And tridents. As the universe shook,
The seas boiled over, having caught fire.
Varāka destroyed with great pleasure
All the chariots closing upon him,
The elephants and the infantry,
Scattering them in a dire battle
And raised a mound of corpses
While the blood streamed into the sea.

(சோமுகனின் கோபம்)

260. வீரர்கள் மடிந்தனர்க டேர்கரி பதாதிகள்
மிகுந்த வுதிரத்தின் விரிவால்
பார்தனைப் பிளந்துநதி யோடிரண முண்டுபல
கூளிக ணடம்ப யிலவே
சீர்புகழ் கழுக்கள்அதி னேறிவிளை யாடிய
சிறந்ததிறல் கூறு மளவின்
வார்சிலை தரித்தமுடி மன்னவ னழன்றுமதி
விண்டுமொழி கின்ற னனரோ.

எ-து இந்தப் பிரகாரம் எக்கிய வராகமூர்த்தியினாலே வீராதி வீரர்களெல்லாம் மடிந்துவிட்டார்கள்; தேர்க்கூட்டம், யானைக்கூட்டம், பதாதி யீட்டங்களினுடைய மிகுதியாகிய வெள்ளப் பிரவாகத்தினாலே பூமிகள் பிளக்கப்பட்டு, [1]நதியினைப் போலப் பிரவேசித்த அந்த விரத்தங்களையும் நிணங்களையும் உண்டு களித்துப் பல பசாசுக் கூட்டங்களானவை நடனஞ் செய்ய, அந்த வராகமூர்த்தியினது கீர்த்தியைக் கூறிப் புகழ்ந்து, கழுகுக் கூட்டங்களானவை அந்தப் பிணமலைகளில் ஏறி விளையாடின அதைக்கண்ட வாயுவேக, மனோ வேகமாகிய தூதரானவர் அந்த வராகத்தினது திறனையெல்லாம் கண்டபடியே, இராச சூடாமணியாகிய சோமுகனைக் கண்டு தெண்டன் சமர்ப்பித்துக் கூற, அதைக்கேட்ட மாத்திரத்திலே அதிக கோபம் பிரவேசித்தவனாய் யாவரையும் வெறுத் தொருமொழி கூறுகின்றா னென்றவாறு. (5)

மடிந்தனர்கடோகரி - மடிந்தனர்கள் + தேர் + கரி. இரணம் - இரை; இரத்தம், கொழுப்பு முதலானவை கூளிகணடம்பயில - கூளிகள் + நடம்பயில கழுக்கள் - கழுகுகள்

**உரை** - நிணம் - கொழுப்பு

பா.வே - 1 தீயினைபபோல

## Cōmukaṉiṉ kōpam

*vīrarkaḷ maṭintaṉarka ṭērkari patātikaḷ*
*mikunta vutirattiṉ virivāl*
*pārtaṉaip piḷantunati yōṭirana muṉtupala*
*kūḷika naṭampa yilavē*
*cīrpukaḻ kaḻukkaḷati ṉērivilai yāṭiya*
*ciṟantatiral kūṟu maḷaviṉ*
*vārcilai tarittamuṭi maṉṉava ṉaḷaṉṟumati*
*vinṭumoḻi kiṉṟa ṉaṉarō.*

## Cōmukaṉ Incensed

"The soldiers are dead.
The chariots, elephants and infantry
Have been destroyed; the resulting blood
Has been cleaving the earth
As rivers. Spirits feeding on corpses
Are dancing in the battlefield.
Flights of vultures are playing there."

As this message was conveyed
To the crowned king who holds
The well-wrought bow, he grew angry
And spoke with great frustration:

**(சோமுகன் அசுரப் படைகளை அழைத்தல்)**

261. **காருலக மேமுதல் கடந்தவுல கத்தரசர்**
**கண்டமிசை நின்ற வசுரர்**
**மேருவரை யாமென விளங்கிய ரதங்களொடு**
**வீரர்முத லோர்கள் வருகச்**
**சாருமெனச் சாரணர் அழைத்தவுல கத்திடை**
**தனித்தனி யுரைத்த மொழியால்**
**பாருயிர் நடுங்ககட லேழுமுடை கின்றன**
**படர்ந்தன மிகுந்த வனிகம்.**

எ-து. இருள் பரந்த உலக முதலாகிய லோகத்தையெல்லாம் கடந்தப்பால் மேல்நின்று உயர்ந்த உலகத்தைக் காக்கநின்ற [1]அரசர் கூட்டங்களையும், நவகண்டங்களில் இருக்காநின்ற அசுரக் கூட்டங்களையும், மகமேருவினையொத்தனவாகிய இரத பந்திகளையும் வீராதி வீரர்களையும் வரக் கடவதென்று தூதரைப் பார்த்துக் கூறினான் இராச சூடாமணியானவன் ஏவல் பணிவிடையின்படி சுக சாரணர்கள் அந்தந்த லோகங்களில் சார்ந்து சகலருக்கும் அறிக்கையிட, அந்த வாக்கியாபனத்தால் உலகமெல்லாம் நடுங்கக் கடல்களேழும் அணை புரண்டு மடைதிறந்தது போலச் [1]சார்ந்தார்கள் மிகுதியாகிய நான்குவகைச் சேனைகளும் திரண் டென்றவாறு. (6)

காருலகு - நீரால் சூழப்பட்ட நிலவுலகு; கார் - மேகம், நீர். கண்டம் - நவகண்டம் - ஒன்பது கண்டம்; அவை - கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம, மத்திமகண்டம் என்பன அனிகம் - படை.

பா.வே. - 1. வந்தார்கள்.

## Cōmukaṉ acurappaṭai kaḷai aḻaittal

*kārulaka mēmutal kaṭantavula kattaracar*
*kaṇṭamicai niṉṟa vacurar*
*mēruvarai yāmeṉa viḷaṅkiya rataṅkaḷoṭu*
*vīrarmuta lōrkaḷ varukac*

*cārumeṉac cāraṉar aḻaittavula kattiṭai*
*taṉittaṉi yuraitta moḻiyāl*
*pāruyir naṭuṅkakaṭa lēḻumuṭai kiṉraṉa*
*paṭarntaṉa mikunta vaṉikam.*

## Cōmukaṉ Invites the Acura Army

As the messengers went around
Inviting the kings who rule the lands beyond,
And the Acura chieftains everywhere
To come with their mountainous chariots
And soldiers, there began to assemble
Innumerable armies, shocking the world
And putting the seven seas to boil.

(படை திரண்டு வருதல்)

262. **இரதமொடு யானைபரி கால்பலமு மெல்லாந்**
**துரிதமொ டெழுந்துசர தூணிக ளிறுக்கி**
**விரதமதில் கொண்டபடை யாவையுமுன் வீக்கித்**
**தரையதனின் மூடவரு தானைகடல் கண்டார்.**

எ-து. அப்படி யாக்கியாபித்த சோமுகனுடைய உத்தரவு பிறந்தமாத்தரத்தில் இரத, கச, துரக, பதாதிகளாகிய நான்கு வகைச் சேனைகளும், மந்திரியர், பிரதானியர், யூகத்தலைவர், அணித்தலைவர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், மகாரதர், அர்த்தரதர் முதலாகிய வீராதி வீரர்களெல்லாம் அஸ்திர சாலைகளில் பிரவேசித்து, வீரலட்சுமியைத் தோத்தரித்து, மந்திரத்தை உச்சரித்து, அர்ச்சனை, ஆராதனை முதலாகிய பூசைகள் நிரப்பி, ஆயுதங்களுக்குத் தெண்டன் [1]சமர்பித்து, வில், வாள், வேல், சூலம், கதை, கண்டகோடரி, இருப்புலக்கை, பிண்டி, பாலமுசுண்டி, கழு, முள்ளாயுதம் முதலாகியதை எடுத்து, அம்பறாத்தூணிகளை முதுகினில் இறுக்கிக கட்டி, இரதங்களில் ஆரோகணிதமாய் வெளிப்பட்டார்கள். உலகங்களெல்லாம் மூடிக்கொண்டு வரும்படியாகிய நான்கு வகைச் சேனைகளையும் கண்டான் [2]இராச சேகரனாகிய சோமுக னென்றவாறு. (7)

காலபலம் - காலாட்படை. சரதூணி - அம்புக்கூடு தானை - சேனை

**உரை** - மகாரதர் - பதினோராயிரம் தேருக்குத்தலைவர் அர்த்தரதர் - துணையாக வரும் தோப்படையினா அஸ்திரசாலை - அம்புக்கொட்டில். பிண்டி - அசோகு பாலம் - மழு. முசுண்டி - மடடிப்படை

பா வே . 1 சமாப்பித்தெடுத்தார்கள 2 ராச சேகரகண்டீவரன்

## Paṭai tiranṭu varutal

*iratamoṭu yāṉaipari kālpalamu mellān*
*turitamo ṭeluntucara tūṇika ḷirukki*
*viratamatil koṇṭapaṭai yāvaiyumuṉ vīkkit*
*taraiyataṉiṉ mūṭavaru tāṉaikaṭal kaṇṭār.*

## The Armies Come

Chariots, elephants, cavalry,
And infantry assembled in a trice;
After tying up the quivers of arrows
They worshipped with rituals
And rushed forward, covering the earth.
Cōmukaṉ saw this oceanic army.

(சோமுகனின் போர்க்கோலம்)

263. **தன்னுடைய தேர்தருக விக்கண மெனத்தன்**
**பொன்னவிரு மாளிகையுள் புக்குபடை சாலை**
**மின்னுகவ சங்கதிர் விளங்கபணி வீக்கி**
**உன்னித முடிச்சிரசின் ஒத்திட வணிந்தான்.**

எ-து. இந்தப் பிரகாரம் வருகின்ற சயினியங்களைக்கண்ட இராசசூடாமணியாகிய சோமுகனானவன், தனது தூதர்களை வரவழைத்து, இரத சாரதியைத் தமது இரதத்தை நடாத்திவரும்படி யாக்கியாபித்துத் தனது ஆயுதசாலையில் பிரவேசித்து, கிரீடம், மகர குண்டலம், அஸ்தகடகம், இரத்தினகபாயிகள், முத்த மாலை, மாணிக்க மாலை முதலாகிய சர்வாபரண பூசிதனாய்த் திருவடியின் மீது தும்பை மாலையும் அணிந்தா னென்றவாறு. (8)

இக்கணம் - இப்பொழுது, படைசாலை - ஆயுதக்கொட்டில், பணி - ஆபரணம் உன்னிதம் - உயர்வு, வீக்கி - இறுக்கிக்கட்டி

**உரை** - கபாய் - நிலைஅங்கி, திருவடியில் தும்பைமாலை என்பது உரையில் மட்டும் காணப்படும் புதிய, மாறுபட்ட செய்தியாகிறது

## Cōmukaṉiṉ pōrkkōlam

*taṉṉuṭaiya tērtaruka vikkaṇa meṉattaṉ*
*poṉṉaviru māḷikaiyuḷ pukkupaṭai cālai*
*miṉṉukava caṅkatir viḷaṅkapaṇi vīkki*
*uṉṉita muṭicciraciṉ ottiṭa vaṇintāṉ.*

## Cōmukaṉ in battle Array

Commanding his chariot to be brought
That very moment, he entered the armoury
In his golden palace, and arrayed himself
In shining armour, gleaming ornaments
And a high-rise crown.

(சோமுகன் வில் ஏந்துதல்)

264. மந்திர மதிற்புனையும் வாசுகியை யொப்பால்
தந்திடுபொற் கச்சையிடை சாத்தியுடை வாளு
முந்தவவிர் கேடையமு முன்னவிரல் தூணி
யந்தமுற வீக்கிப்பொன் னருஞ்சிலை யெடுத்தான்.

எ-து அப்படியாகச் சர்வாபரண பூசித அலங்கார ரூபலாவணியமாகிய சோமுகராசகண்டீரவனானவன், திருப்பாற்கடலிலே மந்தரகிரியை மத்தாய் அமைத்து, வாசுகியாகிய சர்ப்பத்தைக் கயிறாய்ப்பூண்டு சுற்றின தன்மையைப்போல, மிகுந்த பிரகாசத்தினையுடைய சொர்ண கச்சையை இடுப்பிலே கட்டினவனாய், அந்தப் பக்கத்திலே உடைவாளைத் தொங்கக்கட்டி, ஈட்டி, எறிஈட்டி, சூரிகை, வாங்கு முதலாகியதெல்லாம் விதமவிதமாய் அணிந்து, அவனது அஸ்தங்களில் கேடையம் விளங்கப் பத்து விரல் களுக்கும் விரல் தூணிகள் அணிந்து, முதுகிலே அம்பறாத்தூணியினைக் கட்டி, சொர்ண மயமாகிய மகமேருவுக்குச் சமதையான தனுசைக் கையிலே தாங்கினா னென்றவாறு. (9)

மந்திரம - மந்தரகிரியாகிய மலை வாசுகி - எட்டுநாகங்களில் ஒன்று. பூமியைக் கிழக்குத் திக்கில தாஙகிநிற்பது பாற்கடலைக் கடையும்போது மத்தின் கயிறாகப் பயன்பட்டது. அட்டநாகங்கள்: அனந்தன், கார்க்கோடகன், குளிகன், சஙகபாலன், தககன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்பன. இவை எடடுத்திககும் தாங்குவன இடைப்பகுதியைத் தாங்கி நிற்பது சேடன். இவற்றை நவநாகங்கள் என்பர் கச்சை - இடையிறகடடும கவசம். விரல்தூணி - விரலில் கட்டும் அமபுதாங்கி. சிலை - வில்

உரை - சூரிகை - கத்தி. வாங்கு - வளைந்த கத்தி. அஸ்தம் - கை தனு - வில்.

## Cōmukaṉ vil ēntutal

*mantira matirpuṉaiyum vācukiyai yoppāl*
*tantiṭupoṟ kaccaiyiṭai cāttiyuṭai vāḷu*
*muntavavir kēṭaiyamu muṉṉaviral tūṇi*
*yantamuṟa vīkkippoṉ naruñcilai yeṭuttāṉ.*

## Cōmukaṉ Takes up the Bow

Like Vācuki that encircled
The *Mantara* Mountain, he bound
A golden belt to his waist;
Hung a sword from it; took for himself
A shield; wearing finger caps
He bound the quiver and raised the golden bow.

(சோமுகனின் புறப்பாடு)

265. காலதனின் வீரகழல் கட்டிபுய கீர்த்தி
மேலில்மணி மாலைகள் விதம்வித மணிந்து
கோலநுதல் பட்டமொடு கைக்குதை யணிந்து
சாலகவ சப்படை தனித்தனி யெடுத்தான்.

எ-து. அந்தச் சோமுகனானவன் தனது பாதங்களிலே வீரகண்டாமணி தரித்து இரண்டு புயங்களிலும் மகமேருவுக்குச் சமதையாகிய புயகீர்த்தி யணிந்து, மார்பகத்திலே முத்துமாலை மோகன மாலை, மாணிக்க மாலைகள் கோடானுகோடி யணிந்து, தன்னிட நெற்றியிலே வீரப்பட்டம் தரித்து, பத்துவிரல்களிலும் விரல்சரடு, கரசரடுகள் அணிந்து, கோடி சூரியனுதித்தது போலத் திவ்வியாஸ்திரங்கள் அமோகமாயெடுத்துக் கொண்டு புறப்பட்டா னென்றவாறு (10)

கைக்குதை - கையில் கட்டும் சரடு

## Cōmukaṉiṉ puṟappāṭu

*kālataṉiṉ vīrakaḻal kaṭṭipuya kīrtti*
*mēlilmaṇi mālaikaḷ vitamvita maṇintu*
*kōlanutal paṭṭamoṭu kaikkutai yaṇintu*
*cālakava cappaṭai taṉittaṉi yeṭuttāṉ.*

## Cōmukaṉ Journeys Forth

With victory - anklets on his feet
The shoulder-ornaments in place,
The chest a-gleam with garlands of gems,
The victory-ornament on his forhead,
The king wore bracelets
And gathered several missiles as well.

(சோமுகனின் இரதம்)

266. யோசனை யிரண்டகல நீளமொரு வெட்டாந்
தூசுகொடி சீலைமிகு சுற்றினிலு மொய்த்தார்
காசமுறு பொற்குடை கவித்தமதி யென்ன
வாசிபதி னாயிரம் வரிக்குமணித் தேரே.

எ-து. அப்படி ஆரோகணிதமாகிய [1]இராச சூடாமணியான சோமுகனானவனது இரதமானது எப்படிப் பிரகாசிக்குதென்றால், இரண்டு யோசனை அகலமுள்ளதான இரதமானது எட்டு யோசனை உன்னதமாய் விளங்குகின்ற அழகு தங்கின துச படங்களானவை, நட்சத்திர மண்டலங்களிலே பிரகாசிக்க ஆயிரத்தெட்டுமாற்றுச் சொர்ணத்தால் காம்பினை உடைய தவளசசத்திரக் குடையானது சந்திரமண்டலத்திலே [2]பிரகாசிக்கப் பதினாயிரமசுவம் பூண்ட மணி மயமானதாய் அந்த இரதமானது விளங்கிற் றென்றவாறு (11)

யோசனை - யோசனைதூரம் - ஓர் அளவு. தூசு - சீலை, துணி. காசம் - ஆகாசம் வாசி - குதிரை வரிக்கும - கடடப்பட்ட

உரை - துசபடம - துணிக்கொடி. தவளச்சத்திரம் - வெண்கொறறக்குடை. அசுவம் - குதிரை.

பா.வே. - 1 ராச சூடாமணி, பூமி சூடாமணியாகிய சோமுக 2 தேர்ச்சீலை, கொடிச்சீலை வாயுமணடலத்திலே பிராசிக்கப் பதினாயிர

## Cōmukaṉiṉ iratam

*yōcaṉai yiraṇṭakala nīḷamoru veṭṭān*
*tūcukoṭi cīlaimiku cuṟṟiṉilu moyttār*
*kācamuṟu poṟkuṭai kavittamati yeṉṉa*
*vācipati ṉāyiram varikkumaṇit tērē.*

## Somukha's Chariot

His chariot was of two yojanas
In breadth; eight yojanas
In length. The cloth of the flag
Swirled above; its golden umbrella
Touched the sky and was like
A full moon; a thousand horses
Drew this gem-encrusted chariot.

(தேரைச் செலுத்துதல்)

267. ஆழியது [1]பொன்னுருளாம் அச்சதுவும் வெள்ளி
பாழிபடு பாரது பருத்தவயி ரங்கால்
மாழைதரு செம்பவள மாகுமிர தம்[2]மேல்
சூழுபண மணிக்குலமுஞ் சுற்றிலு மிழைத்த.

எ-து. பின்னையும் அந்த இரதமானது எப்படிப் பிரகாசித்ததென்றால, வண்டில்களானவை சொர்ணத்தினாலே விளங்குகின்றன. பின்னையும் அதனதச்சுகளானவை பிரகாசத்தினையுடைய வெள்ளியினாலே விளங்குகின்றன. பின்னும் அச்சு, மச்சுக், குத்துக்கால், கொடுங்கை, தேவாசனமாகியவை நவரத்தினமயமான அந்த இரதத்தில் கட்டிய கண்ட நாதங்களால் அட்டதிக்கும் செவிடுபட்டுப் போகத்தக்கதாய் நடத்தினான் இராச சேகரனாகிய சோமுக னென்றவாறு. (12)

ஆழி - சக்கரம். பாழி - அகலம், வலிமை. பார் - தேரின்பரப்பு கால் - தேருருள, சக்கரம். மாழை - அழகு. பணமணி - நாகமணி.

உரை - கொடுங்கை - தேரின் ஓர் உறுப்பு, உள்வளைவுப்பகுதி

சு.சொல் - 1. பொன்னுருளும். 2. போல்

## Tēraic celuttutal

*āḻiyatu poṉṉuruḷām accatuvum veḷḷi*
*pāḻipaṭu pāratu paruttavayi raṅkāl*
*māḻaitaru cempavaḷa mākumira tammēl*
*cūḻupaṇa maṇikkulamuñ cuṟṟilu miḻaitta.*

## Driving the Chariot

The wheels were of gold; the axle
Of silver; on the vast stretch
Of land, ornamented beautifully,
The chariot of red corals and gems
Spewed by serpents moved forward.

(தேரில் சோமுகன்)

268. விண்ணவரும் மண்ணவரு மஞ்சவிறல் வீரன்
கண்ணிமையின் முன்னரண் மனைக்கடையில் வந்து
மண்ணதிர வந்தமணித் தேரினி லிவர்ந்து
திண்ணமுறு நாப்பணில் திகழ்ந்திரவி யானான்.

எ-து அப்படி மகமேருவுக்குச் சமதையாகிய இராசராசப் பிரபுடீகராசகண்டீரவனாகிய சோமுகனானவன் இரத, கச, துரக, பதாதிகளாகிய நான்கு வகைச் சேனைகளும் தன்னைச் சூழ்ந்து ஆயுதபாணிகளாய் நடக்கின்ற பராக்கிரமத்தைக் கண்ட தேவர்களெல்லாம் நடுங்கியோட்டமெடுக்கப் பூலோகத்திலிருக்கின்ற சராசரங்களெல்லாம் திடுக்கிட்டு நடுநடுங்கத் தக்கதாய், வீரகண்டாமணியினுடைய நாதங்களானவை பேரிடி முழக்கத்தைப்போலத் தொனிக்காநின்ற உதயகிரிக்குச் சமதையாகிய [1]இரதத்தின்பேரில் ஆயிரங்கிரண சமூகங்களையுடைய சூரியனைப்போலப் பிரகாசித்தான் சோமுக னென்றவாறு. (13)

விறல்வீரன் - பெருமையும் வலிமையுமுடைய வீரன். கடை - புறவாயில் இவர்தல் - ஏறி அமர்தல். நாப்பண் - தேரின் நடுவில் இரவி - சூரியன்

**உரை** - பிரபுடீகன் - பெருமையிற் சிறந்தோன் கண்டீரவன் - சிங்கம் போன்றவன். சராசரம் - சரம் + அசரம்; சரம் - அசைவன - இயங்கும்பொருள்; அசரம் - இயங்காப்பொருள்.

பா.வே. - 1 தேரினபேரில்

## Tēril Cōmukaṉ

*viṇṇavarum maṇṇavaru mañcaviṟal vīraṉ*
*kaṇṇimaiyiṉ muṉṉaraṉ maṉaikkaṭaiyil vantu*
*maṇṇatira vantamaṇit tēriṉi livarntu*
*tiṇṇamuṟu nāppaṇil tikaḻntiravi yāṉāṉ.*

## Cōmukaṉ in the Chariot

As the denizens of the earth
And the immortals in the sky
Grew afraid, the hero came to the entrance
Of the palace shaking the earth,
Ascended the jewelled chariot
And sat in its centre like the sun.

(பலவகைப் பேரிகை முழக்கம்)

269. மேருவினைப் பலவரைகள் மொய்த்தவென வந்து
சூரரொடு கோடிதுணை சூழ்ந்துவர முன்னங்
காரொளி யெனப்பறை கறங்குபல் லியங்கள்
வேரினொடு பேரிகை விளங்கிட நடந்தான்.

எ-து. அப்படிச் சொர்ணப் பிரகாசமாகிய மகமேருவானது நடக்கின்றது போலச் சோமுக ராசன் இரதமானது நடக்க, சரியொத்த மந்திரிப் பிரதானிகளுடைய இரதங்களானவை அஷ்டகுலாசல பர்வதமானது சூழ்ந்து வருகின்றதுபோ லிருபுறத்தினும் நடக்கத்தக்கதாகச் சப்தசாகரங்களும் கரைபுரண்டு வருகின்ற தன்மையினவாய்த் தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக் கருவி, முதலாகிய பஞ்சநாதத் தொனிகளும் மேகசத்தங்களைப் போல [1]முழங்க, இராய பேரிகை, இரண பேரிகை, செயபேரிகை, அறைவிக்க நடந்தான் சோமுகராச னென்றவாறு. (14)

வேரினொடு பேரிகை - காரணத்தோடுகூடிய பேரிகைகள். அவை : கொடை, மணம், வீரம், போர், வெற்றி ஆகிய காரணங்களால் ஒலிக்கச் செய்வது பேரிகை - முரசு

பா.வே. - 1. முழங்கிக் கோடைகாலத்திடிகளைப் போலச் சத்திக்க நடந்தா னென்றவாறு

## Palavakaip pērikai muḻakkam

*mēruviṉaip palavaraikaḷ moyttaveṉa vantu*
*cūraroṭu kōṭituṇai cūḻntuvara muṉṉaṅ*
*kāroḷi yeṉapparai kaṟaṅkupal liyaṅkaḷ*
*vēriṉoṭu pērikai viḷaṅkiṭa naṭantāṉ.*

## The Drums Resound

*As if several mountains had come*
To crowd around *Mēru* Mountain,
As crores of heroes came in company,
He proceeded while drums resounded
And other instruments set the rhythm.

(நால்வகைப் படை)

270. **தேரினுறு திக்குகளில் சிம்மமொடு பூதம்**
**வேரினொடு பொன்வரை வசிக்குமது போலாம்**
**பாரின்மிசை சூதனைப் பணித்திரத மூர்ந்து**
**போரின்மிசை வீரரொடு போயினர்க ளன்றே.**

எ-து. அப்படி மகமேருவுக்குச் சமதையாய் நடக்கின்ற இரதத்தினது ஒரு திக்கிலே பதினாயிரம் சிம்மம் பூட்டியும் ஒரு திக்கிலே பதினாயிரம் பூதம் பூட்டியும், ஒரு திக்கிலே பதினாயிரம் [1]மதயானைகளைப் பூட்டியும், மற்றொரு திக்கிலே பதினாயிரம் அசுவங்களைப் பூட்டியும், நடத்துகின்ற மகாமேருவை ஒத்த அந்த இரதமானது வாயு வேகம், மனோ வேகமாய் நான்கு வகைப்பட்ட சேனைகளானவை சூழ்ந்து வர நடந்தான் சோமுகராச னென்றவாறு. (15)

தேரினுறுதிக்குகள் - தேரின் முன்பக்கத்திலுள்ள நான்கு முழுச் சங்கிலிகள் அமைந்த திக்குகள் எனக்கொள்ள வேண்டும். இடப்புறம் ஒன்று; வலப்புறம் ஒன்று; இடையிலே இரண்டு ஆக நான்கு சங்கிலிகள் அமைத்து அவற்றிலே குதிரைகள் பூட்டப்படும். சோமுகனின் தேரில் நான்கு சங்கிலிகளிலும் முறையே சிங்கம், பூதம், யானை, குதிரை ஆகியவை பூட்டப்பட்டிருந்தன என்பது உரை விசித்தல் - வலித்துக்கட்டப்படுதல் சூதன் - தேர்ப்பாகன்.

பா.வே. - 1. மதயானைகளையும் பூட்டி நடத்துகின்ற நான்கு வகையான வாசலிலே சாரதிகளிருந்து நடத்துகின்ற . .

## Nālvakaip paṭai

*tēriṉuṟu tikkukaḷil cimmamoṭu pūtam*
*vērinoṭu poṉvarai vacikkumatu pōlām*
*pāriṉmicai cūtaṉaip paṇittirata mūrntu*
*pōriṉmicai vīraroṭu pōyiṉarka ḷaṉṟē.*

## Four-Fold Army

The chariot proceeded like the *Mēru* Mountain
Drawn by lions and spirits,
Driven on the earth by a charioteer.
So Cōmukaṉ proceeded to the battle
Accompanied by his soldiers.

(படை வனத்தையடைதல்)

271. **திசைகள்கம் மித்த வெட்டு யானையுஞ் செவிடு பட்ட**
**விசையுறு கதிரின் பச்சைப் புரவியும் வேக மற்ற**
**விசையுறு கடலுந் தூளிப் படலத்தி லியங்கிச் சேறாய்**
**வசையுறு வேந்தன் சேனைக் கடலும்போய் வனத்தைக் கண்டார்.**

எ-து அப்படியாய் மிகுந்த வேகத்துடனே நடக்கின்ற இரதத்தினுடைய சிங்காரத் தொனிகளும், யானையினுடைய மத கோஷடமும், புரவிகளுடைய [1]எடகரவங்களும், பதாதிகளினுடைய அட்டகாசங்களும் அட்டதிக்கும் ஸ்தம்பித்துப் போகத்தக்கதாய், அட்டகெசங்களும் உதிரங்களைக கக்கத்தக்கனவாய், அட்டமாநாகங்களும் செவிடுபட்டுப்போகவும், ஆதித்தனிரதத்திற் கட்டிய பச்சைப்புரவிகளானவை வேகமாறி நடவாமறறியங்கி நிற்க, ஏழுகடலுங் கலங்கிச் சேறாய்க் குழம்பிவிட, மிகுந்த கீர்த்திப் பிரதாபசாலியாகிய இராசப்பிரபுடிகனாகிய சோமுகராசனானவன், நால்வகைச் சேனைகள் சூழத்தக்கதாய் அந்தச் சிங்கார வனத்திலே போய்ப் பிரவேசித்தா னென்றவாறு. (16)

கம்மித்த - கம்பித்த - அசைவற்ற, நடுங்கின. கதிர் - (கதிர்களை உடைய) சூரியன் தூளி - புழுதி திக்குயானைகள் செவிடுபட்டன என்பதே பாடல் கருத்து. உரையில வேறுபாடுகள் உள்ளன அட்டமாநாகங்களுக்கு இடமில்லை. 1 இடக்கு அரவங்கள் என்றிருக்கலாம்

பா.வே. - 1. கம்பித்துப் பட்டுப்போக.

## Paṭai vaṉattaiyaṭaital

*ticaikaḷkam mitta veṭṭu yāṉaiyuñ ceviṭu paṭṭa*
*vicaiyuṟu katiriṉ paccaip puraviyum vēka maṟṟa*
*vicaiyuṟu kaṭalun tūḷip paṭalatti liyaṅkic ceṟāy*
*vacaiyuṟu vēntaṉ cēṉaik kaṭalumpōy vaṉattaik kaṇṭār.*

## The Army in the Wood

The directions shook; the eight
Elephants grew deaf; the horses
In the fast-moving sun's chariot
Lost speed; the resounding sea
Was full of dust and became muddy.
Thus the king and the oceanic army
Reached the forest.

(படையின் சங்கொலி)

272. சகத்திரவக் குரோணி கோடி
தளம்பரி கரிகால் வீர
ரிகத்தினி லிரதம்மற் றந்த
அற்புத மிருபால் சூது
செகத்தினி லடங்கா தண்டம்
திடுக்கிட வெழுந்த சேனை
யுகத்தினை வளைத்த சங்க
மொலித்தனர் கடல்போ லன்றே.

எ-து. அவனது தளதந்திரத்தின் இலக்கமெவ்வளவைத் தென்றால், ஆயிரங்கோடி யக்குரோணியாம். இதில் இரத, கச, துரக, பதாதிகளாகவும், இந்த இகத்திலே கூறுகின்ற இரதத்தினது தொகை யனந்தமாகியதென்று அற்புதமாகக் கூறுவர். இந்தச் சேனைகளானவை

இருபுறத்திலும் சூழ்ந்து வரவும், இந்தப் புவனங்களான தெல்லாம் திடுக்கிட்டு நடுங்கிட எழுந்த அந்தச் சேனையானது யூகமாக வளைந்து சங்கத்தினை ஒலித்தது கடலினைப்போ லென்றவாறு. (17)

சகத்திர வக்குரோணி - சகத்திரம் - சகஸ்திரம் - ஆயிரம். அக்குரோணி - படையின் தொகை. மிக அளவிறந்ததாகக் காணப்படுவது. ஆயினும் அகராதிகளின் வழி ஒரு தொகுப்பினைத் தரமுடிகிறது. அத்தொகுப்பு. தேர் ஒன்று, யானை ஒன்று, குதிரை மூன்று, காலாள் ஐந்து, இவை - ஒரு சேனை அல்லது பதாதி எனப்படுகிறது.

பதாதி - மூன்று கொண்டது - ஒரு சேனாமுகம்; சேனாமுகம் மூன்றுகொண்டது - ஒரு குமுதம

குமுதம் மூன்று கொண்டது - ஒரு கணகம; கணகம் மூன்று கொண்டது - ஒரு வாகினி

வாகினி மூன்று கொண்டது - ஒரு பிரளயம்; பிரளயம் மூன்று கொண்டது - ஒரு சமுதத்திரம்

சமுதத்திரம மூன்று கொண்டது - ஒரு சங்கம்; சங்கம மூன்று கொண்டது - ஒரு அநிகம்

அநிகம் மூன்று கொண்டது - ஒரு அக்குரோணி. எனவே - அக்குரோணி என்பது, யானை - 19,683, தேர் - 19,683, குதிரை - 59,049, காலாள் - 98,415 கொண்டது ஆகும

தளம - படை

சேனாதிபதிகள் யுத்தம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

## Paṭaiyiṉ caṅkoli

*cakattiravak kurōṇi kōṭi*
*taḷampari karikāl vīra*
*rikattiṉi liratammar ṟanta*
*aṟputa mirupāl cūtu*
*cekattiṉi laṭaṅkā taṉṭam*
*tiṭukkiṭa veḻunta cēṉai*
*yukattiṉai vaḷaitta caṅka*
*molittaṉar kaṭalpō ṉaṉṟē.*

## Conches Blow

The army had thousands of divisions
Made up of horses, elephants and infantry;
Innumerable chariots; the wondrous
Formation moved beside him,
As if the earth could not contain it.
Setting the entire universe a-shudder,
Conches were blown rivalling
The sounds of the sea.

# 14. பத்தாவது
# சோமுகன் சமர்புரிந்த அத்தியாயம்

நால்வகைப்பட்ட பெருஞ்சேனையுடன் வந்த சோமுகனானவன் தனது நந்தவனத்தைப் பார்த்து வயிறு எரிந்தான். மேலும் மாடமாளிகை உயர்ந்துவிளங்கிய மரங்கள், படைவீரர்கள் ஆகிய எல்லாவற்றையும் அழித்த வராகமூர்த்தியைக் கண்டு ஆச்சரியமடைந்தான் தனது புகழ் இன்றோடு அழிந்தது என்று எண்ணினான். கோபம் மிகுந்தவனாய் அவ்வராகத்தின் மீது தன்படையை ஏவினான். அப்படையானது நெருப்புப் பொறிகளைக் கக்கும் அம்புகளை எல்லாத்திசையிலும் வீச வராகமானது அவற்றை விழுங்கி, அப்படையையும் அழித்து இரத்தவெள்ளம் பெருகச்செய்தது. தேர் முதலிய அனைத்தும் சிதறி முறிந்தன. இறுதியாக அண்டசராசரங்களும் நடுங்கும் படியாகத் தனது வில்லினை வளைத்துப் பயங்கரமான ஒலியினை உண்டாக்கினான். அவ் ஒலியினால் கடல்கள் கலங்கின, வடவைத்தீயானது குளிர்ந்தது; எமனும் திடுக்கிட்டான். தேவர்கள், உலகமக்கள், திக்குயானைகள், சூரியன் முதலாகிய கிரகங்கள் யாவும் நிலைகலங்கின. வளைத்த வில்லிலிருந்து கணைகள் வெளிக்கிளம்பியவுடன் அழலும் சுழல்காற்றும், இடித்திரளும், பாம்புகளுமாக எங்கும் பரவின. அவற்றை எல்லாம் விழுங்கியும் நொறுக்கியும் அழித்த வராகமானது மேலும் வந்த கணைகளை மராமரத்தைப் பிடுங்கிச் சுழற்றி அடித்து நொறுக்கியது. அதனால் யானைப்படை வெதும்பிப் புரண்டது;.தேர்கள் முறிந்தன; குதிரைகள் பிணக்குவியலாய்க் குவிந்தன. மீண்டும் பிரம அஸ்திரத்தைப் பிரயோகித்தான சோமுகன். அது வடவைத்தீ, விடம், மாருதம், இடி ஆகியவற்றை உண்டாக்கியது. அதனால் திரிசூலங்கள், சக்கராயுதங்கள், புகைமண்டலம் ஆகியவை மிகுந்தன. அவையாவும் வராகமூர்த்தியைக் கண்டவுடனே அவருடைய திருவடிகளிலே வந்து விழுந்தன இதைக்கண்டு பெருமூச்செறிந்த சோமுகன் தான் சந்திரசேகரனிடத்தில் பெற்ற பாசுபதமாகிய அஸ்திரத்தைப் பிரயோகித்தான். அதிலிருந்து ஐந்நூறு முகங்களை உடைய காளியர்களும், வயிரவர்க்கூட்டம், உருத்திரர்க் கூட்டம், பசாசுக்கூட்டம் போன்ற கூட்டங்களும், துர்க்கையர்களும், பூதகணங்களும், பலப்பலவாய்த் தோன்றினர். தேவர் முதலிய யாவரும் நடுங்க உலகம் நிலை கலங்கியது. பாசுபதத்தைக் கண்ட வராகமூர்த்தியானவர் நகைத்து அதனைத் தன்னுடைய பற்களினாலே கடித்துத் தூளாக்கினார். இச்செயல்களை எல்லாம் கண்ட சோமுகன் தனக்குப் பிரம அஸ்திரத்தை அளித்த பிரமதேவனை வெறுத்தான். பாசுபதாஸ்திரத்தை அளித்த பரமசிவனை நிந்தித்தான். தன் இயற்கைப் பலத்தையும், காண்டீபம், கணைகள், கதை ஆகியவற்றையும் நோக்கி நீங்களும் தோல்வியுற்று அவமானம் அடைந்தீர்கள் என்று கோபித்துக் கொண்டான். இறுதியாகத் தான் நாராயணமூர்த்தியைக் குறித்துத் தவம் செய்து பெற்ற நாரணப்படையைத் தொடுத்து வராகத்தின் மீது ஏவினான்.

அந்த நாராயணக் கணையிலிருந்து மிகுதியான பிரம்ம அஸ்திரங்கள் வெளியாயின பல திரிசூலங்கள் தோன்றி இடி முழக்கத்தைச் செய்தன. மந்திர வாள்கள் பல தோன்றின. கிஞ்சுமாரம் என்னும் சக்கரமானது வடவைக்கனலைக் கக்கி, இடிமுழக்கம் செய்து,

மிகக்கடூரமாய்த் தோன்றியது. கருடப்படைகள், மாருதக்கணைகள், தீக்கணைகள், சூரியக்கணைகள், அர்த்த சந்திரபாணங்கள் போன்றவை விடத்தைக்கக்கி, தீப்பொறியோடு ஒளிவிட்டன. இப்படைகளின் தோற்றத்தால் உலகின் நால்வகைத் தோற்றம், எழுவகைப்பிறப்பு, சீவபேதங்கள் ஆகியவை சித்திரம் போன்று அடங்கி ஒடுங்கின. சண்டமாருதம் தோன்றி கடல்நீர், வடவைத்தீ ஆகியவற்றை விழுங்கி இறுதியாக வராகத்தை வலம்வந்து அதன் ஏவலை எதிர்பார்த்து வணங்கிநின்றது. இவற்றையெல்லாம் கண்ட இராசசேகரனாகிய சோமுகன் எமனைப் போலச் சீற்றம் அடைந்தான்.

**(சோமுகன் வராகமூர்த்தியைக் காணுதல்)**

273. **வந்தபுகழ் சோமுகன் வனத்தினில் புகுந்திட**
**வயிற்றினழல் பொங்கி மதிசேர்**
**சுந்தர மிகுந்தநவ ரத்தினமணி மேடைகள்**
**துலங்கியபொற் சோலை களெலாம்**
**முந்துமுடி வீரரை மடித்தவுதி ரத்திரள்**
**மிகுந்தகட லோவ றிகிலோ**
**மிந்திரன் வராகமெனத் தந்திரமொ டித்திற**
**மழித்துவெதிர் நின்ற வரைபோல்.**

எ-து [1]அப்படி இரத, கச, துரக, பதாதிகளுடனே வந்த சோமுகனானவன், தனது நந்தவனத்தைப் பார்த்து வயிற்றிலே அக்கினியானது பொங்கித் ததும்பி வெம்பினவனாய்ச், சந்திரனானவன் வசந்தகாலங்களிலே வாசம்செய்கின்ற அதிக சிங்கார சவுந்தரியம் நிறைந்திராநின்றதும், நவரத்தின மாணிக்க மிட்டிழைத்ததுமாகிய அழகிய மாடமாளிகை, கூடகோபுரங்களையும், திவ்விய பரிமளாதிகளை வீசுகின்ற கற்பகம், சண்பகம், பாரிசாதம் முதலாகிய விருஷங்கள் நிறைந்த சோலைகளையும் எல்லாம் அழித்து, [2]வனபாலகாள் முதலாகிய வீராதி வீராகளை யெல்லாம் அடித்த உதிரப் பிரவாகமானது, பெரும்புறக்கடலோ அறிகிலோம் ஆயினும் அந்த இந்திரனானவன் தேவமாய்கையினாலே இப்படி வராக ரூபங்கொண்டு வனமெல்லா மழித்தும் அச்சமில்லாமல் நம்மிட எதிரிலொரு மக மேருவைப் போல நிற்கின்ற வராக மூர்த்தியைக் கண்டதிசயித்தான் சோமுகாராசன் என்றவாறு. (1)

இந்திரனவராகமென - இந்திரனே வராக வடிவில் தோன்றினான் என்பது சோமுகனின் ஐயம்.

பா.வே. - 1 அபபடித் தனது நந்தனவனமானது ஒரு பன்றியினாலே யழிந்ததென்கிற செய்தியைக் கேடடுக் கோபாக்கிரக சித்தனாய் வந்து பார்த்த சோமுக னென்கிற ராசகண்டீரவனானவன் வயிற்றிலே அக்கினியானது .

2 மேடைகளுக்குஞ் சோலைகளுககுங் காவலாயிராநின்ற முடிகளையுடைய வீரர்களை யெக்கிய வராகமானது மடிக்கா நின்ற வுதிரப்பிரவாகம். .

## Cōmukaṉ varākamūrttiyaik kāṇutal

*vantapukal cōmukaṉ vaṉattiṉil pukuntiṭa*
*vayiṟṟiṉalal poṅki maticēr*
*cuntara mikuntanava rattiṉamaṇi mēṭaikaḷ*
*tulaṅkiyapōṟ cōlai kaḷelām*
*muntumuṭi vīrarai maṭittavuti rattiraḷ*
*mikuntakaṭa lōva ṟikilō*
*mintiraṉ varākameṉat tantiramo ṭittiṟa*
*maḻittuvetir niṉṟa varaipōl.*

## XIV. Cōmukaṉ at War

### Cōmukaṉ Sees the Varāka

The famed Cōmukaṉ who came to the wood
Was inflamed as he saw the destruction
Caused to the jewelled platforms
Built with nine kinds of lovely gems,
The golden grove, the stream of blood
Flowing from the soldiers killed
Like an ocean. He wondered
Whether Intiraṉ had come as the boar
When he saw its mountainous form
As it stood, having destroyed all.

(முதலில் படையை ஏவுதல்)

274. அணித்தலைவர் தங்களை யழைத்தனன் ஒறுத்துநவ
கண்டமு மதிக்கு நமது
கணிப்பரிய நற்புக ழழிந்திட வராகமது
கான்றசின மூடு ருவியே
தணிப்பரிய காவலர்கள் சாயவமர் செய்துதனி
யாம்பிரம மாகி யுலவி
யணித்தினில் திரிந்திடு மதைத்துணிவு பட்டிட
வடற்படையொ டேகு மெனவே.

எ-து அப்படி கோபாக்கிரந்தனாகிய சோமுகனானவன் தனது அணித்தலைவர், யூகத்தலைவா முதலாகிய வீரர்களை யழைத்துக் கூறுகின்றான். இதுவரைக்கும் இந்த நவகண்டங்களெல்லாம் மதிககாநின்ற நமது கீர்த்தியானது இன்றோடே யழிந்து விட்டது பின்னையும் அந்த வராகமானது பிரளயகால உருத்திரனைப்போலக் கோபத்தைச் செலுத்தி, ஒருவராலும வெல்லுதறகரிய காவலாளர்களை யெல்லாம் பிணமலைகளாய்க் குவியத்தக்கதாய் அதப்படுத்தி, ஒப்பற்ற பரப்பிரமம்போலப் பயப்படாமல் நமது சமீபத்திலே உலாவிச் சாரிகை திரிந்து கொண்டிருப்பதை நீங்கள் நான்கு வகைச் சேனைகளுடனே போய், யூகம் வகுததுச் சமர் செய்து, செயம்பண்ணி வரக்கடவீர்களென்று அதிகாரம் செய்தான் இராசசேகர னென்றவாறு. (2)

நவகணடம - ஒன்பதுகணடம் அவை. கீழவிதேகம், மேல் விதேகம, வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம, தென்னிரேபதம, வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம் என்பன கணிப்பரிய - எணணுதறகரிய, மதித்தறகரிய கான்றல் - கக்குதல், தணத்தல் - நீஙகுதல்

உரை - பரபபிரமம - கடவுள யூகம் - படைவகுப்பு

## Mutalil paṭaiyai ēvutal

*aṇittalaivar taṅkaḷai yaḻaittaṉaṉ oṟuttunava*
*kaṇṭamu matikku namatu*
*kaṇippariya naṟpuka ḻaḻintiṭa varākamatu*
*kāṉṟaciṉa mūṭu ruviyē*
*taṇippariya kāvalarkaḷ cāyavamar ceytutaṉi*
*yāmpirama māki yulavi*
*yaṇittiṉil tirintiṭu mataittuṇivu paṭṭiṭa*
*vaṭaṟpaṭaiyo ṭēku meṉavē.*

## The Army Ordered

He called the commanders: 'Our immense fame
Hailed by the nine continents
Has been rendered nought by this boar
Which has penetrated our grove,
Killed all our brave guardians
And now stands apart as Piramaṉ;
Again does it stride around fearless.
Go at once with battalions and kill it.

(படை வராகமூர்த்தியைச் சூழ்தல்)

275. அலர்ந்தபது மத்தினது யூகமது கட்டின
ரழற்படை யனற்பொ ழியவே
நிலந்தனி னுயர்ந்திடு குணக்குமுத லாகிய
திசைகளி னிறைத்த னர்களாய்ச்
சலந்தணி கிலாதவர் பொழிந்தகணை மாரிகள்
தகைந்திட விழுங்கி யவர்தங்
குலங்களை முடித்திட வெரிந்தன கரிந்தன
குலக்கிரிகள் போல விழுவார்.

எ-து. அந்தப்படைத்தலைவர் திரண்ட இரத, கச, துரக, பதாதிகளாகிய நான்கு வகைச் சேனைகளையெல்லாம் ஆயிரத்தெட்டிதழினையுடைய தாமரைக் கமலத்தைப் போலப் பதுமயூகம் வளைதது அக்கினிப் பொறிகளைப் பொழிகின்ற அக்கினி பாணங்களை உயர்ந்திராநின்ற கிழக்கு முதலாகிய திசைகள் நிறையத் தக்கதாய்ச் சரங்களைத் தூவினார்கள யூகத்தினின்றும் கோபம் தணியாத வீராகள் பொழியாநின்ற சரங்களை யெல்லாம், அந்த எக்கிய வராகமானது வாயைத்திறந்து விழுங்கி, நரசிங்கம் போலப் பாய்ந்து, இரதபந்திகளையெல்லாம் உடைத்தும், கச பந்திகளையெல்லாம் முறித்தும், துரக பந்திகளையெல்லாம் தூளாக்கியும், பதாதி பந்திகளையெல்லாம் தம்மிட பாதத்தினாலே துவைத்தும் அவர்களிட யூகங்களையெல்லாம் கலக்கி உதிரவெள்ளமெடுக்கத் தக்கதாய்ச் செய்தது. அந்தச் சமையத்திலே அஷ்டகுலாசல பர்வதத்துக்குச சமதையாகிய இராச மன்னர்கள் எதிர்த்ததால் ஆலகால விடத்துக்குச் சமதையாகிய அக்கினி பாணங்களை விட்டு வராக மூர்த்தியைச் சூழ்ந்து கொண்டார்க ளென்றவாறு. (3)

பதுமயூகம் - தாமரையைப்போல வளைத்துச் சூழும் படை வகுப்பு யூகம் - படைவகுபபு அழற்படை - நெருப்பைக கக்குகின்ற ஆயுதங்கள் குணக்கு - கிழக்கு. சலம - கோபம்.

## Paṭai varākamūrttiyaic cūḻtal

*alarntapatu mattinatu yūkamatu kaṭṭiṉa*
*raḻarpaṭai yaṉarpo ḻiyavē*
*nilantaṉi ṉuyarntiṭu kuṇakkumuta lākiya*
*ticaikaḷi ṉiṟaitta ṉarkaḷāyc*
*calantaṇi kilātavar poḻintakaṇai mārikaḷ*
*takaintiṭa viḻuṅki yavartaṅ*
*kulaṅkaḷai muṭittiṭa verintaṉa karintaṉa*
*kulakkirikaḷ pōla viḻuvār.*

## The Army Encircles Varāka

The fiery army that had the formation
Of a full-blown lotus aimed weapons
Of fire; the earth, the east
And other directions that rise upwards
Were filled with a rain of arrows
Aimed with irrepressible anger.
All this was devoured by the boar.
Immediately the chieftains
Fell upon it like the great mountains
With missiles spewing fire.

(சோமுகனின் நாணொலி)

276. **தேர்க்கொடி யறுந்தன சிதைந்தன பரித்திரள்**
**சிதைந்தவல வத்தொ கையெலாம்**
**பார்தனின் முடிந்தன பதாதிக ளழிந்தன**
**பரூஉக்கை மதமா வினமெலாங்**
**கார்நிரை யெனப்புரளு கின்றன கடுந்திறல்கொள்**
**சோமுகன் வெகுண்டு கனமாம்**
**வார்சிலை யெடுத்தனன் வளைத்தனன் குணத்தொனி**
**வகுத்தனன்நல் வண்மை களினால்.**

எ-து [1]அப்படி அந்த வராகமூர்த்தியினுடைய பாய்ச்சலினாலே தேர்களினுடைய துசபடஙகளெலலாம் அறுத்து குத்துக்கால், கொடுங்கை, பாகுப்பலகை, சட்டஙகள், குதிரைச்சாரதி முதலாகிய பேர்களெல்லாம் பின்னப்பட்டனர். யானைக் கூட்டங்களானவை மேக சாலஙகளைப் போலப் புரண்டன கடிய திறத்தினையுடைய சோமுகனானவன் பிரளயகால உருத்திரனைப் போலச் சீறிக் கோபித்து மகமேரு கிரியைப் போன்ற நீண்ட வில்லினை வணங்கிக் குணத்தொனி செய்தான் அந்தத் தொனியினாலே அணடகடாகஙகளெல்லாம நடுங்கிற்று என்றவாறு (4)

வலவததொகை - தேர்ப்பாகாகளின் தொகுதி. வலவன - தேர்பபாகன் பரூஉக்கை - பணைக்கை. பெருதநதகை - துதிககை மதமா - யானை கார்நிரை - மேகக்கூட்டம்

**உரை** - துசபடம - கொடி கொடுங்கை - தேர்க்கொடுஙகை, வளைவு பாகு - பாகன் அணடகடாகஙகள - அணட.கோளங்கள

பா.வே. - 1 அந்த வராக தாககின பாயச்சலினாலே தேர்களினுடைய துசபடஙகளெலலாம.

## Cōmukaṉiṉ nāṇoli

*tērkkoṭi yaṟuntaṉa citaintaṉa parittiraḷ*
*citaintavala vatto kaiyelām*
*pārtaṉiṉ muṭintaṉa patātika ḷaḷintaṉa*
*parūukkai matamā viṉamelāṅ*
*kārnirai yeṉappuraḷu kiṉṟaṉa kaṭuntiṟalkoḷ*
*cōmukaṉ vekuṇṭu kaṉamām*
*vārcilai yeṭuttaṉaṉ vaḷaittaṉaṉ kuṇattoṉi*
*vakuttaṉaṉṉal vaṇmai kaḷiṉāl.*

## The Sounds of Cōmuka's Bow-string

The flags of chariots were cut off;
The cavalry was decimated.
The battalion of charioteers was pulverized
On the earth; the infantry was destroyed.
Elephants in rut with large trunks
Rolled on the earth like cloud formations.
The immensely strong Cōmuka
Grew angry and raised his well-wrought bow;
He bent it, twanged its string
Making everyone shudder.

(தேவர் சேனை நிலைதளர்தல்)

277. வாருதி கலங்கிவட வாவனல முட்கிட
வருஞ்சமனு மஞ்சி வெருவத்
தாருலவு தேவர்க டயங்கிமன நெக்கிட
தராதிபர்கள் சாய்ந்து தளரப்
பேருலவு திக்கினில் நிலைத்தகரி வீறியிட
பிரமனு நடுங்க பெயராத்
தேருலவு செங்கதி ரவன்முதல கோள்கள்பல
[1]திடுக்கிட முழங்கி யதரோ.

எ-து. தனது காண்டிபத்தால் இராச கண்டீரவனாகிய சோமுகன் வளைத்துக் குணத்தொனி வகுத்தமாத்திரத்தில் சத்த சாகரங்களும் கர கர வென்று சுழன்று கலங்கின. அந்தக் கடல்கடோறும் வதியாநின்ற வடவாவனலமானது குளிர்ச்சியையடைந்தது. உடம்பினின்ற உயிரினைப் பிரிக்கவருகின்ற எமனும் பயத்தை யடைந்து திடுக்கிட்டான். மந்தார மாலையினையுடைய தேவக்கூட்டங்களெல்லாம் மனமெலிந்துளைந்தார்கள். இவ்வுலகத்தரசர்களெல்லாம் சாய்ந்து தளர்ந்தார்கள். அட்டதிசைகளைத் தாங்கள் நின்ற யானைக்கூட்டங்கள் வீறிட்டலறிடச் சிருட்டி கர்த்தாவாகிய பிரம்மாவும் நடு நடுங்கச் சூரியன் முதலாகிய நவக்கிரகங்களும் நிலை தளர்ந்தார்கள் அந்தக் காண்டீப முழக்கத்தினால் என்றவாறு. (5)

வாருதி - கடல். வடவாவனலம் - ஊழித்தீ, வடவாக்கினி உடகிட - நாணமடைய, (குளிர்ச்சியடைய) சமன் - எமன். தார் - மாலை. நெக்கிட - மெலிய, உருக. கதிரவன் முதலகோள்கள் - சூரியன் முதலாகிய நவக்கிரகங்கள் அவை: சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது என்பன

பா.வே. - 1 திட்கிட.

## Tēvar cēṉai nilaitaḷartal

*vāruti kalaṅkivaṭa vāvaṉala muṭkiṭa*
*varuñcamaṉu mañci veruvat*
*tārulavu tēvarka ṭayaṅkimaṉa nekkiṭa*
*tarātiparkaḷ cāyntu taḷarap*
*pērulavu tikkiṉil nilaittakari viṟiyiṭa*
*piramaṉu naṭuṅka peyarāt*
*tērulavu ceṅkati ravaṉmutala kōḷkaḷpala*
*tiṭukkiṭa muḷaṅki yatarō.*

## The Heavenly Army is Shaken

The sea was in commotion.
The fire of deluge was ashamed;
Yama grew afraid and shocked;
Gods wearing garlands wavered,
Their hearts melted; the kings on earth
Swayed with dizziness;
The elephants of the directions

Trumpeted in fear; Piramaṉ shuddered;
The sun and other planets were
Shocked by the sounds of the bowstring.

(சோமுகனின் அக்கினிக் கணை)

278. அங்கிகணை யேமுதல் விடுத்திட விடங்கள்அள
வில்லன துளித்து மழைபோற்
பொங்கிசுழல் காற்றினை யிடித்திரள்கள் சிந்தின
புயங்ககணை யேமு தலவாந்
தங்கிய பெரும்படை முழங்கிவரு தன்மையைத்
தனிப்பிரம மாய பரமன்
நுங்கினன் உதிர்த்தனன் கடித்தனன் நொறுக்கினன்
நொடிப்பொழுதி னுண்டு களதாய்.

எ-து. அந்தக்காண்டீபத்தில் இராச சேகரனாகிய சோமுகனானவன் பூட்டிப்பிரயோகம் செய்த அக்கினிக் கணைகளினின்றும் அழலைப் பொழிகின்ற விடச் சுவாலைகள் அளவில்லாத மழைகளைப் போலப் பொழிந்தன; ஓரிடத்தில் பொங்காநின்ற சுழற்காற்றினைப் பிரயோகித்தன; ஓரிடத்தினிடித்திரள்களைச் சிந்தின; ஓரிடத்தில் சர்ப்பக் கணைகளை உண்டாக்கிவருகின்ற தன்மையை அந்த எக்கிய வராகமூர்த்தியானவர் சிலதை விழுங்கினார்; சிலதைப் பொடியாய் உதிர்த்தார்; சிலதைக் கடித்தார். அதைக்கண்டாச்சரியப் பட்டான் சோமுகன் என்றவாறு. (6)

அங்கி - தீ. இடித்திரள் - இடியின்கூட்டம், பேரொலி. புயங்ககணை - புஜங்கம் - பாம்புக்கணை. நுங்கினன் - விழுங்கினான் நொடிப்பொழுதில் நுண்துகளதாய் எனப்பிரிக்க. நுண்துகள் - நுண்ணிய பொடி

## Cōmukaṉiṉ akkiṉik kaṇai

*aṅkikaṇai yēmutal viṭuttiṭa viṭaṅkaḷaḷa*
*villaṉa tuḷittu maḻaipōṟ*
*poṅkicuḻal kāṟṟiṉai yiṭittiraḷkaḷ cintiṉa*
*puyaṅkakaṇai yēmu talavāṉ*
*taṅkiya perumpaṭai muḻaṅkivaru taṉmaiyait*
*taṉippirama māya paramaṉ*
*nuṅkiṉaṉ utirttaṉaṉ kaṭittaṉaṉ noṟukkiṉaṉ*
*noṭippoḻuti ṉuṇṭu kaḷatāy.*

## Cōmuka's Fire Missile

As the king released the missile
Spewing fire, innumerable drops of poison
Appeared and showered like rain.
Cyclones took over;
Thunders shook the earth.
There were serpent missiles too.
The Supreme who is Piramaṉ
Devoured them, pulverized them,
Bit them, and splintered them
All in a second, in a wondrous manner.

(வராகமூர்த்தி அக்கினிக் கணையை அழித்தல்)

279. கண்களழல் பொங்கமிகு துங்கமயி ரோமமது
காளவிட மங்கி பொழிய
வெண்டரள மாலைகள் பொசிந்திட விரிந்தவளி
வீசிட கனன்று மிகவாய்ச்
சண்டனெனும் வில்லிடை தராதிப னழற்கணை
சமர்த்தொழில் புரிந்த பொழுதே
விண்டொரு மராமர மதைச்சுழல் வீசினன்
விரிஞ்சனும் வியப்ப முறவே.

எ-து. அந்தச சோமுகராசன் தன் கோபத்தால் கண்களானவை அழலைப் பொழியவும், மிகுந்த ஒழுங்கினையுடைய உரோமமானது காளகூடவிடங்களைப் பொழிந்து அக்கினியைச் சொலிக்கவும், வெண்மையாகிய முத்த மாலையானது பொரிந்து போகவும், பிரசண்ட மாருதத்தை மூக்கானது உண்டாக்கத்தக்கதாகவும், எமனை யொத்த காண்டீபத்தின் அக்கினிககணைகளைச சொரிந்து சமர் செய்த காலத்தில், அந்த வராக மூர்த்தியானவர் ஒரு மராமரத்தைப பிடுங்கிக கொண்டு கரகரவென்று சுழற்றி அந்தக் கணைகளையெல்லாம் அடிததொதுக்கினார் அப்பொழுது சிருட்டி கர்த்தாவாகிய பிரம்மாவும் அதிசயித்தருளினார் என்றவாறு (7)

ரோமம - உரோமம் - முடி, மயிர், காளகூடம் - நஞ்சு, விடம். காளகூடமாகியவிடம். காளம் - விடம அங்கி - அககினி, தீ. தரளம - முத்து வளி - காற்று சண்டன் - எமன் தராதிபன் - மனனன, அசுரமனனனாகிய சோமுகன் மராமரம் - கடம்புமரம, விண்டு - பிடுங்கி, வெளியே எடுதது விரிஞசன் - பிரமன்

## Varākamūrtti akkinik kaṇaiyai aḻittal

*kaṇkaḷaḻal poṅkamiku tuṅkamayi rōmamatu*
*kāḷaviṭa maṅki poḻiya*
*veṇtaraḷa mālaikaḷ pocintiṭa virintavaḷi*
*vīciṭa kaṉaṉṟu mikavāyc*
*caṇṭaṉeṉum villiṭai tarātipa ṉaḷaṟkaṇai*
*camarttoḻil purinta poḻutē*
*viṇṭoru marāmara mataiccuḻal vīciṉaṉ*
*viriñcaṉum viyappa muṟavē.*

## Varāka Destroys the Fire Missile

The eyes spitting fire, the long hair
Bristling and spilling terrible poison,
The garlands of pearls getting scorched,
A heavy wind rushing, the Acura
Cōmuka's nostrils blew cyclones,
While he aimed fire missiles, making war.
The Varāka destroyed the same
By uprooting and aiming a Sal tree
While Piramaṉ looked on with wonder.

(சோமுகனின் சீற்றம்)

280. பந்திபயில் யூகமது நொந்துகரி வெம்பியிட
பாரதனி னீண்ட விரதஞ்
சிந்திபரி யுந்தியிட வெவ்வயில்கொள் காலனெனச்
சீறியர சன்சி னவியே
கந்தமலர் முந்தியிடு மெந்தையடை தன்கர
தலத்தினி னெடுத்த வவனு
முந்துபர மன்முனம் விடுத்திட வழற்கணை
பிறைக்கணை முளைத்த தலையின்.

எ-து. பந்தியாய் நிறுத்திய யூகத்தின் அணி வகுத்திருந்த யானைக் கூட்டங்களானவை வெதும்பிப் புரளவும், இந்தப் பூமியின்கண் நீண்ட பரப்பினையுடைய இரதபந்திகளானவை குத்துக்கால், கொடுங்கைச்சட்டம், சவளக்கழி, அங்கிராசசீலை, தேர்ச்சீலை, கொடிச்சீலை முதலாகியவை பின்னப்படவும், குதிரைக் கூட்டங்களானவை இறந்து பிணக்கூட்டமாய்க் குவியவும், இவைகளையெல்லாம் கண்ட அக்கினியைப் பொழிகின்ற வேலாயுதத்தைத் தாங்கிய அசுரன் குரூரமான எமனைப்போலச் சீறினவனாய்த் திவ்விய வாசனையைக் கமழ்கின்ற பதும பீடத்திலெழுந்தருளிய பிரம்மாவினுடைய படையைத் தனதுகையிலெடுத்து அர்ச்சித்துத் தூப தீபங்கொடுத்து அவருடைய மந்திரத்தை உபாசித்து முந்திய பரமனாகிய அந்த வராகமூர்த்தியின்மேற் பிரயோகித்த மாத்திரத்தில், அந்தக் கணையினின்றும் அக்கினி பாணங்களும், அர்த்தசந்திர பாணங்களும் அனேகமாய் முளைத்துப் புங்காது புங்கமாய்ப் பிரவேசித்தெழுந்தன என்றவாறு. (8)

நீண்டவிரதம் - நீண்ட + இரதம். சிந்தி - சிந்துதல் - உறுப்புகள் நொறுங்கி உதிர்தல். அயில் - வேல அழற்கணை - தீக்கணைகள் பிறைக்கணை - அாத்தசந்திரபாணங்கள்.

## Cōmukaṉiṉ ciṟṟam

*pantipayil yūkamatu nontukari vempiyiṭa*
*pāratani niṉṭa viratañ*
*cintipari yuntiyiṭa vevvayilkoḷ kālaṉeṉac*
*ciṟiyara caṉci ṉaviyē*
*kantamalar muntiyiṭu mentaiyaṭai taṉkara*
*talattiṉi neṭutta vavaṉu*
*muntupara maṉmuṉam viṭuttiṭa vaḻaṟkaṇai*
*piṟaikkaṇai muḷaitta talaiyiṉ.*

## Cōmuka's Fury

As the serried formations of elephants
Were scorched, the various ornaments
Of the chariot large as the earth
Were broken, and the cavalry decimated,
The king grew furious like cruel Yama,
Took up in his hand the missile
Of Piramaṉ seated on the scented lotus,
And aimed it at the Supreme.
Innumerable crescent-shaped arrows
Were released from it in a trice.

(பலவகைக் கணைகள்)

281. வடவனல் பிறந்தது விடத்தினை யுமிழ்ந்ததுநல்
வண்மைபெறு கால்வ ளியெலா
மிடமொடு தவழ்ந்தது [1]இடித்தொகை யெழுந்தது
[2]இருங்கமல வன்ப டையினின்
றிடமதுள் தண்டம தெழுந்ததிரி சூலதிகி
ரிப்படை கனற்கொ ளுவியே
படலைதிகழ் தூமம தெழுந்தது அருந்திறல்
பரம்பர னுணர்ந்த னனரோ.

எ-து. அந்தக் கணையினின்றும் ஒரு பக்கத்திலே வடவாக்கினி பிறந்தது; விடத் துளிகளைப் பொழிந்ததோரிடத்திலே; வன்மையாகிய பிரசண்ட மாருதமானது ஓரிடத்தில் பிரவேசித்தது; இடிக்கூட்டங்கள் அனேகமாய் ஒருசார்பின் முழங்கிற்று. தண்டங்களானவை அனேகமாயெழுந்து அக்கினியைச் சொலிக்கின்றனவாய் முழங்கின. திரி சூலங்களானவை அனேகமாய்ப் பிரவேசித்தன; சக்கரங்களானவை அக்கினி மயமாய்ச் சுழன்று சுவாலிக்க ஒரு பக்கங்களிலே புகை மண்டலங்களானவை அனேகமாயெழுந்து தோற்றம் செய்தன இப்படியாய் வருகின்ற கணையினுடைய குரூரத்தைப் பார்த்துப் பரம்பரனாகிய வராக மூர்த்தியானவர் கண்டருளினாரென்றவாறு. (9)

கால்வளி - கால் - காற்று. வளி - பெருங்காற்று. தண்டம் - தண்டாயுதமாகிய படை. ஆயுதம் படலை - படர்ந்து விளங்கும். எங்கும் பரவிய. தூமம் - புகை.

சு.சொல் - 1 விடித்தொகை. 2. விருங்கமல (குற்றியலுகரத்தின் முன் உடம்படுமெய்).

## Palavakaik kaṇaikaḷ

*vaṭavaṉal piṟantatu viṭattiṉai yumiḻntatunal*
*vaṇmaipeṟu kālva ḷiyelā*
*miṭamoṭu tavaḻntatu yiṭittokai yeḻuntatu*
*yiruṅkamala vaṉpa ṭaiyiṉiṉ*
*ṟiṭamatuḷ taṇṭama teḻuntatiri cūlatiki*
*rippaṭai kaṉaṟko ḷuviyē*
*paṭalaitikaḻ tūmama teḻuntatu aruntiṟal*
*parampara ṉuṇarnta ṉaṉarō.*

## A Variety of Missiles

From the missile appeared the Vaṭavai fire;
It spat fumes; a heavy cyclone
began to spread everywhere;
A number of thunders sounded.
From Piramaṉ's missile, a mace appeared
And tridents scattered fire all over.
Smoke appeared everywhere.
The Supreme watched the missile
In action, even thus.

(பாசுபதக் கணை)

282. வந்தகம லத்தவிசின் வானவ னிரும்படை
வணங்கிட விழுங்க வவனும்
நொந்தன னுயிர்த்தனன் கையினைப் புடைத்தன
னொடிப்பொழுதி னீச னுதவும்
சுந்தரப் பெரும்படை யெடுத்தனன் மதித்துசடை
தூய்பிறையன் மந்தி ரமதைச்
சிந்தையி னினைந்தனன் விடுத்தனன் அனற்கொளுவி
சூழ்ந்தது சினத்த தவையே.

எ-து இதழினை விரித்தொளிராநின்ற தாமரைப் பீடத்தி னெழுந்தருளிய பிதாமகனது பெரும்படையானது, வடவாக்கினியைப் போல லோகா லோகங்களெல்லாம் நடுங்கத்தக்கதாய் அதிகக் கோபத்துடனே வந்து, வராகமூர்த்தியைக் கண்டு, அவரை வலம்வந்து தெண்டன் சமர்பிதத அளவில், [1]அவருடைய கோர தந்தங்களினாலே கடித்து விழுங்கக் கண்ட ராசசேகரனானவன் அதிசயப்பட்டு இரண்டு அஸ்தங்களையும் தேய்த்து, அக்கினிப் பொறிபறக்கத் தக்கதாய்ப் பூமியிலறைந்து, மகமேருவுக்குச் சமதையாகிய தேகங் குழைந்து உருகினவனாய்ப் பெருமூச்செறிந்து, பின்னையும் தனது பராக்கிரமத்தினாலே சந்திர சேகரனிடத்தில் தான் வரபாலனம் பெற்ற, சுந்தரத்தோடுங்கூடிய பிரபலமாகிய பாசுபதத்தை எடுத்து அர்ச்சித்துப் பஞ்சாட்சரத்தை உச்சரித்துப் [2]பிரயோகித்தா னென்றவாறு. (10)

கமலததவிசின்வானவன் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமன். பொழுதினீசன் - பொழுதில் + ஈசன, பொழுதின ஈசன் என மருவியது ஈசன் - சிவபெருமான். சுந்தரப்பெரும்படை - அழகிய பாசுபதம எனனும் பெரிய கணை பிறையன் மந்திரம - பிறையணிந்த சிவபெருமானின் பஞசாடசர மந்திரம்

பா.வே. – 1. அவரதை விழுங்கினாரந்தச் சேதியறிந்த ராசசேகரனானவனதிசயப்பட்டு மிகவும் தன்னை நொந்தான்; பின்பு பெருமூச்சு விட்டானதன்பின் பிரண்டு . . . மறுடிதேறித் தெளிந்து தான் வரபாலனம் . . . 2. விட்டா னென்றவாறு.

### Pācupatak kaṇai

*vantakama lattaviṫiṉ vāṉava ṉirumpaṭai*
*vaṉaṅkiṭa viḻuṅka vavaṉum*
*noṉṭaṉa ṉuyirttaṉaṉ kaiyiṉaip puṭaittaṉa*
*ṉoṭippoḷuti nīca ṉutavum*
*cuntarap perumpaṭai yeṭuttaṉaṉ matittucaṭai*
*tūypiṟaiyaṉ manti ramataic*
*cintaiyi ṉiṉaintaṉaṉ viṭuttaṉaṉ aṉaṟkoḷuvi*
*cūḷntatu ciṉatta tavaiyē.*

### The Pācupata Missile

The missile of Piramaṉ on the lotus
Came over and saluted the Supreme.
The king was taken aback.
Striking his hands together, he took up
In a trice the beautiful missile
Of Civaṉ, uttered the chant
Of the crescent-adorned Lord
And aimed it with a fiery blast.

(பாசுபதக் கணையில் பல படைத்தோற்றம்)

283. பந்திபயில் காளியர்கள் ஞாளியர்கள் கூளியர்கள்
பருதிபடை யேமு தலவா
நிந்தையில் பெரும்படை முளைத்தது உருத்திரர்
நிறைந்தனர்கள் சூல முடனே
கொந்தலர் கடுக்கையணி துர்க்கைமுத லோர்கள்கண
நாதர்கள் குழூஉத் தொகையுடன்
வந்தனர் தனந்தனென வென்றடி நடித்தனர்கள்
வாரிதி கலங்கி சுழல.

எ-து. அப்படியாய் இராசசேகரனான சோமுகன் பிரயோகம் செய்கின்ற பாசுபதக்கணையினின்றும் பந்தியாய் ஐந்நூறு முகங்களையுடைய காளியர்கள் கோரரூபமாய் ஒரு பக்கத்தினின்றும் பிரவேசித்தார்கள். சுவானவாகனத்தையுடைய வயிரவர்க்கூட்டங்கள் திரிசூலம் முதலாகியவற்றைக் கையிற்பிடித்தொரு பக்கத்தில் பிரவேசித்தார்கள். பசாசுக்கூட்டமொரு பக்கத்தெழுந்தது. சூரியப்படை முதலாகிய ஆயுதங்களெல்லாமொரு சார்பெழுந்தன. உருத்திரக்கூட்டங்கள் அனேகம்பேர் பிரவேசித்தார்கள். மணங்களை வீசா நின்ற கொன்றைமாலையை அணிகின்ற துர்க்கையர்கள் ஒரு பக்கத்தில் நிறைந்தார்கள். பூதகணாதிபர்கள் தந்தன தந்தன வென்று சதியினுடைய கீதங்களை வாயினாற் பாடி நடித்துப் பிரவேசித்தார்கள் அந்தப் பாசுபதக்கணையி னென்றவாறு. (11)

பந்தி - வரிசை. ஞாளியர் - வயிரவர். கூளியர் - பேய்க்கூட்டம். பருதிப்படை - சூரியப்படை. உருத்திரர் - ஏகாதச உருத்திரர். பதினொரு உருத்திரர் - அவர்கள்: அரன், ஈசானன், உருத்திரன், கபாலி, சங்கரன், சௌமியன், நீலலோகிதன், பவோற்பவன், மாதேவன், விசயன், வீமதேவன் ஆகியோர். கடுக்கை - கொன்றை கணநாதர் - பூதகணங்கள்.

**உரை** - சுவானம - நாய்.

## Pācupatak kaṉaiyil pala paṭaittōṟṟam

*pantipayil kāḷiyarkaḷ ñāḷiyarkaḷ kūḷiyarkaḷ*
*parutipaṭai yēmu talavā*
*nintaiyil perumpaṭai muḷaittatu uruttirar*
*niṟaintaṉarkaḷ cūla mutaṉē*
*kontalar kaṭukkaiyaṇi turkkaimuta lōrkaḷkaṇa*
*nātarkaḷ kuḷūut tokaiyuṭaṉ*
*vantaṉar taṉantaṉeṉa veṉṟaṭi naṭittaṉarkaḷ*
*vāriti kalaṅki cuḻala.*

## From Within Pācupata

Ranks of dark beings, vairavās
Riding dogs, spirits appeared. Also
Sun-missiles, immense and blemishless.
The spaces filled with Rudras
Carrying tridents; Turka goddesses
Wearing *koṉṟai* garlands were there.
Commanders of spirits in large numbers
Came there, singing and dancing,
Setting the ocean in an uproar.

(பாசுபதத்தைத் தன் தந்தத்தால் ஒடித்தல்)

284. திக்கொடு திகாந்தமு மதிர்ந்தன வொடுங்கின
திசைக்கரிகள் திங்கள் கதிரு
முக்கன உதிர்ந்தன வுடுத்திரள் கலங்கினர்கள்
உம்பரசு ரேசர் களெலா
நக்கனது தன்படையி னானுள மெலிந்தனர்க
ணாரண னகைத்து நலியா
யுக்கிரமொடு துண்டம துறும்படி கடித்தன
னொழிந்தசெயல் கண்ட னனரோ.

எ-து. அந்தப் பாசுபதத்தினின்று மித்தனை அதிசயமெலாம் தோன்றிப் பிரவேசித்து வரும்போது திக்குத்திகாந்தங்களெல்லாம் அதிர்ந்து திடுக்கிட்டன. அயிராவதம் முதலாகிய அட்டகசங்களும் ஒடுங்கின. வடமேரு கிரியை வலமாய் வருகின்ற சந்திர சூரியர் முதலாகிய நவக்கிரகங்களெல்லாம் ஒளியிழந்து போயின. தாரகா கணங்களெல்லாம் பலபலவென்று உதிர்ந்து போயின. தேவர்க்கூட்டங்களும் அசுர வீட்டங்களும் கலங்கி மோகத்தையடைந்தார்கள். இப்படிப்பிரளய கால உருத்திரனைப போலச் சீறி வருகின்ற சிவனுடைய பாசுபதத்தை எக்கிய வராகமூர்த்தியானவர் கண்டு, நகைபுரிந்தருளி, உக்கிர ரூபங் கொண்டு அந்தக் கணைக்கெதிர்ந்து தாக்கித் தனது தந்த பந்தியினாலே கண்ட துண்டப்படும்படியாய்க் கடித்துத் தூளியாக்கினார் அப்படி பின்னப்பட்ட பாசு பதப்பிரபாவத்தை அறிந்தான் இராச சூடாமணியாகிய சோமுகன் என்றவாறு. (12)

திங்கள் - சந்திரன். கதிர் - சூரியன் உக்குதல் - இற்றுப்போதல உடுத்திரள். - நட்சத்திரக்கூட்டங்கள் உம்பர் - வானோர். தேவர்கள். அசுரேசர் - அசுரர்க்கூட்டம. நக்கன் - சிவபெருமான். மெலிந்தனர்கணாரணகைத்து - மெலிந்தனர்கள நாரணன் நகைத்து நலியா - நலிந்து . வருந்தி, சினந்து.

**உரை** - தந்தபந்தி - பல்வரிசை. பற்கள் பிரபாவம் - புகழ். பெருமை.

## Pācupatattait taṉ tantattāl oṭittal

*tikkoṭu tikāntamu matirntaṉa voṭuṅkiṉa*
*ticaikkarikaḷ tiṅkaḷ katiru*
*mukkaṉa utirntaṉa vuṭuttiraḷ kalaṅkiṉarkaḷ*
*umparacu rēcar kaḷelā*
*nakkaṉatu taṉpaṭaiyi nāṉuḷa melintaṉarka*
*ṇāraṇa ṉakaittu naliyā*
*yukkiramoṭu tuṇṭama tuṟumpaṭi kaṭittaṉa*
*ṉoḻintaceyal kaṇṭa ṉaṉarō.*

## Pācupata Broken by the Tusk

The directions and their horizons
Shuddered; the elephants of the directions
Grew listless; the sun and the moon
Fell down; the clustre of stars
Was confused; immortals
And Acura kings fell in a swoon
On perceiving the missile of Civaṉ.
The Lord laughed and bit it to pieces
With his tusk; the king watched
This dread happening.

(சோமுகனின் நாராயணப் படை)

285. பங்கய மலர்ந்ததிரு வட்டவணை மேவிய
பரப்பிரம மான பிரம
துங்கனை வெறுத்துகயி லைக்கிரியி னுற்றிடு
திறற்பிரம மான சிவனை
இங்கித மிலாததொரு வாய்மொழியி னாலவரை
இகழ்ந்துதன் னியற்கை யையெலாம்
பங்கமுற வந்ததொரு சிந்தைகொடு நாரணனற்
பகழியை விடுத்த னனரோ.

எ-து. பங்கயமாகிய தாமரைப் பூவானது இதழவிழ்ந்து ஸ்ரீமகாலட்சுமி தேவிக்கு மனோகரமாகிய வட்டவணையான கர்ணிகையிலேபொருந்தி வாசம்பண்ணாநின்ற பரப்பிரம்ம சொரூபமாகிய நான்கு திருமுகங்களையுடைய பிதாமகனான விசையமுள்ளவரை வெறுத்த பின்பு, கயிலைக் கிரியில் எழுந்தருளிய, வெற்றிபெற்ற பரமனான சிவனை நயகுணமில்லாத விரோதமொழியினால் வெறுத்தவனாய்த் தன்னியற் கையாகிய புசபல பராக்கிரமமான காண்டீபத்தையும் கணைகளையும் கதையினையும் பார்த்து, நீங்களும் பங்கப்பட்டது நன்றெனக் கோபித்து, நாராயணமூர்த்தியைக் குறித்துத் தான் தவம்பண்ணும் போது அவர் அனுக்கிரகித்துக் கொடுத்த நாரணப்படையைத் தொடுத்தா னென்றவாறு. (13)

வட்டவணை - வட்டவடிவமாகிய அணை; அணை - இருக்கை; கர்ணிகையாகிய தாமரை இருக்கை. பரப்பிரமம் - இறைவன். துங்கன் - உயர்ந்தவன்.

## Cōmukaṉiṉ nārāyaṇap paṭai

*paṅkaya malarntatiru vaṭṭavaṇai mēviya*
*parappirama māṉa pirama*

*tuṅkaṉai veṟuttukayi laikkiriyi ṉuṟṟiṭu*
*tiraṟpirama māṉa civaṉai*
*iṅkita milātatoru vāymoḻiyi ṉālavarai*
*ikaḻntutaṉ ṉiyaṟkai yaiyelām*
*paṅkamuṟa vantatoru cintaikoṭu nāraṇaṉāṟ*
*pakaḻiyai viṭutta ṉaṉarō.*

## Cōmukā's Nārāyaṇaṉ Missile

After the missile of Piramaṉ
Who resides in the lotus in bloom
Had been rejected in frustration,
And then having rejected the missile
Of Civaṉ who resides on Kailāsa Mountain,
Cōmukaṉ spoke ill of them; worried
That the crisis had come upon him,
He aimed the Nārāyaṇaṉ missile.

(நாராயணக் கணையில் அநேக கணைகள்)

286. பிரமனது தன்படை பிறந்ததிரி சூலவகை
பெட்பொடு பிறந்த கரவாள்
திறமது பிறந்ததிரு வாழிகரு டப்படை
திறற்படுமெய் வாளிக ணைகளா
முரமது திகழ்ந்தவன லப்படை கதிர்ப்படை
யுவப்புறு கலாநி திப்படைத்
தரமது வுதித்தகடு வைப்பல துளித்துகன
லகன்றனதவ் வாழி யதரோ.

எ-து. அந்த நாராயணக் கணையினின்றும் பிரம்மாஸ்திரமானது அனேகமாய்ப் பிறந்தது. அதுவல்லாமல் திரிசூலங்கள் இடிகளை முழக்கிக்கொண்டு, அனேகமாய்ப் பிரவேசித்ததன் பின்பு மந்திரவாள்கள் அனேகமாயுதித்தன. அதற்கு மேல் கிஞ்சுமாரச் சக்கரமானது வடவாமுகாக்கினியைச் சுவாலித்துக் கொண்டு இடிகளை முழக்கிக் கொண்டு கோரரூபமாயுண்டாச்சுது. கருடப்படைகள் அனேகமாய்த் தோன்றின. அதன்பின்பு பிரசண்ட மாருதக்கணையானது குலாலன் சக்கரம் போலச் சுழன்று அனேகமாய்ப் பிரவேசித்தது அதன் பின்பு அக்கினிக் கணைகள், சூரியா ஸ்திரங்கள், அர்த்தசந்திர பாணங்கள் இவைகளெல்லாம் விட பருவங்களைத் துளித்தக்கினியைச் சுவாலித்துக்கொண்டு பிரவேசித்தன என்றவாறு. (14)

வளிகணை - பிரசண்டமாருதக்கணை. கலாநிதி - சந்திரன். கடு - நஞ்சு, விஷம்.

## Nārāyaṇak kaṇaiyil anēka kaṇaikaḷ

*piramaṉatu taṉpaṭai piṟantatiri cūlavakai*
*peṭpoṭu piṟanta karavāḷ*
*tiṟamatu piṟantatiru vaḷikaru ṭappaṭai*
*tiṟaṟpaṭumey vāḷika ṇaikaḷā*
*muramatu tikaḻntavaṉa lappaṭai katirppaṭai*
*yuvappuṟu kalāni tippaṭait*
*taramatu vutittakaṭu vaippala tuḷittukaṉa*
*lakaṉṟaṉatav vāḻi yatarō.*

## From Within Nārāyaṇaṉ Missile

From that missile was born
Innumerable Piramaṉ missiles; many tridents
Came out thundering; countless swords too.
The discus flashed, and Karuṭa armaments.
Cyclonic arrows streamed forth. Armaments
Of fire, the sun, the moon came out
Spewing poison; as the droplets fell
An immense blaze began.

(கணை வராகத்தைச் சரணடைதல்)

287. அண்டமு நடுங்கின வொடுங்கின யுயிர்த்தொகைகள்
யாருமிது வற்பு தமெனச்
சண்டவளி மேகமொடு சென்றுகன லுண்டுவட
வைக்கனல் தருக்கி யுணவா
யுண்டுதிரு மாலடி வலஞ்செய்து வணங்கவுயர்
சோமுகனு முறுது யருடன்
கண்டுவிரு கண்களனல் சிந்தபுகை மண்டவுயர்
காலனென வேக டுகினான்.

எ-து இந்தப் பிரகாரம் நாராயணப் படையானது திரிமூர்த்திகள் படை முதலாகிய படைகளையும், மற்ற தேவாஸ்திரங்களையும் உளதாக்கி முழக்கத்தினால் பெரிய கோஷ்டத்தை உண்டாக்கிப் பிரவேசித்த மாத்திரத்திலே அண்டகடாகங்களெல்லாம் கிடுகிடென்று நடுங்கத் தககதாய்ச் சுழன்று, திரிபுவனத்தினுள்ள நால்வகைத் தோற்றம்,

எழுவகைப் பிறப்பு, எண்பத்துநான்கு நூறாயிர சீவபேதங்களெல்லாம் சித்திரம் போலொடுங்க அதைக் கண்டவர்களெல்லாம் அற்புதத்தையடைந்தார்கள். பிரசண்ட மாருதக் காற்றானது மேகராசியினுடனே கூடிச் சென்று கடலினது நீரையெல்லாம் உறிஞ்சி யுண்டதன் பின்பு தருக்குற்று வடவனலையுணவாய் உண்டபின்பு, எக்கிய வராகத்தை வலஞ்செய்து, தெண்டன் சமர்ப்பித்து அவரேவிய பணிவிடையினின்றது. அதைக் கண்ட இராசசேகரனானவன் துயரத்தையடைந்து, மறுபடியும் தேறி யிரண்டு கடைக் கண்களிலும் அக்கினிச் சுவாலிக்கப் புகை மண்டலங் கொண்டல் போலப் பிரவேசிக்க, உயர்ந்த காலனாகிய எமனைப் போலக் கோபித்தா னென்றவாறு. (15)

சண்டவளி - பிரசண்டமாருதம், ஊழிக்காற்று. தருக்கி - தருக்குற்று, கர்வமடைந்து

**உரை** - மேகராசி - மேகக்கூட்டம்.

**சோமுகன் சமர்புரிந்த அத்தியாயம் முற்றிற்று.**

## Kaṇai varākattaic caraṇaṭaital

*aṇtamu naṭuṅkiṇa voṭuṅkiṇa yuyirttokaikaḷ*
*yārumitu vaṟpu tameṉac*
*caṇṭavaḷi mēkamoṭu ceṉṟukaṉa luṇṭuvaṭa*
*vaikkaṉal tarukki yuṇavā*
*yuṇṭutiru mālaṭi valañceytu vaṇaṅkavuyar*
*cōmukaṉu muṟutu yaruṭaṉ*
*kaṇṭuviru kaṇkaḷaṉal cintapukai maṇṭavuyar*
*kālaṉeṉa vēka ṭukiṉāṉ.*

## The Missile Surrenders to Varāka

The universe shuddered.
Lives on earth withdrew in fear.
As everyone wondered, the missile
Went up the spaces and clouds,
Spewed fire rivalling the Vadava flame,
And proudly drained the ocean.
The missile then circumambulated
The feet of the Lord and saluted.
Cōmukaṉ watched it sadly,
His eyes flashing fire; as the smoke
Rose up, he became angry like Yama.

# 15. பதினொன்றாவது
# வராகநதி உற்பத்தி அத்தியாயம்

சீற்றம்கொண்ட சோமுகன் தன்படைவீரர்களை இகழ்ந்து ஒதுக்கினான். பின்பு இத்தகு வீரம்மிக்க வராகத்துடன் எதிர்த்துப் போரிடுவதே தனக்குப் பெருவீரமாகும் என்று எண்ணிய சோமுகன் மீண்டும் தன்படைகளை ஏவினான். படை தொடர்ந்து வருவதையறிந்த வராகமூர்த்தி அங்கிருந்த பெரிய எலுமிச்ச மரத்தைப் பிடுங்கி யெறிந்து படைகளைக் கலக்கினார். பொன்மயமான மதிலை இடித்துத்தள்ளினார். அதைக்கண்ட சோமுகன் தேரைவிட்டு இறங்கிக் கதையைக் கையிலே ஏந்தியவனாய் அவ்வராகத்தை நோக்கி நடந்தான்.

அவன் தன்பின் தொடர்ந்து வரும்படியாக, வராகமூர்த்தியானவர் தெற்குநோக்கி அதிவிரைவாய்ச் சென்று, தண்டகாரண்யத்திலே உள்ள பாணாத்திரி மலையின் உச்சியிலே எழுந்தருளினார் முனிவர்கள் எல்லாம் தங்கள் தவம் பயனுற்றதாக எண்ணித் துதிக்கத் தொடங்கினார்கள். சிம்மத்தைப் போலக் கர்ச்சித்து மிகவிரைந்து வந்த சோமுகன் பல இடங்களிலும் அலைந்து இறுதியாக பாணாத்திரியின் உச்சியிலே முனிவர்கள் துதிக்க வீற்றிருந்த வராகத்தைக் கண்டான். உடனே வெகுண்டு சரமாரியினைப் பொழிந்தான். வராகமூர்த்தியானவர் அம்மலையிலிருந்து பூமியில் குதித்து தெற்குநோக்கிச் சென்று. கோலமலையை அடைந்து அதன் வடபாகத்தின் உச்சியில், தேவதச்சனால் உண்டாக்கப்பட்ட ஒரு குகையிலே அனந்த விமான சயனத்தில் எழுந்தருளினார்.

அவவாறு வராகமூர்த்தியானவர் கோல மலையிலே எழுந்தருளியவுடன், முன்பு தான் பெற்றிருந்த வரத்தின் பயனாய்த் தேவகங்கையானவள் அவருடைய திருவடிகளினின்றும் தோன்றிப் பெருக்கெடுத்து ஓடத்தொடங்கினாள். அக் கங்கையிலே நால்வகைச் சங்குகளும் நிறைந்து ஆரவாரம் செய்தன; கடல் போன்ற முழக்கம் ஏற்பட்டது. இத்தன்மையோடு கூடிய அந்த ஆறானவள் வராகநதி என்ற பெயரையும் பெற்றாள். தேவர்களும் நித்திய சூரியர்களும் இடைவிடாது துதிக்க யோகநித்திரை மேற்கொண்டார் வராகமூர்த்தியாகிய திரு அரங்கநாயகர். தேவர்கள், முனிவர்கள், பிரமன் ஆகியோர் மகிழ்ந்து துதித்து இனபக்கடலிலே முழுகியவர்களாய், அவரது ஆணையைத் தங்கள் முடிமேல் ஏற்றவர்களாய்ச் சூழ்ந்து விளங்கினார்கள்.

பாணாததிரி மலையிலிருந்து குதித்துத் தென்திசை நோக்கிவந்த வராகத்தைப் பின் தொடர்ந்த சோமுகன் காடு, மலைகளையெல்லாம் கடந்து வந்து திருமகளின் அருட்தன்மையோடு ஓடிவரும் வராகநதியினைக் கண்டு, அதன் கரையிலே நின்று களைப்பு நீங்கினான். பிறகு அந்த நதியிலே இறங்கி நீருண்டு, அந்த நதியைச் சூழ்ந்திருந்த சோலைகள், தருக்கள், அருவிகள் போன்றவற்றைக் கண்டு வந்தான். மேலும் அந்த ஆற்றின் வெள்ள அலைகளிலிருந்து ஒதுக்கப்படும் இரத்தினங்கள், சங்குகள் ஆகியவை முறையே ஒளிவீசி ஒலிததன அன்னக்கூட்டங்களும் சண்பக மலர்களும் தடாகங்களில் அலர்ந்திருந்த ஆமபல மலர்களுமெ, அவற்றில் இருந்து இனிய இசையை உண்டாக்கிய வண்டுகளும்

நிறைந்து இன்பமயமாய் விளங்கின. அவற்றைக் கண்டு உள்ளம் உருகினான். தம்மை வணங்கிவந்த தேவர்களெல்லாம் இப்போது இறுமாந்து எள்ளி நகையாடுவதையும் உணர்ந்தான். அவன் உள்ளம் கலங்கியது. ஆயினும் மனஉறுதி உடையவனாகி கோலாசலத்தின் மீது ஏறினான். ஒரு குகையினருகிலே பாறையின் மீது வராகத்தின் திருவடிகள் பதிந்திருப்பதைக் கண்டு வியப்படைந்தான். உற்று நோக்கிய போது அனந்த விமான சேகரராய் வீற்றிருக்கின்ற வராகமூர்த்தியின் உருவத்தைக் கண்டு, நாராயணமூர்த்தியே இவ்வாறு வராகமாகத் தோன்றினார் என்று உணர்ந்தான். அந்த நாராயணமூர்த்தியை எதிர்த்துப் போரிட நேர்ந்ததை எண்ணியவனாய் இனி பின்னிடலாகாது என்று உறுதிபூண்டு மேலும் தன் ஆயுதங்களை எடுத்துப் பிரயோகம் செய்து ஆரவாரம் செய்யத் தொடங்கினான்.

### (மீண்டும் போருக்கு ஊக்குவித்தல்)

288. **எண்டிசையின் வீரரை விளித்தன னொளித்தவர்**
**விரைந்துசெல வேக பதியு**
**மண்டர்க ணகைக்கதிரி தேவர்படை யுண்டதிது**
**வாதிபர மாமு தல்வனோர்**
**தண்டமிகு தைப்புரித லேநமது வீரமென**
**சார்ந்தகொடு வீரர் களெலா**
**மண்டியனல் சிந்திவட வைக்கனலை யொத்தவர்**
**வகுத்தனர்க ளூக மதனை.**

எ-து. [1]அப்படிக் கால ருத்திரனைப் போலக் கோபங்கொண்ட சோமுகனானவன் அஷ்ட திசைகளிலும் நின்று யுத்தம் செய்கின்ற வீரர்களை நோக்கி, இந்த வராகத்துடனே எதிர்த்து யுத்தம் செய்ய வல்லமையில்லாமல் முதுகு காட்டி ஓடின நீங்க ளெவ்விதத்திலே அந்த வராகத்தைச் செயம் பண்ணப் போகிறீர்கள்? ஆகிலும் தேவர்கள் நகைக்கத் தக்கதாய்த் திரிமூர்த்திகளிடத்திலும் வரம்பெற்ற பிரபலமாகிய அஸ்திரங்களையெல்லாம் உண்டு, சந்தோஷத்தை அடைந்து ஆதிப்பரப்பிரமத்தைப் போல யாவரும் எதிரில்லாமல் நிற்கின்ற இதை எதிர்த்து யுத்தம் செய்கின்றதே நமது வீரமென்று ஆக்கியாபித்தான் அப்போது மந்திரிமார்கள் முதலாகிய சேனைத் தலைவர்களெல்லாம் எதிர்த்து, கண்களிலே வடவாக்கினி பொழியத் தக்கதாகக் கோபங்கொண்டு, நாலு திக்கிலும் பதும யூகமாய் வளைத்துக் கொண்டு யுத்தம் செய்தார்க ளென்றவாறு. (1)

எண்டிசை - எண் + திசை - எட்டுத்திக்கு. ஏகபதி - ஒரே தன்மையனான சோமுகன. திரிதேவர்படை - மூன்று தேவர்களின் அம்புகள்: பிரமாஸ்திரம், பாசுபதாஸ்திரம், நாரணப்படை ஆகியவை உண்டதிது - இது உண்டது; இது - இவ்வராகம்.

பா.வே.- 1. எட்டுத்திக்கினும் கோபத்தோடுங்கூடிய ராசசேகரனானவன் பார்த்தா னிந்த வராகத்துக்கு வெதிர்நின்று யுத்தஞ் செய்ய மாட்டோம லோடிப் பயப்பிராந்தியை யடைந்தவர்கள் வீரர்களோ வென்றிகழந்து கூறி யவரைச் சமீபத்தி னழைத்துக் கூறுகின்றா னண்டர்களாகிய தேவர்களெல்லாம் நகை செய்ய வந்த வராகமானது திரிமூர்த்திகள் படையினையு முண்டு தருக்குற்ற தாதியிலே பரமமா யிருந்த முதல்வனோ வப்படியா யிருந்தாலு மிதைத் தண்டஞ் செய்தலே நமது வீரமல்லது வேறில்லை யாகையா லிதை வளைத்து கொண்டு சமர்த் தொழிலை விடாமற் செய்யக்கடவீர்க ளென்றாக்கியாபித்தா னவனுடைய மந்திரிகள் முதலாகிய பேர்களெல்லாந் திரண்டு கண்களிலே வடவனலைப் பொழியக் கோபித்தவர்கள் வியூகம் வகுத்தார்க ளென்றவாறு

## Mīṇṭum pōrukku ūkkuvittal

*eṇticaiyiṉ vīrarai viḷittaṉa ṉoḷittavar*
*viraintucela vēka patiyu*
*maṉtaraka ṇakaikkatiri tēvarpaṭai yuṉṭatitu*
*vātipara māmu talvaṉēr*
*taṉṭamiku taippurita lēnamatu vīrameṉa*
*cārntakoṭu vīrar kaḷelā*
*maṇtiyaṉal cintivaṭa vaikkaṉalai yottavar*
*vakuttaṉarka ḷūka mataṉai.*

## XV. Rise of the Varāka River

### Call to Arms

He called out to the soldiers
Who were battling in the eight directions.
"How are you going to gain victory
Since you ran away from the field so fast?
Our heroism now demands
That we face in the dire battle
The Supreme who devoured the divine weapons
While gods looked on laughing".
Then his commanders rallied,
Their eyes spitting Vaṭava fire
As it were, and fiercely set about
Creating the battle formation.

(வராக மூர்த்தியும் எதிர்த்தல்)

289. வில்லினை வணக்கினர் கனற்கணை பொழிந்தனர்
விடுத்தமழை தாரை யெனவே
பல்வித கொடுங்கணை பொழிந்தவர் நெருங்குவது
கண்டிடு புகழ்ப்ப ரமனு
மொல்லையின் முழங்கியுயர் சம்பீரப் பாதவ
மெடுத்தன னுயர்ந்த கரனால்
வல்லியம தென்னவனி கத்திரள் மடித்தனர்
வதைந்தனர்கள் வீரர்க ளெலாம்.

எ-து. அணித்தலைவர் யூகத்தலைவர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், அதிரதர், மகாரதர், மந்திரி முதலாகிய பேர்கள் அணி வகுத்தூகம் வளைத்து, வில்லை வளைத்து, நாணேறிட்டுக் குணத்தொனி செய்து, சத்த மேகங்களும் ஒன்றாய்க் கூடிச் சலதாரைகளைப் பொழிதல் போல அக்கினிப் பாணங்களைப் பொழிந்தார்கள். அத்தன்மையாயவர் தொடர்ந்து வருதலை யறிந்த வராகமூர்த்தியானவர் அதிதுரிதமாய் மேகத்தைப் போலக்கர்ச்சித்து அங்கே ஒரு உயர்ந்த எலுமிச்சை விருட்ச மிருந்ததை வேருடனே பிடுங்கிக் கொண்டு ஒரு புலி யானது மான் கூட்டத்தில் புகுந்தது போலதைச் சுழற்றி அடித்தார். [1]அந்தத் தெப்பலினாலே இரத, கச, துரக, பதாதி நால்வகைச் சேனைகளையெல்லாம் அடித்துச் சக்கரம் போலச் சுழன்று எட்டுத் திக்கிலும் பாய்ந்து உதிரப் பிரவாகம் ஓடத்தக்கதாய் யுத்தம் செய்தார்கள என்றவாறு. (2)

ஒல்லை - விரைவாக. சம்பீரம் - எலுமிச்சை. பாதவம் - மரம். கரன் - கரம், கை. வல்லியம் - புலி. அனிகம் - அனீகம் - படை.

பா.வே. - 1. அந்தத் தொப்பையினாலே நான்காகிய தள தந்திரங்களையெல்லா முறிததுத் தூளாக்கினா ரென்றவாறு.

## Varāka mūrttiyum etirttal

*villiṉai vaṇakkiṉar kaṉaṟkaṇai poḻintaṉar*
*viṭuttamaḻai tārai yeṉavē*
*palvita koṭuṅkaṇai poḻintavar neruṅkuvatu*
*kaṇṭiṭu pukaḻppa ramaṉu*
*mollaiyiṉ muḻaṅkiyuyar campīrap pātava*
*meṭuttaṉa ṉuyarnta karaṉāl*
*valliyama teṉṉavaṉi kattiraḷ maṭittaṉar*
*vataintaṉarkaḷ vīrarka ḷelām.*

## The Varāka Retaliates

Bending the bow, they aimed fiery darts
Like streams of rain from the clouds;
They sent a variety of missiles
That were fierce. Watching them
Move forward in this manner
The Supreme thundered speedily,
Uprooted a tall lemon tree,
And beat up everything with it
Like a tiger in a herd of deer.
The large numbers of soldiers
Who comprised the army, died and were lost.

(வராகமூர்த்தி தண்டகாரணியம் அடைதல்)

290. கண்டவர சன்னதி சயித்துவொரு செய்கையைக்
கருத்தில்நினை யாத பிரமைக்
கொண்டனன் வராகமது கொண்டல்தவ ழிஞ்சியைக்
குறித்தவ ணிடித்து குறுகத்
தண்டம தெடுத்துவிர தத்தினைத் தணந்துவரு
தன்மையை யுணர்ந்த பரமன்
தண்டக வனந்தனில் புகுந்தசெயல் கண்டதவ
மாமுனிவர் தாழ்ந்த னர்களால்.

எ-து இப்படியாக எட்டுத்திக்கிலும் பிரசண்டமாருதம் போல விருட்சத்திலே அடித்து மடிக்கின்ற வராகத்தைப் பார்த்துப் பிரம்மித்து பெருமூச்செறிந்து, ஒன்றுந் தோன்றாமல் திகைத்து நிற்கின்ற சோமுகனை வராகமூர்த்தி பார்த்துக் கர்ச்சித்து, ஆகாயமளாவிய சொர்ணமதிலை இடிக்கக் கண்ட இராசசேகரனானவன், இரதத்தைவிட்டுக் குதித்து மகமேருவுக்குச் சமதையாகிய தண்டாயுதத்தைக் கையிலே தாங்கினவனாய்ப் பின் தொடர்ந்து வர, பரம மூர்த்தியானவர் அதிவேகமாய்த் தட்சண பாகத்தை நோக்கி அனேக ஆரணியங்கள் முதலாகிய இரண்டாயிரம் யோசனையும் கடந்து, தண்டகாரண்ணியத்திலே பாணாத்திரியென்கிற பர்வதத்தின் உச்சியிலே எழுந்தருளினார். அந்த வராகமூர்த்தியைத் தபோநிதிகளாகிய மகாரிஷிகளெல்லாம் கண்டு, நம்மிட தவம் இன்று ஈடேறிற்று என்று தோத்திரம் செய்தார்க ளென்றவாறு. (3)

இஞ்சி - மதில். அவண் - அவ்விடத்தில் தண்டம் அது எடுத்து இரதத்தினைத் தணந்து வர எனப்பிரிக்க. தண்டம் - தண்டாயுதம். தணந்து - நீங்கி, இறங்கி. தண்டகவனம் - தண்டகாரணியம்.

## Varākamūrtti taṇṭakāraṇiyam aṭaital

*kaṇṭavara caṉṉati cayittuvoru ceykaiyaik*
*karuttilniṉai yāta piramaik*
*koṇṭaṉaṉ varākamatu koṇṭaltava ]iñciyaik*
*kuṟittava niṭittu kuṟukat*
*taṇṭama teṭuttuvira tattiṉait taṇantuvaru*
*taṉmaiyai yuṇarnta paramaṉ*
*taṇṭaka vaṉantaṉil pukuntaceyal kaṇṭatava*
*māmuṉivar tāḻnta ṉarkaḷāl.*

## The Varāka Reaches Taṇṭakāraṇyam

Watching the boar in action
Winning the battle thus,
Cōmukaṉ grew despondent
And helpless. The Varāka
Began to destroy the cloud-teasing
Fort. This enraged Cōmukaṉ
Who descended from the chariot
And advanced with a mace in hand.
Noticing this, the Supreme
Entered the Taṇṭaka forest.
The holy sages who noticed the entry
Began to pray to him.

(பாணாத்திரி மலையில் வராகமூர்த்தி)

291. நின்றவர சன்குருதி நீள்கட லெனப்பெருக
நிகழ்இரத பதாதி களெலாஞ்
சென்றுகடல் தங்கியிட கண்டுபுகை மண்டவோரு
தண்டமொடு தண்ட கமதின்

**விண்டுதுயில் கொண்டமணி தங்குமொளி பாணவரை**
**மேவிமுனி வோர்கள் புகழக்**
**கண்டுசர மாரியினைக் கொண்டல்கள் கலங்கியிடக்**
**கடுஞ்சரம் விடுக்க விமலன்.**

எ–து. [1]இப்படியாக நிற்கின்ற இராசசேகரனானவன் உதிர வெள்ளமானது சமுத்திர கோஷடம் போலப் பெருக்கெடுத்து இரத, கச முதலாகிய நால்வகைச் சேனைகளையும் புரட்டிக்கொண்டு போகும்படி யாகிய இரணகளத்தைக் கண்டு பிரம்மித்தவனாய், அவனுடைய புசங்கள் துடிக்கத்தக்கதாய், இரண்டு கண்களிலும் அக்கினிப் பொறிகளானவை சிதற, ஒரு மகமேருவுக்குச் சமதையாகிய கால தண்டத்தைக் கையிலே தாங்கினவனாய், முதுகிலே அம்பறாத்தூணி பிரகாசிக்கச் சிம்மத்தைப் போலக்கர்ச்சித்து, வாயுவேகம், மனோவேகமாய் ஒருசணப்போதிலே வனாரண்ணியங்களையெல்லாம் கடந்து, தண்டகாரணியம் வந்து சேர்ந்து, அங்குண்டாகிய நதிகள், பன்னக சாலைகள், குன்றுகள், தடாகங்களெங்கும் வாயு சஞ்சரித்தது போலத் தேடியும் வராகத்தைக் காணாமல், மகாவுன்னிதத்தோடுங்கூடிய பாணாத்திரி பர்வதத்தைக் கண்டு, அதனுடைய உச்சியிலே அனேக ரிஷிகள் ஆராதிக்கத் தக்கதாய் எழுந்தருளியிருக்கின்ற வராகமூர்த்தியைக் கண்டு, வடவாக்கினிக்குச் சமதையாகிய அனேக அஸ்திரங்களை மேகம் வருஷிக்கின்றது போலச் சலதாரையாய்ப் பொழிந்தான். சரமாரிகளைக் கண்டு கலங்கி ரிஷிகளெல்லாம் ஓட்டமெடுக்கச் சுனைகளெல்லாம் உடைந்து, சலப் பிரவாகமாய் அந்த வனங்களெல்லாம் நிரம்பித் தத்தளிக்க ஆகாயம், பூமிகள் எங்கும் மூடிக் கொள்ளத் தக்கதாய பாணங்களைப் பொழிந்து ஆர்ப்பரித்தான் சோமுகராச னென்றவாறு. (4)

தணடம் – தணடு. தண்டாயுதம். விண்டு – விஷ்ணு, திருமால். பாணவரை – பாணாத்திரி என்னும் மலை

**உரை** – வனாரண்ணியங்கள் – வனம்+ஆரண்ணியம் வனம் – சோலை. ஆரண்ணியம் – ஆரணியம் – காடு.

**பா.வே.** – 1. இபபடியாக வராகமானது சமீபத்தில் வருவதுபோல் வந்து தன்னை யேளிதஞ் செய்து தணடக வனததியே யோடக் கண்ட ராச சேகரனாகிய சோமுகனானவன் தனியா யிருந்து உதிரப் பிரவாசமானது கடலைப்போலப் பெருகவக கடலிடைகளிலே பிணக்குவைகள் மலைகளைப் போல தோன்றக கணடு கோபித்தவனாய் வடவா முகாக்கினியானது கண்களிலே சுவாலிக்கப் புகைமண்டலங்கள் மேகமணடலங்களைப் போலச் சூழத் தண்டததை யெடுத்துக் கொண்டந்த வராகத்தைத் தொடர்ந்து தண்டக வனத்திலே கோடித் திரியும்போ தந்த வராகமூர்த்தியானவ ராயாசத்தா லிளைத்தவரைப்போல நித்திரை செயகின்ற மணிமயமாகிய பாறையினொளியினை விரிக்கா நின்ற விடமகன்ற பாணாத்துரி சைலத்தின் மேவித்தவம் செய்கின்ற முனிவர் கூட்டங்கள் தவமுடி பெய்தும் பொருட்டாய்ப் பரம்பர மூர்த்தியானவர் தமது யோக நித்திரையை நமக்கு எளிதாய் வெளியிட்டருளிரை ரென்று புகழ்ந்துருகித் தெண்டன் சமாப்பித்தார்க ளதன்பின் பிந்த வராகத்தைத தொடர்ந்து வருகின்ற ராச சேகர னானவன் பாறையிலே நித்திரை செய்கின்ற வராகத்தைக் குறித்துத் தனது காண்டீபத்திற் பூட்டிய கணைகளைப் புங்காநு புங்கமாயச் சரமாரிகளைப் பொழிந் தாா்ப்பரித்தா ரென்றவாறு

## Pāṇāttiri malaiyil varākamūrtti

*ninṟavara caṉkuruti nīlkaṭa leṉapperuka*
*nikaḻirata patāti kaḷelāñ*
*ceṉṟukaṭal taṅkiyiṭa kaṇṭupukai maṇṭavōru*
*taṇṭamoṭu taṇṭa kamatiṉ*
*viṇṭutuyil koṇṭamaṇi taṅkumoḷi pāṇavarai*
*mēvimuṉi vōrkaḷ pukaḻak*
*kaṇṭucara māriyiṉaik koṇṭalkaḷ kalaṅkiyiṭak*
*kaṭuñcaram viṭukka vimalaṉ.*

## The Varāka in the Pāṇa Hill

The king who was standing
Saw that the stream of blood
Was dragging away his chariots
And foot soldiers, and dropping them
Into the ocean. Growing fierce
He entered the Taṇṭaka forest
With a mace, reached the shining
Pāṇa Hill where Viṣṇu rested,
While sages hailed the Lord.
Seeing this, he sent a shower of arrows
Confounding the clouds.

(வராகமூர்த்தி கோலாசலத்தில் எழுந்தருளுதல்)

292. தென்றல்தவ ழக்கிரி யிழிந்துவட மேருவில்
செனித்தமணி கோல வரைமேல்
கொண்டல்தவழ் கின்றநிலை யொன்றதி னுயர்ந்தகுகை
தொண்டுசெய மயன்ற ருதலாற்
சென்றனர் பணாமுடி சிறந்தசய னத்திடை
திகழ்ந்தவர் சிறந்த வடியி
னின்றபுகழ் கங்கைமிகு சங்கமொ டெழுந்துநிலை
நின்றது வராக நதியே.

எ-து. [1]அப்படியாகத் தென்றல் காற்றினாலும் திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற குளிர்ச்சியினாலும் தமது சிரமம் தீரும்படியாக எழுந்தருளியிருக்கின்ற வராக மூர்த்தியானவர், சோமுகனுடைய பாணாக்கினியினாலே அந்தப் பாணாத்திரியை விட்டுப் பூமியினிடத்தில் குதித்துத் தெற்கு நோக்கி ஆயிரம் யோசனைகள், வனங்கள், பன்னக சாலைகள், குன்றுகள், பர்வதங்களெல்லாம் கடந்து, வடமேரு கிரியினுடைய புத்திரனாகிய சொர்ண பர்வதமான கோலாசல கிரியினது உத்திரபாகத்தின் மேகம் தவழ்கின்ற உச்சியில் தேவ கம்பியன் நிர்மித்த, அதிசிரேட்டமாகிய ஒரு குகையிலே சேஷசாயியானவர் ஆயிரம் சிரோரத்தினம் பிரகாசிக்கின்ற பணாமுடியினை விரித்தொளிரா நின்ற அனந்த விமான சயனத்தில் எழுந்தருளினார். அவருடைய திவ்விய திருவடித் தாமரையினின்று முன்வரபாலனம் பெற்ற காரணத்தினாலே தேவ கங்கை யானவள் பெருக்கெடுத்துக் கடல் போல முழங்கி, நான்கு வகைச் சங்கங்களும் ஆர்ப்பாரிக்கத் தக்கதாய், வராகநதியென்கின்ற பேரினைப் பெற்றுப் பிரவேசித்தாள். அந்தச் சமயத்திலேயே ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, அனந்தன், கருடன், விசுவச்சேனன், சனகன், சனந்தன், சனற் குமாராளாகிய நித்திய சூரியர்களால் இடைவிடாது துதிசெய்யத் தக்கதாய் யோக நித்திரை செய்தருளினார் ஆதிவராகமூர்த்தியாகிய ஸ்ரீ அரங்கநாயக ரென்றவாறு. (5)

இழிந்து - இறங்கி. செனித்த - பிறந்த, தோன்றிய மயன் - தேவதச்சன்

**உரை** - நிர்மித்தல் - நியமித்தல, உண்டாக்குதல். சேஷசாயி - விஷ்ணு. பணாமுடி - பணம்+முடி. பணம் - பாமபின் படம். முடி - தலை நான்குவகைச்சங்கு - இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம்.

பா.வே. - 1 திவய பரிமளங்களையுங் குளிர்ச்சியினையு மந்த கதியினையு முடைய தென்றற் காற்றானது வீசாநின்ற வந்தப் பாணாததிரி சைலத்தைவிட்ட வராக மூர்த்தியானவர் வடமேரு கிரியிலே யவதாரஞ் செய்தருளிய மணமயமாகிய கோலாசல கிரியினது மேகந்தவழ்கின்ற வுச்சியின் றெய்வக் கம்மியன் றவஞ் செய்தமைக்கப்பட்ட சிரேவிடமாகிய வொரு சுந்தர சமங்கல சுரஞ்சித சுயம்பிரகாசமா யொளிராநின்ற ஒரு குகையிலே சேடசாயி யானவராயிரம் பணாமுடியினை விரித் தாயிரஞ் சூரியரைப்போ லொளியை விரிக்காநின்ற வனந்த விமான சயனத்தின் யோக நித்திரை செய்கின்ற வரங்க நாயகருடைய திருவடித் தாமரைகளினின்று முன்வரபாலம் பெற்ற காரணத்தினாலே தேவ கங்கையானவளப்போ தவதரித்தாளது பெருக்கெடுத்துக் கடல்போல முழங்கி நான்குவகைச் சங்கங்களு மார்ப்பரிக்கத் தக்கதாய் வராகநதி யென்கின்ற பேரினைப் பெற்றுப் பிரவேசித்தா ளென்றவாறு.

## Varākamūrtti kōlācalattil eḻuntaruḷutal

*teṉraltava ḻakkiri yiḻintuvaṭa mēruvil*
*ceṉittamaṇi kōla varaimēl*
*koṇṭaltavaḻ kiṉraṉilai yoṉrati ṉuyarntakukai*
*toṇṭuceya mayaṉra rutalāṟ*

*cen̲ran̲ar pan̲āmuṭi ciṟantacaya n̲attiṭai*
*tikaḻntavar ciṟanta vaṭiyi*
*n̲in̲rapukaḻ kaṅkaimiku caṅkamo ṭeḻuntunilai*
*nin̲ratu varāka natiyē.*

## The Varāka comes to the Kōla Hill

As the breeze blew, the Lord came down
The hill, reached the gem - rich Kōla Hill
That was the son of North *Mēru* Mount.
Going up the cloud-high spire,
He entered a large cave that was fashioned
By Maya intent on service.
There he rested in a wondrous bed
Of snake that flashed a brilliant hood.
Kaṅka rose from his feet with conches
Blowing, and gushed forward
As the Varāka river.

(தேவர்கள் பணிதல்)

293. அண்டர்க டுதிக்கமுனி வோர்கள்மறை யோதவறி
யாதவரி பாத மலரைக்
கண்டடி பணிந்துகரு ணைக்கடல் சிறந்தகம
லன்திரு வராதனை செயத்
தண்டக வனத்தினர் மகிழ்ந்தனர் துதித்தனர்
தனித்தனி நடித்த னர்களாய்க்
கொண்டஅமு தச்சுவை யருந்திமுனி வோர்கடிகழ்
கொண்டுபணி கின்ற னர்களால்.

எ-து. அப்படிக் கோலாசல கிரியிலே [1]அனந்தவிமான சேகரராய் யோகநித்திரை செய்த அளவிலே தேவாதிகளெல்லாம் துதிக்கவும், முனிவர் கூட்டங்களெல்லாம் மறையோதவும், காண்டற்கரியனவாகிய வராகமூர்த்தியின் கருணைக் கடல்போன்ற திவ்விய திருவடிகளிலே, பதும பீடத்தின் எழுந்தருளிய சதுர் முகனானவர் திருவாராதனம் செய்யவும், தண்டகாரணிய முனிவர்களெல்லாம் மகிழ்ந்து துதித்து ஆனந்த இன்பத்திலே

மூழ்கினவர்களாய் நடனம்செய்து தெண்டன் சமர்ப்பித்து அவருடைய தேசோமய காந்தியாகிய வரம்பிலின்ப அமுதத்தை அருந்தி, அற்புதம் பெருகியவரதூழியப் பணி விடையைச் சிரத்தில் தாங்கியிருந்தார் களென்றவாறு. (6)

அண்டர்கடுதிக்க - அண்டர்கள் + துதிக்க. அரி - திருமால், வராகமூர்த்தி. கமலன் - பிரமன். திருவராதனை - திருஆராதனை - பூசனை, பூசை. முனிவோர்கடிகழ் - முனிவோர்கள் + திகழ்

**உரை** - தேசோமயகாந்தி - அழகுமிக்க பேரொளி வரம்பிலின்ப அமுதம் - வரம்பு+இல்+இன்ப+அமுதம். வரம்புஇல் - அளவில்லாத.

**பா.வே.** - 1 விமான ரூடராய் யோகநித்திரை செய்த வளவிலே தேவாதிக ளெல்லாந் துதிக்கவு முனிவர் கூட்டங்களெல்லா மறை யோதவும் ஞானிகளா லறிதற்கரிய வராகமூர்த்த வரஙக நாயகராகிய கருணைக்கடலானவரது திவ்ய கமலம் போன்ற திருவடிகளை ஸ்ரீ மகாலட்சுமிதேவி யாராதனஞ் செய்யவும் தண்டகாரணிய .

## Tēvarkaḷ paṇital

*aṇṭarka ṭutikkamuṉi vōrkaḷmaṟai yōtavaṟi*
*yātavari pāta malaraik*
*kaṇṭaṭi paṇintukaru ṇaikkaṭal ciṟantakama*
*laṉtiru varātaṉai ceyat*
*taṇṭaka vaṉattiṉar makiḻntaṉar tutittaṉar*
*taṉittaṉi naṭitta ṉarkaḷāyk*
*koṇṭaamu taccuvai yaruntimuṉi vōrkaṭikaḻ*
*koṇṭupaṇi kiṉṟa ṉarkaḷāl.*

## The Gods Salute

The gods prayed; the sages chanted
Scriptures; the lotus-seated Piramaṉ
Performed worship at the feet
Which are difficult to vision
And have oceanic compassion.
The denizens of the Taṇṭaka Hill
Were happy and prayed,
And danced. Drinking happily
The nectarean presence, the sages
Engaged themselves in service.

### (சோமுகன் வராக நதியைக் காணுதல்)

294. நின்றநெடு மால்வன மடைந்திட கலங்கிநெடு
நேமியென நீள்க டலெலா
மண்டமு நடுங்கதிசை யானைகுரு திச்சொரிய
அகிலஉல கெங்கு மசையச்
சென்றுகன லென்றுகளை கொண்டுநதி கண்டுதிரு
வென்றுபுகழ் தென்ற லதனால்
இன்றுமகிழ் கொண்டுபுன லுண்டுபெரு கும்பொன்மண
லின்பமொடு கண்ட னனரோ.

எ-து. பாணாத்திரி [1]கிரியினுச்சியிலே நின்ற நெடுமாலாகிய வராக மூர்த்தியானவர் அதிவேகமாய்த் தென்திசை நோக்கி நடக்கக் கண்ட இராச சேகரனாகிய சோமுகனானவன், தன்னுடைய புசபல பராக்கிரமம் கலங்கினவனாகி மீண்டும் தெளிந்து நீண்ட கிஞ்சுமாரச் சக்கரம் போல அதி வேகமாய்த் திக்குத்திகாந்தம் முதலானதுகள் நடுங்கவும், திசைகளைக் காக்காநின்ற அட்டகசங்களும் உதிரத்தைக் கக்கிக் கொள்ளவும், அலகிறந்தனவாகிய உலகங்களெல்லாம் அசையவும், கனலைப் போல அனேக வனங்கள், தடாகங்கள், குகைகள், குன்றுகளெல்லாம் தேடியலைந்து, களைகொண்டு, அந்த வராக நதிக்கரையிலே நின்று பார்க்கும் போது, ஸ்ரீமகா லட்சுமி விலாசமாய் வருகின்ற நதியைக் கண்டு தென்றல் காற்றினாலே களை தெளிந்து, திவ்விய பரிமளம் கமழ்கின்ற அந்த நதியிலே இழிந்து, தமது ஆயாசம் தீரும் படியாய்த் தீர்த்தத்தை உண்டு, அந்த நதியில் குவிந்திராநின்ற பொன் மயமாகிய மணலைக் கண்டு ஆச்சரியம் அடைந்தான் இராசசேகரன் என்றவாறு. (7)

நேமி - சக்கரம். களை - அயர்வு, சோர்வு. திரு - இலக்குமி.

**பா.வே.** - கிரியிலே நின்ற நெடுமாலாகிய வராகமூாத்தியானவர் வனங்களிலே யோடி யொளிக்க ராச சேகரனாகிய சோமுகனானவன் கலங்கி மீட்டுந் தெளிந்து நீண்ட கிஞ்சுரமார சக்கரம் போலச் சீற வதனாலே திக்குத் திகாந்த முதலானது நடுங்கவும் திசைகளைக் காக்காநின்ற வட்ட கசங்களு மிரத்த வெள்ளங்களைச் சொரியவு மலர்ந்தனவாகிய வுலகங்க ளெல்லா மசையவுங் கனலைப் போலச் சீறிச் சென்றவன் கோலகிரியின் மேலேறிப பார்த்தானப்பாது தனியா யோடி வந்ததினாலும் யுத்த சன்னலகத்தினாலுங் களைத்து விழுந்து சிலநேரம் போனபின் பந்தக் களை தெளிந்தா னப்போது திருமுக மண்டலத்தில் திவ்ய பரிமளங்களைக் கமழாநின்ற தென்றற் காற்றானது வீசவதனாலே களை தீர்ந்து லட்சுமிகரத்தை யடைந்தன்றைய தினம் நாராயண மூர்த்தியினது பாத சம்பந்தமாகிய வராகநதி தீர்த்தத்தை யுண்டு வந்தவரை யந்நதியிற் குவிந்திராநின்ற பொன்மயமாகிய மணலைக் கண்டானந்தப் பட்டானரச னென்றவாறு.

## Cōmukaṉ varākanatiyaik kāṇutal

*niṉṟaneṭu mālvaṉa maṭaintiṭa kalaṅkineṭu*
*nēmiyeṉa nil̤ka ṭalelā*
*maṇṭamu naṭuṅkaticai yāṉaikuru ticcoriya*
*akilaula keṅku macaiyac*
*ceṉṟukaṇa leṉṟukal̤ai koṇṭunati kaṇṭutiru*
*veṉṟupukal̤ teṉṟa lataṉāl*
*iṉṟumakil̤ koṇṭupuṉa luṇṭuperu kumpoṉmaṇa*
*liṉpamoṭu kaṇṭa ṉaṉarō.*

## Cōmukaṉ Sees the Varāka River

Watching the Supreme Lord reach the wood,
Cōmukaṉ felt confounded for a while;
He then went searching like a discus
While large seas and the universe shuddered.
The elephants of the directions
Began to vomit blood, the worlds swayed;
He then grew tired but then revived
When he saw the river and felt the breeze.
Drinking the water, he grew happy.
Then he was astonished as he saw
The sand dunes which were golden.

(வராகநதியின் அழகு)

295. சோலைக டிகழ்ந்தமலர் சூழ்ந்தநதி மேல்பரவ
சூழ்புவன மாகு மதிதோய்
சாலைகள் புரிந்துநவ ரத்னமணி மேடைக
டழைத்தபடி யாய மரவே
காலைபுகழ் மாலைதிகழ் கோலவரை தங்கமய
மாகியொளி நின்றி ரவிபோற்
பாலையரு வித்திரள் சொரிந்திட மலர்ச்சயன
பாயல்மிக கண்டு ருகியே.

எ-து. அந்த வராகநதியைக் கண்ணுற்ற திசயமடைந்த இராசசேகரனானவன் அந்த வனச்சோலையைக் கண்டு, அற்புதம் அடைந்தவனாய்ச் சோலையினின்று முதிராநின்ற நானாவிதமாகிய மலர்த் தொகுதிகளானவை அனேகமாய் அந்நதிப்பரப்பெல்லாம் மூடித் தோற்றம்செய்ய, வடமேரு கிரியை வலமாய் வந்து, இந்தப் புவனத்தில் தோன்றுகின்ற சந்திரனானவன் தவழ்கின்ற சாலைகளாகிய கமுகமரங்களும், தென்னை விருட்சங்களும் [1]வாழைகளுமாகிய சாலைகள் அனேகமாய்த் தோன்றவும், நவரத்தினங்களாலே அந்நதியின் இருபுறக்கரைகளும் கட்டப்பட்ட படிகளாய்த் தோன்றுதலையும், காலை, மாலைப்பொழுதைப் போலத் தோன்றுகின்ற கோல கிரியானது ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கமாய்த் தோன்றுதலையும், பாலினை அந்த மலையானது அருவியாய்ச் சொரிதலையும், அந்த நந்தவனத்தி னிலகாநின்ற புட்பக் கூட்டங்கள் மலரினால் பரப்பிய சயனப்பாயலைப்போலத் தோன்றுதலையும் கண்ணாற் கண்டு வந்தான் அரசர்பிரா னென்றவாறு. (8)

சோலைகடிகழ்ந்த - சோலைகள் + திகழ்ந்த. மதி - நிலவு. மேடைகடழைத்த - மேடைகள் + தழைத்த. இரவி - சூரியன் அருவித்திரள் - நீரருவிக்கூட்டம். பாயல் - படுக்கை.

## Varākanatiyiṉ aḻaku

*cōlaika ṭikaḻntamalar cūḻntanati mēlparava*
*cūḻpuvaṉa māku matitōy*
*cālaikaḷ purintunava ratṉamaṇi mēṭaika*
*ṭaḻaittapaṭi yāya maravē*
*kālaipukaḻ mālaitikaḻ kōlavarai taṅkamaya*
*mākiyoḷi niṉṟi ravipōṟ*
*pālaiyaru vittiraḷ corintiṭa malarccayaṉa*
*pāyalmika kaṇṭu rukiyē.*

## The Loveliness of the Varāka River

Flowers from the groves veiled
The river; moon-lit gardens were there;
Upraised seats of gems innumerable
Were shaped like steps for resting.
In the russet morn and in the evening
The Kōla Hill had a golden glow;
Water-falls of milk too, sun-bright.
As Cōmukaṉ drew close
He saw a bed of flowers.

(நதியைக் கண்ட சோமுகன்)

296. முத்துநவ ரத்னமணி யெற்றுதிரை வீசமுதிர்
முச்சுட ரெனத்தி கழவே
வெத்திபுகழ் வால்வளை யொலிக்கவிரு பாலினு
மிகுந்தவன மேவி வளரச்
சுத்தினு மிகுந்துகமழ் செண்பக மலர்ந்தசெழு
சோலைக டிகழ்ந்த மதிசூழ்
பத்திவள ராம்பல்பல கோடிக டழைத்தளிகள்
பண்பயில்தல் கண்டு ருகினான்.

எ-து. அந்த வனத்தின் நடுப்பிரதேசத்திலே பிரகாசிக்காநின்ற வராகநதிப் பிரவாகத்தின் அலைகளினாலே முத்து முதலாகிய நவரத்தினங்கள் எடுத்தெறியப்படுதலால், அதன் பிரகாசமானது சந்திர, சூரியர், அக்கினியாகிய மூன்று சுடரினைப் போலப் பிரகாசிக்கவும், வெற்றியினையுடைய சங்க சமூகங்களானவை ஆர்ப்பரித்தொலிக்கவும், அந் நதியின் இருபாலினும் அன்னக்கூட்டங்களானவை பொருந்தி வளரவும், அவ்வனத்தினைச் சுற்றிலும் இருந்தலர்களை அலர்ந்து நறுமணங்களைக் கமழாநின்ற சண்பக வனத்தின் சோலையினது உச்சியில் சந்திரன் தவழவும், அக் காவின் நடுப்பிரதேசங்களிலே வதியாநின்ற தடாக பந்திகளிலே ஆம்பல்கள் அலரை விரித்தலர்ந்த அளவில், அனந்தகோடி வண்டின் சமூகங்களானவை அந்தத் தேனை உண்டு ஆனந்த மகிழ்ச்சியினாலே காமரங் குறிஞ்சி முதலான பண்ணாகிய இசையினை இசைக்கவும், இன்பமாய்ச் சருக்கரைக் குன்றிலே தேன்மாரி பொழிதல் போன்ற அந்த இன்பத்தைக் கண்டு உருகினான் சோமுகனென்றவாறு (9)

எறறுதிரை - மோதும் அலை முச்சுடர் - சூரியன், சந்திரன், தீ ஆகிய சுடர்கள் வெத்தி - வெறறி, எதுகை நோககியது வால்வளை - வெண்சங்கு மிகுந்தவனம் - மிகுந்த அனம - அனம் - அன்னம். சுததினும் - சுற்றினும், எதுகை நோக்கியதே அளிகள் - வண்டுகள்.

உரை - இருந்தலர்களை - இருநது+அலாகளை. அலர் - மலா. கா - சோலை.

## Natiyaik kaṇṭa Cōmukaṉ

*muttunava ratṉamaṇi yeṟṟutirai vīcamutir*
*muccuṭa reṉatti kaḻavē*
*vettipukaḻ vālvaḷai yolikkaviru pāliṉu*
*mikuntavaṉa mēvi vaḷarac*
*cuttiṉu mikuntukamaḻ ceṇpaka malarntaceḻu*
*cōlaika ṭikaḻnta maticūḻ*
*pattivaḷa rāmpalpala kōṭika ṭaḻaittaḷikaḷ*
*paṇpayiltal kaṇṭu rukiṉāṉ.*

## Cōmukan̲ Sees the River

As the waves threw up pearls
And nine kinds of gems,
It appeared like the triple fire;[1]
The white conches sounded victory;
Numerous swans bordered the river,
While the moon shone upon the gardens
Full of scented champak trees;
The ponds there were filled
With lilies in blossom;
Crores of bees buzzed there.
The sight moved Cōmukan̲ deeply.

**(தேவர்களைக் கண்டு சோமுகன் வெட்கமடைதல்)**

**297. கண்டுகளி கொண்டுமிக வின்பமொடு சென்றுகமழ்**
**கின்றநதி கண்ட றைகுவான்**
**சென்றுதிகழ் சோலையில் சிறந்தொளிர நின்றவிடம்**
**சென்றதிசை யின்ற றிகிலோ**
**மன்றுமல ரோனருள் புரிந்தவர மிவ்வுலகினி**
**யாவரு மெதிர்க்க வெளிதா**
**மென்றுமொழி கின்றமரர் நின்றுநகை கொண்டுமகிழ்**
**கின்றதிறல் கண்டு ருகினான்.**

எ-து. அந்த இன்பம் நிறைந்த சோலையிலிருந்த சாலைகளையும், தடாக பந்திகளையும் சோமுகனானவன் கண்டு களி கூர்ந்த இன்பத்துடனே சென்று, திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற வராகநதியைக் கண்டவனாய்க் கூறுகின்றான். இந்த வராகமானது ஓடி வந்து பிரகாசிக்காநின்ற இந்தச் சோலையிலே பிரவேசித்தது இன்னவிட மின்னதிக்கென்று தெரிகின்றிலோம். இதென்ன அற்புதம்! அக்காலத்திலே பிரம்மாவைக் குறித்து யாகம் செய்த அரிய தவங்களெல்லாம் எளிதாய்விட்ட தாகிலும், தமக்கென்றும் வணக்க மொழிகளைக் கூறி வணங்காநின்ற தேவாதிகளெல்லாம், சிங்கம்போல் இறுமாந்து, நகை புரிந்தெள்ளுகின்ற புன்மையைக் கண்டு, மிகவும் உருகி லச்சையினையடைந்தான் சோமுக னென்றவாறு. (10)

அறைகுவான் - கூறுவான் மலரோன் - பிரமன். இவ்வுலகினியாவரும் - இவ்வுலகில் யாவரும். எளிது - சுலபமானது

**உரை** - லச்சை - வெட்கம், அவமானம்.

---

1. The sun, the moon and fire

## Tēvarkaḷaik kaṇṭu Cōmukaṉ veṭkamaṭaital

*kaṇṭukaḷi koṇṭumika viṇpamoṭu ceṉṟukamaḻ*
*kiṉṟanati kaṇṭa ṟaikuvāṉ*
*ceṉṟutikaḷ cōlaiyil ciṟantoḷira niṉṟaviṭam*
*ceṉṟaticai yiṉṟa ṟikilō*
*maṉṟumala rōṉaruḷ purintavara mivvulakiṉi*
*yāvaru metirkka veḷitā*
*meṉṟumoḻi kiṉṟamarar niṉṟunakai koṇṭumakiḻ*
*kiṉṟatiṟal kaṇṭu ṟukiṉāṉ.*

## Seeing the Gods, Cōmukaṉ is Ashamed

Seeing all this and feeling happy
He addressed the scented river.
'I do not know which direction
He has taken in this lovely wood.
As all the boons gained from Piramaṉ
Have ceased, the gods have become
Quite daring and laugh at me
in derision'. Hence he grew ashamed.

(சோமுகன் வராகமூர்த்தியோடு போர்)

298. அண்டர்முனி வோர்கடிகழ் கின்றபுக ழெண்டிசை
அகன்றநதி யாடி யரசன்
கொண்டலெனச் சீறியெழில் கோலவரை யேறிதிகழ்
கின்றவடி கண்டு குகைமேற்
கண்டுவெதிர் சென்றுதுயில் கொண்டவர் யென்றுமனம்
விண்டுமகிழ் கொண்டு கடுகித்
தண்டமழு சூலம்விட கண்டபர மன்னரச
னென்றுருவு கொண்ட னனரோ.

எ-து அத்தன்மையனவாகிய வளங்களைக்கண்டு உவப்புற்ற ராசகண்டீரனானவன் தேவாகளும் மகாமுனிவர்களும் சற்றும் அச்சமில்லாதவர்களாய், அந்த வராகநதியிலே மிகுந்த விலாசம பொருந்திய எட்டுத்திக்கினும் சூழ்ந்திருக்கக் கண்டபோது, அவனுடைய மனமானது கலங்கியது பின்னும் தயிரியம விடாதவனாய் அந்த அகன்ற நதிப்பிரவாகத்திலே ஆடி களை தெளிந்த சோமுகராசனானவன், மேகத்தைப் போல கர்ச்சித்து அழகிய சொர்ண மயமாய் விளங்குகின்ற கோலாசலததின்மேல் ஏறி, ஒரு குகையைக் கண்டு பார்க்கும்போது,

அந்த வராகமூர்த்தியினுடைய திவ்விய திருவடிகளானவை அந்தப் பாறையில் பதிந்திருப்பது கண்டு, இதென்ன ஆச்சரியமென்று மனது கலங்கி ஒரு மகமேருவைப் போலெதிர் நோக்கிப் பார்க்கும் போது, அனந்தவிமான சேகரராய் யோகநித்திரை செய்கின்ற வராகமூர்த்தியைக் கண்டு, ஸ்ரீமன் நாராயணரே இப்படி வராக அவதாரமெடுத்து வந்தாரென்று மனங்குழைந்து ஆனந்தப்பரவசத்தை அடைந்து, இப்படி ஆதி பரமபுருடோத்தமனிடத்திலே எதிர்த்து யுத்தம் பண்ணபட்டயாம், பின்னிடுகிறது பழிப்பென்றெண்ணித் தனது அஸ்தத்திலிருக்கின்ற திரிசூலம், கண்டகோடரி, வாளாயுதம் முதலாகியவற்றைப் பிரயோகம்பண்ணி ஆர்ப்பரித்தான். அப்பொழுதந்த வராக மூர்த்தியாகிய பரம்பொருளானவர் அரசனாக வுருவெடுத்துப் பிரவேசித்தார் என்றவாறு. (11)

முனிவோர்கடிகழ் - முனிவோர்கள் + திகழ். கொண்டல் - மேகம். அடி - காலடி, அடிச்சுவடு. கணடுவெதிர் - கண்டு+எதிர். மனம்விண்டு - மனம்தெளிந்து.

**உரை** - விலாசம் - அழகு, விநோதம்.

**வராகநதி உற்பத்தி அத்தியாயம் முற்றிற்று.**

## Cōmukaṉ varākamūrttiyōṭu pōr

*aṇtarmuṉi vōrkaṭikaḷ kiṉṟapuka ḻenticai*
*akaṉṟanati yāṭi yaracaṉ*
*koṇṭaleṉac ciṟiyeḻil kōlavarai yēṟitikaḷ*
*kiṉṟavaṭi kaṇṭu kukaimēṟ*
*kaṇṭuvetir ceṉṟutuyil koṇṭavar yeṉṟumaṉam*
*viṇṭumakiḻ koṇṭu kaṭukit*
*taṇṭamaḻu cūlamviṭa kaṇṭapara maṉṉaraca*
*ṉeṉṟuruvu koṇṭa ṉaṉarō.*

## Cōmukaṉ Battles with Varāka

Bathing in the vast river which is famous
As the immortals sojourn there,
The king rose in anger like a cloud,
Went up the Kōla Hill and noticed
The impress of feet on a rock.
Watching out he realised that here
The Lord was resting, and was happy.
Speedily he aimed the mace, the axe
And the trident. Presently
The Supreme took the form of a king.

# 16. பன்னிரண்டாவது
# சோமுகன் சரணாகதியடைந்த அத்தியாயம்

மணிமுடி, இரத்தினக் குழைகள், புயகீர்த்தி, வீரப்பட்டம், கச்சை, வீரகண்டாமணி ஆகியவை விளங்க, தேவர்கள் பூமாரி பொழிய அடியவர் துதிக்க, எலுமிச்சமரத்தை வாளாக ஏந்தி அருள்வடிவாகிய சுந்தர அரசன் என்னும் பெயரோடு சோமுகன்முன் தோன்றினார் அரங்க நாயகர். அவர் மீது மீண்டும் கோடி கோடியாய்ப் பெருகும் கணைகளைத் தொடுத்தான் சோமுகன். அவற்றையெல்லாம் கண்டதுண்டமாக்கி வீழ்த்தினார் அரசனாக விளங்கிய அரங்கநாயகர். தான் தவம் செய்து வரத்தினாலே பெற்ற ஆயுதங்களை எல்லாம் இவ்வாறே செலுத்தினான். அவற்றையும் அழித்த சுந்தர அரசன் அவனது காண்டீபத்தையும் முறித்தார். அதன்பின்பு தனது வாளினாலே போர்புரிந்து அதனையும் இழந்தான். இறுதியாக அவனது மார்பிலே வாளினால் குத்தி வீழ்த்தினார் சுந்தர அரசன்.

மேருமலையானது வேருடன் பெயர்ந்து விழுந்ததுபோல உருண்டுவிழுந்த சோமுகனை எமதூதர்கள் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் தங்கள் பாசங்களாகிய கயிற்றினால் கட்டி அவனை இழுக்கத் தொடங்கினார்கள். உடனே ஊழ்வினையானது நீங்கப்பெற்ற சோமுகன் நல்லறிவு பெற்று, அரங்கநாயகரை நோக்கி வேதத்தலைவனாகிய உம்மை அல்லாது வேறு பரம்பொருள் கிடையாது; சரணாகதியடைந்தவர்களின் பிழைகளைப் பொறுத்துக் காத்தருளுபவர் உம்மையன்றி எவரும் இலர்; உம்முடனே எதிர்த்துப் போர் செய்த எனது குற்றம் நீங்க உம்மைச் சரண் அடைந்தேன்; அப்போதே நான் புனிதனும் ஆனேன்; இனி இந்த எமதூதர்கள் தீண்டலாகுமோ? ஒருவன் தன் மரணகாலத்தில் உம்முடைய ஆயிரந்திருநாமங்களில் ஒன்றினை நினைவானானால் அவனது தீவினை ஒழியும் என்பது உறுதி. அத்தன்மை பெற்ற நித்திய சூரியர்கள் பலர் அல்லவா? யான் உம்மை இடைவிடாது தரிசனம் செய்திருக்கிறேன். எனக்கு உமது பரமபதம் கிடைப்பது அருமையோ என்று கூறி வணங்கினான்.

சோமுகன் மீது இரக்கங்கொண்ட அரங்கநாயகர் அன்போடு புன்முறுவல் பூத்தருளினார் கண்ட எமதூதர்கள் அவ்விடம் விட்டு நீங்கினார்கள். சோமுகனைப் பார்த்து அரங்கநாயகர் கூறுகிறார். அன்பனே உறுதியாகிய உன்னுடைய பக்தியினை யாரிடமும் கண்டதில்லை. நீயும் உன் சகோதரனாகிய சம்பராசுரனும் மூன்றாம் பிறப்பில் பிரதி, விப்பிரதி என்னும் பெயர்களோடு இந்நிலவுலகத்தில் நீதிதவறாமல் செங்கோல் செலுத்திவந்தீர்கள் என்னிடம் நீங்கா பக்தியுடையவர்களாகவும் விளங்கினீர்கள். அப்போது மார்க்கண்டர் என்னும் வலியமாதவர் ஒருவர் உங்களிடம் வந்தார். எம்மிடம் இருந்த மிகுந்த பக்தியினாலே அவரை வரவேற்று உபசரிக்காமல் இருந்துவிட்டீர்கள். அதனால் கோபித்த முனிவர் உங்களுடைய நற்குண நற்செய்கைகளும், தத்துவஞானமும் உங்களைவிட்டு நீங்குமாறு சபித்தார். மேலும் நீங்கள் அசுரப்பிறவி எடுக்குமாறும் சபித்தார்.

அதனால் காசிப முனிவருடைய மக்களாய்ப் பிறந்து குலீசன், சம்பரன் என்னும் பெயர்களோடு அசுரர்கூட்டங்களைப் பெருக்கிவந்தீர்கள். இந்திரனைச் செயிக்கத்திட்டமிட்டுச் சம்பரனைப் படைகளோடு அனுப்பினாய். அவன் இந்திரனிடம் தோல்வியுற்று மடிந்ததையறிந்த குலீசனாகிய நீ வெகுண்டு, பிரமதேவனைக் குறித்துக் கடுந்தவம் செய்து மகததேச மன்னனாகிய நீலன் என்பவனுக்கு மகனாய்ப் பிறந்தாய். சோமுகன் என்று பெயர்சூட்டப்பெற்ற நீ மகதநாட்டு மன்னனாகி, தேவர்களுக்கு அவிர்ப்பாகம் கிடைக்காமல் செய்ய வேள்விகளை நிறுத்தினாய். முனிவர்களைத் துன்பப்படுத்தினாய். அதனால் நாம் எக்கிய வராகமாகத் தோன்றி உமது வனத்தை அழித்து உம்மையும் கண்டித்தோம். இனி நீ விரும்பும் வரத்தைக் கேள் என்று கூறியருளினார். அரங்கநாயகரை வணங்கிய சோமுகன், ஐயனே உமக்கு அபயமாகிய நாங்கள் இருவரும் ஊழிக்காலமெல்லாம் தங்கள் திருவடி நிழலிலே வாழும் நித்திய வரங்களை அருட்புரிய வேண்டும் என்று வேண்டினான். அரங்கநாயகர் கூறுகின்றார். இந்திரனால் கொல்லப்பட்ட சம்பரன் அன்னவடிவமாய் வந்து இலக்குமியார் தீர்த்தத்தில் நம்மைக் குறித்துத்தவம் செய்கிறான். அவனை அழைக்கிறோம் என்று கூறி அழைத்து இருவருக்கும் அருள்புரிந்தார். இருவரும் நித்திய சூரியர்களானார்கள். அரங்கநாயகர் கோலவரையில் அனந்த விமானத்தமர்ந்தார்.

**(அரங்கநாயரின் தோற்றம்)**

299. **அணிமணிக் கிரண மகுடகுண் டலமும்**
**அழகெ றிப்பபுய கீர்த்தியும்**
**மணியணித் தரள வர்க்க மோடுநுதல்**
**வீரப் பட்டமுட னேபகர்**
**மணியிடைக் குரிய கச்சை மீதுசுரி**
**கைக்கு முத்தணி வயங்கவுந்**
**தணிகழல் கணிகொள் கழலணிக் குவமை**
**சாற்று மாறெவனோ வொப்பினை.**

எ-து. அழகிய மணிகளானவை கிரண சமூகங்களை விரிக்காநின்ற திருமகுடமானது சிரத்தினிற் சிறந்து பிரகாசிக்கவும், இரண்டு திருச்செவிகளிலே இரத்தினக் குழைகளானவை விளங்கிப் பொலியவும், புயகீர்த்தியானது முத்தினத்தாற் பதித்து விளங்கிப் பிரகாசிக்கவும், நெற்றியிலே வீரப்பட்டமானது துலங்கவும், அழகிய இடையில் கட்டிய கச்சையின் மேல் விளங்கிய மந்திர வாளினுக்குரிய முத்தணிகளானவை ஒளிகளைப் பிரகாசிக்கவும், வலியினையுடைய வீரகண்டாமணியணிந்த பாத பங்கயத்துக் கொப்பு யாவராலும் சொல்லக்கூடா தென்றவாறு. (1)

கிரணம் - ஒளி, கதிர். தரளவர்க்கம - தரளம் - முத்து. வர்க்கம் - வகை. நுதல் - நெற்றி. வீரப்பட்டம் - வெற்றியைக் குறித்துக் கட்டும் நெற்றிப்பட்டம். கச்சை - இடைக்கட்டு. சுரிகை - கவசம். கழல் - கால், ஆடவரின் காலணி; வீரக்கழல், கொடைக்கழல் என்று காரணங்களால் அணியப்படும்.

உரை - கிரணசமூகம் - ஒளிக்கதிர் கூட்டம்.

## Araṅkanāyariṉ tōṟṟam

*aṇimaṇik kiraṇa makuṭakuṇ ṭalamum*
*aḻake ṟippapuya kīrttiyum*
*maṇiyaṇit taraḷa varkka mōṭunutal*
*vīrap paṭṭamuṭa ṉēpakar*
*maṇiyiṭaik kuriya kaccai mītucuri*
*kaikku muttaṇi vayaṅkavun*
*taṇikaḻal kaṇikoḷ kaḻalaṇik kuvamai*
*cāṟṟu māṟevaṉō voppiṉai.*

## XVI. Cōmukaṉ Surrenders

### Araṅkaṉ's Image

Gems flashed rays from the crown;
The ear-ornaments were very beautiful;
The shoulder bands glowed with gems
And pearls; on the forehead
The ornament shone; encircling the waist
The armour poured light from gems;
Incomparable indeed was
The victory anklet on his feet.

(சுந்தர அரச வடிவம்)

300. நக்க னோடுமயன் வாச வன்அமரர்
நறுமலர்ப் பரவிச் சொரியவுந்
தக்க நல்லறமும் வேள்வி மாமறை
தவம்புகழ் தலையெ டுக்கவு

**மிக்க ஞானமுல கந்த [2]ழைக்கவ்ளர்**
**சம்பி ரத்தனி விருக்கமாந்**
**திக்க னைத்துமொளி வீசும் வாளொடுகை**
**சென்ற னன்கரிய செம்மலே.**

எ-து. சிவன், பிதாமகன், இந்திரன் முதலாகிய பேர்கள் கூடி மலர்மாரி சொரியவும், தகுதிவாய்ந்த தருமங்களும் வேள்விகளும் வேதங்களும் புகழ்களும் ஓங்கவும், மிகுதியாகிய ஞானமானது உலகத்திலே தழைக்கவும், அடியார்கள் துதிக்கவும் திக்குத்திகாந்தங்களெல்லாம் உயர்ந்து பரந்திராநின்ற எலுமிச்ச விருட்சமாய் அஞ்ஞானத்தாலே வந்த அரசனை அவனது இழிவு தீரத்தக்கதாய்க் கருணைபுரிந்து வேருடனே பிடுங்கி வாளாயுதமாகத் தமது கராம்புய மலரில் ஏந்தி அருள் வடிவாகிய [3]சுந்தர அரசராய் வீரகண்டாமணி பிரகாசிக்கவும், உத்தசன்னுத்தனாய் எழுந்தருளினார் பரம மூர்த்தியாகிய அரங்கநாயகர் என்றவாறு. (2)

நக்கன் - சிவபெருமான். அயன் - பிரமன். வாசவன் - இந்திரன் சம்பிரம் - எலுமிச்சை. விருக்கம் - விருட்சம், மரம்.

**உரை** - உத்தசன்னுத்தன் - யுத்தசன்னத்தன் - போருக்கு ஆயத்தமானவன்

**பா.வே** - 1 துக்க 2. தழைக்க தனில் 3. சுந்தர வரச சூடாமணியாய்க் குலசூடாமணியாய் வந்தருளினார் வராக மூர்த்தியாகிய வரங்க நாயக ரென்றவாறு.

## Cuntara araca vaṭivam

*nakka ṉōṭumayaṉ vāca vaṉamarar*
*naṟumalarp paravic coriyavun*
*takka nallaṟamum vēḷvi māmaṟai*
*tavampukaḻ talaiye ṭukkavu*
*mikka ñāṉamula kanta ḻaikkavaḷar*
*campi rattaṉi virukkamāṉ*
*tikka ṉaittumoḷi vīcum vāḷoṭukai*
*ceṉṟa ṉaṉkariya cemmalē.*

## The Handsome King

As Civaṉ, Piramaṉ, Intiraṉ and the gods
Showered flowers, Dharma,
Sacrifices and Vēdic austerities
Waxed; fame rose upwards;
Knowledge grew apace in the world;

The dark-hued Lord went forward
Holding the uprooted lemon tree
And a sword that illumined the spaces.

(சோமுகன் போர்)

301. சென்ற [1]தேவனெதிர் நின்ற சோமுகன்
றெறித்த னன்பல கடுங்கணை
ஒன்று போலளவு மின்றி வந்தளவை
யொன்று மில்லென நொறுக்கினான்
வென்றி கொண்டவனு நின்ற காலளவில்
வேக வெஞ்சர முடுக்கினான்
நன்று நன்றென நகைத்து நாயகனும்
நாம [2]நற்கணை நறுக்கினான்.

எ-து. இப்படிச் சுந்தரவரசனாய் எதிர்த்துவந்த நாராயணமூர்த்தியின் பேரில் சோமுகனானவன் வில்லினை வளைத்து, நாண் ஏறிட்டுக் குணத்தொனி செய்து, கரோ வேக, சரோவேகமாய் ஒருதொடைக்காயிரம், பதினாயிரங் கோடியாய்ப் பாணங்களைத் தொடுத்தான். அது ஒன்று அனந்தமாய் விரிந்து அளவில்லாமல் வந்து சூழ்ந்ததை யெல்லாம் தமது திருக்கரத்தில் தாங்கி, வாளினாலே கண்ட துண்டமாய்த் துண்டித்து வீழ்த்தினார். அதைக் கண்ட செயகாண்டீப பதியாகிய சோமுகனானவன், அளவிறந்தனவாகிய கணைகளைச் சொரிந்தான். அவற்றையும் வாளினாலே வெட்டி உதிர்த்து நகைத்தருளினார் சுந்தர அரசன் என்றவாறு. (3)

தெறிந்தனன் - தொடுத்தான், வீசினான் நாயகன் - சுந்தர அரசராகிய அரங்கநாயகர் அளவில் - அளவில்லாத. வெஞ்சரம் - கொடிய அம்புகள்.

**உரை** - தொடை - அம்பு.

**பா.வே.** - 1. தேவன் மிசை 2. மில்லென

## Cōmukaṉ pōr

*ceṉṟa tēvaṉetir niṉṟa cōmukaṉ*
*ṟeṟitta ṉaṉpala kaṭuṅkaṇai*
*oṉṟu pōlaḷavu miṉṟi vantaḷavai*
*yoṉṟu milleṉa noṟukkiṉāṉ*

*venri konṭavaṉu niṉra kālaḷavil*
*vēka veñcara muṭukkiṉāṉ*
*naṉru naṉreṉa nakaittu nāyakaṉum*
*nāma narkaṇai narukkiṉāṉ.*

## Cōmukaṉ at War

Cōmukaṉ who faced the Supreme
Aimed several terrible missiles;
As their numbers increased manifold
While reaching the target, the Lord
Destroyed them. As he stood victorious
Cōmukaṉ sent innumerable arrows.
The Lord laughed: 'This is good!'
He then cut them all down.

**(சுந்தரவரசர் கணைகளை அழித்தல்)**

302. **தெய்வ வெங்கணையோ டுற்ற சத்திமுத**
**றேக மூழ்கதிரி சூலமும்**
**வெய்ய வன்றர புகுந்த வையனவை**
**வேக சாரிகையில் வீட்டிடக்**
**கையி னுற்றபடை யாவு மோர்கடிகை**
**யீந்து தோள்வலிமை காட்டினான்**
**துய்ய வன்னவை துணித்து வாள்கொடு**
**திரிந்து [1]வில்லினைத் துணிக்கவே.**

எ-து. இவ்விதமாய்த்தானே எய்த கணைகளையெல்லாம் துணித்த அரசனாகிய நாராயண மூர்த்தியானவரின் சரீரத்தில் அழுந்திடத்தக்கதாய் அனேக அக்கினி கணைகளும், மீளாவேலும், திரிசூலங்களும் விட்டார்ப்பரித்தான். அது வருகிற கோரத்தைப் பார்த்த அரசனானவர், முன்னடிவைத்துப் பின்னடி வாங்கிச் சாரிகை திரிந்து, வாளினால் எய்தியதையெல்லாம் கண்டதுண்டம் செய்தார். அதன் பின்பு தான் தவம் செய்து வரபாலனமாய்ப் பெற்ற கணைகளையெல்லாம் சொரிந்தான். அவற்றையெல்லாம் [2]சக்கரமாய்ச் சுழன்று, தூளிப்படல மாக்கியபின்பு, அவன் கையிற் பிடித்த காண்டீபத்தை எதிர்த்துப் பாய்ந்து, வாளினாலே கண்டதுண்டப் படுத்தித் தள்ளினார் அரங்கநாயகராகிய சுந்தரவரச னென்றவாறு. (4)

சத்திமுதறேகமூழ்க - சத்திமுதல்தேகம் மூழ்க. வெய்யவன்றர புகுந்தவையனவை வெய்யவன்தரபுகுந்த; ஐயன் அவை சாரிகை - முன், பின் அடிவைத்தல் வீட்டிட - வீழ்த்திட நொறுக்க கடிகை - நாழிகை. ஈந்து - சொரிந்து

பா.வே. - 1 சாபம். 2. சக்கிராகாரமாய்ச்.

## Cuntaravaracar kaṉaikaḷai aḻittal

*teyva veṅkaṉaiyō ṯuṟṟa cattimuta*
*ṟēka mūḻkatiri cūlamum*
*veyya vaṉṟara pukunta vaiyaṉavai*
*vēka cārikaiyil viṭṭiṭak*
*kaiyi ṉuṟṟapaṭai yāvu mōrkaṭikai*
*yīntu tōḷvalimai kāṭṭiṉāṉ*
*tuyya vaṇṇavai tuṇittu vāḷkoṭu*
*tirintu villiṉait tuṇikkavē.*

## The Handsome King Destroys the Missiles

As the furious Cōmukaṉ
Aimed the divine missiles
To cover the enemy with tridents,
The Lord moving in circles
Nullified them. Cōmukaṉ revealed
The immense strength of his shoulders
By aiming in a trice
All the weapons in his hand.
The Pure One cut them up too
With his sword and cut the bow as well.

(சோமுகன் தரையில் விழுதல்)

303. முறிந்த விற்கையி னெறிந்து நாந்தக
முகந்து சாரிகை முடுக்கினா
னறிந்த வையனவ னோடு சாரிகை
திரிந்து வாண்முன மறுத்தவன்

பொறிந்த மார்பினில் புடைக்க வாள்கொடு
திகைத்து மண்மிசை புரண்டிடத்
தறிந்த மேருவின் மறிந்த சோமுகனைச்
சார்ந்தனர் மறலி தூதரே.

எ-து. அத்தன்மையாய் [1]இரண்டு துண்டாய் முறிந்த வில்லினை யெறிந்துவிட்டுச் சோமுகனானவன் வாளை உருவிக்கொண்டு இடசாரி, வலசாரியா யலகுகொண்டு பாய்ந்து அமர் செய்தான். அப்படி இருவரும் ஒருவருக்கொருவர் இளைக்காதவர்களாய், அண்டபித்திகை, பொன்னுலகு, இருளுலகங்களும், சக்கரவாளகிரி, சத்தசாகரம், தீவாந்தரங்கள் நவகண்டங்களெல்லாம் இடசாரி, வலசாரியாய்த் திரிந்து தோலாம லுத்தம் பண்ணுங்காலையில், சோமுகனுடைய வாளை வெட்டிக் கீழே தள்ளினார் அரங்கநாயகர். அதன்பின்பந்தப் புய வலியையுடைய சோமுகன் மார்பிலே உருவத்தக்கதாக, வாளினாலே குத்தினார். அந்தக் குத்தானது மார்பைப் [2]பிளந்து முதுகின் வழியிலே உருவிற்று. அபபோது இரத்த வெள்ளங்களானவை பெருகத் தக்கதாய், வடமேரு கிரியானது வேருடனே பறிந்து வீழ்ந்ததுபோ லுருண்டு வீழ்ந்தான். அப்போது எமதூதர்கள் வந்து சூழ்ந்தார்க ளென்றவாறு (5)

நாந்தகம் - வாள் ; கணபிரான் வாளின் பெயர் முகந்து - எடுதது. புடைக்க - அடிக்க தறிதல் - வெட்டுப்படல் மேருவின் - இன் - உவமை உருபு மறிந்த - வீழந்த மறலி - எமன்

**உரை** -அண்டப்பித்திகை - ஆகாயமாகிய சுவா. தோலாமலுத்தம்பண்ணுங்கால் - தோல்வி அடையாமல் போர் செய்யும் போது

**பா.வே.** - 1 வெட்டப்பட்டு முறிந்த 2 தடாரித்து.

## Cōmukaṉ taraiyil viḻutal

*muṟinta viṟkaiyı neṟintu nāntaka*
*mukantu cārikai muṭukkiṉā*
*ṉaṟinta vaiyaṉava ṉōṭu cārikai*
*tirintu vāṉmuṉa maṟuttavaṉ*
*poṟinta mārpiṉil puṭaikka vāḷkoṭu*
*tikaittu maṇmicai puraṇṭiṭat*
*taṟinta mēruviṉ maṟinta cōmukaṉaic*
*cārntaṉar maṟali tūtarē.*

## Cōmukaṉ Falls Down

Throwing away the broken bow,
Cōmukaṉ took the sword
And began to move in circles.

The Lord saw this and moved with ease
Cutting up Cōmukan̲'s sword,
And hit out at his chest.
As the sword pierced through
Cōmukan̲ fell on the earth. Hearing this
Yaman̲'s ambassadors drew close to him.

(எமதூதர்)

304. பாசம் விட்டுட லிறுக்கி முன்னவர்
வலிக்க ஊழ்வினைப் பறிந்துநன்
னேச முற்றவச மற்று நல்லறிவு
நேர்ந்த வவ்வயி னிகழ்த்துவா
னீசன் மற்றயனும் வாச வன்நம
தரியன் மறைக்கிறைவ னீயலாற்
[1]பேச வுற்றபொருள் கேசவா உனது
பெருமை யாவர்கள் புகன்றுளார்.

எ-து. இவ்விதமாய் இறக்காநின்ற இராச சேகரனாகிய சோமுகனுயிரைக் குறித்த எமதூதர்களானவர்கள், தமது பாசங்களாகிய கயிற்றை விட்டுப் பூதனாசரீரத்தினுயிரை விட்டு அந்த உயிரினையும் உடலினையும் இறுக்கக்கட்டி இழுக்கும் போது ஊழ்வினையானது போய், நல்லறிவானது வந்து கலக்க, அதனாலே [2]நின்மல ஞானத்தினைப் பெற்று, மரணமூர்ச்சை தெளிந்து கூறுகின்றான்: சிவனும் பிரமனும் இந்திரனும் உபாசிக்காநின்ற வேதத்தலைவன் நீயல்லாமல் வேறொருவரைப் பரமமென்று கூறாதாகையால், கேசவா! நீயல்லாமல் சரணாகதியடைந்தவர்கள் பிழையைப் பொறுத்துப் பாதுகாக்கா நின்றவர்கள் வேறில்லையென்றான் சோமுகனென்றவாறு. (6)

பாசம் - பாசக்கயிறு. நனனேசம் - நல் + நேசம் - நன்மையாகிய அறிவு. அவசம் - மயக்கம். ஈசன, அயன், வாசவன - சிவபெருமான், பிரமன், அரங்கநாயகன்

**உரை** - பூதனாசரீரம் - தூலசரீரம், புறவுடல். நின்மலம் - அழுக்கின்மை, தூய்மை.

**பா.வே.** - 1 பேச வுற்றபொருள் கேசவா இனியார் பேணு மென்பிழை பொறுத்திடாய்.
2 நின்மல ஞான சினமயத்தினைப்

## Ema tūtar

*pācam viṭṭuṭa lirukki muṉṉavar*
*valikka ūlviṉaip pariṉtunaṉ*
*ṉēca muṟṟavaca maṟṟu nallaṟivu*
*nērnta vavvayi ṉikaḻttuvā*
*ṉīcaṉ maṟṟayaṉum vāca vaṉṉama*
*tariyaṉ maṟaikkiṟaiva ṉīyalār*
*pēca vuṟṟaporuḷ kēcavā uṉatu*
*perumai yāvarkaḷ pukaṉṟuḷār.*

## Yamaṉ's Ambassadors

As they bound the body tight
With the noose, and dragged him away,
His evil past was ended,
Mental confusion was chased away,
And right knowledge appeared.
This made him exclaim;
'Who else but you are the Supreme
Who is adored by Civaṉ, Piramaṉ
And Intiraṉ? O Kēcavaṉ!
Thus has your greatness been proclaimed.

(சோமுகன் சுந்தரவரசரை வணங்குதல்)

305. ஆதி நாயக னீயென் றுணர்ந்தில
னகங்க ரித்துட னுடன்றுபோர்
பேதை புத்தியி னிறந்த விப்பிழை
பொறுத்தெனக் கருள்செய் புண்ணியா
தீத கற்றுமுனை சரண மாகுமெனை
தீண்ட லாவதெம தூதரோ
வேத வித்தகரு ஞான போதகரு
மேவு முத்தியருள் வீரனே.

எ-து. மீட்டும் கூறுகின்றான்: ஆதி கர்த்தா நீ என்றறியாத பேதையானவன் செய்த அபராதமாகிய, அகங்காரம் கொண்டு உன்னுடனே எதிர்த்துச் சமரினைச் செய்தேன். இப்படியான் மயங்கிச் செய்த குற்றம் நீங்க, உனது சரணாகதியைத் தஞ்சமென்றடைந்தேன். அப்பொழுதே புனித பவித்திரமாகிய, நித்தியானந்த, அபமங்களத்தைப் பெற்றேன். என்னைத் தீண்ட ஒருவர் உண்டோ? ஆகையாலிந்த எமதூதர்களானவர்கள் தீண்டலாகுமோ? வேத பாராயணப் பண்டிதர்களுக்கும், ஞானபோதகாசாரியர்களுக்கும் முத்தியாகிய பரம பதத்தில் நித்திய சூரியர்களாய்ச் சேவிக்க அருள்கூர்ந்த கமலக்கண்ணனே! என்னைக் கைநழுவ விடுதல் உமக்கழகல்ல என்றவாறு. (7)

நாயகனீயென்று - நாயகன் நீ என்று அகங்கரித்து - கர்வம் கொண்டு உடன்று - கோபித்து இறந்த இப்பிழை - நடந்துவிட்ட இத்தவறு

## Cōmukaṉ cuntaravaracarai vaṇaṅkutal

*āti nāyaka nīyeṉ ṟuṇarntila*
*ṉakaṅka rittuṭa ṉuṭaṉṟupōr*
*pētai puttiyi ṉiṟanta vippiḻai*
*poṟuteṉak karuḷcey puṇṇiyā*
*tīta kaṟṟumuṉai caraṇa mākumeṉai*
*tīṇṭa lāvatema tūtarō*
*vēta vittakaru ñāṉa pōtakaru*
*mēvu muttiyaruḷ vīraṉē.*

## Cōmukaṉ Salute the Handsome King

'I had not realised that you are
The Primal Lord; in my pride
I opposed you. Forgive this wrong
That was due to a deluded mind.
Grant me grace, O Lord!
Can the serviteurs of Yamaṉ
Touch me who has surrendered
To you who alone can chase away evil?
O Lord surrounded by Vēdic scholars
And great men of wisdom!

## (சோமுகனின் வேண்டுகோள்)

306. ஈறி னின்னையொரு கானி னைக்கஅவ
ரிருவி னைக்கடிய வீறிநற்
பேறு பெற்றஅக வின்ப நின்னுருவைப்
பேணு மெற்கதென புன்மையோ
வீறு பெற்றபுய நாலு முற்றவொரு
வேத வித்தக விளங்குபொன்
னேறு பற்றுமணி [1]நூறு சொற்றுளப
மீடு பட்டுயரு மார்பனே.

எ-து. ஒருவன் சரமதசையாகிய மரணத்தில் ஒருதரம் நின்னாயிர நாமத்திலொன்றை நினைவானாகில் நல்வினை தீவினை யொழிந்து, சமரச, சாத்வீக, ஞான, பரம்பாகவதனாவன். அத்தன்மையாகிய நித்திய சூரியர்களோ எண்ணிறந்தவர்கள். அப்படியிருக்க யானுன்னை இடைவிடாது தெரிசனம் பண்ணியிருக்க, எனக்கு உனது பரம பதம் பெறுதலருமையோ? விர்த்தியாகிய சதுர்புசங்களையுடைய வேதவித்தகனே! பொன் மயமாகிய கவுத்துவாபரணமும், துளப மாலையுமுடைய ஞானாசாரியனே! [2]என்னைப்பிறவித் துன்பம் அணுகலாகுமோ என்றான் சோமுக னென்றவாறு. (8)

ஈறினின்னை - ஈறு+இல்+நின்னை; முடிவு இல்லாத உன்னை. கானினைக்க - கால் + நினைக்க, (ஒரு) முறை நினைக்க பேணுமெற்கதென - பேணும் + எற்கு + அது + என; எறகு - எனக்கு. புன்மை - துன்பம். வீறு - பெருமை. ஏறுபற்றுமணி - உயர்வு பொருந்திய கவுத்துவமாகிய அணி.

உரை - சரமதசை - முடிவுகாலம்.

பா.வே. - 1. நூறு 2 என்னைக் குறித் தஞ்சே லென்றா லெனனைப பிறவித் துன்பமணுகாதென்றான் சோமுகனாகிய மெய்ஞ்ஞான சூடாமணி யென்றவாறு.

## Cōmukaṉiṉ vēṇṭukōḷ

*īṟi ṉiṉṉaiyoru kāṉi ṉaikkaava*
*riruvi ṉaikkaṭiya vīṟinaṟ*
*pēṟu peṟṟaaka viṉpa niṉṉuruvaip*
*pēṇu meṟkateṉa puṉmaiyō*
*vīṟu peṟṟapuya nālu muṟṟavoru*
*vēta vittaka viḷaṅkupoṉ*
*ṉēṟu paṟṟumaṇi nūṟu coṟṟuḷapa*
*mīṭu paṭṭuyaru mārpaṉē.*

## Cōmukaṉ's Request

Meditating even once upon you
That art endless, one's evil past
And also that of future are ended
And one gains eternal closeness to you.
Am I to be denied that privilege?
Lord who has four noble shoulders!
One on whose chest gleams
The *Kavuttuvā* gem and *Tuḷaci* garlands!

(சுந்தரவரசன் சோமுகனை ஆதரித்தல்)

307. இன்ன வின்னதுதி செய்து சோமுக
னிரங்க வன்பொடினி வெருவனீ
யென்ன புன்னகை புரிந்த மைத்துகர
மீய வேசியெம தூதரும்
மன்னு தென்னகர மெய்தி னாரமலன்
மருவி [1]புத்திவலி வெற்றியு
நின்னி லின்னொருவர் நிகர்வ ரோவுலகி
னென்ன முன்னவ னிகழ்த்துவான்.

எ-து இந்தப் பிரகாரம் பக்தியினாலே சோமுகன் தோத்திரம் பண்ணி இரங்கியதைக் கண்ட நாராயண மூர்த்தியானவர் இரக்கமுற்றவராய்ப் [2]பயப்பட வேண்டாம் என்றவனைப் பாரத்து அன்பினாலே புன்சிரிப்பாகிய இள நகையினைப் புரிந்தருளிய காரணத்தினைக் கண்ட எமதூதாகளானவாகள் வென்றான் எனறு அவன் கட்டையவிழ்த்துவிட்டுத் தங்கள் உலகத்தின் ஓடினார்கள். அப்படியாகிய காலத்தில் அரஙக மூர்த்தியானவர் கூறுகின்றார்: அன்பனாகிய அரசனே! உனது உறுதியாகிய மெய்ப்பத்தி யாவரிடத்தினுங் கண்டதில்லை என்று பின்னும் கூறுகினறா ரெனறவாறு. (9)

சோமுகனிரங்கவன் பொடினிவெருவனீ - சோமுகன் இரங்க அனபொடு இனிவெருவல் நீ இரஙக - உருக, வருநத வெருவல் - அஞ்சாதே அமைத்து கரம ஈதல் - கையமர்த்தி கருணைபுரிதல். தெனனகரம - தெனநாடு ஆகிய எம உலகம் அமலன் - தூயவன், அரங்கன்.

பா.வே - 1 பத்தி 2 இரங்க வேண்டாம

### Cuntaravaracan̲ Cōmukan̲ai ātarittal

*in̲n̲a vin̲n̲atuti ceytu cōmuka*
*n̲iraṅka van̲poṭin̲i veṟuvan̲ī*
*yen̲n̲a pun̲n̲akai purinta maittukara*
*mīya vēciyema tūtarum*
*man̲n̲u ten̲n̲akara meyti n̲āramalan̲*
*maruvi puttivali veṟṟiyu*
*nin̲n̲i lin̲n̲oruvar nikarva rōvulaki*
*n̲en̲n̲a mun̲n̲ava n̲ikaḻttuvān̲.*

### The King grants Grace to Cōmukan̲

As Cōmukan̲ prayed in this wise,
The Lord spoke to him lovingly
And asked him not to sorrow any more.
He smiled and held up his hand
Indicating guardianship;
The ambassadors of Yaman̲ understood
And went back to their residence
In the southern direction;
The Pure One said: 'There is none
Who has such firm devotion
As yourself.

(சோமுகனின் முன்வரலாறு)

308. முப்பி றப்பினொரு கற்ப காலமதின்
மொய்த்த மெய்வலிய பிரதியும்
[1]விப்பிர தியுமர சாகி மேலவர்க
ளாகி வெய்யவனூ ருலகெலாஞ்
செப்பு நல்லறமும் வேள்வி யோம்பிமனு
திகிரி போலரசு செய்தநீ
ரெப்பு விக்கிறையு மீச னாகும்என்
னிடத்தி னன்புபுரி காலையின்.

எ–து. மீட்டும் அரங்கநாயகரருளிச் செய்கின்றார் வாராய் சோமுகனே! நீயும் உன் சகோதரனாகிய சம்பரா சுரனும், உங்கள் மூன்றாம் பிறப்பில் ஒரு கற்ப காலத்திலே புயவலி யினையுடைய பிரதி என்றும் விப்பிரதியென்றும் வலியினையுடையவர்களாய், நல்ல சுபுததிரர்களாய், சூரியன் சஞ்சரிக்காநின்ற இவ்வுலகமெல்லாம் அரசாட்சி செய்து, நல்ல சுபகர்மங்களை யெல்லாம் அனுட்டித்து விர்த்திக்கச் செய்து, பதினெண்வகையாயுள்ள வேதவேள்வியைப் பாதுகாத்து, மனு, மாந்தாதிகளைப்போல் செங்கோல் செலுத்திச் சக்கர நடாத்திய தலைவர்களாயிருந்த நீங்கள், இந்தத் திரிபுவனத்துக்கும் ஈசனாகிய என்னுடைய பத்தியை நீங்காத வைதீகத்தை அனுட்டித்து வரும்படியாகிய காலங்களில் ஒருநா ளென்றவாறு (10)

முப்பிறப்புன் – முந்தைய மூன்றாம் பிறப்பு வெயயவன் – சூரியன் திகிரி – சக்கரம், ஆணை

உரை – சுபுததிரர் – நன்மக்கள். வைதீகம் – வேதஒழுககம்

பா.வே. ~ 1 விபரதீவும வலியாகி

## Cōmukaṉiṉ muṉvaralāṟu

*muppi ṟappiṉoru kaṟpa kālamatiṉ*
*moytta meyvaliya piratiyum*
*vippira tiyumara cāki mēlavarka*
*ḷāki veyyavaṉū ṟulakelāñ*
*ceppu nallaṟamum vēḷvi yōmpimaṉu*
*tikiri pōlaracu ceytanī*
*reppu vikkiṟaiyu mīca ṉākumeṉ*
*ṉiṭatti ṉaṉpupuri kālaiyiṉ.*

## Cōmukaṉ's Past

'In a birth three times earlier
During a past *kaṟpa*,
Yourself and your brother were kings,
The strong *Pirati* and *Vippirati*;
You ruled over all this earth
Illumined by the sun; you followed Dharma
And performed sacrifices;
You ruled like King *Maṉu*;
You were totally devoted to me
Who am the Lord of all universes.

(மார்க்கண்ட முனியின் சாபம்)

309. நல்ல மாதவமு ஞானமும் பொறையெந்
நாளும் வாழுமறை வேதமும்
வல்ல மாதவர் துதிக்கு நித்தியமுள
கண்டன் வந்துமது சூழலி
னொல்லை யேகினனல் லடிதொ ழாவகை
யுணர்ந்த வன்னுறு கடுஞ்சின
மெல்லை யூழிகன லென்ன பொங்கியுமை
யீட ழிந்திட சபித்தனன்.

எ-து. நல்ல தவ நிலை யொழுக்கமும் தத்துவ ஞானநிலமையும் சாந்த தத்துவமும் வைதீக நிலமையுமுடைய வலிய மாதவர்களெல்லாம் துதிக்காநின்ற, நித்தியசீவன் முத்தித் தன்மையினையுடைய மார்க்கண்ட விருடியரானவர் உங்கள் அரசாட்சியில் எழுந்தருளி வந்தார். நீங்கள் நமது பக்தி யோகம் செய்கின்ற பிரபாவத்தினாலே அவரை யெதிர்ந்தர்க்கிய பாத்திய வாசமனீயங் கொடுத்து, அவரைத் தண்டன் சமர்ப்பியாமலிருக்கையால் அந்தச் சீறறத்தினாலே அவர் ஊழிக்காலத்து அக்கினியைப் போலச் சீறி, உங்கள் பிரதாபமும் நற்குண நற்செய்கையும் தத்துவ ஞானமும் உங்களை விட்டு நீங்கும் படியாய்ச் சபித்தார் மார்க்கண்டேயர் என்று பின்னும் கூறுகின்றா ரென்றவாறு (11)

கண்டன் - மார்க்கண்டன் என்னும் முனிவர். வந்துமது - வந்து உமது. உணர்ந்தவன்னுறுகடுஞ்சினம் - உணர்ந்தவன் உறு கடுஞ்சினம்; உறு - உற்ற, அடைந்த.

## Mārkkaṇṭa muṉiyiṉ cāpam

*nalla mātavamu ñāṉamum poṟaiyen*
*nāḷum vāḻumaṟai vētamum*
*valla mātavar tutikku nittiyamuḷa*
*kaṇṭaṉ vantumatu cūḻali*
*ṉollai yēkiṉaṉal laṭito ḻāvakai*
*yuṇarnta vaṉṉuṟu kaṭuñciṉa*
*mellai yūḻikaṉa leṉṉa poṅkiyumai*
*yīṭa ḻintiṭa capittaṉaṉ.*

## Sage Mārkkaṇṭēya's Curse

The sage Mārkkaṇṭēya of rich austerities
Who has immense wisdom and compassion,
And is revered by sages

Who have mastered the eternal Vēda,
Came once to your kingdom.
Lost in your devotions,
You did not salute him.
Incensed like the fire of deluge
He cursed you to lose your greatness.

(குலீசன், சம்பரன் - பிறவி)

310. அசுர யோனியினி லான தம்பியுடன்
அவத ரித்திடுக வென்றதான்
மிசிர மாகவிரு வோரு நீவிர்கள்
விளங்கு [1]காசிபநல் புத்திரரா
யெசுரு வேதமுத நூலி னன்னெறி
யிகழ்ந்து கக்குலீச சம்பர
வசுர ராகிமிகு வலியி னோடொருவ
ரெதிரி லாவரசை யாளுநாள்.

எ-து [2]மறுபடியும் அரங்கநாயகர் அருளிச் செய்கின்றார்: வாராய் சோமுகனே! அப்படி உஙகளைச் செபித்த மார்க்கண்டேயரானவர், உங்கள் சுபகர்ம, தான, தவ முதலானதெல்லாம அழிவான பின்பு, நீங்கள் அசுர உற்பவமாய் இரண்டு பேரும் பிறக்கக் கடவீர்களென்றும் சபித்தபடியினாலே, நீங்கள் காசிப முனிவருடைய புத்திரராய் இரண்டாம் வேதமாகிய விதியை யெல்லாம் இகழ்ந்த வைதிகராய்க் குலீசன், சம்பரனென்று கூறுகின்ற பெயர்களை உடையவர்களாய்ப பிறந்து, ஒரு குடை நிழலிலே சக்கர நடாத்திய தலைவராய், எதிரிகளில்லாமல் அண்டரண்ட பகிரண்டங்களையெல்லாம் அரசாட்சி செய்து, அசுரர்க் கூட்டஙகளைப் பெருககி வாழ்கின்ற காலையி னென்றவாறு (12)

அசுரயோனி - அசுரர் பிறவி மிசிரம் - சமம். எசுரு - யசுர்வேதம்.

பா.வே. - 1 காசிபாக்குதித்து 2 மறுபடியு மாாகண்டேயர் கூறுகின்றா ருங்கள் சுபகர்ம தான தவ முதலான தெலலா மழிவான பின்பு நீங்க ளசுர வுற்பவமா யிரண்டு பேரும் பிறககக் கடவீர்க ளென்று சபித்த படியினாலே நீங்கள் காசிப முனிவரது புத்திரரா யிரண்டாம் வேதமாகிய விதியை யெல்லா நிகழந்தவைதிகராயக் குலீசன் சம்பரனென்று கூறுகினற பெயர்களை யுடையவர்களாய்ப் பிறந்து ஒரு குடை நிழலிலே சககர நடாததிய தலைவரா யெதிரிகளில்லாம லண்ட ரண்ட பகிரண்டங்களை யெல்லா மரசாட்சி செயதசுரக கூட்டஙகளைப் பெருககி வாழக்கடவீர்க ளென்றார் மார்கண்டேய ரென்றா ரரங்கநாயக ரென்றவாறு

## Kulīcaṉ, camparaṉ - piṟavi

*acura yōṉiyiṉi lāṉa tampiyuṭaṉ*
*avata rittiṭuka veṉṟatāṉ*
*micira mākaviru vōru nīvirkaḷ*
*viḷaṅku kācipanal puttirarā*
*yecuru vētamuta nūli ṉaṉṉeṟi*
*yikaḻntu kakkulīca campara*
*vacura rākimiku valiyi ṉōṭoruva*
*retiri lāvaracai yāḷunāḷ.*

## Birth as Kulīcaṉ, Camparaṉ

"Be born in the Acura womb
Along with your brother!" was the curse.
So were you born to noble Kācipa
As sons who condemned Yajur Vēda
And other Vēdic scriptures.
As the Acuras Camparaṉ and Kulīcaṉ
You turned away from the righteous path,
And became powerful kings
With no one to equal your might.

(குலீசன் மகத தேசத்தில் பிறத்தல்)

311. இந்தி ரன்றனை செயிக்க வெண்ணிமிக
அசுர சேனையுட னேகிமுன்
தந்த [1]போரினில் சகோத ரன்உயிர்
தடிந்த வப்பெரிய கொடுமையாற்
தந்தி ரத்தினையுன் னூர்பு குத்திவிதி
தனைமு யன்றுதவ மகிமையா
னிந்த நற்புவியின் வந்து மாமகத
தேச நீலனருள் புத்திரனாய்.

எ-து. இவ்விதமாய்த் திரிலோகாதிபதிகளாய் அரசாண்ட குலீசன், சம்பரன் ஆகிய இரண்டுபேரும் மந்திராலோசனை செய்து இந்திரனைச் செயிக்க நினைத்து, சகோதரனாகிய சம்பராசுரனை நான்கு வகைச் சேனைகளுடனே அனுப்பிவித்தான் அவர்கள் பிரவேசித்து

இந்திர லோகத்தை வளைந்து யுத்தம் செய்யும் போது, சயந்த மகாராசனாகிய இந்திரபுத்திரனாலே இராட்சதக் கூட்டங்களுடைய இரத, கச, துரக, பதாதிகளெல்லாம் தூளிப்படலமாய் அழிந்து போய், இந்திரனும் சம்பராசுரனும் அனேக அண்டரண்ட பகிரண்டங்கள், சத்தசாகர தீவாந்திரங்கள் முதலாகிய லோகஙகளெல்லாம் யுத்தம் செய்து இந்திரனாலே கண்டிககப்பட்டான். அதன்பின்பு தப்பிப் பிழைத்த நான்கு வகைச் சேனைகளும் முறிந்து பட்டணம் வந்து சேர்ந்த விபரத்தைக் கேட்ட குலீசனானவன் வெகுண்டு, பிதாமகனைக் குறித்துத் தவம் செய்து அவரது வரபாலனத்தினாலே இந்த உலகத்தில் மகத தேசாதிபதி புத்திரனாய்ப் பிறந்தான். அவன் பிதாவாகிய நீலனானவன் சோடச மகாதானமும் வழங்கிக் களித்தா னென்றவாறு. (13)

தடிந்த - இறநத

உரை - தூளிபபடலம - புழுதிப்போர். சோடசமகாதானம் - பதினாறு வகை தானங்கள்.

பா.வே. - 1 போரி லவனுமபி யாருயிர்தடிந்த

## Kulīcaṉ makata tēcattil piṟattal

*inti raṉṟaṉai ceyikka veṇṇimika*
*acura cēṉaiyuṭa ṉēkimuṉ*
*tanta pōriṉil cakōta raṉuyir*
*taṭinta vapperiya koṭumaiyāṟ*
*tanti rattiṉaiyuṉ ṉūrpu kuttiviti*
*taṉaimu yaṉṟutava makimaiyā*
*ṉinta ṉaṟpuviyiṉ vantu māmakata*
*tēca nīlaṉaruḷ puttiraṉāy.*

## Kulīca is Born in Makatam

Desiring to overcome Intiraṉ, You
Went with a large Acura army
To give battle. Because of the sorrow
Of losing your brother's life in the war,
You planned the future course of action,
Performed austerities addressed to Piramaṉ,
And by the power of tapasya
Were born as the son of Nīlaṉ,
King of noble Makatam.

(சோமுகன் என்னும் பெயர் பெறுதல்)

312. சோமு கப்பெயர் தொடுத்து மாமக
மழித்து தேவரை [1]நொறுக்கியு
மாம றைத்திற மழித்த தாலுனை
யடர்த்தடித் ததுவு மன்றியு
நீமு னேயெனைத் துதித்த தாலுனையு
நெடிது [2]வந்தனம் நினக்குமே
லாம்வ ரத்தினை யளித்து மென்றவுட
னடிபணிந் தவனு மறைகுவான்.

எ-து. [3]அப்படிப் பிறந்த புத்திரனுக்குச் சோமுகனென்று நாமகரணம் செய்து, தாஷ்டீகனாய் அறுபத்துநான்கு வகையாயுள்ள கல்விகளைக் கற்பித்து, ஏக சக்கராதிபத்திய மகாராச்சியம் செய்கின்ற காலையில், தேவர்களுக்கு அவிர்ப்பாகம் இல்லாமையின் பலனடையும்படியாக யோசித்து, அவர்களுக்கு ஆதரவாகிய வேத வேள்விகளைச் செய்கின்ற மகாரிஷிகளைத் துன்பப்படுத்தியும், வேள்விகளைத் தடுத்தும் வைதீக நிலமைகள் எல்லாவற்றையும் அழிவுபடுத்தியதால் நாமெக்கிய வராக மாகத் திருவவதாரம் செய்தருளி, உனது உத்தியானவனத்தையும் அழித்து, சதுரங்க தளத்தையும் இடித்து உன்னையும் கண்டித்தோம். ஆகிலும் பூர்வ சென்மத்திலே நீங்கள் செய்த பத்தி யோகத்தினாலே, நீ நமது திவ்விய தரிசனம் செய்யப்பெற்றாய். உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்டுக் கொள்ளுவீரென்றருளிச் செய்யச் சோமுகனானவன் ஆனந்தப் பரவசத்தை அடைந்து அவர் திருவடி களிலே அனந்தமான தண்டன் சமர்ப்பித்து விண்ணப்பம் செய்கின்றா னென்றவாறு. (14)

மகம் - வேள்வி. மறைத்திறம் - வேதவிதிமுறைகள்.

பா.வே. - 1 நெருக்கியும். 2. வந்தன நினக்குமேல். 3. அரங்க நாயகரானவர் மீட்டுக் கூறுகின்றார் மகத தேசாதிபதியாகிய நீல மகாராசனானவன் தவத்தினால் பிறந்த புத்திரனுக்கு அனேக தான தர்மங்கள் செய்து சோமுக னென்று பெயரிட்டானவன் பொற் றொட்டிலிலே செல்வமாய் வளர்ந்தபின் அறுபத்து நான்கு வகையா யுள்ள வித்தைகளைக் கற்பித்த பின்பு மந்திராலோசனை செய்து தனது புத்திரனுக்குச் சுபமுகூர்த்தத்திலே பட்டாபிடேகம் செய்தா னதன் பின்பனேக நாளாய்ச் சந்திரவட்டக குடை நிழலிலே யிருந்து சக்கர நடாத்திய தலைவனாய் ராசரீகம் பண்ணுங் காலத்திலே தேவாதிகள் தன் தம்பியைக் கொன்ற விரோதத்தினாலே தேவேந்திரனையு அவன் புத்திரனாகிய சயந்தன் முதலாகிய பேர்க ளெல்லாரையு மொடுக்கத் தக்கதாக யூகித்தவாகளுக் காதரவாகியது வேத வேள்வி யென்றெண்ணி யந்தப் பதினெண் வகையாகிய வேள்விகளையெல்லாம் விரோதஞ் செய்து மந்த வேத வேள்விகளிலே யவிர்பாகம் கொள்கின்ற தேவர்களையெல்லா மொறுத்து மவர்களுக்குக் கியான உபதேசங்களைச் செய்கின்ற முனிவர்களை யெல்லா மலையினெற்றித் தொந்தரவு செய்தும் வைதிக விதிகளையெல்லா

மழிவு படுத்திய வபராத காரணத்தைக் குறித்துன்னை யெக்கிய வராகமாய் வந்துன துத்யான வனத்தையெல்லா மதித்து மதிலினை யிடித்து உனது மந்திரிகள் முதலாகிய பேர்களை யெல்லாந் தண்டித்து உனனைக் கணடிததோம் நீ முன்னே யென்னை யுபாசித்த காரணத்தினாலே மகிழ்ச்சியை யடைந்துனக்கு வேண்டிய மேலாகிய வரத்தினைக் கொடுக்க நினைத்தோ மென்றளவில் லானந்த மகிழ்ச்சியை அடைந்து தெண்டன் சமர்ப்பித்து தமது சென்மமான மரணவாதனை யொழிந்துய்ந்தோ மென்றளவிறந்த மகிழ்ச்சியை அடைந்து கூறுகின்றா னென்றவாறு.

## Cōmukaṉ eṉṉum peyar peṟutal

*cōmu kappeyar toṭuttu māmaka*
*maḻittu tēvarai noṟukkiyu*
*māma ṟaittiṟa maḻitta tāluṉai*
*yaṭarttaṭit tatuvu maṉṟiyu*
*nīmu ṉēyeṉait tutitta tāluṉaiyu*
*neṭıtu vantaṉam niṉakkumē*
*lāmva rattiṉai yaḻittu meṉṟavuṭa*
*ṉaṭıpaṉin tavaṉu maṟaikuvāṉ.*

## Prince named Cōmukaṉ

Given the name Cōmukaṉ,
You destroyed immense sacrifıces,
Beat up the gods, and brought to nought
The pathway of scriptures. Hence
You were punished in this manner.
Besides, sınce you had earlier chosen
To worship me, I have come.
I shall grant you the boons you ask.
Immediately Cōmukaṉ bowed and said:

(சோமுகன் சுந்தரஅரசன் அருள் வேண்டுதல்)

313. அயனு மற்றவொரு சிவனு நிற்கபெரு
அகில முற்றுமறை சிரமுறும்
பயனு டைப்பொருளு மெவன வர்க்கபயம்
பரம வெற்கருள வேண்டுமோர்

[1]யுகம ளித்தருளு முயர்மறைப் புகழு
கடவு ளாகுமுனை பெறுமெனக்
கயலில் வேறுமொரு பொருள்நி லாதுமன
[2]தடிய னெம்பியுன தடிமையே.

எ-து. இந்தப் பிரகாரம் நாராயண மூர்த்தியானவர் சோமுகனது மூன்று பிறப்பின வரலாற்றைக் கூறக் கேட்ட அளவில், கியானம் அடைந்தவனாய அவரைப் பாாததுச் சில உபசார வாாத்தைகளைக் கூறுகின்றான் சுவாமி அயனாகிய பிரமனும் சிவனும நிறகப் பெரிய திரிபுவன முழுவதும், வேதாந்தத்தினும பொருநதிய பரப்பிரமப் பொருளெவனோ அவனுக்கு மற்றத்தேவரை நீக்கித் தெணடன் சமாபபிக்கின்றேன ஆகையினால சர்வ மஙகள நித்தியகல்யாண சாமபிராச்சியத்தை உடைய வந்தனை யோக்கியனே! என்னைக் குறித்து நீர் அனுக்கிரகிக்க வேண்டியது, யுகஙகடோறும இந்த உயிர்களையெல்லாம உண்டு உமிழ்ந்தளிக்காநின்ற உனககு அபயமாகிய எங்களிருவருககும் உமது திருவடியல்லாமல் மற்றபொருள்களில பற்று நீங்கினோம் ஊழிக்காலஙகளெல்லாம் உமது பொன்னடிக்கமல நிழலிலே வாழக் கடவதாகிய நித்திய வரங்களைக் கொடுத்து இரடசிக்க வேண்டும அனந்தனே! முகுநதனே! கோவிந்தா! அச்சுதா! கேசவா! நாராயணா! என்று அவரிட திருநாமதேயஙகளை யெடுதது வேதச சுருதிகளாலே துதிதது உருகினான் என்றவாறு (15)

மறைசிரம் - வேதமுடிவு பொருளு மெவனவர்க்கபயம - பொருளும எவன் அவாக கபயம எவன் - யானே அவருககு அபயம் எனக்கயலில - எனக்கு அயலில, அயலில - அலலாமல

பா வே. - 1 ருகம ளிததருளு முலகு ளோாகடொழு 2 மடிய

## Cōmukaṉ Cuntaraaracaṉ aruḷ vēṇṭutal

*ayaṉu maṟṟavoru civaṉu niṟkaperu*
*akila muṟṟumaṟai ciramuṟum*
*payaṉu ṭaipporuḷu mevaṉa varkkapayam*
*parama veṟkaruḷa vēṇṭumōr*
*yukama ḷittaruḷu muyarmaṟaip pukaḻu*
*kaṭavu ḷākumuṉai peṟumeṉak*
*kayalil vēṟumoru poruḷni lātumaṉa*
*taṭiya ṉempiyuṉa taṭimaiyē.*

## Cōmukaṉ Asks for the Lord's Grace

'As Piramaṉ and Civaṉ stand witness
You are the Supreme Lord of all worlds
And the significance of the Vēdas.

Grant me refuge! This I desire.
You are the Primal Lord
praised by scriptures through the aeons.
I should not think of anyone
Except you as my Lord.
Me and my brother are your devotees.'

(சம்பரன், சோமுகன் இருவருக்கும் அருளுதல்)

314. என்ற போதவனை வென்ற மாயவ
னிரங்க வாசவ னிடத்துமுன்
பொன்று காலளவு மண்ட சத்துருவு
கொண்ட சம்பரனும் வந்திவண்
ஒன்ற தானருளி [1]நின்றவர்க் குறுதி
யோதி யாதியுரு வம்முவந்
தென்று நீவிர்கள கன்றி டாதெனை
யிருத்தி ரென்றருள்செய் வேலையே.

எ-து. இவ்விதமான மாதுரியமாகிய நயகுண சாந்தத்தத்துவ வார்த்தையைக் கூறுகின்ற சோமுகனைக் கிருபா நோக்கத்தால் பார்த்து, நாராயண மூர்த்தியானவர் அருளிச் செய்கின்றார்: முற்காலத்திலே உன்றன் தம்பியாகிய சம்பராசுரனானவன், தேவேந்திரன் யுத்தத்திலே வச்சிராயுதத்தினாலே மடிந்த நாள் முதல் இன்றைய பரியந்தம் நான்கு வகைத் தோற்றங்களிலே அண்டசரூபமாகிய பட்சியுருவமாகிய அன்னமாய்ப் பறந்து வந்து, இலக்குமியார் தீர்த்தத்தினுபாசித்து, நம்மைக் குறித்துத் தவம் செய்கின்றான். அவனை அழைப்பிக்கிறோம் பாரென்று கருணை செய்தருளினார். அப்போதவனும் அன்ன உருவமாய்ப் பறந்து வந்தான் அவனுக்கும் கருணை புரிந்து முன்னுருவமாய திவ்விய உருவத்தைக் கொடுத்து, இரண்டு பேரையும் பார்த்து அனுக்கிரகம் செய்கின்றார். [2]உருவங்களுக்குச் சாந்த, தத்துவ, ஞானமருளிச் செய்தோம் ஆகையினாலே [3]நீங்கள் இருவரும் இந்தத் திவ்விய உருவத்துடனே நித்திய சூரியர்களாய் நம்மை நீங்காமல் வாசம் பண்ணக் கடவீர்கள் என்றருளிச் செய்தார் ஸ்ரீ அரங்கநாயகர் என்றவாறு. (16)

அணடசததுருவு - அண்டம் - முட்டை ; அண்டசம - முடடையில் பிறப்பன; அண்டசத்துருவு - முட்டையில் பிறந்த பறவைவடிவமாய். பொன்றுகாலளவும் - பொன்றுதல் - அழிதல்; இறந்தது முதல் இன்றளவும்

**உரை** - மாதுரியம் - இனிமை. நயகுணம் - நற்குணம். அண்டசரூபம் - ரூபம் - வடிவம்.

**பா.வே.** - 1. நன்றவர்க்குறுதி. 2. உங்களுக்குச்சாந்த. 3. மனுகுலத்திற் பிறந்த வரசர்களே நீங்க ளிருவரு மிந்தத் திவ்விய உருவத்துடனே நித்திய சூதியர்களாய்ப் . . .

## Camparaṉ, Cōmukaṉ iruvarukkum aruḷutal

*eṉṟa pōtavaṉai veṉṟa māyava*
*niraṅka vācava niṭattumuṉ*
*poṉṟu kālaḷavu maṇṭa catturuvu*
*koṇṭa camparaṉum vantivaṇ*
*oṉṟa tāṉaruḷi niṉṟavark kuṟuti*
*yōti yātiyuru vammuvan*
*teṉṟu nīvirkaḷa kaṉṟi tāteṉai*
*irutti reṉṟaruḷcey vēlaiyē.*

## Grace Granted to Camparaṉ, Cōmukaṉ

To him who spoke in this wise
The Lord granted compassion.
'As an enemy of creation
Your brother had opposed Intıraṉ
In days of yore. He came here
And since then has been engaged
In austerities in the form of a swan.
I shall restore him to his earlier form.
May you both stay here always
As immortal beings'.

(கோலவரையில் சம்பிரமாய்த் தங்குதல்)

315. [1]சென்றுதவ முனிவரவர்கள் பலரும் வாழ்த்த
திங்கடுலாஞ் சுவாதிவிண்மீன் சிறந்த நாளி
னென்றுமிது பரமபதத் தலமா மென்றே
யெழில்வாழ்வை நாட்டிடச் சம்பிர மாகி

**நன்றியொடு கோலவரை யினிற்ற ழைத்து**
**நறுமலரி னொடுகனிகாய் பெருகித் தோன்ற**
**அன்றுவர மளித்தலரி கோடி யென்ன**
**அனந்தவிமா னத்துயின்றா னமரர் போற்ற. (17)**

திங்கள், துலாம், சுவாதி - திங்கள் - வாரம், ஏழுநாட்களில் ஒருநாள்; துலாம் - இராசி, பன்னிரண்டு இராசிகளில் ஒன்று; அவை: மேஷம், இடபம், மிதுனம், கர்க்கடகம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், மரகம், கும்பம், மீனம். சுவாதி - இருபத்தேழு நட்சத்திரங்களில் ஒன்று. திங்கட்கிழமையும், துலா இராசியும், சுவாதிநாளும் கூடிய நாளில் சம்பிரமாகித் தழைத்தான். *சம்பிரம் - எலுமிச்சை.*

பா.வே. - 1.

**(சம்பிரமாய்த் தழைத்தல்)**

சென்றுதவ முனிவரர்கள் பலரும் போற்றத்
திருவுடனே கவுத்துவஞ்சேர்ந் திலங்க மேலா
யென்றுமிது பரமபதத் தலமா மென்றே
யெழிலவாளை நாட்டிடச்சம் பீர மாகி
நந்தியொடு கோலவரை தனில்த ழைத்து
நறுமலரி னொடுகனிகாய் பெருகித் தோன்ற
வனறுரைதத பொன்னரஙக னருளால் வீர
வனந்தவிமா னந்துயின்றா னமரர் போற்ற

அந்தத் தலத்திலே மற்ற முனிவர் கூட்டங்களெல்லாம் வந்து போற்றத்தக்கதாய் ஸ்ரீ மகாலட்சுமி தேவியுடனே கவுத்துவாபரணம் பிரகாசிககாநின்றவர் தமது சர்ணாமுதமாகிய செம்பவள வாயை யலர்த்தி யொருவார்த்தை யருளிச் செய்கின்றார். வாரீர் பிரம்மா முதலாகிய தேவர்களே! இந்தக் கோலாசல பர்வதமானது மேன்மையவாகிய *பரமபதத்தலமே* யீதென்றறிவீர்க ளென்றருளிச் செய்து தமது திருக்கரத்தினிற் றாங்கிவந்த வாளினை யந்தப் பருவதத்தினாட்ட வெலுமிச்ச விருட்சமாய்த் தோன்றிற்று. பின்னுமதைச் சேர்ந்துவந்த நந்தியாவட்ட விருட்சமானதை யதனுடனே சேரநாட்டி யிருந்த விரண்டு விருட்சமு தமது திருக்கரத்தினாலே நாட்டிய பிரயோசனத்தினாலே யென்றைக்கும் நமது சந்நிதானத் தெதிரில் விரத்தியடைந்து இலைகளுடனே தழைத்து மலர், காய், கனிகளுடனே பெருகி விருத்தியடைந்திருக்கக் கடவதென் றநுக்கிரகஞ் செய்து தாம் மயனாலமைக்காநின்ற ரத்னமயமாகிய குகையிலே அனந்தவிமான சேகரரா யெழுந்தருளினார். தேவர்கள் முதலாகிய மகரிஷிக ளெல்லாம் சூழ்ந்து துதிசெய்து உபசாரஞ் செய்யப் பொன்னரங்க நாயக ரென்றவாறு.

சோமுகன் சரணாகதி அடைந்த அத்தியாயம் முற்றிற்று.

## Kōlavaraiyil campiramāyt taṅkutal

*ceṉṟutava muṉivaravarkaḷ palarum vāḻtta*
*tiṅkatulāñ cuvātiviṇmiṉ ciṟanta nāḷi*
*ṉeṉṟumitu paramapatat talamā meṉṟē*
*yeḻilvāḻvai nāṭṭiṭac campira māki*
*naṉṟiyoṭu kōlavarai yiṉiṟṟa ḷaittu*
*naṟumalari ṉoṭukaṉikāy perukit tōṉṟa*
*aṉṟuvara maḷittalari kōṭi yeṉṉa*
*aṉantavimā ṉattuyiṉṟā ṉamarar pōṟṟa.*

## Residence in Kōla Hill as the lemon Tree

As sages rich in tapasya hailed,
On the auspicious day of *Cuvāti* asterix
In the *tulām* sign of the Zodiac,
The sword in his hand was transformed
Into a lemon tree that waxed well
On the Kōla Hill,
Full of scented flowers and fruits.
Such was the boon conferred on Cōmukaṉ
By the Lord who rested in the *aṉanta vimāṉam*
Worshipped by the immortals.

# 17. பதின்மூன்றாவது சம்பரன் சரணாகதி அத்தியாயம்

நாராயணமூர்த்தியின் திருவருளினால் அன்னவடிவம் மாறி திவ்விய உருவத்தைப் பெற்ற சம்பராசுரனானவன் மகிழ்ந்து அரங்கநாயகரை வணங்கி, 'ஐயனே! அடியேன் நெடுங்காலமாக இத்தலத்திலே வாசம் செய்கின்றேன். 'ஆனால் தங்களது உலகம் முழுவதையும் கண்டேனில்லை. இந்திரன் முதலாகிய தேவர் உலகங்களைக் கண்டுவர அருள்புரியுங்கள் என்று வேண்டினான். அரங்கநாயகர் அவனுக்கு ஒரு விமானத்தை அளித்து அவன் விருப்பம் நிறைவேற அருள் புரிந்தான். அதில் ஏறி இந்திரஉலகம் அடைந்தான் சம்பரன். இந்திரன் வரவேற்றான். தேவகன்னியர் நடனமாடி மகிழ்வித்தனர். காமதேனு, கற்பகதரு முதலானவை அவனுக்கு மகிழ்ச்சியூட்டி ஏவல் செய்தன. முனிவர்கள் வாழ்த்தினார்கள். பிறகு முனிவர்களும் கந்தருவர்களும் சூழ, அக்கினிலோகம், வருணலோகம் முதலாகிய அனைத்து உலகங்களையும் சுற்றி, அவ் உலகத்தவரால் வழிபாடு செய்யப்பெற்றான. இறுதியாகத் தென்திசையாகிய எமதர்மராசனின் நகரத்தைக் கண்டு திரும்பினான். வழியில் அக்கினி ஆறு, மலைகள், கூர்மையாகிய கழுமுட்கள் போன்றவை குறுக்கிட்டன. இத்தகைய கொடிய வழியைக் கண்ணுற்றான். மேலும் அவ்வழியில் கொடுமைவாய்ந்த ஈயம் உருக்கிக் கொட்டுவதுபோன்று மழைபொழிந்தது. அக்கினி மழையில் உயிர்கள் சிக்கின. தூதர்கள் கழுமுள்ளினால் குத்தி இழுத்துச் சென்றார்கள். இரத்த வெள்ளம் பெருகியது. நரிகள் மாமிசத்தைத் தின்று, அவற்றை இழுத்துத் திரிந்தன. நாய்கள் குடல்களைக் கவ்வித்திரிந்தன. தூதர்கள் சூலம் முதலியவற்றைக்கொண்டு வதைசெய்தார்கள். இவற்றைக் கண்டு வருத்தத்தோடு சென்ற சம்பரன், இந்திர உலகம் போல விளங்கிய வழியில் தேர், குதிரை, யானை போன்றவற்றில் ஏறி பழங்களை உண்டு மகிழ்ந்து சென்றவர்களையும் கண்டான். அவ்வழியே சென்று எமலோகத்தைக் கண்டான். அங்கு நரகக் குழியில், உயிர்களை எமதூதர்கள் வதைப்பதையும் பேய்கள், புழுக்கள், நாய்கள் போன்றவை வதைப்பதையும் கண்டான். கொப்பரை, வசி போன்றவற்றில் தள்ளப்பட்ட உயிர்கள் எமதர்மனிடம் முறையிடும் ஓசையைக் கேட்டான். நரகக்குழிகளில் பாம்புகள் முதல் பேய்கள் ஈறாக அனைத்துக் கொடியவைகளும் கோடிக்கணக்கில் நிறைந்திருந்தன. அக்கினித்தூண்கள், ஈயம் கொதிக்கும் கொப்பரை ஆகியவற்றால் சூரிய மண்டலமே அனல் வீசத் தொடங்கியது உடுக்கள் வெம்பி உதிர்ந்தன. மற்றொரு புறம் வாள் முதலியவற்றால் வெட்டுவதும், தேள் முதலியவற்றை விட்டுக் கடிக்கச் செய்வதுமாகிய செயல்களால் உடல்கள் மலைபோலக் குவிந்து கிடந்தன.

தாய், தந்தை, குரு ஆகியோரைப் பழித்தவர், பரதாரத்தை விரும்பியவர், கொலை, களவு முதலாகிய பாவங்களைச் செய்தவர், சிசுவை அழித்தவர், பெரியோர், அடியவர், தலங்கள் ஆகியோரை இகழ்ந்தவர் போன்றவர்கள் இத்தண்டனையைப் பெற்றார்கள்.

இவற்றைக் கண்டு கண்ணீர்விட்டு நின்றான் சம்பரன். துன்பப்படும் உயிர்களெல்லாம் சம்பரனிடம் முறையிட மேலும் மனம் கலங்கினான். தான் இலக்குமி தீர்த்தத்திலே இருந்து பெற்ற பலன்களிலே மூன்று நாளைய பலன்களை அவர்களுக்குக் கொடுக்கத் துணிந்து, அரங்க நாயகரைத் துதித்தான். அப்பலனால் அவ்வுயிர்கள் சம்பரனுடைய இரதத்தைப் பின்பற்றிக் கொண்டு சுவர்க்கத்தை அடைந்தன. இதைக்கண்ட எமதூதர்கள் எமனிடம் முறையிட்டார்கள்.

அதைக் கேட்ட எமன் வெகுண்டு, 'இப்பாவிகளுக்கு அந்தச் சுவர்க்க உலகம் தகுதியில்லை; அதைமாற்றி நரகத்திற்குக் கொண்டு வருகிறேன்' என்றுகூறிப் புறப்பட்டான். அப்போது அகில உலகங்களிலும் நெருப்புமழை பொழிந்தது. திக்கு யானைகள் உதிரம் கக்கின. பூமி அதிர்ந்தது. அதனால் எமதர்மன் தன் படைகளுடன் மூர்ச்சையாகி விழுந்தான். இது அரங்கநாயகரின் செயலென்று தெரிந்து, அவரை வணங்கினான். 'அடியேன் தங்கள் அடியவர்களை அடைவதில்லை. மாபாதகஞ் செய்தவர்களையே வருத்தினேன். அவர்களும் புண்ணிய உலகை அடைந்தார்கள். இனி நான் செய்ய வேண்டுவது யாது? என்று வேண்டி நின்றான் தருமராசன். அரங்கநாயகர் மகிழ்ச்சியடைந்தார். இதைக் கேட்ட சம்பரன் சுவர்க்கலோகத்தையடைந்து, அங்கு மகிழ்ச்சியோடு இருந்த உயிர்களைக்கண்டு மகிழ்ந்தான். பின்பு சத்தியலோகத்தைக் கண்டு இறுதியாகக் கோலாசலத்தையடைந்து அரங்கநாயகரைச் சரண் அடைந்தான்.

'ஐயனே இந்தத் தலத்தில் தங்கியதன் பயனாய், நரகத்தில் துன்பமுற்ற பலரும் சுவர்க்கமடைந்தார்கள். ஆகவே இத்தலத்தில் வந்து தங்குபவர் முதலாக இதனை நினைத்தவர் ஈறாக அனைவரும் பரமபதமடையுமாறு திருவருள் புரியவேண்டும்' என்று வேண்டினான் சம்பரன். அரங்கநாயகரும் அவ்வாறே அருளிச் செய்தார்.

அப்போது அங்கு எமதர்மன் வந்தான். அரங்கநாயகரைத் துதித்து அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினான்.

'ஐயனே! அடியேன் தருமம் தவறாமல் உறுதிப்படுத்தி, நரகவேதனையை அளித்தேன்; அத்தண்டனையைப் பெற்றவர்கள் எல்லாம் தங்கள் அருளால் புண்ணிய உலகு அடைந்தனர். எனவே என் பணிகள் முடிந்துவிட்டன. இனி இக்கோலாசலத்தில் என்றும் வாசம் செய்யுமாறு அருள்புரியுங்கள்' என்று வேண்டினான். எமதர்மனை நோக்கி, 'தர்மராசனே! இலக்குமியின் அருள் நோக்கத்தால் இந்தப் பதினாறு உலகங்களிலுமுள்ள யாவரும் சுவர்க்க இன்பத்தை அடைவார்கள். ஆனால் நீரோ தருமமே உருவாய் விளங்குபவர். மனிதர்களைப் போல உமக்கு இந்த எண்ணம் தோன்றலாகாது. நீர் சென்று உமது அரசினைச் செலுத்துவீராக' என்று அருளிச்செய்தார். அவனும் தென்திசை நோக்கிச் சென்றான்.

(சம்பரன் தேவலோகத்தைக் காண அருளுதல்)

316. வந்தபுகழ் சம்பரன் மகிழ்ந்துதிரு மாலடி
வணங்கிதிசை யெட்டு மடியே
னிந்தபடி யென்றறிகி லேனுமனு சிந்தைதனி
லெண்ணிவர மீக வெனவே
சுந்தரப ரம்பரன்வி மானமது தந்திட
[1]சுகித்தன திகழ்ந்த கதிர்போ
லிந்திரன்மி குந்தசபை வந்திடவ ணங்கினனி
சைந்தபுகழ் கொண்ட வரசன்.

எ-து [2]இப்படியாக ஸ்ரீமன நாராயண மூர்த்தியினது கிருபையினாலே திவ்விய தேகத்தை அடைநத இராசசேகரனானவன் மகிழ் சிறந்தவனாய் அவரது உபய சரணார விந்தங்களிலே அனந்தமான தெண்டன் சமர்பபித்து விண்ணப்பம் செய்கின்றான். அடியேன் தேவரீருடைய அனுக்கிரகத்தினாலே நெடுங்காலமாய் இந்தக் கோலாசலத்திலே வாசம் செய்தேன. ஆனாலும் உமது லீலா விபூதியாகிய லோகங்களை அடியேன் கண்டதில்லை. இந்திரன் முதலாகிய திக்குப் பாலர்கள் வசியா நின்ற லோகங்களைக் கண்டு வரும்படி யனுக்கிரகம் செய்யவேணும் என்று விண்ணப்பம் செய்த சம்பரனுக்கு மனோபீஷ்ட நிறைவேறத் தக்க தாயொரு தேசோமய காந்தியினை உடைய விமானத்தை அனுக்கிரகித்தார். அதிலே ஆரோகணிதமாய்க் கதிரினை விரித்து விளங்காநின்ற சூரியனைப்போல இந்திர மகாராசன வீறறிருககாநின்ற சபையிலே வந்தான் அப்போது அவ்விந்திர மகாராசனானவன் வணங்கி எதிர்கொண்டழைததுக் கொண்டு போக உள்ளே பிரவேசித்தான் இசைவாகிய புகழ்ச்சியினைக் கொண்ட அரசனாகிய சம்பரன் என்றவாறு (1)

இந்தபடி - இவவாறானது சுந்தரபரம்பரன - அழகிய உயர்ந்தவனாகிய அரங்கநாயகன்.

உரை - மனோபீஷ்டம் - உள்ளத்தின் விருப்பம தேசோமயம் - அழகும் பேரொளியும உடையது. காநதி - ஒளி ஆரோகணிதம - ஏறுதல

பா.வே - 1 செறிந்தன 2 நாராயண மூர்த்தியினது கிருபையினாலே திவ்யானந்த கல்யாண உருவஙகொணடு வராநின்ற புனித பவித்திரப் புகழ்ச்சியினையுடைய ராச சேகரனாகிய சம்பரனானவன் மகிழ் சிறநது திருமாலடியாகிய வுபய சரணார விந்தஙகளை யட்டாங்க முதலாகிய அங்கங்களாலே தெணடன சமர்ப்பிததுக கூறுகின்றா னடட திசையினது வளஙகளையெல்லா மிந்தப்படி யென்று நானறியாத செயகையினாலே யுமது திருவுளத்திலெணணி யானநத வதிசயத்தையெல்லாம் பார்க்கும் பொருட்டாய வரமீயக் கடவீரெனறளவின சுந்தரததோடு கூடிய பரம்பரனாகிய வரஙக நாயக ரானவர் ஒரு தேசோமய காநதியையுடைய விமானததை யனுககிரஹித்தாரதிலே யாரோகணிதமாய்க் கதிரினை விரிதது விளஙகாநினற சூரியனைப் போல விநதிர மகாராசன் வீற்றிருக்காநின்ற சபையிலே வந்தானபபோதவ் விநதிர மகாராசனானவன வணங்கி யெதிாகொண் டழைத்துப் போக வுள்ளே பிரவேசிததா னிசைவாகிய புகழ்ச்சியினைக கொணட வரசனாகிய சம்பர னென்றவாறு.

### Camparaṉ tēvalōkattaik kāṇa aruḷutal

*vantapukaḻ camparaṉ makiḻntutiru mālaṭi*
*vaṇaṅkit ticai yeṭṭu maṭiyē*
*ṉintapaṭi yeṉṟaṟiki lēṉumaṉu cintaitaṉi*
*leṇṇivara mīka veṉavē*
*cuntarapa ramparaṉvi māṉamatu taṇṭiṭa*
*cukittaṉa tikaḻnta katirpō*
*lintiraṉmi kuntacapai vantiṭava ṇaṅkiṉaṉi*
*caintapukaḻ koṇṭa varacaṉ.*

## XVII. Camparaṉ Surrenders

### Camparaṉ Goes to Heaven

Camparaṉ, rich in fame, was happy.
Saluting him, he submitted
That he had never seen the many worlds
And wished for a boon to see them all.
The All-Beautiful Supreme
Gifted him an aerial chariot; presently
Camparaṉ reached the court of Intiraṉ
That was brilliantly illumed;
The praiseworthy king saluted Intiraṉ.

(தேவருலகு அடைதல்)

317. அரம்பையர்கள் சூழ்ந்திடநல் லானினம வன்கருணை
யன்பினில் நடக்க மணியுந்
தரம்பயி னிரண்டுநிதி சார்ந்தவன தேவல்புரி
தன்மையினி னிற்க தவறா
துரம்பயிலு கின்றதரு வேமுதல யாவுமொளி
துன்னுநிழல் செய்ய விமலக்
கரம்பயில் முனிக்கணம தாசிகள் வழங்கிட
களித்தனன் விமான மதனின்.

எ-து. அந்தத்திவ்விய காந்தியையுடைய சம்பரன் விமானத்தைச் சூழ்ந்த அரம்பா ஸ்ரீகளானவர்கள் பரத இலக்கணப்படி நடிக்கவும், காம தேனானது அவனது கருணையன்பின் வழியிலே நிற்கவும், சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி முதலானதெல்லாம் அவனுடைய ஏவல் பணிவிடைகளைச் செய்து கொண்டிருக்கவும், எப்பொழுதும் தவறுபடாத வலியினையுடைய சந்தனம் அரிச்சந்தனம், பாரிசாதம், மந்தாரம், கற்பகம் ஆகிய விருட்சமாகிய பஞ்சதாருவும் புட்பங்களாலே திவ்விய பரிமளங்களை வீசி ஒளியினைப் பரப்பாநின்று நிழலினைச் செய்யவும், விமலமாகிய கரதல கமலங்களையுடைய முனிவர்க் கூட்டங்களானவர் ஆசிகள் வழங்கவுங் களித்து வீற்றிருந்தான் விமான சேகரானாய் சம்பரன் என்றவாறு. (2)

ஆனினம் - ஆன் - பசு; காமதேனு மணி - சிந்தாமணி. இரண்டுநிதி - சங்கநிதி, பதுமநிதி தரு - பஞ்சதருக்கள் முனிக்கணமதாசிகள் - முனிக்கணமது ஆசிகள்.

உரை - விமலம - தூய்மை. கரதலகமலம் - கைத்தலமாகிய தாமரை

## Tēvarulaku aṭaital

*arampaiyarkaḷ cūḻntiṭanal lāṉiṉama vaṉkaruṇai*
*yaṉpiṉil naṭakka maṇiyun*
*tarampayi ṉiraṇṭuniti cārntavaṉa tēvalpuri*
*taṉmaiyiṉi ṉiṟka tavaṟā*
*turampayilu kiṉṟataru vēmutala yāvumoḷi*
*tuṉṉuniḻal ceyya vimalak*
*karampayil muṉikkaṇama tācikaḷ vaḻaṅkiṭa*
*kaḷittaṉaṉ vimāṉa mataṉiṉ.*

## In the Celestial World

Heavenly damsels encircled the place;
The good cow Kāmatēṉu walked there
With compassion; the Cintāmaṇi gem
And the two kinds of riches
Served him; the Wish-yielding tree
That is ever bountiful shone bright
And gave shade; the groups of sages
With pure hands gave blessings.
So Camparaṉ sat in the aerial chariot.

(எமதர்மபுரியைக் காணுதல்)

318. கண்டரச னோடுபுகழ் கொண்டமுனி வோர்திகழ
கந்திருவ ரோடு கடுகி
வன்திறல் அகண்டதிசை கண்டுகளி கொண்டுமிகு
வண்மையினி னின்று மெழில்சேர்
தென்றிசை திகழ்ந்தநகர் கண்டுவரு கின்றவழி
சென்றிட பெருங்க னலதாய்
நின்றதொரு பால்வரை நிகழ்ந்ததொரு பால்வசி
யடைந்ததொரு பாணி கழவே.

எ-து. இந்திர லோக வளங்களையெல்லாம் கண்டு அவரால் வழிபாடுகள் செய்யப் பெற்று மனமகிழ்ச்சியடைந்த அரசனுடனே புகழ்ச்சியினையுடைய வேகதண்ட சந்நியாசி திரிதண்ட சந்நியாசிகளெல்லாம் அவனது விமானத்தினில் இவர்ந்து வரவும், கந்திருவர் முதலாகிய பேர்களெல்லாம் விமானத்தைச் சூழ்ந்து வரவும், வலிய திறலினால் [1]கண்டிராநின்ற திசைகளாகிய அக்கினிலோகம், வருணலோகம், வாயுலோகம், குபேர லோகம், நிருதிலோகம், ஈசானிய லோகம் முதலாகிய உலகங்களில் சென்று அவரவர்கள் வழிபாடு செய்யப்பெற்று அந்த வளங்களை யெல்லாங்கண்டு மகிழ் சிறந்தவனாய் மிகுந்த வண்மையினின்று பார்த்தபின்பு அந்தத் திசைகளையெல்லாம் விட்டு நீங்கிச் சிங்கார வளங்களானவை செறிந்திராநின்ற தென்திசையாகிய தர்மராசன் புரியைக் கண்டு வரும்படியாகிய வழியிலே [2]அக்கினியாறானது நிறைந்திருக்கின்றதொரு பக்கம், கூர்மையோடும் கூடிய வசிகளானவை சூழ்ந்திருக்கப்பட்டதொரு பக்கம். இப்படிப் பலபல கடூரமாகிய வழிகளிலே எமதூதர்கள் அனேக பாபசென்மங்களை அந்த மார்க்கமாய் இழுத்துக்கொண்டு போகத் தக்கதாய்க் கண்டான் சம்பர மகாராச னென்றவாறு. (3)

வன்திறல் - வலிய திறமை; குணம். அகண்டதிசை - அனைத்துப்பக்கங்கள்; நீக்கமற்றது; அனல் - தீ. ஒருபால் - ஒருபக்கம். வரை - மலை வசி - கூரிய ஆயுதம்.

**உரை** - தர்மராசன்புரி - எமலோகம். வசி - கழுமுள் என்னும் கூரிய ஆயுதம்.

**பா.வே.** - 1. கண்டதிசை. 2. அக்கினி மயமாய்ச் சொலிக்காநின்றதொருபக்க மலையாகிய வழியிலே பருக்காங்கல்லுகள் முதலானது பரந்திருந்தாலெத்தன்மையோ வப்படிப் போன்றதொரு பக்கம், வசிகளை யனேகமாய் நட்டிருப்பதொரு பக்கத்தி னென்றவாறு.

## Ematarmapuriyaik kāṇutal

*kaṇṭaraca ṉōṭupukaḻ koṇṭamuṉi vōrtikaḻa*
*kantiruva rōṭu kaṭuki*
*vaṉtiṟal akaṇṭaticai kaṇṭukaḷi koṇṭumiku*
*vaṇmaiyiṉi ṉiṉṟu meḻilcēr*

*teṉṟicai tikaḻntanakar kaṇṭuvaru kiṉṟavaḷi*
*ceṉṟiṭa peruṅka ṉalatāy*
*niṉṟatoru pālvarai nikaḻntatoru pālvaci*
*yaṭaintatoru pāṉi kaḷavē.*

## Seeing Yamaṉ's World

Seeing all this and being welcomed
By Intiraṉ, accompanied by sages
And gandharvas, feeling happy
Looking at the firm and vast directions,
He happened to see the city beautiful
In the south; here an immense fire
Glowed on one side; mountains rose
On another side; on yet another path
Iron spikes had been planted.

(எமனுலகக் காட்சி)

319. ஈயமழை பெய்யவனல் காயகழு முள்ளுக
ளிழுத்துடல் கிழித்த துதிரம்
பாயதசை யுண்டுநரி கால்களைப் பிடித்துடல்
கடித்துட னிழுத்து பலவாய்ச்
சாயதலை கீழுடல்கள் வேறுபட நாய்கள்பல
சாரிகை திரிந்து குடர்கள்
வாய்களில் கடித்துபெரு வோலமிட சூலமொடு
தூதர்கள் வதைக்க வரசன்.

எ-து [1]அப்படியாகிய எமலோகத்தினது மார்க்கமானது எப்படி விளங்கிப் பிரகாசிக்குதென்றால் ஒரு மார்க்கத்தின் அதிக் கொடூரமாகிய ஈய மழைகளானவை வருஷிக்கவும் அனேக ஆத்தும கோடிகள் அந்த அக்கினி மழையிலே உருகிக் குழைந்து தத்தளிக்கவும், மற்றொரு மார்க்கத்திலே அனேகமாயிரம் தூதர்கள் கழுமுள்ளுகளினாலே குத்தியிழுத்துக்கொண்டு போக அவர்களிட உதிரமானது பிரவாகமாய்த்திக்குத் திகாந்தங்களெல்லாம் நிறைந்தோடவும், பின்னுமொரு மார்க்கத்திலே அனேக நரிக்கூட்டங்களானவை மாமிசங்களைப் பிடுங்கித்தின்று, தலைகீழாக இழுத்துக்கொண்டு கடூரமாகிய கல்லுகள், முள்ளுகள் பர்வதங்கள் ஆகியவற்றில் கொண்டு திரியவும்,

நாய்க்கூட்டங்களானவை அவர்களிட உதிரங்களைப் பொசித்து வயிறெடுக்கமாட்டாமல், குடல்களைக் கவ்விக்கொண்டு காடுகள் மேடுகளெங்கும் ஓலமிட்டுக்கொண்டு திரியவும் இப்படிப் பலபலவிதங்களாகிய எமவேதனைப்படுகின்ற சீவான்மாக்களைக் கொடூரமாகிய தூதர்கள் சூலங்களினாலே குத்தியும், வாளினாலே வெட்டியும் கண்டகோடரியினாலே அவர்களிட கபாலங்களை உடைத்தும், உதிரங்களைக் குடித்தும் அனந்தமாகிய இம்சைகள் செய்யக் கண்டான் அரசன் என்றவாறு. (4)

பா.வே. - 1. சில விடங்களினீய மழையினைக் காய்ச்சிப் பெய்யவு மக்கினியைக் காய்கின்ற கழு முள்ளுகளாலே உடலிலே இழுக்க வந்த உடல்களானது கிழிந்து உதிரங்களைப் பாயவவரது தசைகளையுண்டு நரிக்கணங்களானது கால்களைப் பிடித்திழுத் துடலைக் கடித்துடனே யிழுக்காநின்ற பிரேதங்களானது பலவானது சாயவுந் தலையானது கீழா யுடலானது வேறுபட்டுப் போக நாய்களானது பல சாரிகையாகத் திரிந்தவரது குடல்களை வாய்களினாலே கவ்விக் கடித்துத் திரியப் பெரிய வோலமிட்டலறத் தூதர்கள் முதலாகிய தண்டத் தலைவர்களானவரிப்படியாய்த் தண்டித்துத் திரியக் கண்டானரச னென்றவாறு.

## Emnulakak kāṭci

*īyamalai peyyavanal kāyakaḻu muḷḷuka*
*ḻiḻuttuṭal kiḻitta tutiram*
*pāyatacai yuṇṭunari kālkaḷaip piṭittuṭal*
*kaṭittuṭa niḻuttu palavāyc*
*cāyatalai kīḻuṭalkaḷ vēṟupaṭa nāykaḷpala*
*cārikai tirintu kuṭarkaḷ*
*vāykaḷil kaṭituperu vōlamiṭa cūlamoṭu*
*tūtarkaḷ vataikka varacan.*

## Sights in Yaman's World

Heavy rains poured; fires burned high;
Ironspikes pierced bodies as blood flowed
With jackals eating the flesh,
Pulling the feet and biting the bodies
Which kept falling; heads and trunks
Were separated; dogs circled
And bit at the intestines
Howling aloud; the servants
Tortured with lances. These sights
Were seen by the king.

(அடுத்தபுறங்கண்ட இன்பக் காட்சிகள்)

320. கண்டுமிக துன்பமது கொண்டுவரு காலையில்
கதித்தமகிழ் சோலை வனமாஞ்
சென்றுகமழ் கின்றபுகழ் தென்றல்கள் [1]தவழ்ந்திட
செறிந்தபனி நீர்கள் பரவ
உண்டு [2]பல காய்கனிகள் கொண்டவர்கள் சென்றிட
[3]உவந்திரத யானை பரிமேல்
[4]சென்றுவரு வோர்சிலர் திகழ்ந்துவரு வோர்சிலர்
சிறந்தமதி போல்சி லர்களாம்.

எ-து. அந்த எமலோகத்தின் மார்க்கங்களில் பாசங்களினாலே கட்டி, சூலங்களினாலே குத்தியிழுத்துக் கொண்டு போகப்பட்ட சீவகோடிகள் வதைகின்ற விதங்களை யெல்லாம் கண்டு மிகுதியாகிய துன்பத்தை அடைந்தவன் மனது கலங்கி வருகின்ற மார்க்கங்களில், இமைத்தொரு திசையில் இந்திரபுவனம்போல நிகண்ட சாலைகள், சோலைகள், தடாகங்கள், செண்பகம், பாரிசாதம் முதலாகிய திவ்விய பரிமளாதிகள் கமழ்கின்ற தென்றல் காற்றினாலே குளிர்ச்சி பொருந்திய மார்கங்களிலே போகப்பட்ட பிராணிகள் கோடிகள், இரதத்தின் பேரிலும் யானையின் பேரிலும், புரவியின் பேரிலும், தண்டிகையின் பேரிலும் அனந்த மகிழ்ச்சிகளுடனே சரசசல்லாப உற்சாகத்துடன் போகையில் எதிரிலே பனிநீர்கள் வீசுகின்ற பேர்களும், பண்டுபலாதிகளைக் கொடுக்கின்ற பேர்களும், திவ்விய போசன முதலானதும் பொசித்தானந்த பரவசராய்ச் சந்திரனைப் போல சிறந்த திவ்விய ரூபத்துடனே விளங்குகின்ற ஆத்தும கோடிகளும் ஆகியவர்களைக் கண்டு களித்தான் சம்பரன் என்றவாறு. (5)

கதித்த - மிகுந்த

**உரை** - பேரில் - மேலே.

பா.வே. - 1 கவிந்திட 2 பல காய்கனிகள் கொண்டுவெதிர் 3. வந்திரத யானை மிசைய 4 சென்றுவரு வோர்சிலா சிறந்தபரி மேல்சிலர்விமானமதில் சென்ற சிலபேர்.

## Aṭuttapuṟaṅkaṇṭa iṉpak kāṭcikaḷ

*kaṇṭumika tuṉpamatu koṇṭuvaru kālaiyil*
*katittamakiḻ cōlai vaṉamāñ*
*ceṉṟukamaḻ kiṉṟapukaḻ teṉṟalkaḷ tavaḻntiṭa*
*ceṟintapaṉi nīrkaḷ parava*
*uṇṭupala kāykaṉikaḷ koṇṭavarkaḷ ceṉṟiṭa*
*uvantirata yāṉai parimēl*
*ceṉṟuvaru vōrcilar tikaḻntuvaru vōrcilar*
*ciṟantamati pōlci larkaḷām.*

## Sights of Pleasure

As he felt unhappy watching
These sights, he saw gardens
And woods rich in trees
Where swirled sweet-scented breeze;
Cool droplets sprinkled everywhere;
There were those who ate
And took away fruits, and joyfully
Ascended chariots, elephants and horses
To travel around; some ate heartily;
Some appeared bright like the moon.

(நரகக் குழியில் பலர்)

321. இவ்வகை யறிந்தவசு ரேசன்மதி சூழ்புவன
மேகிளம லோக மியல்சேர்
அவ்வகை [1]கருங்கட லமர்ந்தநர கத்திடை
யடைந்தவுயிர் கோடிக ளெலாம்
பவ்வமத யானைகள் துவைக்களம தூதர்கள்
பதைத்துயிர் வதைக்க பலபேய்க்
கவ்வபுழு வவ்வவிரு கண்களனல் பாயவுடல்
கண்டமொடு துண்ட மிடுவார்.

எ-து. இவ்விதமாய்ப் புண்ணிய சீவாத்துமாக்கள் போகப்பட்ட மார்க்கத்தின் பிரவேசித்தவர்களிட போக பாக்கியங்களைக் கண்டு சந்துஷ்டியடைந்தவனாய், அதிவேகமாக எமலோகத்தின் சமீபத்தின் விளங்குகின்ற கருங்கடலுக்குச் சமதையாகிய நரகக்குழிகளானவை அந்த லோகத்தைச் சுற்றிலும் சூழ்ந்திருக்கின்ற அனந்தகோடி கணக்கு மிதமில்லாத நரககுழிகளிலே அனேக ஆத்தும கோடிகளைத் தள்ளி யானையைக் கொண்டு துவைத்தும், பதை பதைக்கத் தக்கதாய்த் தூதர்கள் வதைக்கின்ற கொடூரங்களும், பல பேய்க் கூட்டங்கள் பிணங்களைப் பிடிங்கித் தின்னவும், புழுக்களானவை அவர்களிட தேகங்களைக் குடைந்து சல்லடைக் கண்களைப் போலத் துளைக்கவும், அக்கினி சூலங்களினாலே அவரது கண்களிலே குத்தியிழுக்கின்ற பெருங் கண்டங் கண்டங்களாய் அவரது சரீரங்களை நாய்களுக்கும் பேய்களுக்கும் இரையாகக் கொடுத்து வதைக்கின்ற தூதர்களுடைய பல ரூபங்களைப் பார்த்து பயத்தை அடைந்தான் சம்பரன் என்றவாறு. (6)

அறிந்தவகரேசன் - அறிந்த அசுரேசன்; அசுரேசன் - அசுரர்தலைவன்; சம்பரன். மதி புவனம் - சந்திரமண்டலம். இயல் - இயல்பு; தன்மை. பவ்வம் - கடல். வவ்வல - அபகரித்தல்

உரை - சந்துஷ்டி - மகிழ்ச்சி. சமதை - சமம். ஒப்பு.

பா.வே. - 1. கறுத்தவிரு ளார்ந்த

## Narakak kuḻiyil palar

*ivvakai yaṟintavacu rēcaṉmati cūḻpuvaṉa*
*mēkiema lōka miyalcēr*
*avvakai karuṅkaṭa lamarntanara kattiṭai*
*yaṭaintavuyir kōṭika ḷelām*
*pavvamata yāṉaikaḷ tuvaikkaema tūtarkaḷ*
*pataittuyir vataikka palapēyk*
*kavvapuḻu vavvaviru kaṇkaḷaṉal pāyavuṭal*
*kaṇṭamoṭu tuṇṭa miṭuvār.*

## Many in the Malbowges

Having noted all this, the Acura king
Entered the land of moon,
And further on to Yamaṉ's world;
In the malbowge situated in the dark sea,
Millions of souls were seen
Being trampled down by elephants,
Tortured by Yamaṉ's servants,
Bitten by spirits, eaten by worms,
Struck by fire in the eyes,
And being cut to pieces.

(நரகத்தில் கண்ட காட்சி)

322. சூலமதில் குத்தியுடல் வேகவனல் கொப்பரையில்
சுற்றினு மிதந்த உயிர்கள்
வேல்கொடு வதைத்துகழு வாணியி னிறுத்திபெரு
வேதனை யியற்ற அவர்கள்

வாலிய புழுக்கள்சட மீதினில் செனித்துவழி
கின்றன வருங்கு ருதியாற்
காலனை நினைத்துமுறை யோதபெரு வோதைகள்
கடற்கரை புரண்ட தெனவே.

எ-து. அப்படிக்கி வடவாக்கினிக்குச் சமதையாகிய அக்கினியைப் பொங்காநின்ற கொப்பரைகளிலே அனந்தம் பேர்களைத் தள்ளியும், அனந்தம் பேர்களைச் சூலத்தினாலே குத்திக் கொன்று அந்த அக்கினியில் வெதுப்பியும், அந்தக் கொப்பரையில் வேகத்தினாலே சுற்றிலும் மிதந்து வருகின்றபேரை வேலாயுதத்தினாலே வதைத்தும், வசிகளினாலே நாட்டியும் இப்படி வெகுகாலமாய் வேதனைப்படுகின்ற சீவாத்து மாக்களிட தேகங்களிலே வாலிய புழுக்கள் கோடான கோடிகள் செனித்துத் துளைத்த உதிரப் பெருக்கினாலே வருத்தங்களையடைந்து எமதர்ம ராசனை நினைத்து முறையிடுகின்ற கோஷ்டமானது சமுத்திர கோஷ்டத்தினும் பெரிதாய்த் தோன்றிய தென்றவாறு. (7)

கழுவாணி - கழு மரத்தின் ஆணி வாலியபுழு - வாலிபப் புழுக்கள் ஓதை - ஓசை

## Narakattil kaṇṭa kāṭci

*cūlamatil kuttiyuṭal vēkavaṉal kopparaiyil*
*cuṟṟiṉu mitanta uyirkaḷ*
*vēlkoṭu vataittukaḷu vāṇiyi niṟuttiperu*
*vētaṉai yiyaṟṟa avarkaḷ*
*vāliya puḻukkaḷcaṭa mītiṉil ceṉittuvaḻi*
*kiṉṟaṉa varuṅku rutiyāṟ*
*kālaṉai niṉaittumuṟai yōtaperu vōtaikaḷ*
*kaṭaṟkarai puraṇṭa teṉavē.*

## Sights of Hell

The bodies pierced by tridents
Were thrown into boiling cauldrons
Where they floated around;
They were tortured by lances
And hoisted up the stakes
And left to suffer untold agonies,
As worms ate into them, while they bled.
The sounds made by these dead souls
That remembered Yama in their tortures
Seemed to be rivalling the sea's roar.

### (நரக வேதனைகள்)

323. பேய்களொரு கோடிகள் புழுக்களொரு கோடிகள்
பெருத்தநர கக்குழி யின்வாய்
நாய்களொரு கோடிரண பூதமொரு கோடிகனல்
தூண்களொரு கோடி நணுகுங்
காயுமழல் கொப்பரையி னீயமதில் கொண்டு[1]கொதிக்
கின்றகதிர் மண்ட லமெலாஞ்
[2]சாயவனல் கண்டுருகி மேகமத னால்கருகி
சாய்வதொரு பால்ச ருகுபோல்.

எ-து. அப்படி கருங்கடலுக்குச் சமதையாகிய நரகக் குழியிலே பேய்கள், பூதங்கள், வால்ப்புழுகுகள், அட்டைகள், ஆமைகள், நீர்ப்பாம்புகள் முதலாகிய செந்துக்கள் கோடானுகோடிகள் நிறைந்திருக்கின்ற குழிகளில் அனேகம் அக்கினித் தூண்கள் நிறுத்தி அதிலே சேர்த்துப் பாசத்தினாலே கட்டிவதை செய்கின்றதொரு புறம்; அகன்ற அண்டத்துக்குச் சமதையாகிய கொப்பரைகளிலே ஈயங்களை விட்டுக் கனலை மூட்டிக் காய்ந்து கொதிக்கின்ற வேகத்தினாலே சூரிய மண்டலங்களெல்லாம் அனல் வீசத்தக்கதாயும், மேகங்களெல்லாம் கருகி அந்தக் கொப்பரையிலே வீழ்ந்து மடியத்தக்கதாயும், நட்சத்திரக் கூட்டங்களெல்லாம் வெதும்பி சருகுகளைப் போல உதிருகின்ற அதி கடூரமாகிய வடவாக்கினிக்குச் சமதையாகிய கொப்பரையில் அனந்தஞ் சீவாத்துமாக்களைத் தள்ளி வதை புரியக் கண்டான் சம்பரன் என்றவாறு. (8)

நணுகும் - சேரும். ஈயமதில் - ஈயம் + அதில் - ஈயக்காய்ச்சல. சருகு - உலர்ந்த இலை.

பா.வே. - 1 கொதிக்குங்கதிர்கள் 2 சாயவதை

### Naraka vētaṉaikaḷ

*pēykaḷoru kōṭikaḷ puḻukkaḷoru kōṭikaḷ*
*peruttanara kakkuḻi yiṉvāy*
*nāykaḷoru kōṭiraṇa pūtamoru kōṭikaṉal*
*tūṇkaḷoru kōṭi naṇukuṅ*
*kāyumaḻal kopparaiyi nīyamatil koṇṭukotik*
*kiṉṟakatir maṇṭa lamelāñ*
*cāyavaṉal kaṇṭuruki mēkamata ṉālkaruki*
*cāyvatoru pālca rukupōl.*

## Infernal Tortures

Crores of spirits; crores of worms;
And crores of dogs in that immense
Mouth of hell; crores of devils,
Crores of flaming pillars,
In the burning cauldrons on the furnace
Lead was thrown to make the flames
Go to the sun as if to dislodge him,
And the clouds that were scorched black
Fell down like dried up leaves.

(சித்திரபுத்திரர் பணிகள்)

324. வாள்கொடு வதைத்துவளர் தேள்கொடு கடித்துமணி
மார்பினை யுடைத்து வருவோர்
தாள்கொடு துவைத்துபெரு வாலையி னரைத்துதசை
போர்பட குவித்து தணியார்
கோளகை வெடிக்கமொழி வார்களெம தூதர்கொடு
பாவிகள் பதைக்க பலபேர்
நாடொறும் வதைத்தவர்கள் சேதியை யுரைக்கநம
[1]நாளது குறிக்க வருவார்.

எ-து. இப்படி வதைகின்ற சீவான்மாக்களுடைய கோஷ்டங்களைக் கேட்டுப் பிரமித்துப் பின்னும் அப்பால் நடக்கும் போதொரு திக்கிலே வாளாயுதங்களினாலே தேகங்களை வெட்டிக் கிழித்தும், கருந்தேள்களினாலே கடிப்பித்தும், தண்டாயுதத்தினாலே மார்புகளிலே அடித்து உடைத்தும், இரண்டு கால்களைப் பற்றிப் பிடித்து பூமியிலே அடித்தும், பெருத்த ஆலையிலே கரும்பைப் போல அரைத்தவர்களிடம் மாமிசங்களைப் பர்வதராசியாய்க் குவித்துக் கொடும் பாவிகளாகிய சீவகோடிகளெல்லாம் நடுங்கத்தக்கதாய்ப் பயமுறுத்திப் பலப்பல விதமாய் நாடோறும் வதை செய்து தர்மராசனுடனே போய்ச் சொல்ல வவராக்கினை செய்தபடி சித்திர புத்திரர்கள் அவர்களிட பாபபலங்களை நேமித்தனுப்ப மறுபடியும் வந்து நரக வேதனை செய்யக் கண்டான் சம்பரன் என்றவாறு. (9)

கொடு - கொண்டு. பெருவாலை - பெரிய ஆலை. கோளகை - அணடகோளகை, அண்டம் - ஆகாயம். நமன் - எமன்.

உரை - ராசி - இராசி - குவியல். நேமித்து - நியமித்து. நாடோறும் - நாள்தோறும்.

பா.வே, - 1 நாரது.

## Cittiraputtirar paṇikaḷ

*vāḷkoṭu vataittuvaḷar tēḷkoṭu kaṭittumaṇi*
*mārpiṉai yuṭaittu varuvōr*
*tālkoṭu tuvaittuperu vālaiyi ṉaraittutacai*
*pōrpaṭa kuvittu taṇiyār*
*kōḷakai veṭikkamoḻi vārkaḷema tūtarkoṭu*
*pāvikaḷ pataikka palapēr*
*nāṭoṟum vataittavarkaḷ cētiyai yuraikkanama*
*nāḷatu kuṟikka varuvār.*

## Cittiraputtirar Duties

Cutting up with swords; getting
Big scorpions to sting; breaking up
The handsome chests; grabbing
The feet of entrants to fling them
Around; grinding them in big mills
And piling up their flesh;
Cursing loudly as if skies had split.
Thus the servants of Yamaṉ
Tortured the souls. Cittiraputtirar
Would come to plan their meeting Yamaṉ
When told about their sins.

(பலவகைப் பாவியர்)

25. தந்தையொடு தாய்குருவி னிந்தனைசெய் வோர்கள்பர
தாரமதை யேம னதினிற்
சிந்தனைசெய் வோர்கொலைகள் தீமைகள்செய் வோர்மனத்தின்
வஞ்சனைசெய் வோர்கள் சிலராஞ்
சந்ததமும் வந்தபெரி யோர்களைத் தலங்களைத்
தவங்களை யிகழ்ந்த சதியோர்
வந்திடு வழக்கினை வழக்கழிவு கூறிமனம்
வாதைபட வேறு மொழிவோர்.

எ-து. தன்னைப் பெற்றுச் சான்றோனாக்கிய தந்தை தாயினையும், ஆன்மாவினைப் புனித பவுத்திரமாய் அருள்கூர்ந்து செய்யாநின்ற ஆசாரியனையும நிந்தனை செய்கின்ற கொடிய பாவியர்களும், பரதாரத்தை விரும்பித் தமது மனத்தினில் நினைக்கின்றதைச செயத செய்கையோ டொததததாகலின் அந்தப் பாவியர்களும், கொலை, களவுகள முதலாகியதை விரும்புகினற பாவியர்களும், கருவினுறற [1]சிசுவினை அழிதத கொடிய பாவியாகளுமு, எப்பொழுதும் வருகின்ற பெரியோர்களாகிய பாகவதர்களை இகழ்ந்த பாவியாகளுமு, மகாபாதகத்தை எல்லாம நீக்கியருள் சுரககாநின்ற தலஙகளை இகழ்ந்த நீசர்களும், யோகிகளையும், தவத்தினர்களையும், இகழதலாகிய சதி செய்கின்ற விழிஞர்களும், தங்களை யடுத்துக் கூறுகின்ற கடன் வாங்கல முதலாகிய பதினெட்டுப் பிரிவினாலே வருகின்ற வழக்குகளை முறை பிறழக்கூறி ஞாயமுள்ளவன் மன நொந்து உருகித் திகிலிட்டுக் கணணீர் பெருகத் தக்கதாகச செய்த பாவியாகளும், அனேகமாகிய தண்டத் தலைவர்களால் தண்டனைக்குட்பட்டு இப்படியாகிய துன்பத்தையடைவார்க ளென்றவாறு (10)

பரதாரம - பிறா மனைவி சந்ததம் - எபபொழுதும சதி - வஞ்சனை வழககழிவுகூறல - வழக்கிறகு நீதியற்ற முடிவு கூறுதல

**உரை** - இழிஞா - கீழமககள அடுத்து - அணுகி பிறிவு - பிரிவு - பகுதி, வேறுபாடு பிறழதல - மாறுபடுதல தணடத்தலைவா - அரசா செயகையோடு ஒத்ததாதலின் எனனும உவமைத் தொடா தேவையறறது

**பா.வே.** - 1 சிசுவின்

## Palavakaip pāviyar

*tantaiyoṭu tāykuruvi nintanaicey vōrkaḷpara*
*tāramatai yēma ṉatiṉir*
*cintaṉaicey vōrkolaikaḷ tīmaikaḷcey vōrmaṉattiṉ*
*vañcaṉaicey vōrkaḷ cilarāñ*
*cantatamum vantaperi yōrkaḷait talaṅkaḷait*
*tavaṅkaḷai yikaḻnta catiyōr*
*vantiṭu vaḻakkiṉai vaḻakkaḻivu kūṟimaṉam*
*vātaipaṭa vēṟu moḻivōr.*

## A Variety of Sinners

There were sinners who had spoken ill
Of mother, father and teacher;
Others who had adulterous thoughts
Always; those who committed murders

And evil action; dissemblers too;
Those who ever spoke viciously
About elders, holy places and austerities;
And the lowly creatures who bore
False witness and brought sorrow
To good people.

(சம்பரன் உருகுதல்)

326. [1]பாசமதில் கட்டிகனல் தூணிலணை கின்றபதி
துரோகிக ளனந்த மருவுந்
தேசமதில் பொய்கொலைகள் கோவினை வதைத்தவர்கள்
செனித்தகரு தன்னை நலிவோர்
வாசமிகு சோலைக ளழிப்பவர் கொடுப்பவரை
மாறுபடச் செய்த வலியோர்
பேசரிய வேதைபடு வார்களென கந்திருவர்
பேசபுகழ் கொண்ட வரசன்.

எ-து எம பாசத்தால் அனேகம் பாவியர்களைக் கட்டி அக்கினி மயமாய்ச் சொலிக்காநின்ற தூண்களிலே யணைத்து தாட்சணியமில்லாமல் தண்டத் தலைவரால் வதைககின்றவர்களும், இந்த தேசத்தினிருக்கின்ற பலவித [2]வறங்களுக்கு மாறுபட்ட செய்கையைச் செய்கின்ற பேர்களும், தன்னுடன் பிறந்த பேர்களுக்குக் கொடாமலுண்ணாநின்றதுரோகிகளும், திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற [3]திருவாராதனைக் கருகமாகிய நந்தன வனச் சோலைகளை அழிக்காநின்ற துட்டர்களும், தனக்கிடுக்கணாகிய காலங்களிலே உதவி செய்கின்ற நன்கினையறியாது புறம்பிலே இகழ்ந்து கூறிய கொடியர்களும் இந்த நரகாக்கினியினாழ்ந்து தண்டத்தலைவர்களால் சொல்லுதற்கரிதாகிய துன்பங்களை அனுபவிக்கின்றார்கள். அவர்கள் இன்னாரின்னாரென்று காந்திருவர் பகுத்துச் சொல்லக் கேட்டறிந்த இராச சூடாமணியாய் விமானத்தின் ஆரோகணிதமா யெழுந்தருளிய சம்பரன் இரங்கினான் இந்த வேதனையைப் பார்க்கச சகியாதவனா யென்றவாறு. (11)

பாசம் - எமபாசக்கயிறு அனந்தம் - அனேகம். மருவுதல் - நிறைதல். கோ - பசு. கரு - கருப்பம ; செனித்தகரு - பிறந்தகுழந்தை (உடன்பிறவி எனக் கொள்வர் உரையாசிரியர்). நலிவோர் - அழிப்போர்.

**உரை** - அருகமாகிய - தகுதியாகிய நன்கினை - நன்மையினை. பிறம்பிலே - வெளியிலே, மறைவிலே. கோடியர் - நடிப்போர், புறம்பேசுவோர்

பாட்டு 325, 326 ஆகியவற்றின் உரைச்செய்திகள் சில மாறிக்கலந்துள்ளன.

பா.வே. - 1. பாசமதில் கட்டிகனல் தூணினில ணைத்துபரி
விஇன்றிவதைக் கினற பலபேர்
தேசமதின் மாறுபடு தீவினைகள் செய்பவர்
செனித்தவர் தமக்கு தவிலார்
வாசமிகு சோலைக ளழிப்பவர் கொடுப்பவரை
மாசுதிகழ் நிந்தனை செய்வோர்
பேசரிய வேதனையில் தண்டனைசெய் வார்களென
கந்திருவர் பேச வரசன்.

2. வர்ணங்களுக்கு. 3. பூசை.

## Camparaṉ urukutal

*pācamatil kaṭṭikaṉal tūṇilaṇai kiṉṟapati*
*turōkika ḷaṉanta maruvun*
*tēcamatil poykolaikaḷ kōviṉai vataittavarkaḷ*
*ceṉittakaru taṉṉai nalivōr*
*vācamiku cōlaika ḷaḻippavar koṭuppavarai*
*mārupaṭac ceyta valiyōr*
*pēcariya vētaipaṭu vārkaḷeṉa kantiruvar*
*pēcapukaḻ koṇṭa varacaṉ.*

## Camparaṉ's Sorrow

Bound by a noose and forced
To embrace flaming pillars,
There were many betrayers;
Others who had spoken lies,
Committed murders, killed cows,
Destroyed foetuses in the womb
And pulled down scented gardens;
And those who were ungrateful.
Such people suffer untold tortures,
Said the Kantiruvar to the king.

(கொடுமைகளைக் கண்ட சம்பரன்)

327. சென்றவுல கத்திடை செனித்திடு மகாரவுர
வாதிமுத லாக சிலர்சூழ்
கின்றநர கத்திடை [1]செனித்திடு புழுக்கள்மச
கத்தொடு மதிற்றி கழவே
நண்டுபெரு ஆமையொடு அட்டைகள் கடித்திட
நலிந்தவுயிர் கோடி களெலாங்
கண்டுமனம் [2]விண்டவரி யென்றுவிரு கண்கள்புனல்
கான்றிட கலங்கி யரசன்.

எ-து. தான் போகா நின்ற உலகமாகிய எமபுரியிலே செனித்திராநின்ற மகாவுரவாதி முதலாகிய நரகத்திலே சில பேர்கள் சூழ்ந்திருக்காநின்ற புழுக்கள், கொசுக்களும் உண்டாக, நண்டுகள், பெருத்த ஆமைகள், அட்டைகளிது முதலானதெல்லாம் அந்த பாபிகளை எல்லாம் கடித்திட, அதனாலே நலிந்திடும் படியாகிய உயிர்கோடிகளை யெல்லாம் சம்பரன் என்கின்ற அசுர சூடாமணியானவன் பார்த்த மாத்திரத்திலே உளங்குலைந்து கண்ணையும் காதினையும் மூடிக்கொண்ட ரிகரியென்று கண்களில் சலங்களை விட்டுப் பிரதாபித்தான் என்றவாறு. (12)

மகாரவுரவம் - மகாரௌரவம் - நரகவகை இருபத்தெட்டினுள் ஒருவகை அவற்றுள் சில - கோரம், கீழக்கோரம், அதிகோரம், சண்டம், மகாசண்டம், அதிதமம், அதிசீதம், அதிவெப்பம் என்பன போன்று மகாரௌரவம் என்பது ஒருவகை நரகம். மசகம் - கொசு.

பா.வே - 1 உதித்திடும் 2 விண்டுவரி

## Koṭumaikaḷaik kaṇṭa camparaṉ

*ceṉṟavula kattiṭai ceṉittiṭu makāravura*
*vātimuta lāka cilarcūḻ*
*kiṉṟanara kattiṭai ceṉittiṭu puḻukkaḷmaca*
*kattoṭu matiṟṟi kaḻavē*
*naṇṭuperu āmaiyoṭu aṭṭaikaḷ kaṭittiṭa*
*nalintavuyir kōṭi kaḷelāṅ*
*kaṇṭumaṉam viṇṭavari yeṉṟuviru kaṇkaḷpuṉal*
*kāṉṟiṭa kalaṅki yaracaṉ.*

## On Watching the Tortures

Camparaṉ felt unhappy in the worlds
Like Makārauravam. Here appeared
Worms and mosquitoes; along with

Crabs, tortoises and leeches,
They bit at the crores of sinners.
Tears streamed from the king's eyes
As his heart grew despondent.

(கொடியவர் சம்பரனிடம் முறையிடுதல்)

328. நரகமிரு பத்தெட்டு கோடியின் வதைந்திட
நலிந்துமனம் விண்டு நமனாற்
பரவிய உயிர்த்தொகை பதைத்துமுறை யோதவரி
பாதமலர் தன்னை மனத்தில்
திரமுட னினைத்துருகி யேதிகழ் இலக்குமியின்
தீர்த்தபல மூன்று திவசம்
வரமதனை [1]யீந்திட மகிழ்ந்தனர்கள் சுவர்க்கவுரு
வந்திட மதித்த வரசன்.

எ-து. இப்படியாகிய எமலோகத்தைச் சுற்றிலும் விளங்குகின்ற கடல் போன்ற நரகமானது இருபத்தெட்டுக் கோடியினும் வதைந்து நலிகின்ற உயிர்க் கோடிகளானவை எம வாதனைகளைச் சகிக்க முடியாதவர்களாய்ச் சம்பரன் வருகின்ற தேசோமயமான காந்தியினைக் கண்டிவராரோ, மகாபுண்ணிய புருஷராக வேண்டுமென்று நினைத்தவருக்கு முறையிட அவர் மனது கலங்கி ஸ்ரீ அரியினுடைய திவ்விய திருவடிகளைத் தன் இருதயகமலத்திலே திரமா நிறுத்தி ஸ்ரீலட்சுமி தீர்த்தத்தில் தான் வாசம் செய்த பலன்களிலே மூன்று நாளைய பலமிந்த நரகவேதனைப் படுகின்ற ஆத்துமகோடிகளுக்குக் கொடுத்தோமென்று நிச்சயித்தவராய் ஸ்ரீ அரங்கநாதனை மனமுருகத் தக்கதாய்த் துதிக்கின்ற சமயத்தில் அவாள் பாவமானது நீங்கித் திவ்விய ரூபங்கள் உண்டாகத்தக்கதாகக் கண்டான் அரசன் என்றவாறு. (13)

வதைதல் - உபத்திரவப்படுதல், பெருந்துன்பமடைதல். எமவாதனை - எமலோகத்திலடையும் வேதனை. யோதவரி - ஓத + அரி. திவசம் - நாள்.

பா.வே. - 1. அளித்திட.

## Koṭiyavar camparaṉiṭam muṟaiyiṭutal

*narakamiru pattettu kōtiyiṉ vataiṅtiṭa*
*nalintumaṉam viṇṭu namaṉāṟ*
*paraviya uyirttokai pataittumuṟai yōtavari*
*pātamalar taṉṉai maṉattil*

*tiramuṭa ṉiṉaitturuki yētikaḷ ilakkumiyiṉ*
*tīrttapala mūṉṟu tivacam.*
*varamataṉai yīntiṭa makiḻntaṉarkaḷ cuvarkkavuru*
*vantiṭa matitta varacaṉ.*

### The Sinners to Campara ṉ

Thus the sinners were tortured
In hells numbering twenty and eight
Crores; with breaking hearts
The lives drawn in by Yamaṉ
Shuddered and cried out for help.
The king who held the Lord's feet
In his heart, was full of pity.
Of the good he had accrued
By his austerities at the Lakṣmi spring,
He gave away the portion of three days.
The sinners were very happy
And gained celestial forms.
The King was delighted.

(சம்பரன் தன்தீர்த்த பலனால் வேதனையை நீக்குதல்)

329. கரந்தனைக் குவித்துதிரு வரங்களைத் துதித்திடர்செய்
காலனைக் கடந்து கதிசேர்
திரங்கமழ் பெரும்புகழ் சிறந்ததிரு நாமமுரை
செய்திட திருக்க ருணையாற்
'சிரங்களை வணங்கிவதி கின்றவுயிர் கோடிகள்
திகழ்ந்தனர்கள் சொர்க்க மதனின்
பரந்தளம தூதர்கள் சிறந்தரச னோடுமுரை
செய்திட பதைத்து மொழிவான்.

எ-து அப்படி அதி சிலாக்கியமாகிய லட்சுமி தீர்த்தத்தினுடைய பலன்களில் மூன்று தினததின் பலன்களைக் கொடுத்த மாத்திரத்திலே நரகவேதனைகளெல்லாம் நீங்கினவர்களாய்

திவ்வியரூபம் விளங்கக் கண்ட சம்பரனானவன் அதிக உற்சாகத்துடனே இரண்டு கராம்புய மலர்களையும் உச்சியிற் கூப்பித் திருவரங்கனுடைய திவ்விய திருநாமங்களாயிரமும் துதி செய்யக் காலனுடைய வாக்கினையினைக் கடந்து கதிசேரத்தக்கதாய்ப் பெரும்புகழ் சிறந்த ஸ்ரீமகா லட்சுமியினுடைய கருணையால் வருத்தத்தையடைந்த ஆத்தும கோடிகளெல்லாம் சிறந்திராநின்ற திவ்விய விமானங்களின் ஆரோகணித்துக் கொண்டு சொர்க்காதி போகத்தைச் சேரக் கண்ட தூதர்களெல்லாம், இதென்ன ஊழிக்காலமென்று ஆர்ப்பரித்து, ஆகாசமார்க்கங்களிலே எழும்பி வாய்வு வேகம் மனோவேகமாய் வந்து தர்மராசனுடைய பாதத்தில் வீழ்ந்து நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் உரைக்கக் கேள்வி செய்த எமதர்ம ராசனானவன் ஒன்றும் தோன்றாமல் பிரமித்தவனாய்ப் பதைபதைத்துக் தமது சயினியங்களைப் பார்த்துக் கூறுகின்றா னென்றவாறு. (14)

கதிசேர்திரம் - பரமகதியடையும் பலன். திருநாமம் - திருவரங்கனின் பெயர்.

பா.வே. - 1. சிரந்தனின்.

## Camparan̲ tan̲ tīrtta palan̲āl vētan̲aiyai nīkkutal

*karantan̲aik kuvittutiru varaṅkan̲ait tutittitarcey*
*kālan̲aik kaṭantu katicēr*
*tiraṅkamaḻ perumpukaḻ cir̲antatiru nāmamurai*
*ceytiṭa tirukka ruṇaiyār̲*
*ciraṅkaḷai van̲aṅkivati kin̲r̲avuyir kōṭikaḷ*
*tikaḻntan̲arkaḷ corkka matan̲in̲*
*parantaema tūtarkaḷ cir̲antaraca nōṭumurai*
*ceytiṭa pataittu moḻivān̲.*

## Camparan̲ Liberates the Sinners

With hands held in salute,
Meditating upon Araṅkan̲,
Going beyond Yaman̲'s aegis,
They now recited the famous names
Of the Lord, and with bowed heads
Felt safe in heaven by the Lord's grace.
The servants of Yaman̲ were shocked
And went forth to complain to Yaman̲.

(பாவிகள் இன்பத்தைக் கண்ட எமன் கோபித்தல்)

330. வியாதிக ளனைத்தையும் விளித்திட வெழுந்தன
வியப்பொடு மகிழ்ந்த றைகுவான்
றயாநிதி பெரும்புக ழுரைத்திடினு மாறுபடத்
தாக்குவது வீர மெனவே
சராசர மதிற்புகழு மெண்டிசை யகண்டவுல
கேழுமெம னால்த ழலதாய்த்
தராதல மதிர்ந்திட வெழுந்தவ [1]னடந்தமயி
டந்தனி பெருத்த வரைபோல்.

எ-து அப்படித் தூதாள் சொல்லக்கேட்ட எமதர்ம ராசனானவன் இரண்டு கண்களும் [2]செவ்வானம் போலச் சிவந்து, தனது சபா மண்டபத்தில் சூழ்ந்து ஏவல் பணிவிடை செய்கின்ற பெரும்புகழாகிய திவ்விய நவசொரங்கள் முதலான நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகள் திகழ்ந்த ரூபத்துடனே இருக்கின்றவர்களை நோக்கிக் கூறுகின்றான்: அந்த தயா நிதியாகிய பரம மூர்த்தியினிட திருநாமங்களை யுரைத்த போதினும் இந்த மகா பாபிகளெல்லாம் சொர்க்காதி போகத்தை யடையத்தகுமோ? இந்தச் சணத்திலே அதை மாற்றி நரக வேதனை அனுபவிக்கும்படி செய்வேனென்று வடவாக்கினி போலக் கோபித்து, நீலகிரிக்குச் சமதையாகிய எருமைக்கிடாவின் பேரிலொரு இமையோற் கிரி பர்வதம் போல வந்தாரோகணித்தான். அந்தச் சமயத்திலே பதினாலு லோகங்களுந் திடுக்கிடத்தக்கதாய் அக்கினி வருஷம் வருஷிக்க, தேவர்களெல்லாம் இதென்ன பிரளைய காலமென்று நடுக்கங்கொள்ளச் சாகரங் கரைபுரளத் தக்கதாய் நடந்தான் எமதர்மராச னென்றவாறு. (15)

தயாநிதி - திருமால அறைதல் - கூறுதல். தராதலம் - பூமி; தரையாகிய இடம். மயிடம் - எருமைக்கிடா

**உரை** - சணம் - கணநேரம். இமையோர் - வானோர்; இமையோற்கிரி பர்வதம் - இமயமலையைக் குறித்தது வருஷம் - மழை

பா.வே. - 1 நடந்தன. 2 செம்மானம் போல.

## Pāvikaḷ iṉpattaik kaṇṭa emaṉ kōpittal

*viyātika ḷaṉaittaiyum viḷittiṭa veḻuntaṉa*
*viyappoṭu makiḻnta ṟaikuvāṉ*
*ṟayāniti perumpuka ḻuraittiṭiṉu māṟupaṭat*
*tākkuvatu vīra meṉavē*
*carācara matiṟpukaḻu meṇṭicai yakaṇṭavula*
*kēḻumema ṉālta ḻalatāyt*
*tarātala matirntiṭa veḻuntava ṉaṭantamayi*
*ṭantaṉi perutta varaipōl.*

## Yamaṉ is Angry

Yamaṉ called out to the many
Sicknesses. They rose in unison
He spoke wondering about it all:
'Though they may recite the Lord's names
It would still be heroism
To attack and punish them'.
Riding the enormous, mountainous
Buffalo, he proceeded,
Making the earth shudder,
Since due to his sojourn
There poured a fire on the vasts
Of the fourteen worlds of the universe.

(எமன் மூர்ச்சித்தல்)

331. தண்டமழு சூலமரி கண்டம்எம பாசமொடு
கொண்டுதண லாகி வருவோ
ரண்டமு நடுங்கதிசை யானைகுரு திச்சொரிய
அகிலவுல கெங்கு மசையக்
[1]கண்டபெரு சேனையொடு சென்றவெமன் நின்றிட
[2]களைந்துட னிளைத்த மயிடம்
[3]நின்றதென வென்றுநடை கொண்டவெதிர் சென்றவரை
கண்டுமொழி கின்ற னனரோ.

எ-து. இப்படி அனேக சயினியங்களுடனே நடக்கின்ற எமதர்ம ராசனானவன் தெண்டாயுதம், திரிசூலம், கண்டகோடரி, இருப்புலக்கை, எமபாசம் முதலாகிய ஆயுதச் சவரணைகளுடன் வடவாக்கினிக்குச் சமதையாகிய கோபாக்கினி பிரவேசித்து வருகின்ற சமயத்தின் அண்டங்களெல்லாம் நடுநடுங்கத் திசைகளைத் தாங்கப்பட்ட யானைகளானவை உதிரங்களைக் கக்கிக் கொள்ளச் சாகரத்தின் மிதக்கின்ற தெப்பலைப்போலப் பூமியானது அசைந்தாடத் தக்கதாய் அந்தச் சேனாசமுத்திரங்களுடனே நடக்கின்ற எமனானவன் களை கொண்டு மூர்ச்சித்துப் பூமியின் கண்ணிலே சாயவும், கடாவானது திகைத்து நடவாமல் நின்று விடவும், இப்படி யிராநின்ற சமயத்தில் யூகித்து இது அந்த ஸ்ரீமன் நாராயணனுடைய பிரபாவமென்று தெரிந்து கொண்டவனாய், அவரெதிராக நடந்து அவரை ஆலிங்கனம் செய்து நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் சொல்லத் தெளிந்தார்கள் என்றவாறு. (16)

தணல - தழல், தீ. குருதி - இரத்தம். மயிடம் - எருமை.

**உரை** - பிரபாவம் - மகிமை. சவரணை - ஆயத்தம்.

பா.வே. - 1 நின்ற. 2. நிலைத்தில களைத்த மயிடங். 3. கண்டனன் வெயர்த்தன னுயிர்த்தனன் களித்திடுநல் சம்பரனைக் கண்டு மொழியான்.

## Emaṉ mūrccittal

*taṇṭamaḻu cūlamari kaṇṭamema pācamoṭu*
*koṇṭutaṉa lāki varuvō*
*raṇṭamu naṭuṅkaticai yāṉaikuru ticcoriya*
*akilavula keṅku macaiyak*
*kaṇṭaperu cēṉaiyoṭu ceṉṟavemaṉ niṉṟiṭa*
*kaḷaintuṭa ṉiḷaitta mayiṭam*
*niṉṟateṉa veṉṟunaṭai koṇṭavetir ceṉṟavarai*
*kaṇṭumoḻi kiṉṟa ṉaṉarō.*

## Yamaṉ in a Swoon

Carrying the cane, the axe, the trident,
Iron grate and the noose,
He proceeded like blazing coals.
The universe shuddered while the elephants
Of the directions spewed blood.
The entire earth swayed.
As Yamaṉ went with a large army
He swooned while the buffalo
Stood rooted to the spot.
Then recognising it to be
The play of the Divine,
He went to the Lord and spoke:

(எமன் தன் கடமையைக் கூறுதல்)

332. ஆதிபர னேவலடி யேன்புரித லாலுலகி
னன்பொடு அரங்க னருள்சேர்
நீதிநெறி யோரையொரு போதுமெம வாதனை
நிகழ்த்திடுவ னோகொ டியராய்

**வேதனைசெய் வோர்கடனை வாதனைசெய் தேநரகின்**
**வெம்பிட வடைந்த வுயிர்கள்**
**சோதிதிரு நாமமுறை யோதிட வடைந்தனர்கள்**
**செய்வதென யான ருளுவீர்.**

எ-து. பின்னும் அந்த எமதர்மராசன் கூறுகின்றான்: வாரீர் இராசசேகரனே! ஆதிபரப்பிரம்ம சொரூபியாகிய ஸ்ரீமன் நாராயணனுடைய அனுக்கிரகப்படி ஏவல் பணி விடைசெய்கின்ற வடியேன் அந்தப் பொன்னரங்கரிட திவ்விய திருநாமங்களைத் துதிசெய்கின்ற பாகவதர்களை அடுப்பதில்லை. யான் நீதி நெறி யன்றி மகா பாபிகளாயும், கோபிகளாயும் கொடூரிகளாயும் செய்கின்ற கொடிய பாபியர்களை வதைபுரிந்து நரக வேதனை செய்கின்ற அனந்தமான ஆத்தும கோடிகள் சோதி சொரூபனாகிய திவ்விய திருநாமங்களைத் துதி செய்யப் புண்ணிய லோகத்தை அடைந்தார்களாகையால் அடியேன் செய்ய வேண்டியதென்ன? நீரறியாத தர்மங்களை நாமென்ன சொல்லப் போகிறோமென்றார் தர்மராசன் என்றவாறு. (17)

செய்வோர்கடனை - செய்வோர்கள்தனை வெம்புதல - கலங்குதல், வாடுதல்.

**உரை** - பாகவதர் - திருமால் அடியவர். அடுத்தல் - நெருங்குதல். கொடூரி - கொடியவர்.

**பா.வே.**- 1. வேதனை செய்வோர்கள் தமை.

## Eman̲ tan̲ kaṭamaiyaik kūr̲utal

*ātipara n̲ēvalaṭi yēn̲purita lālulaki*
*nan̲poṭu araṅka n̲aruḷcēr*
*nītiner̲i yōraiyoru pōtumema vātan̲ai*
*nikaḻttiṭuva n̲ōko ṭiyarāy*
*vētan̲aicey vōrkaṭan̲ai vātan̲aicey tēnarakin̲*
*vempiṭa vaṭainta vuyirkaḷ*
*cōtitiru nāmamur̲ai yōtiṭa vaṭaintan̲arkaḷ*
*ceyvaten̲a yān̲a ruḷuvīr.*

## Yaman̲ on his Duty

'Primal One! I am your serviteur
And do my work. Those who gain
Araṅkan̲'s grace, and are righteous,
Shall I put them to hell's tortures?
But the evil ones who were tortured
And placed in hell have reached

Heaven, by reciting your holy name.
What should I do now?
Kindly let me know.'

(சம்பரன் கோலவரை சேர்தல்)

333. என்றுபுகழ் கின்றஎம ராசனுரை கேட்டரசன்
ஏகவிரு வோரு மகிழ்வாய்ச்
சென்றுதிகழ் சொர்க்கமதைக் கண்டவர்கள் போகமது
துய்த்தன ரரங்க னருளால்
அன்றுநெடு மால்கமல வுந்தியி னுதித்தஅய
னடியிணை பணிந்து வருள்சேர்
[1]நின்றுமணி கோலவரை சென்றுதிரு மாலடி
யடைந்தன [2]னிறைந்த வருளால்.

எ-து. இப்படியாக எமதர்மராசனானவன் சொல்லக் கேள்விசெய்த இராசசேகரனானவன் மனங்கொள்ளாத சந்தோஷாதிகளை யடைந்து, தமது இரதத்தின் பேரினிரண்டு திறவரு மாரோகணிதராய்ச் சொர்க்க லோகத்தைச் சேர்ந்தங்குள்ள பாக்கியங்களைக் கண்டு அதிசயித்திந்த போகங்களெல்லாம் ஸ்ரீமன் நாராயணனுடைய அனுக்கிரகமென்று நிச்சயித்துப் பின்னும் மேலாகிய சத்திய லோகத்தில் வசிக்கின்ற உந்திக் கமலத்தின் உதித்த பிரமதேவரைக் கண்டு துதித்து, அங்குள்ள வைபவங்களையெல்லாம் கண்டு ஆனந்தத்தை அடைந்த அனுக்கிரகத்தினாலே கோலாசலத்தைச் சேர்ந்து அனந்த விமான சேகரர் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்க நாயகரிட திவ்விய திருவடிக் கமலங்களிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்துச் சரணமாக அடைந்தான் சம்பரன் என்றவாறு. (18)

ஏகுதல் - செல்லுதல். திறவர் - வலியவர்.

பா.வே. - 1. நின்றுதிகழ். 2. திகழ்ந்த.

## Camparaṉ kōlavarai cērtal

*eṉṟupukaḻ kiṉṟaema rācaṉurai kēṭṭaracaṉ*
*ēkaviru vōru makiḻvāyc*
*ceṉṟutikaḻ corkkamataik kaṇṭavarkaḷ pōkamatu*
*tuyttaṉa raraṅka ṉaruḷāl*
*aṉṟuneṭu mālkamala vuntiyi ṉutittaaya*
*ṉaṭiyiṇai paṇintu varuḷcēr*
*niṉṟumaṇi kōlavarai ceṉṟutiru mālaṭi*
*yaṭaintaṉa ṉiṟainta varuḷāl.*

## Camparaṉ Reaches Kōla Hill

The king heard the words of Yamaṉ
Who praised thus. He was happy
And together they went and watched
Heaven and realised that all this joy
Was due to Araṅkaṉ's grace.
Saluting the feet of Piramaṉ
Who was born in the lotus
Of the Lord's navel long ago,
The king went to Kōla Hill
And surrendered to the feet of the Lord.

வேறு

(சம்பரன் கோலவரையின் மகிமை கூறுதல்)

334. திருவுமா மணியு மாரமு மணிந்து
செய்யதா மரைபல பூத்து
மருவிய சங்குந் திகிரியு மணிந்து
மலரடி யினினதி பெருக
ஒருவரால் [1]பெருமை யியம்புதற் கரிதா
[2]யோங்கிய வித்தலப் புகழைப்
[3]பெருகிய புவியோர் புகன்றிட உமது
பெருங்கதி பெறவருள் புரிவாய்.

எ-து. திருமார்பினில் ஸ்ரீமகாலட்சுமி தேவியும், கவுத்துவாபரணமும், விளங்கிப் பிரகாசிக்கவும் திவ்விய திருமேனிகளானவை செந்தாமரை புஷ்பித்து நிறைந்திருக்கின்றதுபோலத் தோன்றிய வடிவழகும், இரண்டு கராம்புயமலரில் தாங்கிய சங்கு சக்கரங் கடகஞ் சாரங்கமென்கின்ற பஞ்சாயுதம் சேர்ந்திலங்கும் கார்போன்ற மேகத்தினையொத்த உமது கமலம் போன்ற திருவடிகளின் கங்கையானவள் பெருகிய பெரும்புகழினை இந்தப் பதினாலு லோகங்களினும் சொல்லுதற்கரிதாகிய அனந்த கல்யாண சுபகுணங்களை அடியே னின்னபடியென் றறிகிலேன். இந்தச் சேத்திரத்தில் வாசம் செய்த பலப்பிரையோசனத்தினாலே ஓங்கிய பெரும் புறக்கடல் போன்ற நரகத்தின் வேதனைப் படுகின்ற ஆத்தும கோடிகளெல்லாம் புண்ணிய லோகத்தை அடைந்தார்கள்.ஆகையால்

இந்தப் பூமண்டலங்களின் வசிக்காநின்ற சீவான்மாக்களிந்தப் புண்ணிய சேத்திரத்தில் வாசம் செய்கின்ற பேர்களும், இந்தக் கோலாசலத்தை நினைத்த பேர்களும், இந்தக் கதாப்பிரசங்கத்தைப் படித்த பேர்களும், கேள்வி செய்த பேர்களும் சகல பாபங்களினின்றும் விடுபட்டுச் சீவன் முத்தர்களாய்ச் சொர்க்காதி போகங்களை அனுபவித்து அது திவ்விய லோகத்தைச் சேரும்படி வரந்தர வேண்டுமென்றான் சம்பரன் என்றவாறு. (19)

திரு - இலக்குமி. மாமணி - துளசிமணி மலரடியினினதி - மலரடியினில் நதி.

பா.வே.- 1. கீர்த்தி. 2. வோங்கிய புகழையா ருரைப்பா. 3 ரரிதிரு நாம முறைத்திட நரகோ ரடைந்தனர் சுவர்க்கமென் றுரைத்தான்

## *Vēṟu*

## *Camparaṉ kōlavaraiyiṉ makimai kūṟutal*

*tiruvumā maṇiyu māramu maṇintu*
*ceyyatā maraipala pūttu*
*maruviya caṅkun tikiriyu maṇintu*
*malaraṭi yiṉiṉati peruka*
*oruvarāl perumai yiyamputaṟ karitā*
*yōṅkiya vittalap pukaḻaip*
*perukiya puviyōr pukaṉṟiṭa umatu*
*peruṅkati peṟavaruḷ purivāy.*

## Camparaṉ on the Greatness of Kōla Hill

With the Goddess of Wealth on the chest
And kausthubha gem and garlands,
An image as if several lotuses had bloomed,
Holding the lovely conch and the discus
And the *Kaṅkai* flowing from your feet,
This greatness of your form
Is beyond description by anybody.
Do grant realisation for the devotees
Who praise this Kōla Hill.

(அரங்கன் சம்பரனுக்கு அருளுதல்)

335. அரசனிவ் வாறங் கறைந்திட விமலன்
அருள்புரிந் தடியினை யளித்தான்
திரமதாய் விளங்குந் தென்றிசை முதல்வன்
தீர்த்தமு மமைத்துபாற் கடல்போற்
பரவிய அனந்த சயனமீ தமர்ந்த
பரமனைத் துதித்துபன் மறையான்
வரநதி பெருகு மலரடி யதனின்
வரையெனத் தாழ்ந்தடி பணிந்தான்.

எ-து அரசனாகிய சம்பரனானவன இப்படி சகல ஆததும கோடிகளுக்கும் உபகாரமாக விண்ணபபம் செய்ய, அமலனாகிய ஸ்ரீ அரங்கநாதர் கிருபைகூர்ந் தவன்மனதின்படி அனுக்கிரகம் செய்து பின்னும் அந்தச சோமுகனுடனே தமது திருவடி வாரங்களிலே என்றும் பிரியாமல் வசிக்குமபடியாக அருளிச் செயதார் அந்தச் சமயததில் என்றும் திறமாக விளங்குகின்ற தென்திசை அரசனாகிய எமதாம ராசனானவன் அதிசிலாக்கியமாகிய கோலாசலத்தின் எனறுமதனதுபேர் விளங்கத் தக்கதாய்த தெக்கணததி னொருபாகமமைததுத திருப்பாற கடலின மத்தியில பரவிய அனந்தசயன பீடத்தின் எழுந்தருளியதுபோல விளஙகிப் பிரகாசிக்கினற பரம மூர்த்தியைப் பலபல மறைவிதியினாலே துதித்துவரநதியாகிய கங்கை பெருகிய திவ்விய திருவடிக் கமலத்தினொரு மகமேருவுக்குச சமதையாகப் பணிந்தான் எமதர்மராச னென்றவாறு (20)

அனந்தசயனம் - ஆதிசேடனாகிய படுககை; திருமாலின படுக்கை

## Araṅkaṉ Camparaṉukku aruḷutal

*aracaṉiv vāraṅ karaintiṭa vimalaṉ*
*aruḷpurin taṭiyiṉai yaḷittāṉ*
*tiramatāy viḷaṅkun teṉṟicai mutalvaṉ*
*tīrttamu mamaittupāṟ kaṭalpōṟ*
*paraviya aṉanta cayaṉamī tamarnta*
*paramaṉait tutittupaṉ maṟaiyāṉ*
*varanati peruku malaraṭi yataṉin*
*varaiyeṉat tāḻntaṭi paṇintāṉ.*

## Araṅkaṉ grants Boon to Camparaṉ

As the king spoke thus, the Pure One
Granted grace and allowed the king

To live always at his feet with Cōmukaṉ.
Yamaṉ then praised with Vēdic rituals
The Supreme who rested on the Anantha
And slauted like a *Mēru* Mountain
The feet from where springs the *Kaṅkai.*

(எமன் அரங்கனை வேண்டுதல்)

336. நீதிசேர் திகிரி யளித்தநற் புகழால்
நிலைபெறு மரசென நிகழ்த்த
ஆதியா முமதின் னருளினால் நரகோ
ரடைந்தனர் சொர்க்கமா தலினால்
ஓதிய உனதின் னூழியப் பணிக
ளொழிந்திட உயர்பத மடைந்துன்
நீதிலா தெழுந்த கோலமால் வரையின்
சிறந்திடத் திருவருள் புரிவாய்.

எ-து. அப்படியாகப் பணிந்த எமதர்மராசனானவன் விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் மகானுபாவரே! இந்தச் சாகரம் சூழ்ந்த பூமண்டலங்களில் ஆத்தும கோடிகள் செய்கின்ற பர புண்ணியங்களை நீதியுடனே நடாத்துகின்ற சக்கரம் அளித்த புகழினால், அடியேன் நிலை தவறாமல் நிச்சயித்து, நரக வேதனைப்படுகின்ற கொடூரமாகிய பாபிகளெல்லாம் ஆதிமூலமாகிய உமதருளினால் சொர்க்காதி போகங்களை அடைந்தார்கள். தேவரீர் நேமித்த ஊழியப் பணிகளானவை இன்றோடே ஒழிந்துவிட்டன ஆகையால், வேதங்களினாலும் காணப்படாத திவ்விய திருவடியினை அடைந்தேன், அதிசிலாக்கியமாகிய இந்தக் கோலாசலத்தில் என்றும் வாசம் செய்யும்படி அருள்புரிய வேண்டுமென்றான் தர்மராசன் என்றவாறு. (21)

## Emaṉ Araṅkaṉai vēṇṭutal

*nīticēr tikiri yaḷittanaṟ pukaḻāl*
*nilaipeṟu maracena nikaḻtta*
*ātiyā mumatiṉ ṉaruḷiṉāl narakō*
*raṭaintaṉār corkkamā taliṉāl*
*ōtiya uṉatiṉ ṉūḻiyap paṇika*
*ḷoḻintiṭa uyarpata maṭaintuṉ*
*nītilā teḻunta kōlamāl varaiyiṉ*
*ciṟantiṭat tiruvaruḷ purivāy.*

## Yamaṉ Prays to Araṅkaṉ

"Thanks to the fame emblazoned
By the righteous discus,
I have been king by your grace.
By the grace granted by you
The sinners have reached the heavens.
Thus the duties imposed by you
Have been cancelled.
I have also reached your feet.
Do grant me the boon to live always
Here in this blameless Kōla Hill.

(எமனுக்குக் கட்டளையிடுதல்)

337. தருவென வளர்செந் தாமரைக் கண்ணன்
தளிர்திருப் பவளவா யலர்ந்து
திருவரு ளதனால் தீவினை யகன்று
சிறந்திடும் சொர்க்கமா தலினால்
வருபெருஞ் செல்வ மாநிலத் தவர்க்கு
மாமுனி வரர்க்கும்வா னவர்க்குந்
தருமமே யுருவாய் விளங்கிய வரசே
சஞ்சல மகற்றெனச் சார்ந்தான்.

எ-து. இப்படியாக மனது தளர்ச்சியினை அடைந்து விண்ணப்பம் செய்கின்ற எமதர்ம ராசனை நோக்கிக் கற்பகதாருவையொத்த கருணாநிதி பெருகிய செந்தாமரைக் கண்ணனானவர் திருப்பவள வாயலர்ந் தருளிச்செய்கின்றவராய், தர்மராசனே! திருவாகிய ஸ்ரீமகாலட்சுமியினுடைய கிருபா நோக்கத்தினாலே சகல பாபங்களினின்றும் விடுபட்டுச் சொர்க்காதி போகத்தை அனுபவிப்பார்கள் ஆகையால் இந்தப் பதினாலு லோகங்களிலும் வதிகின்ற தேவர்கள், மகாரிஷிகள், மானிடர்கள் யாவரும் மிகுதியாகிய செல்வத்தினை யடைவார்கள். நீரோவென்றால் தருமமே உருவாய் விளங்குகின்ற உமக்குப் பிரகிருத மனுஷாளைப்போல இந்தச் சஞ்சலமான விவேகம் செனிக்க லாகுமோ? அதை நீக்கி உமதரசினைச் செலுத்தக் கடவீர் என்றருளிச் செய்த ஸ்ரீ அரங்கநாதருடைய திவ்விய கமலம்போன்ற திருவடிகளிலே பணிந்து தென்றிசை நோக்கி நடந்தான் தருமராசன் என்றவாறு.

தரு - கற்பகதரு. வாயலர்தல் - திருவாய் மலர்தல்; வாய்திறத்தல். சஞ்சலம் - மனக்கவலை.

உரை - பிரகிருத மனுஷாள் - உண்டாக்கப்பட்ட உயிர்கள், இக்கால உயிர்கள். சஞ்சலமானீ விவேகம் - உறுதியில்லாத அறிவு.

**சம்பரன் சரணாகதி அத்தியாயம் முற்றிற்று.**

## Emaṉukkuk kaṭṭaḷaiyiṭutal

*taruveṉa vaḷarcen tāmaraik kaṇṇaṉ*
*taḷirtirup pavaḷavā yalarntu*
*tiruvaru ḷataṉāl tīviṉai yakaṉṟu*
*ciṟantiṭum corkkamā taliṉāl*
*varuperuñ celva māṉilat tavarkku*
*māmuṉi vararkkumvā ṉavarkkun*
*tarumamē yuruvāy viḷaṅkiya varacē*
*cañcala maṟṟeṉac cārntāṉ.*

## Command to Yamaṉ

The Lord tall as the Wish-yielding
Tree and with eyes like red lotuses,
Opened his coral lips to speak:
"By divine compassion
All the denizens of the earth,
Sages and celestials
Will gain the joy of heaven
After being released from their sins.
You are incarnate Dharma.
Do not worry any more."

## 18. பதினான்காவது
## மார்க்கண்டேயர் சரணாகதி அத்தியாயம்

ஒப்பற்ற பரப்பிரமமான திருமாலின் மணிவயிற்றில் திரிபுவனங்களைக் கண்டு வியப்புற்ற மார்க்கண்டமுனிவரானவர் செபமாலிகையும் கமண்டலமும் ஊர்த்துவ புண்டரமும் விளங்க வந்து தோன்றினார். தோன்றிய அவர் நாராயண மூர்த்தியைத தொழுது, அருளே வடிவாகிய ஐயனே! இவ்வுலகங்களை எல்லாம் உண்டாக்கி ஆலிலையிலே பள்ளிகொண்ட உமது திறனை யாராலும் அறிந்து கூறமுடியாது பிரமன முதலாகிய தேவாகள் உமது ஏவலைச செய்து புனிதராகிறார்கள். உலகினகண உள்ள மன்னர்கள் எல்லாம் உமது அருளாலே நீதி செலுத்துகிறார்கள் யானும் உமது திருவடிகளைத தொழுதேன அருள்புரியுங்கள் என்று வேண்டினார்.

அரங்கநாயகர் உமது வருகைக்குக் காரணமெனனவென்று வினவினார். மகாப்பிரளயகாலத்தில் கடலில் மூழ்கிய கலத்தைப்போல அலைப்புண்ட அடியேன தமியனாகி வருந்தினேன் வெகுகாலத்திற்குப்பின அதிக தூரததிலே ஒரு சோதியைக கண்டு அங்கு நெருங்கினேன். அஙகு நீண்ட ஆலவிருட்சம் ஒனறினைக கண்டேன் அதன் ஒரு இலையிலே அழகிய வடிவமுடைய ஒரு குழந்தையானது ஒளி மிகக ஆபரணங்களோடு விளங்கியது. அககுழந்தையின் திருவாய் மலரானது தனது திருவடியின் விரலைச் சுவைததுக் கொண்டிருந்தது. அக்குழநதையின் அருகிலே செனறு நீவிர் யாவர் என்று வினவினேன். மகாப்பிரளய காலத்தில் வடவால மரத்தின் இலையில் துயின்ற நாராயண மூர்த்தியே யாமாவோம் அக்காலத்து பிரம்மா, சிவன் முதலாகிய தேவர்கள் எம் மணிவயிற்றிலே அடங்க யாம் ஒருவரே நித்தியராய இருக்கின்றோம் எனறு கூறியது அக்குழநதை. பிரளயகாலத்தில் அவ்வாறு லீலைசெய்ததன காரணத்தை அடியேனுக்குக் கூறியருள வேணடும் என்று வேண்டினேன். அதறகு அக்குழந்தை கூறியதாவது நமது லீலையினால் இன்னும் சிறிது காலததில நமது நதியில் ஆயிரத்தெட்டு இதழினை உடைய செந்தாமரை மலர் ஒன்று தோன்றும். அதில் வேதங்களை நன்கு உணர்ந்த பிரமதேவன் தோன்றுவார். அவருக்கு அன்ன வடிவாய் நான்கு வேதங்களையும் அருளிச்செய்வோம். பிறகுயாம் வைகுந்தத்தை அடைய, பிரமன் இந்த உலகத்தை வகுப்பார் என்று கூறிவிட்டு என்னைப் பார்த்து, நீர் இந்த ஊழிக்காலத்து மிகுந்த துன்பத்தை அடைந்தீர், எமது திருவாய மலரிலே புகுந்து சுகத்தையடைவீர் என்று கூறித் தம் திருவாயினை மலர்ந்தது அக்குழந்தை அடியேன் அவவாறே பிரவேசித்தேன் சிவன், பிரமன, இந்திரன் முதலாகிய தேவர்கள் முதல் அகில உலகமும், ஏழுவகையான மலைகளும் கடல்களும் அங்கே நிறைந்திருக்கக் கண்டேன். சந்திரன முதலாகிய நட்சத்திரங்கள், அட்டவசுக்கள், முனிவாகள், சிததர்கள், உருத்திரர் போனறவர்களையும் கண்டு வியப்புற்ற நான் மீண்டும் வரும் வகையறியாது வெகுகாலம் அலைந்தேன். இறுதியாகத் திருப்பாறகடலிலே மகாலட்சுமி தேவியோடு வீற்றிருந்த தேவரீரைக் கண்டேன். என்னுடைய விருத்தாந்தங்களைத் தங்களிடத்திலே

முறையிட்டேன். அடியேன் மீது இரக்கம் கொண்ட தாங்கள், இந்த நிலவுலகத்திலே மிகவும் புண்ணிய சேத்திரமாய் விளங்குவதும், சத்தியவிரதம் என்னும் பெயரை உடையதுமாகிச் காஞ்சிமண்டலத்துக்குத் தெற்கே ஐந்து காததூரத்தில் கோலாசலம் என்ற புண்ணிய மலை ஒன்று உள்ளது; அங்குச் சென்று தவம் புரிந்தால் உமது திட்டம் நிறைவேறும் என்று அருள் புரிந்தீர்கள். அன்றுமுதல் அடியேன் இங்குத் தவம்புரிந்து வருகின்றேன் என்று கூறினார் மார்க்கண்டேயர். ஆனந்தமுற்ற திருவரங்க நாயகர் மார்க்கண்டேயருக்குத் தன் சுயவடிவினைக்காட்டி அருள்புரிந்தார்.

**(மார்க்கண்ட முனிவர் தோற்றம்)**

338. மலரி னார்பிரமர் முதல அண்டமு
மளித்த ழிக்குமொரு பரமனார்
உலைவி லாவுதர மூட னைத்தையு
முவந்து கண்டமார்க் கண்டனார்
விலையி லாதசெப மாலை குண்டிகை
விளங்கு நன்னுதலில் புண்டரம்
அலைவி லாதபிர ணவமு நாவினி
லுரைத்து வந்தவன் மதித்தனன்.

எ-து தாமரைக்கமல பீடத்திலே நிறைந்து வாசம் பண்ணுகின்ற பிதாமகன் முதலாகிய அண்டங்களை உண்டாக்கி ரக்ஷித்து மீட்டுந் தன்னுள் ஒடுக்கிய ஒப்பற்ற பரப்பிரமமானவருடைய மணிவயிற்றிலே திரிபுவன சராசரங்களும் கண்டு அதிசயித்த மார்க்கண்ட விருடியானவர் விலைமதிக்கக் கூடாததாகிய செபமாலிகையும், குண்டிகையாகிய கமண்டலமும், பிரகாசிக்கா நின்ற நெற்றியில் தரித்த [1]ஊர்த்துவ புண்டரமும் ஒரு காலத்தும் லயமில்லாத மந்திர சாலங்களுக்கெல்லாம் உயிராகிய பிரண்வமான மகா மந்திரத்தை உச்சரிக்காநின்ற மணிநாவுடனே வந்து மதித்துப் பார்த்து ஆனந்த வைபவத்தை அடைந்தா ரென்றவாறு (1)

உலைவிலா உதரமூடு - அழிவு இல்லாத வயிற்றில்; உதரம் - வயிறு. ஊடு - இடம். உள் புண்டரம - நெற்றிக்குறி. திருமண். லயமிலலாத - அழிவில்லாத - இலயம் - அழிவு

பா.வே. - 1 திரிபுண்டரமு

**Mārkkaṇṭa muṉivar tōṟṟam**

*malari ṉārpiramar mutala aṇṭamu*
*maḷitta ḻikkumoru paramaṉār*
*ulaivi lāvutara mūṭa ṉaittaiyu*
*muvantu kaṇṭamārk kaṇṭaṉār*

*vilaiyi lātacepa mālai kuṇṭikai*
*viḷaṅku naṉṉutalil puṇṭaram*
*alaivi lātapira ṇavamu nāviṉi*
*luraittu vantavaṉ matittaṉaṉ.*

## XVIII. Mārkkaṇṭēyar's Surrender

### The Sage Mārkkaṇṭēyar

The Supreme who creates the universes
Starting with the lotus-born Piramaṉ,
And ends it all as well
By placing everything within himself,
Was gazed at by Mārkkaṇṭēyar with wonder;
The sage carried a priceless garland
For meditation, and a pot.
On his handsome forehead
Vertical streaks[1] of holiness;
His lips repeated the life-sustaining
Pranava[2] sound, as he worshipped.

(நாரணனை வணங்குதல்)

339. வந்த மாதவனு முந்து [1]மோருவகை
யுந்த மாதவ னடித்தலஞ்
சொந்த மாமெனப் [2]பணிந்த டிதொழுந்
தோறு மாஉவகை தூண்டவு
மெந்தை யேயடிய னுய்ந்த நாளிதுகொ
லென்று கண்களி னிரும்புனற்
சிந்த மெய்ப்புளக மனந்த மேறவிவை
செப்பி நற்புகழ் துதிப்பனால்.

---

1. Vertical streaks are the tiruman sign worn by the devotees of Viṣṇu.
2. The sound OM.

எ-து. இத்தன்மைத்தாய் வந்தருளிய, மகா தவசிரேட்டபுனித பவுத்திரராகிய மார்க்கண்ட முனிவரானவர் நாராயணமூர்த்தியைத் தரிசிக்குந்தோறும் முதன்மையாகிய சந்தோடமானது பிடரியைப் பிடித்துத் தள்ள மாதவனது பாத கமலங்களைச் சொந்தமாகிய ஞான திரவியமாய் அடிக்கடி வீழ்ந்து தெண்டன் சமர்ப்பித்தெழுந்து, திவ்விய, நித்திய கலியாணகுண விபூதி விக்கிரக சொரூபத்தைத் தொழுந்தோறும் நிறைந்த அற்புத ஆனந்தப் புளகம் அரும்பத்தக்கதாகக் கூறுகின்றார், என் தந்தையே அடியேனாகிய உமது வழித்தொண்டனானவன் உய்ந்து பிழைத்த நாளின்னாளாய்த் தெளிந்தேன் என்று கண்களிலே ஆனந்தம் பெருகத் துதிக்கத் தொடங்கினா ரென்றவாறு (2)

அடித்தலம் - திருவடி. உந்துதல் - செலுத்துதல், தள்ளுதல். இரும்புனல் - ஆனந்தக் கண்ணீர் புளகம் - மகிழ்ச்சி, மயிர்க்கூச்செறிதல்

பா.வே. - 1 பேருவகை 2. விழுந்தெழுந்து.

## Nāraṇaṉai vaṇaṅkutal

*vanta mātavaṉu muntu mōruvakai*
*yunta mātava naṭittalañ*
*conta māmeṉap paṇinta ṭitoḻun*
*tōṟu māuvakai tūṇṭavu*
*mentai yēyaṭiya ṉuynta nāḷituko*
*leṉṟu kaṇkaḷi ṉirumpuṉaṟ*
*cinta meyppuḷaka maṉanta mēṟavivai*
*ceppi naṟpukaḻ tutippaṉāl.*

## Saluting Nārāyaṇaṉ

The sage approached. Impelled by joy
He saluted the Lord's feet
Which was treasure unto him.
A great happiness enveloped him.
"My father! I am blessed today."
Tears streamed forth from his eyes,
His body horripilated as he uttered
These words with worshipful reverence.

(திருவடியைப் போற்றுதல்)

340. ஆலி லைக்குணடு வேலை யிற்றுயிலு
மாறு மாவுல களித்துமே
நாலு மாமுகனொ டண்ட மியாவுமுயர்
நக்க னோடுமரு மாமறைச்
சால நீடுபரி பால னம்புரிசெய்
தன்மை யாவர்க ளுரைப்பவர்
நீல மேகவுயர் பாத மாமல
ரெனக்கு நீடுணைய தாகுமே.

எ-து. அருளே வடிவாகிய மெஞ்ஞான சாந்தத் தத்துவ சொரூபமாகிய ஆலிலையிலேயும்· நித்திய மங்கள சொரூபமாகிய திருப்பாற்கடல் நடுப் பிரதேசத்தில் அனந்த விமானத்தின் யோக நித்திரை செய்ததுபோல உலகத்தை யளித்ததுவும் அன்றி மேலும் நான்கு திருமுகத்தினையுடைய பிரம்மாவுடனே அண்ட பகிரண்ட சராசரங்களையும், உயர்ந்த சிவனையும் வேதத்தையும் உதவிப் பரிபாலனம் செய்த தன்மையாகிய லீலாவிபூதியை யாவர் அறிந்து கூறுவார்கள். நீருண்ட காளமேகம்போன்ற உருவத்தினையுடைய நாராயண மூர்த்தியே உனது திருவடிக்கமலமே எனக்கு நீண்ட துணை என்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (3)

ஆலிலைக்குணடு வேலையில் - ஆலிலைக்குள் நடுவேலையில் - வேலை - கடல். நக்கன் - சிவபெருமான். மறை - வேதம். நீடுணை - நீள் + துணை - நீண்டதுணை, நீங்காத துணை

உரை - லீலாவிபூதி - அன்புவிளையாடற்பண்பு.

## Tiruvaṭiyaip pōṟṟutal

*āli laikkuṇaṭu vēlai yiṟṟuyilu*
*māṟu māvula kaḷittumē*
*nālu māmukaṉo ṭaṇṭa miyāvumuyar*
*nakka ṉōṭumaru māmaṟaic*
*cāla nīṭupari pāla ṉampuricey*
*taṉmai yāvarka ḷuraippavar*
*nīla mēkavuyar pāta māmala*
*reṉakku nīṭuṇaiya tākumē.*

## Saluting the Feet

"Sleeping on a banyan leaf
In the middle of the sea,
And creating the worlds including
The four-faced Piramaṉ, Civaṉ.
And the Vēdās, you sustain all.
Who can describe your divine play?
O cloud-hued! Your auspicious feet
Is the flower that will guard me ever."

(திருவடி வணக்கம்)

341. ஓது மாமறைகள் வேத னோடரனு
முரிய தேவருநின் னேவல்செய்
பாத மாமலர் பணிந்து நற்புகழ்
துதித்து பாகவத ராகுவர்
ஆதி யாம்பரமும் வேறுமுண் டோவும
[1]தருளி னாலுலகு காவல்செய்
நீதி யாநிமல னேயெ னக்கருள்செய்
நீண்ட பாதமல ரென்றுமே.

எ-து பதக்கிரமஞ்சடைகளாலுனது புகழினைக் கூறுகின்ற பிதாமகனுடனே சிவனும், மற்றைய தேவர்களும் உனது ஏவற் பணிவிடைகளைச் செய்ததன் பின்பு, தெண்டன் சமர்ப்பித்து உனது பிரதாபத்தைப் புகழ்ந்து உருகிப் புனித பரமபவுத்திரராகிய பாகவத ராகுவார்க ளாகையினாலே ஆதி மூலமாகிய பகவானானபரமன் நீரே அல்லது வேறொருவருண்டோ? இவ்வுலகின்கண் உனது அனுக்கிரகத்தினாலே சக்கரவர்த்தி களானவர்கள் வெண்கொற்றக்குடையினது நிழலினிருந்து சக்கர நடாத்திய தலைவராய் அரசாட்சி செய்வார்கள். அப்படியாகிய நீதியை உடைய பரம புருடோத்தமனே! உமது [2]ஞானோதயமாகிய உபய சரணார விந்தத்தினையே யான் உபாசித்து அடிமைப்பட அனுக்கிரகம் செய்ய வேணுமென்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (4)

உரை - பதக்கிரமஞ்சடைகள் - பதக்கிரமம் - காலடி. சடை - இரேகை.

பா.வே. - 1 உமதானையா 2 ஞானரதயமாகிய.

## Tiruvaṭi vaṇakkam

*ōtu māmaṟaikaḷ vēta ṉōṭaraṉu*
*muriya tēvaruniṉ ṉēvalcey*
*pāta māmalar paṇintu naṟpukaḷ*
*tutittu pākavata rākuvar*
*āti yāmparamum vēṟumuṇ ṭōvuma*
*taruḷi ṉālulaku kāvalcey*
*ṉīti yānimala ṉēye ṉakkaruḷcey*
*niṉṭa pātamala reṉṟumē.*

## Prayers to the Feet

"Piramaṉ who worships with the Vēdas,
Civaṉ and other celestials
Serve you, salute your lotus-feet,
Praise your flawless fame
And become sincere devotees.
Is there a primal being other than you?
By your grace, emperors
Rule the land according to the Law.
Pure One! Grant me the gift
Of worshipping your feet forever."

(அரங்கனின் வினா)

342. பவ்வ மோடுமிடி நீக்க வந்தடி
பணிந்த வன்பொடு புகழ்ந்திடத்
தெய்வ வாய்மல ரலர்ந்து நீயிவணில்
சேர்ந்தி டக்கரும மென்னென
உய்வ தற்கடியன் வந்த தென்றவ
னுரைத்த பின்னவ னுரைத்தன
னவ்வி யம்பொருத சிந்தை யானுமீ
தறைந்து மன்பொடு பணிந்துமேல்.

எ-து. [1]மீட்டு மந்த மார்க்கண்டேயர் கூறுகின்றார். சன்ன சாகரமாகிய துன்பமானது
ங்கத் தக்கதாய் வந்தடி பணிந்தன்பினாலே ஆனந்த அனுபவத்தை அடைந்து புகழ்ந்திட

ஸ்ரீ அரங்கநாயகரானவர் செம்பவளம் போன்ற திருவாய் மலர்ந்தருளிச் செய்கின்றார். வாரீர் மார்க்கண்டேயரே! நீர் இங்கு வரவேண்டிய காரணமென்ன வென்று கூற, உமது நித்திய கலியாண விபூதி விக்கிரக சொரூபத்தைக் காண என்று விண்ணப்பம் செய்கின்றார் மார்க்கண்டேயர் என்றவாறு (5)

பவவம் - பௌவம் - கடல். மிடி - துனபம். அவ்வியம் - பொறாமை, வஞ்சம், பொய். பொருத - அழித்த

உரை - சனனசாகரம் - பிறவிக்கடல.

பா.வே. - 1. மீட்டு மந்தக் கல்யாண குண புனித பவித்திரராகிய மார்கண்டேயா கூறுகின்றார். செனன சாகரமாகிய . . . . . .

## Araṅkaṉiṉ viṉā

*pavva mōṭumiṭi nīkka vantaṭi*
*paṇinta vaṉpoṭu pukaḻntiṭat*
*teyva vāymala ralarntu nīyivaṇil*
*cērnti ṭakkaruma meṉṉeṉa*
*uyva taṟkaṭiyaṉ vanta teṉṟava*
*ṉuraitta piṉṉava ṉuraittaṉa*
*ṉavvi yamporuta cintai yāṉumī*
*taraintu maṉpoṭu paṇintumēl.*

## Araṅkaṉ's Query

As he praised the feet that had manifested
To remove the seas of sorrow,
The divine lips blossomed forth:
"What is the purpose of your visit
To this place?" "I have come
To gain realisation" was the reply.
Further, with his mind that was sincere,
Mārkkaṇṭēyar spoke with humility words of love.

(அரங்கனுக்குப் பதில் கூறுதல்)

343. விடையி னேறுசிவ னார யன்னமரர்
வெய்ய வன்மதிநல் பூதமுங்
கடல்க ளேழுமுல கேழும் போன்றதொரு
கால மாகுகடை காலமே

லடையு மோர்பெரிய இருளில் யானுமோ
ரமிழ்ந்தெ ழுந்திடுமவ் வம்பிபோற்
படர்பெ ரும்புனலி னலைக ளோடுமுழற்
பட்டு நற்புயம் அயர்ந்ததின்.

எ-து. நந்திவாகனரூடராகிய சிவன், பிரம்மா முதலாகிய தேவராதிகளும், சூரிய சந்திராதிகளும் ஐம்பெரும் பூதங்களும், கடல்களான தேழும், அக்கடலிடத்துத் தோன்றுகின்ற சத்த தீவுகளும் இறந்து போகாநின்ற மகாப்பிரளைய காலத்தி லெதிர்ந்து வருகின்ற பெரிய விருட் கூட்டங்களினால் இடருழந்து சாகர சமுர்த்தியில் அமிழ்ந் தெழுந்திருக்காநின்ற தெப்பத்தைப் போல சலத்தினுடைய அலையினாலே உழலப்பட்ட எனது இரண்டு தோள்களும் மெலிந்து அயர்ந்தது என்று பின்னும் விண்ணப்பம் செய்கின்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (6)

அம்பி - மரக்கலம், தெப்பம். உழற்படுதல் - சுழலப்படுதல்.

## Araṅkaṉukkup patil kūṟutal

*viṭaiyi ṉēṟuciva ṉāra yaṉṉamarar*
*veyya vaṉmatinal pūtamuṅ*
*kaṭalka ḻēḻumula kēḻum pōṉṟatoru*
*kāla mākukaṭai kālamē*
*laṭaiyi mōrperiya yiruḷil yāṉumō*
*ramiḻnte ḻuntiṭumav vampipōṟ*
*paṭarpe rumpuṉali ṉalaika ḷōṭumuḻaṟ*
*paṭṭu naṟpuyam ayarntatiṉ.*

## Replying to Araṅkaṉ

In the vast darkness of deluge
When an end comes to Civaṉ,
Piramaṉ, the gods, the sun,
The moon, the five elements,
The seven seas and worlds seven,
I too sank and came up
Like a boat in the great flood.
My shoulders grew weak.

(ஆலவிருட்சத்தைக் கண்டேன் எனல்)

344. உதவி யின்றிபெரு வெளியி லென்றடிய
னொன்றி யாகிமிகு காலைநின்
பதமு முந்தவென திதையம் வந்திரவு
பகலு மின்றிதவழ் போதினோ
ரதிக தூரமதி னிரவி கோடியென
வமரு சோதிதனைக் கண்டர
னிதிய தென்றுமதி னருகி னேகவொரு
நெடிய வாலினையெ திர்ந்தனன்.

எ-து பின்னும் கூறுகின்றார் மார்க்கண்டேயரானவர் இந்த ஊழிக்காலப் பிரளைய வெள்ளத்தின் அலைப்புண்ட எனக்கொரு உறுதியில்லாமல் பெரிய அண்டாகாரமாகிய வெளியிலே அடியேன் தமியனாகி வெகுகாலமாய் உன்னுடைய பாத பங்கயங்களைக் காணாமல் இரவு பகலின்றி அகாலத்தில் அதிக தூரத்திலே கோடி சூரியரைப்போலப் பிரகாசிக்கின்ற சோதியை யான் கண்டு வறியவன் செல்வம் பெற்றதுபோல மகிழ்ந்துருகி யதின்சமீபத்தில் சேர்ந்து பார்க்கும்போது மிகுந்த பிரகாசத்தோடும் கூடிய அண்டத்தைப்போலச் சூழ்ந்திருக்கின்ற ஒரு நீண்ட [1]ஆலவிருட்சத்தினைக் கண்டேனென்று விண்ணப்பம் செய்தார் மார்க்கண்டேயர் என்றவாறு. (7)

தவழ்போது - செலலும்போது இரவி - சூரியன். எதிர்ந்தனன் - எதிரில் கண்டேன்.

உரை - அண்டாகாரம் - முட்டைவடிவம்; ஆகாயமளவிய பரந்தவெளி என்க.

பா,வே. - 1 ஆலிலையைக் கண்டே

## Ālaviruṭcattaik kaṇṭēṉ eṉal

*utavi yiṉṟiperu veḷiyi leṉṟaṭiya*
*ṉoṉṟi yākimiku kālainiṉ*
*patamu muntaveṉa titaiyam vantiravu*
*pakalu miṉṟitavaḻ pōtiṉō*
*ratika tūramati ṉiravi kōṭiyeṉa*
*vamaru cōtitaṉaik kaṇṭara*
*ṉitiya teṉṟumati ṉaruki ṉēkavoru*
*neṭiya vāliṉaiye tirntaṉaṉ.*

## Sighting the Banyan Tree

As I was tossed around helpless
In the limitless space, all alone,
My heart grew sorrowful
As days and nights went by.
Just then, at a great distance
There appeared a brilliance
Like ten million suns.
I drew near and came face to face
With a tall banyan tree.

(ஆலிலையில் கண்ட குழந்தை)

345. அந்த வாலினிலை யளவ கன்றபதி
னாயி ரத்தினம ரோசனைச்
சந்த வார்குழவி யொன்று கோடிசுடர்
தங்கு மார்பில்திரு மணியுமோ
டிந்து நேருமுக மண்ட லத்திரவி
யென்ன சுட்டியொளி மின்னவுங்
கந்த நாறுமலர் வாயில் தந்திரு
கழற்சு வைப்பவது கண்டயான்.

எ-து. அநத தேசோமய காந்தியைஉடைய அந்த ஆலிலையினதளவை யெவ்வளவைத் தென்றால், பதினாயிரம் யோசனை அளவைத்தாம் அந்த விலையிலே சவுந்தரிய ரூபமாகிய குழந்தையானது, கோடி சூரியப் பிரகாசமாகிய கவுத்துவாபரணமும் மகா லட்சுமியும் தங்கிய மார்பகமும, பூரணச் சந்திர விம்ப முகத்தில் இளஞ்சூரியப் பிரகாசம்போனற சுட்டியானது ஒளிகளைப் பிரகாசித்து மின்னவும், திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற திருவாய் மலரானது தனது திருவடித் தாமரையினுடைய விரலைச் சுவைத்து வீற்றிருக்கக் கண்டேனென்றார் மார்கண்டேய ரென்றவாறு (8)

அமரோசனை - அமர் + ஓசனை - பரந்த யோசனை - யோசனைதூரம இந்து நேருமுகம் - சந்திரனை நிகர்த்தமுகம

## Ālilaiyil kaṇṭa kuḻantai

*anta vāliṉilai yaḷava kaṉṟapati*
*ṉāyi rattiṉama rōcaṉaic*
*canta vārkuḻavi yoṉṟu kōṭicuṭar*
*taṅku mārpiltiru maṇiyumō*
*ṭintu nērumuka maṇṭa lattiravi*
*yeṉṉa cuṭṭiyoḷi miṉṉavuṅ*
*kanta nāṟumalar vāyil tantiru*
*kaḻarcu vaippavatu kaṇṭayāṉ.*

## Babe on the Banyan Leaf

The immense banyan leaf
Had a spread of ten thousand *yojanas*;
On it lay a lovely babe
With a chest where a gem gleamed
Like tem million suns;
Its face was like the moon
And there an ornament shown bright.
The sweet-scented lips of the babe
Was sucking its lovely thumb.

(மார்க்கண்டமுனி குழந்தையை வினவுதல்)

346. அளவி னன்பினரு கேகி துன்பமற
அடிவ ணங்கிசிறு புல்லுமே
யுளவி லாதபெரு வூழி வாய்தனி
னொன்றி யாகியிவ ணின்றநீர்
துளப மாமுகிலோ வயனோ மற்றவொரு
சிவனோ வென்றடியன் வினவலு
மிளமை யார்பரம னளின வாய்மலரி
னினிய தேனமுத மென்னவே.

எ-து. அப்படியாய்த் தோன்றிய தேசோமய காந்தியை யுடைய ஞான பவுத்திரமாகிய அற்புத உருவத்தைக் கண்ட மார்க்கண்டேயரானவர் அளவிறந்த ஆனந்த வைபவத்தை அடைந்தவரருகே வந்து தனது துன்பம் நீங்கத் தெண்டன் சமர்ப்பித்துச் சிறு புல்லுந்தலை எடுக்காத இந்த ஊழிக்காலத்திலே தனியே குழந்தை உருவங் கொண்டு அற்புதமாய்த்

தோன்றி அருள் கொடுக்காநினற கருணை வாரிதியே! நீா யாவா? துளப மாலையை யணிநத சீதர மூர்த்தியோ? அல்லது பிதாமகனோ? அவா அனறிச சிவனோ எனறு யான வினாவுமளவிலே இளமையாகிய ஞானசூரியரானவா தமது திருவாய் மலரினை அலாததியருளிச செய்கினறாா தேனோடு கலந்த தேவாவமுதததைப்போல வென்றவாறு (9)

அளவினன்பு - அளவிலலாத அன்பு உளவிலாத - உளளதலலாத, வளரமுடியாத ஒன்றி - ஒண்டி, ஒற்றை; தனிமை நளினம - தாமரை

## Mārkkaṇṭamuṉi kuḻantaiyai viṉavutal

*aḷavi ṉaṉpiṉaru kēki tuṉpamaṟa*
*aṭiva ṉaṅkiciṟu pullumē*
*yuḷavi lātaperu vūḻi vāytaṉi*
*ṉoṉṟi yākiyiva ṉiṉṟaṉir*
*tuḷapa māmukilō vayaṉō maṟṟavoru*
*civaṉō veṉṟaṭiyaṉ viṉavalu*
*miḷamai yārparama ṉaḷiṉa vāymalari*
*ṉiṉiya tēṉamuta meṉṉavē.*

## Sage Mārkkaṇṭēya to the Babe

With immense love he drew close
And saluted the feet and overcame sorrow.
'In this deluge where even a leaf of grass
Cannot remain, who are you
That have appeared? Are you
Viṣṇu who sports the *tuḷaci* garland?
Piramaṉ? Or Civaṉ?
So I queried and the young sun
Opened his gentle lips to speak
Words like divine nectar.

(யானே நித்தியன் எனல்)

347. அண்ட மியாவையு மளித்த ழித்துகடை
யூழி யாலினமர் பரமனாம்
விண்டு வென்னருளில் கொண்ட பேருலக
மொன்று மின்றிவிடு மூழியாற்

புண்ட ரீகனர னிந்தி ராதிபரும்
பொன்றி யானொருவ னின்றமார்க்
கண்ட காண்டியென வருள யானுமவர்
கழல்ப ணிந்துலக காரணா.

எ-து. அப்படி எண்ணுகைக் [1]கசக்கியமாகிய திவ்விய மங்கள விக்கிரக சொரூபராய் விளங்குகின்ற பரம மூர்த்தியானவர் அருளிச் செய்கின்றார். இந்த அண்டபகிரண்டங்களை இரட்சித்தும் ஊழிக்கடைக்காலத்தில் சாகரங்களெல்லாம் மகாபிரளயத்தி லணைகடந்து தோன்றிய காலத்தில் நமதனுக்கிரக விசேடத்தால் வடவால விருட்சத்திலையில் துயிலாநின்ற நாராயணமூர்த்தி யானவரியா மெனதருளினாலே விர்த்தியாய் இருக்கின்ற ஆயிரத்தெண்கோடி அண்டம் முதலாகிய சராசரங்களெல்லாம் அழிந்து சர்வ சூனியமாகிய காலத்தில் பிரம்மா, சிவன், இந்திரன் முதலாகிய தேவாதிகள் எல்லாமெனது மணிவயிற்றிலே அடங்க யானொருவனே நித்தியனா யிருக்கின்றேன் பாராய் மார்க்கண்டேயா என்றருளிச் செய்ய, அடியேன் அனந்தமாகிய தெண்டன் சமர்ப்பித்துத் தோத்திரம் செய்கின்றே னென்றவாறு. (10)

விண்டு - திருமால், விஷ்ணு. பொன்றுதல் - அழிதல்.

உரை - நித்தியன் - அழிவில்லாதவன்.

பா.வே. - 1 காம்பீரிய மாதுரியமாய்க கூறுகின்றார்

## Yāṉē nittiyaṉ eṉal

*aṇṭa miyāvaiyu maḷitta ḻittukaṭai*
*yūḻi yāḷiṉamar paramaṉām*
*viṇṭu veṉṉaruḷil koṇṭa pērulaka*
*moṉṟu miṉṟiviṭu mūḻiyāṟ*
*puṇṭa rīkaṉara ṉinti rātiparum*
*poṉṟi yāṉoruva ṉiṉṟamārk*
*kaṇṭa kāṇṭiyeṉa varuḷa yāṉumavar*
*kaḻalpa ṇintulaka kāraṇā.*

## I am the Eternal

'One who creates these universes,
And destroys them in times of deluge,
I am the Supreme on the banyan leaf,
Viṣṇu. By my will, the universes

With Piramaṉ, Civaṉ and other gods
Merge in me during the deluge.
I alone remain. Mārkkaṇṭēyā! Look!'
As he said so, I saluted his feet.

(இந்த லீலைக்குக் காரணம் என்ன?)

348. இரவி யோடுமதி புலர வந்தபெரு
இருளி னூழிதனி னெத்தனைப்
பரவு காலமிக வொண்டி யாகியதில்
பயில்வை லீலைபுரி பரமவெங்
குரவ வென்றவுட னகம லர்ந்துசிறு
கூறு காலையெம துந்தியின்
விரவு புண்டரிக மலரி யென்னவெழு
வேத பூரண னுதிப்பனால்.

எ-து. வாரீர் மகானுபாவரே! தேவரீர் சந்திராதித்தாள் பிரகாசமின்றி ஒடுங்கிய காலத்தில் பெரிய இருளானது அண்ட பகிரண்டங்களை யெல்லாம் மூடிக்கொள்ளும் படியாகிய ஊழிக்காலத்தில் மகா சலசமுர்த்தியில் நீண்ட ஆலிலையின் பேரில் மிகவுந் தனியனாய் யோக நித்திரை செய்கின்ற புருடோத்தமனே! நீரிந்த லீலாவிபூதிகளைச் செய்கின்ற காரணத்தை அடியேனுக்கு அருளிச் செய்யவேணுமென்று விண்ணப்பம் செய்ய, அவரது மாதுரிய மொழிக்கு உவந்தவராய்க் கிருபை கூர்ந்து, வாராய் மார்க்கண்டேயரே! நமது அதி சாமர்த்தியத்தா லின்னம் சிலகாலம் போந்தபின்பு நமதுந்தியில் மிகுந்த கிரண சமுகத்தினையுடைய சூரிய தேவனைப்போல ஆயிரத்தெட் டிதழினை யுடைய செந்தாமரைக் கமலம் உண்டாகும். அதிலே வேத [1]சாகைகளெல்லாம் பரிபூரணமாக நிறைந்த சதுர்முகனான வருதிப்பாரென்று திருவுள்ளம் பற்றினார் சிறு குழந்தையாகிய ஸ்ரீமன் நாராயணமூர்த்தியானவ ரென்றவாறு. (11)

புலர்தல் - ஒடுங்குதல். பயிலுதல் - இருத்தல். குரவன் - தலைவன். உந்தி - கொப்பூழ்; உந்திக்கமலம்.

**பா.வே.** - 1. சாகைகளெல்லாம் பரிபூரண யூக புத்தியினால் உணர்ந்த பிதாமகனானவ ருதிப்பாரென்று திருவுளம் பற்றி.

## Inta līlaikkuk kāraṇam eṉṉa?

*iravi yōṭumati pulara vantaperu*
*yiruḷi ṉūḻitaṉi ṉettaṉaip*
*paravu kālamika voṇṭi yākiyatil*
*payilvai līlaipuri paramaveṅ*

*kurava veṉṟavuṭa ṉakama lārntuciṟu*
*kūṟu kālaiyema tuntiyiṉ*
*viravu puṇṭarika malari yeṉṉaveḻu*
*vēta pūraṇa ṉutippaṉāl.*

## The Cause of the Divine Play

'O Lord who rests alone in the sea
During the immense darkness
With the sun and the moon hushed!,
Our Supreme at the divine play!"
Listening to such words, the Lord said:
"After a little while,
From my navel will rise a lotus
Where Piramaṉ of the Vēdas will manifest.

(நித்திய சூரியருக்கு அருளல்)

349. அன்ன வர்க்குதவி யாகி வேதமு
மளித்து போதமு மளிக்கவோர்
அன்ன நல்லுருவ மாகி பண்டைகழி
யண்ட மியாவையு மளித்தபின்
மன்னு மெம்பரம பதமு மேகியவ
ணின்று லீலையை வகுப்பன்முன்
சொன்ன வெம்பத மடைந்த பேரெனொடு
துலைவி லாதசுக மடைவரே.

எ-து அப்படி அவதரியாநின்ற பிதாமகனுக் கருள்[1]கூர்ந்து அன்னரூபமாய் யாம் நான்கு வேதத்தின் ஞானப் பொருள்களை அனுக்கிரகம் செய்து முன்னே லயமாகிய அண்ட சராசரங்களெல்லாம் சதுர்முகன் வகுத்த பின்பு நிலைபெற்ற வெனது ஸ்ரீவைகுந்தத்துக் கெழுந்தருளுவோம். பின்பு இந்த செகலீலையாகிய விபூதிகளை யெல்லாம் வகுத்திடுவன். முன்னம் யாம கூறிய எனது பரம பதத்தில் அடைந்த பாகவதர்கள் நித்திய சூரியர்களாய் என்னைச சேவித்து ஆனநத வைபவத்தை அடைந்து துலைவிலாத ஞான சுகத்தினை யடைவார்க ளென்றவாறு (12)

அடைந்தபேரெனொடு - அடைநதபேர் என்னொடு எனக்கொள்க போதம் - அறிவு, ஞானம் துலைவிலாத - அழிவில்லாத.

உரை - வகுத்திடுவன் - அன் ஈறு பெற்ற தன்மை ஒருமை முற்று நித்தியசூரியர் - அழிவற்ற அறிஞர்

பா.வே. - 1 கூர்ந்த வேத பாவதத்திலே அன்ன ரூபமா.

## Nittiya Cūriyarukku aruḷal

*an̲n̲a varkkutavi yāki vētamu*
*maḷittu pōtamu maḷikkavōr*
*an̲n̲a nalluruva māki paṇṭaikaḷi*
*yaṇṭa miyāvaiyu maḷittapin̲*
*man̲n̲u memparama patamu mēkiyava*
*ṇin̲ṟu līlaiyai vakuppan̲mun̲*
*con̲n̲a vempata mataiṇta pēren̲oṭu*
*tulaivi lātacuka maṭaivarē.*

## The Celestials

"To help him in his work,
And give him the Vēdas and knowledge
I shall incarnate as a swan
And re-establish the universes.
Then I will return to my Abode
And mastermind the divine play.
Those who have reached the heavens
Will gain endless happiness."

(மார்க்கண்டேயர் கண்ட காட்சி)

350. என்ற வப்பரம னின்றிவ் வூழியினி
னெய்த்தி ளைத்தவது தீரநீர்
துன்று வெம்பவள வாயி னூடுபுகு
வென்று வாய்மலர் திறந்திடச்
சென்ற யானுமதி னண்ட பிண்டமுதல்
செகம னைத்துமர னயனையும்
பொன்ற வானவரு மேரு குன்றமொடு
பொங்கு மாகடல்க ளேழொடும்.

எ-து. அப்படி அருளிச் செய்த பரம மூர்த்தியான தேவரீர் அருளிய தென்னவென்றால் இந்த ஊழிக்காலத்திலே மிகுந்த துன்பத்தை யடைந்தீ ருமது துன்பமானது தீரத்தக்கதாய் நமது திருவாய் மலரிலே புகுந்து சவுக்கியத்தையடையக் கடவீரென்று தமது பவளம் போன்ற

திருவாயினை மலர, அதினடியேன் பிரவேசித்துப் பார்க்கும் போது அண்டரண்டம் முதலாகிய செகத்தினுள்ள சராசரங்கள் அனைத்தும், சிவனும் பிரம்மாவும் இந்திரன் முதலாகிய தேவர்களும, மகமேரு முதலாகிய சத்தகுலாசலமும், ஏழுகடல்களும் அந்தந்த கடலிடத்தில் பிரகாசிக்காநின்ற தீவாந்தரங்களையுங்கண்டே னென்றார் சுக சொரூபியாகிய மார்க்கண்டேயர் என்றவாறு (13)

எய்த்து - சோர்ந்து, களைப்புற்று. அதுதீர - அச்சோர்வு நீங்க. துன்று வெம்பவளவாய் - துனறும எம்பவளவாய், துன்றுதல் - நெருங்குதல் அண்டபிண்டம் - பிரமாண்டமும் தேசமும் ஆகியவை.

## Mārkkaṇṭēyar kaṇṭa kāṭci

*eṉṟa vapparama ṉiṉṟiv vūḻiyiṉi*
*ṉeytti ḷaittavatu tīraṉīr*
*tuṉṟu vempavaḷa vāyi ṉūṭupuku*
*veṉṟu vāymalar tiṟantiṭac*
*ceṉṟa yāṉumati ṉaṇṭa piṇṭamutal*
*cekama ṉaittumara ṉayaṉaiyum*
*poṉṟa vāṉavaru mēru kuṉṟamoṭu*
*poṅku mākaṭalka ḷēḻoṭum.*

## The Sight Mārkkaṇṭēyar Saw

Having said this, the Lord concluded:
"You have suffered much in this aeon.
To overcome it all enter my mouth."
He opened his lotus mouth.
"I saw within the space all Matter,
The many worlds, Civaṉ, Piramaṉ,
The golden celestials, the *Mēru* Mountain,
And the seven wave-tossed seas.

(மார்க்கண்டர் கண்டவை)

351. கதிர்கள் சந்திரர்கள் கரவும் மாதவர்கள்
ககன தாரைகளு மியாவையும்
பிதிரி டாதுபரு வுதரம் வைத்ததொரு
பெருமை கண்டுவியப் புற்றுயான்

அதினு மீளும்வகை யுணர்வி லாதுநெடு
நாள லைந்துகடை காலையி
னெதிரில் பானுமதி பொருவு மாழிவளை
யிலகு மார்பின்மணி யாரமும்.

எ-து. மீட்டும் மார்க்கண்டேயர் கூறுகின்றார் ஏகாதச ருத்திராளது வாத சாதித்தாளும், புனித பாவனமாகிய தவசிரேட்டர்களும், ஆகாயத்தில் பிரவேசிக்காநின்ற சந்திரன் முதலாகிய தாரகா கணங்களும், அட்டவசுக்களும் சத்த மருத்துக்களும் ஒன்பது வகையாகிய சித்தர்களும் உட்பட, மகமேரு முதலான வட்ட குலாசலங்களையும், சத்தசாகரம் முதலாகிய சேதனா சேதனங்களையும் மணிவயிற்றில் கண்டதிசயப்பட்ட யான் அதைவிட்டு மீண்டு வரும்படி யுணர்ந்து நெடுங்காலம் அடியேன் வந்தவழி தெரியாதலைந் தெதிரிலே பிரகாசிக்காநின்ற திருப்பாற்கடலிலே அனந்தவிமானசேகரராய் யோக நித்திரை செய்கின்ற நிகரில்லாத சூரிய சந்திரனைப் போன்ற சங்கு சக்கரம் தரித்தருளிய இரண்டு புசங்களும் கவுத்துவாபரணமும் இலட்சுமியும் தாங்கிய மார்பகத்தினையுடைய தேவரீரைக் கண்டேன் என்று விண்ணப்பம் செய்கின்றார் தவசிரேட்டராகிய மார்க்கண்டேயர் என்றவாறு. (14)

ககனதாரை - ககனம் - ஆகாயம். தாரை - விண்மீன் கூட்டம். பிதிரிடாது - உதிராமல். உதரம் - வயிறு. பானு - சூரியன்.

**உரை** - ஏகாதசருத்திரர் - பதினோருத்திரர். பாவனம் - தவம். தாரகாகணம் - தாரகை - நட்சத்திரம் அட்டகுலாசலம் - அட்டகுலமலை. எட்டுமலை சேதனம் - உயிர்கள்

## Mārkkaṇṭar kaṇṭavai

*katirkaḷ cantirarkaḷ karavum mātavarkaḷ*
*kakaṉa tāraikaḷu miyāvaiyum*
*pitiri ṭātuparu vutaram vaittatoru*
*perumai kaṇṭuviyap puṟṟuyāṉ*
*atiṉu mīḷumvakai yuṇarvi lātuneṭu*
*nāḷa laintukaṭai kālaiyi*
*ṉetiril pāṉumati poruvu māḻivaḷai*
*yilaku mārpiṉmaṇi yāramum.*

## Mārkkaṇṭēyar Sees All

Suns, moons, blameless sages,
The star-spangled skies,
Everything. He missed nothing
That was kept in the mouth

And was astonished. Not knowing
How to come away from it, senseless,
Journeying for long, till one morning
I saw you with conch and discus
Like the sun and the moon
And the jewelled necklace on your chest."

(மார்க்கண்டர் விண்ணப்பம்)

652. திருவி னோடுமொரு வருளு மாமணி
செறிந்த தாமரை மலர்ந்துமே
லிருபு றத்தடிகள் வருடு சந்திரர்க
ளிலக மெய்யொளி தழைக்கவான்
[1]பெருகு பொன்னடி சிறந்த பாற்கடல்
பிறங்க ராவணை துயின்றநற்
கருணை யங்கடலைக் கண்டு கைதொழு
திறைஞ்சி நின்றுமிவை கழறினேன்.

எ-து மீடடும் மிகுந்த சிலாககியராகிய மார்க்கணடேயர் கூறுகின்றார் ஸ்ரீமன் நாராயண மூர்ததியினது திவ்விய மங்கள விக்கிரக சொரூபத்தில் ஸ்ரீமகாலட்சுமி தேவியும் கவுததுவாபரணமும் திவ்விய திருமேனிகளெங்கும் மலர்ந்து பிரகாசிக்காநின்ற திருவடிவத்தின் அழகும் இரண்டு திருவடிக் கமலங்களைச் சந்திரக் கூட்டங்கள் உபசரிக்கின்ற திருப்பாற் கடலினிடத்தில் கருங்கடலானது வீற்றிருந்தால் எத்தன்மைத்தோ அததன்மைததாகிய தேவரீரைக் கண்டு விண்ணப்பம் செய்கின்றேன் என்றார் மார்க்கண்டேயர் எனறவாறு (15)

பிறஙகராவணை - பிறஙகு + அரவு + அணை - பிறங்கு - ஒளி விளங்குகின்ற, பாம்பாகிய அணை

பா.வே - 1 பெருகு பாறகடல் கருங்க டலெனபி

## Mārkkaṇṭar viṇṇappam

*tiruvi ṉōṭumoru varuḷu māmaṇi*
*ceṟinta tāmarai malarntumē*
*lirupu ṟattaṭikaḷ varuṭu cantirarka*
*ḷilaka meyyoḷi taḻaikkavāṉ*

*peruku ponnaṭi ciranta pārkaṭal*
*piranka rāvaṇai tuyinranar*
*karuṇai yankaṭalaik kaṇṭu kaitoḻu*
*tiraiñci ninrumivai kaḻarinēn.*

## Mārkkaṇṭēyar's Prayer

The Goddess of Wealth was there
And the *Kavuttuvā* gem blossomed
On his chest; the moons were saluting
His twin feet; the brilliant form
With Kaṅkā's flowing from the golden feet
Rested on the snake in the sea.
Looking on this ocean of compassion
I saluted and spoke these words.

(ஆலிலையில் எழுந்தருளும் வடிவம் வேண்டுதல்)

353. அகில முற்றுமழி பெருகு மூழியினி
னமர்ச ராசர மனைத்தையும்
புகழு நல்லுதரம் வைத்த ளித்துமிக
புரியும் லீலைபெறு புதுமையிற்
சகல லோகமு மலைந்து தேடிவழி
யறிகி லாதுனது சரணமே
[1]மிகபு குந்தன னெனக்கு முந்தன்றிரு
வுருவு காட்டுமென வேண்டினேன்.

எ-து. வாரீர் மகானுபாவரே! அகில சராசரங்களையும் மணி வயிற்றினடக்கும் படியாகிய பெரிதான ஊழிக்காலத்தில், மறுபடியும் இந்த லீலா விபூதியைச் சிருட்டித்து இரட்சிக்காநின்ற சகல லோகங்களையும் கண்டு, வழி காணா தலைந்து உனது சரணார விந்தத்தினை மிகவும் புகழ்ந்து உருகிய வெனக்கு மகா பிரளயத்திலே ஆலிலையின் பேரில் தவழ்ந்து விளையாடிய திவ்விய திருவுருவத்தைக் காட்டவேண்டுமென்று அடியேன் விண்ணப்பம் செய்தது என்றவாறு (16)

அகிலம் - பூமி. உதரம் - வயிறு.

பா.வே. - 1. மிகபுகழ்ந்தன னெனக்கு முன்றனிருவுருவு.

## Ālilaiyil eḻuntaruḷum vaṭivam vēṇṭutal

*akila muṟṟumaḻi peruku mūḻiyiṉi*
*ṉamarca rācara maṉaittaiyum*
*pukaḻu nallutaram vaitta ḷittumika*
*puriyum līlaipeṟu putumaiyiṟ*
*cakala lōkamu malaintu tēṭivaḻi*
*yaṟiki lātuṉatu caraṇamē*
*mikapu kuntaṉa ṉeṉakku muntaṉṟiru*
*vuruvu kāṭṭumeṉa vēṇṭiṉēṉ.*

## Prayer for the Banyan Leaf Rest

"During the all-destroying deluge
You had kept safe within yourself
All the worlds and then gifted them.
To look on this wondrous divine play
Granted by you, I have wandered
All over the earth. Not knowing
The true path, I have surrendered to you.
Kindly show me your earlier form
Of the babe on the banyan leaf."

(கோலவரையில் தவம் செய்ய ஆணை)

வேண்டு மெற்குவர மருள்பு ரிந்துமிக
வேண்டி யெம்மையு முழன்றநீர்
தூண்டு மன்பினொடு பூமி தன்னின்மிகு
செல்வ மோங்கிவளர் சோர்விலாச்
சேண்ட யங்குபுகழ் கச்சி மாநகரின்
தெற்கில் காவதமோ ரைந்தினில்
யாண்டு நின்றதொரு கோல மால்வரையி
னணுகி யேதவ மியற்றுவாய்.

எ-து. இப்படியாய்ப் பணிந்து உருகிய அடியேனைக் குறித்து அனுக்கிரகம் செய்த தென்னவென்றால் நீர் நம்மைக் குறித்திந்த ஊழிக்காலச் சலப்பிரளயத்திலே உழன்று மிகவும் சிரமத்தை அடைந்தீராகையால் இந்தப் பூமண்டலங்களிலே மிகுந்த புண்ணிய சேத்திரமாகிய

சத்தியவிரதமென்று சொல்லப்பட்ட காஞ்சிமண்டலத்துக்குத் தெற்கிலே யைங்காதத் தளவினையுடைய கோலாசலமென்று கூறப்பட்ட புண்ணிய பர்வதத்திலே சென்று நீர் தவம் புரிந்தா லுன்திட்டமானது ஈடேறுமென்று அருளிச் செய்கையால் அடியேன் அன்றுமுதல் தேவரீர் வரவு பார்த்துக் கொண்டு தவம் புரிந்தேன் என்றவாறு. (17)

உழன்று - வருந்தி, சுழன்று சேண்டயங்கு - சேண் + தயங்கு - பெருமைபொருந்திய கச்சிமாநகர் - காஞ்சிமாநகர். காவதம்- காததூரம்; நாலுகூப்பிடுகொண்ட தூரம்.

## Kōlavaraiyil tavam ceyya āṇai

*vēṇṭu meṟkuvara maruḷpu rintumika*
*veṇṭi yemmaiyu muḻanṟaniṟ*
*tūṇṭu maṇpiṉoṭu pūmi taṉṉiṉmiku*
*celva mōṅkivaḷar cōrvilāc*
*cēṇṭa yaṅkupukaḻ kacci mānakariṉ*
*teṟkil kāvatamō raintiṉil*
*yāṇṭu niṉṟatoru kōla mālvaraiyi*
*ṉaṇuki yētava miyaṟṟuvāy.*

## Command for Tapasya on the Kōlā Hill

"You have prayed to me and I shall
Grant you the boon. You have
Undergone austerities as well.
Five kāvatams[3] to the south of Kāñci,
The city of great fame, there is the Kōla Hill.
Go there and perform austerities."

(அரங்கன் தன் வடிவு காட்டல்)

355. யானு மவ்வயினோர் கார ணத்தின்மிகு
பூர ணாங்கிசமோ டேகுவேன்
[1]போநீ யென்றவ ருரைக்க யானுமதில்
போந்து மின்றளவு மிம்மலை

3 kavadam : about ten miles.

ஞான னற்றவ முயன்ற னன்கொலென
நார ணனக மகிழ்ந்துதன்
வான மூடுருவி நீண்ட பேருருவ
மாயி னானவனும் வாழ்த்தவே.

எ-து. அப்படி அதி சிலாக்கியமாகிய கோலாசலத்தில் தவம் புரிந்தால் தேவரீர் ஒரு காரணத்தினாலே பூரணாங்கிசையுடனே எழுந்தருளுகின்றோம். நீரங்குப் போக வேண்டுமென்றருளிச் செய்கையால் யானும் இதுவரைக்கும் தவம் புரிகின்றேனென்று மார்க்கண்டேயர் விண்ணப்பம் செய்ய அவருடைய நயகுண விங்கித வார்த்தையால் ஆனந்த அற்புதமடைந்தவராய்த் தமது வராட்டு சுவ ரூபத்தைக் காட்டினார். அந்தச் சேவையினால் அற்புத வைபவத்தையடைந்து தெண்டன் சமர்ப்பித்துத் துதிசெய்தா ரென்றவாறு. (18)

பூரணாங்கிசம் - வராட்டுசுவரூபம்; முழுவடிவம.

பா.வே. - 1 போக.

மார்க்கண்டேயர் சரணாகதி அத்தியாயம் முற்றிற்று.

## Araṅkaṉ taṉ vaṭivu kāṭṭal

*yāṉu mavvayiṉōr kāra ṇattiṉmiku*
*pūra ṇāṅkicamō ṭēkuvēṉ*
*pōnī yeṉrava ruraikka yāṉumatil*
*pōntu miṉraḷavu mimmalai*
*ñāṉa ṉaṟṟava muyaṉṟa ṉaṉkoleṉa*
*nāra ṇaṉaka makiḻntutaṉ*
*vāṉa mūṭuruvi niṇṭa pēruruva*
*māyi ṉāṉavaṉum vāḻttavē.*

## Araṅkaṉ Shows his Form

"You commanded thus and assured me
That you will manifest there
As the Great Boar. So I went there
And have been performing austerities
For wondrous knowledge till today."
Nārāyaṇaṉ was happy and appeared
In his cosmic form, piercing the clouds
To bless the sage.

# 19. பதினைந்தாவது
# விசுவரூபம் உரைத்த அத்தியாயம்

இந்திரன் முதலாகிய தேவர்கள்முதல் நிலவுலகதில் வசிக்கும் சராசரங்கள் ஈறாக அனைத்துப் பொருள்களும் அந்த அரங்கநாயகரின் விசுவரூபத்திலே விளங்கித் தோன்றக் கண்டார் மார்க்கண்டேயர். மேலும் அவ்வடிவத்தில் திருவடிகள், புயங்கள் போன்ற உறுப்புகளும், திருமுடி முதலாகிய ஆபரணங்களும், சக்கரம் முதலாகிய ஆயுதங்களும் ஒளிவீசின. அவ் ஒளியானது வானத்தையே மறைத்து விளங்கியது. அவ் உருவத்தின் உந்திக்கமலத்தில் பிரமலோகம் தோன்றியது. தொடைகள் இந்திரலோகத்திலும் திருவடிகள் பாதலத்திலுமாகப் பிரவேசித்திருந்தன. திருவாயில் அறுபத்துநான்கு கலைகளும் விளங்கின. நாசியில் தோன்றும் சுவாசமே பெருங்காற்றாயிற்று. திருவடியின் விரலிடை இடமே ஆகாயமாயிற்று. தாமதகுணம் அக்கினியாகவும், சாத்வீகம் நீராகவும் விளங்கின. ஆலி லையின் மீது அமர்ந்து, கால்பெருவிரலினைச் சுவைத்த பாலனாகிய வடிவம் மார்க்கண்டேயர் முன் காட்சியளித்தது.

நீலகிரியிலே இரண்டு மங்களகரமான கொடிகளானவை படர்ந்துள்ள தன்மை போலத் திருமகளும் பூமகளும் விளங்கினார்கள். இவற்றைக் கண்டு மகிழ்ந்த மார்க்கண்டேயர் ஆனந்தமடைந்தவராய், இப்பதினான்கு உலகத்திற்கும் கர்த்தாவாகிய நாராயணனைத் துதித்து, அற்புத மூர்த்தியே! திவ்விய ஞானமே! இந்த உருவத்தின்கண் அடியேன் ஒரு கொசுவினுக்கும் இணையில்லாதவனாய் இருந்து இத்தனை வியக்கத்தக்க இன்பங்களையும் கண்டுகளித்தேன். யான் செய்த தவப்பயனால் இவ்வளவு ஊழிக்காலத்திற்குப் பின்னும் தங்கள் திருவடிகளில் சரணடையும் பேற்றினைப் பெற்றேன். தங்கள் கருணையினைப் பெற்ற இந்நிலவுலகத்து உயிர்கள் தேவரீருக்குப் பிரதி உபகாரமாக என்ன செய்யப்போகிறார்கள்? இவ்வுலக மயக்கத்தை அறுத்துத் தங்கள் தெளிவினாலே தங்கள் திருவடிகளை அடைபவர்கள் ஒருசிலரேயாவார்கள். அத்தகு சிறப்புவாய்ந்த தேவரீருடைய விசுவரூபத்தைக் கண்ட அடியேன் தங்களின் திருவடிகளையும் திருமுடியினையும் காணும் பேறு பெற்றிலேன் என்று கூறினார்.

என்றும் அழிவில்லாத அம் மார்க்கண்டேயரும் சிவன், பிரம்மா முதலாகிய தேவர்களும் முனிவர்களும் இந்த விசுவரூபத்தைக் காண்பது அரிது. ஆனால் இன்று அந்த வடிவத்தைக் கண்டு களித்தார்கள். அவ்வாறு களித்து அனைவரும் வணங்கி வாழ்த்தியபொழுது, திருமகளும் பூமகளும் உடன்விளங்கும் அனந்த விமானசேகரராய்ப் பழையவடிவிலே தோற்றமளித்தார் அரங்கநாயகர். அனைவரும் பயம் தீர்ந்தவர்களாய், அவருடைய திருவடிகளிலே நித்திய சூரியர்களானார்கள். திரு அரங்கநாயகரும் தம் திருவடிகளிலே தேவகங்கையானவள் பெருக்கெடுத்தோடுமாறு வீற்றிருந்தருளினார். திருமகளின் கடைக்கண் அருள் நோக்கத்தால் மூவுலகும் சிறந்து ஓங்கின. சந்திர சூரியர் தவளச்சக்கரக்குடையினைத் தாங்கி நின்றனர். தேவர்கள் ஆலவட்டம் வீசினர். கருடன்

முதலானோர் பணிவிடை புரிந்தனர் பஞ்சாயுதங்களும் அருகில் விளங்கின. வேதங்கள் முழங்கின. தேவியர் இருபுறமும் விளங்கினார்கள். சிவன் முதலானோர் வணங்கினார்கள். அனைவரும் துதிக்கும் போது கூறிய அரிகரி என்னும் ஓசையானது புவனமெங்கும் பரவியது. இந்திராணி முதலிய தேவமாதர் மாணிக்க தீபங்களை ஏந்தினர். காந்தருவர் பாரிசாத மலர்களைத் தூவினர். குபேரன் நிதிக்குவியல்களைச் சொரிந்தான் அன்பர்களும் தும்புருநாரதரும் ஞானதிரவியங்களைத் தூவினர்.

இவ்வாறு கோலவரையிலே வீற்றிருந்த அரங்கநாயகரானவர் அனைவருக்கும் அருள்புரிந்ததற்பின் மிகவும் பயங்கரமாகவும், பக்தியோடும் உச்சியின் மீது கைகூப்பித் தொழுதுநின்ற சோமுகன், அவன்தம்பி சம்பரன், மார்க்கண்டேயர் ஆகியோரையும் கண்டு அவர்களுக்கும் நித்திய சூரியர்களாய்த் தம் திருவடிகளிலே வாழும் பேற்றினை அளித்து அருள்புரிந்தார்.

**(அரங்கனின் வடிவு காணல்)**

356. **அண்ட மோடுபுக ழெண்டி சாமுகமு**
**மணியு நன்மயி ரொழுக்கிலே**
**புண்ட ரீகனர னிந்தி [1]ராதிபர்கள்**
**புனித வானவர்கண் மாதவர்**
**தெண்டி ரைக்கடல்கள் சந்திர சூரியர்கள்**
**திகழ்ச ராசர மனைத்துமெப்**
**பண்ட மியாவுமொரு [2]பாலி லங்கமிகக்**
**கண்ட னன்கரிய பரமனை.**

எ-து. அண்டரண்டங்களும் புகழாநின்ற எட்டுத் திக்குகளும் அழகிய ரோமவொழுங்குகளிலே ஆயிரங்கோடி அண்டங்களும் மணி சமூகங்களைப்போலத் தொங்கவும், செந்தாமரைக் கமலத்தின் வீற்றிருக்காநின்ற பிதாமகனும் சிவனும், இந்திரன் முதலாகிய புனித பவுத்திரமான தேவாதிகளும், அரிய தவத்தினைச் செய்கின்ற முனிவர்களும், அசுவனி தேவர்களிருவரும், நாற்பத்தொன்பது மருத்துக்களும், பிதுர்கணங்களும், காந்திருவர்களும், இயக்கரும், சித்த கணங்களும், அசுரர்களும், தெளிந்த திரையினையுடைய சத்த சாகரங்களும், ஏகாதசருத்திரர்களும் துவாதசாதியாதியர்களும் திரிபுவனத்தின் வதியாநின்ற சராசரங்களனைத்தும் அந்த திவ்விய தேசோமயமாகிய விசுவ ரூப சொரூபத்தினோர்பாலில் விளங்கித் தோன்றத் தக்கதாகக் கண்டார் மார்க்கண்டேயர் என்றவாறு. (1)

எண்டிசாமுகம் - எண்திசாமுகம - எட்டுத்திக்குகள்.

பா.வே. - 1. ராதியர்கள் 2. பாலி னின்றிலக.

## Araṅkaṉiṉ vaṭivu kāṇal

*aṇṭa mōṭupuka ḻeṇṭi cāmukamu*
*maṇiyu naṉmayi roḻukkilē*
*puṇṭa rīkaṉara ṉinti rātiparkaḷ*
*puṉita vāṉavarkaṇ mātavar*
*teṇṭi raikkaṭalkaḷ cantira cūriyarkaḷ*
*tikaḻca rācara maṉaittumep*
*paṇṭa miyāvumoru pāli laṅkamikak*
*kaṇṭa ṉaṉkariya paramaṉai.*

## XIX. On the Cosmic Form

### Araṅkaṉ's Image

The worlds, the famous directions eight,
And millions of universes dangled
Like bells from the Lord's hair-ends;
The vast creation inclosing
Piramaṉ on the lotus, Civaṉ, Intiraṉ
And other holy celestials, sages,
The wave-tossed seas, moons and suns
And the rest glowed brilliantly
Within that cosmic form. He saw
The Lord even thus.

(அரங்கனின் உறுப்புகள்)

357. கால்க ளாயிரங் கைக ளாயிரங்
கனத்த தோர்புயமு மாயிர
மேலு மாமுடிக ளாயிரங் கனக
மேரு வாமென விளங்கிடக்
கோல வாபரண கிரண பானுமிகு
கோடி கோடிகள் விரிக்கவுஞ்
சூல மோடுதிகி ரிக்கு லங்கள்வளை
தோம ரங்கள்பல வாயுதம்.

எ-து. அந்தத் திவ்விய மங்கள விசுவ சொரூபத்தின் திருவடி சமூகங்களானவை ஆயிரமும், மலை தங்களானவை ஆயிரமும், வடமேருவினை யொத்த திரண்ட புசங்களாயிரமும், மேன்மையாகிய சிரத்தினிற் புனைகின்ற நவரத்தினமயமாகிய மவுலி களாயிரமும், கனகமயமாகிய திவ்வியாபரணங்களானவை பலகோடி சூரியருடைய கிரண சமூகங்களை விரிக்கவும் சக்கரத் தொகுதியும், பாஞ்ச சன்னியமும் தோமர முதலாகிய ஆயுதங்களும் தோன்றத்தக்கதாகக் கண்டார் மார்க்கண்டேயர் என்றவாறு (2)

கிரணபானு - கதிர்களையுடைய சூரியன் தோமரம் -இருப்புலக்கையாகிய ஆயுதம், கனகம் - பொன். கோலவாபரணம் - கோலம் - அழகு. முடிகளாயிரங் கனகமேருவாமென விளங்கின என்று கொள்ளுவது பொருந்தும்

உரை - கைகளாயிரம் என்னும் தொடருககு உரையில் மலைதங்களானவை ஆயிரம் என்று காணப்படுகிறது கனகமயமாகிய ஆபரணங்கள் என்று கூட்டப்படுகிறது

## Arankaṉiṉ uṟuppukaḷ

*kālka ḷāyıraṅ kaika ḷāyiraṅ*
*kaṉatta tōrpuyamu māyira*
*mēlu māmuṭika ḷāyiraṅ kaṉaka*
*mēru vāmeṉa viḷaṅkiṭak*
*kōla vāparaṇa kiraṇa pāṉumiku*
*kōṭi kōṭikaḷ virikkavuñ*
*cūla mōṭutiki rikku laṅkaḷvaḷai*
*tōma raṅkaḷpala vāyutam.*

## Arankaṉ's Limbs

A thousand feet; a thousand hands;
Firm shoulders a thousand;
A thousand crowns appearing
Like the golden *Mēru*;
The rays of the shapely jewels
Spread like crores and crores of suns;
And several ornaments too: lances,
Varieties of discus, rings and iron maces.

(அரங்கனின் முகத்தோற்றம்)

358. வில்லி னோடுகதை வாள்கள் கோடியுறு
விண்ணின் மின்னலை விளைக்கவும்
புல்லு மாமுக மனந்த கோடிரவி
புரைய கண்களொரு கோடியாம்
பல்லு மெல்லையொரு கோடி காதவழி
[1]படர்ந்த வாய்களொரு கோடியாங்
குல்லை மேவுதிரு மார்பின் முத்தணி
குலாவி வானக மறைக்கவே.

எ-து. காண்டீபத்துடனே கதைகள், வாளின் கூட்டங்கள் கோடி கோடியாய் மின்னலை விரிக்கவும், பொருந்திய திருமுக மண்டலமானது கோடி கோடியாய்ப் பிரகாசிக்கவும், கோடானுகோடி திருக்கணைகளானவை விளங்கவும், தந்த பந்திகளானவை கிரண சோடசத்தையுடைய சந்திரனைப்போலத் தவளிக்கவும், திருப்பவளவாய்களானவை பல கோடிகளாய் விளங்கவும், துளப மாலையானது பொருந்திய திருமார்பகத்திலே முத்துமாலையானது இளஞ்சந்திரனைப்போலப் பிரகாசித்து வானகத்தையெல்லாம் மறைக்கக்கண்டார் மார்க்கண்டேயர் என்றவாறு (3)

புல்லுதல் - பொருந்துதல இரவி - சூரியன, புரைய - ஒப்ப - உவமைஉருபு குலலை - துளசி

**உரை** - கிரணம் - ஒளி, கதிர். சோடசம் - பதினாறு தவளிதம் - வெணணிறம்

பா.வே. - 1. பரவும்

## Araṅkaṉiṉ mukattōṟṟam

*villi ṉōṭukatai vāḷkaḷ kōṭiyuṟu*
*viṇṇiṉ miṉṉalai viḷaikkavum*
*pullu māmuka maṉanta kōṭiravi*
*puraiya kaṇkaḷoru kōṭiyām*
*pallu mellaiyoru kōṭi kātavaḻi*
*paṭarnta vāykaḷoru kōṭiyāṅ*
*kullai mēvutiru mārpiṉ muttaṇi*
*kulāvi vāṉaka maṟaikkavē.*

## Araṅkaṉ's Visage

As the bow, the mace and the swords
Replayed the brilliance of lightning's
Innumerable flashes, the Lord's visage

Glowed in countless terms; with crores of eyes
Like the sun, the teeth spread
In long spaces, a crore of *kāṭām* length
Spread as the mouth; the chest
Decorated with *tuḷaci* garland,
And pearl strings which shone
And covered the skies.

(உந்திக் கமலக்காட்சி)

359. உந்தி மாமலரில் பிரம லோகமுத
லொளிர மேருவரை [1]கரணிகைச்
சந்த மாவிடைபீ தாம்ப ரந்திசைகள்
தங்கு பேரொளி யளிக்கவுந்
தொந்த மாகுதொடை [2]யிந்திர லோகமுத
லொளிர மேருவரை கரணிகை
மந்த மாவதல சுதல மூடுருவி
யப்பு றத்தினு [3]மமர்ந்ததால்.

எ-து. அநத விசுவ சொரூப உந்திக்கமலத்தில் பிரமலோகம் முதலாகியது தோன்றிப் பிரகாசிக்கவும், உந்திக்கமலத்தில் தோன்றிய கரணிகையானது வடமேருகிரியாகவும் ஆயிரத்தெட்டு மாறறுத் தங்க மயமாகிய பீதாம்பர உடையானது திக்குகளெல்லாம் பரந்த ஒளியை விரிக்கவும், அவரது உபய தொடைகளானவை இந்திர லோகத்தில் பிரகாசிக்கவும் திவ்விய மோட்ச ரூபமாகிய திருவடித் தாமரைகளானது அதல சுதல முதலாகிய உலகத்தை ஊடுருவி அபபாலும் போய் அமர்ந்திருக்கக் கண்டா ரென்றவாறு. (4)

கரணிகை - கர்ணிகை - தாமரைகொட்டை.

பா.வே. - 1 காணிகை 2 இந்தர் லோகமுறு துணைம லர்ப்பெரிய வடிகளுே. 3. மமர்ந்தவால்.

**Untik kamalakkāṭci**

*unti māmalaril pirama lōkamuta*
*loḷira mēruvarai karaṇikaic*
*canta māviṭaipī tāmpa ranticaikaḷ*
*taṅku pēroḷi yaḷikkavun*

*tonta mākutoṭai yıntira lōkamuta*
*loḷira mēruvaraı karaṇikai*
*manta māvatala cutala mūṭuruvı*
*yappu ṟattiṉu mamarntatāl.*

## The Lotus on the Navel

On the lotus in the navel rested
Pıramalōkam and the rest; the pericarp
Was lıke the North *Mēru* mountaın;
The garment envelopıng the waıst
Spread light ın all dırectıons;
The thighs reached the heavens;
The *Mēru*-like feet slıd downwards
Through *atala* and *sutala* worlds
And went much below as well.

(கலைகளின் இருப்பிடமான உறுப்புகள்)

360. வேத மோடுகலை யாவும் வாயினின்
விளங்க ஞானமொரு மேனியாம்
வாத நாசிசிறு காலும் வானவிரற்
சந்து வன்னிசிறு முனியுமாய்ப்
போத மற்றுயிர னைத்தை யுமருள்செய்
பெற்றி யேகருணை யப்புமாய்
நீத நற்புவி யனைத்து போனகம
தாக வேவொளிர நின்றனன்.

எ-து வேத முதலாகிய அறுபத்துநானகு கலைகளும் திருப்பவள வாயகளின் விளங்கவும, ஞானமெல்லாம் திரணடு அறபுத உருவமாகியும், பெருங்காற்று நாசி நுனியிலே தோன்றிய சுவாசமாகவும், ஆகாசமானது திருவடியின விரறசந்தாகவும, அககினியானது தாமத குணமாகவும், எண்ணுகைக்கசகதியமாகிய சேதனா சேதனஙகளுக்கு அனுககிரகம் செய்கினற சாத்வீகமே சலமாகவும், கருணா நிதியாகிய நற்புவி மகளை அருந்திககளிக்கினற பிரசாத வைபவமாய அருந்தககணடார் மார்க்கணடேயர் என்றவாறு (5)

கால - காறறு வனனி - நெருப்பு, தீ போதம் - ஞானம அப்பு - தணணீா

உரை - அசககியம - தகுதியறறது சாத்வீகம - அருடகுணம

## Kalaikaḷiṉ iruppiṭamāṉa uṟuppukaḷ

*vēta mōṭukalai yāvum vāyiṉiṉ*
*viḷaṅka ñāṉamoru mēṉiyām*
*vāta nāciciṟu kālum vāṉaviraṟ*
*cantu vaṉṉiciṟu muṉiyumāyp*
*pōta maṟṟuyira ṉaittai yumaruḷcey*
*peṟṟi yēkaruṇai yuppumāy*
*nīta naṟpuvi yaṉaittu pōṉakama*
*tāka vēvoḷira niṉṟaṉaṉ.*

## Limbs that are Knowledge

The mouth illumed the Vēdas
And the arts; the body was
Knowledge; the cyclonic wind
Was the breath of the nose;
The skies were the space between the toes;
Fire was the Lord's Tamasic quality;
Water was the compassion
That guards the vast creation;
The Lord remained manifest
Drinking in all creations in the earth.

(அரங்கனின் விசுவரூபம்)

361. அண்ட மெண்டிசையு முண்டு பண்டலரு
மலரி யென்னவெழு மறைமணப்
புண்ட ரீகமல ருந்தி மேலுமொரு
பிரம னாருருவி லானமார்க்
கண்ட னாரொருவ ரலையின் மீதுதவழ்
கால மாகுமதில் கண்டதோர்
தொண்டை வாய்ப்பவள பால னாலின்மிசை
துயில அகண்டதொரு பாலிலே.

எ-து அண்டரண்ட பகிரண்டமும் அட்ட திக்கினையும் உண்டு மீட்டும் அனுக்கிரகம் செய்யாநின்ற அனந்த கலியாண சுப குணங்களையுடைய நாராயணமூர்த்தியான ஞான சூரியனது உந்திக்கமலமானது நான்கு வேதமாகிய திவ்விய பரிமளங்களைக் கமழ்ந்து

பிரம்மாவை அனுக்கிரகம் செயய அந்தச் சந்ததியின உற்பவிதத மார்க்கண்டேயரானவர் ஊழியாகிய கறப காலத்தில் இருளே வடிவமாகிய ஆலிலையில் தவழந்து கோவையின் பழததினையொத்த திருவாய் மலரினை அலாததிக காற்பெருவிரலினைச் சுவைதத பாலனாய்க் கணடு அற்புதமடைந்த உருவமானது ஒருபககததிலே பிரகாசிக்கத் தக்கதாகிய விசுவ ரூபத்தைக கண்டருளினார் மார்க்கண்டேயர் என்றவாறு (6)

பண்டு - பழமையில அலரி - மலா அலை - கடல் ஒருபால - ஒருபுறம

## Araṅkaṉiṉ vicuvarūpam

*aṇta meṉṭicaiyu muṇṭu paṇṭalaru*
*maları yeṉṉaveḻu maṟaimaṉap*
*puṇta rīkamala runtı mēlumoru*
*pirama ṉāruruvı lāṉamārk*
*kaṇṭa ṉāroruva ralaiyiṉ mītutavaḷ*
*kāla mākumatil kaṇṭatōr*
*toṇṭai vāyppavaḷa pāla ṉālıṉmicai*
*tuyila akaṇṭatoru pālılē.*

## Araṅkaṉ's Cosmic Form

The navel of the Lord who devours the worlds
And directions and creates the same,
Gave rise to Piramaṉ. In his line was born
Mārkkaṇṭēya who had seen the Lord
As a babe on a banyan leaf
Sucking his toe with his coral mouth
And asleep on the wide milky sea.

(அரங்கனின் யோக நித்திரைக் காட்சி)

362. பாலின் வேலைநடு வரவ ணைத்துயில்கொள்
பரம னுந்திகிரி வளையொடுங்
கோல விற்கதைகள் வாள்கள் சூழவிரு
கோம ளக்கொடிகள் சாமள
நீல மால்வரை படர்ந்த தென்னமலர்
நிறைய பூத்தடியர் வானவர்
சால வுஞ்சரண பங்க யத்தின்விழு
தன்மை யாவுமொரு பாலிலே.

எ-து. திருப்பாற் கடலினது நடுப்பிரதேசத்திலே அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்தருளிய பரப்பிரம்ம சொரூபமும், அவர் திருத்தோள்களிலே தாங்கிய சங்கு சக்கரமும், காண்டீபமும், கதையும் வாளும் தோன்றிப் பிரகாசிக்கவும், இரண்டு மங்களாகாரமாகிய கொடிகளானவை நீலகிரியிலே படருந்தன்மையினைப்போல பிராட்டியாகிய ஸ்ரீமகாலட்சுமி தேவியும், பூமிபிராட்டியும் தோன்றி மலர்களை நிறையட் பூத்தால் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தாய் அவையவங்களையுடையவர்களாய்த் தோன்றிட் பிரகாசிககவும், அவர்களைத் தேவர்க்கூட்டங்கள் சரணாகதி யடையாநின்ற அந்த யோக நித்திரை செய்கின்ற அற்புத திவ்விய திருமேனியினது வடிவழகினை யொருபக்கத்திலே கண்டு அதிசயித்தார் மார்க்கண்டேயர் என்றவாறு (7)

பாலினவேலை - பாற்கடல அரவணை - பாம்பாகிய படுக்கை. வளை - சஙகு இருகோமளக் கொடிகள - இரணடாகிய குருக்கததிக்கொடிகள் - அவை: திருமகளும் பூமகளும் உருவகம்

## Araṅkaṉiṉ yōka nittiraik kāṭci

*pāliṉ vēlainaṭu varava ṇaittuyilkoḷ*
*parama ṉuntikiri vaḷaiyoṭuṅ*
*kōla viṟkataikaḷ vāḷkaḷ cūḻaviru*
*kōma ḷakkoṭikaḷ cāmaḷa*
*nīla mālvarai paṭarnta teṉṉamalar*
*niṟaiya pūttaṭiyar vāṉavar*
*cāla vuñcaraṇa paṅka yattiṉviḻu*
*taṉmai yāvumoru pālilē.*

## Araṅkaṉ in Yogic Sleep

In the midst of the Milky Sea
On the snaky bed, rests the Supreme.
Discus, conch and the lovely bow,
Maces and swords surround him.
Two gentle, flower-rich creepers[1]
Are with the blue mountain[2].
Here devotees and celestials salute
And surrender at the Lord's feet.

---

1. gentle flower-rich creepers: the Goddess of Wealth and Mother Earth.
2. blue mountain · Araṅkaṉ.

(மார்க்கண்டரின் மகிழ்ச்சி)

363. ஆடி யாடியக முங்க ரைந்துருகி
அன்பி னோடுமிகு வின்பமா
யோடி யோடியுல கைத்து வைத்துபெரு
வுறுதி கொண்டடி வணங்கிசீர்
பாடி பாடியிரு கண்க ளிக்கதிரு
பரம னல்லுரு வனைத்தையு
நாடி நாடியா னந்த வாரிதனி
னண்ணி மூழ்கிடுமவ் வேலைவாய்.

எ-து. இவ்விதமாகிய விராட்டான விசுவ சொரூபத்தைக் கண்டு அதிசய ஞான வைபவத்தை அடைந்த மார்க்கண்டேயரானவர் ஆடியாடி ஆனந்தப் பரவசராய், அகமாகிய மனமும் கரைந்துருக அன்பினோடும் கூடிய உருவமான இன்பத்தை அடைந்தோடி ஓடியங்கனந் தோன்றுகின்ற உலகத்தையெல்லாம் அடிபெயர்த்து வைத்ததன் பின்பு உறுதியைக் கொண்டவராய்ப் பாததாமரையைக் குறித்துப் பலகாலும் தெண்டன் சமர்ப்பிததவர் கீர்த்தியைப் பாடிப்பாடி திருக்கண்களிரண்டும் களிக்கத் தக்கதாகப் பரப்பிரமத்தின் எண்ணுகைக் கசக்கியமாகிய அனந்த கலியாண குணவிபூதி, விக்கிரக சேவையினைப் பார்த்தானந்த கருணை சாகரத்தில் பொருந்திப் புகழ்கின்றார் மார்க்கண்டேயர் என்றவாறு (8)

துவைத்து - மிதித்து வாரி - கடல்

உரை - விராட்டு - அழகு, பரப்பிரமம.

## Mārkkaṇṭariṉ makiḻcci

*āṭi yāṭiyaka muṅka raintuṟuki*
*aṉpi ṉōṭumiku viṉpamā*
*yōṭi yōṭiyula kaittu vaittuperu*
*vuṟuti koṇṭaṭi vaṇaṅkicīr*
*pāṭi pāṭiyiru kaṇka ḷikkatiru*
*parama ṉalluru vaṉaittaiyu*
*nāṭi nāṭiyā ṉanta vāritaṉi*
*ṉaṇṇi mūḻkiṭumav vēlaivāy.*

## Mārkkaṇṭēya's Joy

Mārkkaṇṭēya danced repeatedly,
His heart melting with love.
Happily he ran and jumped
And with assurance, saluted the feet.

He sang repeatedly, his eyes
Gleaming with pleasure;
He went towards the Lord
Again and again, and immersed himself
In that ocean of joy.

வேறு

(நாரணனைப் போற்றுதல்)

364. நாரண னேபதி னாலுல கங்களு நான்முக னோடுதவிக்
காரண னாகிய மூவரி லேயொரு காணரு மேவுருவா
யாரண நூல்வழு வாது புரந்தரு ளற்புத நற்புவனத்
தாரணி சீரணி பேரணி கொண்டரு டகுபீ தாம்பரனே.

எ-து. உலகத்தினுள்ள உயிரையெல்லாம் இரட்சகர்த்தாவாய்ப் பாதுகாக்காநின்ற நாராயணனே! இந்தப் பதினான்கு உலகங்களையும் சிருட்டிக்காநின்ற கர்த்தாவாகிய பிரம தேவனுடனே திருவுந்தியின் மலர்ந்துதவி எவற்றினும் மேனின்று உயர்ந்த காரணனாகிய ஆதி மூர்த்திகளில் காண்டற்கரிய திருமேனியை உருவமாகி வேதவாக்கியங்களானவை வழுவின்றி இவ்வுலகின் கண்ணே விரத்திக்கப் பாதுகாத்தருளிய அற்புத உருவத்தினையுடைய இந்தப் புவனத்தையெல்லாம் பாரணமா யுண்ணப்பட்ட உமது ஸ்ரீதேவியாகிய இலக்குமி தேவியையும், கவுத்துவாபரணத்தையும் ஏந்திய மார்பகத்தினையும், பீதாம்பரத்தையுடுத்த திருவரையினையு முடையவனே என்று விண்ணப்பம் செய்தார் மார்க்கண்டேயர் என்றவாறு (9)

ஆரணநூல - வேதநூல் நற்புவனம் - நல்லபூமி

உரை - பாரணம - உபவாசமிருந்து உண்ணுதல்.

## vēṟu

## Nāraṇaṉaip pōṟṟutal

*nāraṇa ṉēpati ṉālula kaṅkaḷu nāṉmuka ṉōṭutavik*
*kāraṇa ṉākiya mūvari lēyoru kāṇaru mēvuruvā*
*yāraṇa nūlvaḻu vātu purantaru ḷaṟputa naṟpuvaṉat*
*tāraṇi cīraṇi pēraṇi koṇṭaru ṭakupī tāmparaṉē.*

## Hailing Nārāyaṇaṉ

"O Nārāyaṇaṉ! Along with Piramaṉ
Who creates the fourteen worlds,
You have a form of the Trinity

To help; yours the wondrous form
That saved the Vēdas and gifted them
To this good earth. You wear
Garlands, and shining ornaments,
And the yellow silk.

(நாரணனைப் போற்றுதல்)

365. ஆதி பரம்பர னேயெமை யாளுடை யற்புத னேயவனிப்
போத மனைத்தினு நீதிமு கத்தினும் பூரண மானவசீர்
சீத மலர்த்திரு மாமகண் மேவிய தேவனே தேவருநால்
வேதமு மோதரு ஞானகிரு பாகர மேதகு நாரணனே.

எ-து. ஆதிமூர்த்தியே! அடியேனாகிய என்னையும் ஒரு பொருளாய்த் தடுத்தாட்கொண்டருளிய அற்புத மூர்த்தியே! இவ்வுலகத்தின்கண் வழங்காநின்ற ஞான போதக மனைத்திலும் நீதியினது முகத்தினும் பூரணமாய் நிறைந்துள்ள சீர்மையனே! மலராகிய குளிர்ந்த தாமரைக் கமலத்திலே வீற்றிருக்காநின்ற ஸ்ரீமகாலட்சுமியார் பொருந்தி வாழ்கின்ற தேவனே! தேவாதிகளும் நான்கு வேதமும் ஓதுதற்கரிதாகிய ஞானகிருபாகரனே! மேன்மையான அட்டாக்கரப் பொருளாகிய நாராயண மூர்த்தியே என்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (10)

பரம்பரன் - முதன்மையானவன் அவனி - பூமி. போதம் - அறிவு, ஞானம்.

உரை - அட்டாக்கரம் - திருமால் மந்திரம்.

## Nāraṇaṉaip pōṟṟutal

*āti parampara ṉēyemai yāḷuṭai yaṟputa ṉēyavaṉip*
*pōta maṉaittiṉu nītimu kattiṉum pūraṇa māṉavacīr*
*cīta malarttiru māmakaṇ mēviya tēvaṉē tēvarunāl*
*vētamu mōtaru ñāṉakiru pākara mētaku nāraṇaṉē.*

## Hailing Nārāyaṇaṉ

"Primal One! Wondrous Lord
Who is our ruler! You are found
In global knowledge and in Law!
Lord who has Lakṣmi on the lotus!
Compassionate Lord praised by gods
And the Vēdas! O Nārāyaṇaṉ!

(இதுவுமது)

366. நான்முக னாதிய ரோதி வணங்கரு ஞானனின் னல்லுருவ
மீன னுரைத்திட லாகுமோ யானுநின் னேருரு வத்தினொரு
பானனிய ராமச கந்தர மல்லதோர் பாவனை யாரறிவார்
தீன தயாபர னேபர மப்பத சீர்தரு வானவனே.

எ-து நான்கு திருமுகங்களையுடைய பிரம்மா முதலாகிய பேர்கள் துதித்து வணங்குதற்கரிய சிறந்த திவ்விய ஞானமே! நினது உருவமாகிய நன்மையான சுக சொரூப திவ்விய மங்கள விக்கிரக விசுவ சொரூபத்தினை அஞ்ஞானத்தா னுயர்ந்த ஈனனாகிய அடியேன் கூறி முடியுமோ? முடியாதென்றாலும் என் இயல்பினையும் என்னை ஆண்டவனாகிய உனதியல்பையு மெண்ணிப் பார்க்கில் உனது மணிவயிற்றின் அண்ட பிண்டங்களெல்லாம் ஒரு பக்கத்தின்கண் ணமர்ந்திருக்க அந்த உருவத்தின்கண் யானொரு மசகமாகிய கொசுவினுக்கும் இணையில்லாதவனாய் இருந்தித்தனை யதிசயத்தையும் கண்டேன். உனது லீலா விபூதியாகிய பாவனையை யாவரால் அறியலாம்? எளியவர்க்கிரங்கித் தயை புரிகின்ற அருளே! திருவழகிய பரமபதத்தின்கண் வீற்றிருக்காநின்ற பரவாசுதேவனே! எனப்பின்னும் விண்ணப்பம் செய்கின்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (11).

ஈனன் - அடியேன், தாழ்ந்தவன் நேர்உருவம -உண்மைவடிவம். ஒருபானியராமசகந்தரமல்லது - (தொடர்ச்சி) (ஓர்பாவனையாரறிவார்) ஒருபால - ஒருபுறம் அநியர் - அன்னியர் மசகம் - கொசு தரம - தன்மை தீனம் - எளிமை

## Ituvumatu

*nāṉmuka ṉātiya rōti vaṇaṅkaru ñāṉaṉiṉ ṉalluruva*
*mīṉa ṉuraittiṭa lākumō yāṉuniṉ ṉēruru vattiṉoru*
*pāṉaṉiya rāmaca kantara mallatōr pāvaṉai yārarivār*
*tīṉa tayāpara ṉēpara mappata cīrtaru vāṉavaṉē.*

## More of the Prayer

"Image of knowledge to whom salutations
Are offered by Piramaṉ and others!
Can this lowly person describe
Your gracious figure! Who knows
The truth of your being?
Even as I sat like a mosquito
Near you! Compassionate One!
Lord who grants the supreme good.

## வேறு

### (மார்க்கண்டர் சரணடைதல்)

367. பவமோ கனமோ தவமோ அடியேன் பணியப் பணிகொள்ளும்
சிவனே யுலகுக் கொருநா யகமாய்ச் சென்றேநின் றேற்கன்று
அவனே யவனுக் கிறைநான் முகனை அளித்தா னரியென்றான்
அவமா யொழியுங் கடைநா ணின்பாற் கண்டே னன்பாயே.

எ–து. பின்னும் மார்க்கண்டேயர் கூறுகின்றார். மாய்கையைப் பற்றி வருகின்ற நல்வினை தீவினைகளாலே யா னெண்பதுநான்கு நூறாயிர சீவ பேதத்தினுற்பவித்த பவமோகனத்தில் சுழலுகின்ற என் சிறுமையை நீக்கக் கருதியோ அல்லது யான் செய்த தவப்பயனை நோக்கியோ அடியேனானவன் வந்தனையடைய வல வந்தனை யோக்கியனா யென்னையு மொருபொருளாய் எண்ணித் தடுத்தாட்கொண்டருளிய சிவனே! இந்த உலகத்துக்கெல்லாம் தனிப் பிரமமாய் எண்ணி இவ்வளவு ஊழிக்காலங்களை யெல்லாம் கழித்தேன். இப்போதந்தச் சிவனையும் அவன் தந்தையாய் அளித்த பிரமனுக்கும் தந்தையாகிய தேவரீருக்குச் சரணாகதியாக அடைந்தேன் என்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (12)

பவம் - பிறவிக்கடல். மோகனம் - மயக்கம் அவமாயொழியும் - அவமாய் ஒழியும் - வீணே கழியும். கடைநாணின்பால் - கடைநாள் நின்பால் - முடிவில் நின்னிடம்.

## vēṟu

### Mārkkaṇṭar caraṇaṭaital

*pavamō kaṉamō tavamō aṭiyēṉ paṇiyap paṇikoḷḷum*
*civaṉē yulakuk korunā yakamāyc ceṉṟēniṉ ṟēṟkaṉṟu*
*avaṉē yavaṉuk kiṟaināṉ mukaṉai aḷittā ṉariyeṉṟāṉ*
*avamā yoḻiyuṅ kaṭainā ṇiṉpāṟ kaṇṭē ṉaṉpāyē.*

### Mārkkaṇṭēya Surrenders

"Is it the delusion of the sea of birth
Or due to my austerities
That you have, as Civaṉ, accepted
My surrender? I have considered you
As the sole Lord of the world.
I surrender to Hari who gave Piramaṉ
Who in turn created Civaṉ.
As the days pass by wastefully
I have realised you at last.

(நாரணனின் திறம்)

368. வையம னைத்தையு முய்யும் வகைக்கொரு
மாறுகை மாறிலவாய்ச்
செய்யுத விக்கொவா மைய லறுத்து
தெரிந்திடு வார்தெளிவாய்
வெய்யிலி னல்லொளி வீசிய ஞான
முதிர்ந்து விளங்கிடுமுன்
செய்ய மலர்ப்பத முன்னு திறத்தில்
தெரிந்திடு வார்சிலரே.

எ-து. மீட்டும் கூறுகின்றார் இந்தத் திரிபுவனத்தையும் பாதுகாக்கும் பொருட்டாய்த் தேவரீர் கருணை செய்த உபகாரத்தைக் குறித்திந்தத் திரிபுவனத்து உயிர்கள் தேவரீருக்குப் பிரதி உபகாரம் என்ன செய்யப் போகிறார்கள்? ஒருவருக்கு அனேகம் இடருற்று வருந்திய காலையின் அனேக உபசாரம் செய்து பாதுகாத்தவர்க் குகந்த நன்றி செய்து பிரதி உபகாரம் செய்பவர்கள், தெளிவினாலே சூரியமண்டல நடுப்பிரதேசத்தின் வீற்றிருந்து இவ்வுலகத்தை மயக்கத்தினின்றும் நீக்கி, உமது பூரண கிருபா விசேடத்தினாலே ஆத்தும கோடிகள் விர்த்தியடைவாாக ளாகையால் உமது பரத்துவத்தைத் தெரிந்து உமக்கு அன்பு பூண்டு பிறவித் துன்பத்தைக் கடப்பார்கள். மற்றைய சமயவாதிகளெல்லாம் உம்மை அடைந்து பிறப்பென்னும் இடும்பையை நீக்காரென்றார் மார்க்கண்டேயர் என்றவாறு. (13)

மாறு - பிரதி. பதில் கைம்மாறு - பதில உதவி. ஒவா - ஒவ்வா - இயலா. செய்ய - சிவந்த அழகிய. உன்னுதல - நினைத்தல்.

## Nāraṇaṉiṉ tiṟam

*vaiyama ṉaittaiyu muyyum vakaikkoru*
*māṟukai māṟilavāyc*
*ceyyuta vikkovā maiya laṟuttu*
*terintiṭu vārteḷivāy*
*veyyili ṉalloḷi vīciya ñāṉa*
*mutirntu viḷaṅkiṭumuṉ*
*ceyya malarppata muṉṉu tiṟattil*
*terintiṭu vārcilarē.*

## Nārāyaṇaṉ's Power

"There is no way to repay
All the good you have granted
To this universe by guarding it.

Few are those who know very well
How to repay such help given
And who gain deep knowledge
That is noon-day brilliant
And surrender at your lotus feet.

(நாரணனின் கலியாண குணங்கள்)

369. அண்டமு மெண்டிசை யண்டக டாகமு
மன்றருள் கொண்டவைநீ
கொண்ட பெருந்திரு மேனியி னோர்மயிர்
கொண்டிடு மேயளவிற்
புண்டரீ கன்னர னிந்திரர் வானவர்
புன்மையி னோடுமதிற்
கண்டன னின்னுரு கண்டில னின்னடி
கண்டில னீண்முடியே.

எ-து. இந்த அண்டங்களும் எட்டுத்திக்கும் அண்டகடாகங்களும் உமது திவ்விய திருமேனியாய்க் கொண்ட நினது அகண்டாகாரமாகிய விராட்டான விசுவ சொரூபத்தில் தோன்றுகின்ற ஒரு உரோமமானது செய்கின்ற லீலையானது பிரமா, உருத்திரன், இந்திரன் முதலாகி யவரவர் கூட்டங்கள் முதலாகிய பேர்களையெல்லாம் தோற்றத் தக்கதாய்க் கண்டனனு மது அனந்த கலியாண சுப குணங்களை நின்னருளால் தெளிவிக்கத் தெளிந்தேன். உமது திவ்விய சரணார விந்தங்களையும் திருமுடியினையும் காண்கிலேனென்றார் மார்க்கண்டேயர் என்றவாறு (14)

அண்டகடாகம் - அண்டகோளவோடு, ஆகாயமாகிய உருண்டை கண்டிலனீண்முடி - கண்டிலன் நீள்முடி - நீண்ட திருமுடியைக் கண்டிலேன்.

உரை - முதலாகியவரவர் கூட்டம் - முதலாகியவர், அவர் கூட்டம்

## Nāraṇaṉiṉ kaliyāṇa kuṇaṅkaḷ

*aṇṭamu meṇṭicai yaṇṭaka ṭākamu*
*maṉṟaruḷ koṇṭavainī*
*koṇṭa peruntiru mēṉiyi ṉōrmayir*
*koṇṭiṭu mēyaḷaviṟ*
*puṇṭarī kaṉṉara ṉintirar vāṉavar*
*puṉmaiyi ṉōṭumatiṟ*
*kaṇṭaṉa ṉiṉṉuru kaṇṭila ṉiṉṉaṭi*
*kaṇṭila ṉīṇmuṭiyē.*

## Nārāyaṇaṉ's Auspicious Qualities

"Your cosmic form contains the universe
And the entire creation. A single hair
From this immense form
Is superior to Piramaṉ, Civaṉ, Intiraṉ,
The celestials. I have noted this.
But not your form, nor feet
Nor your rising crown."

(விசுவரூபச் சிறப்பு)

370. நித்தியமார்க் கண்டனய னரன்வா னோர்க
ணீடவத்தின் முனிவரர்காந் திருவர் சித்தர்
வித்தியா தரர்வசுக்கள் [1]மருத்துள் ளோர்கள்
விமலனடி முடியளவு விளைவு காணார்
எத்திசைகள் புவிகள்பதி னான்கு மண்ட
மெழுகடலு மிறைவனடி தனின்வி ளங்க
முத்திதரு பொன்னரங்க னடிப ணிந்து
மோகமுற்றங் கின்பமதின் மூழ்கி நின்றார்.

எ-து நித்தியமாய் எக்காலும் அழிவின்றிய மார்க்கண்டேயரும் தாமரைக் கமலத்தின் வீற்றிருக்காநின்ற பிதாமகனும், இடபவாகனரூடராகிய காளகண்ட திரிநேத்திரமுடைய சிவனும், பஞ்சதாருவினிழலில் வீற்றிருக்கின்ற தேவர்கூட்டங்களும், நீண்ட தவத்தினையுடைய முனிக்கணங்களும், காந்திருவர்களும், சித்திய வித்தியாதரர்களும், சூழ்ந்திராநின்ற வசுக்களும், சத்த மருத்துக்களும், இத்தன்மைத்தாகிய அனைவர்களும் விமலனாகிய சர்வ மங்கள விக்கிரக வந்தனை யோக்கிய அரங்க நாயகருடைய திவ்விய சரணாரவிந்தம் முதல் திருமுடியினதளவினை உடைய காணுகைக் கசக்கியமாகிய விசுவ சொரூபத்தைக் காண மாட்டாகள் அந்த உருவத்தின் எந்தெந்தத் திசைகளும், பதினான்கு உலகமும், சத்தசாகரங்களும், அகிலமான சேதனா சேதனங்களும் இறைவனாகிய பொன்னரங்கனாயகருடைய திவ்விய திருவடிகளிலே விளங்கக்கண்டு ஆனந்தப்பரவசராய் மோக முற்றின்ப சாகரத்தின் மூழ்கி நின்றார்கள் தேவர்கூட்டங்க ளென்றவாறு (15)

வானோாகணீடவத்தின் - வானோர்கள் நீளதவத்தின்.

பா.வே. - 1 மருத்துவோர்கள்

## Vicuvarūpac ciṟappu

*nittiyamārk kaṇṭaṉaya ṉaraṉvā ṉōrka*
*nīṭavattiṉ muṉivararkāṉ tiruvar cittar*
*vittiyā tararvacukkaḷ maruttuḷ ḷōrkaḷ*
*vimalaṉaṭi muṭiyaḷavu viḷaivu kāṇār*
*etticaikaḷ puvikaḷpati ṉāṉku maṇṭa*
*meḷukaṭalu miṟaivaṉaṭi taṉiṉvi ḷaṅka*
*muttitaru poṉṉaraṅka ṉaṭipa ṇintu*
*mōkamuṟṟaṅ kiṉpamatiṉ mūḻki niṉṟār.*

## The Cosmic Form

The immortal Mārkkaṇṭēya, Piramaṉ,
Civaṉ, the celestials, sages, gandharvas,
*Cittar*, Vacu and the *Maruttu*
Have not perceived the Pure One's
Cosmic Form from feet to the crown.
Watching at the feet of the Lord
The directions, worlds, the fourteen
Universes and the seven seas,
They saluted the feet of golden Araṅkaṉ
Who grants realisation,
And were immersed in joy.

(நாரணனின் விசுவரூபத்தில் திகழ்தல்)

371. கண்டுமனங் களிகூர்ந்து கமலக் கண்ணன்
கடல்போன்ற விசுவரு பத்தைக் காட்டிக்
கொண்டுமகிழ்ந் தரனயன்வா னவர்க ளேத்தக்
கொடுந்தவத்துக் கவுசிகன்கை குவித்து வாழ்த்தப்
பண்டுபழ கியதிருநல் லுருவு காட்டப்
படர்ந்தனர்பாற் கடலெனவே பயங்க டீர்ந்து
நின்றுபுகழ் பிருகுமார்க் கண்டன் சம்பர
னெடியசோ முகன்வீணை முனிவ திட்டன்.

எ-து. இப்படி அற்புதமாய்த் தோத்தரித்த மார்க்கண்டேயர் பக்திக்குகந்தவராய்ச் செந்தாமரைக் கண்ணனாகிய திருவரங்க நாயகரானவர் கருங்கடல் போன்ற விசுவ சொரூபத்தைக் காட்டக்கண்டு மகிழ் சிறந்தவர்களாய் அரன், அயன், இந்திராதியர் பஞ்சாக்கினியினின்றும தவம் செய்கின்ற விசுவாமித்திரன் முதலிய இருடியர்களெல்லாம் சிரசின்மீது கைகூப்பித் தோத்தரிக்க, எழுந்தருளாநின்ற தமது சொரூபத்தை உள்ளடக்கிப் பூர்வம் பழகிய திவ்விய திருவுருவத்திலே விளங்கிப் பிரகாசிக்கின்ற பிராட்டியாகிய ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, அனந்தன், கருடன், விசுவசேனன் முதலாகியவர் சூழத் . . . . . . திருப்பாற்கடலின் நடுப்பிரதேசத்தின் அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற திவ்விய மங்கள விக்கிரக சொரூபத்தைக் காட்டத் தேவர்கள் பயம் தீர்ந்தவராய் அவா திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து வேத வேதாந்தங்களால் துதி செய்து புகழாநின்ற பிருகு, மார்க்கண்டேயர், சம்பரன், சோமுகன், நாரதமுனி, வதிட்டராகிய இருடியர்களெல்லாம் நித்திய சூரியர்களாய் அந்த அற்புதமாகிய திவ்விய திருவுருவத்தில் கலந்து நின்றார்கள் என்றவாறு. (16)

கவுசிகன் - கௌசிகன் - விசுவாமித்திரன் பயஙகடீர்ந்து - பயங்கள் தீர்ந்து வீணை முனி - நாரதன் வதிட்டன - வசிட்டா

## Nāraṇaṉiṉ vicuvarūpattil tikaḻtal

*kaṇṭumaṉaṅ kaḷikūrntu kamalak kaṇṇaṉ*
*kaṭalpōṉra vicuvarū pattaik kāṭṭik*
*koṇṭumakiḻn taraṉayaṉvā ṉavarka ḷēttak*
*koṭuntavattuk kavucikaṉkai kuvittu vāḻttap*
*paṇṭupaḷa kiyatirunal luruvu kāṭṭap*
*paṭarntaṉarpāṟ kaṭaleṉavē payaṅka ṭīrntu*
*niṉṟupukaḻ pirukumārk kaṇṭaṉ campara*
*ṉeṭiyacō mukaṉvīṇai muṉiva tiṭṭaṉ.*

## Nārāyaṇaṉ's Cosmic Form

Watching this, their minds full of joy,
Taking in the oceanic cosmic form
Of the lotus-eyed Lord, he was happy.
Civaṉ, Piramaṉ and the celestials
Praised the Lord. Vicuvāmittiraṉ
Of immense austerities worshipped
With palms held together. When the Lord
Revealed the familiar form on the milky sea,

They were freed from fear.
Famed Piruku, Mārkkaṇṭēyar, Camparaṉ,
Cōmukaṉ, Nāratamuṉi and Vatiṭṭar
Became one with the Lord.

(அரங்கனின் அலங்காரத் தோற்றம்)

372. அணிமணிகள் படத்துநிரை யொளிகள் வீசும்
ஆயிரந்தீ பங்களென வமர்வா ரங்குப்
பணிமுடங்கு திருவணையி னியோகப் பண்பாய்ப்
பஞ்சணைபோற் பொலிந்தொளிரப் பரமன் றானும்
மணிமுடியின் மாணிக்க வொளிகள் வீச
மலர்மார்பின் வளர்திருமா மணிது லங்க
வணிதிகழ்பீ தாம்பரம்பொன் னரையிற் தோன்ற
மலர்ப்பதத்தி னதிபெருக வதிந்தா ரன்றே.

எ-து. அழகிய மாணிக்க மணிச் சமூகங்களால் நிறைந்த ஆயிரம் பணாமுடிகளானவை ஆயிரம் கோடி சூரியப் பிரகாசமாய் விளங்குகின்ற அனந்த சயனத்தின் யோக நித்திரை செய்தருளிய பரம மூர்த்தியான அரங்கநாயகருடைய திருமுடியின் இரத்தின கிரீடத்தினைகளை மிகுந்த பிரகாசத்தினை மாணிக்க மணிகளானவை வீசவும். அகன்ற மார்பின தாயிரம இதழினையுடைய சொர்ணத்தாமரையின் நடுப்பிரதேசக் கரணிகையின் வாழ்கின்ற ஸ்ரீமகாலட்சுமி தேவியும். கவுத்துவாபரணமும் துலங்க. அவர் திரு அரையின் விளங்குகின்ற ஆயிரத்தெட்டு மாற்றினையுடைய பீதாம்பரமானது இடையிலே தோன்றவும். செந்தாமரைக கமலத்தினை யொத்த திவ்விய திருவடிகளில் தேவ கங்கையானது பெருகத்தக்கதாக வதிந்தருளினார் ஸ்ரீஅரங்கநாயகர் என்றவாறு (7)

படம் - பாம்பின்படம். அநந்தனாகிய பாம்பின் ஆயிரம் படங்கள். நதி - கங்கையாறு.

## Araṅkaṉiṉ alaṅkārat tōṟṟam

*aṇimaṇikaḷ paṭattunirai yoḷikaḷ vīcum*
*āyirantī paṅkaḷeṉa vamarvā raṅkup*
*paṇimuṭaṅku tiruvaṇaiyi ṉiyōkap paṇpāyp*
*pañcaṇaipōṟ polintoḷirap paramaṉ ṟāṉum*
*maṇimuṭiyiṉ māṇikka voḷikaḷ vīca*
*malarmārpiṉ vaḷartiruma maṇitu laṅka*
*vaṇitikaḻpī tāmparampoṉ ṉaraiyiṟ tōṉṟa*
*malarppatatti ṉatiperuka vatintā raṉṟē.*

## Araṅkaṉ's Decorations

The hoods shine brilliant with gems
Like a thousand torches. The Lord
Rests on the hooded serpent
That is a soft bed of yōga.
With gems in his crown a-gleam,
And the *kavuttuvā* gem shining on the chest,
The waist encased in yellow silk,
The Lord is seen with the *Kaṅkai*
Streaming from his feet.

(அரங்கநாயகரின் உடனிருப்போர்)

373. [1]உந்திமல ரயன்பொலிய உயர்ந்தமர
கதமலைபோ லொளிகள் வீசச்
செந்திருவி னருணோக்கஞ் சிறந்திடத்தா
மரைக்கடல்போல் திகழ்ந்து தோன்றச்
சுந்தரமா மணிவண்ண னரவணையின்
மிசைத்துயின்றான் சுடருந் தண்ணென்
சந்திரனுந் தவளசத்திரக் குடைநிழற்ற
வாலவட்டந் தழைத்தங் கோங்க.

எ-து உந்திக் கமலத்திலே பிரமதேவரானவர் பிரகாசிக்கவும், உயர்ந்த மரகதமலை போனற திவ்விய திருமேனி வடிவழகினதொளிர்கள் வீசவும், செந்திருவாகிய ஸ்ரீ மகாலட்சுமி தேவியினது கடைக்கண் அருள் நோக்கப் பரிபூரண கிருபா விசேடத்தால் திரிலோகங்களும் சிறந்தோங்கவும், தாமரைக் கடல்போன்ற அழகிய சுந்தர சவுந்திரியத்தோடும் விளங்கிய நீலமணி வண்ணனானவர் அணையாகிய அந்த விமானசேகரர் யோக நித்திரை செய்கின்ற சமயத்தில், சூரிய சந்திரர் இருவரும் தவளச் சத்திரக்குடையினை இருபுறத்தினும் தாங்கி நிற்கவும், மருத்துவர் முதலாகிய தேவர்கூட்டங்கள் ஆலவட்டங்கள், சாமரைகள் வீசிக் களித்தார்க ளென்றவாறு (18)

தவளசத்திரம் - வெண்குடை. ஆலவட்டம் - விசிறி

உரை - சாமரை - சாமரம - கவரி

